# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஐந்தாம் மடலம் – மூன்றாம் பாகம்

## நு – நௌ

## Vol. V - Part - III


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி – பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

ஐந்தாம் மடலம் - மூன்றாம் பாகம்

## நு - நௌ

## Vol. V - Part - III


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2005

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 15

முதற் பதிப்பு 2005

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. V, Part - III



விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE
## VOL. V- PART III

ஐந்தாம் மடலம் - மூன்றாம் பாகம்
(நு - நௌ)

பதிப்புக் குழு
முனைவர் திரு.பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.
*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும்*
*அறநிலையத் துறை*
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்
புலவர் த. சரவணத் தமிழன்

தொகுப்பாளர்கள்
திரு.முத்து.பிச்சை
முனைவர் மு.கண்ணன்
முனைவர் பா.வெற்றிச்செல்வன் (பகுதிப் பொறுப்பாளர்)
முனைவர் ச.செந்திலாண்டவன்
முனைவர் இரா.கு.ஆல்துரை
திரு.கா.இளமுருகு
திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

**ஜெ ஜெயலலிதா**
முதலமைச்சர்




**தலைமைச் செயலகம்**
**சென்னை–600 009.**

நாள்........26.12.2005

## அணிந்துரை

'வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி தமிழ்!' அந்த வண்டமிழ், 'ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி இசை கொண்டு வாழ' ஏற்ற பணிகளை ஆற்றி வருகிறது எனது அரசு.

தமிழ்நாடு அரசு, தமிழ் நாடும் அரசாக விளங்குகின்றது. இந்திய அரசின் ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்கவும், இணையற்ற தமிழ் மறையாம் திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக ஆக்கவும், ஒல்லும் வகையான் ஓயாது முயன்று வருகிறது தமிழ்நாடு அரசு. 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய் விளங்கும் நம் தமிழ், பின்னைப் புதுமைக்கும் போர்த்தும் அப்பெற்றியதாய்' விளங்க வேண்டும் என்ற விழைவோடு, முத்தமிழோடு நான்காம் தமிழாக அறிவியல் தமிழை அறிமுகப்படுத்தி, அதனை மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை, மாணவ மாணவியர் கற்க ஏற்பாடு செய்தேன்.

உயர்தனிச் செம்மொழியாம் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதுடன் நில்லாது, தமிழ் வளர்த்த சான்றோர்கள் நினைவைப் போற்றும் வகையில் விழாக்கள் எடுத்தும், நினைவிடங்கள் அமைத்தும், அவர்தம் நூல்களைப் பொது உடைமையாக்கியும் சிறப்பித்து வருகிறது எனது அரசு. அந்த வகையிலே, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு பிறந்த நாள் விழாவைக் கொண்டாடி மகிழ்ந்ததுடன், அவரது நினைவை என்றென்றும் போற்றிப் பாராட்டிடும் வகையில் மதுரை மாநகரில் மணி மண்டபம் உருவாக்கிடவும் முனைந்துள்ளது.

தமிழ் மொழியின் த்னிப் பெரும் வளர்ச்சி குறித்த கவிஞர்களின் கனவுகள் நனவாக்கப்பட வேண்டும் என்பது என் விருப்பம்

"வெளியுலகில், சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளி உறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்"

என்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கனவு மெய்ப்படும் விதத்தில், தமிழ் மொழியின் சொல் வளத்தைப் பெருக்க 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' (A Comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் சார்பாக கடந்த 2002–ஆம் ஆண்டு வரை ஆறு பகுதிகள் மட்டுமே வெளியிடப்பட்டிருந்தன. 2002–2003–ஆம் ஆண்டில், சட்டமன்றப் பேரவையில், எஞ்சிய 25 பகுதிகள் நான்காண்டுகளில் தொகுத்து முடிக்கப் பெறும் என்ற அரசின் அறிவிப்பினைத் தொடர்ந்து, தொய்வுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்குப் புத்துயிர் ஊட்டி, போதுமான நிதியுதவியும் வழங்கி, பணிகள் முடுக்கிவிடப்பட்டதன் விளைவாய், ஆண்டுக்கு ஆறு பகுதிகள் என்ற முறையில், முதற்கட்டமாகத் தொகுத்து அச்சிட்டு முடிக்கப்பட்ட 'ச' மற்றும் 'த' வரிசைச் சொற்களின் 6 பகுதிகள் அண்மையில் 9.8.2005 அன்று என்னால் வெளியிடப்பெற்றன. அதனைத் தொடர்ந்து இரண்டாவது கட்டமாக 'ந' மற்றும் 'ப' வரிசை சொற்களில், 6 பகுதிகள் தொகுத்து முடிக்கப்பட்டு அச்சிடப்பட்டு அவை தற்போது வெளியிடப்படுவதை அறிந்து பெரு மகிழ்வு அடைகிறேன்.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப்' பணி சீரிய பணி. அந்தச் சீரிய பணியில் ஈடுபட்டு செந்தமிழைச் செழுந்தமிழாய் ஆக்கிவரும் அனைவருக்கும் என்னுடைய வாழ்த்துகள்.

தமிழ் வாழ்க ! தமிழ்ப் பணி வளர்க !

**ஜெ ஜெயலலிதா**
தமிழக முதலமைச்சர்

# தமிழ்நாடு அரசு

சி.வி.சண்முகம்
கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

## அணிந்துரை

"தமிழுண்டு தமிழ் மக்களுண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு"
– (பாவேந்தர்)

மிகப் பழங் காலந்தொட்டு மொழி பற்றிய ஆய்வு இருந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றுகள் உள்ளன என்பர் மொழியாராய்ச்சியாளர்கள். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த மொழி பற்றிய தெளிவான அறிவினைத் தெற்றெனத் தெரிவிப்பனவாக இருப்பதைக் காணலாம். மொழியானது மாறும் தன்மை கொண்டது; பழமையான மொழிக் கூறுகளில் சில அழிவதும் புதியதாக சில தோன்றுவதும் மொழி வழக்கில் இயல்பு என்பர் அறிஞர் பெருமக்கள்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இடைவெளியில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை மறுக்கவியலாது. பழைய சொற்கள் சில வழக்கொழிந்துள்ளன. புதிய சொற்கள் பல உருவாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளையும், புதுப்புனைவுகளையும் வெளிப்படுத்த புதுச் சொற்கள் தேவை. இது மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும், தகைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். தமிழின் தூய்மையையும், மாண்பையும், தனித்தியங்கும் ஆற்றலையும், இயற்கைச் சிறப்பையும் இனிமையையும், எளிமையையும் விரிவாக எடுத்துக்காட்டி நிலைநாட்டிய பெருமை 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு உண்டு. சொற்களை அகழ்வாய்வு செய்வதன்வழி மொழிக்கு அகழ்வாய்வு என்ற துறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவரைச் சாரும்.

அத்தகைய மாபெரும் அறிஞர் காட்டியுள்ள நெறிமுறைகளை அடியொற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பகுதிகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. அண்மையில் 'ச'கரம் மற்றும் 'த'கரம் வரிசையில் 6 பகுதிகள் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின்

திருக்கரங்களினால் வெளியிடப்பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து தற்போது 'ந'கரம் மற்றும் 'ப'கரம் வரிசையில் 6 பகுதிகள் வெளியிடப் பெறுகின்றன என்பதையறிந்து மகிழ்கிறேன். இந்த சீரியத் திட்டத்திற்கு அனைத்து வகையிலும் பேராக்கமும், பேராதரவும் நல்கி வரும் நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவி 'அம்மா' அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே, ஏன் ஆசியக் கண்டத்திலேயே தலைசிறந்து விளங்கும், தன்னிகரில்லாத் தங்கத் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலம் என்று மேனாட்டரும் புகழ்பாடுகின்றனர். சோதனைகளை முறியடித்து, சாதனைக்கு மேல் சாதனைப் படைத்து, வெற்றிக் கொடி நாட்டி வரும் மாண்புமிகு முதலமைச்சர் 'அம்மா' அவர்களின் சாதனைகள் நீண்டு தொடரும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வருவதில் அரும்பங்காற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநராகப் பதவி வகிக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அரசு செயலாளர் முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல்களை உருவாக்குவதற்கு அயராதுழைத்த அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டுக்கள்.

2.11.13

சி.வி.சண்முகம்

சென்னை.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# நு

**நு**[1] *nu,* நகர மெய்யும் உகர உயிரும் சேர்ந்து பிறந்த எழுத்து; the compound of ந் + உ.

*[ந் + உ-நு]*

நகரமும் உகரமும் இணைந்த ஒலி. நாவின் நுனி மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒற்ற குவிந்த நிலையில் இவ்வெழுத்துப் பிறக்கும். இது தனி மொழியாக வழக்கு இல்லை.

கி.மு. 3 ஆம் நுற்றாண்டிலிருந்து இன்று வரை இவ்வெழுத்தின் [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], நு வரிவடிவம் எனப் பல மாற்றங்களை யடைந்துள்ளது.

**நு**[2] *nu,* பெ. (n.) **1.** ஊழ்கம் (தியானம்); contemplation. **2.** நேரம்; time. (சா.அக.).

**நு**[3] *nu,* பெ. (n.) **1.** புகழ்; fame. **2.** பழிப்பு; abuse. **3.** தோணி; boat. (சா.அக.)

**நுக்காங்குலை** *nukkāṅ-gulai,* பெ. (n.) காய் விழுந்த பனங்குலைத்தண்டு (யாழ்ப்.); fruit stalk of the palmyra tree when stripped of fruits.

*[நுங்கு + குலை – நுங்குகுலை → நுக்காங்குலை]*

**நுக்கு[1]–தல்** *nukku-,* 5செ.குன்றாவி. (v.t.) **1.** பொடியாக்குதல்; to break in pieces, grind to powder, crush. **2.** புடைத்தல்; to thrash, beat soundly. *அவனை நுக்கிவிட்டான்.*

தெ., க. நுக்கு; ம. நொக்குக.

*[நொறுக்கு → நுக்கு → நுக்கு–தல்]*

**நுக்கு[2]–தல்** *nukku-,* 5செ.கு.வி.(v.i.) மிகுதியாய்ப் பெய்தல்; to pour heavily. *மழை நுக்குகிறது.*

ம. நொக்குக; க., தெ. நுக்கு

*[நொறுக்கு → நுக்கு → நுக்கு–தல்]*

**நுக்கு**[3] *nukku,* பெ. (n.) பொடித்துண்டு (வின்.); bit, piece.

*[நொறுக்கு → நுக்கு.]*

**நுக்கு**[4] *nukku,* பெ. (n.) எட்டி மரம் (மூ.அ.); strychnine-tree.

மறுவ. காஞ்சிரை.

**நுக்கு**[5] *nukku,* பெ. (n.) **1.** நுங்கு; kernel of young palmyra fruit. **2.** விழுங்குகை; swallow. (சா.அக.).

*[நுங்கு → நுக்கு–வலித்தல்]*

**நுக்குகி** *nukkugi,* பெ. (n.) தெல்லுக்கொடி; creeping mimosa, Mimosaentada. (சா.அக.)

**நுக்குடம்** *nukkuḍam,* பெ. (n.) நுக்கு[4] (சங்.அக.) பார்க்க; see *nukku*[4]

*[நுக்கு → நுக்குடம்.]*

**நுகக்கால்** *nuga-k-kāl,* பெ. (n.) **1. நுகம்,1** (நெல்லை) பார்க்க; see *nugam,*1. **2.** ஏர்க்கால் (வின்.); shaft of a plough.

*[நுகம் + கால்]*

**நுகக்காற்குச்சி** *nuga-k-kāṟ-kucci,* பெ. (n.) நுகத்து முளைக்குச்சி (நெல்லை); small wooden peg or bolt inserted in the holes at either end of a yoke.

*[நுகக்கால் + குச்சி]*



**நுகக்காற்சாவி** *nuga-k-kāṟ-cāvi,* பெ. (n.) **நுகக்காற்குச்சி** பார்க்க; see *nuga-k-kāṟ-kucci.*

*[நுகக்கால் + சாவி]*

**நுகக்கோல்** *nuga-k-kōl,* பெ. (n.) **நுகத்தடி** பார்க்க; see *nuga-t-taḍi.*

*[நுகம் + கோல்].*

நுகக்கோல் என்பது இன்று பாண்டி நாட்டில் முகக் கோல் என்று திரிந்து வழங்குகின்றது. மோக்கால் என்பது அதன் கொச்சை வடிவம்.

உயிர் முதற்சொற்கள் நகரமெய்ம் முதலாவது இயல்பே. எ–டு: இமை–நிமை, உந்து–நுந்து, ஊன்–நூன் – நீன், ஊக்கு–நூக்கு. (வ. மொ. வ.)

**நுகத்தடி** *nuga-t-taḍi,* பெ. (n.) ஏர், வண்டி போன்றவற்றினை இழுத்துச் செல்வதற்காக மாட்டின் கழுத்தில் பிணைக்கப் பயன் படுத்தப்படும் நீளமான உருட்டுக்கட்டை; yoke. *நுகத்தடி அழுத்தியதால் காளைகளின் கழுத்துக் காய்ப்பேறி போச்சு. தனியார சாட்சியின் (ஏகாதிபத்தியம்) நுகத்தடியை உதறி யெறிவது அவ்வளவு எளிதல்ல.*

**மறுவ.** நுகக்கோல், முகத்தடி.

**ம.** நுகத்தடி

*[நுகம்+தடி ]*

நடுவில் பருத்ததும், ஓரத்தில் சிறுத்தும், நீண்ட உருளை வடிவமும் உடைய மரம்.



**நுகத்தடிக்கயிறு** *nuga-t-taḍi-k-kayiṟu,* பெ. (n.) நுகத்தடியை வண்டி ஏர்க்காலுடன் இணைக்கும் கயிறு; a rope tide between yoke and yērkkāl.

*[நுகத்தடி +கயிறு]*

**நுகத்தடிச்சங்கிலி** *nuga-t-taḍi-c-caṅgili,* பெ.(n.) நுகத்தடியையும் வண்டி ஏர்க்காலையும் இணைக்கும் இருப்புத் தொடரி; iron chain tide yoke and yērkkal.

*[நுகத்தடி +skt.சங்கிலி]*

**நுகத்தடிச்சீர்** *nugattaḍi-c-cīr,* பெ. (n.) திருமணச்சடங்கு வகை (இ. வ.); a marriage rite. (செ.அக.)

**நுகத்தடித்துளை** *nuga-t-taḍi-t-tuḷai,* பெ. (n.) **நுகத்துளை** பார்க்க; see *nuga-t-tuḷai.*

*[நுகத்தடி + துளை]*

**நுகத்தடிப்பிள்ளையார்** *nuga-t-taḍi-p-piḷḷaiyār,* பெ. (n.) நுகத்தடியின் நடுவில் அமைந்துள்ள கொண்டை போன்ற கட்டை; a wooden piece, centre of the yoke.

*[நுகத்தடி + பிள்ளையார்]*

நுகத்தடியின் நடுவில் கட்டையால் அமைக்கப்படும் உருவம். இது கடவுள் உருவ மாகவோ, மனித உருவமாகவோ, விலங் குருவமாகவோ அமைக்கப்படும்.

**நுகத்தாணி** *nugattāṇi,* பெ. (n.) நுகத்தடியை ஏர்க்காலில் இணைக்கும் ஆணி (ஏரெழு. 8); stud of the yoke.

*[நுகம் + அத்து + ஆணி.*
*அத்து – சாரியை]*



**நுகத்துளை** *nuga-t-tuḷai,* பெ. (n.) நுகத்தடியின் இருமுனைகளிலும் உள்ள துளை; hole at each end of a yoke. *"வான்கழி... நுகத்துளை வந்துபட் டாங்கு"* (பெருங். உஞ்சைக். 32:18)

மறுவ. நுகத்தடித்துளை

ம. நுகத்துள

*[நுகம் + துளை ]*

**நுகப்பிடி** *nuga-p-piḍi,* பெ. (n.) இணை (சோடி) (யாழ்ப்.); match, as a pair of oxen, a couple of persons.

*[நுகம் + பிடி]*

**நுகம்** *nugam,* பெ. (n.) **1.** காளையின் கழுத்தில் பூட்டப்படும் மரம்; yoke. *"எருதே யிளைய நுகமுண ராவே"* (புறநா.102). *"பளிக்கு நுகம் பிணைத்து"* (கம்பரா. பாலகா. கார்முக.16). **2. நுகத்தாணி** (அரு. நி.)பார்க்க; see *nugattāṇi.* **3.** சுமை (பாரம்); burden, weight. *"எழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்"* (சிறுபாண்,113). *"வையம்... காக்கும் படுநுகம் பூண்பல்"* (சீவக.203). *"பொழில்கண் விளக்குந் தொழினுகம் பூண்டு"* (பெருங். உஞ்சைக்,1:54). **4.** வலிமை; power, strength. *"தெவ்வர் தேஎம் நுகம்படக் கடந்து நூழிலாட்டி"* (மலைபடு.87). **5.** பதினைந்தாவது விண்மீனாகிய விளக்கு (சுவாதி) விண்மீன் (நாமதீப.108); the 15th naksatra. **6.** கொடு நுகம் (மகநாள்) (அரு.நி); the 10th nakasatra. **7.** கதவுக்குக் காப்பாக இடப்படும் கணையமரம்; protecting bar of a door. *"கொடு நுகந் தழீஇயபுதவின்"* (பெரும்பாண். 127)

ம. நுகம்; க. நொக(g); வ. யுக(g); குட. நொக; து. நுக, நொக; தெ. நொக.

*[உ → உக → உகம் = இணை, நுகம். உகம்–நுகம் = ஏரிலும் வண்டியிலும் காளைகளைப் பூட்டும் மரம்.]*

**நுகம்புரட்டி** *nugam-puraṭṭi,* பெ. (n.) 1. கட்டுக் கடங்காத எருது; a refractory ox which will not submit to the yoke. 2. வேலையைக் குழப்புபவன்; one who shirks work.

*[நுகம் + புரட்டி]*

**நுகம்வை–த்தல்** *nugam-vai-,* 4செ. கு. வி. (v.i.) நல்ல நாளில் முதன்முறையாக எருத்தின் கழுத்தில் நுகம்பூட்டுதல்(வின்.); to set the yoke on a bull's neck for the first time on an auspicious day.

*[நுகம்+வை–த்தல்]*

**நுகர்[1]–த்தல்** *nugar-,* 2செ. குன்றாவி.(v.t.) 1. தின்னச் செய்தல்; causing one to eat, 2. தின்னுதல்; eating. (சா. அக.)

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுகு → நுகர் → நுகர்–த்தல்]*

**நுகர்[2]–தல்** *nugar-,* 2செ. குன்றாவி.(v.t.) 1. துன்பப்படுதல்; suffering. 2. விழுங்குதல்; swallowing. (சா. அக.).

*[நுல் → நுள் → நுழு → நுகு → நுகர்→ நுகர்–தல். நுல்–தல் = துளைத்தல்]*

**நுகர்[3]–தல்** *nugar-,* 2செ. குன்றாவி.(v.t.) 1. துய்த்தல்; to enjoy; to experience, as the fruits of actions. "*அஞ்சலோம்பு நின் னணிநல நுகர்கென்*" (குறிஞ்சிப்.181). *ஐம்புலன்களால் நுகரும் இன்பம்.* "*இனிமை நுகர்ந்த மடந்தையும்*" (கோயிற்பு.பதஞ்சலி.42). "*வித்தக நறுந்தார் விருப்பொடு பொருந்தி நுகர்தற் கமைந்த புகர்தீர் பொம்மற்*" (பெருங். இலாவாண. 17:110,111). 2. உண்ணுதல்; to eat,drink. "*அடிசில் பிறர் நுகர்க*" (பு. வெ. 10, முல்லைப். 8). "*அம்பிகையோடு நுகர்ந்து களித்தனன்*" (சிவரக.தேவிமேரு. கயிலை.10). 3. செய்தல்; to do perform. "*நுங்கள் வினைதீர வழிபாடு நுகரா வெழுமினே*" (தேவா. 1060,4)

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுகு → நுகர் → நுகர் –தல் (வே. க.)]*

**நுகர்ச்சி** *nugarcci,* பெ. (n.) 1. வினைப்பயன் துய்ப்பு (அனுபவம்); to enjoyment, experience of pleasure or pain, as from former deeds. "*அருந்தவ மாற்றியார் நுகர்ச்சி போல்*" (கலித்.30). "*தொய்யா வுலகத்து நுகர்ச்சியும் கூடும்*" (புறநா.214). "*சின்னகை முகத்த ணன்னுதல் வாவென நுகர்ச்சியி னுகந்த வளமுலை நோவ*" (பெருங்.மகத,3:122,123). 2. உண்ணுகை; eating, feeding. "*கவியமுதம் நுகர்ச்சியுறுமோ*" (திவ். திருவாய். 8.10:5). 3. துய்ப்புணர்ச்சி; sensation. "*உருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை*" (மணிமே. 30:189).

*[நுகர் → நுகர்ச்சி]*

**நுகர்ச்சியிலுலகம்** *nugarcci-y-il-ulagam,* பெ.(n.) வீடு; heaven. "*நோற்றவன் வலையை நீங்கி நுகர்ச்சியி லுலக நோக்கி யாற்றுறப் போத றேற்றா மளியமோஒ பெரிய மேகாண்*" (சீவக.376).

*[நுகர்ச்சி + இல் + உலகம்]*

**நுகர்ச்சியின்மையணி** *nugarcci-iṉmai-y-aṇi,* பெ. (n.) ஒரு பொருள் நுகர்ச்சிக்கு (அநுபவம்) வராமையே அதனின்மைக்கு மூல (ஆதாரம்) மாகக் கூறும் அணி (குவல.113); a figure of speech.

*[நுகர்ச்சி + இன்மை + அணி]*

**நுகர்பொருள்** *nugar-poraḷ,* பெ. (n.) அன்றாடத் தேவைகளுக்காக மக்கள் வாங்கிப் பயன் படுத்தும் பொருள்; consumer goods.

*[நுகர்+ பொருள்]*

**நுகர்வு** *nugarvu,* பெ. (n.) **நுகர்ச்சி** பார்க்க; see *nugarcci.* *"நோயும் வேட்கையும் நுகர்வு மென்றாங்கு"* (தொல். பொருள். 247). *அலுவலங்களின் மின்சார நுகர்வைக்குறைக்க நடவடிக்கை தேவை.*

F. consumption; E. consommation, G. verbrauch(m); It. consumo.

*[நுகர் → நுகர்வு]*

நுகர்வு *(consumption)*: மனிதனுக்குப் பசி, தாகம் போன்ற பல தேவைகள் ஏற்படுகின்றன. அத்தேவைகளை ஈடுசெய்ய உணவுப்பொருள், தண்ணீர், வீடு, உடை ஆகிய பொருள்களைப் பயன்படுத்துகின்றான். அவ்வாறு பயன் படுத்துவது *'நுகர்வு'* எனப்படும். அதாவது மனிதனின் விருப்பத்தை நிறைவு செய்யும் பொருள்களும் பணிகளும் அவற்றின் செயற்பாட்டில் நுகர்வு எனப்படும்.

உணவை உண்ணுதல், நீரைக் குடித்தல் போன்ற செயல்களின்றி உடையை உடுத்தல், நாற்காலியில் உட்காருதல், மருத்துவரின் தொண்டைப் பயன்படுத்தல் போன்ற செயல்களும் நுகர்வின்பாற் பட்டவையே. எனவே, நுகர்வு என்பது பொருளை அழித்தல் அன்று. திடப்பொருளை மனிதனால் ஆக்கவும் முடியாது; அழிக்கவும் முடியாது. மனிதன் திடப் பொருள்களின் உருவம், நிறம் போன்றவை களை மாற்றி அதன் பயன்படும் ஆற்றலைப் பெருக்குகின்றான். அவ்வாறு செய்யும் செயலை ஆக்கம் (உற்பத்தி) என்கிறோம். ஒரு பொருளை நுகரும்போது மனிதன் அதை அழிக்கவில்லை; ஆக்கத்தினால் (உற்பத்தியி னால்) சேர்க்கப் பெற்ற பயன்பாட்டையே பயன்படுத்துகின்றான். எனவே பொருளை ஆக்குதல் பயன்பாட்டின் ஆக்கம் என்றால், நுகர்வு பயன்பாட்டின் அறிவு எனலாம்.

நுகர்வு, பொருளியல் செயற்பாட்டின் முடிவு ஆகும். அதே சமயத்தில் அது பொருளியற் செயற்பாட்டின் தூண்டுதலுமாகும். ஒரு பொருளை நுகர்வோர் இல்லையென்றால் அதை ஆக்குவோரும் இல்லை; விற்பவரும் இல்லை. எனவே, பொருளியற் செயற்பாட்டின் தொடக்கமும் முடிவும் நுகர்வேயாகும். (கலைக் களஞ்சியம்).

**நுகர்வோர்** *nugarvōr,* பெ.(n.) தன் பயன்பாட்டுக்காகப் பொருளை வாங்குபவர்; consumer. *வாங்குபவர் வருமானத்தை மட்டுமே குறிக்கோளாகக் கொள்ளாமல் நுகர்வோரின் நலனையும் கருத்தில் கொள்ள வேண்டும்.*

F. consommateur; G. verbraucher (inf)m., It. consumatore, trice.

*[நுகர்வு → நுகர்வோர்]*

**நுகர்வோர்கடன்** *nugarvor-kaḍaṉ,* பெ. (n.) வைப்பகம் போன்ற அமைப்புகள் நுகர் வோர்க்கு வழங்கும் கடன்; consumer credit.

*[நுகர்வோர் + கடன்]*

**நுகர்வோர் கூட்டுறவு** *nugarvōr-kūṭṭuṟavu,* பெ.(n.) நுகர்வோர் குழுவுக்குச் சொந்த மானதும், அதனாலேயே நடத்தப்படுவதுமான ஒரு வாணிகத் தொழில் அமைப்பு; consumer co-operative.

*[நுகர்வோர் + கூட்டுறவு]*

இவ்வமைப்புச் சில்லறை, மொத்த விற்பனையுடன் தோற்றுவித்தல், நுகர்ச்சிப் பண்டங்களைப் பதப்படுத்துதல் போன்ற வற்றையும் செய்கிறது.

**நுகர்வோர்பாதுகாப்பு** *nugarvōr-pādukāppu,* பெ.(n.) நுகர்வோர், பண்டம் பற்றிய குறை, இழப்பு, மனநிறைவின்மை போன்றவற்றைக் களைந்து வாழ்க்கைத் தரத்தை உயர்த்த நுகர்வோர் ஒருங்கிணைந்து மேற் கொள்ளும் அமைப்பு; consumer protection.

*[நுகர்வோர் + பாதுகாப்பு]*

நுகர்வோர் பாதுகாப்பு என்பது, அவரது உடல் நலனைக் கெடுக்கும் பண்டம், பணிகளிலிருந்து காத்தல்; ஏமாற்று வாணிகமுறை, சூழ்நிலைச் சீர்கேடு போன்ற செயல்களிலிருந்து காத்தல்.

**நுகர்வோருளவியல்** *nugarvōr-uḷaviyal,* பெ. (n.) நுகர்வோரின் நடத்தையைப் பற்றி விளக்கும் உளவியல் துறை; consumer psychology.

*[நுகர்வோர் + உளவியல்]*

நுகர்வோர் நடத்தையில் இரு இன்றியமையாக் கூறுகள் உள்ளன. அவை: 1. இயற்கைத் தேவைகளை நிறைவேற்றுதல், 2. மற்றத் தேவைகளை நிறைவு செய்து கொள்ளுதல் என்பன. இரண்டுக்கும் பெரிய வேறுபாடுகள் இல்லையென்றாலும் சிற்சில வகைகளில் வேறுபடுகின்றன. நுகர்வோரின் நடத்தை இயற்கைத் தேவைகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு அமைந்தால் அந்நடத்தைக்கு விளக்கம் பெரிதும் தேவைப்படாது. ஆனால், பிறதேவைகளைப் பொறுத்து நுகர்வோர் நடத்தை அமைந்தால் அதற்கு விளக்கங்கள் பெரிதும் தேவைப்படும்.

இயற்கைத் தேவைகள் என்பன உடல் தொடர்புடையனவாகும். அதாவது பசி, வேட்கை, ஓய்வு முதலியன. ஆசை, மேலாண்மை, அடைவு முதலியன உளத் தொடர்புடைய பிற தேவைகளாகும். (வாழ்வியல்).

**நுகும்பு** *nugumbu,* பெ. (n.) 1. பனை, வாழை முதலியவற்றின் மடல்விரியாத குருத்து; unexpanded tender leaf of palmyra, plantain, etc. *"பனை நுகும்பன்ன சினைமுதிர் வராலோடு"* (புறநா. 249). *"வரிமரல் நுகும்பின் வாடி அவண"* (நற்.92:3). *"சோலை வாழைச் சுரிநுகும்பு இனைய"* (குறுந்.308:1). 2. பனையோலை; palmyra leaf. *"நுகும்பினு ளிடைப்பட வெழுதுக"* (பெருங். நரவாண. 7:123). *"நாடு நகரமு நளிமலை முட்டமும் உள்கண் டமைந்த கொள்குறி நுகும்பிற்"* (பெருங்.வத்தவ.2:43,44).

*[நுல் (= இளமை, மென்மை) → நுள் → (நுழு) → நுகு → நுகும்பு = பனங்குருத்து. ஒ. நோ : தொழு → தொகு (வே. க).]*

**நுகை[1]-தல்** *nugai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தளர்தல்; to become lax, loose, as a garment. *நுகைந்த கட்டு.* 2. இளகுதல்; to become soft, as the earth from rain.

*[நுள் → நுகு → நுகை → நுகை-தல் (சு. வி.)]*

**நுகை[2]-த்தல்** *nugai-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. தளரச்செய்தல் (யாழ்ப்.); to relax, loosen, slacken, mitigate. 2. இளகச்செய்தல்; to soften.

*[நுள் → நுகு → நுகை → நுகை-த்தல் (சு.வி.)]*

**நுகை[3]** *nugai,* பெ. (n.) சிவதை (சங். அக.); Indian jalap.

*[நுசை → நுகை. நுசை = சிவதை.]*

**நுகை[4]** *nugai,* பெ. (n.) 1. தளர்; loose. 2. இளகு; soft.

*[நுள் → நுகு → நுகும்பு = மடல் விரியாத குருத்து. நுள் → நுகு → நுகை (சு. வி.)]*

**நுகைப்பு** *nugaippu,* பெ. (n.) இளகச்செய்கை; to act of loosening. (சா.அக.).

*[நுகை= இளகு, தளர். நுகை[4] → நுகைப்பு]*

**நுகைவு** *nugaivu,* பெ. (n.) 1. தளர்வு; looseness, laxity. 2. தளர்ந்தது; anything loose. 3. மென்மையானது (மிருது); softness, mellowness. 4. தணிவு; mitigation, relaxation, as of a disease. 5. மனக்கனிவு; tenderness of mind. 6. பொருளுதவி; pecuniary.

*[நுகை → நுகைவு]*

**நுங்கம்பாக்கம்** *nuṅgam-pākkam,* பெ. (n.) சென்னை மாநகரில் உள்ள நெய்தல் நில ஊர்ப் பெயர்; a village in Chennai city.

கடற்கரைச் சிற்றூர்கள் பாக்கம் என்று பெயர் பெறும். சென்னை மாநகரின் அருகே சில பாக்கங்கள் உண்டு. கோடம்பாக்கம், மீனம்பாக்கம், வில்லிபாக்கம் முதலிய ஊர்கள் நெய்தல் நிலத்தில் எழுந்த குடியிறுப்பேயாகும். சில காலத்திற்கு முன் தனித்தனிப் பாக்கங்களாய்ச் சென்னையின் அண்மையில் இருந்த சிற்றூர்கள் இப்போது அந்நகரின் பகுதிகளாய் விட்டன. புதுப்பாக்கம், புரசைபாக்கம், சேப்பாக்கம், நுங்கம்பாக்கம், பட்டினப்பாக்கம் முதலிய ஊர்கள் சென்னை மாநகரோடு சேர்ந்திருக்கின்றன.

**நுங்கல்** *nuṅgal,* பெ. (n.) 1. பருகுகை; drinking. 2. விழுங்குகை; swallow. (சா. அக.).

*[நுங்கு = விழுங்கு. நுங்கு → நுங்கல்]*

**நுங்கள்** *nuṅgaḷ,* ப.பெ. (pron.) 1. முன்னிலைப் பெயராகிய நீங்கள் என்பது வேற்றுமை யுருபேற்கும் போது அடையும் உருவம்; the form which *nīṅgaḷ* assumes in obligue cases. "*நுங்கட்கு*" (திங். திருவாய். 8.2:1). 2. உங்கள்; your. "*உமைத் தொடுத்த சாபத்துப் பறநோக்கி நுங்கடொல்லுரு நல்கி*" (திருவிளை.அட்ட.10). "*நுங்களை வீணை வென்ற*" (சீவக.796).

*[நும் → நுங்கள்]*

**நுங்கன்** *nuṅgaṉ,* பெ. (n.) ஆதனுங்கன் என்னும் குறுநில மன்னன்; Adanuṅgaṉ, the king of Thiruvēṅgaḍam.

*[ஆதனுங்கன் → நுங்கன்.* திருவேங்கடத்தைச் சார்ந்த மலைநாட்டை ஆண்டவன். இப்போது திருப்பதியில் திருவேங்கடவன் கோயில் இருக்கும் பகுதியே இவன் வாழ்ந்த இடம். கள்ளில் ஆத்திரையனார் என்னும் புலவர் இவனைப் பாடியுள்ளார். (சி. பெ. அ.)*]*

**நுங்கி** *nuṅgi,* பெ. (n.) 1. இரைக்குழல்; oesophagus. 2. கண்டநாளம்; the passage in the neck of an animal through which food and drink are taken to the stomach - Gullet. (சா. அக.).

*[நுங்கு → நுங்கி]*

**நுங்கு¹–தல்** *nuṅgu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. விழுங்குதல்; to swallow, devour. 2. வயிறாரப் பருகுதல்; to drink in large draughts. "*நூறுநூறு குடங்களு நுங்கினான்*" (கம்பரா. கும்ப. 60). "*இந்தநஞ் சேர்கானகத்தை நுங்குமெரிபோல்*" (பிரமோத்.காண்.13:20). 3. கைக்கொள்ளுதல்; to take possession of capture. "*பகைவர் முனுங்கி*" (பு. வெ. 4:15). 4. உட்கொள்ளுதல்; to include; suck "*மகரவாய் நுங்கிய சிகழிகை*" (கலித். 54).

**து.** நிங்குநி, நிங்குடுநி, திங்குநி, திங்குடுநி; **க.** நுங்கு; **குரு.** நுநுக்நா; **மா.** நுந்கெ; **பிரா.** நுகுசிங் (nugushing).

*[நுல்(துளை) → நுள் → நுழு → நுகு → நுங்கு → நுங்கு – தல் = துளை போன்ற வாய்க்குளிட்டு விழுங்குதல் (வே.க.)]*

**நுங்கு²–தல்** *nuṅgu-,* 5செ. கு.வி.(v.i.) கெடுதல்; to perish; to be destroyed. "*வினை கணுங்கிடாவே*" (சி.சி.8:35)

*[நுங்கு¹ → நுங்கு²–தல்]*

**நுங்கு³** *nuṅgu,* பெ. (n.) 1. இளம் பனங்காயின் உள்ளீடான இனிப்புச் சுவையுடைய வழவழப்பான சதைப்பகுதி; pulpy kernel of a tender palmyra fruit. "*நுங்கு சூன்றிட்ட கண்*" (நாலடி, 44). 2. நுங்குக்காய்; tender palmyra fruit. "*நுங்கின் றடிகண் புரையுங் குறுஞ்சுனை*" (கலித். 108:40).

*"தோட்ட நுங்கிற் றொளை யுறு மூக்கினை"* (கம்பரா.கரன்.8). *"ஓங்கிரும் பெண்ணை நுங்கொடு பெயரும்"* (குறுந். 293:3). *பனைமரத்தில் ஏறி ஒருகுலை நுங்கு வெட்டிப் போட்டான்.*

தெ. நுங்கு; ம. நொங்நு.

*[நுல் = இளமை, மென்மை. நுல் → நுள் → நுழு → நுகு → நுங்கு = இளம்பனங்காய்]*

**நுங்குக்கசர்** *nuṅgu-k-kašar,* பெ. (n.) நுங்கின் மேற்றோல் (யாழ்ப்.); the astringent skin covering the pulp of a tender palmyra fruit.

மறுவ. நுங்குத்துவர்.

*[நுங்கு + கசர்]*

**நுங்குக்கட்டி** *nuṅgu-k-kaṭṭi,* பெ. (n.) முற்றின நுங்கின் உள்ளீடு(வின்.); hard pulp of the seed of a palmyra fruit.

மறுவ. கொட்டை நுங்கு.

*[நுங்கு + கட்டி]*

**நுங்குக்கண்** *nuṅgu-k-kaṇ,* பெ. (n.) வெட்டிய பனங்காயிற் காணப்படும் உள்ளீட்டுக்குழி (உ.வ.); the holes of a tender palmyra fruit containing the pulp.

*[நுங்கு + கண்]*

**நுங்குக்குவளை** *nuṅgu-k-kuvaḷai,* பெ. (n.) நுங்கு எடுத்தப் பனங்காய்(வின்.); shell of a young palmyra fruit after the pulp has been removed. *நுங்குக்குவளை அடுப்பெரிக்கப் பயன்படும்.*

மறுவ. நுங்குக்கோம்பை, நுங்குக்கோளை.

*[நுங்கு + குவளை. குவளை = நுங்கு எடுத்த பனங்காயின் குழிவான பகுதி.]*

**நுங்குக்கோம்பை** *nuṅgu-k-kōmbai,* பெ.(n.) நுங்குக்குவளை(வின்.) பார்க்க; see *nuṅgu-k-kuvaḷai.*

*[நுங்கு + கோம்பை]*

**நுங்குக்கோளை** *nuṅgu-k-kōḷai,* பெ.(n.) நுங்குக்குவளை (வின்) பார்க்க; see *nuṅgu-k-kuvaḷai.*

*[நுங்கு + கோளை]*

**நுங்குகை** *nuṅgugai,* பெ.(n.) விழுங்குகை; the act of swallowing-Deglutition.

*[நுங்கு → நுங்குகை]*

**நுங்குத்துவர்** *nuṅgu-t-tuvar,* பெ.(n.) நுங்குக்கசர் (யாழ்ப்.) பார்க்க; see *nuṅgu-k-kašar.*

*[நுங்கு + துவர்]*

**நுங்குந்நுரையுமாக** *nuṅgu-n-nuraiyumaga,* வி.எ.(adv.) பால், தண்ணீர் போன்ற நீர்மப் பொருளின் மேலெழும் நுரையுடன்; foamy. *ஆற்றில் வெள்ளம் நுங்கும் நுரையுமாகக் கரைபுரண்டு ஓடியது. அப்போதே கறந்த பால் நுங்கும் நுரையுமாக இருக்கும்.*

*[நுங்கு[3] + உம் + நுரை + உம் + ஆக.]*

**நுங்குநீர்** *nuṅgu-nīr,* பெ. (n.) பனையிளங் காயின் தண்ணீர்; water of young palmyra fruit.

*[நுங்கு + நீர்]*

இது தாகத்தை அடக்கி வெப்பத்தைத் தணிக்கும். வேர்க்குருவில் தடவ, குணமாகும். (சா.அக.).

**நுங்குப்பற்று** *nungu-p-parru,* பெ. (n.) கட்டியும் குழம்புமாகக் கலந்த கலப்பு; a colloid solution in which the particles or solid suspended as it were in the fluid part of the solution - Suspension colloid. (சா.அக.).

*[நுங்கு³ + பற்று]*

**நுங்குப்பாக்கு** *nungu-p-pākku,* பெ. (n.) இளம்பாக்கு (வின்.); green, tender arecanut.

*[நுங்கு³ + பாக்கு]*

**நுங்கை¹** *nungai,* பெ.(n.) 1. உன் தங்கை; your younger sister. "*மிருகாபதியெனு நுங்கை தன்னகா*" (பெருங். இலாவாண. 11:130), "*நுங்கை கையிழந்த தென்மாயமோ*" (கந்தபு.சூரன்றண்ட.23). 2. உன்தாய்; your mother. "*நுங்கையு மேருவி னிருந்தாள்*" (கந்தபு. சயந்தன்கன.9).

*[நும் → நுங்கை. முன்னிலைப்பெயர்]*

**நுங்கை²** *nungai,* பெ. (n.) **நுங்கம்பாக்கம்** பார்க்க; see *nungam-pākkam.*

**நுச்சிலி** *nuccili,* பெ.(n) ஏழிலைப்பாலை; seven leaved milky plant-Alstonia scholaris alias A.oleandrae folia. (சா.அக.).

**நுசுப்பு** *nušuppu,* பெ.(n.) மகளிர் சிற்றிடை; waist of a woman. "*நுசுப்பிற்கு நல்ல படாஅ பறை*" (குறள், 1115). "*முற்றாமுகிழ் முலைப்பான் முற்றி முகங்கறுப்பப் பற்றா நுசுப்பாள் கருப்பம் படைத்தனளே*" (பிரமோப.காண்.3:10). "*அம்மா மேனி ஐதமை நுசுப்பின்*" (அகநா.75:18). "*மேலிருந்த தனயான் பொறையாற் றேனென் றொசிவது போலுநின் னொசிநுசுப் புணரா*" (பெருங்.உஞ்சைக். 1:212,213). *உடுக்கை போன்று நுசுப்பு இருக்கும் பெண்கள் அழகாக இருப்பர்.*

*[நுல் → நுள் → நுளு → நுசு → நுசுப்பு = நுணுகிய, மகளிர் இடை; சிறுத்த இடை. நுல் = சிறுமை, மென்மை. ஒ.நோ : உளு → உசு.]*

**நுசை** *nušai,* பெ. (n.) சிவதைவேர் (தைலவ. தைல.103); root of Indian Jalap.

**தெ.** நுசலிங்க.

**நுஞ்சு** *nuñju,* பெ. (n.) அதிமதுரம்; honey creeper-Glycirrhhiza glabra. (சா.அக.).

**நுட்டம்** *nuṭṭam,* பெ. (n.) எருக்கு; sun plant-Calotropis gigantea. (சா.அக.).

**நுட்பக்காரன்** *nuṭpa-k-kāraṉ,* பெ. (n.) அறிவுக் கூர்மையாளன் (இ.வ.); man of acute intellect. *தொலைக்காட்சி பழுது பார்ப்பதில் அவன் நுட்பக்காரன்.*

*[நுட்பம் + காரன். நுட்பம் = அறிவு நுட்பம். காரன் = ஆண்பால் ஒருமை ஈறு.]*

**நுட்பக்கோள்** *nuṭpa-k-kōḷ,* பெ. (n.). **நுட்பம்-4** பார்க்க; see *nuṭpam-4.*

*[நுட்பம் + கோள்]*

**நுட்பபாகம்** *nuṭpa-pāgam,* பெ.(n.). அணு போன்ற சிறிய பகுதி; finer parts. 2. எளிதில் மாற்ற மடையக்கூடிய பகுதி; the part of a substance which changes by yielding to slightest pressure, the fluid part. (சா.அக.).

*[நுட்பம் + பாகம். நுட்பம் = நுண்மை, சிறுமை. பாகம் = சிறிய பகுதி.]*

**நுட்பம்** *nutpam,* பெ. (n.) **1.** நுணுக்கம், நுண்மை; minuteness, fineness. *"நெய்யினும் யாரு மறிவர் புகை நுட்பம்"* (நாலடி,282). *"கொற்றவற் காண்மென வெற்றவேற் றடக் கையர் கோல்வித்தகங் குயின்ற நுட்பத்து"* (பெருங்.இலாவாண.2:36,37). *தொலைக் காட்சியில் ஏற்பட்ட நுட்பமான கோளாறு இன்றுதான் சரி செய்யப்பட்டது.* **2.** அறிவு நுட்பம், அறிவுக்கூர்மை; subtlety, insight, acuteness. *நுட்பம் மிகுந்த அறிவுடையவர்.* **3.** பொருளின் நுட்பம்; precision, accuracy. *"திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்"* (நன்.18). **4.** கரந்துறை கோள்களுள் ஒன்று; an invisible planet. *'வட்டம், சிலை, நுட்பம், தூமம்'* என்னும் கோள்கள் நான்கினும் (சிலப்.10:102, உரை). **5.** காலநுட்பம்(பிங்.); minute point of time. **6.** ஒரு கருத்தைக் குறிப் பினாலுணர்த்தும் பொருளணி; figure of speech which expresses an idea by implication. *"திரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினும் அரிதுணர் வினைத்திற நுட்ப மாகும்"* (தண்டி.64). **7.** நுண்ணிய ஆராய்ச்சி தோன்ற எழுதப் பெற்ற உரை (யாப்.வி.1); critical commentary.

*[நுட்பு → நுட்பம்] [நுட்பு + அம்]*

**நுட்பமான** *nutpamāna,* பெ.எ. (adj.) நுண்மை யான; minute. *நுட்பமான பொருள்கள், நுட்பமான கருத்துக்கள்.*

*[நுட்பம் → நுட்பமான]*

**நுட்பவணி** *nutpa-v-aṇi,* பெ. (n.) பிறர் கருத்தை யறிந்து கொண்டு, வெளிப் படையாகக் கூறாமல் குறிப்பினாலாவது தொழிலினாலாவது அரிதாக அறியத்தக்க தன்மையுடைய அணி (தண்டி. 64 உரை); figure of speech which expresses an idea by implication.

*[நுட்பம் + அணி]*

நுட்பவணி, குறிப்பு நுட்பம், தொழில் நுட்பம் என இருவகைப்படும்.

குறிப்பு நுட்பம் : கருத்தை வெளிப் படையாகக் கூறாமல் குறிப்பால் நுட்பமாக தெரிவிக்கும் அணி.

"காதலன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்ததால்
போதைய ராயம் பிரியாத – மாதர்
படரிருள்கால் சீக்கும் பகலவனை நோக்கிக்
குடதிசையை நோக்குங் குறிப்பு."
(தண்டி.64 மேற்கோள்)

காதலன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்தால் ஆயத்தால் பிரியாது சூழப்பட்ட மாதர் கதிரவனை நோக்கி மேற்றிசையையும் பார்த்தனர். இதில் கதிரவனைப் பார்த்து மேற்றிசையையும் பார்த்த குறிப்பு வருவதால் மாலைக் காலத்து கூட்டம் நேர்ந்தவாறு என்னும் நுட்பக் குறிப்பு அறியப்படுவதால் இது குறிப்பு நுட்பவணி.

தொழில் நுட்பம் : தொழிலால் கருத்தை நுட்பமாக அறிவிக்கும் அணி.

"பாடல் பயிலும் பணிமொழி தன் பணைத்தோள்
கூடல வாவாற் குறிப்புணர்த்தும் –ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவே
தைவந்தாள்
இன்றீங் குறிஞ்சி யிசை" (தண்டி.64,மேற்கொள்).

பாடுந் தொழிலை யுடையாள் தலைவனைத், தழுவ வேண்டுமென்னும் ஆசையால் தலைவற்குத் தன் உள்ளக் கருத்தைத் தெரிவிக்கும் முகத்தான் குறிஞ்சிப் பண்ணை யாழிலே இசைத்து அறிவிக்கின்றாள். குறிஞ்சிக்குக் காலம் இடையாம மாகலால் இடையாமத்திற் கூட்டம் வேண்டும் என்ற கருத்தை யாழிலே, குறிஞ்சிப் பண்ணை யிசைப்பதாகிய தொழிலால் நுட்பமாக அறிவிப்பதால் இது தொழில் நுட்பவணி.

**நுட்பு** *nutpu,* பெ.எ. (adj.) நுண்மை; minuteness.

*[நுண் → நுண்பு → நுட்பு (வே.க.)*
*நுள் + பு – நுட்பு (சு.வி.)]*

**நுடக்கம்[1]** *nudakkam,* பெ. (n.) 1. அசைவு; shaking, waving, as of a flag in the wind; tremulousness. *"கோங்கரும் பழித்த வீங்கிள மென்முலை உட்பட விட்ட வட்ட நுடக்கத்து"* (பெருங்.இலாவாண,2:211,212). 2. துவட்சி; flexibility, pliability. *"சூரமை நுடக்கத்து நின்வெங் காதலி"* (ஐங்குறு. 71). 3. தள்ளாட்டம்(வின்.); tottering, as a of an old man. 4. கூத்து; dancing. *"நல்லவர் நுடக்கம்போ னயம்வந்த கொம்பு"* (கலித்.32), *"வெறியுறு நுடக்கம் போலத் தோன்றி"* (பதிற்றுப்.51). 5. வளைவு (யாழ்.அக.); bend. flexure.

*[நுடங்கு → நுடக்கம்]*

**நுடக்கம்[2]** *nuḍakkam,* பெ. (n.) 1. நுட்பம்; minuteness. 2. முடக்கம்; condition of being bent as limbs.

*[நுடங்கு → நுடக்கம்]*

**நுடக்கம்[3]** *nuḍakkam,* பெ. (n.) புழுக்கைப் பட்டை அல்லது கனகிப்பூடு; round leaved tadda - Grewia orbiculata. (சா.அக.).

*[நுடங்கு → நுடக்கம்]*

**நுடக்கி** *nuḍakki,* கு.வி.எ(adv.) ஒன்றாகக் கரைத்து; dissolve. *"நூலிலாட்டி நுடக்கிக் குடித்து"* (சீவக.762).

*[நுடக்கு → நுடக்கி.]*

**நுடக்கு[1]–தல்** *nuḍakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கழுவுதல்; to wash. *"வள்ள நுடக்கிய வார்ந்துகு சின்னீர்"* (பெரும்பாண்.339). 2. துவட்டுதல் (சூடா.); to wipe off moisture. 3. மாய்த்தல்; to destroy. *"பொங்குபிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்"* (பதிற்றுப்.72:14). 4. கரைத்தல்; to dissolve. *"நூழி லாட்டி நுடக்கிக் குடித்து"* (சீவக.762). 5. மடக்குதல்; to bend, fold.

*[நுடங்கு → நுடக்கு]*

**நுடக்கு[2]** *nuḍakku,* பெ. (n.) அசைவு; shaking, waving as of a flag in the wind. *"அவிரழ னுடக்கு"* (பரிபா. 2:51).

*[நுடங்கு → நுடக்கு]*

**நுடக்கு[3]** *nuḍakku,* பெ. (n.) 1. முடக்கு; bend. 2. தள்ளாட்டம்; totter. (சா.அக.).

*[நுடங்கு → நுடக்கு]*

**நுடங்கு[1]–தல்** *nuḍaṅgu,* 5 செ.கு.வி.(v.i.) 1. அசைதல்; to shake, wave; to be tremulous. *"பல்கொடி நுடங்குமுன்பிற் செறுநர் செல்சமந் தொலைத்த வினைநவில் யானை"* (பதிற்றுப்.82:3.), *"நுடங்குகொடி மருங்கி னுணுகிய நுசுப்பின் மடந்தை மகளிர் குடைந்தா டரவமும்"* (பெருங். உஞ்சைக். 1:80,81). 2. துவளுதல்; to be flexible, pliable. *"மின்னேர் நுடங்கிடை"* (திருவாச.11:9). 3. தள்ளாடுதல்; to totter, tremble. *"நக்கான்முக நோக்கி நடுங்கி நுடங்கி"* (பெரியபு.தடுத்.39). 4. ஆடுதல்; to dance. *"மாறிரியச் சீறி நுடங்குவான்"* (பு.வெ.2:9). 5. வளைதல்; to be bent. *"நுடங்குநுத லிளவே ரிடங்கெட வணிய"* (ஞானா.36:4). 6. நுட்பமாதல்(வின்.); to be fine, thin, at tenuated. 7. அடங்குதல்; to be contained. *"நூறுயோசனை அகலமு மாழமு நுடங்க"* (கம்பரா. அகலிகை.38). 8. ஈடுபடுதல்; to be fascinated. *"நுடங்கு கேள்வி மிசையென்கோ"* (திவ்.திருவாய்.3.4:6).

*[நுள்(வளைவு) → நுட → நுடங்கு → நுடங்கு–தல் (மு.தா.)]*

**நுடங்கு²–தல்** *nuḍaṅgu-,* 5செ.கு.வி.(v.i.) மெலிதல்; to be feeble, thin or weak. *"நொந்தவரே முதலாக நுடங்கி யனன்னியராய்"* (ரஹஸ்ய.390).

*[நுடங்கு¹ → நுடங்கு²–தல்]*

**நுடங்கு³** *nuḍaṅgu,* பெ. (n.) 1. அசைவு; tremulousness. 2. நுட்பம் (யாழ்.அக); thinness, smallness. 3. துவளுதல்; to be flexible. *"நிறைவளை முன்கைத் தோழியர் குடைந்த நுரைகை யரிக்குமோர் நுடங்கிடை காண்மின்"* (பெருங்.உஞ்சைக். 1:150,151).

*[நுடங்கு¹ → நுடங்கு³]*

**நுடம்** *nuḍam,* பெ. (n.) 1. வளைவு; bent 2. கால், கை வளைவு; crookedness.

*[நுள்(வளைவு) → நுட → நுடம் (மு.தா.)]*

**நுண்¹** *nuṇ,* பெ. (n.) 1. அணு; minute particle of matter. 2. நுண்மை; minuteness. *'நுண்பொருள் கொடுத்து நுண்ணியராவர்' (பழ.).*

ம. நுண்ம; **கோத.** நுந்க்.

*[முள் → நுள் → நுண் = கூர்மை, நொய்மை, சிறுமை. முள் = ஊசி, ஊசிபோன்ற உறுப்பு. (சுவி.40)]*

*[நுல்(கூர்மை, சிறுமை) → நுள் → நுண் (வே.க.)]*

*[முன் → முனி → நுனி → நுணி → நுண்.]*

நுண்–L. min. இதனின்று minor, minority, minish, minin, minmum, minister, ministrel, minute, minus முதலிய பல சொற்கள் பிறக்கும். (ஒ.மொ.நூ.326)

**நுண்²** *nuṇ,* கு.பெ.எ. (adj.) 1. நுட்பமான; fine. *நுண்கலைப்பொருள்.* 2. நுணுக்கமான; minute. *ஒரு சிறிய நுண் பொருள் விழுந்து விட்டது.* 3. கூரிய; sharpness. 4. நொய்ய; lightness. 5. பருப்பொருளல்லாத; minuteness.

**க.** நுண்; **து.** நொண்ணத, நொண்ணகே; **தெ.** நுரு.

*[நுல் (கூர்மை, சிறுமை) → நுள் → நுண்]*

**நுண்கணிதம்** *nuṇ-kaṇidam.* பெ.(n.) இடத்தையும் காலத்தையும் பொறுத்து மாறுபடும் அளவுகளைக் கணக்கிடுவதற்கான ஒரு வகைக் கணிதப் பிரிவு; claculus.

*[நுண் + கணிதம்]*

**நுண்கலை** *nuṇ-kalai,* பெ. (n.) அழகியலை அடிப்படையாகக் கொண்ட ஓவியம், இசை, சிற்பம் போன்ற கலை; fine arts like painting, music etc.

*[நுண் + கலை]*

கலையைப் (Arts of use) பயன்கலை, நுண்கலை என இருகூறாகப் பிரிப்பர். பயன்கலை: சமைத்தல், பானை வனைதல், கூடை முடைதல் போன்றவற்றை உள்ளடக்கியது. உடற்பயன் அன்றி மனமகிழ்ச்சி பற்றிக் கூறப்படும் மற்றொன்று நுண்கலை.

**நுண்காட்சி** *nuṇ-kāṭci,* பெ.(n.) கூர்ந்து பார்க்கும் காட்சி; observation.

*[நுண் + காட்சி]*

**நுண்கிருமி** *nuṇ-kirumi,* பெ.(n.) மக்களுக்கும், விலங்குகளுக்கும் நோயையும், பொருள்களில் வேதியல் மாற்றத்தையும் ஏற்படுத்தும் நுண்ணுயிர்; virus, bacteria.

*[நுண் + Skt. கிருமி]*

**நுண்டுகில்** *nuṇḍugil,* பெ. (n.) பட்டாடைவகை (சிலப்.14:108, உரை.); a kind of fine silk cloth. *"வாழ்வோ ருளரெனிற் சூழ்கதன் வினையென ஆவி நுண்டுகில் யாப்புறுத் தாயினும்"* (பெருங். உஞ்சைக். 1:63,64). *"நுண்டுகி லகலல்கு னோசித்த வெம்முலை"* (சீவக.654).

*[நுண் + துகில்]*

**நுண்டொடர்** *nuṇḍoḍar,* பெ. (n.) நேர்ஞ்சங்கிலி பார்க்க; see *nērñjaṅgili.* *"சங்கிலி நுண் டொடர் பூண்ஞாண் புனைவினை"* (சிலப்.6:99).

*[நுண் + தொடர்]*

**நுண்ணயமுள்ள** *nuṇṇayamuḷḷa,* கு.பெ.எ. (adj.) நுண்மையானதும், சிறியதுமான; that which is thin and fine.

*[நுண் + நயம் + உள்ள.]*

**நுண்ணயமுறை** *nuṇṇaya-muṟai,* பெ.(n.) செயல் நுட்பம்; tactics.

*[நுண் + நயம் + முறை]*

**நுண்ணளவுகோல்** *nuṇṇaḷavu-kōl,* பெ.(n.) வெர்னியர் அளவுகோல்; Vernier scale.

*[நுண் + அளவு + கோல். நுண்ணள வையும் அளக்கும் கோல்.]*




**நுண்ணறிவு** *nuṇ-ṇ-aṟivu,* பெ. (n.) நுண்ணு ணர்வு பார்க்க; see nuṇṇuṇarvu. *"நூலளவே யாகுமா நுண்ணறிவு"* (வாக்குண்.7).

*[நுண் + அறிவு]*

**நுண்ணாக்கை** *nuṇ-ṇ-ākkai,* பெ. (n.) நுண் உடல் (சூட்சும சரீரம்); subtle body. *"பாச மடங்கு நுண்ணாக்கை நீங்க"* (சிவதரு. சிவயோ. 107)

*[நுண் + ஆக்கை]*

**நுண்ணாய்வாளர்** *nuṇṇāy-vāḷar,* பெ. (n.) துல்லியமான திறனாய்வாளர்; critic.

*[நுண் + ஆய்வாளர்]*

**நுண்ணிச்சிறை** *nuṇṇi-c-ciṟai,* பெ.(n.) கொசுக்கட்டைக் குருவி; an unknown small bird so called probably of its minute and delicate wings. (சா.அக.).

*[நுண் → நுண்ணி + சிறை]*

நுண்ணிய இறகுகளையுடைய குருவியாக இருக்கலாம்

**நுண்ணிடை** *nuṇ-ṇ-iḍai,* பெ. (n.). ஒடுங்கிய இடையையுடைய பெண் (திவா.); woman, as having a slender waist. *"வஞ்சி நுண்ணிடை மணிமே கலை"* (சிலப்.5:81).

*[நுண் + இடை]*



**நுண்ணிநாளம்** *nuṇṇi-nāḷam,* பெ.(n.) நுட்பமான நாளம்; minute capillaries. (சா.அக.)

*[நுண் → நுண்ணி + நாளம்]*

**நுண்ணிமை** *nuṇṇimai,* பெ.(n.) **நுண்மை** பார்க்க; see *nuṇṇimai.* *"நுண்ணிமை யிறந் தமை யறிவன்"* (திருவிசை. கருவூர்த். திருப்பூவ.4)

*[நுண் → நுண்ணிமை]*

**நுண்ணிய** *nuṇṇiya,* பெ.எ. (adj.) 1. மிகச் சிறிய; tiny. 2. நுட்பமான; fine. *"நுண்ணிய நூல் பல கற்பினும் மற்றும் தன் உண்மை அறிவே மிகும்"* (குறள்,373). *நுண்ணிய ஞானம் உரைப்பார்கள் சொன்னதில் ஒன்றும் நடவார்கள்* (பழ.) 3. நுணுக்கமான; minute. *'நுண்ணிய கருமமும் எண்ணித் துணி' (பழ.), 'நுண்ணிய கருமமும் எண்ணிச் செய்தல் வேண்டும்' (பழ.). நுண்ணிய வேறுபாடுகள் இருக்கும். நுண்ணிய அறிவு கொள்ள வேண்டும். "நுண்ணிய வரியோடு திரண்டு நோக்குநர்"* (சீவக.1702).

*[நுண் → நுண்ணிய]*

**நுண்ணியம்** *nuṇṇiyam,* பெ. (n.) **நுண்ண** றிவுடைமை; acute intellect. *"நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற் கண்ணலல்ல தில்லை பிற"* (குறள்,710).

*[நுண் → நுண்ணியம்]*

**நுண்ணியது** *nuṇṇiyadu,* பெ. (n.) நுண்மை யானது; that which is meticulous.

*[நுண் → நுண்ணியது]*

**நுண்ணியர்** *nuṇṇiyar,* பெ.(n.) 1. அறிவுடை யோர்; intellectual people. 2. நுட்பமானவர்; subtle man. 3. பெரியோர்; great persons. 4. மந்திரிகள்; the ministers.

*[நுண் → நுண்ணியர்]*

**நுண்ணியான்** *nuṇṇiyāṉ,* பெ. (n.) 1. கூரறிவுடையோன்; person of acute intellect, quick parts or subtle discrimination. 2. அமைச்சர் (அக.நி.); minister.

*[நுண் → நுண்ணியான்]*

**நுண்ணுடம்பு** *nuṇ-ṇ-uḍambu,* பெ. (n.) **நுண்ணாக்கை** பார்க்க; see *nuṇṇākkai.* (சா.அக.).

*[நுண் + உடம்பு]*

**நுண்ணுணர்வு** *nuṇ-ṇ-uṇarvu,* பெ.(n.) நுண்ணறிவு (நுட்ப புத்தி); keen pesception, acute intellect. *"நுண்ணுணர் வின்மை வறுமை"* (நாலடி,251).

*[நுண் + உணர்வு]*

**நுண்ணுயிர்** *nuṇṇuyir,* பெ. (n.) 1. நுண் ணோக்கியின் மூலம் மட்டுமே அறிந்திடக் கூடிய பலவகையான மிகச் சிறிய உயிரினம்; micro organism. 2. சிற்றுயிர்; delicate life of small creatures.

E. germ; F. microbe; G. mikrobe(f); It. microbo.

*[நுண் + உயிர்]*

**நுண்ணுயிர்கலத்தல்** *nuṇṇyir-kalattal,* தொ.பெ.(vbl.n.) **விதை முளைகட்டும் பொழுது பூச்சிமருந்து கலக்கை;** mixing of pesticide with seeds for sowing.

*[நுண்ணுயிர் + கலத்தல். நுண்ணுயிர் = சிற்றுயிர், நுண்ணுயிரிகளை அழிக்கும் மருந்து.]*

**நுண்ணுயிரி** *nuṇṇuyiri,* பெ.(n.) **நுண்ணுயிர்** பார்க்க; see *nuṇṇuyir.*

*[நுண் + உயிரி. உயிர் → உயிரி]*

**நுண்ணுருக்கு—தல்** *nuṇ-ṇ-urukku-,* 5செ. குன்றாவி.(v.t.) கரையவுருக்குதல்; to melt thoroughly. ***"நுண்ணுருக் குற்ற... பாண்டில்"*** (மலைபடு.4).

*[நுண் + உருக்கு—தல்]*

**நுண்ணூட்டச்சத்து** *nuṇṇūṭṭa-c-cattu,* பெ. (n.) பயிரிகளுக்கு மிகக் குறைந்த அளவில் அளிக்கப்படும் கனிமச்சத்து; micro-nutrients. ***கரும்புக்கு நுண்ணூட்டச்சத்து வைத்தால் அதிக விளைவைத்தரும்.***

*[நுண் + ஊட்டச்சத்து]*

**நுண்ணேலம்** *nuṇ-ṇ-ēlam,* பெ. (n.) ஓமாலிகை முப்பத்திரண்டனு ளொன்றாகிய மணப்பொருள் a fragrant substance, one of 32 ōmāligai. ***'பதுமுக நுண்ணேலம் பைங்கொடுவேரி கதிர்நகையா யோமாலிகை'*** (சிலப்.6.77,உரை)

*[நுண் + ஏலம்]*

**ஓமாலிகை (மணப்பொருள்கள்) 32:** இலவங்கம், பச்சிலை, கச்சோலம், ஏலம், நாகணம், கோட்டம், நாகம், மதாவரிசி, தக்கோலம், நன்னாரி, வெண்கோட்டம், கத்தூரி, வேரி, இலாமிச்சம், கண்டில் வெண்ணெய், கடு, நெல்லி, தான்றி, துத்தம், வண்ணக்கச்சோலம், அரேணுகம், மாஞ்சி, சயிலேகம், புழுகு, புன்னை நறுந்தாது, புலியுகிர், சரளம், தமாலம், வகுளம், பதுமுகம், **நுண்ணேலம்,** கொடுவேரி.

**நுண்ணோக்கி** *nuṇṇōkki,* பெ. (n.) கண்ணுக்கு எளிதாகப் புலப்படாத மிகச் சிறிய பொருட்களையும், நுண்ணுயிரி(கிருமி) களையும் காண்பதற்கு ஏற்றவாறு பெரிதுபடுத்திக் காட்டக்கூடிய ஆடிகளைக் கொண்ட (அறிவியல்) கருவி; microscope.

*[நுண் + நோக்கி]*

**நுண்திறம்** *nuṇḍiṟam,* பெ. (n.) நுட்பமான திறமை; flair.

*[நுண் + திறம். திறம் = திறமை]*

**நுண்திறமுடைய** *nuṇḍiṟam-uḍaiya,* பெ.எ.(adj.) கூர்மையான அறிவும், திறமும் உடைய; intelligent.

*[நுண் + திறம் + உடைய]*

**நுண்பிண்டி** *nuṇ-piṇḍi,* பெ. (n.) புழுதி; dust.

*[நுண் + பிண்டி. பிண்டி = பொடி, புழுதி]*

**நுண்பு** *nuṇbu,* பெ. (n.) **நுண்மை** பார்க்க; see *nuṇmai.* ***"பாவியேங்கண் காண்பரிய நுண்புடையீர்"*** (திவ்.இயற்.பெரியதிருவந்.8)

**க.** நுண்பு

*[நுண் → நுண்பு]*

**நுண்புலம்** *nuṇ-pulam,* பெ.(n.) நுண்ணறிவு; insight.

*[நுண் + புலம்]*

**நுண்புலமுள்ள** *nuṇ-pulam-uḷḷa,* பெ.எ.(adj.) அறிவுக் கூர்மையுள்ள; intelligent.

*[நுண் + புலம் + உள்ள]*

**நுண்பேராடி** *nuṇ-pērāḍi,* பெ. (n.) நுண்ணோக்கி; microscope.

*[நுண் + பேராடி. பேராடி = பெரிதாகக் காட்டும் ஆடி.]*

**நுண்பொடி** *nuṇ-poḍi,* பெ.(n.) நுட்பமான பொடி; fine powder.

*[நுண் + பொடி]*

**நுண்பொருள்** *nuṇ-poruḷ,* பெ. (n.) 1. நுண்ணிய பொருள்; small, minute things, dist. fr. paru-p-poruḷ. *'நுண்பொருள் கொடுத்து நுண்ணிய ராவர்'* (பழ.). *'நுண்பொருள் காண்பது அறிவு'* (குறள், 424). *"நகைப்பதம் பார்க்கு நனிநாகரிகத்துச் சொல்லி னுண்பொருள் காட்டியில்லின்"* (பெருங்.உஞ்சைக்.1:14,15). 2. நுட்பமான கருத்து; subtle meaning or idea. *'நுண்பொருளினைத் தலைவனெதிர் நின்றுணர்த்துவாள்'* (கலித்.18, உரை).

*[நுண் + பொருள்]*

**நுண்மணல்[1]** *nuṇ-maṇal,* பெ. (n.) சிறுமணல்; fine sand. *"மீதே நுண்மண லிறைத்து"* (திருவாத.பு. மண்சுமந்த.3). *"அரக்கத்தன்ன நுண்மணற் கோடுகொண்டு"* (பதிற்று.30.27).

*[நுண் + மணல்]*

**நுண்மணல்[2]** *nuṇ-maṇal,* பெ.(n.) 1. நீட்டலளவை வாய்பாடு; lenthening table. 8 மயிர் = 1 நுண்மணல். 8 நுண்மணல் = 1 கடுகு. 2. கீழ்வாயிலக்க வாய்பாடு; multiplication of fraction table. 6 1/2 தேர்த்துகள் = 1 நுண்மணல். 100 நுண்மணல் = 1 வெள்ளம்.

*[நுண் + மணல்]*

**நுண்மதி** *nuṇmati,* பெ.(n.) கூர்மையான அறிவு; insight. *"நுண்மதி போன்று தோன்றா, நுணுகிய நுசுப்பினார்."* (சீவக.2611).

*[நுண் + மதி. மதி = அறிவு.]*

**நுண்மருங்குல்** *nuṇ-maruṅgul,* பெ.(n.) நுண்ணிடை; woman, as having a slender waist.

*[நுண் + மருங்குல். மருங்குல் = இடை]*

**நுண்மை** *nuṇmai,* பெ.(n.) 1. நுணுக்கம், நுட்பம்; minuteness; *நுண்மையான உயிரிகள் நுண்மை நுகரேல்* (பழ.). 2. மிகுதி; excess. *"நுண்கருமை கொண்டொசிந்து"* (சீவக.166). 3. கூர்மை; sharpness. 4. வேலைநுட்பம்; refinement, nicety, exquisiteness, as in workmanship. *"தும்பை மாலை இளமுலை நுண்பூ ணாகம் விலங்கு வோளே"* (ஐங்குறு.127). *நுண்மையான அமைப்புக் கொண்ட கைக் கடிகாரம்.* 5. அறிவு நுட்பம்; acuteness, subtlety, discrimination. 6. பொருநுட்பம்; precision, accuracy. *"நுண்ணூல் உணர்விலராகிய ஊதியமில்லாப் புணர்தல் நிரயத்துள் ஒன்று"* (நாலடி,233). 7. சிற்றுண்டி; delicacies, dainties. *"அடிக்கடி நுண்மை விழைந்துபோய்"* (அருட்பா,vi, அவாவறுப்பு.12). 8. கமுக்கம் (இரகசியம்); mystery. *"பெருமைக்கு நுண்மைக்கும்"* (திருவருட்.பதிமுது.3).

க. நுண்மை; ம. நுண்ம

*[நுல் = (கூர்மை, சிறுமை, மென்மை) → நுள் → நுண் → நுண்மை (வே.க.)]*

**நுண்மையற்ற** *nuṇmai-y-aṟṟa,* பெ.(n.) நுண்மையானதும், சிறியதும் அல்லாத; that which is not thin and fine.

*[நுண்மை + அற்ற]*

**நுணக்கம்[1]** *nuṇakkam,* பெ. (n.) 1. கூர்மை (அக.நி.); sharpness. 2. நுண்மை; minuteness. 3. நுடக்கம்; bending.

*[நுணங்கு → நுணக்கம்]*

**நுணக்கம்[2]** *nuṇakkam,* பெ. (n.) **1.** வாட்டம்; withering, fading.

*[நுணங்கு → நுணக்கம்]*

**நுணகம்** *nuṇagam,* பெ. (n.) பொன் (அக.நி.); gold.

*[நுணுக்கம் → நுணகம்]*

**நுணங்கியோர்** *nuṇaṅgiyōr,* பெ. (n.) நுணுகிய அறிவுடையோர் (யாழ்.அக); persons of subtle or sharp intellect. *"யாப்பும் பாட்டுந்தூக்குந் தொடர்புஞ் செய்யுளை நோக்கிற்றென்ப நுணங்கியோரே"* (யா.கா.1,உரை).

*[நுணங்கு → நுணங்கியோர்]*

**நுணங்கு[1]-தல்** *nuṇaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) **1.** அசைதல்; to shake, move. *"நுதலூரும் பசப்பாயின் நுணங்கிறை யளியென்னோ"* (கலித்.28:15). **2.** மெல்லியதாதல்; to be thin, minute, attenuated. *"நுண்ணறல்போல நுணங்கிய பைங்கூந்தல்"* (ஐந்.ஐம்.27). **3.** நுட்பமாதல்; to be subtle, fine, refined. *"நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய வாயினர் ஆதல் அரிது"* (குறள்,419). **4.** வளைதல்; to be bent. **5.** துவளுதல்; to be pliable, flexible. *'நுணங்கு நுண்கொடி மின்னார்'* (தொல்.சொல்.374, உரை). **6.** செறிதல்; to be dense, close, crowded. "நுணங்கரில்" (பு.வெ.4:7).

*[நுள் (அசைதல், வளைதல்) → நுண் → நுணங்கு → நுணங்கு-தல் (மு.தா.)]*

**நுணங்கு[2]-தல்** *nuṇaṅgu-,* 5செ.கு.வி.(v.i.) வாடுதல் (யாழ்.அக); to drop, fade, wither.

*[உணங்கு → நுணங்கு]*

**நுணங்கு[3]** *nuṇaṅgu,* பெ. (n.) **1.** நுண்மை, minuteness, subtlety, fineness. *"நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை"* (தொல். சொல்.உரி.76). **2.** நுடக்கம் (தொல். சொல். உரி.76, உரை); flexure, bending. **3.** தேமல் (சூடா.); yellowish spreading spots on the skin.

*[நுண் → நுணங்கு. நுண் = மிகச் சிறியது, கூரியது (வே.க.)]*

**நுணங்கு[4]** *nuṇaṅgu,* பெ.(n.) பெண்; woman. *"நுணங்கு நுண்கொடி மின்னொர் மழைமி சை"* (சீவக.344).

*[நுண் → நுணங்கு. நுண்ணிய இடையை யுடைய பெண்]*

**நுணல்** *nuṇal,* பெ. (n.) **1.** தவளை; frog. *"வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்ட"* (ஐங்குறு.478:1). *"ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க"* (அகநா.364:3). *"மணலுண் முழுகி மறைந்து கிடக்கும் நுணலுந்தன் வாயாற் கெடும்"* (பழ.114). **2.** கடல்மீன் வகை(வின்); a herring greenish, Clupea brachysoma.

*[நுல்(துளை) → நுள் → நுழு → நுழல் → நுணல் = மணலிற்குள் நுண்ணிதாய் முழுகிக் கிடக்கும் தவளை வகை.]*

நுணல் தவளையினத்தில் ஒருவகை. கருங்கல்லுக்குள்ளும் ஆழ்ந்த மணலுக் குள்ளும் நுண்ணிதாய் நுழைந்து கிடக்கும். அதனால், அதற்கு நுணல் என்று பெயர்.



**நுணலி** *nuṇali,* பெ. (n.) நுணா என்னுங் கொடி; small dyeing mulbery, Morinda umbellata. (சா.அக.).

**நுணலை** *nuṇalai,* பெ. (n.) மணற்காடை; a kind of frog found on the seashores with golden spots, mud frog, Rhacophorus plavrostictus. (சா.அக.).

*[நுணல் → நுணலை]*

சென்னைப்பல்கலைக் கழக அகரமுதலி மணற்காடையை மணற்கூகையென்று வின்சுலோ குறிப்பதாகக் காட்டுகிறது. நுணல், நுணலை என்னும் ஊர்வன வகையைச் சார்ந்த தவளைக்குக் காடை (சா.அக.). கூகை (வின்.) என்று பறப்பனவற்றின் பெயர் அமைந்ததன் கரணியம் அறியப்படவில்லை.

**நுணவம்** *nuṇavam,* பெ. (n.) **நுணா** பார்க்க; see *nuṇā.* *"நாகுமுதிர் நுணவம்"* (சிறுபாண்.51).

*[நுணவு[1] → நுணவம் = மஞ்சணாறி மரம்]*

**நுணவு**[1] *nuṇavu,* பெ.(n.) **நுணா** பார்க்க; see *nuṇā.*

*[நுணா → நுணவு]*

**நுணவு**[2] *nuṇavu,* பெ.(n.) கட்டில் (அக.நி.); couch, cot.

**தெ.** நுலக.

*[நுணா → நுணவு. நுணா மரத்தில் செய்த கட்டிலாகலாம்]*

**நுணவை**[1] *nuṇavai,* பெ.(n.) **1.** எள்ளுருண்டை (சூடா.); a ball of sesame confection. **2.** நெல் முதலியவற்றின் மா (சூடா.); flour of rice and other stains.

*[நுள் → நூ = சிறிய எள். நூவு = எள். நுள் → நுணவை = மாவு, எள்ளுருண்டை (சு.வி.40)]*

**நுணவை**[2] *nuṇavai,* பெ.(n.) **நுணா** (மலை.) பார்க்க; see *nuṇā.*

*[நுணவு → நுணவை]*

**நுணா** *nuṇā,* பெ. (n.) **1.** மஞ்சணாறி மரம்; Indian mulberry, Morinda citrifolia. **2.** மஞ் சணாறிச் செடி; dyeing mulberry, Morinda tinctoria. **3.** மஞ்சணாறிக் கொடி; small achroot, Morindaum, bellata. **4.** தணக்கு வகை (மலை.); whirling-nut.

*[நுணல் → நுணா = நுணல் போன்ற காய் காய்க்கும் மஞ்சணாறி மரம் (வே.க.)]*

முறுக்கிக் கொண்டாற் போல் காணப்படும் கிளைகளையும் மணமுள்ள வெள்ளை நிறப் பூக்களையும் கொண்ட மரம்.

மஞ்சள் நாறி அல்லது மஞ்சள் நத்தி மரத்தின் காய், நுணல் போன்ற தோற்ற முடைமையால் நுணா எனப்பட்டது. பின்னர் அது சினையாகு பெயராய் மரத்திற்காயிற்று.

நுணல் என்பது நுணலை என்றும், நுணா என்பது நுணவு, நுணவம், நுணவை என்றும் திரியும். பொருள் வேறுபாடுணர்த்தற்கு நுணல் நுணா என்பன ஈறு வேறுபட்டன. (சொ.ஆ.க.13). இதன் பூ மல்லிகை போலும் மணந்தரும். இதன் வேர் சாயப்பூச்சுக்கும், மரம் மிதியடிக்கட்டை செய்யவும் பயன்படும். இதன் இலை, காய், பழம் யாவும் பயன் கொள்ளத்தக்கன. மரக்கூறு மஞ்சளாயிருப்பது கருதி மஞ்சட் பாவட்டை, மஞ்சணாறி என வழங்கக் காணலாம். (சா.அக.).



**நுணாக்காய்க்கிரந்தி** *nuṇā-k-kāy-k-kirandi,* பெ.(n.) ஒரு வகைப் புண்நோய்; a kind of syphilitic tumour due to venereal and heat.

Skt. பங்கிவிசர்ப்பி.

*[நுணாக்காய் + கிரந்தி.* Skt.*கிரந்தி = புண்]*

உடம்பில் வெப்பத்தைத் தந்து, தடிப்புக்களை உண்டாக்கி, கழிச்சலைத் தந்து, உடம்பு வீக்கத்தால் பருத்து மினுமினுத்து நுணாக்காயைப் போல் கட்டிகளை எழுப்பும் ஒருவகைப் புண் நோய். (சா.அக.).

**நுணாசு—தல்** *nuṇāšu-,* 5செ.குன்றாவி.(v.t.) **நுணாவு—தல்** பார்க்க; see *nuṇāvu-.*

*[நுண் → நுணா → நுணாவு → நுணாசு — நுணாசு—தல் (வே.க.)]*

**நுணாப்பரு** *nuṇāpparu,* பெ.(n.) **நுணாக்காய்க் கிரந்தி** பார்க்க; see *nuṇākkāy-kirandi.*

**நுணாப்பூக்கிரந்தி** *nuṇāppū-k-kirandi,* பெ.(n.) உடம்பில் பலவிடங்களில் நுணாப் பூவைப் போல் வெண்மையான புண்களை உண்டாக்கும் தோல் நோய் (மேக நோய்); a syphilitic affection marked by multiple abscesses in various parts of the body of the size of morinda fruit. *"தொக்கண்ணி யெழும்பு நுணாப்பூக்கிரந்தி முதனோய் தொலையும்"* (தைல. தைலவ,106). (சா.அக.).

*[நுணா + பூ + கிரந்தி]*

**நுணாமஞ்சள்** *nuṇā-mañjal,* பெ.(n.) சிறிய பூக்களையுடைய மலைஆத்தி; small flowered mountain ebony, Bauhinia racemosa. (சா.அக.).

**நுணாவு—தல்** *nuṇāvu-,* 5செ.குன்றாவி.(v.t.) **1.** தடவித் தெரிதல்; to rub and feel with the fingers. **2.** நுனி நாவால் தடவியுணர்தல்; to feel with the tip of the tongue, as the gums or palate.

**க.** நொணெ.

*[நுண் → நுணா → நுணாவு → நுணாவு—தல் = விரல் நுனியால் அல்லது நாநுனியால் தடவியறிதல்]*

**நுணாவெண்ணெய்** *nuṇa-v-eṇṇey,* பெ.(n.) நுணா இலையின் சாற்றை, நல்லெண்ணெயில் மற்ற கடைச் சரக்கு களோடு காய்ச்சி வடித்த எண்ணெய்; a medicated oil prepared with the juice of the morinda leaves as chief ingredient along with some bazaar drugs. (சா.அக.).

*[நுணா + எண்ணெய். இது புண்நோயைக் குணமாக்கும்.]*

**நுணாவேர்** *nuṇa-vēr* பெ.(n.) சிவப்பு கபில நிறமும் வழவழப்பான பட்டையுமுடைய, நுணா மரத்தின்வேர்; ach root morinda root, Morinda umbellata. It is reddish brown in colour. (சா.அக.).

*[நுணா + வேர். கருவிலேயே இறந்த பிள்ளையை வெளியாக்க இவ்வேர் பயன்படும்.]*

**நுணி[1]–தல்** *nuṇi-,* 2செ.கு.வி.(v.i.) தேய்தல் (அக.நி.); to waste away; to be thinned down.

*[நுண் → நுணி → நுணி–தல்.]*

**நுணி[2]–த்தல்** *nuṇi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கூர்மையாக்குதல்(வின்.); to sharpen to a point. 2. பொடியாக்குதல்(வின்.); to powder. 3. நுணுகி ஆராய்தல்; to examine carefully. *"தெய்வ நுணித்தறங் குணித்த மேலோர்"* (கம்பரா.மந்திரப்.8).

*[நுண் → நுணி → நுணி–தல்.]*

**நுணி[3]** *ḏnuṇi,* பெ.(n.) நுனி (யாழ்.அக.); tip.

*[நுண் → நுணி]*

**நுணிசம்** *nuṇiśam,* பெ. (n.) பூவிந்தி; soap nut, Sapindas trifolius. (சா.அக.).

**நுணுக்கம்[1]** *nuṇukkam,* பெ. (n.) 1. நுண்மை; fineness, minuteness. 2. கூர்மை (யாழ்.அக); sharpness. 3. கூரறிவு; acuteness, acumen, subtlety. *"நூல்கற்றக் கண்ணு நுணுக்க மொன் றில்லாதார்"* (நாலடி,352). *தம் ஆய்வுரையில் இசைக் கலையைப்பற்றி நுணுக்கமாக ஆய்வு செய்கிறார்.* 4. வேலைத் திறம்; exquisiteness, as of a work. *வேலை நுணுக்கம். சிற்பம் நுணுக்க வேலைபாடு நிறைந்தது.* 5. பொருளடக்கம்; comprehesiveness. *"நான்மறை நுணுக்கமும்"* (உபதேசகா. சிவபுராண.4). 6. யாழின் உள்ளோசை (பிங்.); vibrating note of a yāḻ. 7. நுட்பம், 5 (வீரசோ.அலங்.27) பார்க்க; see *nuṭpam.*

*[நுணுங்கு → நுணுக்கம் = கூர்மை கூரறிவு, நுண்மை, நுட்பம், வேலைத் திறம்]*

**நுணுக்கம்[2]** *nuṇukkam,* பெ. (n.) 1. கஞ்சம் (உலோபம்); niggardliness. *அவன் கை நுணுக்க முடையவன்.* 2. பொன் (அக.நி.mss); gold.

*[நுணுக்கு → நுணுக்கம்]*

சிறியது என்ற பொருளில் கஞ்சத்தையும் நுண்ணியதான வேலைக்குதவுதல் என்ற பொருளில் பொன்னையும் குறித்தது.

**நுணுக்கம்பார்–த்தல்** *nuṇkkam-pār-,* 4செ.கு.வி.(v.i.) பொருட்டாய்க்கருதவியலாதன வற்றில் மிகுந்த கருத்துச் செலுத்தல்(வின்.); to be meticulous, over-scrupulous.

*[நுணுக்கம் + பார்–த்தல்]*

**நுணுக்கியெழுது–தல்** *nuṇukki-y-eḻudu-,* 5செ.குன்றாவி. (v.t.) பொடியாக எழுதுதல் (உ.வ.); to write a small hand.

*[நுணுக்கு → நுணுக்கி + எழுது–தல்.]*

**நுணுக்கிருமல்** *nuṇukkirumal,* பெ. (n.) சிணுக்கிருமல்; dry cough. (சா.அக.).

*[நுணுக்கு + இருமல்]*

**நுணுக்கு[1]–தல்** *nuṇukku-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. நுண்மையாக்குதல்; to make very small, as beads. 2. பொடிசெய்தல்; to powder, pulverise. *மாத்திரையை நுணுக்கிக்கொடு.* 3. அரைத்தல்; to pound, grind. *மிளகை நுணுக்கிக் கொடு. "நுண்மணல் விராய் நுணுக்குநர்"* (திருவானைக்.திருநீற்.14). 4. சிதைத்தல்; to shatter to pieces. *"வெகுளி நுணுக்கும் விறலும் மகளிர்கட்கு ஒத்த ஒழுக்க முடைமையும்"* (திரிகடு.40). 5. சிறிதா யெழுதுதல்; to write a small hand. *அஞ்சல் அட்டையில் குறளை நுணுக்கி எழுதினார்.*

*இப்படி நுணுகி எழுதினால் எப்படிப் படிப்பது.* **6.** கையைக் குலுக்குதல், கஞ்சத்தனம் (உலோபம்) செய்தல்; to be niggardly, to stint. அவன் மிகவும் கையை நுணுக்குகிறான். **7.** யாழில் இன்னிசை யெழுப்புதல்; to produce soft notes from the yāl. *"அதுதன்னை வீணையிலே ஏறிட்டு நுணுக்கினாள்".* (திவ். திருநெடுந். 15:122). **8.** கூர்மையாக்குதல் (இலக்.அக.); to sharpen to a point, as a stick. **9.** அறிவை (புத்தியை)க் கூர்மையாக்குதல் ; to sharpen the wits. *"ஐய னேயறி யும்மென வந்தனம் பொய்ய தன்றிப் புலமை நுணுக்கி"* (சீவக.886). **10.** நுண்ணிதாக வேலை செய்தல்; to execute minutely or finely, as a work.

*[நுண் → நுணுகு → நுணுக்கு – நுணுக்கு–தல் = கூர்மையாக்குதல், மதியைக் கூர்மை யாக்குதல், நுண்மையாக்குதல், பொடி செய்தல், சிறிதாயெழுதுதல், நுண்ணிதாக வேலை செய்தல்.]*

**நுணுக்கு²** *nuṇukku,* பெ. (n.) **1.** நுண்மை (யாழ்.அக.); smallness, fineness, subtlety. **2.** நுட்பமானது; any small or minute thing. **3.** பொடி யெழுத்து (யாழ்.அக.); small hand writting.

*[நுண் → நுணுகு → நுணுக்கு]*

**நுணுக்குக்காட்டி** *nuṇukku-k-kāṭṭi,* பெ.(n.) நுண்ணோக்கி; microscope.

*[நுணுக்கு + காட்டி]*

**நுணுக்கெழுத்து** *nuṇukkeḻuttu,* பெ.(n.) பொடியாக எழுதும் எழுத்து (உ.வ.); letter written in a very small hand.

*[நுணுக்கு + எழுத்து]*

**நுணுகி** *nuṇugi,* வி.எ.(adv.) **1.** கூர்ந்து; with a sharp focus. *பாட்டின் பொருளை நுணுகி ஆராய்ந்து பார்க்கவேண்டும்.* **2.** மெலிந்து; lean. *இசைக்கலையை நுணுகி ஆராய்ந்து படித்திருக்கிறார் என்பது அவரின் பேச்சில் இருந்து தெரிகிறது. "பூப்போ லுண்கண் பசந்த தோணுணுகி"* (புறநா.96). *"துள்ளு தாவியிற் பைப்பய நுணுகி"* (அகநா.71:14).

*[நுண் → நுணுகு → நுணுகி]*

**நுணுகு¹–தல்** *nuṇugu-,* 5செ.கு.வி.(v.i.) **1.** நுட்பமாதல்; to be slender, delicate, as a woman's waist; to be minute. *"நுணுகிய நுசுப்பினார்"* (சீவக.2631). **2.** மெலிதல்; to become thin. *"பூப்போ லுண்கண் பசந்த தோணுணுகி"* (புறநா.96). **3.** கூர்மையாதல்; to be sharp, keen, acute as one's intellect. *நுணுகிய அறிவு.*

*[நுண் → நுணுகு → நுணுகு–தல்]*

**நுணுகு²** *nuṇugu,* பெ. (n.) **1.** நுண்மை (திவா.); minuteness.

*[நுண் → நுணுகு]*

**நுணுங்கு¹–தல்** *nuṇuṅgu-,* 5செ.கு.வி. (v.i.) **1.** நுணுகு–தல் (உ.வ.) பார்க்க; see *nuṇugu-*. **2.** பொடியாதல்; to be powdered, pulverised.

*[நுணுகு→ நுணுங்கு → நுணுங்கு–தல்]*

**நுணுங்கு²–தல்** *nuṇuṅgu-,* 5செ.கு.வி.(v.i.) **1.** மெல்லப்பாடுதல்; to sing softly as a tune. *"அழகை யுடைத்தான பண்ணை நுணுங்கி"* (திவ்.திருநெடுந் 22:204).

*[நுணுகு → நுணுங்கு → நுணுங்கு–தல்.]*

**நுணுங்கு³** *nuṇuṅgu,* பெ. (n.) பொடி (பிங்.); powder.

*[நுணுகு → நுணுங்கு]*

**நுணை¹–த்தல்** *nuṇai-,* 4செ.குன்றாவி. (v.t.) நுனி நாவால் தடவியுணர்தல்; to feel with the tip of the tongue, as the gums or palate.

**ம.** நுண; **க.** நொணெ.

*[நுண் → நுணா → நுணை → நுணை–தல் (வே.க.)]*

**நுணை²** *nuṇai,* பெ. (n.) கோட்சொல் (நெல்லை); back-biting.

**ம.** நுணா.

**நுதம்** *nudam,* பெ. (n.) நீராடுந்துறை (அக.நி.); bathing ghat.

**நுதம்பு¹–தல்** *nudambu-,* 5செ.கு.வி. (v.i.) **1.** நனைந்திளகுதல்; to become soft or moist, as soap in water; to be mashy. **2.** ஈரமாதல்; to become damp, as furniture, in wet weather.

*[நுதம் → நுதம்பு → நுதம்பு–தல்]*

**நுதம்பு²** *nudambu,* பெ. (n.) **1.** கள்; toddy. **2.** சோறு; boiled rice.

*[நுதம் → நுதம்பு.]*

**நுதல்¹(லு)–தல்** *nudal-,* 5செ.குன்றாவி.(v.t.) **1.** கருதுதல்; to denote; to mean, intend. *"பல்லவை நுதலிய வகர விறுபெயர்"* (தொல்.எழுத்து.174). **2.** கூறுதல்; to speak, tell. *"நூற்குள் நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரை"* (நன்.1, சங்கர.). **3.** தோற்றுவித்தல்; to bring into being, create. *"தேவுபல நுதலி"* (திவ்.இயற்.திருவாசி.4)

*[நுதல் → நுதலு–தல் = முற்கூறுதல், கூறி (சொல்லி)த் தொடங்குதல்]*

ஒவ்வொரு செம்மொழியிலும் ஒரு பொருட் பலசொற்கள் நிரம்பவுள. அவை பருப்பொருளில் ஒன்றுபட்டிருப்பினும் நுண்பொருளில் வேறுபட்டவை. சொல்வளத்திற் சிறந்த தமிழ் ஒருபொருட் பல சொற்களில் சிறந்துள்ளது. சொல்லுதலைப் பற்றிப் பலசொற்கள் தமிழில் உள. அவை:

| | | |
|---|---|---|
| அசைத்தல் | – | அசையழுத்தத்துடன் சொல்லுதல் (அசையழுத்தம்–accent) |
| அறைதல் | – | அடித்து (வன்மையாக மறுத்து)ச் சொல்லுதல் |
| இசைத்தல் | – | ஓசை வேறுபாட்டுடன் சொல்லுதல் |
| இயம்புதல் | – | இசைக் கருவி இயக்கிச் சொல்லுதல் |
| உரைத்தல் | – | அருஞ்சொற்கு அல்லது செய்யுட்குப் பொருள் சொல்லுதல் |
| உளறுதல் | – | ஒன்றிருக்க ஒன்றைச் சொல்லுதல் |
| என்னுதல் | – | என்று சொல்லுதல் |
| ஓதுதல் | – | காதிற்குள் மெல்லச் சொல்லுதல் |
| கத்துதல் | – | குரலெழுப்பிச் சொல்லுதல் |
| கரைதல் | – | அழைத்துச் செல்லுதல் |
| கழறுதல் | – | கடிந்து சொல்லுதல் |
| கிளத்தல் | – | இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லுதல் |
| கிளத்துதல் | – | குடும்ப வரலாறு சொல்லுதல் குயிலுதல், |
| குயிற்றுதல் | – | குயில்போல் இன்குரலில் சொல்லுதல் |
| குழறுதல் | – | நாத் தளர்ந்து சொல்லுதல் |
| கூறுதல் | – | கூறுபடுத்திச் சொல்லுதல் |
| சாற்றுதல் | – | பலரறியச் சொல்லுதல் |
| செப்புதல் | – | வினாவிற்கு விடை சொல்லுதல் |
| நவிலுதல் | – | நாவினால் ஒலித்துப் பயிலுதல் |
| நுதலுதல் | – | ஒன்றைச் சொல்லித் தொடங்குதல் |
| நுவலுதல் | – | நூலின் நுண்பொருள் சொல்லுதல் |
| நொடித்தல் | – | கதை சொல்லுதல் |
| பகர்தல் | – | பாண்டங்களைப் பகுத்து விலை சொல்லுதல் |
| பறைதல் | – | மறை(இரகசியம்) வெளிப்படுத்திச் சொல்லுதல் |
| பன்னுதல் | – | நிறுத்தி நிறுத்திச் சொல்லுதல் |

| | |
|---|---|
| பனுவுதல் | – செய்யுளிற் புகழ்ந்து சொல்லுதல் |
| புகலுதல் | – விரும்பிச் சொல்லுதல் |
| புலம்புதல் | – தனக்குத் தானே சொல்லுதல் |
| பேசுதல் | – ஒருமொழியிற் சொல்லுதல் |
| பொழிதல் | – இடைவிடாது சொல்லுதல் |
| மாறுதல் | – உரையாட்டில் மாறிச் சொல்லுதல் |
| மிழற்றுதல் | – மழலைபோல் இனிமையாய்ச் சொல்லுதல் |
| மொழிதல் | – சொற்களைத் தெளிவாகப்பலுக்கிச் சொல்லுதல் |
| வலத்தல் | – கேட்பார் மனத்தைப் பிணிக்கச் சொல்லுதல் |
| விடுதல் | – மெள்ள வெளிவிட்டுச் சொல்லுதல் |
| விதத்தல் | – சிறப்பாய் எடுத்துச் சொல்லுதல் |
| விள்ளுதல் | – வெளிவிட்டுச் சொல்லுதல் |
| விளைத்துதல் | – (விவரித்துச்) சொல்லுதல் |
| விளம்புதல் | – ஓர் அறிவிப்பைச் சொல்லுதல் |

(ப.த.நா.ப.21,22)

**நுதல்**² *nudal,* **பெ.** (n.) சொல் (பிங்.); word.

**நுதல்**³ *nudal,* பெ.(n.) **1.** நெற்றி; forehead. *"தன்கைக் கொண்டெ னன்னுத னீவியும்"* (நற்.28). *நுதலில் பொட்டு வை.* **2.** புருவம் (பிங்.); eyebrow. *"பிறைபுரை திருநுத லஃகப் பிறையின் குறைவிடந் தீர்ந்த கொள்கை போல"* (பெருங்.நரவாண.5:11,12). **3.** தலை; head, skull. *"குடுமி களைந்த நுதல்"* (புறநா.77). **4.**மேலிடம்; top, upper part. *"தாமரை வரம்பணைந் ததனுதற் கிடந்த வார்செந்நெல்"* (சீவக.1442).

**ம.** நுதல்; **க.** நொசல்; **தெ.** நுதரு; **து.** நெசலு; **கொண்.** நெத; **மா.** நித்லு.

*[நுதி = நுனி. நுதி → (நுத்தி) → நெத்தி → நெற்றி (மு.தா) = மண்டையின் முற்பாகம்]*

**நுதலணி** *nudal-aṇi,* **பெ.** (n.) நெற்றிச்சுட்டி (யாழ்.அக.); an ornament for the forehead.

**மறுவ.** தலைக்கோலம், இலம்பகம்.

*[நுதல்³ + அணி]*

**நுதலிப்புகுதல்** *nudali-p-pugudal,* **பெ.**(n.) உத்தி முப்பத்திரண்டனுள் சொல்லப் போகும் செய்தியை முதலிற் குறித்துப் பின் விளக்குவதான தந்திர வுத்தி (நன்.14); a literary deivce which consists in stating one's theme before dealing with it in detail, one of 32 utti. *"நுதலிப் புகுதலோத்து முறை வைப்பே"* (நன்.பாயி,14).

*[நுதல் → நுதலி + புகுதல். நுதலிப்புகுதல் = இன்னது கூறுவேன் என்று கூறப்போகும் பொருளைச் சொல்லித் தொடங்கும் நூலுத்தி.]*

**நுதற்கண்ணன்** *nudaṟ-kaṇṇaṉ* **பெ.**(n.) நெற்றியில் கண்ணுடைய சிவன்; Lord Sivā.

*[நுதல் + கண்ணன்.]*

**நுதற்குறி** *nudaṟ-kuṟi,* பெ.(n.) நெற்றிக்குறிகள் (திவா.); sacred marks on the forehead.

*[நுதல் + குறி. நெற்றியில் இட்டுக் கொள்ளும் சமயக்குறிகள்.]*



**நுதற்சுடிகை** *nudaṟ-cuḍigai,* பெ.(n.) **நுதலணி** (திவா.) பார்க்க; see *nudal-aṇi.*

*[நுதல் + சுடிகை. சுட்டி → சுட்டிகை → சுடிகை.]*

**நுதற்சூட்டு** *nudar-cūṭṭu,* பெ.(n.) நுதலணி பார்க்க; see *nudal-aṇi.* "*திருநுதற் சூட்டயற் சுடரும்*" (பெருங். உஞ்சைக். 40:101).

*[நுதல் + சூட்டு. சூடுதல் = அணிதல். சூடு → சூட்டு]*

**நுதற்சேதம்** *nudar-cēdam,* பெ.(n.) **1.** நெற்றி வலி; pain in the forehead. **2.** தலைவலி; headache. (சா.அக.).

*[நுதல் + சேதம். சிதைவு → சேதம்]*

**நுதனாட்டி** *nudaṇāṭṭi,* பெ. (n.) நெற்றிக் கண்ணுடைய கொற்றவை (துர்க்கை); Durgā, as having an eye in Her forehead. "*பிறைநுத னாட்டி*" (கல்லா. 78:11).

*[நுதல் → நுதனாட்டி. நாட்டம் (= கண்) → நாட்டி.]*

**நுதி[1]-த்தல்** *nudi-,* 4செ.குன்றாவி.(v.t.) அடைசுதல்; to cover with, as a garment lining. "*நுதிமயிர்த் துகிற்குப் பாயம் புகுக என நூக்கினானே*" (சீவக.819).

*[நுனி → நுதி → நுதி-த்தல்.]*

**நுதி[2]** *nudi,* பெ. (n.) **1.** நுனி; tip, point, end. "*நுதிமுக மழுங்க... பாயுநின் களிறு*" (புறநா.31). "*திருக்கரத்தினக நுதியால்*" (கோயிற்பு. பதஞ்சலி.32). **2.** அறிவுக்கூர்மை; acumen, sharpness of intellect. "*நோக்கன்மின் நாணும் கண்டீர் நுதிகொ ணாகரிகன்*" (சீவக.1110). "*நுதி கொண்டன வெம்பர னுண்ணி வேல்*" (சீவக.1186). **3.** தலை; head. "*நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்காண்*" (கலித்.101). **4.** புகழ்; fame. **5.** வணக்கம்; regard. **5.** முன்பு; front. '*நூற்றைவரோடு நடந்தாணுதி*' (சீவக. 1933, உரை). **6.** கூர்மை; sharpness. "*நிணங்கொள் வைந்நுதி வேல்நெடுங் கண்ணினாள்*" (சீவக.344).

*[நுனி → நுதி. நுனி = உச்சி, நுனை, கூர்மை, நுண்மை]*

**நுதித்தோல்** *nudi-t-tōl,* பெ. (n.) ஆண்குறியின் நுனித்தோல்; foreskin.

*[நுதி + தோல்.]*

**நுது-த்தல்** *nudu-,* 4செ.குன்றாவி. (v.t.) **1.** அவித்தல்; to put out, quench, extinguish. "*நெய்யாலெரி நுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்காம நுதுப் பேமெனல்*" (குறள்,1148). **2.** அழித்தல்; to destroy. "*வரதன் நம்படையை நுதுக்கம்*" (துணிகைப்பு. சீபரி.162). **3.** நீக்குதல்; to remove. "*இன்ன னுதுக்குந் தண்கவிகை வள்ளல்*" (விநாயகபு.46:4).

க. நொந்து.

*[நுதி → நுது → நுது-த்தல்.]*

**நுதுப்பு** *nuduppu,* பெ.(n.) தணிக்கை (வின்.); quenching, suppressing.

*[நுது → நுதுப்பு]*

**நுந்தாவிளக்கு** *nundā-viḷakku,* பெ. (n.) கோயிலில் எப்பொழுதும் அணையாமல் எரியும் விளக்கு (தெ.க.தொ.2:132) ; ever-burning lamp, as in a temple. "*உதையி அற்தமனமும் அற்தமன உதயமும் எரியவைத்த திரு நுந்தா விளக்கு*" (தெ.க.தொ.17:447). "*இத்திரு நுந்தா விளக்கு எரிக்க இட்ட குத்துவிளக்கு ஒன்று இது தரா இடை அய்*" (தெ.க.தொ.7:741).

*[நுந்து + ஆ + விளக்கு. ஆ -எதிர்மறை இடைநிலை]*

நுந்தாவிளக்கு = இறைவன் கருவறையில் நாள் முழுவதும் தொடர்ந்து தூண்டா விளக்காக எரியும் விளக்கு. இவ்விளக்கு பலவகை வடிவங்களில் அமைந்திருக்கும். தூண்டாது தொடர்ந்து எரியுமாறு செய்யப்பெறும் விளக்கு இது. கல்வெட்டுகளில் நொந்தா விளக்கு, நந்தா விளக்கு என்றும் காணப்படுகின்றன. "*திருவாலந் துறை மகாதேவர்க்கு சந்திராதித்தவல் இரவும் பகலும் ஒரு நொந்தா விளக்கு எரிய வைத்த நெய்*" (தெ.க.தொ.5:682).

இவ்விளக்கு இறைவன் திருமேனிக்கு அருகில் தொங்கு விளக்காகப் பெரும் பான்மையும் அமைக்கப் பெறினும், குத்து விளக்கு அமைப்பிலும் இவ் விளக்கு தரையில் நிலையாக நிற்கும் தோற்றத்திலும் செய்யப் பெறுவதுண்டு என்பதைத் திருவோத்தூர்க் கல்வெட்டு உணர்த்துகிறது. "*தொண்டை மானார் வார்ப்பித்துக் குடுத்த திருக்குத்து விளக்கு இரண்டிலெரியுந் திருநுந்தா விளக்கு இரண்டுக்கு*" (தெ.க.தொ.7:93). "*திருவுண்ணாழிகையில் ஒரு நொந்தா விளக்கு இரவும் பகலும் எரிய வைத்த பொன் முப்பதின் கழஞ்சு*" (தெ.க.தொ.8:676).



**நுந்தாவிளக்குக்குடி** *nundā-viḷakku-k-kuḍi,* பெ. (n.) நுந்தா விளக்கு எரிப்பதற்கு மூலமாக வைக்கப்பட்ட ஆடுகளைக் காத்து நாளும் கோயிலுக்கு நெய்யளக்கும் குடியினரான மன்றாடிகள்; a cast. "*இத்தேவர்க்கு திரு நுந்தா விளக்கு குடிகளாய் ஆடுகளைக் கொண்டு நெய்யளந்து வருகிற மன்றாடிகளில்*" (தெ.க.தொ.17:447).

*[நுந்தாவிளக்கு+குடி. நுந்தாவிளக்கு எரிக்க நெய்தரும் குடிமக்கள்.]*

**நுந்து-தல்** *nundu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தள்ளுதல், முன் தள்ளுதல்; to prople, thrust forth, cast away. "*பரந்து பொன் னிரந்து நுந்தி*" (திவ்.திருச்சந்.51). 2. தூண்டுதல்; to trim, stir up. "*நுந்தாத வொண் சுடரே*" (தேவா.811, 5).

க. நொந்து; வ. நுத்(d)

*[உந்து → நுந்து → நுந்து-தல். உந்துதல் = முன் தள்ளுதல், தள்ளுதல்]*

**நுந்தை** *nundai,* பெ. (n.) உன் தந்தை; your father. "*நுந்தை நும்மூர்வருதும்*" (ஐங்குறு.92). "*கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை*" (அகநா. 99:11). "*நொந்தனளாகி நுந்தையை யுள்ளி*" (புறநா. 160:23). "*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*" (குறுந்.40:2). "*பிறையது காணா யிறைவளை முன்கை திருமுகை மெல்விரல் கூப்பி நுந்தை*" (பெருங். உஞ்சைக். 166,167).

*[நும் → நுந்தை]*

**நுப்பது** *nuppadu,* பெ. (n.) முப்பது; thirty.

ம. நுப்பது.

*[முப்பது → நுப்பது. ஒ.நோ. மணாட்டுப் பெண் → மாட்டுப்பெண் → நாட்டுப் பெண். ம-ந. திரிபு.]*

**நுபகம்** *nubagam,* பெ. (n.) நுபம் பார்க்க; see *nubam.*

*[நுபம் → நுபகம்.]*

**நுபம்** *nubam,* பெ. (n.) எருக்கு (மலை.); madar.

**நுபுவருத்தி** *nubu-varutti,* பெ.(n.) ஆமையோடு (சங்.அக.); tortoise shell.

*[நுபு + வருத்தி. வல் → வன் → வரு → வருத்தி. நுவ்வு = எள். கருமைநிறம் பற்றிய பெயர். நுவ்வு → நுபு = யாமை. யாமை → ஆமை. யாமம் → யாமை = கருமை நிற ஆமை.]*

**நும்**[1] *num,* ப.பெ.(pron.) வேற்றுமையுரு பிற்குமுன் நீயிர் என்ற முன்னிலைப் பன்மை கொள்ளு முருவம்; the form which nīyir, the second personal pronoun plural, assumes in oblique cases. *"நும்மெ னிறுதி யியற்கை யாகும்"* (தொல்.எழுத்து.187). 2. உம்; your. *"நும்மொடு வரவுதானயரவும்"* (புறநா. 12:9). *"தண்ணருங்கானல் வந்து நும் வண்ண மெவனோ வென்றனிர் செலினே"* (அகநா. 30:14,15). *"எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மி னென"* (புறநா. 9:5).

*[நீம் → நீமிர் → நீவிர் → நீயிர் → நும் எனத் தொல்காப்பியம் கூறுவது இலக்கணமரபு. பாவாணர் நீம் → நூம் → நும் எனக் கூறுவது (மு.தா.40) மொழியியற் பார்வை.]*

**நும்**[2] *num,* இடை.(part.) எல்லீரும் என்ற முன்னிலைப் பெயர் வேற்றுமை யுருபேற்கும் போது கொள்ளுஞ் சாரியை; the infix which *ellīrum* takes in oblique cases, as எல்லீர்நும்மையும். *"எல்லீரு மென்னும் முன்னிலை யிறுதியும்... நும்மிடை வரூஉ முன்னிலை மொழிக்கே"* (தொல்.எழுத்து.191).

"நும்மெனிறுதி யியற்கையாகும்" (தொல். எழுத்து. 187.) என்னுமிடத்துவரும்நும் முன்னிலைப் பன்மையாகும். இங்கு எல்லீர் நும்மையும் என்றவிடத்து வரும் 'நும்' சாரியையாகும். எல்லீர் என்பதே முன்னிலைப் பெயராக அமைவதால் அடுத்துவரும் 'நும்' சாரியையாகும்.

**நும்பி** *numbi,* பெ. (n.) நும் தம்பி; your younger brother. *"நும்பி பின்வரு நும்பி"* (குணிகைப்பு.சீபரி.397). *"எம்முடை யளவையிற் பண்புறப் பேணி நுன்பதிப் பெயர்க்கு மளவையி னும்பியர்"* (பெருங். உஞ்சைக். 1:12,13).

*[நும் → நும்பி]*

**நும்முன்** *num-muṉ,* பெ.(n.) 1. உம் முன்னோன்; your ancestor, as father. *"சுரும்பார் கண்ணிப் பெரும் பெயர் நும்முன்"* (புறநா.174). 2. உன் அண்ணன்; your elder brother.

*[நும் + முன் –நும்முன் = உமக்கு முன் பிறந்தவன்–ள்–ர்.]*

**நுமன்** *numaṉ,* பெ. (n.) உம்மைச் சார்ந்தவன் (தொல்.சொல்.410, இளம்பூ); your relation, party or associate. *"தமர்மேல் வந்தமை தானகத் தடக்கி நுமரோ மற்றிவர் பிறரோ தாமென"* (பெருங். உஞ்சைக். 1:245,246.).

*[நும் + அன் – நுமன்.]*

**நுமையன்** *num-aiyaṉ,* பெ. (n.) 1. உம் தமையன்; your elder brother. *"வில்வலாய் நுமைய னாரைக் காண்டி"* (சீவக.1709). 2. உன் தந்தை; your father. 3.உன் பாட்டன்; your grand father. 4. உன் தலைவன்; your master.

*[நும் + ஐயன்]*

**நூரம்பு** *nurambu,* பெ. (n.) சேறு (பிங்.); mud, mire.

து. நுரும்பு

*[நுல் → (நொறு) → நுர → நூரம்பு.]*

**நுரு** *nuru,* பெ. (n.) **1.** அறுத்த தாளில் துளிர்க்குந் (முளைக்குந்) தளிர் (யாழ்ப்.); tender shoots in paddy stubble. **2.** இளம்பிஞ்சு; tender fruit.

*[நுல் → நுரு. நுல் = இளமை, சிறுமை, மெலிவு, நுண்மை, கூர்மை, நுனிமை, முன்மை.]*

**நுரை[1]** *nurai,* பெ. (n.) **1.** நீர்க் குமிழிகளின் தொகுதி; froth, foam, scum, spume, lather. *"நெல்லுக்கு உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டு"* (நாலடி,221). *"திரையொடு பட்டு நுரையோடு மறுகி"* (பெருங்.உஞ்சைக். 40:271). *"நுரை ஒத்ததுவே தரையின் பவிசு"* (பழ.); *"நுரையைத் தின்றால் பசிபோகாது"* (பழ.). **2.** குமிழி (சூடா.); bubble. "நுரைமுகந்தன்ன மென்பூஞ் சேக்கை". (அகநா.93:13). *"மரையான் கறந்த நுரை கொடீம்பால்"* (புறநா.168:8). **3.** வெண்ணெய்; butter. *"உறையமை தீந்தயிர் கலக்கி நுரை தெரிந்து"* (பெரும்பாண்.158). **4.** வயிரக்குற்ற வகை; flaw in a diamond. **5.** வெண்மை (யாழ்.அக.); whiteness.

**ம.** நுர; **க.** நொரெ; **தெ.** நுருகு; **கோத.** நொர்; **குட.** நெரெ; **து.** நுரே.

F. ecume; G. schaum(m), gischt (f); It. schiuma.

*[நுர → நுரை = புளிப்பினால் எழும் சிறு குமிழி. அதன் நிறமான வெண்மை. நுரை வெண்மை யாயிருத்தல் காண்க. நுரை → நரை = வெண்மை. நரைத்தல் = வெளுத்தல். (மு.தா.)]*

**நுரை[2]–த்தல்** *nurai-,* 4செ.கு.வி. (v.i.) **1.** நீர் முதலியன கொப்புளங் கொள்ளுதல்(வின்.); to froth, foam, effervesce. *நுரை உண்டாதல். மாட்டின் வாய் நுரை தள்ளுகிறது. பூட்டை அவிழ்த்து விடு. வெண்ணெய், நுரை அடங்கியதும் இறக்கி விடு.* **2.** நுரை வரும்படிச் செய்தல்; to work up a lather. *சோப்பை நுரைத்து முகத்தில் பூசு.*

*[நுரை[1] → நுரை[2] –த்தல்,]*

**நுரைகக்கு–தல்** *nurai-kakku-,* 5செ.கு.வி. (v.i.) நுரைதள்ளு(வின்.)தல் பார்க்க; see *nurai-taḷḷu.*

*[நுரை+ கக்கு –தல்.]*

**நுரைத்தெழு–தல்** *nurai-t-teḻu-,* 12 செ.கு.வி. (v.i.) பொங்குதல்; effervescence. (சா.அக.). *சர்க்கரைப் பாகு நுரைத் தெழுகிறது, பார்த்து இறக்கு.*

*[நுரை → நுரைத்து + எழு –தல்.]*

**நுரைதப்பு–தல்** *nurai-tappu-,* 5 செ.கு.வி. (v.i.) நுரை தள்ளு–தல் (இ.வ.) பார்க்க; see *nurai-taḷḷu-.*

*[நுரை+ தப்பு –தல். தாவு → தவ்வு → தப்பு]*

**நுரைதள்ளு–தல்** *nurai-taḷḷu-,* 5செ.கு.வி. (v.i.) நுரையை வாயிலிருந்து வெளியிடுதல் (உ.வ.); to foam at the mouth. *கண்கள் செருகி வாயில் நுரை தள்ளுகிறதைப் பார்த்தால் பாம்பு கடியாக இருக்கும். வேகமாக ஓடி வந்த காளையின் வாயில் நுரை தள்ளுகிறது.*

*[நுரை + தள்ளு –தல்.]*

**நுரைநீர்** *nurai-nīr,* பெ. (n.) அமுதநீர்; liquor amnii. (சா.அக.).

*[நுரை + நீர்.]*

**நுரைப்பால்** *nurai-p-pāl,* பெ. (n.) நுரை நீங்காத, அப்போதே கறந்த பால்; fresh milk with froth. (சா.அக.).

*[நுரை + பால்]*

**நுரைப்பீர்க்கு** *nurai-p-pīrkku,* பெ. (n.) 1. பாற்பீர்க்கு; towel-gourd. 2. பேய்ப்பீர்க்கு; snake luffa.

*[நுரை + பீர்க்கு]*

**மறுவ.** பேய்ப்பீர்க்கு. **வ.** தேவதாளி.

இதன் அடித்தண்டு மருந்திற்குப் பயன்படும். ஐங்கோணமுள்ளது. சிறிது முசுமுசுப் பாயிருக்கும். இலைகள் ஐந்து பிரிவினையுடையது. முசுமுசுப்பையும் ஓரங்களில் வட்டமான அரும்புகளையும் உடையது. இலைக் காம்பு இலையின் நீளமி ருக்கும். இதன் காய் கோழி முட்டை வடிவமுள்ளது. காய்க்குள் 18 விதைகள் இருக்கும். விதைகள் தட்டையாயும், கருப்பாயும் இருக்கும். (சா.அக.).

**நுரைப்பு** *nuraippu,* பெ. (n.) 1. கொதிப்பு, பொங்குகை; effervescence as in preparations of salts. 2. நுரைக்கை; foaming. (சா.அக.).

*[நுரை → நுரைப்பு]*

**நுரைப்பேரினி** *nurai-p-pērini,* பெ. (n.) சிறுதாளி; hairy leaved creamy white bindweed-Ipomaea obswra (gemella). (சா.அக.).

**நுரைபடிந்த** *nurai-padinda,* பெ.எ.(adj.) நுரையுள்ள; covered with froth; foamy. *நுரைபடிந்த பால்.* (சா.அக.).

*[நுரை + படிந்த.]*

**நுரையாம்பூச்சி** *nurai-y-ām-pūcci,* பெ. (n.) பூச்சி வகை (சங்.அக.); a kind of insect.

*[நுரை + ஆம் + பூச்சி]*

**நுரையிண்டு** *nurai-y-indu,* பெ. (n.) நீரிண்டு; a sensative plant in water - Mimosa genus. (சா.அக.).

**நுரையிலிகம்** *nurai-y-iligam,* பெ. (n.) சிறுதும்மை; a small variety leucas plant, small leucas flower - Leucas genus. (சா.அக.).

**நுரையீரல்** *nurai-y-īral,* பெ. (n.) மார்பினிரு புறத்துள்ளதும், தூய்மையில்லாக் காற்றை வெளியிட்டுத் தூய்மையான காற்றை உட் கொண்டு குருதியைத் தூய்மை (சுத்திகரிப்பது) செய்வதுமான உறுப்பு(வின்.); lungs.

*[நுரை + ஈரல்]*

**நுரையீரல்** *(lung):* மூச்சு விடுவதற்காக மனிதனிடமும் முதுகெலும்பிகளிடமும் அமைந் துள்ள உறுப்பாகும். மனிதனிடம் இரண்டு நுரையீரல்கள் உள்ளன. அவை மார்பில் கடற் பஞ்சு போன்ற அமைப்புடையனவாய் இருக்கின்றன. அவை எண்ணிறந்த காற்றறை களால் ஆனவை. அவைகள் சற்றொப்ப 60 கோடி என்று கணக்கிடுகின்றனர்.

இரண்டு நுரையீரல்களும், கூம்பு உருவமுடையன; நுரையீரல்தாங்கியின் (உதரவிதானத்தின்) மீது அமைந்துள்ளன. நுரையீரலின் உச்சியானது காரை எலும்பின் பின்புறம் வரை நீண்டிருக்கும். நுரையீரல் களுக்கிடையே உணவுக் குழல் (Esophagus), நெஞ்சாங்குலை (இதயம்,) பெரிய அரத்தக் குழாய்கள் காணப்படும். நுரையீரல்கள் இரண்டும் மூச்சுக் குழலுடன் (Trachea) இணைந்திருக்கும். மூச்சுக் குழல் மார்பில் இறங்கியதும் இரண்டாகப் பிரியும். அவை மூச்சுக் கிளைக் குழல்கள் (bronchi) எனப் பெறும். ஒவ்வொரு மூச்சுக்குழலும் ஒரு நுரையீரலின் நடுவே புகுந்து எண்ணற்ற சிறு குழாய்களாகப் பிரிகின்றது. இவை

கோப்பை உருவமுடைய மூச்சுச் சிற்றறைகளில் (alveoli) வந்து முடியும். ஒவ்வொரு சிற்றறையின் உட்பகுதியிலும் (தந்துகிகள் எனப்பெறும்) நுண்ணிய அரத்தக் குழாய்கள் பின்னிக்கிடக்கின்றன.

மூச்சுக் கிளைக் குழாய்களும், நுரையீரல் களிலுள்ள அரத்தக் குழாய்களும், நிணநீர்க் குழாய்களும், நரம்புகளும் எல்லாம் மீள்ஆற்றலையுடைய தசையால் (திசுவால்) பிணைக்கப்பட்டுள்ளன. நுரையீரல்கள் காற்று நிறையும் போது விரியக் கூடியன. நுரையீரலின் பருமனை வைத்து, மற்ற உறுப்புக்களுடன் ஒப்பிட்டால் அதுவே உடம்பின் எடை குறைந்த உறுப்பாகும். ஆணின் நுரையீரலை விடப் பெண்ணின் நுரையீரல் எடை குறைந்து காணப் படும். நுரையீரல் இளஞ்சிவப்பு நிறமாக இருக்கும்.

நுரையீரலின் வேலை: நுரையீரல்கள் உடம்பிலுள்ள உயிரணுக்களுக்கு வேண்டிய உயிர்வளி (ஆக்சிஜன்) யை வழங்குகின்றன. அரத்தமானது உடம்பில் ஓடும்போது தசைகளுக்கு (திசுக்களுக்கு) உணவுச் சத்தையும் உயிர்வளி (ஆக்சிஜன்)யையும் தந்துவிட்டு, கெட்ட காற்றை (கார்பன்–டை–யாக்சைடு)ப் பெற்றுக் கொண்டு நுரையீரலுக்கு வருகிறது. மூச்சு விடும்போது நுரையீரல் சிற்றறைக்குச் செல்லும் உயிர்வளி அங்குள்ள அரத்த நுண் குழாய்களுக்குச் சென்று, அரத்தத்தில் கலந்து, உடல் முழுவதும் செல்கின்றது. அரத்தம் கொண்டு வந்த கெட்ட காற்று மூச்சுவிடும் போது வெளியே சென்று விடுகிறது.



**நுரையீரல்தாங்கி** *nurai-y-īral-tāṅgi,* பெ. (n.) மார்புப் பகுதியையும் வயிற்றுப் பகுதியையும் பிரிக்கும் மெல்லிய தோல் (சவ்வுப்)பகுதி; the muscular membraneous partition that separates the abdomen from the thorax - Diaphragm. (சா.அக.).

*[நுரையீரல் + தாங்கி]*

*நுரையிரல் தாங்கித்தோல் (சவ்வு) (உதரவிதானம்) கிழிந்தால் சிறுகுடல் விதைப்பையில் இறங்குவதே குடல் இறக்க நோய் (Hiranya) என்று கூறப்படும்.*

**நுரையீரலுறை** *nurai-y-īral-uṟai,* பெ. (n.) நுரையீரலைச் சுற்றியுள்ள மெல்லிய தோல்; a thin membrance investing either lungs - Pleura. (சா.அக.).

*[நுரையீரல் + உறை]*

**நுரையீரற்கட்டி** *nurai-y-īraṟ-kaṭṭi,* பெ. (n.) நுரையீரலில் உண்டாகும் கட்டி; an abscess of the lungs - Pulmonary abscess. (சா.அக.).

*[நுரையீரல் + கட்டி]*

**நுரையீரற்கல்** *nurai-y-īraṟkal,* பெ. (n.) நுரையீரலுக்குள்ளாவது அல்லது மூச்சுக் குழலிலாவது காணப்படும் சுண்ணாம்புக்கல்; calcium calculus found in the bronchi or some portions of the lung tissue - Lung stone or lung calculus (சா.அக.).

*[நுரையீரல் + கல்]*

**நுரையீரற்சன்னி** *nurai-y-īraṟcaṉṉi,* பெ. (n.) நுரையீரலுக்குள்ளிருக்கும் மூலப் பகுதிக்குள் அரத்தம் பாய்வதாலேற்படும் இசிவு; apoplexy due to the escape of blood into the parenchyma or the functional elementary part of the lungs - Pulmonary apoplexy.

*[நுரையீரல் +* Skt. *சன்னி]*

**நுரையீரற்சீழ்க்கூடு** *nurai-y-īraṟ-cīḻ-kūḍu,* பெ. (n.) நுரையீரலுக்குள்ளாகச் சீழ் நிறையப் பெற்ற குழல்கள்; a lung containing numerous small pus filled cavities - Honey comb lung. (சா.அக.)

*[நுரையீரல் + சீழ் + கூடு]*

**நுரையீரற்சுரம்** *nurai-y-īraṟ-curam,* பெ. (n.) ஈளை மற்றும் வளியால் உண்டான காய்ச்சல்; fever due to the inflammation of the lungs, lung fever - Croupous pneumonia. (சா.அக.).

*[நுரையீரல் + சுரம். சுர் → சுரம் = பாலை நிலவெப்பம் குறித்த சுரம் இக்கால் மேனிநிலை வெப்பம் குறிக்கிறது. பொது மக்கள் சிலவிடத்து 'ஜுரம்' என்று வழங்குவர் ஒ.நோ.சவளி → ஜவுளி.]*

**நுரையீரற்றாபனம்** *nurai-y-īraṟ-ṟāpaṉam,* பெ. (n.) நுரையீரற்றாபிதம் (M.L.) பார்க்க; see *nurai-y-īraṟ-ṟāpidam.*

*[நுரையீரல் + Skt. தாபனம். ஸ்தாபனம், ஸ்தாபிதம் இரண்டும் வடசொல் முன்னொழுத்து கெட்டுநின்றன.]*

**நுரையீரற்றாபிதம்** *nurai-y-īraṟ-ṟābidam,* பெ. (n.) கோழை (கபம்) மிகுதியாலுண்டாம் காய்ச்சல் (சுரம், (M.L.); preumonia.

*[நுரையீரல் + Skt. தாபிதம்]*

**நுரையெழுப்பி** *nurai-y-eḻuppi,* பெ. (n.) 1. நுரையையுண்டாக்கும் பொருள்; that which gives rise to forth - Saponin. 2. கோழையை (சளியை) அறுக்கும் மருந்து; a medicine which promotes expectoration - Expectorent. (சா.அக.).

*[நுரை + எழுப்பி]*

**நுரைவாய்** *nurai-vāy,* பெ. (n.) நுரை தள்ளும் வாய்; foaming mouth.

*[நுரை + வாய்]*

**நுரைவாயன்** *nurai-vāyaṉ,* பெ. (n.) 1. நுரை தள்ளும் வாயுடையவன்; one who foams at the mouth. 2. சாளைவாயன்; one who has a dribbling mouth.

*[நுரை + வாயன்.]*

**நுரைவீக்கம்** *nurai-vīkkam,* பெ. (n.) நுரையீரற்றாபிதம் (M.L.) பார்க்க ; see *nurai-y-īraṟ-ṟāpidam.*

*[நுரை + வீக்கம்]*

**நுலையிலி** *nulai-y-ili,* பெ. (n.) ஊமை (யாழ்.அக); dumb person.

*[நுவல் + இலி – நுவலி → நுலையிலி]*

**நுவ்வை** *nuvvai,* பெ. (n.) 1. நும் தங்கை; your younger sister. "*நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகும்*" (நற்.172). 2. தமக்கை; elder sister.

*[நும் + தவ்வை]*

**நுவக்கல்** *nuvakkal,* பெ. (n.) துவட்டுகை; rubbing the moisture. (சா.அக.).

**நுவணம்[1]** *nuvaṇam,* பெ. (n.) 1. பஞ்சி நூல்; cotton thread. 2. மாமரம்; mango tree - Mangifera indica. (சா.அக.).

*[நுள் → நுண் → நுவண் → நுவணம். பஞ்சிலிருந்து நுண்ணிதாய் நூல் இழுத்தல்]*

**நுவணம்[2]** *nuvaṇam,* பெ. (n.) கல்வி நூல் (சூடா.); treatise.

*[நுவல் → நுவள் → நுவண் → நுவணம் (வே.க.). நுவலுதல் = நுண்ணிய அறிவுச் செய்தியைச் சொல்லுதல்]*

**நுவணம்[3]** *nuvaṇam,* பெ. (n.) இடித்தமா (திவா.); flour.

*[நுவணை[2] → நுவணம்.]*

**நுவணை[1]** *nuvaṇai,* பெ. (n.) **1.** நுட்பம் (திவா.); minuteness, fineness. **2.** கல்வி நூல் (சூடா.); treatise.

*[நுவல் → நுவள் → நுவண் → நுவணை (வே.க.). நுவலுதல் = நுண்ணிய அறிவுச் செய்திகளைச் சொல்லுதல்]*

**நுவணை[2]** *nuvaṇai,* பெ. (n.) **1.** இடித்தமா (திவா.); flour. "*மென்றினை நுவணை யுண்டு*" (ஐங்குறு. 285). **2.** பைந்தினை (பிங்.); black Italian millet. "*மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்*" (பதிற்று. 30:24).

க. நவணெ, நவணி

*[நுவ்வு → நூ → நுவல். நுவ்வு = எள். நுவல் → (நோல்) → நோலை = எள்ளுருண்டை. நுவல் → நுவள் → நுவண் → நுவணை (மு.தா.)]*

**நுவணை[3]** *nuvaṇai,* பெ. (n.) **1.** நொச்சி மரம்; five leaved notchi-Vitex negundo. **2.** மாமரம்; mango tree - Mangifera indica. (சா.அக.).

**நுவல்[1]-தல் (நுவறல்)** *nuval-,* 13செ. குன்றாவி.(v.t.) **1.** நுண்ணிய அறிவுச் செய்தியைச் சொல்லுதல்; to say, speak, declare, utter. "*மெய் தெரி வளியிசை அளவு நுவன்றிசினே*" (தொல்.எழுத்து.102). "*நூலே நுவல்வோன் நுவலுந் திறனே*" (நன். பாயி.3). **2.** விரும்புதல்; to desire. "*பருகியு மமையாது நுவலு மமைதிய*" (ஞானா.25:6). "நசைதர வந்து நின்னிசை நுவல் பரிசிலேன்" (புறநா.209:11).

*[நூவு → நுவ்வு → நுவல் → நுவல் – தல் (வே.க.). நுட்பமாகச் சொல்லுதல், நூலுரைத்தல், நுண் பொருள் கூறுதல். நுல் → நூல் → நூ → நூவு. நூல் = நுண்மை, நுட்பம், கூர்மை, இளமை]*

**நுவல்[2]** *nuval,* பெ. (n.) **1.** சொல் (திவா.); word, saying. **2.** நுண்மை; minuteness.

*[நுவல்[1] → நுவல்[2]]*

**நுவல்வோன்** *nuvalvōṉ,* பெ. (n.) அறிவுச் செய்திகளைக் கூறும் ஆசிரியன்; teacher. "*நூலே நுவல்வோன் நுவலுந் திறனே*" (நன்.பாயி.3)

*[நுவல் → நுவல்வோன். **நுவல்தல் = நுட்பமான** அறிவுச் செய்திகளைக் கூறுதல்]*

**நுவலம்** *nuvalam,* பெ. (n.) சிறுதேக்கு; small teak - Cleodendran serratum. (சா.அக.).

**நுவலாச்சொல்** *nuvalā-c-col,* பெ. (n.) ஒரு பொருளைப் பழித்தாற்போலப் புகழும் அணி (வீரசோ. அலங்.32); a figure of speech in which a person or thing is enlogised by apparent condemnation.

*[நுவல் + ஆ + சொல். ஆ – எதிர்மறை இடைநிலை]*

*புகழாப் புகழ்ச்சி யெனினும் நுவலாச் சொல் எனினும் ஒக்கும். "மாறி யிகழ் மொழி வண்புகழாய் நுவலாச்சொல் வரும்" என்பது வீரசோழியம். (விரசோ.அலங்.32)*

**நுவலாநுவற்சி** *nuvalā-nuvarci,* பெ. (n.) **1.** ஒட்டணி (குறள்,**475**, உரை); a figure of speech. **2.** குறிப்பெச்சம் (நன். **359**, மயிலை.); suggested sense.

*[நுவல் + ஆ + நுவற்சி. ஆ – எ.ம.இ.நி.]*

**ஒட்டணி:**

*புலவன் தன்னாற் கருதப்பட்ட பொருளை மறைத்து அதனை வெளிப்படுத்தற்குத் தக்க பிறிதொன்றினை சொல்லின், அஃது ஒட்டென்னும் அணியாகும்.*

*"கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற் கொத்த தொன்றுரைப்பினஃ தொட்டென மொழிப" (தண்டி.52). இதனை உவமைப்போலி எனவும், பிறிது மொழிதல் எனவும் நுவலா நுவற்சி எனவும் கூறுவர்.*

**வகை:**

*கூறுகின்ற பொருளும் அதனது அடையும் வேறுபட மொழிதலும், அடை பொது வாக்கிப் பொருள் வேறுபட மொழிதலும், அடை விரவிப் பொருள் வேறுபட மொழிதலும், அடையைப் பிறழ்வுபடுத்திப் (விபரீதப்படுத்திப்) பொருள் வேறுபட மொழிதலும் என நான்கு வகையினையுடைத்து ஒட்டென்னும் அணி.*

*"அதுவே,*
*அடையும் பொருளு மயல்பட மொழிதலும்*
*அடைபொது வாக்கி யாங்ஙன மொழிதலும்*
*விரவத் தொடுத்தலும் விபரீதப் படுத்தலும்*
*எனநால் வகையினு மியலு மென்ப".*
*(தண்டி.53)*

*"வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்*
*குறைபடுதேன் வேட்டுங் குறுகும்–நிறைமதுச்சேர்ந்*
*துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்*
*வண்டாமரை பிரிந்த வண்டு"*
*(தண்டி.53 மேற்கோள்.)*

*தாமரையின்கண் குறைவற்ற நிறை மதுவை உண்ட வண்டும், களித்தபல வண்டுகள் சேர்ந்து உண்டு வெறுத்து விட்ட குறைபடு காவியின் மதுவை ஆசைப்பட்டுச் உண்ணப்புகும் என்பது இப்பாடலின்பொருள்.*

*ஆனால் புலவன் கூறக் கருதிய பொருள்வேறு. தலைவிமாட்டு எவ்வளவு தூய அன்பைத் தலைவன் பெற்றாலும் அவன் உள்ளம் தூய்மையற்ற பரத்தையின் பால் செல்லும். பின் அவளால் வெறுக்கப்பட்டுத் தலைவியை நாடுவான் என்பது புலவன் கருத்து. இதைக்கூறக் கருதிய புலவன் இதனைப் பாட்டில் வெளிப்படுத்தாது தாமரை மலரையும்அதனை நுகரும்வண்டையும் பற்றி பாடி தன்கருத்தை வெளிப்படுத்துவதால் இப்பாடல் ஒட்டணியின்பாற் படும். இது ஒட்டணி வகையுள் அடையும் பொருளும் அயல்பட மொழிதல் வகையைச் சாரும்.*

**எச்சம்:**

*பொருளை முழுமையாக்க வரும் எஞ்சிய சொற்கள் எச்சம் எனப்படும். எச்சம் இரு வகைப்படும் சொல்லெச்சம், குறிப்பெச்சம் என்பன.*

**குறிப்பெச்சம்:**

*பொருளை முடிக்கக் குறிப்பாகவரும் எஞ்சியசொற்கள். இது பல வகைப்படும். **1.** ஒன்றொழிப்பொதுச்சொல். எ–டு. இன்று மருத்துவமனையில் ஐவர் குழந்தைப்பெற்றனர். ஐவர் என்னுந் பொதுச்சொல் குழந்தைப் பெறுதல் என்னுந் தொழிலால் பெண்களை மட்டுமேகுறித்தது. **2.** திரிபு (விகாரம்). எ–டு. மரைமலர்– தாமரைமலர் என்பதைக்குறிப்பால் உணர்தியது. முதல்திரிபு. **3.** தகுதி. எ–டு. கால்கழுவி வந்தான். இஃது இடக்கரடக்கலாக மலங்கழுவிவருதலை மறைமுகமாகக் குறிப்பதால் தகுதிக்குறிப்பெச்சம். **4.** ஆகுபெயர்: எ–டு. வெள்ளையடித்தான், வெள்ளை என்னும் பண்புப் பெயர் சுண்ணாம்பிற்கு ஆகிவருகிறது. **5.** அன்மொழித்தொகை. எ–டு. பொற்றொடி வந்தாள். இவ்வன்மொழித் தொகை அவற்றையுடைய மகளிரைக் குறிப்பாலுணர்து கின்றது. **6.** வினைக்குறிப்பு: எ–டு. இவன் இப்போது பொன்னன். பொன்னன் என்பது*

*பெயர்ப் பொருளை யொழித்து, வினைக்குறிப்புப் பொருளைக் குறிப்பால் உணர்த்திற்று. 7. முதற் குறிப்பு. எ–டு: "அறத்தாறிதுவென வெள்ளைக் கிழிவு"– இம் முதற் குறிப்புச் சொற்கள், "அறத்தாறிதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோ டூர்ந்தா னிடை" என்னும் குறளைக் குறிப்பாலுணர்த்தின. 8. தொகைக் குறிப்பு: எ–டு. அலங்குளைப் புரவியைவரொடு சினைஇ" – ஐவர் என்னுந்தொகைக் குறிப்புச்சொல் பாண்டவரைக் குறிப் பாலுணர்த்திற்று.*

*இன்ன பிறவும் என்றதனால், தெரிநிலை குறிப்பு வினையாலணையும் பெயர்களும், தெரிநிலை வினை முற்றாலுங் குறிப்பு வினை முற்றாலும் வரு மெச்சங்களும், செய்யு மென்னும் முற்றும் "கேட்குந போல" முதலியவாக அஃறிணையிடத்துச் சொலப் படுவனவும், ஆகிய இவை முதலானவையும் குறிப்பாற் பொருளுணர்த்தும்.*

> *"ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி*
> *ஆகு பெயரன் மொழி வினைக் குறிப்பே*
> *முதறொகை குறிப்போ டின்ன பிறவும்"*
> *(நன்.269).*

**நுவலுழித்தோற்றம்** *nuvaluḻi-t-tōṟṟam,* பெ. (n.) 1. பாடி வீட்டிலுள்ளோர் மகிழ்ந்துரைத் தற்குக் கரணியமான நிரை கொண்டோர் வரவுணர்த்தும் புறத்துறை (தொல்.பொருள்.58); theme of there return of persons after capturing the cattle of their enemies, when there is great rejoicing in their camp. 2. ஊரிலுள்ளோர் கண்டு மகிழ்ந் துரைத்தற்குக் கரணியமான நிரைமீட்டோர் வரவுணர்த்தும் புறத்துறை (தொல். பொருள்.58); theme of the return of persons after recovering the cattle captured by their enemies, when their is great enemies, when their is great rejoicing in their town.

மறுவ. தலைத்தோற்றம்

*[நுவலுழி + தோற்றம்]*

வெட்சியார் ஆத்திரளைக் கைக்கொண்டு அவர்தம் கிளைகள் மகிழ்தற்கேதுவாக ஊரின் அணித்தே வந்து தோன்றியது தலைத்தோற்றம் என்னும் துறையாம் என்று புறப்பொருள் வெண்பா மாலை கொளு கூறுகிறது. "உர வெய்யோன் இனந்தழீஇ வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று" (பு.வெ.1:11). ஆசிரியர் தொல்காப்பியனார்இதனை "நுவலுழித்தோற்றம்" எனக் குறியீடு செய்கிறார்.

**நுவழலோசைப்பூடு** *nuvaḻal-ōšai-p-pūḍu,* பெ. (n.) கையாந்தகரை; eclipse plant-Eclypta prostata. (சா.அக.).

*[நுவழல் + ஓசை + பூடு.]*

*[கை + ஆர்ந்த + கீரை → கையாந்த கரை. கீரை → கரை–திரிபு.]*

**நுவற்கரி** *nuvaṟkari,* பெ. (n.) நீர்க்கரகம் (நாமதீப.473); a water - vessel.

**நுவற்சி** *nuvaṟci,* பெ. (n.) சொல்லுகை (நன்.458); saying , utterance.

*[நுவல் → நுவற்சி]*

**நுவறல்** *nuvaṟl,* பெ. (n.) சொல்லுகை; say. "நோக்கு நெடும்பாரவர்க்கு நோன் புலைவான்றலையவர்க்கு நுவறல் கேட்டா" (சேதுபு. காயத். 4.).

*[நுவல் → நுவறல்]*

**நுவறு–தல்** *nuvaṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) நுண்ணிதாக அல்லது பொடியாக அராவுதல்; to file. *"நுணங்கர நுவறிய நுண்ணீர் மாமைக் களங்கனி யன்ன கதழ்ந்துகிள ருருவின் வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்"* (மலைபடு.35–37).

*[நுவல் → நுவறு → நுவறு–தல்(வே.க.)]*

**நுழல்** *nuḻal*, பெ. (n.) கொற்றுகம், ஒரு பூண்டு (வைத்தியபரி.); a kind of herb.

**நுழாய்** *nuḻāy*, பெ. (n.) **1.** இளமை; tenderness. **2.** இளம்பாக்கு; immature arecanut.

*[நுல் = இளமை, சிறுமை. நுல் → நுள் → நுழு → நுழாய். (வே.க.) நுள் → நுளை → நுழை → நுழாய் (சு.வி.)]*

**நுழாய்ப்பாக்கு** *nuḻāy-p-pākku*, பெ. (n.) முற்றாதபாக்கு (யாழ்ப்.); immature arecanut.

*[நுல் = இளமை, சிறுமை. நுல் → நுள் → நுழு → நுழாய் + பாக்கு, நுழாய்ப்பாக்கு = இளம்பாக்கு. (வே.க.)]*

**நுழுது–தல்** *nuḻudu-*, 5செ.குன்றாவி. (v.t.) தலைமயிரைச் சுருட்டி நுழைத்து முடித்தல்; to tie, as a coil of hair. "*மயிர் நுழுதி மருங்கு யர்ந்த தேசுடைய சீகழிகையில்*" (பெரியபு. ஆனாய.15).

க. நுலிசு; தெ. நுலுமு.

*[நுழு → நுழுது → நுழுது–தல்]*

**நுழுந்தி** *nuḻundi*, பெ. (n.) பொறுப்பேற்காது நழுவுவோன் (யாழ்ப்.); one who shirks responsibility.

*[நுழுந்து → நுழுந்தி]*

ஒருவரம்பிலிருந்து வேறொரு எல்லைக்கு இடுக்குவழி நுழைந்து நழுவும் இயல்புடையானைக் குறித்தல் காண்க.

**நுழுந்து[1]–தல்** *nuḻundu-*, 5செ.குன்றாவி. (v.t.) **1.** தலைமயிரைச் சுருட்டி நுழைத்து முடித்தல்; to tie, as a coil of hair. "*திருக்குழலைக் குலைத்து நுழுந்த*" (ஈடு,10. 1:1). **2.** நுழைத்தல், செருகல் (வின்.); to insert, stick in, tuck in. **3.** மறைத்து வைத்தல், எளிதில் அறியக் கூடாத இடத்தில் நுழைத்து வைத்தல்; to keep in a place not easily found out. **4.** கவர்தல்; to carry away by stealth.

*[நுல்(துளை) → நுள் → நுழு → நுழுது → நுழுந்து → நுழுந்து–தல் (வே.க.)]*

**நுழுந்து[2]–தல்** *nuḻundu-*, 5செ.கு.வி. (v.i.) **1.** பதுங்குதல் (யாழ்ப்.); to skulk slink or sneak away. **2.** மறைதல், நழுவுதல் (யாழ்ப்.); to slip out of sight, as one among many. **3.** நகர்தல் (யாழ்ப்.); to crawl, creep, as reptiles.

*[நுழுது → நுழுந்து → நுழுந்து–தல்]*

**நுழுவல்** *nuḻuval*, பெ. (n.) **1.** நுழாய்ப் பாக்கு பார்க்க; see *nuḻāy-p-pākku*. **2.** நழுவும் பொருள்; anything slippery.

*[நுல் (= இளமை, சிறுமை) → நுள் → நுழு → நுழுவல் = இளம்பாக்கு, (வே.க.)]*

**நுழுவு–தல்** *nuḻuvu-*, 5செ.கு.வி.(v.i.) நகர்தல் (யாழ்ப்.); to creep along, as reptiles.

*[நழுவு → நுழுவு]*

**நுழை[1]–தல்** *nuḻai-*, 2செ.கு.வி.(v.i.) **1.** இடுக்கமான இடைவழியுட்செல்லுதல்; to creep through a narrow passage; to penetrate. "*மலர்ப்பொழி னுழைந்து*" (சிலப்.10:35). *திருடன் பலகணி வழியாய் வீட்டிற்குள் நுழைந்து விட்டான் (உ.வ.). ஊசிக்காதில் ஒட்டகம் நுழையுமா? பூனையைக் கண்டதும் எலி வளையில் நுழைந்து கொண்டது.* **2.** நுண்ணி

தாக விளங்குதல்; to be impressed in one's mind. *அது அவன் அறிவில் நுழைய வில்லை.* **3.** வலக்காரமாக அல்லது கமுக்க மாக ஒரு வேலையில் சேர்தல்; to get into, take up, as an office. *அவன் அந்தப் பணியில் நுழைந்து விட்டான். அவன் மெல்ல மெல்ல அரசு வேலையில் நுழைந்து விட்டான். இந்தக் காலத்தில் பெண்கள் நுழையாத துறையே இல்லை.* **4.** இடைச் செருகப்படுதல்; to be interpolated. *சிந்தாமணியில் கந்தியார் பாட்டு நுழைந்தது. உங்கள் பையன் பெயரை எப்படியாவது தேர்வுப் பட்டியலில் சேர்த்து விடுகிறேன். தொல்காப்பியத்துள்ளும் ஆரியக் கருத்துகள் நுழைந்து விட்டன.* (உ.வ.)

**ம.** நுழுக; **க.** நொளெ; **கொலா.** நொலாந்க்; **குட.** நுக்க்; **குரு.** நுற்நா; **து.** நுரும்கே; **மா.** நுடே; **தெ.**நுசுலு.

*[நுல்(துளை) → நுள் → நுழு → நுழை → நுழை–தல்]*

நுழைதல் என்னுஞ் சொல்லில், நுண்மை, புகவு என்னும் இரு கருத்துகள் கலந்துள்ளன. இடுக்கமான வாயில் அல்லது புழை அல்லது இடைவெளி வழியாக, உடம்பை ஒடுக்கியும் ஒடுக்காதும் உட்செல்வது நுழைதல் என்றும், உடம்பைச் சற்றும் ஒடுக்காது, நிமிர்ந்து தாராளமாக ஒரு பெருவாயில் வழி உட்செல்வது புகுதல் என்றும் சொல்லப்படும். இவ்வழக்கு, காட்சிப் பொருள் கருத்துப் பொருள் ஆகிய இருவகைக்கும் பொருந்தும். ஆதலால், புகவுச் சீட்டை நுழைவுச்சீட்டு என்றும், புகவுத் தேர்வை நுழைவுத் தேர்வு என்றும் குறித்தல் வழக்கம்.

**நுழை²–தல்** *nuḻai-,* 2செ.குன்றாவி. (v.t.) **1.** கடத்தல் (சிலப்.10 : 35, உரை.); to pass. **2.** மட்டுக்கட்டுதல் (யாழ்.அக.); to stint, limit down or lessen the due measure or quantity. **3.** சாடை சொல்லுதல் (யாழ்.அக.); to make innuendoes.

**ம.** நுழுக; **க.** நொளெ.

*[நுழை¹–தல் → நுழை²–தல்]*

**நுழை³–தல்** *nuḻai-,* 2செ.கு.வி. (v.i.) **1.** நுண்மை யாதல்; to be minute, fine. *"நுழை நூற் கலிங்கம்"* (மலைபடு.561). **2.** கூரிதாதல்; to be keen acute. *"நுழைந்த நோக்கிற் கண்ணுள் வினைஞரும்"* (மதுரைக்.517). *"ஒடுதேர் நுண்நுகம் நுழைத்த மாவே"* (நற்.58:11). *"வேற்றிழை நுழைத்த வேர்நனை சிதாஅர்"* (புறநா. 69:3). *"சலாகை நுழைந்த மணித்துளை அகவையின்"* (மணிமே.12:66). *"தனிமணி யிரட்டுந் தாளுடைக் கடிகை நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்"* (35:3,4).

*[நுல் (நுண்மை, கூர்மை) → நுள் → நுழு → நுழை → நுழை–தல்]*

**நுழை⁴–த்தல்** *nuḻai-,* 4செ. குன்றாவி. (v.t.) புகுத்துதல்; to put, insert; interpolate. *கால்சட்டைப் பைக்குள் இரண்டு கைகளையும் நுழைத்துக் கொண்டு நின்றான். ஊசியின் காதில் ஒட்டகத்தை நுழைத்தாலும் தீயவழிச்செல்வரைத் துறக்கத்தில் நுழைக்கமுடியாது.* (விவிலியம்).

*[நுழை¹–தல் → நுழை⁴–த்தல்]*

**நுழை⁵** *nuḻai,* பெ. (n.) **1.** சிறுவழி; narrow way. *நுழை விட்டு செய், நூல் கற்று அடங்கு* (பழ.) *"பிணங்கரி னுழைதொறும்"* (மலைபடு.379). **2.** பலகணி (பிங்.); window. **3.** குகை; cave. *"உயர்மலை நுழைதனிற் புக்கு"* (தாயு. சின்மய.11). **4.** துளை (தைலவ.தைல.); opening, aperture.

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுழை]*

**நுழை⁶** *nuḻai,* பெ. (n.) **1.** நுண்மை (திவா.); minuteness, fineness. **2.** அறிவு நுட்பம் (வின்.); intellectual sharpness.

*[நுல் (நுண்மை, கூர்மை) → நுள் → நுழு → நுழை]*

**நுழைகடவை** *nuḻai-kaḍavai,* பெ. (n.) வேலி முதலியவற்றின் சிறு திறப்பு(வின்.); narrow passage, as through a hedge; narrow entrance.

*[நுழை⁵ + கடவை. கட → கடவு → கடவை = கடந்து செல்லும் வழி.]*

**நுழைகதவு** *nuḻai-kadavu,* பெ. (n.) வாயிற் கதவு; gate.

*[நுழை⁵ + கதவு]*



**நுழைச்சல்** *nuḻaiccal,* பெ. (n.) **1.** **நுழைகடவை** பார்க்க; see *nuḻai-kaḍavai.* **2.** ஏழு என்னும் எண்ணிற்கு வழங்கும் குழூஉக் குறி; seven, a slang term.

*[நுழை⁵ → நுழைச்சல் ]*

**நுழைச்சு** *nuḻaiccu,* பெ. (n.) **நுழைச்சல்,2** பார்க்க; see *nuḻaiccal,***2.**

*[நுழை → நுழைச்சு]*

**நுழைநரி** *nuḻai-nari,* பெ. (n.) **1.** நரி(வின்.); fox, as burrowing in the ground. **2.** கபடன் (இ.வ.); hypocrite.

*[நுழை⁵ + நரி]*

**நுழைபுலம்** *nuḻai-pulam,* பெ. (n.) நுண்ணிய அறிவு; intellectual acumen. "*நுழைபுலம் படர்ந்த*" (பு.வெ.10, காஞ்சிப்.4.கொளு)

*[நுழை⁶ + புலம்]*

**நுழைபொட்டு** *nuḻai-poṭṭu,* பெ. (n.) **நுழைகடவை(வின்.)** பார்க்க; see *nuḻai-kaḍavai.*

*[நுழை⁵ + பொட்டு]*

**நுழைவழி¹** *nuḻai-vaḻi,* பெ. (n.) **நுழைவாசல்** பார்க்க; see *nuḻai-vāšal.*

*[நுழை⁵ + வழி]*

**நுழைவழி²** *nuḻai-vaḻi,* பெ. (n.) **1.** உணவு, நீர் செல்லும் வழி; the canal through which food and drink pass to the stomach - Oesophagus. **2.** காதில் ஓசை (ஒலி) நுழையும் வழி; the passage carrying sound from the external ear to the tympanam - Auditory canal. **3.** சுழிமுனை வாயில்; the subtle passage functioning in the body of a yogi or other Spiritualists. It extends from the nerve centre at the sacral region upto the cerebral region finding its lodgment at the crown of the head. (சா.அக.).

*[நுழை⁵ + வழி]*

**நுழைவாசல்** *nuḻai-vāšal,* பெ. (n.) திட்டிவாசல் (வின்.); low or small gate, wicket.

*[நுழை⁵ + வாசல். வாயில் → வாயல் → வாசல் – திரிவு]*



**நுழைவாயில்** *nulai-vāyil,* பெ. (n.) **1. நுழைவாசல் (திவா.)** பார்க்க; see *nulai-vāšal.* **2.** கட்டடம், திடல் முதலியவற்றினுள் செல்வதற்கு வெளி எல்லையில் உள்ள திறப்பு; entrance. *விளையாட்டுத்திடலின் நுழை வாயிலில் தோரணங்கள் கட்டப் பட்டுள்ளன. இந்தியாவின் நுழைவாயில் மும்பை.*

*[நுழை[5] + வாயில்]*

**நுழைவு[1]** *nulaivu,* பெ. (n.) **1.** நுண்மை; minuteness, fineness. *"நொசிவு நுழைவு நுணங்கும் நுண்மை"* (தொல்.சொல்.உரி.76). **2.** நுண்ணறிவு; keen understanding or parception. *"நூலவர் நுழைவொடு நுழைந்து"* (சூளா.இரத.117).

*[நுல்(நுண்மை) → நுள் → நுழு → நுழை → நுழைவு]*

**நுழைவு[2]** *nulaivu,* பெ. (n.) **1.** இடம் பெறுவதற் குரியது அல்லது அனுமதிக்கப் படுவதற் குரியது; entrance. *நுழைவுத் தேர்வு, நுழைவுக் கட்டணம் நுழைவுச்சீட்டு.* **2.** சேர்க்கை; admission.

நுழைவு = **1.** E. entrance; F. entee; G. eintritt(m), eingangm; It. ingresso. **2.** F. admission; G. zulassing, einweisung; It. ammissione.

*[நுல்(துளை) → நுள் → நுழு → நுழை → நுழைவு]*

**நுழைவுச்சீட்டு** *nulaivu-c-cīṭṭu,* பெ. (n.) ஒன்றில் நுழைவதற்கு அல்லது இடம் பெறு வதற்குரிய அனுமதிச்சீட்டு; entrance ticket.

*[நுழைவு[2] + சீட்டு.]*

*நுழைவுச்சீட்டை புகவுச்சீட்டு என்று கூறுதல் நலம். எற்றுக்கெனில் நுழைவு என்பது புழை அல்லது இடைவெளி வழியாக உடம்பை ஒடுக்கியும் ஒடுக்காதும் செல்வதாகும். புகுதல் என்பது பெருவாயில் வழி உடம்பைச் சற்றும் ஒடுக்காது, நிமிர்ந்து தாராளமாகச் செல்வதாகும்.*

**நுழைவுத்தேர்வு** *nulaivu-t-tērvu,* பெ. (n.) வேலைக்கோ, படிப்புக்கோ அனுமதிக்கும் முன் நடத்தப்பெறும் தேர்வு; entrance examination.

*[நுழைவு[2] + தேர்வு]*

*நுழைவுத் தேர்வை புகவுத் தேர்வு எனக் கூறுதல் பொருந்தும். நுழைதல் பார்க்க.*

**நுள்** *nul,* பெ. (n.) கிள்ளு; pinch.

*[முள் → நுள் = விரல் நுனியாற் கிள்ளு. முள் = ஊசி, ஊசிபோன்ற உறுப்பு, உட்குவிவு. (சு.வி.40)]*

**நுள்ளல்** *nullal,* பெ. (n.) **நுளம்பு (அக.நி.)** பார்க்க; see *nulambu.*

*[நுல் = சிறுமை, கூர்மை. நுல் → நுள் → நுள்ளல் = சிறிய உலங்கு]*

**நுள்ளான்** *nu!!āṉ,* பெ. (n.) கடிக்கும் சிற்றெறும்பு (வின்.); small biting ant.

*[நுல் = சிறுமை, கூர்மை. நுல் → நுள் → நுள்ளான் (வே.க.)]*

**நுள்ளி** *nu!!i,* பெ. (n.) நீர்ச் செடிவகை (நாஞ்.); an aquatic plant.

**நுள்ளு¹–தல்** *nu!!u-,* 5செ.குன்றாவி. (v.t.) கூரிய உகிரால் கிள்ளுதல் (உ.வ.); to pinch, nip.

ம. நுள்ளுக; **கோத.** நுள்ளி; **தெ.** நுல் (லு). *[நுல் = கூர்மை. நுல் → நுள் → நுள்ளு–தல் (வே.க.)]*

**நுள்ளு²** *nu!!u,* பெ. (n.) **1.** கிள்ளு; pinch, nip. **2.** சிறுதுண்டு அல்லது துணுக்கு; bit.

*[நுல் = கூர்மை, சிறுமை. நுல் → நுள் → நுள்ளு (வே.க.)]*

**நுளம்பப்பல்லவர்** *nuḷamba-p-pallavar,* பெ. (n.) நுளம்பர் பார்க்க; see *nuḷambar.*

**நுளம்பபாடி** *nuḷamba-pāḍi,* பெ. (n.) எருமையூர் (மைசூர்) நாட்டின் பகுதியாய் நுளம்ப வேந்தரால் ஆளப்பட்ட ஒரு நாடு (கல்.); country of the Nuḷambar, a portion of Modern Mysore. "*கங்கபாடியும் நுளம்பபாடியும்*" (முதல் இராச இராசன் மெய்க்கீர்த்தி)

*[நுளம்பர் + பாடி]*

நுளம்பபாடி: எருமையூர் எனப்படும் மைசூரின் கீழ்ப்பகுதியும் பல்லாரி மாவட்டமும் அடங்கிய நிலப்பகுதி. இதில் தும்கூர், சித்தல், துர்க்கம் பெங்களூர், கோலார் ஆகிய பகுதிகளும் அடங்கும். இதனைப் பல்லவருள் ஒரு பிரிவினரான நுளம்பர்கள் ஆண்டு வந்தனர். இதனை முதலாம் இரசராசன் கைப்பற்றி நிகரிலி சோழ மண்டலம் எனப் பெயரிட்டான்.

**நுளம்பர்** *nuḷambar,* பெ. (n.) **1.** நுளம்பபாடியைச் சேர்ந்த மக்கள்; a people in Nuḷamba-pāḍi. **2.** நுளம்பபாடியை ஆண்டவர்கள்; a king, ruled in Nulamba-pāḍi. ***நுளம்பபாடியை ஆண்டவர்கள் நுளம்பர்கள்.***

நுளம்ப குடிவழியை (வமிசத்தை) நிறுவியவன் திருநயனன். கேமாவதி கல்வெட்டுப்படி இதன் முதல் அரசன் மங்களன். நுளம்பர்களின் தலைநகரம் கேமாவதி. இவர்கள் மதம் சிவமதம் (சைவம்). பல சிவன் கோயில் களைக் கட்டினார்கள். பல ஏரிகளி களை வெட்டிக் குடிமக்களுக்கு உதவிய தாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. நுளம்பப் பல்லவர் என்பவரும் இவர்களே.

**நுளம்பு¹** *nuḷambu,* பெ. (n.) **1.** சிறு கொசுகு (திவா.); gnat, eye-fly. **2.** பெருங் கொசுகு (பிங்.); mosquito. **3.** மாட்டுஈ; cow-fly. "*ஆனுளம் புலம்புதொ றுளம்பும் நாநவில் கொடுமணி நல்கூர் குரலே*" (குறுந்.86)

**ம.** நுழம்பு; **தெ;** நுசும; க. நொள, நொளவு, நொண, நொணவு (a fly), நொசி (a minute insect that destroys wool, any cloth, and paper); **கொலா; பிரா.** நுல்லெ; **பர்.** நுற்ஞி; **கோண்.** நுல்லெ (a flea); **மா.** நுடொ (very small gnat.)

*[நுல் = கூர்மை, சிறுமை. நுல் → நுள் → நுளம் → நுளம்பு = சிறிய உலங்கு (வே.க.)]*

**நுளம்பு²** *nuḷambu,* பெ. (n.) மின்மினி; fire fly. (சா.அக.)

**நுளம்பு³–தல்** *nuḷambu-,* 5செ.கு.வி.(v.i.) அசட்டை செய்தல்; to treat with contempt.

**நுளுப்பு—தல்** *nuḷuppu-,* 5செ.குன்றாவி.(v.t.) கழப்புதல் (வின்.); to neglect or shirk, as work.

*[நழுப்பு → நுளுப்பு—தல்.]*

*நழுப்பு—தல் = மயங்கச் செய்தல், வேலை செய்ய மறுகுதல்.*

**நுளும்பு** *nuḷumbu,* பெ. (n.) ஒருவகைப் பறவை; a kind of bird. (சா.அக.).

*[நுளம்பு → நுளும்பு]*

**நுளை** *nuḷai,* பெ. (n.) 1. வலைகொண்டு மீன் பிடிக்கும் மீனவர்; a caste of fishermen. "*நுளைமக ளரித்த பழம்படு தேறல்*" (சிறுபாண்.158). 2. ஈனம், இழிவு(வின்.); inferiority, baseness; meanness. 3. குருடு(வின்.); blindness.

*[நுல்(துளை) → நுள் → நுளை = நுளையர் குலம்]*

**நுளைச்சி** *nuḷaicci,* பெ. (n.) நுளையரின மகள்; a fisher-woman. "*நுளைச்சியர்... மடற் கொய்து*" (தேவா. 39 : 5).

மறுவ. நுளைமகள்

[நுளை → நுளைச்சி = வலைகொண்டு மீன்பிடிக்கும் நுளையரினப்பெண்.]

**நுளைச்சியர்** *nuḷacciyar,* பெ. (n.) நெய் தனிலத்துத் தாழ்ந்த பெண்டிர்; women of maritime tract. "*தழுவுசீர் நுளைச்சியர் தசும்பிற்சேலுடன்*" (சேதுபு.கந்தமா.87).

*[நுளையர் (ஆ.பா.) → நுளைச்சியர் (பெ.பா.)]*

**நுளைப்புண்** *nuḷai-p-puṇ,* பெ. (n.) தசை அழுகி சீழோடு இருக்கும் புண்; an ulcer marked by sloughing particles in the discharge - Phagedenic ulcer. (சா.அக.).

*[நுளை + புண்]*

**நுளைப்புழுக்கையன்** *nuḷai-p-puḻu-k-kaiyaṉ,* பெ. (n.) இழிந்தோன்(வின்.); base, mean person.

*[நுளை + புழுக்கையன். புழுக்கையன் = புழுக்கைபோல் சிறியவன், இழிந்தவன்.]*

**நுளைமகள்** *nuḷai-magḷ,* பெ. (n.) நுளையற் இனத்தில் பிறந்த மகள்; a fisher- woman. "*நுதிவேனோக்கினுளை மகளரித்த*" (சிறுபாண்.158.).

*[நுளை + மகள்]*

**நுளையர்** *nuḷaiyar,* பெ. (n.) 1. நெய்தனிலத்து மக்கள்; the people of maritime tract. "*நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்*" (நம்பியகப். அகத்தி.24.). 2. நெய்தல் நில ஆண்மகன்; male person of maritime tract. "*நனைமுதிர் தேறல் நுளையர்க் கீயும்*" (அகநா. 366:11).

*[நுளையன் → நுளையர்]*

**நுளையன்** *nuḷaiyaṉ,* பெ. (n.) 1. மீனவன், நெய்தனிலத்தான் (திவா.); fisher-man, inhabitant of the maritime tract. *நுளையன் அறிவானா ரத்தினத்தின் பெருமை?* (பழ.) *நுளையன் பேச்சு அம்பலம் ஏறாது* (பழ.). 2. இழிந்தோன்(வின்)); mean fellow. 3. நெய்தல் நில ஆண்மகன்; male of maritime tract.

*[நுல்(துளை) → நுள் → நுளை → நுளையன் = நீருட் புகுந்து அல்லது முழுகி மீன் பிடிப்பவன். ஒ.நோ. ம. முக்குவன் = மீன்பிடிப்பவன், நெய்தல் நிலத்தான் (வே.க.)]*

**நுளைவாய்** *nuḷai-vāy,* பெ. (n.) ஊத்தைவாய் (மதி.களா.1:72); foul mouth.

*[நுளை + வாய்]*

**நுறுக்கு–தல்** *nuṟukku-,* 5செ.குன்றாவி. (v.t.) பொடியாக்குதல்; to crush, pulverise, reduce to powder. "*வெற்பினங்களை நுறுக்கின*" (கம்பரா.பிரமாத்.108).

**க.** நுறுகு; **தெ.** நுருமு.

*[நுறுங்கு → நுறுக்கு–தல்]*

**நுறுங்கு¹–தல்** *nuṟuṅgu-,* 5செ.கு.வி. (v.i.) 1. பொடியாதல்; to be powdered. 2. சிதைதல்; to be bruised, squeezed. "*நுறுங்கிய யாக்கையோடு*" (விநாயகபு. 80 : 442).

*[நுல் → நுள் → நுறு → நுறுங்கு → நுறுங்கு–தல். நுல் = நுண்மை, சிறுமை. (வே.க.)]*

**நுறுங்கு²** *nuṟuṅgu,* பெ. (n.) குறுநொய்; grit. '*நொய்யும் நுறுங்குங் களைந்து அரிசியமைத் தாரை*' (தொல்.சொல்.1, உரை).

**ம.** நுறுநு

*[நுறு → நுறுங்கு]*

**நுன்** *nuṉ,* பெ. (n.) உன், உனது; yours. முன்னிலை ஒருமைப் பெயர்.

*[நூன் → நுன்]*

**நுன** *nuṉa,* பெ. (n.) உனது, நினது; yours. "நுனசீறடிநோ வநடந் துசெலேல்" (சீவக:1517).

*[நூன் → நுன]*

**நுனி¹** *nuṉi,* பெ. (n.) 1. நுனை; tip, point. "*நுனிக் கொம்ப ரேறினார் அஃதிறந்தூக்கின் உயிர்க்கிறுதியாகிவிடும்*" (குறள்,476). *நுனிக்கொம்பில் ஏறி அடிக்கொம்பை வெட்டுவார்களா?* (பழ.) 2. நுண்மை(திவா.); minuteness, fineness, smallness. *நுலோடுபோன நுனி கூர் நோலாரு ஞானமுநி வீர்* (சேதுபு. பாலோடை. 46.). 3. நாக்கு, கத்தி முதலியவற்றின் முன்பகுதி; point, tip of one's tongue, a kinfe. *நாக்கு நுனியால் மூக்கு நுனியைத் தொடமுடியுமா?* 4. மேசை முதலியவற்றின் இருபக்கங்களும் இணையும் இடம்; முனை; edge, corner. *ஓடிவந்ததால் மேசை நுனியில் இடித்துக் கொண்டேன். மேசை நுனியில் வைத்து அடிக்காதே, நுனி உடைந்து விடும்.* 5. உச்சி; top.

**ம.** நுனி

*[நுல் → நுன் → நுனி. நுல் = நுனிமை, முன்மை, கூர்மை]*

**நுனி²–த்தல்** *nuṉi-,* 4செ.குன்றாவி. (v.t.) 1. கூராக்குதல்; to sharpen to a point, whet. 2. கூர்ந்து நோக்குதல் அல்லது ஆராய்தல்; to examine carefully, to look intently. "*நாடகக் காப்பிய நன்னூ னுனிப் போர்*" (மணிமே.19:80).

*[நுல் → நுன் → நுனி → நுனி–த்தல். நுல் = நுன்மை, முன்மை, கூர்மை]*

**நுனி³–த்தல்** *nuṉi-,* 4செ.குன்றாவி. (v.t.) 1. ஆராய்ந்து கூறுதல்; to state after a full consideration. "*நூற் பொருளுணர்ந்தோர் நுனித்தனரா மென*" (மணிமே.19:38). "கதிர்வினை நுனித்த நின் கணியெனைக் கூறி" (பெருங். உஞ்சைக்.36:210). 2. கருதுதல்; to intent. "*நோக்கருஞ் சாலை போக நுனித்து*" (இரகு.குறைக.67).

*[நுல் → நுன் → நுனி. நுனி–த்தல்]*

**நுனிக்கை** *nuṉi-k-kai,* பெ. (n.) விரல் நுனி (உ.வ.); tip of the fingers, as extremities.

*[நுனி[1] + கை]*

**நுனித்தல்** *nuṉittal,* பெ. (n.) குணம்(திவா.); quality, nature.

**நுனித்தோல்** *nuṉi-t-tōl,* பெ. (n.) ஆண்குறியின் முனைத்தோல் (விவிலி.ஆதி); fore skin.

*[நுனி + தோல்]*

**நுனித்தோலழற்சி** *nuṉi-t-tōlaḻarci,* பெ. (n.) ஆண்குறி முன்தோல் வெந்து காணுகை; inflammation of the fore skin - Balanitis. (சா.அக.).

*[நுனி + தோல் + அழற்சி]*

**நுனிநா** *nuṉi-nā,* பெ. (n.) நாக்கின் நுனி; tip of the tongue. "*டகார ணகார நுனிநா வண்ணம்*" (தொல்.எழுத்து.91). *சாப்பிடும்போது நுனி நாக்கைக் கடித்துக் கொண்டான்.*

*[நுனி + நா]*

**நுனிநாசிச்சிலந்தி** *nuṉi-nāsi-c-cilandi,* பெ. (n.) மூக்குமுனையில் வரும் ஓர் சிலந்திப்புண் அல்லது புற்று; an ulcer on the tip of the nose. (சா.அக.)

[நுனி + நாசி + சிலந்தி. சிலந்தி = புண், புற்று, சுட்டி.]

**நுனிப்பந்தி** *nuṉi-p-pandi,* பெ. (n.) கடைப்பந்தி; guests at the extreme end of a row.

*[நுனி + பந்தி. பந்தி = வரிசை]*

**நுனிப்பு** *nuṉippu,* பெ. (n.) கூர்ந்தறிகை; examining carefully. "*நூனெறி வழாஅ நுனிப்பொழுக் குண்மையின்*" (பெருங். வத்தவ.7:34). "*நூன்மேற் சூழ்ந்தநுனிப்பில் வழாமை*" (பெருங். உஞ்சைக். 43:22).

*[நுனி→ நுனிப்பு. நுனி = கூர்ந்து நோக்குதல் அல்லது ஆராய்தல்.]*

**நுனிப்புல்மேய்–தல்** *nuṉi-p-pul-mēy-,* 1 செ.குன்றாவி.(v.t.) மேலெழுந்த வாரியாகப் படித்தல் (உ.வ.); to study or read cursorily to pay superficial attention to. *நுனிப்புல் மேய்வது போல் நூலைப் படிப்பது அவருக்குப் பிடிக்காது.*

*[நுனி + புல் + மேய்–தல்.]*

*சில ஆடுகள் நின்று முழுமையாக மேயமாட்டா. நடந்து கொண்டே புல் நுனிகளை மேய்ந்து கொண்டே போகும். அதுபோல் மேலெழுந்த வாரியாக அரைகுறையாகப் படிப்பதை நுனிப்புல் மேய்தல் என்று சொல்வர்.*

**நுனியாடி** *nuṉi-y-āḍi,* பெ. (n.) படைத்தலைவர் (சேனாதிபதி) (ஈடு.4. 8:7); commander-in-chief.

*[நுனி + ஆடி]*

படைமுகத்தில் நின்று படைகளைப் போருக்கு ஆயத்தமாக்குபவர் என்ற கருத்தில் வந்தபெயராகலாம். ஆடு–தல் = பொருதல்.

**நுனியிலை** *nuṉi-y-ilai,* பெ. (n.) தலை வாழையிலை (இ.வ.); plantain leaf with the tapering end intact.

*[நுனி + இலை]*

**நுனை** *nuṉai,* பெ. (n.) 1. முனை; point. 2. நுனி; tip. "*தானையுங் கடலென முழங்குங்*

*கூர்நுனை வேலும்"* (புறநா.42). *"மாய்த்த போல மழுகுநுனை தோற்றி".* (அகநா.5:12). *"குவிமுட் கருவியுட் கோணமும் கூர் நுனைக்கவை முட்கருவியும்"* (மணிமே.18:163.). *"ஏனமாகிய நுனைமுரி மருப்பின்"* (பதிற்றுப்.16:6). *"திகழ்ந்த திற்றென நெருப்பு நுனையுறீஇ"* (பெருங். உஞ்சைக். 47:237). **3.** முடிவு; end.

*[நுனி → நுனை. நுல் → நுனி = உச்சி, முனை, கூர்மை, நுண்மை, சிறுமை, இளமை]*

**நூ**[1] *nū,* நகர ஒற்றும் ஊ கார உயிரும் சேர்ந்து பிறக்கும் எழுத்து; the compound of ந் and ஊ.

*[ந் + ஊ – நூ]*

தமிழ் நெடுங்கணக்கில் எட்டாவதாக அமையும் உயிர் மெய்யெழுத்தாகிய நகரத்தின் ஆறாவது எழுத்து.

**நூ**[2] *nū,* பெ. (n.) எள் (சூடா.); sesame.

**தெ.** நூ, நூவு, நுவு, நுவ்வு; **கொலா.** நுவ்வூ; **நா.** நுவ்வ்; **கோண்.** நுநக்.

*[நூல் → நூ. நூல் = எள். எள் மிகச் சிறிய கூலமாதலால், நூ (நூல்) எனப் பெயர் பெற்றது. எள்ளளவும், எள்ளத்தனையும், எட்டுணையும் என்னும் வழக்குகளை நோக்குக. (வே.க.)]*

**நூ**[3] *nū,* பெ. (n.) யானை(அக.நி); elephant.

**நூ**[4] *nū,* பெ. (n.) அணிகலன் (யாழ்.அக.); ornament.

**நூ**[5]**-த்தல்** *nū-,* 4செ.கு.வி.(v.i.) நொதுத்தல்; to turn sour.

**நூக்கம்**[1] *nūkkam,* பெ. (n.) **1.** மரவகை; sissoo wood. **2.** தோதகத்தி; black-wood.

**தெ.** நூக.

*[ஊங்கு → நூங்கு → நூக்கம் = உயர்ந்த மரவகை]*

**நூக்கம்**[2] *nūkkam,* பெ. (n.) உயரம் (அக.நி.); height, elevation.

*[நூங்கு → நூக்கம்]*

**நூக்கமரம்** *nūkkamaram,* பெ. (n.) **1.** மலையாள நாட்டில் வளரும் கருமை மரம்; Malabar black wood cast Indian rose wood-Dalbergia genues. **2.** சீமை நூக்கு; foreign rosewood - Swietence mhogany.

**மறுவ.** நூக்கம், சிசுமரம், பிச்சை, தோதகத்தி, ஈட்டி.

*[நூக்கம் + மரம்]*

இம்மரம் 50 அடி உயரம் வளரும். இதன் இலைகள் இறகைப்போல் இருக்கும். இதன் பூக்கள் சிறியன; மஞ்சள் கலந்த வெண்ணிறம் உடையன. இதன் காய்க்குள் மூன்று விதைகள் இருக்கும். வேனிற் காலத்தில் பூக்கும் தன்மை கொண்டது. மாலைவேளையில் மணம் வீசும் இயல்புடையது. சாலை ஓரங்களில் இம்மரம் வளர்க்கப்படும். இம்மரத்தூளில் எண்ணெய் எடுத்து மருந்தாகப் பயன்படுத்துவர். (சா.அக.)

நூக்கமரம் பனிமலை (இமயமலை) அடிவாரத்திற்குத் தெற்கே இந்தியா முழுவதிலும் காணப்படும் இலையுதிர் மரமாகும். இதன் இலைகள் சிறியன; வேனிற் காலத்தில் இலைகள் உதிரும். நூக்கமரம் மேற்குத் தொடர்ச்சி மலைகளில் 3,500 அடி உயரம் வரை காணப்படுகிறது. இதன் அடிமரம் வளைந்து வளைந்து வளரும் தன்மையுடையது. இம்மரங்கள் கூட்டமாக வளர்வதில்லை. இது ஆழமான வண்டல் மண்ணிலேயே செழித்து வளருமாயினும் பலவகை மண்ணிலும் வளரக் கூடியது. தமிழ்நாட்டில் கோவைப் பகுதியில் இம்மரம் அதிகம் பயிராகிறது. வெளிநாடுகளுக்கு இம்மரம் அதிகமாக

ஏற்றுமதி செய்யப்படுகிறது. இம்மரம் மிகுந்த உறுதியுடையது. நீண்ட நாள் கெடாமல் இருக்கக் கூடியது. செதில் இம்மரத்தை எளிதில் அரிப்பதில்லை. இம்மரம் பளுவும் ஒடியக் கூடியதுமாகையால் கட்டட வேலைக்குப் பயன்படுத்துவதில்லை. இது கருமை நிறமும், வரிக்கோடுகளுடையதாகவும் இருப்பதால் மிசைப் பலகை (மேசை) முதலிய பொருள்கள் செய்யப் பயன் படுகிறது. இதனை மெருகேற்றினால் அழகுடைய தாகக் காணப்படும்

**நூக்கல்[1]** *nūkkal,* பெ. (n.) நெய்வார் கருவியி னொன்று (யாழ்.அக.); a weaver's implement.

*[நூக்கு → நூக்கல்]*

**நூக்கல்[2]** *nūkkal,* பெ. (n.) தள்ளுகை; pushing or thrusting aside. (சா.அக.).

*[நூக்கு[1] → நூக்கல்.]*

**நூக்கி** *nūkki,* வி.எ.(adv.) **1.** சார்த்தி; to shut. "வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து" (திருவிளை.அங்கம். 8). **2.** செலுத்தி; to insert. "ஆறுமேழுமறுபது மைம்பதும் நூறுமாயிரமுங்கணை நூக்கி" (இராமா. நாகபாச. 16). **3.** தள்ளி; to push. "நூக்கி யெறி பொறியும்" (சீவக. நாமக. 72). **4.** முறித்து; to break. (கதி.அக.)

*[நூக்கு → நூக்கி.]*

**நூக்கு[1]–தல்** *nūkku-,* 5செ.குன்றாவி.(v.t.) **1.** முன் தள்ளுதல்; to shove, push, thrust aside. *"நூக்கிப் புறத்திரு போகென்னு மின்னாச் சொல்"* (நாலடி,326). *தள்ளுவதை நூக்குதல் என்பது வடவார்க் காட்டு வழக்கு.* **2.** ஊசலாட்டுதல்; to swing. *"நடலைந் நடுவின் மகளிர் நூக்கப் பரிந்தகாசு"* (சீவக.922). **3.** அசைத்தல்; to shake. *"ஞாழற் படுசினை தோழியர் நூக்க"* (பெருங்.உஞ்சைக். 40:37). **4.** தூண்டுதல்; to impel, incite. *"நூறுவா யெனமாதலி நூக்கினான்"* (கம்பரா. இராவணன்வதை.174). **5.** எறிதல்; to throw, discharge, as a weapon. *'கைப்படையை நூக்கி'* (தொல்.பொருள்.72, உரை,பி.ம்.). **6.** முறித்தல்; to break, cut down. *"ஊழாரத் தோய்கரை நூக்கிப் புனறந்த"* (பரிபா.9:27). **7.** நீக்குதல்; to remove, redress. *"நோவெலா மிவணூக்க வருளினான் மேவி'* (பிரபுலிங். முத்தாயி.7). **8.** கழுவாய் (பரிகாரம்) செய்தல்; to treat, as a patient. *"புண் களுற்றார்க் கிதுமருந்தென்ன நல்லார் இழுது சேர் கவளம் வைத்துப் பதுமுகன் பாவை மார்பின் நெய்க்கிழி பயிலச் சேர்த்தி நுதிமயிர்த் துகில் குப்பாயம் புகுக என நூக்கினானே"* (சீவக.819). **9.** சாத்துதல்; to shut, close, as a door. *"வன்னிலைக் கதவ நூக்கி"* (திருவிளை. அங்கம்.8).

**க.,தெ.** நூகு; **து.** நூகுநி; **குட., கொலா.** நுக்.

*[நூங்கு–தல் → நூக்கு – தல்]*

**நூக்கு[2]** *nūkku,* பெ. (n.) **நூக்கம்[1]** (யாழ்ப்.) பார்க்க; see *nūkkam[1].*

**நூக்கு[3]** *nūkku,* பெ. (n.) **நூக்கம்[2]** பார்க்க; see *nūkkam[2]. "எடுத்தவே யெக்கி நூக்குயர்ப்"* (பரிபா.16:45).

*[நூங்கு → நூக்கு]*

**நூக்கு[4]** *nūkku,* பெ. (n.) **1.** நொய்; crushed rice. **2.** நெல்லின் முனைப் பகுதி; tip of the paddy. (சா.அக.)

**நூக்குணா** *nūkkuṇā,* பெ. (n.) நிலப்பனை (சித்.அக.); moosly root.



**நூக்குவாய்** *nūkku-vāy,* பெ. (n.) தோட்டத்திற் புகவமைத்த சிறுவழி (இ.வ.); a small entrance leading to a garden.

*[நூக்கு + வாய்]*

**நூங்கர்** *nūṅgar,* பெ. (n.) தேவர் (அக.நி.); the Gods, as great.

*[நூங்கு → நூங்கர். நூங்கு = உயர்வு]*

**நூங்கள்** *nūṅgaḷ,* பெ. (n.) முன்னிலைப் பெயராகிய நீங்கள்; you., your.

*[நுங்கள் → நூங்கள்]*

**நூங்கு[1]** *nūṅgu,* பெ. (n.) **1.** பெருமை (அக.நி.); greatness. **2.** மிகுதி(வின்.); abundance, intenseness. **3.** உயர்வு; hight.

*[ஊங்கு → நூங்கு]*

**நூங்கு[2]–தல்** *nūṅgu-,* 5செ.கு.வி. (v.i.) மிகுதல் (வின்.); to be great, intense or abundant, to exceed.

*[ஊங்கு → நூங்கு → நூங்கு–தல்]*

**நூங்கு[3]** *nūṅgu,* பெ. (n.) கடல்வாழ் உயிரி; sea living being. இஃது இறால்போல் தோற்றமளிக்கும். இதனை இறாலுடன் கலப்பதும் உண்டு. இதன் விலை மலிவு. (மீனவ.)



**நூடி** *nūḍi,* பெ. (n.) சிற்றேலம் (மலை.); a species of cardamom.

*[துடி (=ஏலம்) → தூடி → நூடி.]*

**நூதல்** *nūdal,* பெ. (n.) அவிகை (யாழ்.அக.); being extinguished.

*[நுது → நூது → நூதல்]*

**நூதவம்** *nūdavam,* பெ. (n.) சிற்றாமல்லி; narrow leaved jasmine - Jasminum angustifolium. (சா.அக.).

**மறுவ.** காட்டு மல்லிகை.

**✡நூநெய்** *nūney,* பெ. (n.) நல்லெண்ணெய்; sesame oil.

**தெ.** நூனெ.

*[நூ + நெய். நுவ்வு → நூ = எள்]*

தெலுங்கில் 'நூன' என்னுஞ் சொல் எண்ணெய் (எள்+நெய்) எனப்பொருள் படுகிறது. 'நூ' என்னுந் தமிழ்ச் சொல்லுக்கு 'எள்' என்று பொருள். நூ+நெய் (எள்+நெய்) என்னுந் தமிழ்ச் சொல்லே தெலுங்கில் 'நூன' எனத்திரிகிறது. இச்சொல் இன்று வழக்கில் இல்லை.

**நூப்பு** *nūppu,* பெ. (n.) தணிப்பு (யாழ்.அக.); reduction, subduing, abatement.

*[நூக்கு → நூப்பு.]*

ஒ.நோ: "மோப்பக் குழையும்அனிச்சம்" "மோக்கக் குழையும் அனிச்சம்" (காளிங்கர் பாடவேறுபாடு ப் → க்.)

**நூபம்[1]** *nūbam,* பெ. (n.) எருது (அக.நி.); bull, bullock.

**நூபம்[2]** *nūbam,* பெ. (n.) எருக்கு(வின்); madar.

*[நுபம் → நூபம்]*

**நூபுவருத்தி** *nūpu-varutti,* பெ. (n.) ஆமையோடு; shell of tortoise or turtle. (சா.அக.).

*[நுபு → நூபு + வருத்தி]*

சிறுவர்கள் ஆமையைக் காணும்போது கல்லாலோ, கம்பாலோ எறிந்து வருத்துவதால் வருத்தி என்பது ஓட்டைக் குறிக்கும்.

**நூம்** *nūm,* பெ. (n.) முன்னிலைப் பன்மைப் பெயராகிய நீம்; you.

**மரா.** தும்ஹீ.

*[நீம் → நூம்.]*

**நூமுறுக்கி** *nūmuṟukki,* பெ. (n.) முறுக்குதற்குப் பயன்படும் கருவி; an implement with which cords are twined for net.

*[நூல் + முறுக்கி – நூன்முறுக்கி → நூமுறுக்கி.]*

**நூர்[1]–தல்** *nūr-,* 2செ.கு.வி. (v.i.) **1.** அவிதல்; to go out; to be extinguished, as a lamp, to become extinct, as a family. *தீ நூர்ந்து போனது.* **2.** ஆறுதல்; to be appeased or suppressed, as hunger, anger. **3.** பதனழிதல்; to be spoiled; to begin to rot; to grow too soft.

*[நுது → நூர் → நூர்–தல்.]*

**நூர்[2]–த்தல்** *nūr-,* 4செ.குன்றாவி.(v.t.) **1.** அவித்தல்; to put out, quench. *விளக்கை நூர்த்துப் போடு.* **2.** ஆற்றுதல்; to appease or suppress, as hunger, anger.

*[நுது → நூர் → நூர்–த்தல்.]*

**நூல்[1]** *nūl,* பெ. (n.) **1.** பஞ்சிநூல்; yarn, cotton thread, string. *"நூல் விரித் தன்ன கதுப்பினள்"* (புறநா.159). *காந்தியடிகள் இராட்டையால் நூல் நூற்றார். நூல் இல்லாமல் மாலை கோத்தது போல (பழ.). நூல் நூற்கும்– இராட்டை அல்ல; ஆடைநெய்யும் தறியல்ல– அது என்ன? –சிலந்தி. (விடுகதை).* **2.** பூணூல்; sacred thread. *"நூலே கரக முக்கோல் மணையே"* (தொல்.பொருள்.625). **3.** மங்கல நாண்; the cord of the wedding badge. *"தகுமகட் பேசினோன் வீயவே நூல் போன சங்கிலிபால்"* (திருத்.திருவந்.69). **4.** எற்றுநூல் முதலியன; carpender's or mason's line. *"பொல்லா மரத்தின் கனக் கோட்டந் தீர்க்குநூ லஃதேபோல்"* (நன்.25). **5.** பொருத்தனைக்காக தெய்வச் சிலைக்குக் (விக்கிரகம்) கட்டும் நூல் (R.C); string tied round an image in token of a vow. **6.** ஆண்குறியிலுள்ள நரம்பு (யாழ்.அக.); sinew in the private parts of a male. **7.** ஆண்குறி (யாழ்.அக.); male organ.

**ம., க.** நூல்; **தெ., து.** நூலு; **கோத.** நுல்; **துட.** நுசு (nu-s); **குட.** நுலி; **கொலா.** நுவ்; **பர்.** நூல்; **கட.** நூல்; **கோண். நூல்;** **கூ.** நூடு; **குவி.** லூலூ; **குரு.** நோஎநா.

*[நுல் → நூல் = நுண்ணிய இழை.
நுல் = நுண்மை, கூர்மை (வே.க.)]*

நூல் என்பது பருத்தியிலிருந்து பெறப்படும் பஞ்சு இழைகளையோ, பட்டு இழை, ஆட்டு மயிர், சணல் நார், போன்றவற்றையோ முறுக்குவதால் பெறப் படுகிறது. செயற்கை முறையில் தோற்றுவித்த இழைகளை முறுக்கேற்றியும் நூல் செய்கின்றனர்.

**நூல்**[2] *nūl,* பெ. (n.) **1.** வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகளைக் கூறும் நூல் (சாத்திரம்); systematic treatise, science. *"ஒற்றுமுரை சான்ற நூலும்"* (குறள்,581). *நூல் கற்றவனே மேலானவன்* (பழ.). **2.** தோன்றியம் (ஆகமம்); agama. *"உரைநூல் மறை"* (திவ்.இயற்.1:5). **3.** பண்டை நாடகத் தமிழ் நூல்களில் ஒன்று (சிலப்.உரைப்பா.பக்.9); an ancient treatise on drama and dancing. **4.** கலந்தாய்வு (ஆலோசனை); deliberation. *"ஏதில வேதிலார் நூல்"* (குறள்,440); (திவா.).

ம. நூல்; க.,தெ., து. நூலு.

*[நுள் → நூள் → நுவள் → நுவண் + அம் – நுவணம் = நுட்பம், மாவு, கல்வி நூல். நுவணை = நுட்பம், மாவு, கல்வி நூல். நூல் → நுவல்.
நூல் = நுண்ணிய பஞ்சிழை, இழை போல் நீண்டு செல்லும் செய்யுள் அல்லது கல்வி நூல். ஒநோ.
இழை → இழைபு = ஒருவகை நூல்.*
E.yarn, a thread, a sailor's story (spun out to some length). Text = the original words of an author; Lit. 'Something woven' L.textus - texo, to weave. இனி நுவல் → நூல் என்றுமாம். பல் → பன் = சொல்லு, நூலிழு. சொல்லுக்குப் பல் தேவை. *"பல்போனால் சொல் போகும்"* என்பது பழமொழி. பல்லில்லா விடின் சொல் தெளிவாயிராது. பன் → பன்னல் = கல்விநூல், பஞ்சுநூல், பஞ்சு, பருத்தி.

பன்னல் – L.punnus, cotton. பன்னா – It. panno, cloth.

'பன் → பன்னு → பனுவல் = கல்விநூல், பருத்தி நூல். கல்வி நூலுக்கும், பருத்தி நூலுக்கும் நுண்மையிலும் நெடுமையிலும் ஒப்புமையுள்ளது. ஒரு நீண்ட செய்யுள் அல்லது நூல் ஒரு நீண்ட இழை போன்றி ருக்கின்றது. ஒருவன் வாயினின்று தொடர்ந்துவரும் சொல் ஒரு மொத்தைப் பஞ்சினின்று தொடர்ந்து நூற்கும் நூல் போல், அல்லது, ஒரு சிலந்தியின் அல்லது பட்டுப்பூச்சியின் உடம்பினின்று வரும் நூல் போலிருக்கின்றது. நூற்றல் = நூலிழைத்தல். நுவல் = நூலுரை, உரை. பா = நெசவின் நெடுக்கிழை (wrap); செய்யுள் அல்லது செய்யுள் நூல். பா → பாவு → பாவுதல் = பரவுதல், பரப்புதல், நீட்டல்.

பஞ்சி நூற்பாள் பருத்திப் பெண்டு. *"நூல் போறலின் நூல் என்ப; பாவை போல் வாளைப் பாவை என்றது போல. என்னை? நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவல் மகடூஉத் தனது செய்கை நலந் தோன்ற ஓரிழைப் படுத்தலாம் உலகத்து நூல் நூற்றலென்பது. அவ்வாறே பரந்த சொற் பரவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வு மாட்சியின் பிண்டம், படலம், ஒத்துச், சூத்திர மென்னும் யாப்பு நடைபடக் கோத்து நூற்கப் படலி னென்க"* (இறைய.1).

நெயவு நூலுக்கும் அறிவு நூலுக்கும் பலபெயர்கள் பொதுவாக உள்ளன. இரண்டும் 'நூல்' பெயர் பெற்றமைக்குக் கரணியத்தை,

*"பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா – எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு"* (நன்.24).

எனவும்,

*"உரத்தின் வளம்பெருக்கி உள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா – மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூல் அஃதே போல் மாந்தர்
மனக்கோட்டம் தீர்க்குநூல் மாண்பு"* (நன்.25).

எனவும், உன்னித்துக் கூறினார் பவணந்தியார்.

பருத்தி நூலுக்கும் அறிவு நூலுக்கும் பனுவல் என்பது பொதுப்பெயர். இழைபு என்றொரு நூல்வகையின் இலக்கணம் தொல்காப்பியத்தில்,

*“ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது*
*குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து*
*ஓங்கிய மொழியான் ஆங்ஙனம் ஒழுகின்*
*இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்”*
(தொல்.பொருள்.செய்.240).

எனக் கூறப்பட்டுள்ளது. இழைபு என்னும் பெயர் நூலை அல்லது இழைத்தலைக் குறிக்கும் இழை என்னும் சொல்லடியாய்ப் பிறந்ததாகும்.

பா என்பது, நெயவுப்பாவிற்கும் செய்யுட் பாவிற்கும் பொதுப் பெயர். ஆங்கிலத்திலும் நூற் பொருளைக் குறித்தற்கு நெசவுத் தொழிலினின்று text, yarn என்னும் இருசொற்கள் எடுத்தாளப் பெறுகின்றன. (E.text from L.Texre, weave). நூல் மடியைக் குறிக்கும் yarn என்னும் சொல், ஓசுநர் (Sailors) கூறும் கதைக்குப் பொதுப்பெயராகும். அதை Sailor's yarn என்பர்.

இங்ஙனம் நூலும் நெயவும் பற்றிய சொற்கள் அறிவுநூலையும் செய்யுட்பாவையும் குறிக்க வருதலால், நெயவுத் தொழிலுக்கும் செய்யுள் தொழிலுக்கும் யாதேனும் ஒப்புமையுண்மை பெறப்படும்.

முதலாவது இருவகை நூலையும் நோக்கின், அவற்றுக்குப் பொதுவான நுண்மை, நீட்சி, நேர்மை என்னும் மூவியல்புகள் புலனாகும். பஞ்சினால் நெயவு நூலிழைப்பதுபோலச் சொல்லால் அறிவு நூலிழைத்தல் அல்லது சிலந்தி, பட்டுப்பூச்சி முதலியவற்றின் உடம்பினின்று வெளிவரும் நெயவு நூலைப் போலப் புலவனின் உள்ளத்தினின்று அறிவுநூல் வெளிப்படுதல், மற்றுமொரு பொதுத் தன்மையாகும்.

இரண்டாவது இருவகைப் பாவையும் நோக்கின், அவற்றிற்குப் பொதுவான நீட்சி, பரப்பு, இசைப்பு ஆகிய மூவியல்புகள் புலனாகும்.

நூல் என்பது காரணப் பெயர். ஒருவர் பஞ்சினால் நூல் நூற்றல் போல் ஒரு புலவன் சொற்களால் நூல் இயற்றுகிறான். நூலை நூற்பதற்குக் கதிர் கருவியாவது போலப் புலவனுக்கு அவன் அறிவு பயன்படுகிறது. (நன்.பொது.24). இவ்வாறு ஒரு புலவன் செய்த நூல், ஒரு மரத்தை அறுக்கப் புகுமுன் அதன் கோணலைத் தீர்க்கப் பயன்படும் நூல்போலக் கற்போனுக்கு அறிவின் கோட்டத்தை நீக்கப் பயன்படுகிறது. (நன்.பொது.25). எனவே கற்று வல்ல அறிஞனாற் செய்யப் பெறுவதே நூலெனவும், அந்நூல் அறியாமையை நீக்க வல்லது எனவும் கொள்ளலாம். ஒரு புலவனுடைய அறிவாகிய உடம்பை அவன் நூலில் காணலாம். அது அவனுக்குப் புகழுடம்பாக அமைகிறது. நூலைப் படிக்கும் போது நூலாசிரியனையே காண்கிறோம்.

ஒரு நூல் என்பது ஆழ்ந்த கருத்துக்களைத் தெள்ளிய இனிய சொற்களால் அமைத்ததாக இருத்தல் வேண்டும். படிக்குந்தொறும் புதிய கருத்துக்களைத் தோற்றுவிக்கும் நயமுடைய தாக இருக்கவேண்டும். தொல்காப்பியத்தில், *'நூல்'* என்பது முன்னுக்குப் பின் முரணின்றிப் பொருளைத் தொகுத்தும் வகுத்தும் கூறப் பெற்ற தாகவும், உள் நின்றகன்ற உரையொடு பொருந்தி யுமிருக்க வேண்டும் என்றும் (தொல்.பொருள்.478), அது ஒரு பொருளைக் கூறும் சூத்திரமும், இனமான பொருளைத் தொகுக்கும் இயலும், பல பொருட்கும் பொதுவாகிய படலமும் ஆகிய மூன்று உறுப்பினை அடக்கியிருக்கும் எனவும் (தொல். பொருள்.480) நூலின் பொது விலக்கணங் கூறப் பெற்றுள்ளது. மற்றும் பத்துவகைக் குற்றமின்றிப் பத்துவகையழகுகளுடனும், முப்பத்திரண்டு வகை உத்திகளுடனும் நூல் வருமெனத் தொல்காப்பியர் மரபியலிலும் நூலுக்கிலக்கணம் கூறினார். (தொல்.பொருள்.653).

நன்னூலாசிரியர் தொல்காப்பியர் கருத்தைத் தழுவி மேலும் சிறிது விளக்கமாகப், *'பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரமெனும் இரண்டையும் உடையதாய் முதல், வழி, சார்பு எனும் மூவகையுள் ஒன்றாய், அறம், பொருள், இன்பம், வீடு எனும் நால்வகைப் பொருட்பயன் தருவதாய், எழுவகைக் கொள்கை களையும் தழுவி வரும்'* என்றார்

“நூலினியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ- டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
டெண்ணான் குத்தியி னோத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தியாகும் விகற்பநடை பெறுமே” (நன்.4).

**ஏழுவகைக் கொள்கை:** பிறர் நூற் கொள்கையைத் தான் உடன்படல், மறுத்தல், மேற்கொண்டு ஒரு காரணத்தால் மறுத்தல், தன்கொள்கையை ஓரிடத்தில் நிலைநாட்டிப் பின் பலவிடத்தும் அதனைக் காட்டி நிறுத்தல், இருவர் மாறுகொண்ட கருத்தைக் கூறி ஒன்றை உடன்படல், பிறர்நூற் குற்றங்காட்டல், பிறர் கொள்கைக்கு உடன்படாமல் தன் கொள்கையையே வற்புறுத்தல் (நன்.11).

**நூலில் அமையக்கூடாத பத்துக்குற்றம்:** கூறியது கூறல், மாறுகொளக் கூறல், குன்றக்கூறல், மிகைபடக் கூறல், பொருள் இலாதன கூறல், மயங்கக் கூறல், இனிமையல்லாத யாப்புடையதாதல், இழி சொற்களாற் புனைதல், ஆதாரமின்றித்தானே ஒரு பொருளைப் படைத்துக் கூறல், எவ்வகையினும் படிப்போர் மனங் கொள்ளாதவாறு செய்தல் (தொல்.பொருள்.663).

**நூலில் அமைய வேண்டிய பத்தழகு:** சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், படிப்பவர்க் கினிமை, நல்ல சொற்களை யமைத்தல், இனிய ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், பொருள் களை முறையுடன் அமைத்தல், உயர்ந்தோர் வழக்கத்துடன் மாறு படாமை, சிறந்த பொருள் உடைத்தாதல், விளக்கமான காட்டுகள் உடையதாதல் (நன்.13).

முப்பத்திருவகை உத்திகளையும் நன்னூலும் (நன்.14), தொல்காப்பியமும் (தொல். பொருள்.665) கூறுகின்றன.

**நூலில் அமையும் உத்தி முப்பத்திரண்டு:** நுதலிப் புகுதல், ஒத்துமுறை வைப்பு, தொகுத்துச் சுட்டல், வகுத்துக் காட்டல், முடித்துக்காட்டல், முடிவு இடங்கூறல், தான் எடுத்து மொழிதல், பிறன்கோட் கூறல், சொற்பொருள் விரித்தல், தொடர்ச்சொற் புணர்த்தல், இரட்டுற மொழிதல், ஏதுவின் முடித்தல், ஒப்பின் முடித்தல், மாட்டெறிந்து ஒழுகல், இறந்தது விலக்கல், எதிரது போற்றல், முன்மொழிந்துகோடல், பின்னது நிறுத்தல், விகற்பத்தின் முடித்தல், முடிந்தது முடித்தல், உரைத்தும் என்றல், உரைத்தாம் என்றல், ஒருதலை துணிதல், எடுத்துக்காட்டல், எடுத்த மொழியின் எய்த வைத்தல், இன்னது அல்லது இது என மொழிதல், எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல், பிறநூல் முடிந்தது தான் உடன் படுதல், தன்குறி வழக்கம் மிக எடுத்துரைத்தல், சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல், ஒன்றின் முடித்தல், தன் இனம் முடித்தல், அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு முடித்தல் என உத்தி முப்பத்திரண்டு (நன்.14).

இங்குக் கூறிய இலக்கணங்கள் நூல் சிறப்பாக அமைப்பதற்கும், அமையாமைக்கும் அடிப்படையாகக் கூறப்படும் இலக்கணம்.

**நூல்வகை:** நூல் முதல்நூல், வழிநூல் என இருவகைப்படும் என்பர் தொல்காப்பியர். (தொல்.பொருள்.648). 'வினையின் நீங்கிய விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல் நூல்' (தொல். பொருள். 649) என்பர். முதல் நூலைப் பின்பற்றி அந் நூலின் பொருளைத் தொகுத்தேனும், விரித்தேனும், தொகை விரியாகவேனும், மொழி பெயர்த்தேனும் இயற்றுவது வழிநூலாகும் (தொல்.பொருள்.652). நன்னூல் சார்புநூல் என ஒருவகையைச் சொல்லுகிறது. அது முதனூலின் பொருளைச் சிறுபான்மையும் வழிநூலின் பொருளைப் பெரும் பான்மையும் தழுவி அமைப்பதென்பர் நன்னூலார் (நன். 8.). ஆராயின் சார்பு நூலும் வழிநூலிலே அடங்கும். இன்றேல் சார்புநூலைத் தழுவி மற்றொருநூல் எழுதப்படுமேல் அதற்கு என்னபெயர் வைப்பது? ஆகையால் இருவகை நூலே போதுமானது. ஒருவர் எழுதிய நூலை மறுத்தெழுதுவது எதிர்நூல் எனப் பெறும். முதல் நூலுக்கு அகத்தியத்தையும், வழிநூலுக்குத் தொல் காப்பியத்தையும், சார்பு நூலுக்கு நன்னூலையும் சான்றாகக் கொள்ளலாம். மொழிபெயர்ப்பு நூல்களுக்குப் பல தொன்மங்களை (புராணங்களை)ச் சான்றாகக் காட்டலாம்.

**நூல்[3]** *nūl,* பெ. (n.) **1.** மரத்தை அறுக்கும்போது அளவிடும் 24 சதுரவடி; a measure = 24 sq.ft. **2.** ஆய்தவகை; a machine. "*கூர்ந்தரிவ நுண்ணூல்*" (சீவக.104).

*[நூல்[1] → நூல்[3]]*

**நூல்[4]–தல்** *nūl-,* 14செ.கு.வி. (v.i.) சூழ்ச்சி செய்தல்; to make a plot. "*நூற்றுவரை யன்றுமங்க நூற்ற*" (திவ்.திருவாய்.7. 3:10).

**நூல்[5]–தல் (நூற்றல்)** *nūl-,* 9செ.குன்றாவி. (v.t.) நூலிழை யுண்டாக்குதல்; to spin.

*[நுல் → நூல் → நூல் – தல். நுல் = நுண்மை. நுல் → நூல் = நுண்ணிய இழை. நூல் → நூல் – தல் = பஞ் சிழையுண்டாக்குதல் (வே.க.)]*

**நூல்[6]–தல் (நூற்றல்)** *nūl-,* 9செ.குன்றாவி. (v.t.) செய்யுளியற்றுதல்; to compose, as a poem. "*நொய்ய சொன் னூற்கலுற்றேன்*" (கம்பரா.சிறப்.5).

*[நுவல் → நூல் → நூல்–தல். நுவலுதல் = நுண்ணிய அறிவுச் செய்தியைச் சொல்லுதல்.(வே.க.)]*

**நூல்**[7] *nūl,* பெ. (n.) இறந்துபட்ட இசைநூல் களில் ஒன்று; an ancient treatise on music.

> 'நூல்' என்னும் பெயரையுடைய இந்நூல் தமிழில் இறந்துபட்ட இசை நூல்களில் ஒன்று. 'ஆயிரம் நரம்புடையது ஆதியாழாகும்' என்றும், அதன் உறுப்புக்கள் இவையெனவும் 'நூல்' கூறுகிறது என்பர் அடியார்க்கு நல்லார், (சிலப். உரைப்பா. பக்.9)

சென்னைப் பல்கலைக் கழக அகர முதலி, இந்நூலை, '*பழைய நாடகத் தமிழ் நூல்களில் ஒன்று எனக் கூறுகிறது.*' இசை நூல் என்னும் பெயரின் முற்கூறு கரையான் அரிப்பில் விடுபட்டிருக்கலாம். 'தமிழ்நூல்' என்னும் நூலின் அணிந்துரையில் பாவாணர் நூல் என்பது இலக்கணம் பற்றியது என்று விளக்கியுள்ளார்.

**நூல்**[8] *nūl,* பெ. (n.) எள்; gingelly seed. (சா.அக.).

*[நூ → நூல்]*

**நூல்**[9] *nūl,* பெ. (n.) எண்ணுமெண்ணம்; deliberation. "*ஏதிலார் நூல்*" (குறள்,440).

*[நுதலு–தல் → நுதல் ⇒ நூல்]*

**நூல்கண்டு** *nūl-kaṇḍu,* பெ. (n.) நூல் உருண்டை; skein of thread.

*[நூல்[1] + கண்டு. கண்டு = நூற்பந்து]*

**நூல்குழல்** *nūl-kuḻal,* பெ. (n) மரம் முதலிய பொருள்களாலான நூல் சுற்றுவதற்குரிய குழல் (நெசவு); a wooden pipe used for spin of thread.

*[நூல் + குழல்.]*

**நூல்கெடை** *nūl-keḍai,* பெ. (n.) சாயமேற்றிய நூல் தொகுதியைக்காய வைக்கும் மூங்கில் கழி (நெசவு); a bamboo pole, used for thread drying.

*[நூல் + கெடை.]*

**நூல்கேள்–தல் (நூல்கேட்டல்)** *nūl-kēḷ-,* 12செ.கு.வி.(v.i.) பாடங் கேட்டல்; to read a book or learn a science under a teacher.

*[நூல் + கேள்–தல்]*

**நூல்கோல்** *nūl-kōl,* பெ. (n.) அடிப்பகுதி தவிர்த்த மேல்பகுதி முழுமையும் நீண்ட காம்பினை உடைய இலைகளைக் கொண்ட, வெளிர் நிறமான பச்சைக் கிழங்கு; turnip.

**நூல்கோல்கிழங்கு** *nūl-kōl-kiḻaṅgu,* பெ. (n.) **நூல்கோல்** பார்க்க; see *nūl-kōl.*

*[நூல்கோல் + கிழங்கு]*



**நூல்சோர்–த்தல்** *nūl-śōr-,* 3செ.கு.வி. (v.i.) நூலைப் பதனிடுதல் (யாழ்.அக.); to refine a thread.

*[நூல் + சோர்–த்தல்]*

**நூல்தட்டு¹–தல்** *nūl-taṭṭu-,* 5செ.கு.வி. (v.i.) **நூலெற்று–தல்** (இ.வ.) பார்க்க; see *nūl-eṟṟu-*

*[நூல் + தட்டு–தல்]*

**நூல்தட்டு²–தல்** *nūl-taṭṭu-,* 5செ.குன்றாவி. (v.t.) **நூலுதறு–தல்** பார்க்க; see *nūludaṟu-.*

*[நூல் + தட்டு–தல்]*

**நூல்நாக்குப்பூச்சி** *nūl-nākku-p-pūcci,* பெ. (n.) ஒருவகை வயிற்றுப் புழு (M.L.); thread worms.

*[நூல் + நாக்கு + பூச்சி]*

மக்களில் பெரும்பான்மையோர்க்குக் குடலில், உருண்டை வடிவ நீண்ட வெண்ணிறப் புழுக்கள் ஒட்டுண்ணிகளாகப் பிடித்திருப்பதுண்டு. அவை வழுவழுப்பாக, மெல்லியவாக, இருமுனையும் கூரியவாக, இப்பக்கமும் அப்பக்கமும் பாம்புபோல் நெளிவதாக இருக்கும். பெரும்பாலும் அவைகளை மலத்தில் காணலாம். அப்புழுக்களை நாக்குப்பூச்சி, நாகப்பூச்சி, நாக்கப் பாம்பு, நாக்குளப் பாம்பு முதலான பல பெயர்களால் குறிப்பதுண்டு. நாக்குப் பூச்சியைப் போலவே, ஆயினும் அதினும் மிகச் சிறிய மெல்லிய நூலிழைத் துண்டு போன்ற கீரிப்பூச்சியும் குழந்தைகளின் குடலில் இருப்பதுண்டு. 50 வகையான வெவ்வேறு இன நாக்குப்பூச்சிகள் மனிதனின் உடலில் காணப்படுகின்றன. இவற்றில் ஒட்டுண்ணி கள் சிலவே. சில புழுக்களால் கேடு விளை வதில்லை. சில புழுக்களால் எளிய நோய்கள் உண்டாகும். சில புழுக்களால் கொடிய நோய்களும் உண்டாகும்.



நூல்போன்று இருப்பதால் இவை நூல் புழுக்கள் எனப்படும். நூல் என்பதற்குக் கிரேக்க மொழியில் நீமா என்று பெயர். அதனால் இந்தப் புழுத் தொகுதிக்கு 'நீமட்டோடா' என்பது அறிவியல் பெயராகும். சில புழுக்களை மண்ணிலும், சிலவற்றை மனித உடலின் வெவ்வேறு பகுதிகளிலும், சிலவற்றைச் செடிகளிலும் காணலாம். கொக்கிப்புழு, நரம்புச் சிலந்தி, யானைக்கால் புழு, கீரிப்பூச்சி ஆகியவெல்லாம் நூல் புழுக்களே.

**நூல்நிமிண்டு–தல்** *nūl-nimiṇḍu-,* 5செ.கு.வி. (v.i.) 1. துண்டான நூலை இணைத்தல்; to patch up broken threads. 2. பொருத்தமின்றிக் கூறுதல் (வின்.); to talk unconnectedly.

*[நூல் + நிமிண்டு–தல்]*

**நூல்நிலை** *nūl-nilai,* பெ. (n.) **நூல் நிலையம்** பார்க்க; see *nūl-nilaiyam.*

*[நூல் + நிலை]*

**நூல்நிலையம்** *nūl-nilaiyam,* பெ. (n.) நூல்கள் துறை வாரியாகப் பிரிக்கப்பட்டு, எண்கள் இடப்பட்டு அடுக்கப்பட்டுள்ளதும், அங்கேயோ, வீட்டிற்குக் கொண்டு வந்தோ படிப்பதற்கான பொத்தகங்களை யுடையதுமான இடம்; library. ***நூல் நிலையத் தெருவில் என் வீடு உள்ளது.***

*[நூல் + நிலையம்]*

நில் → நிலை = நிற்கை, உறுதி, நிலைமை, தன்மை, தங்குமிடம், இடம், கதவுநிலை, மாடியடுக்கு, மரபு வழியுரிமை, வில்மறவன் நிற்கும் வகை (மடக்கு, மண்டலம், முன்வலம், பின்வலம்), ஓராள் நிற்கக்கூடிய நீராழம், வாழ்க்கை நிலை, குலம், நிலைத்த தொழில், ஒட்டாரம், அமையம், வளர்ச்சிப்படி (stage).

ம. நில; க. நெலெ; தெ. நெலவு.

நிலை → நிலையம் = தங்குமிடம், உறைவிடம், கோயில், தொடர் வண்டி நிற்குமிடம், நிலையாக இருக்குமிடம், நூல்கள் நிலையாக வைக்கப்பட்டிருக்கும் இடம். (நிலை + அம் – நிலையம். அம் – சொல்லாக்கயீறு).

வட மொழியாளர் நிலையம் என்னும் தென் சொல்லை நி + லயம் என்று பகுத்து, ஓரிடத்தொடு ஒன்றிப் போதல் என்று பொருள் கூறி, வட சொல்லாகக் காட்டுவர். அம்முறையையே பின்பற்றிச் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியும் நிலயம் என்னும் தவற்று வடிவையே மேற் கொண்டுள்ளது. (வே.க.)

பொத்தகம் என்பது ஒரு நூலைக் கூறும் ஏட்டுத் தொகுதி அல்லது தாட்கற்றை. பொத்தகக் களஞ்சியம் என்பது இன்று நூல் நிலையம் என வழங்குகிறது.

பல்வேறு நூல்களும், பருவ இதழ்களும், செய்தித் தாள்களும், முறைப்படித் திரட்டி ஓரிடத்தில் வைக்கப்பட்டிருக்கும் அறிவுக் களஞ்சியங்கள் நூல் நிலையம் எனப்படும். பழங் காலத்தில் இந்தியாவில் சமணர்களும், பௌத்தர்களும் கல்வியை வளர்த்து வந்தனர். அவர்கள் தங்கள் பள்ளிகள் என்னும் மடங்களில் ஏட்டுச் சுவடிகள் பல சேர்த்து வைத்திருந்தனர். பின்னர் சிவமடங் களிலும் ஏராளமான சுவடிகள் திரட்டிப் பாதுகாக்கப்பட்டன என்று தெரிகிறது. அரசர்களும் அரண்மனைகளில் நூல்களைச் சேர்த்து வைத்திருந்தனர். தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையம் அண்மைக் காலத்து எடுத்துக் காட்டு.

தஞ்சையில் 17 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய சரசுவதி மகால் நூல் நிலையம் தஞ்சை மன்னர்களால், அதுவும் சிறப்பாக சரபோசி மன்னரால் வளர்க்கப்பட்டது. இதில் தேவ நாகரி, நந்தி நாகரி, தமிழ், காச்மீரம், ஒரியா ஆகிய பலமொழிகளில் 16,000 கையெழுத்துப் படிகளும் 8,000 நூல்களும் உள்ளன.

இந்தியாவிலுள்ள நூல்நிலையங்களுள் கொல்கத்தா தேசிய நூல்நிலையம் தலைமையானது. அதில் 4,52,000 நூல்களும், கொல்கத்தா வடமொழிக் கல்லூரிகளில் 1,652 நூல்களும், 4000 கையெழுத்துப் படிகளும் உள்ளன. கி.பி. 1784–ல் நிறுவிய (*'ஏசியாட்டிக் சொசைட்டி'*) நூல்நிலையத்தில் 35000 அச்சு நூல்களும், 20000 கையெழுத்துப் படிகளும் உள்ளன. புவியியல் அளவை நிலையத்தில் 50000 நூல்களும் உள்ளன. நூல் வெளியிடுவோர் கொல்கத்தா (காளிக்கோட்டம்) தில்லி, சென்னை கன்னிமாரா அகிய மூன்று தேசிய நூலகங்களுக்கு நூல் அனுப்பி அறிவொப்ப (acknowledgement) அட்டைபெற்றால்தான் மாநில நூலக இயக்குநர் கிளை நூலகங்களுக்கு எடுத்துக் கொள்வார்.

மும்பையில் 1804–ல் நிறுவிய (*'ஏசியாட்டிக் சொசைட்டி'*) கிளை நூல் நிலையத்தில் 1,00,000 அச்சு நூல்களும், 2,000 கையெழுத்துப் படிகளும் உள்ளன. 1864–ல் நிறுவப்பட்ட மும்பை பல்கலைக் கழக நூல் நிலையத்தில் 35,000 அச்சு நூல்கள் உள்ளன.

சென்னையில் 1847–ல் நிறுவப்பட்ட அரசாங்கக் கீழ்த்திசை மொழிக் கையெழுத்துச் சுவடி நூல் நிலையம் முதலில் அரசாங்கப் பொருட் காட்சிச் சாலைக் கட்டடத்திலிருந்து, பின்னாப் பல்கலைக் கழக நூல்நிலையக் கட்டடத்திற்கு மாற்றப்பட்டது. இந்நிலையத்துக் கையெழுத்துச் சுவடிகளுள் சில, கூடுமான விளக்கங்களுடன் ஆண்டுதோறும் பதிப்பிக்கப்பட்டு அச்சிடப்படுகின்றன.

சென்னைப் பல்கலைக் கழகக் கட்டடத்தில் அது நிறுவியுள்ள நூல் நிலையத்தில் 1,82,000 நூல்களும் இதழ்களும் உள்ளன.

1896ல் தற்போதைய கட்டடத்திற்கு மாற்றப்பட்ட கன்னிமாரா நூல் நிலையத்தில் ஏறக்குறைய 1,00,000 நூல்களும் இதழ்களும் உள்ளன். இந்நூல் நிலையம் பொதுமக்கள் நூல் நிலையமாக்கப்பட்டு ஒவ்வொரு வெளியீடுகளிலும் ஐந்து படிகள் பெறப்படுகின்றன.

சென்னை அரசாங்கம் சென்னைப் பொது நூல் நிலையங்களின் சட்டத்தை 1948ல் இயற்றி, 1950யில் செயல்முறைக்குக் கொண்டு வந்தது. சட்டப்படி ஒவ்வொரு மாவட்டத்திலும் நூல் நிலையங்கள் நிறுவப் பெற்று, நூல்நிலைய இயக்குநர் பொறுப்பில் இயங்கி வருகிறது.

இந்தியாவிலேயே முதலாவதான குழந்தை நூல் நிலையம் ஒன்று சென்னை கல்வித்துறை இயக்குநர் அலுவலகக் கட்டடத்தில் நிறுவப் பட்டுள்ளது.

*'சென்னை நூல்நிலையச் சங்கம்'* சென்னையில் பல நாட்களாகத் தொண்டாற்றி வருகிறது. நூல்நிலையம் பற்றிய நூல்கள் பலவற்றை இச்சங்கம் வெளி யிட்டிருக்கிறது. 1923ல் அகில இந்திய பொதுமக்கள் நூல்நிலையச் சங்கம் தோன்றி மாநிலச் சங்கங்கள் மூலம் நூல் நிலைய இயக்கத்தைப் பரப்புகிறது. ஆண்டுதோறும் மாநாடுகளும் கூட்டப் படுகின்றன.

மிகப் பழங்காலத்தில் முதன் முதல் எழுந்த நூல் நிலையம் பாபிலோனியாவில் கண்டெடுக்கப் பட்ட களிமண் பலகை (clay tablets) களாலான நூல் நிலையமாகும். இவையே பாபிலோனிய நாகரிக மக்களின் நூல்கள். இவற்றின் காலம் ஏறக்குறைய கி.மு.2000. அசிரிய மன்னர் ஆசூர் பானீ–பால் (Assurbani-pal) (கி.மு.600) என்பவருடைய நூல்நிலையம்

மிகப் பழமையானது. இவர் சேர்த்து வைத்தவற்றுள் 22 களிமண் பலகைகள் இப்போது இலண்டன் நகரத்திலுள்ள பிரிட்டிசு பொருட்காட் சிச்சாலையில் உள்ளன. இவை வரலாறு, வானவியல், கணிதம் போன்ற இக்காலத்து அறிவுத்துறைகள் பற்றியனவாகும்.

பண்டை எகிப்து நாட்டு நூல்நிலையங்களும் மிகப் பழமையானவையே. தீப்சு (Thebes) என்ற நகரிலிருந்த கார்னாக் என்னும் கோயில் நூலகமும், House of Books என்ற பெயருடைய கல்வெட்டும், இட்பூ (Idfu) என்னும் ஊரில் 'பாப் பைரசு அகம்' (The house of Papyrus) என்ற கட்டடமும் தோண்டிக் காணப்பட்டுள்ளன. இந்தக் கட்டடத்தின் கற்சுவர்களில் வரலாறு முதலிய பல்துறை நூல்கள் உள்ளனவாக வெட்டப்பட்டிருக்கின்றன. முதலாம்தாலமி (Ptolemy I) என்னும் கிரேக்க மன்னன் கி.மு.300ல் அலெக்சாந்திரியா நகரில் நிறுவிய இரண்டு நூல்நிலையங்களே, முதன் முதல் நிறுவப்பட்ட நூல்நிலையங்கள் ஆகும். அவற்றில் ஏறக்குறைய 7 இலக்கம் சுவடிகள் இருந்தன. எகிப்தியருக்கும் ரோமானியருக்கும் ஏற்பட்ட போரில் சூலியசீசர் இந்த நூல் நிலையங்களில் ஒரு பகுதியை அழித்து விட்டார் எனக் கூறப்படுகிறது.

தாலமிக்குப் பின் அட்டாலசு (Attalus I) என்பவர் ஆசியாமைனரிலுள்ள பர்கமம் (Pergamum) என்னும் ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினார். இந்த நூல் நிலையத்துக்கு மார்க் ஆண்டனி என்னும் ரோமானிய வீரர் 2 இலக்கம் நூல்கள் அளித்தார். மிகப் புகழ் வாய்ந்த பிளேட்டோ, அரிட்டாட்டில் என்பவர்களிடம் பல சுவடித் தொகுப்புகள் இருந்தன. கிரீசில் இருந்த நகர அரசுகளே முதன் முதலில் பொது மக்களுக்கான நூல் நிலையங்களை நிறுவின.

ரோமாபுரியில் கி.மு.150ல் நூல்நிலையம் முதன் முதல் தோன்றியது. ரோமாபுரியின் புகழ் பெற்ற நூலகமாக '*அல்ப்பியன் நூலகம்*' (Ulpian Library) விளங்கியது. பொதுமக்களுக்கான நூலகங்கள் பெரும்பாலும் கோயில்களில் அமைக்கப்பட்டன. தனி மனிதர்களும் நூல்நிலையங்கள் வைத்திருந்தனர். கி.பி.530ல் இத்தாலியில் ,Monte Cristo Abbey என்ற கோயிலில் முதல் மடத்து நூல்நிலையம் தோற்றுவிக்கப்பட்டது.

இங்கிலாந்தில் முதன் முதல் 596ல் கான்டர்பரி (canterbury) என்ற ஊரில் நூல் நிலையம் தோற்று விக்கப்பட்டது. எருதந்துறையில் (ஆக்சுபோர்டில்) உள்ள புகழ் பெற்ற நூல் நிலையம் (Fransiscan) துறவிகளால் உண்டாக் கப்பட்டது. இந்நூல் நிலையங்கள் சிறியன வாயினும் அரிய நூல்களைப் பாதுகாத்து வருகின்றன.

பிரிட்டிசு பொருட்காட்சிச்சாலை நூல்நிலையம் உலகிலேயே உயரியது. Sloane என்பவரின் நன் கொடையால் 1753 ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. 32,00,000 இலக்கம் அச்சு நூல்களும், 56,000 கையெழுத்துப் படிகளும் கொண்டது. இங்கிலாந்தில் வெளிடப்படும் நூல்கள் ஒவ்வொன்றும் இந்நூல் நிலையத்திற்கு அனுப்பப்படவேண்டும். இந்நூலகப் புத்தகப் பேழைகளை வரிசையாக நிறுத்தினால் 55 கல்தொலைவு நீண்டிருக்குமாம்.

பிரான்சு நாட்டு நூல் நிலையங்களில் மொத்தம் ஏறக்குறைய 3 கோடி நூல்கள் உள்ளனவென்று கணக்கிட்டுள்ளனர். சிறந்த உலக நூல் நிலையங் களுள் ஒன்றான பாரிசு '*பிப்ளியோத்தெக் நாசி யானால்*' (Bibliotheque Nationale) நூல் நிலையத்தில் 44,00,000க்கு மேற்பட்ட அச்சு நூல்களும், 1,22,000 கையெழுத்துப் படிகளும் உள்ளன.

உருசியாவில், உலகிலேயே மிகப் பெரிய நூல் நிலையம் உள்ளது. லெனின் கிரேடு நகர நூல் நிலையத்தில் 45,66,645 அச்சு நூல்களும், 2,40,000 கையெழுத்துப் படிகளும் உள்ளன. மாசுக்கோவில் உள்ள லெனின் நினைவு நூல் நிலையமும், பல்கலைக்கழக நூலகமும் பெரியவை.

சீனாவில் பீக்கின் (Peking) நகர நூல் நிலையம் பெரியது. சப்பான் நாட்டிலும் நூல் நிலைய இயக்கம் மிக முன்னேற்றம் அடைந்துள்ளது. அமெரிக்காவில் நியூயார்க்கு, கார்வர்டு, யேல், கொலம்பியா, காலிபோர்னியா, சிக்காகோ, பென்சில்வேனியா முதலிய இடங்களில் அமைந்துள்ள நூலகங்கள் சிறந்தவை. அமெரிக்கக் காங்கிரசு நூலகம் 1800 ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இங்கு உலகிலேயே வான்னூர்தித்துறை பற்றிய நூல்கள் மிகுதியாக உள்ளன. யாழ்ப்பாணத்தில் ஒரு இலக்கம் நுல்கள்கொண்ட தமிழ் நூலகத்தைச் சிங்களவர் கலவரத்தில் எரித்தது வருந்தத்தக்கது.

**நூல்பிடி–த்தல்** *nūl-piḍi-*, 4செ.கு.வி.(V.i.) சுவரொழுங்கு பார்க்க நூலைப்பிடித்தல் (இ.வ.); to apply plumb-line.

*[நூல் + பிடி –த்தல்]*

**நூல்புடை–த்தல்** *nūl-puḍai-*, 4செ.குன்றாவி. (V.t.) நூலெற்று– பார்க்க; see *nūleṟṟu*, "*நூல் புடைத்தாற்போற் கிடந்த வித்தகஞ்சேர் நுண்வரிகள்*" (சீவக.1044)

*[நூல் + புடை –த்தல்]*

**நூல்போ—தல்** *nūl-pō-,* 8செ.கு.வி. (v.i.) 1. கல்வியிற் றேர்ந்தவனாதல்; to acquire proficiency in learning. '*கணி நூல் போனவன்*' (சீவக.113, உரை). 2. கைம் பெண்ணாதல் (விதவையாதல்); to become widowed. "*நூல்போன சங்கிலிபால்*" (திருத்.திருவந்.9).

*[நூல் + போ—தல்]*

**நூல்போடு¹—தல்** *nūl-pōḍu-,* 19செ.குன்றாவி. (v.t.) நூலெற்று—பார்க்க; see *nūleṟṟu.*

*[நூல் + போடு—தல்]*

**நூல்போடு²—தல்** *nūl-pōḍu-,* 20செ.கு.வி.(v.i.) 1. சரியான முறைமை (நியாயஞ்) செய்தல் (வின்.); to administer strict justice. 2. பூணூல் திருமணஞ் செய்தல் (பிரா.); to invest a person with sacred thread.

*[நூல் + போடு—தல்]*

**நூல்முறுக்கி** *nūl-muṟukki,* பெ. (n.) நூலை முறுக்கி உறுதிப்படுத்தும் கருவி; an instrument used twine.

*[நூல் + முறுக்கி. முறுக்கி = முறுக்கப் பயன்படும் கருவி.]*

**நூல்யாப்பு** *nūl-yāppu,* பெ. (n.) 1. தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழியாக்கம் (மொழிபெயர்ப்பு) என நான்கு வகையாக இயற்றப்படும் நூலினமைப்பு (நன்.50); composition of a treatise, of four kinds viz. toguttal, vrittal, togai-viri, moḻi-y-ākkam. 2. ஒருவகைப் புடைவை (சிலப்.14:108, உரை); a kind of saree.

*[நூல் + யாப்பு]*

**நூல்வல்லோர்** *nūl-vallōr,* பெ. (n.) 1. கல்வியாளர்; scholars, literati. 2. அமைச்சர்கள் (பிங்.); ministers.

*[நூல் + வல்லோர்]*

**நூல்வலை** *nūl-valai,* பெ. (n.) பருத்திநூலால் பின்னப்பட்ட மீன்பிடிவலை; cotton fishing net.

*[நூல் + வலை.]*

*இக்காலத்தில் மீன்பிடிவலை அழுத்தமான நெகிழி (நைலான்)இழையால் அதிகம் பின்னப் படுகிறது. பருத்தி நூலால் பின்னப்படும் வலை குறைந்துவிட்டது.*

**நூல்வழக்கு** *nūl-vaḻakku,* பெ. (n.) 1.செய்யுள் வழக்கு; literary usage. 2. நூல் (சாத்திர)முறை (சீவக.214, உரை); authority of Śāstras.

*[நூல் + வழக்கு]*

**நூல்விடு¹—தல்** *nūl-viḍu,* 20செ.கு.வி. (v.i.) சிலந்தி முதலியன நூற்கூடு கட்டுதல் (யாழ்.அக.); to form or spin cobweb.

*[நூல் + விடு—தல்]*

**நூல்விடு²—தல்** *nūl-viḍu-,* 18செ.குன்றாவி. (v.t.) வானில்தாள் பட்டம் பறக்கும் போது நூல் உராய்வு ஏற்படின் அறாமல் இருப்பதற்கு விரைவாக நூலைவிடுதல்; to let fly the paper kite.

*[நூல் + விடு—தல்.]*

**நூல்விடு³—தல்** *nūl-viḍu-,* 18செ.குன்றாவி. (v.t.) மனநிலையின் ஆழம் பார்த்தல் (இ.வ.); to sound a person's ideas.

*[நூல் + விடு—தல்]*

**நூல்விலக்கு** *nūl-vilakku,* பெ. (n.) ஆடையில் உண்டையிழை இடையிடையே விலகியிருக்கை (இ.வ.) ; thin place in a cloth, the woof not being beaten enough with the comb.

*[நூல் + விலக்கு]*

**நூல்வெண்மாடம்** *nūl-veṇ-māḍam,* பெ. (n.) கூடாரம்; tent. *"நூல்வெண் மாடங் கோலொடு கொளீஇ"* (பெருங்.உஞ்சைக்.57:113).

*[நூல் + வெண்மாடம்]*

**நூலகம்** *nūlagam,* பெ. (n.) **நூல்நிலையம்** பார்க்க; see *nūl-nilaiyam.*

*[நூல் → நூலகம்]*

**நூலகர்** *nūlagar,* பெ. (n.) நூலகத்தைப் பொறுப்பாகக் கவனித்துக் கொள்ளும் அலுவலர்; librarian.

*[நூல் → நூலகர்]*

**நூலகவியல்** *nūlaga-v-iyal,* பெ. (n.) நூல்களை வகைப்படுத்துதல், நூலகம் அமைத்தல் போன்றவற்றைப் பற்றிய துறை; library science.

*[நூலகம் + இயல்]*

**நூலச்சு** *nūl-accu,* பெ. (n.) **1.** நெசவுக் கருவியின் உறுப்பு வகை (இ.வ.); weaver's reed. **2.** கம்பிச் சட்டம் (யாழ்ப்.); goldsmith's mould for drawing wire.

*[நூல் + அச்சு]*

**நூலச்சூகம்** *nūlaccūgam,* பெ. (n.) சின்னம்மான் பச்சரிசி; thyme leaved spurge - Euphorbia thymifolia alias E.macrophylla. (சா.அக.)

**நூலட்டவணை** *nūl-aṭṭavaṇai,* பெ. (n.) நூலின் பட்டியல் (வின்.); contents of a book.

*[நூல் + அட்டவணை]*

**நூலடி** *nūl-aḍi,* பெ. (n.) **1.** தச்சர் மரத்திலிடும் நூற்குறி; mark on a wood made with the carpenter's line. **2.** ஆண்குறியிலிருந்து எருவாய்க் (குதம்)குச் செல்லும் நரம்பு (யாழ்ப்.); line or membrane passing from the private parts of a male to the anus.

*[நூல் + அடி]*

**நூலவையார்** *nūl-avaiyār,* பெ. (n.) அற (நீதி) நூலோதினோர்; persons well-read in ethical and legal treatises. *"நூலவையார் போனீங்க ணோக்குமினே"* (சீவக.1045).

*[நூல் + அவையார்]*

**நூலழகு** *nūl-aḻagu,* பெ.(n.) சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைப்பு, உலகமலையாமை, விழுமியது பயத்தல் விளங்குதாரணத்ததாகுதல் என்னும் பத்து வகை நூல்நயங்கள் (நன்.13); beauties or excellences of a treatise, ten in number, viz. šuruṅga-c-collal, viḷaṅga-vaittal, naviṉṟōrkkiṉimai, naṉ-moḻi-puṇarttal, ōšai-y-uḍaimai, āḻam-uḍaittāḍal, muṟaiyiṉ-vaippu, ulagamalaiyāmai, viḻumiyadu-payattal, viḷaṅgu dāraṇatta-tāgudal.

*[நூல் + அழகு]*

**நூலளவு** *nūl-aḷavu,* பெ. (n.) ஆண் குறியினின்று (இலிங்கத்தினின்று) எருவாய் ((குதம்)குச் செல்லும் நரம்பு நாடி; the artery or vein occupying the prenium between the anus and genital organ of the male. (சா.அக.)

*[நூல் + அளவு. நூல்போன்ற நரம்பு.]*

**நூலறிபுலவர்** *nūl-aṟi-pulavar,* பெ. (n.) அற (நீதி) நூல்களை நன்கு உணர்ந்த கலைஞர், அமைச்சர்; ministers, as versed in the science of polity. "*நூலறி புலவரை நோக்க*" (சிலப்.25:116).

*[நூல் + அறி + புலவர்]*

**நூலறிவு** *nūl-aṟivu,* பெ. (n.) கல்வியறிவு; knowledge gained from books, theoretical knowledge. "*நூறாக் கற்கினு நூலறி வென் செயும்*" (மனோன்.).

*[நூல் + அறிவு]*

**நூலாக்கலிங்கம்** *nūl-ā-k-kaliṅgam,* பெ. (n.) நூற்கப்படாத நூலானியன்ற பட்டாடை; silk cloth, as made of unwoven threads. "*நூலாக்கலிங்கம் வாலரைக் கொளிஇ*" (பதிற்றுப்.12:21).

*[நூல் + ஆ (எ.ம.இ.நி.) + கலிங்கம்]*

**நூலாங்குருத்து** *nūlāṅ-guruttu,* பெ. (n.) குருத்தமரம்; a tree of the Atlantia genus. (சா.அக.).

**நூலாசிரியன்** *nūl-āšriyan,* பெ. (n.) நூலாக்கியோன்; author of a work. "*நூலாசிரியர் கருத்தினை நோக்காது*" (இலக்.கொத்.6).

F. auteur; G. autor; It. autore, autrice.

*[நூல் + ஆசிரியன்]*

ஆசிரியன் இலக்கணம்பற்றி நன்னூல் கூறுவது: நூல் கற்பிக்கும் ஆசிரியனுக்குக் கூறும் இலக்கணம் அனைத்தும் நூலை இயற்றும் ஆசிரியனுக்கும் பொருந்தும். ஆசிரியன் என்பவன் உயர் குடிப் பிறப்பும், உயிரிரக் கமும் கடவுள் வழிபாடுமாகிய இவைகளால் எய்திய மேன்மையும், பல நூல்களைக் கற்றுத்தேர்ந்த பயிற்சியும், நூற்பொருளை மாணாக்கர், மக்கள் எளிதல் உணரும்படி தொகுத்துச் சொல்லும் சொல்வன்மையும், நிலத்தையும், மலையையும், நிறை கோலையும், பூவையும் ஒத்த குணங்களும், உலக நடையை அறியு மறிவும், உயர் குணங்களும் இவைபோல்வன பிறவும் நிறம்பப் பெற்றவன் நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான்; நூலை இயற்றும் ஆசிரியனும் இக்குணங்களை உடையவனாக இருக்கவேண்டியது அவசியம்.

"*குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை*
*கலைபயில் தெளிவு கட்டுரை வண்மை*
*நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்*
*உலகிய லறிவோ டுயர்குண மிணையவும்*
*அமைபவ னூலுரை யாசிரி யன்னே*" (நன்.26)

ஆசிரிய ராகாதவ ரிலக்கணமும் நன்னூலில் கூறப்படுகிறது. (நன்.31).

**நூலாஞ்செடி** *nūlāñ-jeḍi,* பெ. (n.) அசன்னியம்; an unknown plant. (சா.அக.).

**நூலாடை** *nūl-āḍai,* பெ. (n.) வெளவால் போலும் உருவமும் முள்ளும் உள்ள கடல் மீன். (முகவைமீனவ.); a kind of sea fish.

**நூலாதிப்பால்** *nūlādi-p-pāl,* பெ. (n.) காட்டு மாட்டின் பால்; milk of wild cow or buffalo. (சா.அக.).

**நூலாப்பண்ணை** *nūlā-p-paṇṇai,* பெ. (n.) மூங்கில்; bamboo tree, Bambusa arundinacia. (சா.அக.).

*[நூல் + ஆம் + பண்ணை.]*

1. மூங்கிலை உடைத்து நீண்ட பட்டை அல்லது குச்சி யாகச் செய்து படல், கூடை முதலியன செய்யப்பயன்படும் நீண்ட மூங்கில் வகை. 2. நூல் போல் மெல்லிய கழிகளையுடைய மூங்கில்.

**நூலாம்படை¹** *nūlām-paḍai,* பெ. (n.) ஒட்டகம்; camel (சா.அக.).

**நூலாம்படை²** *nūl-ām-paḍai,* பெ. (n.) ஒட்டடை (நெல்லை); spider's network, cobweb.

*[நூல் + ஆம் + படை]*

சுவரில் ஒட்டிக்கொண்டு அடைந் திருப்பதால் இது ஒட்டடை எனப் படுகிறது. சிலந்திப் பூச்சியின் மெல்லிய நூல்போன்ற வலையாலேயே இந்த ஒட்டடை அதிகம் உண்டாகிறது. புகையின் படிமத்தினாலும் திரித்திரியாகச் சிறிய கரிய நூலாகவளரும். ஆகையால் இது நூல் + ஆம் + படை. படை = படரும் தன்மைத்து.

**நூலாம்பூச்சி** *nūl-ām-pūcci,* பெ. (n.) சிலந்திப் பூச்சி (வின்.); spider.

*[நூல் + ஆம் + பூச்சி]*



**நூலாமணக்கு** *nūlāmaṇakku,* பெ.(n.) காட்டாமணக்கு; physic nut - parging nut - Jatropha curcus. (சா.அக.).

*[நூல் + ஆமணக்கு]*

**நூலாமாலை** *nūl-ā-mālai,* பெ. (n.) சூழ்ச்சி, உத்தி (தந்திரம்) (R.); craft, artifice

*[நூல் + ஆ – (எ.ம.இ.நி.) + மாலை]*

**நூலாய்வோர்** *nūl-āyvōr,* பெ. (n.) நூலாராய் வோர் (வின்.); critics, reviewers of books.

*[நூல் + ஆய்வோர்]*

**நூலார்** *nūlār,* பெ. (n.) நூல் பல கற்றோர்; learned persons. *"வடித்த நூலார்"* (நாலடி,163). *'நூலாருள் நூல்வல்லான் ஆகுதல் வேலாருள்' வென்றி வினையுரைப்பான் பண்பு."* (குறள்,683.). *"மொழிந்தார் முதுநூலார் முன்பு"* (சிறுபஞ்.72.).

*[நூல் → நூலார்]*

**நூலாயம்** *nūl-āyam,* பெ. (n.) சிறுவரிவகை; a tax. *'திருமுகபேடிக்கு இவ்வூர் கைக்கோளர் பேரால் நூலாயம்'* (தெ.க.தொ.7:855).

*[நூல் + ஆயம் – நூலாயம் = நூலிழை நெய்யும் கைக்கோளரிடம் பெறும் சிறு வரி]*

**நூலான்** *nūlāṉ,* பெ. (n.) நூலாங்குருத்து பார்க்க; see *nūlāṅ-guruttu.* (சா.அக.)

**நூலான்பிரண்டை** *nūlāṉ-piraṇḍai,* பெ. (n.) புளியம்பிரண்டை; hairy wild vine, Vitis setosa. (சா.அக.)

**நூலான்புடை** *nūlāṉ-puḍai,* பெ. (n.) நூலாம் படை பார்க்க; see *nūlām-paḍai,* (சா.அக.).

*[நூலாம்படை → நூலான்புடை.]*

**நூலான்பூச்சி** *nūlaṉ-pūcci,* பெ. (n.) நூலாம்பூச்சி பார்க்க; see *nūlām-pūcci.* (சா.அக.).

*[நூலாம்பூச்சி → நூலான்பூச்சி.]*

**நூலித்தொடக்கி** *nūli-t-toḍakki,* பெ. (n.) கொப்பூழ்க்கொடி; umbilical cord. (சா.அக.)

**நூலில்லாமாலை** *nūl-illā-mālai,* பெ. (n.) கழுத்தணிவகை (நாஞ்.); a neck, ornament.

*[நூல் + இல் + ஆ (எ.ம.இ.நி.) + மாலை]* நூலில் கோக்கப்படாத கழுத்துமாலை.

**நூலிலை** *nūl-ilai,* பெ. (n.) நெட்டை நாரத்தை (L.); cherry nutmeg.

**நூலிழ—த்தல்** *nūl-iḻa-,* 3செ.கு.வி.(v.i.) கைம்பெண்ணாதல் (விதவையாதல்); to become a widow as losing the wedding string. "*நூற்றுவர்தம் பெண்டிரு மெய்தி நூலிழப்ப*" (திவ்.பெரியதிரு.2.3:6).

*[நூல் + இழ—.த்தல். மங்கல நாண் இழத்தல்]*

**நூலிழந்தாள்** *nūl-iḻandāḷ,* பெ. (n.) கணவனை இழந்த கைம்பெண்; widow.

*[நூல் + இழந்தாள். நூல் = மங்கலநாணில் கோத்த தாலி. தாலியிழந்தவள், கைம்பெண்.]*

**நூலிழை[1]—த்தல்** *nūl-iḻai-,* 4செ.கு.வி.(v.i.) 1. கதிரிலுள்ள நூலையெடுத்துச் சுற்றுதல் (வின்.); to reel yarn; to disentangle yarn from the skein and wind it on the reel; to unwind yarn. "நீல முண்ட நூலிழை வண்ணம்" (பெருங். இலாவாண 9:88). 2. நூல்நூற்றல் (யாழ்.அக.); to spin thread.

*[நூல் + இழை—த்தல்]*

**நூலிழை[2]** *nūl-iḻai,* பெ. (n.) ஒரிழை நூல் (வின்.); single thread.

*[நூல் + இழை]*

**நூலிழைமரம்** *nūl-iḻai-maram,* பெ. (n.) நகுதாளிலை; common cherry nutmeg, Polyaltria cerasolides. (சா.அக.).

*[நூல் + இழை + மரம். நூலிழை தரும் மரம்]*

**நூலிழையில்** *nūl-iḻaiyil,* வி.எ.(adv.) மயிரிழையில்; by a hair's breedth; narrowly. ***ஏதத்திலிருந்து நூலிழையில் உயிர்தப்பினார். கால்பந்தாட்டத்தில் இறுதிநேரத்தில் நூலிழையில் வெற்றி பெற்றான்.***

*[நூல் + இழையில்]*

**நூலுண்டை** *nūl-uṇḍai,* பெ. (n.) 1. நூல் சுற்றிய உண்டை; ball of thread or yarn. 2. நெய்தற்குரிய நூல் சுற்றிய குற்றி (வின்.); weaver's bobbin with the yarn.

**தெ.** நூலுண்ட

*[நூல் + உண்டை]*

**நூலுத்தி** *nūl-utti,* பெ. (n.) உத்தி (தந்திரவுத்தி) (வின்.); devices adopted in standard literary works.

*[நூல் + உத்தி]*

**நூலுதறு—தல்** *nūl-udaṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) நூலிழைகளுக்கிடையே பிணைப்பு ஏற்படாமல் இருக்க நூலைக் கிட்டிமரத்தில் போட்டுப் பிழிந்து உதறுதல் (நெசவு); thread shaking.

**மறுவ.** நூலைத்தட்டுதல், நூல்தட்டுதல்.

*[நூல் + உதறு—.தல்]*

**நூலுரைப்போர்** *nūl-uraippōr,* பெ.(n.) ஆசிரியர்(திவா.); teacher.

*[நூல் + உரைப்போர் = நூலைப்பற்றியும், நூலில் உள்ள கருத்துகளைப் பற்றியும் விரிவாகக் கூறுபவர்.]*

**நூலுறிஞ்சி** *nūl-uriñji,* பெ. (n.) 1. நெய்வோன் (வின்.); weaver, a term of contempt. 2. நெய்வோர் கருவியினொன்று (யாழ்.அக.); a weaving implement.

*[நூல் + உறிஞ்சி]*

**நூலெச்சம்** *nūl-eccam,* பெ. (n.) 1. நூலுரைவகை (நன்.20, மயிலை); a kind of commentary. 2. நூலின் இறுதிப்பகுதி, நூலின் இறுதியில் அமையும் ஒழிபியல், எச்சவியல் போன்றவை; end of the book.

*[நூல் + எச்சம்]*

**நூலெடு-த்தல்** *nūl-edu-,* 4செ.கு.வி.(v.i.) 1. நூலை விலைக்கு வாங்குதல்; to buy thread. 2. நூலைச் சிக்கெடுத்தல்; to disentangle a thread.

*[நூல் + எடு-த்தல்.]*

**நூலெற்று-தல்** *nūl-erru-,* 5செ.குன்றாவி.(v.t.) மரத்தின் நேர்மையறிய நூலால் தெறித்து அடையாளக் குறியிடுதல்; to snap a carpenter's line for marking a board.

*[நூல் + எற்று-தல்.]*

**நூலேணி** *nūl-ēṇi,* பெ.(n.) 1. நூற்கயிற்றாலமைந்த ஏணி; ladder made of threads. *"மென்னூலேணி...கச்சினர்"* (மதுரைக்.640). 2. பாய்மரத்து ஏணி (யாழ்ப்.); shrouds of a vessel. 3. கடல் மீன் வகை; a kind of sea-fish purplish, Lutijanus linealatus.

*[நூல் + ஏணி]*

இரு நீண்ட முறுக்குக் கயிறுகளுக்கு இடையே மரத்துண்டோ முறுக்குக் கயிறோ படிகளாக அமைக்கப்பட்ட ஏணி.



**நூலோட்டு-தல்** *nūl-ōṭṭu-,* 5செ.குன்றாவி.(v.t.) பெருந்தையலிடுதல்; to tack, stitch loosely, baste.

*[நூல் + ஓட்டு-தல்.]*

தைத்தல் என்பது நெருக்கமாகத் துன்னூசி செலுத்தலையும், ஓட்டுதல் என்பது கோணூசியால் கோணி போன்றவற்றை இடைவெளி கொடுத்துச் செலுத்தலையும் குறிக்கும்.

**நூலோடுதல்** *nūl-ōḍutal,* பெ. (n.) நெசவுப்பாவோடுகை (வின்.); warping for the loom.

*[நூல் + ஓடுதல். ஓடுதல் – த.வி. ஓட்டுதல் – பி.வி.]*

**நூலோர்** *nūlōr,* பெ. (n.) 1. நூலாசிரியர்; authors. "*எப்பா னூலோர்க்குந் துணிவு*" (குறள்,533). 2. கற்றோர்; learned men. "*மேலோராயினு நூலோராயினும்*" (சிலப்.11:180). "*பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை*" (குறள்,322). 3. அமைச்சர்கள் (பிங்.); ministers. 4. பார்ப்பார் (திவா.); Brahmins.

*[நூல் → நூலோர்]*

**நூவன்** *nūvaṉ,* பெ.(n.) குறவன் (சிவக்.பிரபந். பக்.279); person belonging to the Kuṟava caste.

*[நுல் → நூல் → நூவன்]*

**நூவு[1]-தல்** *nūvu-,* 5செ.குன்றாவி.(v.t.) 1. நீரை முன்இரைத்துப் பாய்ச்சுதல்; to irrigate, water. "*இடாக் கொண்டு நூவி*" (திருமந்.2878). 2. திரியைத் தூண்டுதல்; raise or draw out the wick so that it may burn bright.

**நூவு[2]** *nūvu,* பெ. (n.) 1. எள்(பிங்.); sesame.

தெ. நூவு

*[நுல்(சிறுமை) → நூல் → நூ→நூவு. நூ = எள். எள் மிகச் சிறிய கூலமாதலால், நூ(நூல்) எனப் பெயர் பெற்றது. எள்ளளவும், எள்ளத்தனையும், எட்டுணையும் என்னும் வழக்குகளை நோக்குக. (வே.க.)]*

**நூவுநெய்** *nūvu-ney,* பெ. (n.) எள்நெய் (நல்லெண்ணெய்); gingelly oil.

தெ. நூனெ

*[நூவு + நெய். நூவு = எள். நூவு நெய் = எள்ளினின்று எடுக்கும் நெய். முதன்முதல் தோன்றியது ஆவின் அல்லது எருமையின் நெய். எள்ளிலிருந்து எடுக்கப்பட்ட நெய் எண்ணெய் (எள்நெய்) எனப்பட்டது. அது பின்னர் மாட்டுநெய் தவிரப் பிறநெய்வகைகட்கெல்லாம் பொதுப் பெயரான பின், நல் என்னும் அடைபெற்றது (வே.க.நுல்[1]). எண்ணெய் பொதுப்பெயர் ஆனதால் எள் எண்ணெய் என்றும் கூறலாம். ஒ.நோ. ஆண் + பிள்ளை → ஆம்பிள பிள்ளை.]*

**நூழி** *nūḻi,* பெ. (n.) *நூழில்* பார்க்க; see *nūḻil.* (சா.அக.).

**நூழில்[1]** *nūḻil,* பெ. (n.) 1. கொன்று குவிக்கை; slaughter, massacre, carnage. "*ஒள்வாள் வீசிய நூழிலும்*" (தொல்.பொருள்.72). 2. வீரனொருவன் பகை மன்னர் படையைக் கொன்று தன் வேலைத் திரித்து ஆடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ.7:15); theme in which a victorious warrior dances waving his spear after having slain his enemies. 3. மிடைந்த போர்; thick of a fight. "*நூழி றலைக்கொள்ள*" (பரிபா.9:49). 4. பொருள் கருதி வழிபறிப்பார் மக்களைக் கொன்று குவிக்குமிடம்; place where footpads heap up the bodies of persons slain by them. "*நூழிலு மிழுக்கும்*" (குறிஞ்சிப்.258). 5. குவிவு (பிங்.); heap, pile. 6. கொடிப் பிணக்கு (குறிஞ்சிப்.258,உரை); thicket of creeprs. 7. கொடி வகை; a fragrant creeper. "*நூழில் விரையாற் கமழும் விறன்மலை*" (பு.வெ.12.பெண்பாற்.16). 8. கொடிக் கொற்றான் (பிங்.); a parasitic leafless plant. 9. குழியுள்ள செக்கு (அக.நி.); oil-press. 10. திரை (அக.நி.); wave, billows. 11. யானை (சூடா.); elephant. 12. துளை; hole, opening. "*செம்ப ணூழில் வீழு முதிரநீர்*" (திருவிளை.பன்றிமுலை.20). 13. குழி; hollow.

*[நுல்(துளை) → நுள் → நுழு → நூழ் → நூழில் (வே.க.)]*

**நூழில்²** *nūḻil,* பெ. (n.) கரந்து செல்லும்வழி; subterranean passage. "*ஈண்டி யோடின நூழில்புக்கேகின சிலவே*" (திருவிளை. பரிநரி.19.).

*[நூழில்¹ → நூழில்²]*

**நூழிலர்** *nūḻilar,* பெ. (n.) செக்கார், வாணியர் (அக.நி.); oil-mongers.

*[நூழில்¹ → நூழிலர். நூழில் = செக்கு, செக்கோட்டி எண்ணெய் எடுக்கும் வாணியன்]*

**நூழிலாட்டு¹–தல்** *nūḻil-āṭṭu-,* 5செ.குன்றாவி. (v.t.) செக்காட்டுவதுபோல் கொன்று குவித்தல்; to slay in heaps. "*நுகம்படக் கடந்து நூழிலாட்டி*" (மலைபடு.87).

*[நூழில்¹ + ஆட்டு–தல், நூழில் = கொல்லுகை, கொன்று குவிக்கை]*

செக்காடும்போது எள்நசுங்கி எண்ணெயும், புண்ணாக்கும் வேறாகிப் போவதுபோல், போரில் உயிரும், மெய்யும் தனித்தனியாக்குதல்.

**நூழிலாட்டு²** *nūḻil-āṭṭu,* பெ. (n.) 1. செக்காட்டுவதுபோல் கொன்று குவிக்கை; killing in heaps, massacre, carnage. "*வேழப் பழனத்து நூழிலாட்டு*" (மதுரைக்.257). "*பாழி பயிற்றி நூழிலாட்டவும்*" (பெருங்.மகத.20:42) 2. வீரனொருவன் தன் மெய்யில் தாக்கிய வேலைப் பறித்துப் பகைவர் மேலோச்சியதைக் கூறும் புறத்துறை (பு.வெ.7:16); theme in which a warrior draws out a spear thrust into his body and attacks his enemy with it.

*[நூழில் = கொல்லுவது, அழிப்பது, கொன்று குவிப்பது. நூழில் + ஆட்டு]*

**நூழை¹** *nūḻai,* பெ. (n.) 1. சிறுவாயில் (திவா.); postern. "*குறும்பி னூழையும்*" (பு.வெ.1:7, கொளு.). "*நுழை நுழையும் பொழுதின் தாழாது*" (நற்.98.). "*மாழை மானோக்கின் மடமொழி நூழை*" (கைந்நிலை,59). 2. துளை; chink, hole, bore. "*நூழைக் கைம்மலைக் கடங்கலுழ் சேனையை*" (கம்பரா.எழுச்.13). 3. பலகணி (திவா.); a kind of lattice-window. 4. குகை; cave. "*புலிசிங்க மொடு கரடிநுழை நூழை கொண்ட கானமலை*" (தாயு.சச்சிதா.6)

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுழை → நூழை]*

**நூழை²** *nūḻai,* பெ.(n.) நுண்மை (பிங்.); acuteness, fineness, minuteness.

*[நுல்(நுண்மை, சிறுமை) → நுள் → நுழு → நுழை → நூழை(வே.க.)]*

**நூழைவாயில்** *nūḻai-vāyil,* பெ.(n.) சுருங்கைவழி (பிங்.); subterranean passage.

ம. நூழ வாயில்

*[நூழை¹ + வாயில்]*

**நூற்கண்டு** *nūṟ-kaṇḍu,* பெ. (n.) நூற்பந்து; ball of thread.

*[நூல் + கண்டு]*

**நூற்கயிறு** *nūṟ-kayiṟu,* பெ. (n.) நூலால் திரிக்கப்பட்ட கயிறு; string.

*[நூல் + கயிறு]*

**நூற்கழி** *nūṟ-kaḻi,* பெ. (n.) 1. நூற்சுருட்டு(வின்.); skein of thread. 2. நூல்சுற்றியகழி; reel of thread. "*செந்நூற் கழி*" (கலித்.103:30).

*[நூல் + கழி]*

**நூற்கிடக்கை** *nūṟ-kiḍakkai,* பெ. (n.) நூல் ஒழுங்கு (சாத்திரவிதி); rules or injunctions of the Šastras. "*அந்தண ருரை நூற்கிடக் கையில்*" (சிலப்.15:70).

*[நூல் + கிடக்கை]*

**நூற்குச்சு** *nūṟ-kuccu,* பெ.(n.) பருத்தி நூலாலான குஞ்சம் (வின்.); tassel of cotton thread.

*[நூல் + குச்சு. குஞ்சம் → குஞ்சு → குச்சு]*

**நூற்குஞ்சம்** *nūr-kuñjam,* பெ. (n.) 1. புடைவை அகலத்தின் அரைக்காற் பாகம்; a measure in the width of cloth = 120 threads of the warp. 2. நூற்சுருள்; skein. 3. பருத்தி நூலாலான குஞ்சம்; tassel of cotton thread.

*[நூல் + குஞ்சம்]*

**நூற்குண்டு** *nūṟ-kuṇḍu,* பெ.(n.) கட்டடம் கட்டும் வேலை போன்றவற்றில் அதன் செங்குத்தான அமைப்பைச் சரிபார்க்கப் பயன்படுத்தும் நீண்ட உறுதியான நூலின் ஒரு முனையில் சிறு மரக்கட்டையும் மறுமுனையில் ஒரு மாழை (உலோகக்) குண்டையும் உடைய தொழில் கருவி; plump-line.

*[நூல் + குண்டு]*

**நூற்கும்கதிர்** *nūṟkum-kadir,* பெ. (n.) பஞ்சில் இருந்து நூல் நூற்கும் கதிர்; spindle.

**நூற்குற்றம்** *nūr-kuṟṟam,* பெ. (n.) குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியது கூறல், மாறு கொளக் கூறல், வழூஉச் சொற் புணர்த்தல், மயங்கவைத்தல், வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல், சென்று தேய்ந்திறுதல், நின்றுபயனின்மை, என்ற பத்துவகைப்பட்ட நூலின்கண் அமையலாகாக் குற்றங்கள் (நன்.12); faults or defects in a treatise, ten in number, viz. kuṉṟa-k-kūṟal, migaipaḍa-k-kūṟal, kūṟiyadu-kūral, māṟukoḷa-k-kūṟal, vaḻūuccoṟ-puṇarttal, mayaṅga-vaittal, veṟṟeṉa-t- toḍuttal, maṟṟoṉṟu-virittal, šeṉṟutēyntṟutal, niṉṟupayaṉ-iṉmai.

"*குன்றக் கூறல் மிகைபடக் கூறல்*
*கூறியது கூறல் மாறுகொளக் கூறல்*
*வழூஉச்சொற் புணர்த்தல் மயங்க வைத்தல்*
*வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று*
*விரித்தல்*
*சென்று தேய்ந் திறுத னின்றுபய னின்மை*
*என்றிவை யீரைங் குற்ற நூற்கே.*" (நன்.12)

*[நூல் + குற்றம்]*

**நூற்சரடு** *nūṟ-caraḍu,* பெ. (n.) நூலானியன்ற சரடு; cotton thread, used for stringing beads, as dist. fr.poṟ-caraḍu.

*[நூல் + சரடு. சரடு = முறுக்குநூல்.]*

**நூற்சார்பு** *nūṟ-cārbu,* பெ. (n.) **1.** நூலொன்றி னாற் கற்பிக்கப்பெறுங் கொள்கை; doctrines inculcated in a treatise. **2.** ஒரு சார் சமயத்தார்க்குச் சிறப்பாகவுரிய கொள்கை முறைகள்; the peculiar doctrines or observances of a sect.

*[நூல் + சார்பு]*

**நூற்சிலும்பை** *nūṟ-cilumbai,* பெ. (n.) புண்களுக்குக் கட்டவுதவும் மென்மையான பஞ்சு; licenscraped into a soft substance - Lint. It is used for dressing wounds and sores. (சா.அக.).

*[நூல் + சிலும்பு + ஐ.]*

**நூற்சுருணை** *nūṟ-curuṇai,* பெ. (n.) *நூற்சுருள்* (உ.வ.) பார்க்க; see *nūṟ-curuḷ.*

*[நூல் + சுருணை. சுருள் → சுருண் → சுருணை.]*

**நூற்சுருள்** *nūṟ-curuḷ,* பெ. (n.) நூற்சுருட்டு (வின்.); skein or dew of thread.

*[நூல் + சுருள். சுருள் + து = சுருட்டு. ஒ.நோ. இருள் + து = இருட்டு]*

**நூற்பகந்தரம்** *nūṟ-pagandaram,* பெ. (n.) பகந்திர நோய்வகை (வின்.); venereal ulcer on the peritoneum.

*[நூல் + பகந்தரம்]*

**நூற்படுகு** *nūṟ-paḍugu,* பெ. (n.) நூற்பாவு (வின்.); weaver's warp.

*[நூல் + படுகு]*

**நூற்படுபுலவன்** *nūṟ-paḍu-pulavaṉ,* பெ. (n.) நூல் இயற்றும் புலவன்; composing as a poem. *"நூற்படு புலவன் சொன் நுண்பொரு ளுழைந்தி யானும்"* (சீவக.554.).

*[நூல் + படு + புலவன். பாடு → படு.]*

**நூற்படை** *nūṟ-paḍai,* பெ. (n.) நூற்பாவு (யாழ்ப்.); warp.

மறுவ. நூற்படுகு

*[நூல் + படை]*

**நூற்பதம்** *nūṟ-badam,* பெ. (n.) மெழுகுபதம்; elastic or wax stage. (சா.அக.).

*[நூல் + பதம்]*

**நூற்பந்து** *nūṟ-pandu,* பெ. (n.) **1.** நூற்சுருட்டு (உ.வ.); ball of thread. **2.** நூலாலான விளை யாட்டுப் பந்து; play-ball made of thread.

*[நூல் + பந்து. பம் + து–பந்து = துள்ளுவது.]*

**நூற்பயன்** *nūṟ-payaṉ,* பெ. (n.) நூலானெய்தும் பயன்பாடு; benifit of treatise. *"அறம்பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே"* (நன்.10.).

*[நூல் + பயன்.]*

**நூற்பழக்கம்** *nūṟ-paḻakkam,* பெ. (n.) கல்விப்பயிற்சி (யாழ்.அக.); book-learning.

*[நூல் + பழக்கம். பழகு → பழக்கம்.]*

**நூற்பா** *nūṟ-pā,* பெ. (n.) **1.** *நூற்பாவகவல்* பார்க்க; see *nūṟ-pā-v-agaval.* *"ஈசுரபாரதி நூற் பாவாற் பாடிய"* (பல்பொருட்சூடாமணி, பாயி.).

2. தறியிற் பிணைக்கும் பாவு; warp, in weaving.

*[நூல் + பா. பாவு → பா.]*

**நூற்பாலை** *nūṟpālai,* பெ. (n.) 1. பஞ்சிலிருந்து நூலை நூற்கும் தொழிற்சாலை; spinning mill. 2. நெசவாலை; weaving mill.

*[நூற்பு + ஆலை]*

**நூற்பாவகவல்** *nūṟ-pā-v-agaval,* பெ. (n.) இலக்கணம் முதலியன அமைதற்குரிய அகவல் வகை (திவா.); a kind of agaval metre, adapted to treatises of instruction.

*[நூற்பா + அகவல்]*

அகவற்பா என்பது மயிலின் ஓசைபோல் ஒலியைத்தரும் பாடல்களை இயற்ற உதவும் யாப்பு வகை. இது ஆசிரியப்பா எனவும் கூறப்படும்.

**நூற்பாவை** *nūṟ-pāvai,* பெ. (n.) நெசவுப் படைமரம் (இ.வ.); beam of a loom.

*[நூல் + பாவை. பாவு + ஐ–பாவை.]*

**நூற்புணர்ப்பு** *nūṟ-puṇarppu,* பெ. (n.) **நூலுத்தி** பார்க்க; see *nūlutti.* ***'அது விரித்துத் தொகுத்த லென்னும் நூற்புணர்ப்புப்பட வைத்தவாறு'*** (தொல்.சொல்.205, இளம்). ***'இது யோக விபாகம் என்னும் நூற் புணர்ப்பு'*** (தொல். சொல்.1, சேனா.).

*[நூல்+ புணர்ப்பு]*

**நூற்புழு** *nūṟ-puḻu,* பெ. (n.) நூலைப் போன்ற புழு; thread worm. (சா.அக.).

*[நூல் + புழு]*



**நூற்புறத்திணை** *nūṟ-puṟattiṇai,* பெ. (n.) தோன்றியத் தாலமைந்த (ஆகமத்தாலமைந்த) துணிபுரை (தொன்.வி.); proof from treatises of established authority.

*[நூல் + புறத்திணை]*

**நூற்பூச்சி** *nūṟpūcci,* பெ. (n.) 1. ஒருவகைக் குடற்பூச்சி; thread worm. 2. சிலந்தி; spider.

*[நூல் + பூச்சி]*

நூலால் (வீடு) கூடுகட்டிக் கொள்ளும் பூச்சி, சிலந்தி.

**நூற்பொருள்** *nūṟ-poruḷ,* பெ. (n.) 1. நூலிற் கூறப்படும் பொருள்; subjects treated of or doctrines inculcated in, a treatise. *"நூற்பொருள் யாதென"* (மணிமே.27:109). 2. நூலட்டவணை; table of contents.

*[நூல் + பொருள்]*

**நூற்றந்தாதி** *nūṟṟandādi,* பெ. (n.) ஈறுமுதலி (அந்தாதி)த் தொடையாகப் பாடப்படும் நூறு வெண்பா அல்லது 100 கலித்துறை கொண்ட சிற்றிலக்கிய வகை (இலக்.வி.842); a poem consisting of hundred veṇbā or kali-t-tuṟai in andādi-t-toḍai.

*[நூறு + அந்தாதி]*

**நூற்றல்[1]** *nūṟṟal,* தொ.பெ.(vbl.n.) செய்யுளி யற்றுதல்; composing as a poem. "*நொய்ய சொன் னூற்க லுற்றேன்*" (கம்பரா.சிறப்.5)

*[நூல்தல் → நூற்றல்]*

**நூற்றல்[2]** *nūṟṟal,* பெ. (n.) **1.** பருத்தி, பட்டு, ஆட்டு மயிர் அல்லது செயற்கை இழைகளை ஒன்றோடொன்று சேர்த்து, முறுக்கு ஏற்றி நூலை உண்டாக்குவது; spining tread. "*நிலவு நூற்றன்ன கவரி*" (கூர்மபு.தக்கவமி.36). **2.** நெரித்துருட்டுவது (கூர்மபு.பதிக.31, உரை); tread with twiste.

*[நுல் → நூல் → நூல்தல் → நூற்றல் = பஞ்சிழை யுண்டாக்குதல் (வே.க.)]*

கலைகள் பலவற்றுள் நூற்றல் ஒன்று. பல ஆண்டுகள் வரை கதிரால் (தக்களி) நூல் நூற்றனர். பின் (இறாற்று+இன்+அம்) இராட்டினத்தால் நூல் நூற்றனர். இம்முறையில் அதிகம் நூல் கிடைக்காததால், எந்திரமுறையில் நூல் நூற்கும் வழியைக் காண முனைந்தனர். 1550ல் நூற்கும் சக்கரம் (spinning wheel) இங்கிலாந்தில் கண்டு பிடிக்கப்பட்டது. 1764ல் நூற்கும் கதிர் (spinning jenny) கண்டு பிடிக்கப்பட்டது. ஒரே நேரத்தில் 16 கதிர்களில் (தக்களி) நூல் நூற்க இந்த எந்திரம் பயன்பட்டது. இந்த முறையில் தடித்த நூலே நூற்க முடிந்தது. மெல்லிய நூல் நூற்க முடியவில்லை. 1769ல் Richar Arkwright என்பவர் நூற்கும் சட்டகம் (spinning frame) கண்டுபிடித்தார். 1779ல் மியூல் நூற்கும் எந்திரம் (Mule spinner) கண்டுபிடித்தார். இதில் 48 கதிர்கள் உண்டு. இதன் மூலம் மெல்லிய நூல் நூற்க முடிந்தது.

**நூற்றாண்டு** *nūṟṟāṇḍu,* பெ. (n.) நூறாண்டுகள் கொண்ட காலவளவு; century. 1900 முதல் 1999 வரை இருபதாம் நூற்றாண்டு என்று கூறப்படும்.

E.siecle; G.jahrhunder; It.secolo.

*[நூறு + ஆண்டு]*

**நூற்றாண்டுமண்டபம்** *nūṟṟāṇḍu-maṇḍabam,* பெ.(n.) ஒரு நிறுவனமோ, ஆட்சியோ நூறு ஆண்டுகள் நிறைவடைந்ததைக் குறிக்கும் வகையில் கட்டப்பட்ட மண்டபம்; centenary hall. *பல்கலைக் கழக நூற்றாண்டு மண்டபத்தில் அமைச்சரவை பதவி ஏற்கிறது.*

*[நூற்றாண்டு + மண்டபம்.]*

**நூற்றாண்டுவிழா** *nūṟṟāṇḍu-viḻā,* பெ. (n.) நூறு ஆண்டுகள் நிறைவடைந்ததைக் குறிக்கும் வகையில் கொண்டாடும் விழா; the centenary. *பாவாணரின் நூற்றாண்டு விழாவில் அவரது நூல்கள் வெளியிடப் பட்டன.*

*[நூறு + ஆண்டு + விழா]*

**நூற்றார்** *nūṟṟār,* பெ. (n.) நெசவு வாரு (நாடா)க்குள் வைக்கும் நூல் சுற்றிய சிறு குச்சி (வின்.); weaver's bobbin.

**ம.** நூல்தார்

*[நூல் + தார்]*

**நூற்றிதழ்த்தாமரை** *nūṟṟidaḻ-t-tāmarai,* பெ. (n.) நூறு இதழ்களையுடைய தாமரைவகை; a kind of lotus having hundred petals. "*நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை நீக்கும்*" (ஐங்குறு.20.2.).

*[நூறு + இதழ் + தாமரை]*

**நூற்றுக்கதிபதி** *nūṟṟukkadipadi,* பெ. (n.) நூறுகாலாள் கொண்ட படைக்குத்தலைவன்; captain of 100 men, centurian.

*[நூறு + கு + அதிபதி – நூற்றுக்கதிபதி]*

**நூற்றுநிறை** *nūṟṟu-niṟai,* பெ. (n.) நூறுபலம் (திவா.); hundred palam.

*[நூறு + நிறை]*

**நூற்றுலாமண்டபம்** *nūṟṟulā-maṇḍabam,* பெ. (n.) நூறடி கொண்ட, உலாவுதற்குரிய, அமுது செய்யும் மண்டபம்; a large dinning-hall which provides for a walking space of 100 ft. "*நுண்டுகிற் றிரைகள் சேர்ந்த நூற்று லாமண்டபம்*" (சீவக.2734).

*[நூறு + உலா + மண்டபம்]*

**நூற்றுவர்** *nūṟṟuvar,* பெ. (n.) குருமரபின் துரியோதனன் முதலானோர்; Kaurava princes, as numbering 100. "*நூற்றுவர்பால்... தூதுநடந்தானை*" (சிலப்.ஆய்ச்.படர்க்கை.3). "*மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனை*" (கலித்.52.). "*நூற்றுவர் தோழியர் போற்றியல் கூற*" (பெருங்.உஞ்சைக்.38:229.).

ம. நூற்றவர்.

*[நூறு → நூற்றுவர்]*

**நூற்றுவரைக்கொல்லி** *nūṟṟuvarai-k-kolli,* பெ. (n.) நூறுபேரை ஒருங்கே கொல்லும் பொறிவகை; a machine capable of killing 100 men at a time. "*நூற்றுவரைக் கொல்லி யோடு நூக்கியெறிபொறியும்*" (சீவக.101).

ம. நூற்றிக்கொல்லி.

*[நூற்றுவர் + கொல்லி. ஒ.நோ. சேர்ந்தாரைச் கொல்லி – தீ.]*

**நூற்றெட்டுபநிடதம்** *nūṟṟeṭṭupaniḍadam,* பெ. (n.) மறைநூலின் (வேதத்தின்) ஒருபகுதியாகிய 108 அறிவுக் (ஞானம்) காண்டம் (உபநிடதம்); the 108 Upanisads.

*[நூறு + எட்டு +* Skt. *உபநிடதம்.]*

மறையின் அறிவுப்பகுதிகள் (உப நிடதங்கள்) 108ம் நான்கு மறைகளிலும் கலந்து காணப்படுகின்றன. முதல் மறையாகிய இருக்கு மறை நூலில் 10ம், இரண்டாம் மறை நூலாகிய யசூரில் 51–ம், மூன்றாவதாகிய சாம மறையில் 16–ம், இறுதி மறைநூலாகிய அதர்வனத்தில் 31–ம் ஆக அமைந்துள்ளது.

**நூற்றைக்கிழங்கு** *nūṟṟai-k-kiḻaṅgu,* பெ. (n.) நூறை 2, (மலைபடு.515, உரை) பார்க்க; see *nūṟai,* 2.

*[நூறை + கிழங்கு – நூற்றைக்கிழங்கு]*

**நூறங்கிழங்கு** *nūṟaṅ-giḻaṅgu,* பெ. (n.) நூறை, 2 (L.) பார்க்க; see *nūṟai,* 2.

ம. நூறந்கிலங்கு.

*[நூறை + கிழங்கு]*

**நூறல்** *nūṟal,* தொ.பெ. (vbl.n) அழித்தல்; to destroy. "*சேனைவேடர் மேலடர்ந்து சீறியம்பு நூறினார்*" (பெரியபு. கண்ண. 78).

*[நுல்(நுண்மை) → நுள் → நுறு → நூறு → நூறல் = பொடியாக்குதல் போல் அழித்தல். (வே.க.)]*

**நூறன்கிழங்கு** *nūṟaṉ-kiḻaṅgu,* பெ. (n.) நூறங்கிழங்கு பார்க்க; see *nūṟaṅ-kiḻaṅgu.* (சா.அக.)

*[நூறங்கிழங்கு → நூறன்கிழங்கு]*

**நூறாண்டுப்போர்** *nūṟāṇḍu-p-pōr,* பெ. (n.) நூறு ஆண்டுகள் நடைபெற்ற போர்; hundred year's war.

*[நூறு + ஆண்டு + போர்]*

கி.பி.1338 முதல் 1453 வரை இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் விட்டுவிட்டு நடை பெற்றபோர். 1328ல்

பிரெஞ்சு மன்னன் நான்காம் சார்லசு ஆண் வாரிசு இல்லாமல் இறந்தார். இங்கிலாந்து மன்னர் மூன்றாம் எட்வர்டு தாம் சார்லசின் சகோதரியின் புதல்வர் என்ற முறையில் உரிமை கொண்டாடினார். ஆனால், பிரஞ்சு நாட்டு மக்கள் வால்வா பிலிப்பைத் தங்கள் அரசனாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். இதனால் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் போர் ஏற்பட்டது. இறுதியில் 1453ல் போர் முடிந்தது. பிரெஞ்சுக்காரர்களே வெற்றி பெற்றனர். இப்போரில் ஆர்க்நகர சோன் (Joan of Arc) என்ற இடையர்குலப் பெண் பிரெஞ்சுப் படைக்குத் தலைமை தாங்கி வெற்றி மேல் வெற்றியைத் தேடித் தந்தாள்.

**நூறாண்டுமூலி** *nūṟāṇḍu-mūli,* பெ. (n.) பசியெடுக்காதிருக்க வேண்டி நூறாண்டுக் கொருமுறை உட்கொள்ளுமோர் மூலிகை; an unknown herb taken by šiddhar once in 100 years to keep them off from hunger. (சா.அக.).

*[நூற்றாண்டு → நூறாண்டு + மூலி.*

*மூலிகை → மூலி–கடைக்குறை.]*

**நூறாண்டுவேம்பு** *nūṟāṇḍu-vēmbu,* பெ. (n.) நூறு ஆண்டு வாழ்ந்த வேப்பமரம்; இதன் பட்டை மருத்துவத்தில் பயன்படுகிறது; margoso tree of 100 years old. Its bark is considered to be a rejuvenating drug. (சா.அக.).

*[நூறாண்டு + வேம்பு]*

**நூறாயிரம்** *nūṟāyiram,* பெ. (n.) ஒரு நூறு ஆயிரம் (இலட்சம்); one hundred thousand, lakh. *"நூறாயிர முன்வரூஉங் காலை"* (தொல்.எழுத்து.471). *"பன்னூறாயிரம் விலங்கின் றொகுதியும்"* (மணிமே. 28:226).

*[நூறு[3] + ஆயிரம்]*

**நூறி** *nūṟi,* கு.வி.எ. (adv.) 1. அறைந்து கொண்டு; to strike, beat. *"முலைபொலியாக முருப்பநூறி"* (புறநா.25). 2. வெட்டி; to cut down. *"அருஞ்சமந் ததைய நூறி"* (புறநா.93.). *"அகப்பா அழிய நூறிச் செம்பியன்"* (நற். 14). *"அம்புடைக் கையர் அரண் பல நூறி"* (அகநா. 69). *"பரவை யெழுச்சிப் பக்கமு முன்னும் வெருவரத் தாக்கி வீழ நூறி"* (பெருங். உஞ்சைக். 48:33, 34).

*[நூறு → நூறி.]*

**நூறிசா** *nūṟišā,* பெ. (n.) சுக்குநாறிப்புல்; nura oil-plant, Andropogon schoenanthus.

**நூறு[1]–தல்** *nūṟu-,* 5செ.குன்றாவி.(v.t.) 1. அழித்தல்; to destroy, kill. *"பழம்பகை தவ நூறுவா யென"* (சீவக.324). *"நுந்தநுந்த முறைமுறை நூறினான்"* (கம்பரா. நாகபாச. 113). 2. அறைதல், அறைந்து கொள்ளுதல்; to strike, beat, as one's breast. *"முலைபொலி யாக முருப்ப நூறி"* (புறநா.25). 3. துணித்தல், வெட்டுதல்; to cut down butcher. *"யானை அருஞ்சமந் ததைய நூறி"* (புறநா.93). 4. நெரித்தல்; to crush. *"கரும்பினைக் கண்டகர நூறி"* (நாலடி,156). 5. தூளாக்குதல், பொடியாக்குதல்; to pulverise, reduce to powder. *"அரண்பல நூறி"* (அகநா.69). 6. இடித்தல் (பு.வெ.6:26,உரை); to demolish. 7. வளைந்து கொள்ளுதல்; to surround. *"நதிவெள்ள நூறுகென"* (தக்கயாகப்.652). 8. துரத்துதல்; to drive-out, expel. *"காரிரு ளிரிய நூறி"* (ஞானா.67).

**தெ.** நூறு; **ம.** நூறு, நூறுக.

**க.** நூறு; **குட.** நூரி; **து.** நுரியுநி;

**கோத.** நுச்; **துட.** நூச்; **கொலா.** நொர்ப்;

**பர்.** நூரகொல்; **கோண்.** நோராநா;

**குவி.** நுய்யிலி; **பிரா.** நுசிங்.

*[நுல்(நுண்மை) → நுள் → நுறு → நூறு → நூறு–தல் = பொடியாக்குதல் போல் அழித்தல் (வே.க.)]*

**நூறு**[2] *nūṟu,* பெ. (n.) 1. இடித்த மா, பொடி, தூள் முதலியன; powder; flour; dust. *"நூறொடு குழீஇயின கூவைவ்"* (மலைபடு.137). 2. சுண்ணாம்பு; lime. *"நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றினா"* (மதுரைக்.401).

**ம.** நூறு; **து.** நூத்ர.

*[நுல் → நுள் → நுறு → நூறு (வே.க.)]*

**நூறு**[3] *nūṟu,* பெ. (n.) நூறு என்ற எண்; hundred. *"நூறென் கிளவி ஒன்று முதல் ஒன்பாற்கு ஈறுசினை ஒழிய இனவொற்று மிகுமே"* (தொல். எழுத்து.472). *"பலவுநூ றடுக்கினை யினைபேங்கி யழுதனை"* (கலித். 122). *"நூறுபத் தடுக்கி எட்டுக் கடை நிறுத்த"* (சிலம்பு. 3). *"பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்"*. (புறநா. 62). *"ஒன்றெய்தி நூறிழுக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்"* (குறள், 932). *நூறு ஆண்டு ஆகிலும் கல்வியை நோக்கு* (பழ.). *நூறு குற்றம் ஆறு பிழை பொறுக்க வேண்டும்* (பழ.). *நூறு நாள் ஓதிஆறுநாள் விடத்தீரும்* (பழ.) *நூற்றுக்குமேல் ஊற்று, ஆயிரத்துக்கு மேல் ஆற்றுப் பெருக்கு* (பழ.). *நூற்றுக்கு ஒரு பேச்சு ஆயிரத்துக்கு ஒரு தலை அசைப்பு* (பழ.). *நூற்றைக் கெடுத்தது குறுணி* (பழ.). *நூறு கிளிகளுக்கு ஒரேவாய் = அது என்ன? – வாழைப்பூ.* (விடுகதை).

**ம., க., தெ.** நூறு; **கோத.** நூர்; **துட.** நூர்; **குட.** நூரி; **து.** நாத; **கோண்.** நூர்.

Skt. satha; Gk. ekaton; L. centum; G.hundert; E. hundred.

*[நுல் → நுள் → நுறு → நூறு. நூறு = பத்தின்பத்து மடங்கைக் குறிக்கும் எண்.]*

நூறு எண்ண முடியாத துகள்களைக் கொண்டிருத் தலால், அதன் பெயர் பத்திற்கு மேற்பட்ட முதற் பேரெண்ணைக் குறித்தது. (வே.க. நுல்[1].)

**நூறுகோடி** *nūṟu-kōḍi,* பெ. (n.) 1. பதினாயிரம் இலக்கம் கொண்ட (இலட்சங்கொண்ட) எண்; one hundred crores = 1000 millions. *"நூறு கோடி பிரமர்க ணொந்தினார்"* (தேவா.1218,3). 2. நூறுமுனைகளையுடை மரக்காழ்க் கூர்ங்கருவி (வச்சிராயுதம்); Indra's thunderbolt, as having hundred points. *"நூறுகோடி யங்கை யேந்தி"* (சேதுபு.சீதை.22).

*[நூறு[3] + கோடி]*

**நூறுபுள்ளி நண்டு** *nūṟu-puḷḷi-naṇḍu,* பெ. (n.) ஒருவகைக் கடல் நண்டு; a kind of sea crab, Neptunus sanguinolentus.

*[நூறு + புள்ளி + நண்டு.]*

**நூறும்புகு–தல்** *nūṟum-pugu-,* 5செ.கு.வி. (v.i.) நூறாண்டு வாழ்தல்; to live a hundred years, used in wishing a person long life. *'நூறும் புகுவா னென்று வாழ்த்தி'* (சீவக.2043,உரை).

*[நூறு + உம் + புகு – நூறும் புகு → நூறும்புகு–தல்.]*

**நூறை** *nūṟai,* பெ. (n.) 1. நான்கடிக்கு மேல் வளர்வதும் பழுப்பு நிறமுள்ளதுமான மலங்குமீன் (திவா.); an eel, brownish upwards of 4ft. in length. *"நூறையும் வராலும்"* (அரிச்.பு.மீட்சி.56). 2. வள்ளிக் கிழங்கு வகை; Fiji yam. *"காஅய்க் கொண்ட நுகமருள் நூறை"* (மலைபடு.515).

**நூன்** *nūṉ,* பெ. (n.) முன்னிலை ஒருமைப் பெயராகிய நீன்; you.

**மரா.** நூன்.

*[நுன் → நூன்]*

திரவிடம்போல அத்துணை மர பியலுறவுறாது செய்மைப்பட்ட பிற மொழிகள்கூட, சில பல தமிழ்ச் சொற்களையும் நெறிமுறைகளையுங் கொண்டிருப் பதுடன், மொழிகட்கெல்லாம் அடிப்படையான சொல்வரிசையைச் சேர்ந்த மூவிடப் பெயர்கட்கும் தமி ழ்ச்சொற்களையே அல்லது அவற்றின் திரிபையே கொண்டுள்ளன. தமிழ் மூவிடப் பெயர்களுள் அல்லது அவற்றின் திரிபுகளுள் ஒன்றேனும் இல்லாத அல்லது வழங்காத மொழியே உலகிலில்லை என்று உறுதியாய்ச் சொல்லலாம்.

எ—கா:

நூன், நூம், நீன், என்பன பழந்தமிழ் முன்னிலைப் பெயர்கள். இவற்றின் னகரவீறு ஒருமையையும் மகரவீறு பன்மையையுங் குறிக்கும். இவற்றுள், நீன் என்னுஞ் சொல் இன்றும் தென்னாட்டு வழக்கிலுள்ளது. நூன் நூம் என்பன இருவகை வழக்கும் அறினும், அவற்றின் வேற்றுமைத் திரிபான நுன் நும் என்னும் அடிகள் இன்றும் செய்யுள் வழக்கிலுள்ளன. நீன் என்னுஞ் சொல்லின் கடைக்குறையான நீ என்பது இருவகை வழக்கிலும் உள்ளது.

நூன் என்பது 'தூ', 'து', 'தௌ', 'த்வம்', என்றும்: நூம் என்பது 'தும்', 'யூ', 'யூயம்' என்றும் ஆரியத்தில் வழங்குகின்றன.

நூன் – நூ – தூ – து – தௌ – த்வம். நூம் – தூம் – தும். ந – த. போலி.

நூம் – யூம் – யூ; யூம் – யூயம். ந – ய, போலி.

நீ என்பது சீன மொழியில் 'நி' எனக் குறுகி வழங்குகின்றது; நிமென் என்பது இதன் பன்மை. பொர்னு என்னும் ஆப்பிரிக்க மொழியில் 'நி' என்பதே முன்னிலை யொருமைப் பெயர்.

சில பழஞ் சித்திய மொழிகளில் நீ என்னும் பெயர் தமிழிற் போன்றே சிறிதும் திரியாமல் வழங்கிவந்தது.

ஆத்திரேலிய மொழிகளின் முன்னிலை யொருமை 'நின்ன', 'ஙின்னி' 'ஙிந்தெ', என்பன: இருமை 'நிவ', 'நுர' என்பன. பன்மை 'நிமெதூ' என்பது.

இங்ஙனமே, ஏனை யிடப்பெயர்களும் இயல்பு வடிவில் அல்லது திரிபுவடிவில் ஏறத்தாழ எல்லா மொழி கட்கும் பொதுவாகவுள்ளன.

**நூன்மடந்தை** *nūṉ-maḍandai,* பெ. (n.) கலைமகள் (சரஸ்வதி) (பிங்.); Šarasvadi, as the Goddess of sciences.

*[நூல் + மடந்தை]*



**நூன்மலைவு** *nūṉ-malaivu,* பெ. (n.) செய்யுட் குற்றங்களுளொன்று; a defect in composition.

*[நூல் + மலைவு]*

**நூன்மாடம்** *nūṉ-māḍam,* பெ. (n.) நூல்வெண் *மாடம்* பார்க்க; see *nūl-veṇmāḍam.* *"தறிமிசைக் கொளீஇய செறிநூன் மாடமொடு"* (பெருங். உஞ்சைக்.57:24).

*[நூல் + மாடம்]*

**நூன்முகம்** *nūṉ-mugam,* பெ. (n.) 1. பாயிரம் (திவா.); preface, introduction. "முகவுரை பதிகமணிந்துரை நூன்முகம் புறவுரை தந்துரை புணைந்துரை பாயிரம்" (நன். 1). 2. நூலின் தொடக்கம்; opening or beginning of a treatise. *"இந்நூன் முகத்து உரைக்கப் படுவதாகிய சிறப்புப் பாயிரம்"* (சி.போ.ப.பக்.35, சுவாமிநா.). 3. நூற்றுறை (யாழ்.அக.); scope or contents of any treatise.

*[நூல் + முகம்]*

**நூன்முடிவு** *nūṉ-muḍivu,* பெ. (n.) 1. நூலின் உட்பகுதியாய் முடியும் உறுப்பு (திவா.); section of a treatise. 2. நூலின் நோக்கம் (வின்.); object of a treatise. 3. நூலின் இறுதி; concluding portion of a work.

*[நூல் + முடிவு]*

**நூனம்**[1] *nuṉam,* பெ. (n.) குறைவு; defect, blemish. *"கவுரிதனை வணங்கிடா நூனத்தாலே"* (அருணகிரிபு. அருந்தவ.).

**நூனம்**[2] *nuṉam,* பெ. (n.) உறுதி; (சூடா.) certainty.

**நூனயம்** *nūṉayam,* பெ. (n.) 1. நூலின் அழகு; excellences of a treatise. 2. கல்விநயம் (வின்.); advantage or pleasure of learning.

*[நூல் + நயம். நயம் = அழகு.]*

**நூனாதிக்கம்** *nūṉādikkam,* பெ. (n.) 1. குறைவு; deficiency. 2. நிறைவு; completion. 3. குறை சொல்லுங் குணம் (வின்); finical criticism.

*[நூனம் + ஆதிக்கம்]*

**நூனாயம்** *nūṉāyam,* பெ. (n.). 1. பிழை; fault. 2. சூது (வின்.); trick.

*[நூனம் = குறைவு, குற்றம். நூனம் + ஆயம்]*

**நூனாழி** *nūṉāḻi* பெ. (n.) நெசவுவாரு (நாடா) (திவா.); weaver's shuttle.

*[நூல் + நாழி]*

**நூனாழிகை** *nūṉāḻigai,* பெ. (n.) நூனாழி (சீவக.3019) பார்க்க; *see nūṉāḻi.*

*[நூல் + நாழிகை. நாழி → நாழிகை]*

**நூனெறி** *nūṉeṟi,* பெ. (n.) நூல் கூறும் வழிகள்; the way of treatise. *"நூனெறி வகையி னோக்கி"* (சீவக.374).

*[நூல் + நெறி]*

**நெ** *ne,* பெ. (n.) தமிழ் நெடுங்கணக்கில் 'ந்' என்னும் மெய்யெழுத்தும், 'எ' என்னும் உயிர் எழுத்தும் சேர்ந்த உயிர் மெய் எழுத்து; the compound of ந் + எ.

*[ந் + எ – நெ]*

தமிழ் நெடுங்கணக்கின் எட்டாவதாகிய நகரஉயிர்மெய் வரிசையில் ஏழாவது எழுத்து.

**நெக்கல்**[1] *nekkal,* பெ. (n.) 1. தளர்ந்த நிலை (வின்.); that which is relaxed. 2. அழுகல் (யாழ்ப்.); anything rotten or decayed. 3. அளிந்த பழம்; over ripe-fruit.

*[நெகு → நெக்கல். நெகிழ்தல் = சுழலுதல், கரைதல், மனமிரங்குதல். ஒ.நோ: நகு → நக்கல்]*

**நெக்கல்**[2] *nekkal,* பெ. (n.) 1. உருகுகை; melt. *"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே"* (திருநாவுக்.தேவாரம்). 2. கரைகை; dissolve.

*[நெகு → நெக்கல்]*

**நெக்கினி** *nekkiṉi,* பெ. (n.) ஒருவகை மரம்; a kind of tree.

**நெக்கு[1]–தல்** *nekku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கிளப்புதல்; to raise a thing by a lever. *பாறையைக் கம்பியால் நெக்கித் தள்ளினான்.* 2. துரத்தியடித்தல்; to chase away in battle. *காவலர்கள் கூட்டத்தைத் தடியால் நெக்கினார்கள்.*

*[எக்கு → நெக்கு → நெக்கு–தல். எக்குதல்= உயர்த்துதல், மேலே செல்ல வீசுதல்.]*

**நெக்கு[2]–தல்** *nekku-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. கூட்டம் நெருக்குதல் (உ.வ.); to press, push. *தொடர்வண்டி பயணச்சீட்டுக்கு மக்கள்கூட்டம் நெக்கியது.* 2. ஏனத்தில் உள்ள நீரை முழுவதுமாக அலசிக் (கோலிக்) கொட்டுதல்; to throw water out of a vessel with spoon, etc.

*[நெருக்கு → நெக்கு → நெக்கு–தல்.]*

**நெக்கு[3]–தல்** *nekku-,* 5செ.கு.வி. (v.i.) தள்ளல், நெருக்குதல்; pressing. (சா.அக.) *விழாமேடையில் இருந்து அவரை நெக்கித் தள்ளிவிட்டனர்.*

*[நெருக்கு → நெக்கு → நெக்கு–தல்.]*

**நெக்கு[4]** *nekku,* பெ. (n.) தள்ளு; push, thrust. *அவனை ஒரு நெக்கு நெக்கினான்* (உ.வ.).

*[நெருக்கு → நெக்கு]*

**நெக்கு[5]** *nekku,* பெ. (n.) 1. நெகிழ்ச்சி (வின்.); being soaked, as the ground after rain; relaxing, dissolving. *இந்த மழையால் வீட்டின் மேல்தளம் நெக்கு விட்டுள்ளது.* 2. உடைந்து விள்ளுகை (யாழ்.அக.); being broken to pieces. *விழா மேடை நெக்கு விட்டுள்ளது.*

*[நெகு → (நெகிழ்) → நெக்கு]*

**நெக்குடை–தல்** *nekkuḍai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. நெகிழ்ந்துருகல்; warning as from love. *நண்பர் கதையைக் கேட்டதும் இவர் நெக்குடைந்துவிட்டார்.* 2. மனமுடைதல்; dejected in mind. (சா.அக.). *துன்பச்செய்தியால் அவர் மனம் நெக்குடைந்து போயிற்று.*

**மறுவ.** நெக்குருகுதல்

*[நெக்கு + உடை – நெக்குடை → நெக்குடை–தல்.]*

**நெக்குண்டி** *nekkuṇḍi,* பெ. (n.) வெண்ணொச்சி; white nochy, Vitex negundo. (சா.அக.).

**நெக்குருகு–தல்** *nekkurugu-,* 5செ.கு.வி. (v.i.) அன்பால் நெஞ்சம் இளகுதல்; to melt, as the heart in love. "*நெஞ்ச நெக்குருகும்*" (திருக்கோ.192). *கடவுள் வணக்கப் பாடலை நெக்குருகப் பாடினார். பாடலைக் கேட்டு நெஞ்சம் நெக்குருகி நின்றார்.*

*[நெகு → நெக்கு + உருகு –தல். நெக்குருகுதல் = மனம் நெகிழ்தல், உருகுதல்.]*

**நெக்குரோதம்** *nekkurōdam,* பெ. (n.) ஆலமரம்; baniyan tree - Ficus bengalensis. (சா.அக.).

**நெக்குவிடு[1]–தல்** *nekku-viḍu-,* 20செ.கு.வி. (v.i.) 1. பிளவுபடுதல்; to be broken, cracked. "*நெட்டிருப்புப் பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின் வேருக்கு நெக்குவிடும்*" (நல்வழி.33). 2. பொருத்துவாய் விடுதல்; to part at the joint, as wood-work.

*[நெகு → நெக்கு + விடு–தல்.]*

**நெக்குவிடு²–தல்** *nekku-viḍu-,* 20செ.கு.வி. (v.i.) காதலால் மனந் தளர்தல்; going or getting dejected as from love. *அவள் சொன்ன சொல்லைக் கேட்டதும் நண்பன் மனம் நெக்குவிட்டுப் போயிற்று.* (சா.அக.).

*[நெக்கு + விடு–தல்.]*

**நெகல்** *negal,* தொ.பெ. (vbl.n.) **1.** பழுத்தல், கனிதல்; ripening. **2.** உடைதல்; breaking, opening. (சா.அக.).

*[நெகு + அல் – நெகல். அல் லீற்றுத் தொழிற்பெயர்]*

**நெகவரை–த்தல்** *nega-v-arai-,* **4** செ.குன்றாவி. (v.t.) மாவாக அரைத்தல்; to grind very fine.

*[நெகு + அரை – நெகவரை → நெகவரை–த்தல்]*

**நெகிடி** *negiḍi,* பெ. (n.) நெருப்புக்குவை; fire lighted to give warmth or keep off wild beasts. "*மதயானை... நெகிடிக்கெனப் பெரிய கட்டை மிகவேந்தி*" (தாயு.மௌனகுரு.7).

**தெ.** நெகடி

*[நெகிழ்² → நெகிடி]*

*பொருட்களை நெகிழவைக்கும் இயல்புடையது நெருப்பு.*

**நெகிழ்¹–தல்** *negiḻ-,* 2செ.கு.வி. (v.i.) **1.** பிணைப்புத் தளர்தல்; to become loose. "*கவவுக்கைந் நெகிழ்ந்தமை போற்றி*" (அகநா.26). "*நெகிழ்ந்து சோர் பூந்துகி ேனாக்கி நோக்கியே*" (சீவக. 1004). *வேட்டி நெகிழ்ந்து விடாதிருக்க வார்ப்பட்டையைக் கட்டிக் கொண்டார். கட்டு நெகிழ்ந்திருந்ததால் மாடு ஓடிவிட்டது.* **2.** நழுவுதல்; to slip off, as a garment. "*எல்வளை நெகிழ்போ டும்மே*" (ஐங்குறு.20). *திருகாணி கழன்று காதிலிருந்து காதணி நெகிழ்ந்து கீழே, விழுந்து விட்டது.* "*கோடீரிலங்குவளை நெகிழ நாடொறும்*" (குறுந். 11.). **3.** நிலைகுலைதல்; to be injured, ruined. "*நாளினு நெகிழ்போடு நலனுட னிலையுமோ*" (கலித்.17). **4.** பூ மலர்தல்; to expand, blossom. "*காவியுங் குவளையு நெகிழ்ந்து*" (சூளா.நாட்.5). **5.** குழைதல் (சூடா.); to become soft and mashy, as overboiled rice; to lack cohesion, as earth wet by rain. **6.** இளகுதல்; to melt. "*சேவடி நோக்கி விரும்பியுண் ணெகிழ*" (கூர்மபு. பிரமவிஷ்ணு.16). **7.** மனமிரங்குதல் (வின்.); to relent, as the heart in pity. *அவரின் கெஞ்சலில் நெகிழ்ந்து உதவி செய்ய வந்தார். எனக்கு யாருமில்லை என்று கூறும்போதே குரல் நெகிழ்ந்துவிட்டது.* **8.** மெலிதல்; to grow lean and weak. "*மென்றோ ணெகிழ விடல்*" (கலித்.86). "*வேய்மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டு*" (அகநா. 1:8). "*நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே*" (அகநா. 82:18). **9.** வெட்டுதல் முதலியவற்றிற்கு ஏற்றதாதல்(வின்.); to give way, yield, as to the axe in cutting. **10.** கண்ணீர் முதலியன பொசிதல் (வின்.); to exude, flow out, as tears from the eyes as milk from the breast. **11.** பொடியாதல் (வின்.); to be reduced to powder.

*[நெகு → நெகிழ் → நெகிழ்–தல்.]*

துன்பத்தால் மனம் நெகிழ்ந்து துயரக்கண்ணீர் வடித்தலும், இன்பத்தால் நெகிழ்ந்து பேரின்பக் (ஆனந்த) கண்ணீர் வடித்தலும் மாந்தர் பண்பு.

**நெகிழ்²–தல்** *negiḻ-,* 2செ.குன்றாவி. (v.t.) நீங்குதல் (வின்.); to forsake.

*[நெகு → நெகிழ் → நெகிழ்–தல்.]*

**நெகிழ்³–த்தல்** *negil-*, 4செ.குன்றாவி. (v.t.) 1. தளர்த்துதல்; to make loose, to relax. "*செறிவளை நெகிழ்த்தோன்*" (ஐங்குறு.199). 2. மலர்த்துதல்; to cause to expand or open, as a blossom. 3. பிரித்தல்; to separate, detach. "*மும்மலங்க ளென்னும் வல்லிய மாமனெ கிழ்த்து*" (மருதூரந்.91). 4. நசுக்குதல் (வின்.); to crush, bruise. 5. எய்தல்; to discharge as an arrow. "*தொடை நெகிழ்த்தலில்*" (கம்பரா.கும்பகர்ணன்.215).

*[நெகு → நெகிழ் → நெகிழ்–தல்.]*

**நெகிழ்கறியமுது** *negil-kari-y-amudu,* பெ. (n.) குழம்பு (மாலியம்); curry broth.

*[நெகிழ் + கறி + அமுது]*

**நெகிழ்ச்சி¹** *negilcci,* பெ. (n.) 1. தளர்ச்சி, தளர்கை(வின்.); loosening, slackening. "*நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த*" (நற். 82:1). 2. மன மிரங்குகை; tenderness of feeling. "*அவன் பக்கலிலே நெகிழ்ச்சி யில்லை*" (ஈடு.9.1:3). ***கணவனின் அன்பான பேச்சைக் கேட்டு மனைவி நெகிழ்ச்சி அடைந்தாள்.***

*[நெகிழ் → நெகிழ்ச்சி.*
*நெகிழ்தல் = தளர்தல்.]*

**நெகிழ்ச்சி²** *negilcci,* பெ. (n.) காதில் வரும் புண்கட்டி (குஞ்சை); abscess in the ear.

*[நெகிழ் → நெகிழ்ச்சி.]*

**நெகிழ்த்து–தல்** *negilttu-,* 5செ.கு.வி. (v.i.) 1. அவிழ்த்தல்; untie, unbind. 2. உருக்கல்; to melt. 3. நீக்கல்; to removal. 4. நசுக்கல்; crush, bruise. 5. பிரித்தல்; detach. 6. மலர்த்தல்; to cause to expand or open as a blossom. 7. ஆடை அணிந்திருப்பதில் அல்லது பிடிப்பில் உள்ள இறுக்கத்தை தளர்த்துதல்; lossen a knot, etc. ***இடுப்பு வார்ப்பட்டையை நெகிழ்த்திவிட்டுக் கொண்டு சாப்பிட்டார்.***

*[நெகிழ் → நெகிழ்த்து → நெகிழ்த்து–தல்.]*

**நெகிழ்ந்துபோ–தல்** *negilndu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) *நெகிழ்தல்* பார்க்க; see *negil-*

*[நெகிழ் → நெகிழ்ந்து + போ–தல்.]*

**நெகிழ்வு** *negilvu,* பெ. (n.) 1. குறைவு; deficiency. 2. தளர்வு; loose. 3. பிரிவு; loosening. 4. மலருகை; unfold. 5. விட்டு நீங்குகை; left.

*[நெகிழ் → நெகிழ்வு.]*

**நெகிழம்¹** *negilam,* பெ. (n.) *நெகிழி¹* (வின்.) பார்க்க; see *negili.*

*[நெகிழ் → நெகிழம்.]*

**†நெகிழம்²** *negilam,* பெ. (n.) நெகிழும் தன்மையுள்ள பொருள்; plastic.

*[நெகிழ் → நெகிழம்.* **படைத்.** பாவாணர்*]*

**நெகிழவரை–த்தல்** *negila-v-arai-,* 4செ.குன்றாவி. (v.t.) நொய்மையாகவும், இளகும் படியாகவும் அரைத்தல்; grinding minutely so as to become loose and soft as medicine. (சா.அக.).

*[நெகிழ் + அரை–த்தல்.]*

**நெகிழவாட்டு–தல்** *negiḻa-v-āṭṭu-,* 5செ.குன்றாவி. (v.t.) *நெகிழவரை–த்தல்* பார்க்க; see negiḻa-v-ari-, (சா.அக.)

*[நெகிழ் + ஆட்டு–தல். ஆட்டுதல் = ஆட்டி அரைத்தல்]*

**நெகிழி**[1] *negiḻi,* பெ. (n.) காற் சிலம்பு(வின்.); tinkling foot-rings.

*[ஞெகிழி → (நெகிழ்) → நெகிழி. ஞெகிழி = சிலம்பு.]*

**நெகிழி**[2] *negiḻi,* பெ. (n.) நெருப்பு (அக.நி.); fire.

*[ஞெகிழி = நெருப்பு. ஞெகிழி → நெகிழி]*

**நெகிழிசை** *negiḻišai,* பெ. (n.) வல்லெழுத்து வராது மாற்றினவெழுத்தி னொன்றான் முடியுஞ் செய்யுள்; a kind of verse. *நெகிழிசை என்பது வல்லினம் விரவாது ஓரினத்தெழுத்தானே நெகிழத் தொடுப்பது* (தண்டி. பொது. 15 உரை).

*[நெகிழ் + இசை]*

எ.டு:

"பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகணபதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே"
(சம்பந்தர்தேவாரம்)

**நெகிழியல்பொருள்** *negiḻ-iyal-poruḷ,* பெ. (n.) நீர்த்தன்மையுடைய பண்டம்; fluid. எ.டு. எண் நெய், வெண் நெய்.

*[நெகிழ் + இயல் + பொருள்.]*

**நெகிழு–தல்** *negiḻu-,* 5செ.கு.வி. (v.i.) *நெகிழ்–தல்* பார்க்க; see *negiḻ-.*

*[நெகிழ் – தல் → நெகிழு–தல்.]*

**நெகிளம்**[1] *negiḷam,* பெ. (n.) *நெகிழி*[1] பார்க்க; see *negiḻi*[1].

*[ஞெகிழம் → நெகிளம்]*

**நெகிளம்**[2] *negiḷam,* பெ. (n.) இரும்பு; iron; soft iron. (சா.அக.).

*[நெகிழ் → நெகிளம் = நெகிழக்கூடிய இரும்பு, தேனிரும்பு.]*

**நெகு–தல்** *negu-,* 6செ.கு.வி. (v.i.) 1. கழலுதல்; to slip off. "*எனவளை நெக விருந்தேனை*" (திவ்.பெரியதி.8.5:9). 2. மனமிரங்குதல்; to relent, as the heart. 3. காதலால் உருகுதல்; to melt. "*என்பு நெகப் பிரிந்தோள்*" (தொல்.பொருள்.114). "*நெகுமன்பில்லை*" (திருவாச. திருச்சதக. 60.). 4. கரைதல்; to become soft, relaxed, loosened, soaked and ready to break. 5. பொடியாதல்(வின்.); to be ground well, macerated. 6. கெடுதல்; to be ruined, scattered, broken. "*மாறு படமலைந் தாய்ப் படை நெக்கது*" (சீவக.426). 7. வருந்துதல்; to suffer, to be distressed. "*இனிச்செயல் யாவதென வுள நெக்கார்*" (காஞ்சிப்பு.கயிலா.30).

**கோத.** நெக்; **தெ.** நெவ்வ

*[நுல் (நோதல்) → நுள் → நொள் → நெள் → நெழு → நெகு → நெகு–தல் (வே.க.)]*

**நெச்சடி** *neccaḍi,* பெ. (n.) *நெச்சி* (சங்.அக.) பார்க்க; see *necci.*

**நெச்சி** *necci,* பெ. (n.) கடுக்காய் (மலை.); gallnut.

**நெசப்பாக்கம்** *neśappākkam,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Kāñjipuram district.

*[நெசவு + பாக்கம். நெசவுத் தொழில் மிகுதியாய் நடைபெறும் ஊர். நெயவு → நெசவு. ஒ.நோ. தோயை → தோசை]*

**நெசவாலை** *neśa-v-ālai,* பெ. (n.) துணி நெய்யும் ஆலை, தொழிற் கூடம்; weaving mill or factory.

*[நெசவு + ஆலை]*

**நெசவாளர்** *neśa-v-āḷar,* பெ. (n.) துணி நெய்பவர்; weaver.

*[நெசவு + ஆளர்.]*

**நெசவாளி** *neśa-v-āḷi,* பெ. (n.) **நெசவாளர்** பார்க்க; see *neśa-v-āḷar.*

*[நெய் → நெயவு → நெசவு. நெசவு + ஆளி. ஆள் + இ]*

**நெசவு** *neśavu,* பெ. (n.) **1.** நெய்தற்றொழில்; weaving, act of weaving. *உழவும் நெசவும் இந்தியாவின் இரு கண்கள். பாய் நெசவு இவ்வூரில் அதிகம்.* **2.** நெசவின் இழை யமைப்பு(வின்.); texture, intertexture, web. *துணியின் நிறமும், நெசவும் அருமையிலும் அருமை.*

*ம.* நெய்க; *க.* நெயி; *தெ.* நேத.

*[நெய் → நெயவு → நெசவு = தறியின் மூலம் நீள வாக்கிலும் குறுக்கு வாக்கிலும் நூலைச் செலுத்தி துணி நெய்யும் தொழில்.]*

**நெசவு :** பயிரிகளின் (தாவரங்களின்) நார்களைப் பின்னி அதை உடைகளாகப் பயன்படுத்தப் புதிய கற்காலத்திலேயே மக்கள் கற்றனர். இதுவே நெசவின் தொடக்கம் எனலாம். பண்டைய எகிப்தியர் நார்நெசவுக் கலையில் வல்லவர்களாக இருந்தனர். கி.மு.2000ல் சீனர்கள் பட்டு நெய்ய வழி கண்டுபிடித்தனர். கிட்டத்தட்ட அதே காலத்தில் பருத்தி நூலைக் கொண்டு துணி நெய்ய இந்தியரும் கற்றனர்.

துணியின் நீள் வாட்டத்தில் ஓடும் நூல், பாவு நூல் (Warp) எனப்படும். குறுக்கு வாட்டத்தில் ஓடும் நூல், ஊடு நூல் (Weft) எனப்படும். பாவு நூலும் ஊடு நூலும் ஒன்றோடொன்று முறைப்படி பின்னுமாறு செய்வது நெசவு ஆகும். துணியை நெய்வதற்குப் பயன்படும் கருவி தறி எனப்படும்.

நூற்ற நூலைக் கொண்டு பாவுபோடுதல் நெசவில் முதற்படியாகும். கைத்தறி நெசவு முறையில், பாவுக்குப் பசைபோடுவது (sizing) உட்படப் பாவு போடுதல் கையினாலேயே செய்யப்படும். நெய்யும் போது நூல் அறாமல் இருக்கச் செய்யவே பசை போடுகிறார்கள். பாவுபோட, எந்திரங்களும் இருக்கின்றன. இழைகளை முறுக்கேற்றி, ஈறிழை நூலாக்கிய பின் அந்நூலைக் கொண்டு பாவுபோட்டால் பசைபோட வேண்டியதில்லை. ஊடு நூலைத் தார்க்குச்சியில் திட்டமான அளவு 'கண்டு' கண்டாகச் சுற்றி ஓடங்களில் (Shuttle) பயன்படுத்துவர்.

நெசவில் மூன்று வினைகள் முதன்மை யானவை. கையினாலோ, எந்திரத்தாலோ செய்த பாவு நூலைத் தறியிலேற்றிப் பாவு நூல் முனைகளை யகற்றுவதால் உண்டாகும் கூடு (shed) வழியே ஊடு நூல் உள்ள ஓடத்தை ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் செலுத்தி, இடையில் கூட்டிலகப்பட்ட ஊடு நூலைப் படத்தால் அடித்து நெசவு நெய்வர். இவ்வாறு ஊடு நூலை ஒவ்வொன்றாகச் செலுத்தி, நன்கு அடித்து நெருக்கமாக நெய்தால் நல்ல துணி கிடைக்கும்.

கைத்தறியில் மேசைத்தறி, குழித்தறி எனப் பலவகையுண்டு. ஓடத்தை கையினால் வீசுவதற்குப் பதிலாகக் கையினால் ஒரு கயிற்றைப் பிடித்திழுத்தால் ஓடம் தானாகவே ஒருபுறமிருந்து மறுபுறம் பறந்து செல்லுமாறு அமைத்துள்ளனர். இவ்வகை ஓடம் கண்டு பிடிக்கப்பட்டுப் பயனுக்கு வந்ததால் அகலமான துணி நெய்யவும், கைத்தறியில் வேகமாக நெசவு நெய்து துணிகளை உருவாக்கவும் முடிந்தது. "உடை பெயர்த் துடுத்தல்" என்பது தொல்காப்பியம் (மெய்.14). பருத்தி நெசவு முதன்முதல் இந்தியாவில்தான் செய்யப்பட்ட தென்றும், அங்கிருந்தே மேனாடுகளுக்குப் பரவிய தென்றும் வயவர் சாண்மார்சல் கூறுகிறார்

பண்டைக்கால வரலாற்றாசிரிய ரெல்லாம். மேனாடுகள் இந்தியாவினின்றும் இறக்குமதி செய்த

பொருள்களுள், துணி ஒன்றாகத் தவறாது குறிப்பிடுகின்றனர். 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதிவரை, இந்தியா வினின்றே மேனாடு கட்குத் துணி ஏற்றுமதியானமை, பின்வருங் குறிப் பினாலறியலாம்.

"தற்கால இந்தியாவின் வறுமைக்கு மற்றொரு பெருங்காரணம், ஐரோப்பாவில் பொறிவினைத் தோற்றத்தினாலும், திருந்திய முறைச் செய்பொருள் வினையின் பரவலினாலும் ஏற்பட்ட கைத்தொழில் தேவைக்குறைவே. ஐரோப்பா, இந்தியரின் சொந்தத் துறைகளில், இன்னும், எண்ணுக்கெட்டாத தொன்று தொட்டு எவற்றுக்கு அவர்களைச் சார்ந்திருந்தோமோ அவையும், அவர்களுக்கே விதப்பா யுரியவுமான கைத்தொழில்களிலும் செய்பொருள் வினைகளிலும், அவர்களை வெல்லக் கற்றுக் கொண்டதினால், உண்மையில் இனி யொருபோதும் எதற்கும் இந்தியாவைச் சார்ந்திருப்பதில்லை. உண்மையில் கருமங்கள் (காரியங்கள்) தலைகீழாய் மாறிவிட்டன. இவ்வெளிப்பாடு இந்தியாவை முற்றிலும் கெடுத்துவிடுவதாக அச்சுறுத்துகின்றது. ஐரோப்பாவிற்குத் திரும்புவதற்குச் சற்று முன்பே, கைத்தொழில் செய்யும் கூற்றங்களிற் சிலவற்றினூடு வழிச் சென்றேன். அங்குப் பரவியிருந்த பாழ்நிலைக்கு ஏதும் ஒப்பாகாது. வேலையறை களெல்லாம் சாத்தப்பட்டிருந்தன. அங்கே வாழும் இலக்கக்கணக்கான நெசவுத்தொழின் மக்கள் பசியால் மடிந்து கொண்டிருந்தனர். நாட்டிலுள்ள முன்றவற்றெண்ணம் (prejudice) பற்றி, அவர்கள் அவமானப்பட்டன்றிப் பிற தொழிலையும் மேற்கொள்ள முடியாது. முந்திய காலத்தில் நூல்நூற்றுத் தங்கள் குடும்பத்தைக் காத்து வந்த, கணக்கற்ற கைம்பெண்களும் பிற பெண்டிரும் வேலையிழந்து பிழைப்பற்றிருந்ததைக் கண்டேன். யான் எங்குச் சென்றாலும் ஒரே துன்பத்தோற்றம் எனக்கு எதிரே நின்றது'' என்று 18ஆம் நூற்றாண்டில் மைசூர் நாட்டில் விடையூழியம் செய்த அப்பே டூபாய்ஸ் (Abbe Dubois) கூறுகின்றார். (Hindu Manners, Customs and Ceremonies, Ch. VI). கிரேக்க நாட்டு அறிஞர்கள் தமிழ்நாட்டினின்று மெல்லிய துணிகள் கணையாழிக்குள் திணிக்கப்பட்டுப் பெரு வாரியாக வருவதைத் தம் நாட்டு அரண்மனை மகளிர் வாங்குவதாகக் குறை கூறினார்களாம். பண்டைக் காலத்திற் பெண்டிர் நூல் நூற்றமையை நக்கீரர், கபிலர், பவணந்தி முதலியோருங் கூறியுள்ளனர். 'பருத்திப் பெண்டு' என்று புறநானூறு (125, 326) கூறும்.

*"நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்*
*பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து*
*நறுமடி செறிந்த வறுவை வீதியும்"*

(சிலப்.14:205–7)

என்று இளங்கோவடிகள் கூறுவதால், பண்டைத் தமிழர் நெசவின் பெருமை விளங்கும்.

*"மயிரினும்"* என்பதற்கு *"எலிமயிரினாலும்"* என்று பொருள் கூறியுள்ளார் அடியார்க்கு நல்லார். மயிர் நிறைந்த ஒருவகை மலையெலி பண்டைத் தமிழ் நாட்டிலிருந்த தென்பதும், அதன் மயிரால் சிறந்த கம்பளம் நெய்யப்பட்ட தென்பதும்.

*"புகழ்வரைச் சென்னிமேற் பூசையிற்*
*பெரியன*
*பவளமே யனையன பன்மயிர்ப் பேரெலி"*
*(1898)*

*"செந்நெ ருப்புணுஞ் செவ்வெ லிம்மயி*
*ரந்நெ ருப்பள வாய்பொற் கம்பலம்"* (2686)

என்று சிந்தாமணி கூறுவதா லறியப்படும். பலவகைத் துணிகள் பண்டைத் தமிழ்நாட்டில் நெய்யப்பட்டமை,

"துகில் (ஆடை): கோசிகம், பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர்க்காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வண்ணடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறஞ்சி, வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப்பொத்தி" என 36 வகையென்று அடியார்க்குநல்லார் (சிலப். 14:108) கூறுவதினின் றறியலாம்.

*"ஆவி யன்ன வவிர்நூற் கலிங்கம்"* (பெரும்பாண்.469) என்பதினாலும், பாலாடைக்கும் பஞ்சாடைக்கும் ஆடையென்னும் பொதுப்பெயர் இருந்த லாலும், பாம்பு கழற்றிய மீந்தோல் சட்டையெனப் படுதலாலும், இக்காலத்திற் சூழ்ச்சியப் பொறியால் நெய்யும் நொய்ய ஆடை வகைகள் போன்றே, அக்காலத்திற் கைத்தறியால் தமிழர் நெய்து வந்தனர் என்பதறியப்படும். நெசவுபற்றிச் சில தமிழ்ச் சொற்கள் மேலையாரிய மொழிகளில் வழங்குகின்றன.

பன்னல் = பருத்தி. L. *punnus*, cotton, It. *panno*, cloth. கொட்டை = பஞ்சு. Ar. qutun, It. cotone, Fr. coton, E. cotton. கொட்டை நூற்றல் என்னும் வழக்கை நோக்குக. பருத்திக் காயினின்று கொட்டுவது கொட்டை. வேட்டி = ஆடை. L. vestis, Skt. வஸ்த்ர, E. vesture.

வெட்டுவது வேட்டி. ஒ.நோ: துணிப்பது துணி. அறுப்பது அறுவை. வேட்டியை வேஷ்டி என்று தமிழரே தவறாய் வழங்குகின்றனர். இது இன்னும் வடமொழிக்குட் புகவில்லை.

"*தடுக்கப் பழையவொரு வேட்டி யுண்டு*" என்று பட்டினத்தார் கூறுதல் காண்க. (திருத்தில்லை.17).

சேலை = (சீலை) நீண்ட அல்லது அகன்ற துணி. A.S. segel, E.Sail.

தச்சு = L. *texo*, E.*texture*, anything woven. தை + சு – தைச்சு – தச்சு. தச்சு = தைப்பு. தச்சு என்னும் பெயர் சரியானபடி நெசவுக் குரியதேனும், மரங்கொல்வேலைக்கு வழங்கி வருகின்றது. அதிலும் தைப்புத் தொழிலுள்ளமையின், வண்டியைத் தைக்க வேண்டும் என்று தச்சர் கூறும் வழக்கை நோக்குக. தைத்தல் பல வுறுப்புகளை ஒன்றாயிணைத்தல். நெசவில் நூல்கள் ஒன்றாயிணைக்கப்படலும், தச்சில் வண்டியாயின் குறடு, ஆரை, சூட்டு என்னும் உறுப்புகளும், பெட்டி நாற்காலியாயின் பலகைகளும் கால்களும் ஒன்றாயிணைக் கப்படலும் காண்க.

**நெசவுக்கலை** *nešavu-k-kalai*, பெ. (n.) பண்டைய கலைகளுள் ஒன்றான நெசவு; kind of ancient art weaving.

*[நெசவு + கலை]*

குளிர், வெப்பம், வெயில் முதலிய வற்றிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள மனிதன் விலங்குகளின் தோலை ஆடையாகப் பழங்காலத்தில் அணிந்தான். பின்னர் இலைகளையும், புல்லையும், நார்களையும் பின்னி ஆடையாகப் பயன்படுத்தக் கற்றான். இதுவே நெசவுக்கலையின் தொடக்கம் ஆகும்.

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பருத்தியிலிருந்து பஞ்சு எடுத்து, நூல் நூற்றுத் துணி நெய்யும் நெசவுக்கலை இந்தியாவில் தோன்றியது. திரிமணையில் பருத்தியை அரைத்துப் பஞ்சு வேறு கொட்டை வேறாகப் பிரித்துக் கையினால் நூல் நூற்றுக் கைத்தறியில் துணி நெய்து இந்தியர் நெசவுக் கலையை வளர்த்தனர். ஆட்டு மயிரைவிடச் சிறந்தவகை இழையை அளிக்கும் ஒருவகைச் செடிஇந்தியாவிலிருப்பதாகவும், அச்செடியிலிருந்து பெறப்படும் நாரினால் செய்த துணியை இந்தியர் பயன்படுத்து வதாகவும் 2,300 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதிய நூலில் கிரோடட்டசு (Herodotus) குறிப்பிடுகிறார். மிகவும் மெல்லிய மதிலின் துணி முதல் பாய்மரத்தில் பாயாகப் பயன்படும் தடித்த துணி வரையில் உள்ள பலவகையான துணிகளும் இந்தியாவில் செய்யப்பட்டன என்றும் அவர் கூறுகின்றார்.

வெளிநாட்டிலிருந்து இந்தியாவைப் பார்வையிட வந்த பயணிகள் (யாத்திரிகர்கள்) இந்தியர் பயன்படுத்திய துணி வகைகளைப் பற்றியும், சாளரங்களில் பயன்படுத்திய திரைகளைப் பற்றியும், போர்வைகள், கூடாரங்கள் பற்றியும் வியந்து கூறுகின்றனர். நெசவுக்கலையில் முதன் முதல் முன்னேறிய நாடு இந்தியா. இராட்டினம், கைத்தறி, முதலிய கருவிகளை யமைத்து நெசவுக் கலையை இந்தியர் வளர்த்தனர்.

நெசவுக்கலை இந்தியாவில் இருந்து சீனா பாரசீகம், எகிப்து முதலிய நாடுகளுக்குப் பரவியது. 10ஆம் நூற்றாண்டில் சீனாவிலும், 14ஆம் நூற்றாண்டில் இத்தாலியிலும், 17ஆம் நூற்றாண்டில் அமெரிக்காவிலும் இக்கலை பரவியது. 5000 ஆண்டுகட்குமுற்பட்ட மொகஞ்சதரோ நாகரிகக் காலத்திலேயே இந்தியாவில் நெசவுக்கலை இருந்ததாகத் தெரிகிறது. மொகஞ்சதரோவில் பளிங்காலும், சங்கினாலும், களிமண்ணாலும் செய்யப்பட்ட கதிர்கள் வீடுகள் பலவற்றில் கிடைத்துள்ளன. மறைகளிலும் (வேதங்கள்) நெசவு பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மறைகளிலும் தொன்மங்களிலும் (புராணங்கள்) கடவுள் மெல்லிய ஆடைகளை அணிந்திருப்பதாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. பாரதம், இராமாயணம் போன்ற மறவனப்புகளில் (இதிகாசங்களில்) பருத்தி, கம்பளி, பட்டுத்துணி பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. கோயில்களிலும் குகைகளிலும் காணப்படும் ஓவியங்கள் பண்டைக்கால முதலே இந்தியாவில்நெசவுக்கலை முன்னேறி யிருந்ததைக் காட்டுகின்றன.

**நெசவுக்காரர்** *nešavu-k-kārar*, பெ. (n.) *நெசவுக்காரன்* பார்க்க; *see nešavu-k-kāraṉ.*

*[நெசவு + காரர். காரன் → காரர்.]*

**நெசவுக்காரன்** *nešavu-k-kāraṉ,* பெ. (n.) நெய்வோன் (உ.வ.); weaver.

*[ நெசவு + காரன்.*

காரன் பின்னொட்டு இணைவது பிற்கால வடிவம்.

நெயவு → நெசவு + ஆளன் – நெசவாளன்.

நெசவு + காரன் – நெசவுக்காரன்

ஒ.நோ. செல்வன் = பணக்காரன்

அய்யன் + காரன் – அய்யங்காரன் → அய்யங்கார் *]*

**நெசவுக்கூலி** *nešavu-k-kūli,* பெ. (n.) நெய்த நூலிற்கு, துணிக்குக் கிடைக்கும் கூலி; wage for the weaved thread or cloth.

*[நெசவு + கூலி]*

பழங்காலத்தில் கூலமே சம்பளமாகத் தரப்பட்டுப் பின் காசு தரும் காலம் வந்துள்ளது. பொதுவுடைமை நாடுகளில் முன்பு கூலியாக அடையாள அட்டை தரப்பட்டுப் பிறகு பணம் தரும் பழக்கம் வந்ததாக வரலாறு கூறுகிறது.

**நெஞ்சகம்** *neñjagam,* பெ. (n.) மனம்; mind, heart. "*நெஞ்சக நைந்து நினைமினாடொறும்*" (தேவா.1173,1). "*அஞ்செவி நிறைத்து நெஞ்சகங் குளிர்பித்து*" (மணிமே.5:64).

*[நெஞ்சு + அகம்]*

இக்கால் உளவியலில் மூளை நடுவில் உள்ள 12 சோடி நரம்புகளில் 6 சோடி நரம்புகள் வலப்புறத்தில் அன்பு (மனம்) இயங்கவும், 6 சோடி நரம்புகள் இடபுறத்தில் அறிவு இயங்கவும் அமைந்துள்ளனவாகக் கூறப்படுகிறது. (மருத்துவக் களஞ்சியம்1). ஆயின் அக்காலத்தில் இன்பத்தாலும், துன்பத்தாலும் அரத்த ஓட்டம் மிகுதல் பற்றி மார்பில் மனவுணர்வு இருப்பதாகக் கருதப்பட்டுள்ளது

**நெஞ்சடித்தல்** *neñjaḍittal,* பெ. (n.) அச்சம் முதலியவற்றால் நெஞ்சாங்குலை (இதயம்) படபடக்கை; palpitation of the heart, as in fear.

*[நெஞ்சு + அடித்தல்.* நெஞ்சாங்குலையின் இயக்கம் *]*

**நெஞ்சடை–த்தல்** *neñjaḍai-,* 4செ.கு.வி.(v.i.) 1. மூச்சுத் திணறுதல்; to suffocate. 2. தொண்டை அடைத்தல்; obstruction of throat as bronchitis. *அந்தச் செய்தியைக் கேட்டதும் அவனுக்கு நெஞ்சடைப்பது போலாயிற்று.*

*[நெஞ்சு + அடை –த்தல்.]*

**நெஞ்சடைத்தல்** *neñjaḍaittal,* பெ. (n.) மார்படைப்பு (இ.வ.); suffocation, obstruction in the chest.

*[நெஞ்சு + அடைத்தல்]*

**நெஞ்சடைப்பான்** *neñjaḍai-p-pāṉ,* பெ. (n.) 1. மாட்டுநோய் வகை; (மாட்டுவா.63); a kind of disease affecting cattle. 2. காய்ச்சல் நோய் வகை; (C.E.M.248); anthrax fever. 3. நுரையீரல் அழற்சியால் வரும் நெஞ்சடைப்பு நோய்; obstruction of chest as from inflammation of lungs. *நெஞ்சடைப்பான் நோயால் அவதிப்படுகிறான்.* (சா.அக.).

*[நெஞ்சு + அடைப்பான்]*

**நெஞ்சடைப்பு[1]** *neñjaḍaippu,* பெ. (n.) 1. மார்படைப்பு; obstruction in the chest. 2. மூச்சுத்திணறுகை; suffocation.

*[நெஞ்சு + அடைப்பு]*

**நெஞ்சடைப்பு²** *neñjaḍaippu,* பெ. (n.) பொதிபரியாமற் செய்யும் பயிர் நோய் (Rd.); blight affecting the seed-pod of growing. paddy.

*[நெஞ்சு + அடைப்பு]*

**நெஞ்சடைவாதம்** *neñjaḍai-vādam,* பெ. (n.) மூச்சுவிட முடியாதபடி மார்பை அடைக்கு மோர் வளி நோய். இது குலை (இதய) நோயால் நேரிட்டு மயக்கம், தொண்டைவலி முதலிய குணங்களைக் காட்டும்; a disease marked by paroxysmal throraxic pain with suffocation and syncope due to disease of the heart-Angina pectoris. (சா.அக.).

*[நெஞ்சு + அடை + வாதம். Skt.வாதம் → த. வளிநோய்]*

**நெஞ்சம்** *neñjam,* பெ.(n.) 1. மனம்;mind. *"தாமுடையநெஞ்சந் துணையல்வழி"* (குறள்,1299). *"நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு"* (அகநா2:12). *"மம்மர் நெஞ்சத்தெம்மனோர்க் கொருதலை"* (புறநா.53:7). *"அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே"* (குறுந்.40:5). *"மையல் நெஞ்சமொடு வயந்த மாலையும்"* (மணிமே.2:74). *"நெஞ்சமே மிஃதென்னை நின்மதி"* (அருட்பா.154:1). *"நெஞ்சேயுகந்த துணையெனக்கு"* (அருட்பா. 249:1). *"நெஞ்சங்கலங்கி நிறையாற்றுப் படுத்து நின்றார்"* (சீவக.1664). *நெஞ்சம் இந்த நிகழ்வை மறக்காது.* 2. அன்பு; love. *"முகம்நக நட்பது நட்பன்று நெஞ்சகத் தகநக நட்பது நட்பு"* (குறள்,786).

ம. நெஞ்சு; *கோத.* நஞ்ச்; *துட.* நிச்; *குட.* நெஞ்ஞி; *கூ.* நிஞ்ச; *குவி.* லிந்ச.

*[நெஞ்சு → நெஞ்சம் = உணர்வுகளின் உந்து விசைக் குருதியின் இருப் பிடமான நெஞ்சாம் குலை.]*

**நெஞ்சமுக்கம்** *neñjamukkam,* பெ. (n.) தூக்கத்தில் மார்பை ஒருவர் அமுக்குவது போற் றோன்றி, அதனால் மூச்சுவிட முடியாமல் அச்சம், மயக்கம் முதலிய குணங்கள் உண்டாகும் நிலை; a feeling of oppression or suffocation during sleep accompanied by stupefying influence and intense anxiety, fear, horror etc.,- Night-mare. (சா.அக.).

**மறுவ.** அமுக்குப் பிசாசம்.

*[நெஞ்சு + அமுக்கம்]*

**நெஞ்சழி¹–தல்** *neñjaḻi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. மனம் நிலை குலைதல்; to be unstrung, to be overwhelmed, as the heart with sarrow or fear. *"நெஞ்சழிவானை"*(கம்பரா. நிகும்பலை.11). 2. மதி மயங்குதல்; to lose consciousness, as from drunkenness; to faint, as from fear. 3. தன்னடக்கங் கெடுதல்; to lose self - control; to be overcome, as with lust.

*[நெஞ்சு + அழி–தல்.]*

**நெஞ்சழி²–தல்** *neñjaḻi-,*2 செ.கு.வி. (v.i.) ஏங்குதல்; pining, languishing. (சா.அக.).

*[நெஞ்சு + அழி–தல்.]*

**நெஞ்சழுத்தம்** *neñjaḻuttam,* பெ. (n.) 1. மன இறுக்கம்; hard heartedness. *அவனுக்கு நெஞ்சழுத்தம் அதிகம்; அதனால்தான் கொஞ்சங்கூட இரக்கம் யார் மீதும் காட்டுவதில்லை.* 2. நெஞ்சுறுதி; firmness of mind. *எவ்வளவு நெஞ்சழுத்தம் இருந்தால் இந்தக்காரியம் செய்வாய். எதற்கும் கலங்காத நெஞ்சழுத்தக்காரன். அவனுக்கு நெஞ்சழுத்தம் அதிகம்.*

*[நெஞ்சு + அழுத்தம். பிறரைப் பற்றி அல்லது விளைவைப்பற்றிக் கவலையோ இரக்கமோ இல்லாத இறுக்கம்]*

**நெஞ்சறிசுட்டு** *neñjaṟi-šuṭṭu,* பெ. (n.) சொல்லாற்குறியாது, மனத்திலுள்ள பொருளைக் குறிக்க வருஞ்சுட்டு (கலித். 140, உரை); a demonstrative term that is explicable only with a reference to the writer's or speaker's mind.

*[நெஞ்சு + அறி + சுட்டு.]*

**நெஞ்சறிவிளக்கம்** *neñjaṟiviḷakkam,* பெ. (n.) ஒரு நூல்; a book.

**நெஞ்சறை**[1] *neñjaṟai,* பெ. (n.) மார்பினுள்ளிடம் (C.E.M.); chest, thorax.

*[நெஞ்சு + அறை]*

கழுத்திற்கும் வயிற்றிற்கும் இடை யேயுள்ள பெட்டியைப் போன்ற பகுதி. இதற்குள் மூச்சுக்கருவி (நுரையீரல்); அரத்தோட்டக் கருவி (இதயம்) முதலிய உறுப்புக்கள் அமையப் பெற்றுள்ளன. அவைகள் பாதுகாப்பாக இருக்கும் பொருட்டு எலும்புகளாலும் முருந்துகளாலும் ஆக்கப் பட்டவை. இப்பெட்டி மேலே ஒடுக்கமாகவும், கீழே பருத்தும் இருக்கும். இப்பெட்டியின் முன்பக்கம் விலா முருந்தும், நெஞ்செலும்பும் இருக்கும்; பின்பக்கம் முதுகெலும்பு களும் பக்க விலா வெலும்புகளும் இருக்கும். (சா.அக.).



**நெஞ்சறைக்குழி** *neñjaṟai-k-kuḻi,* பெ. (n.) நெஞ்சுக்கூடு, மார்பிற்குள்ளிருக்கும் குழி; throaxic cavity, chest cavity, Venter medius. (சா.அக.).

*[நெஞ்சறை + குழி.]*

**நெஞ்சறைசவ்வு** *neñjaṟai-šavvu,* பெ. (n.) நுரையீரலைச் சூழ்ந்து மூடியுள்ள மெல்லிய தோல் (சவ்வு). இது நெஞ்சறையின் சுவருக்கு உள்ளுறையாகும்; the membrane lining the walls of the thoraxor chest, Pleara. (சா.அக.).

*[நெஞ்சறை + சவ்வு. சவ்வு = மெல்லிய தோல்.]*

**நெஞ்சறைச்சுவர்** *neñjaṟai-c-cuvar,* பெ. (n.) மார்பினுட்புறமுள்ள நான்கு பக்கச் சுவர்; the four sides called walls of the chest - Thoraxic wall. (சா.அக.).

*[நெஞ்சறை + சுவர். சுவர் = தசையாலான சுவர் போன்ற அமைப்பு]*

**நெஞ்சறைப்புடைப்பு** *neñjaṟai-p-puḍaippu,* பெ.(n.) மார்பின் நடுவில் புடைத்துக் காணும் பகுதி; bulging of the chest like a barrel. (சா.அக.).

*[நெஞ்சறை + புடைப்பு]*

**நெஞ்சறைவலி** *neñjaṟai-vali,* பெ. (n.) மார்பின் சுவருக்குக் காணும் வலி; pain in the chest wall - Thorocalgia. (சா.அக.)

*[நெஞ்சறை + வலி. நெஞ்சறைத் தசையில் ஏற்படும் நோய்]*

**நெஞ்சன்** *neñjaṉ,* பெ. (n.) 1. துணி வுடையோன்; bold, daring person. 2. செருக்குள்ளவன்; arrogant person.

*[நெஞ்சு → நெஞ்சன்]*

இன்பத்திலும், துன்பத்திலும் குருதி யோட்டம் கூடுதல் ஆதலின் நெஞ்சுக்குள் நினைவோட்டம் இருப்ப தாகவும், துணிவூட்டம் பெறுவதாகவும் பழங் காலத்தே நினைத்தனர்.

**நெஞ்சாங்கட்டை** *neñjāṅ-gaṭṭai,* பெ. (n.) 1. மார்பின் நடுவே முன்பக்கமாகக் காணப்படும் தட்டையான எலும்பு, மார்பெலும்பு; breast-bone. 2. எரியூட்டலில் பிணத்தின் நெஞ்சுப்பக்கமாக வைக்குங் கட்டை; log placed near the breast of a corpse in cremation. 3. கெடுதலான கருத்துரை (ஆலோசனை); conspiracy.

*[நெஞ்சு + ஆம் + கட்டை]*

**நெஞ்சாங்குலை** *neñjāṅgulai,* பெ. (n.) 1. மார்பு (வின்.); chest, breast. 2. இதயம் (இ.வ.); heart, 3. ஈரற்குலை (யாழ். அக); viscera, entrails. *நேற்று முதல் நெஞ்சாங்குலையை வலிக்கி(ற)து என்று பையன் சொல்லிக் கொண்டிருக்கிறான்.* 4. மார்புக்குழி (யாழ்ப்.); pit of the stomach.

*[நெஞ்சு + ஆம் + குலை.]*

**நெஞ்சாங்குழி** *neñjāṉ-guḻi,* பெ. (n.) தொண்டைக்குழி (வின்.); நெஞ்சுக்கும் வயிற்றுக்கும் இடைப்பட்ட நடுக்குழி; pit of the throat.

*[நெஞ்சு + ஆம் + குழி.]*

**நெஞ்சாங்குற்றி** *neñjāṉ-guṟṟi,* பெ. (n.) நெஞ்சாங்கட்டை பார்க்க; *see neñjaṉ-gaṭṭai.*

[நெஞ்சு + ஆம் + குற்றி. குற்றி = எலும்பு, கட்டை.]

**நெஞ்சாங்கொழுந்து** *neñjāṉ-goḻundu,* பெ. (n.) **நெஞ்சாங்குலை, 3.** (மாட்டுவா.91.) பார்க்க; *see neñjāṉ - gulai, 3.*

*[நெஞ்சு + ஆம் + கொழுந்து. கொழுந்து = இலை. இலைபோல் அகன்றிருக்கும் ஈரல்குலை. இது துண்டிக்கப்பட்டாலும் வளரும் தன்மையுடையது]*

**நெஞ்சார** *neñjāra,* கு.வி.எ. (adv.) மனமார; wilfully. on purpose. "*நெஞ்சாரப் பொய் தன்னைச் சொல்ல வேண்டாம்*" (உலகநீதி.2).

*[நெஞ்சு + ஆர - நெஞ்சார. ஆர = நிறைய. மனமார வாழ்த்துதல். காலார நடத்தல்.]*

**நெஞ்சாரல்** *neñjāral,* (பெ.) (n.) துன்பம், துயரம், sorrow, grief. தந்தை இறந்ததை எண்ணி எண்ணி நெஞ்சாராமல் புலம்புகின்றான்.

*[நெஞ்சு + ஆரல்.]*

**நெஞ்சாறல்** *neñjāṟal,* பெ. (n.) *நெஞ்சாரல்* பார்க்க; see neñjāral. "*இங்ஙனே கிடந்து நெஞ்சாறற் பட*" (ஈ.டு, 2. 3:4).

*[நெஞ்சாரல் → நெஞ்சாறல். ர → ற திரிபு. ஒ.நோ. திரன் → திறன்.]*

நெஞ்சு + ஆறல் எனப்பிரிப்பின் மனம் ஆறிய நிலையில் துன்பமற்ற நிலை குறிக்கப்படும். நெஞ்சாரல் என இடையின 'ர' கரம் நிற்பின் துயரம் மனம் முழுதும் நிரம்பி நிற்றலைக் குறிக்கும். சென்னைப் பல்கலைக்கழக அகர முதலியில் நெஞ்சாரல் என்னும் சொல் இடம் பெறவில்லை.

**நெஞ்சிடி** *neñjiḍi,* பெ. (n.) அச்சம் (பயம்), நோய் முதலியவைகளால் ஏற்படும் நெஞ்சின் துடிப்பு; palpitation of the heart as from fear disease etc. (சா.அக.).

*[நெஞ்சு + இடி. இடி = நெஞ்சின் துடிப்பு]*

**நெஞ்சிடித்தல்** *neñjiḍittal,* பெ. (n.) அச்சத்தால் இதயந்துடிக்கை (வின்.); throbbing of the heart from fear.

*[நெஞ்சு + இடித்தல்]*

**நெஞ்சிலேதெண்டல்** *neñjil-ē-deṇḍal,* பெ. (n.) நெஞ்சுநோவுகை (வின்.) ;affection of the breast, as by wind, spasm or cramp.

*[நெஞ்சு + இல் + ஏ + தெண்டல்]*

*தெண்டல் = நரம்பு வலித்தல். நெஞ்சுப்பகுதியில்நரம்பு முதலியவற்றால் ஏற்படும் நோய்.*

**நெஞ்சிற்கட்டு–தல்** *neñji-ṟ-kaṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) மார்பில் சளி கட்டுதல்; accumulation of phlegm in the chest. (சா.அக.).

*[நெஞ்சில் + கட்டு–தல். மார்புப்பகுதியில் சளி இறுகித்தங்கி விடுதல்]*

**நெஞ்சிற்கட்டை** *neñji-ṟ-kaṭṭai,* பெ. (n.) மார்பில் கட்டை போட்டது போல் சளி அடைத்துக் கொள்கை; feeling of obstruction in the chest due to accumulation of phlegm in the passage of respiration. (சா.அக.).

*[நெஞ்சில் + கட்டை. சளியானது இறுகிக் கட்டியாகி மார்பில் தங்கிவிடுதல்]*

**நெஞ்சிற்கல்** *neñjiṟkal,* பெ. (n.) 1. கவலை; anxiety. 2. துன்பம்; distress.

[நெஞ்சில் + கல். கல்நெருடல் போல் வலிமை மிகுந்த துன்பம் ஏற்படும்போது இருக்கும் நிலை]

**நெஞ்சிற்கல்போட்டதுபோலிருத்தல்** *neñjiṟ-kal-pōṭṭadu-pōliruttal,* பெ. (n.) ஊதை (வாயு)யினால் மார்பில் கல்போட்டது போல் கனதியாய் அடைத்துக் கொண்டு மூச்சுவிட முடியாமல் துன்புறுகை; a feeling of oppression in the chest as if a stone like lump rising or seated within the throrax. It is ascribed to the action of deranged vāyu. (சா.அக.).

*[நெஞ்சில் + கல் + போட்டது + போல் + இருத்தல்]*

**நெஞ்சிற்பாரம்** *neñjiṟ-pāram,* பெ. (n.) 1. தாங்க முடியாத சுமை; burdon or weight of responsibility oppressing the heart. 2. துயரம்; sorrow, grief.

*[நெஞ்சு → நெஞ்சில் + பாரம்]*

*நெஞ்சின் மேல் சுமை ஏற்றியது போல் அதிகமான பொறுப்புகளாலும், துன்பத்தினாலும் அடையும் நிலை.*

**நெஞ்சிற்புகைதல்** *neñjiṟ-pugaidal,* பெ. (n.) தொண்டைப் புகைச்சல்; irritation of the throat. (சா.அக.).

*[நெஞ்சில் + புகைதல்.]*

**நெஞ்சினோவு** *neñjiṉōvu,* பெ. (n.) நெஞ்சுநோவு பார்க்க; see *neñju-nōvu.*

*[நெஞ்சில் + நோவு.]*

**நெஞ்சு** *neñju,* பெ. (n.) 1. அன்பு செய்யும் மனம்; mind, conscience. "*தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்*" (குறள், 293.). "*மென் றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே*" (அகநா.9:26). "*நெஞ்சிருள் கூர நிகர்த்துமேல் விட்ட*" (சிலப் 6:10). "*சிதைந்த நெஞ்சிற் சித்திரா பதிதான்*" (மணிமே.பதி.35). *நெஞ்சு அறியப் பொய் சொல்லலாமோ? (பழ.). நெஞ்சை ஒளித்து ஒரு வஞ்சகம் இல்லை (பழ.).* 2. மனதிற்கிருப்பிடமானநெஞ்சாங்குலை (இதயம்); heart. *நெஞ்சு வலியால் துடிக்கிறார்.* 3. நெஞ்சாங்குலையுள்ள மார்பு; breast,

bosom, chest. *"தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ"* (தொல்.எழுத்து.83). *குழந்தையை நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள்.* **4.** நடு; centre, heart of a thing. *"குன்றினெஞ்சு பகவெறிந்த வஞ்சுடர் நெடுவேல்"* (குறுந்.1). *"இஞ்சியாக நெஞ்சுபோழ்ந்து"* (சிந்தா.நாம.114). **5.** திடாரிக்கம்; உறுதி; bravery, courage. *"நெஞ்சுளோ ரஞ்சும் வித்தை"* (திருவாலவா. 35:17). **6.** திண்ணக்கம் (இ.வ.); audacity, venturesomeness. **7.** தொண்டை; throat. *"படிறர் சொல்லெனக் கடுநெஞ் சிறைப்ப"* (கல்லா.16:6). **8.** மனச்சான்று; conscience. *"நெஞ்சை யொளித்தொரு வஞ்சக மில்லை"* (கொன்றை.54).

ம. நெஞ்சு; *கோத.* நஞ்ச்; *துட.* நிசு; *குட.* நெஞ்ஞி; *கூ.* நிஞ்ச; *குவி.* லிந்ச.

*[நெய் → நெய்வு → நெய்ஞ்சு → நெஞ்சு (வே.க.) நெஞ்சு = கழுத்துக்குக் கீழும் வயிற்றுக்கு மேலும் உள்ள மார்புப் பகுதி.]*

**நெஞ்சுக்கட்டு** *neñju-k-kaṭṭu,* பெ. (n.) **நெஞ்சுச் சளி** பார்க்க (உ.வ.); see *neñju-c-caḷi.*

*[நெஞ்சு + கட்டு.]*

**நெஞ்சுக்கண்டரை** *neñju-k-kaṇḍarai,* பெ. (n.) சிவப்பு அரத்தம் ஓடும் பெரிய குழாய்; aorta.

*[நெஞ்சு + கண்டரை. கண்டரை = மூலநாடி; நல்ல அரத்தம் இதயத்திலிருந்து வெளியேறும் குழல்]*

**நெஞ்சுக்கபக்கட்டு** *neñju-k-kaba-k-kaṭṭu,* பெ. (n.) *நெஞ்சுக்கட்டு* பார்க்க; see *neñju-k-kaṭṭu,* (சா.அக.).

*[நெஞ்சு + Skt. கபம் + கட்டு]*

**நெஞ்சுக்கரகரப்பு** *neñju-k-karakarappu,* பெ. (n.) **1.** மார்பில் ஏற்படும் ஓர் உணர்ச்சி; feeling, of a peculiar stimulating or inflammatory sensation in the chest. **2.** தொண்டை கரகரப்பு; irritation of the throat. (சா.அக.).

*[நெஞ்சு + கரகரப்பு. கரகரப்பு = ஓர் உணர்வு]*

**நெஞ்சுக்கல்** *neñju-k-kal,* பெ. (n.) மனத்தை உறுத்துவது (நாஞ்.); that which oppresses the mind.

*[நெஞ்சு + கல்]*

கல்போன்ற சுமை அல்லது துன்பம் மனத்தை உறுத்துவது.

**நெஞ்சுக்குத்து[1]-தல்** *neñju-k-kuttu-,* 5செ.கு.வி. (v.i.) அன்னசத்து (அன்னரசம்) கேடுறுவதனால் வளி (வாயு) கோளாறடைந்து நெஞ்சில் பித்த சளியோடு சேர்ந்து மூச்சுவிடமுடியாது குத்தலுடன் துன்புறுதல்; a disease which the deranged bodily vayu aggrevated by the vitiated chyle and incarcerated in the region of the chest through the action of the other deranged humours as pitha and kapha there by giving rise to pin prick pain in the chest with difficulty of respiration. (சா.அக.)

*[நெஞ்சு + குத்து. குத்து = ஊசி முதலியவற்றால் குத்துவது போன்ற வலி]*

**நெஞ்சுக்குத்து[2]** *neñju-k-kuttu,* பெ. (n.) மார்பு வலி (உ.வ.); pain in the chest.

*[நெஞ்சு + குத்து.]*

**நெஞ்சுக்குமட்டல்** *neñju-k-kumaṭṭal,* பெ. (n.) தொண்டை குமட்டல்; nausia in the throat making an effort to vomit, retching. (சா.அக.)

*[நெஞ்சு + குமட்டல். குமட்டல் = கக்கல் (வாந்தி) வருதல்; நிறைய உண்டதால் தெவிட்டல்; கக்குதல்]*

**நெஞ்சுக்குரிய** *neñju-k-kuriya,* பெ.எ. (adj.) மார்பிற்குரிய; pertaining to the chest - Pectoral.

*[நெஞ்சு + கு + உரிய]*

**நெஞ்சுக்குழி** *neñju-k-kuḻi* பெ. (n.) மார்பின் பள்ளம்; pit of the stomach scrobiculous, Cordis Anticardium. (சா.அக.).

*[நெஞ்சு + குழி. குழி = பள்ளம், வயிறு]*

**நெஞ்சுக்குறுகுறுப்பு** *neñju-k-kuṟu-kuṟuppu,* பெ.(n.) **1.** மார்பில் சளி பிடிப்பால் ஏற்படும் கொறுகொறுப்பு ஒலி; respiratory sound heard in the chest-role. **2.** மூச்சுக் குழாயிலேற்படும் ஒலி; crackling sound heard or produced in the trachea (wind pipe) or the bronchus, Bronchial. **3.** இதயக் குறுகுறுப்பு; unnatural sound heard over the region of the heart. It may be hereditary or otherwise-Murmur. (சா.அக.)

*[நெஞ்சு + குறுகுறுப்பு. குறுகுறுப்பு = ஒலிக்குறிப்பு.]*

**நெஞ்சுக்கூடு** *neñju-k-kūḍu,* பெ. (n.) வயிற்றிற்கு மேலும் கழுத்திற்குக் கீழும் உள்ள உடற்பகுதி; thorax.

*[நெஞ்சு + கூடு]*

**நெஞ்சுக்கோழை** *neñju-k-kōḻai,* பெ. (n.) *நெஞ்சுச்சளி* பார்க்க (யாழ்.அக.); see *neñju-c-caḷi.*

*[நெஞ்சு + கோழை. நெஞ்சிலே உண்டாகும் சளி. கோழை = குழகுழப்பான சளி.]*

**நெஞ்சுகரித்தல்** *neñju-karittal,* பெ. (n.) **1.** உணவு மிகுதி முதலியவற்றால் உவட்டல்(வாந்தி)யுண்டாகும்படித் தொண்டை கரகரக்கை (வின்.); nausea, as from eating to excess or from eating acids or sweets. **2.** பொறாமை கொள்ளுகை (நெல்லை); enviousness.

*[நெஞ்சு + கரித்தல்]*

கரித்தல் = உறுத்தல். செரியாமையால் தொண்டையில் ஏற்படும் உறுத்தல்.

**நெஞ்சுகரிப்பு** *neñju-karippu,* பெ. (n.) **நெஞ்சுகரித்தல்** பார்க்க; *see neñju-karittal.*

*[நெஞ்சு + கரிப்பு. கரிப்பு = கரகரப்பு உணர்வு]*

**நெஞ்சுகல-த்தல்** *neñju-kala-,* 3செ.கு.வி. (v.i.) **1.** ஒருவரோடு கலந்துரையாடுதல்; to consult. **2.** மனமொன்றுபடுதல்; to agree, to be of one mind.

*[நெஞ்சு + கல-த்தல்.]*

**நெஞ்சுகாய்தல்** *neñju-kāydal,* பெ. (n.) **1.** நெஞ்சு வறளுகை (வின்.); becoming dry, as the breast in disease, causing thirst. **2.** மனஞ்சோர்கை; fainting, as the heart through sorrow or fear.

*[நெஞ்சு + காய்தல்.காய்தல் = தாகத்தால் நெஞ்சு வரளுதல்; துன்பத்தால் மனம் சோர்தல்.]*

**நெஞ்சுச்சளி** *neñju-c-caḷi,* பெ. (n.) நெஞ்சிற் கோழை உண்டாக்கும் நோய்; bronchitis, Bronchial catarah.

*[நெஞ்சு + சளி]*

**நெஞ்சுத்தடிமன்** *neñju-t-taḍimaṉ,* பெ. (n.) மார்புச்சளி; acute bronchitis attended with constant cough. (சா.அக.).

*[நெஞ்சு + தடிமன்.*
*தடிமன் = சளி]*

**நெஞ்சுத்தடுமம்** *neñju-t-taḍumam,* பெ. (n.) *நெஞ்சுச்சளி* (இ.வ.) பார்க்க; see *neñju-c-caḷi*

*[நெஞ்சு + தடுமம். தடுமம் = நீர்க்கோர்வை (சலதோடம்). தடுமம் = கட்டிச்சளி]*

**நெஞ்சுத்தடுமல்** *neñju-t-taḍumal,* பெ. (n.) **நெஞ்சுச்சளி** (நெல்லை) பார்க்க; see *neñju-c-caḷi.*

*[நெஞ்சு + தடுமல்.*
*தடுமல் = நீர்க்கோவை (சலதோடம்).]*

**நெஞ்சுத்தடுமன்** *neñju-t-taḍumaṉ,* பெ. (n.) **நெஞ்சுச்சளி** (நெல்லை) பார்க்க; see *neñju-c-caḷi.*

*[நெஞ்சு + தடுமன்.*

*தடுமன் = நீர்க்கோவை (சலதோடம்).]*

*மார்பில் சளி இறங்கி, அதிகமான புகைச்சலோடு இருமலை உண்டாக்கும் நீர்க்கோவை நோய்.*

**நெஞ்சுத்திடுக்கம்** *neñju-t-tiḍukkam,* பெ. (n.) மன நடுக்கம் (நாஞ்.); trembling of the heart. *அச்செய்தியைக் கேட்டதும் நெஞ்சுத் திடுக்கென்றது.*

*[நெஞ்சு + திடுக்கம். திடுக்கு + அம்– திடுக்கம் = திடுக்கிடுதல்]*

**நெஞ்சுத்திடுக்கிடு–தல்** *neñju-t-taḍukkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) அச்சத்தால் மார்பு துடித்தல்; agitation of mind through fear or disease. (சா.அக.) *அந்த ஏதத்தை (விபத்தை)க் கண்டதும் நெஞ்சுத்திடுக்கிட்டது.*

*[நெஞ்சு + திடுக்கிடு–தல்]*

**நெஞ்சுதட்டு–தல்** *neñju-taṭṭu-,* 5செ.கு.வி. (v.i.) **1.** அறை கூவுதல்; to pat one's breast in defiance, as a challenge. **2.** தற்பெருமை கூறி மார்பு தட்டுதல்; to pat the breast in boast.

*[நெஞ்சு + தட்டு–தல்]*

இவ்வழக்கம் போரின் போது காணப்படும். பகையாளியை நோக்கி மார்தட்டும் வழக்கம், குடும்ப, குலச்சண்டைகளிலும் இன்றும் காணப்படுகிறது.

**நெஞ்சுத்துடிப்பு** *neñju-t-tuḍippu,* பெ. (n.) இதயமடிக்கை; palpitation of the heart.

*[நெஞ்சு + துடிப்பு]*

*இதயம் = நெஞ்சாங்குலை.*
*நெஞ்சாங்குலையின் இயக்கம், துடிப்பு.*

**நெஞ்சுத்துணிகரம்** *neñju-t-tuṇikaram,* பெ. (n.) **நெஞ்சுத் துணிவு** பார்க்க; see *neñju-t-tuṇivu.*

*[நெஞ்சு + துணிகரம்.*
*துணிகரம் = மிகுதுணிவு. ஒ.நோ. பயங்கரம்.]*

**நெஞ்சுத்துணிவு** *neñju-t-tuṇivu,* பெ. (n.) மன வலிமை (உ.வ.); boldness of heart, bravery, intrepidity. *அவளுக்கு நெஞ்சுத் துணிவு அதிகம்.*

*[நெஞ்சு + துணிவு.]*

**நெஞ்சுதுடித்தல்** *neñju-tuḍittal,* பெ. (n.) 1. இதயந்துடிக்கை; throbbing of the heart. *மனிதனின் ஒரு நிமய நெஞ்சு துடிப்பு 72 முதல் 76 வரை இருக்கும்.* 2. இரக்கப்படுகை; sympathising with one in affliction. *இரக்கமற்ற அவன் செயலைப் பார்த்து நெஞ்சு துடிக்கிறது.*

*[நெஞ்சு + துடித்தல்.*
*துடித்தல் = நெஞ்சின் இயக்கம்]*

**நெஞ்சுதுடிப்புக்கேடு** *neñju-tuḍippu-k-kēḍu,* பெ. (n.) மார்பின் துடிப்புக் கோளாறு; irregularity or lack of rhythum in the heart's action - Arrhythmia cordis. (சா.அக.).

*[நெஞ்சு + துடிப்பு + கேடு.]*

*மார்புத் துடிப்பில் ஏற்படும் இயக்க வேறுபாடு. துடிப்பு எண்ணளவு கூடியோ குறைந்தோ இருக்கும்.*

**நெஞ்சுநாளம்** *neñju-nāḷam,* பெ. (n.) 1. மார்பிலோடும் நாளம்; veins in the region of the chest. 2. இதய நாளம்; cardiac veins. 3. நுரையீரல் நாளம்; veins of the lungs - Pulmonary veins. (சா.அக.).

*[நெஞ்சு + நாளம்]*

**நெஞ்சுநெஞ்சென்றுகுத்து—தல்** *neñju-neñjeṉṟu-kuttu-,* 5செ.கு.வி. (v.i.) இழவு நிகழ்வின் போது விரல் நுனிகளால் மார்பிற் குத்திக் கொள்ளுதல் (வின்.); to strike the breast repeatedly with the tips of the fingers in bewailing the dead. *இழவு வீட்டில் அவள் தன் மார்பில் நெஞ்சு நெஞ்சென்று குத்திக் கொண்டாள்.*

*[நெஞ்சு + நெஞ்சு + என்று + குத்து—தல்]*

**நெஞ்சுநேர்தல்** *neñju-nērdal,* பெ. (n.) நெஞ்சிளைக்கை; emaciation of chest. (சா.அக.).

*[நெஞ்சு + நேர்தல்]*

*நோயின் காரணமாக நெஞ்சு இளைத்தல்.*

**நெஞ்சுநோ** *neñju-nō,* பெ. (n.) நெஞ்சுக்குத்து (வின்.) பார்க்க; see *neñju-k-kuttu.*

**மறுவ.** நெஞ்சுநோவு, நெஞ்சுநோய்.

*[நெஞ்சு + நோ. நோவு → நோ]*
நெஞ்சின் கண் ஏற்படும் குத்தல் நோய்:

**நெஞ்சுநோய்** *neñju-nōy,* பெ. (n.) மார்பு நோய்; diseases in general of the chest.

மறுவ. நெஞ்சகநோய்

*[நெஞ்சு + நோய்.]*

மார்பின் கண் ஏற்படும் அனைத்து நோய்களும் நெஞ்சு நோய் என்று அழைக்கப்படும்.

தாம்பரத்தில் உள்ள மாரடைப்பு நோய் நீக்கும் மருத்துவமனைக்கு நெஞ்சக நோய் மருத்துவமனை என்பது பெயர்.

**நெஞ்சுநோவு** *neñju-nōvu,* பெ. (n.) 1. நெஞ்சுக்குத்து பார்க்க; see *neñju-k-kuttu. நெஞ்சு நோவால் துயரப்படுகிறாள்.* 2. மனத் துயர்; grief. *நெஞ்சு நோவு அவளை வதைக்கிறது.*

*[நெஞ்சு + நோவு]*

**நெஞ்சுப்பள்ளம்** *neñju-p-paḷḷam,* பெ. (n.) மார்புக்குழி (வின்.); pit of the stomach. *அவனுக்கு நெஞ்சுப் பள்ளம் அதிகம்.*

*[நெஞ்சு + பள்ளம்]*

**நெஞ்சுப்புண்** *neñju-p-puṇ,* பெ. (n.) தொண்டையில் ஏற்படும் புண் (M.L.); sore throat. *நெஞ்சுப்புண்ணால் அவனால் சரியாகச் சாப்பிட முடியவில்லை.*

*[நெஞ்சு + புண்]*

தொண்டையில் இருந்து இரைப்பை வரை உண்டாகும்புண்.

**நெஞ்சுபக்கிடுதல்** *neñju-pakkiḍudal,* பெ. (n.) மனத்தில் திடுமென அச்சம் முதலியன தாக்குகை (வின்.); being struck with sudden fear or grief. *அவன் கூறிய செய்தியைக் கேட்டதும் நெஞ்சு பக்கென்றாயிற்று. அந்த ஏதத்தை (விபத்தை)க் கண்டதும் நெஞ்சுபக் கிட்டது.*

*[நெஞ்சு + பக்கிடுதல்]*

**நெஞ்சுபதறு—தல்** *neñju-padaṟu-,* 5செ.கு.வி. (v.i.) மனம் நடுக்குறுதல்; to be agitated in mind. **அவன் செய்த செயலைப் பார்த்ததும் நெஞ்சு பதறுகிறது.**

*[நெஞ்சு + பதறு—தல்.]*

**நெஞ்சுபுகைதல்** *neñju-pugaidal,* பெ. (n.) கோழையின்றி இருமுகை (நெல்லை); dry cough. *அவள் இரவு முழுமையும் நெஞ்சு புகைச்சலால் துன்பப்பட்டாள்.*

*[நெஞ்சு + புகைதல்]*

**நெஞ்சுபுண்ணா—தல்** *neñju-puṇṇā-,* 6 செ.கு.வி. (v.i.) 1. மனம் வருந்துதல்; to be distressed or wounded at heart. *"காயகற்பந்தேடி நெஞ்சு புண்ணாவர்"* (தாயு.பரிபூரணா.10). *அவன் பேசிய பேச்சைக் கேட்டு நெஞ்சு புண்ணாகிறது.* 2. தொண்டை புண்ணாதல் (வின்.); to have sore throat. *கார மிகுதியால் நெஞ்சு புண்ணாகிறது.*

*[நெஞ்சு + புண்ணா—தல்.]*

நெஞ்சாங்குலையில் அன்பு இருப் பதாகவும், மூளையில் அறிவு இருப்பதாகவும் அறிவியல் வெளிச்சம் பரவிய 200 ஆண்டுகளுக்குமுன் உலகமொழிகள் அனைத்திலும் இலக்கியங்கள் இயம்புகின்றன. இக்கால் மூளையின் வலப்புறம் அன்புநரம்பு என்றும் இடப்புறம் அறிவு நரம்பென்றும் மருத்துவ அறிவியல் கூறுகின்றது.

**நெஞ்சுமருந்து** *neñju-marundu,* பெ. (n.) மார்பு, நுரையீரல் முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் மருந்து; medicine for complaints of the heart and lungs - Pectoral.

*[நெஞ்சு + மருந்து]*

**நெஞ்சுரப்பு** *neñjurappu,* பெ. (n.) நெஞ்சுரம், 1 பார்க்க; see *neñjuram,* 1. *"நெஞ்சுரப் போ வெனக்கிங் கினியா ருவமை யுரைப்பதற்கே"* (தனிப்பா.1, 140:32).

*[நெஞ்சு + உரப்பு ]*

**நெஞ்சுரம்** *neñjuram,* பெ. (n.) 1. மனக்கடுமை (உ.வ.); hard heartedness. 2. மனவலிமை; boldness, courage. *கும்பகன்னன் நெஞ்சுரம் மிக்கவன். எவ்வளவு துன்பத்திலும் தன்நெஞ்சுரத்தை மட்டும் விட்டுக் கொடுக்காத மனிதர் இவர்.* 3. தடித்தனம் (உ.வ.); audacity. **நெஞ்சுரம் அதிகம் இருப்பதால் தான் யாரையும் மதிக்காமல் அடிதடியே தொழிலாக வைத்திருக்கிறான்.**

*[நெஞ்சு + உரம் – நெஞ்சுரம் = எதற்கும் கலங்காத, எதையும் எதிர் கொள்ளத் தயங்காத மனவலிமை.]*

**நெஞ்சுருகு–தல்** *neñjurugu-,* 5செ.கு.வி. (v.i.) மனமிளகுதல்; to melt, as heart. *"நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்குஞ் சோரும்"* (திவ். திருநெடுந்.12). *தேர்வில் வெற்றி பெற வேண்டும் என இறைவனை நெஞ்சுருகி வேண்டிக் கொண்டான்.*

*[நெஞ்சு + உருகு –தல்*
*உருகுதல் = வெப்பத்தல் இளகுதல், மனநெகிழ்தல், மெலிதல்]*

**நெஞ்சுலர்–தல்** *neñjular-,* 2செ.கு.வி. (v.i.) மார்புவற்றல்; dryness of the chest. (சா.அக.).

*[நெஞ்சு + உலர்–தல்*
*உலர்தல் = காய்தல், வாடுதல்.*
*"உலர்ந்து போனே னுடையானே"*
*(திருவாச. 32:1)]*

*நாவறட்சி முதலிய கரணியங்களால் நெஞ்சுலர்தல்.*

**நெஞ்சுவட்டு–தல்** *neñjuvaṭṭu-,* 5செ.கு.வி. (v.i.) குமட்டுதல்(வின்.); to feel nausea; to be sea-sick. *உண்ட உணவை நெஞ்சுவட்டி குமட்டல் செய்தான்.*

*[நெஞ்சு + உவட்டு–தல்*
*உவட்டுதல் = குமட்டுதல்.]*

**நெஞ்சுவலி** *neñju-vali,* பெ. (n.) **நெஞ்சுக்குத்து** பார்க்க (வின்.); see *neñju-k-kuttu.*

*[நெஞ்சு + வலி]*

**நெஞ்சுவலியுறுத்தி** *neñju-valiyuṟutti,* பெ. (n.) நெஞ்சாங்குலையை வலிமைப்படுத்தும் மருந்து; cordiac tonic. (சா.அக.).

*[நெஞ்சு + வலியுறுத்தி. இ–சொல்லாக்க ஈறு. வலியுறுத்தி = வலுவை உண்டாக்குவது, மருந்து.]*

**நெஞ்சுவற்றல்** *neñju-vaṟṟal,* பெ. (n.) வறட்சியினால் நெஞ்சில் குழிவிழல்; pit of the stomach, depression of the chest through dryness. (சா.அக.).

*[நெஞ்சு + வற்றல். வற்றல் = வடிகை, வறளுகை, நீர்வடிவதால் ஏற்படும் பள்ளம்]*

**நெஞ்சுவறட்சி** *neñju-varaṭci,* பெ. (n.) **நெஞ்சுபுகைதல்** (வின்.) பார்க்க; see *neñju-pugaidal.*

*[நெஞ்சு + வறட்சி.வறட்சி= நீர்ப்பசை யறுகை, உடல்வெப்பம், உடலை மெலியச் செய்யும் நோய்.]*

**நெஞ்சுவிடுதூது** *neñju-viḍu-tūdu,* பெ. (n.) 1. மனத்தைக் காதலர்பால் தூது விடுவதாக அதனை முன்னிலைப் படுத்திக் கூறும் இலக்கிய வகை; a kind of poem in which the heart is personified and sent as a messenger to one's beloved. 2. மெய்கண்ட (சாத்திரங்களில்) நூல்களில் ஒன்றும், உமாபதி சிவாசாரியார் இயற்றியதுமான சிவக் கொண்முடிபு (சைவ சித்தாந்த) நூல்; a treatise of the šaiva šiddhanda philosophy by Umapati-šivā-cāriyar, one of 14 Meykaṇḍa-cāttiram.

*[நெஞ்சு + விடு + தூது]*

**நெஞ்சுவிடு தூது** : தூது நூல்களுள் ஒன்று. உள்ளத்தைக் காதலர் பால் தூது விடுவதாக அதனை முன்னிலைப்படுத்திக் கூறும் சிறு நூல். அகத்துறைச் செய்யுட்களில் ஒன்றாக முன்னர்த் தனிச் செய்யுளாக இருந்தது. பிற்காலத்தில் ஒரே நூலாயிற்று.

சிவ கொண்முடிபு நூல்கள் பதினான்குள் நெஞ்சுவிடுதூது 12ஆம் நூலாக அமைகிறது. இந்நூல் நெஞ்சைத்தூதாக அனுப்பியது பற்றிக் கூறுகிறது. மன்னன் ஒருவன் மற்றோர் மன்னனுக்கு ஒருவர்

வாயிலாகத் தூது சொல்லியனுப்புவது பண்டைக்காலம் முதல் இருந்து வந்த பழக்கமாகும். அதியமான் என்ற அரசன் தொண்டைமான் என்பவனுக்கு ஔவையாரைத் தூது அனுப்பிய செய்தி புறநானூற்றால் தெரியவருகிறது. போர் முதலிய கரணியங்களுக்காக அரசர்களிடையே இருந்த இந்தப்பழக்கம், இலக்கியத்தில் கற்பனையாக அமையும் போது சிலவகை வடிவம் பெற்றது. புலவர் பிசிராந்தையார் பாண்டிய நாட்டுப்புலவர். அவரின் நண்பன் சோழநாட்டு அரசன் கோப்பெருஞ்சோழன். சோழனைப் பாராட்டிப் பாட வேண்டும் என்று விரும்பிய புலவர் வடக்கே சோழநாட்டை நோக்கிப் பறந்த ஓர் அன்னப்பறவையை நோக்கிக் கற்பனையாகப் பாடியுள்ளார். இவ்வாறு பேசாத பறவை விலங்குகளையும், உயிரில்லாத முகில், காற்று, முதலியவற்றையும் தூது அனுப்புவதாகக் கற்பனை செய்து பாடுவதாய் காதல் பாட்டுகளில் மிகுதியாகக் காணப்படுகிறது. பழந்தமிழ் இலக்கியமாகிய கழக(சங்க)ப் பாடல்களிலேயே இத்தகைய காதல் தூது அமைந்த பாட்டுகள் சில உள்ளன. காதல் துறையில் அமைந்த பாட்டுகளை ஒட்டிப் பிற்காலத்துப் பத்திமை இலக்கியத்திலும், கடவுளிடம் தூது அனுப்பும் முறையில் ஆழ்வார் நாயன்மார்கள் பல பாடல்கள் பாடியுள்ளனர். தேவாரத்திலும், திருவாசகத்திலும், நாலாயிரத் தெய்வப் பனுவலிலும் உள்ள அந்தத் தூதுப் பாடல்கள் பத்திமைச்சுவை நிரம்பி உருக்கமாக அமைந்துள்ளன. குயில், அன்றில், புறா, வண்டு, கிளி, நாரை, முதலிய பறவைகள் பத்திமையாளரின் தூது பற்றிய கற்பனைக்குப் பயன்பட்டுள்ளன.

பெரிய பாவியங்களிலும் காதலர்கள் தூது அனுப்புவதாகப் பாடும் பகுதிகள் உள்ளன. உமாபதி சிவாச்சாரியார் என்னும் சிவ சமயத்துச் சான்றோர் தம்நெஞ்சையே தூது அனுப்புவதாகப் பாடியது 'நெஞ்சுவிடு தூது' என்னும் நூல்.

தூது இருவகைப்படும். அகப்பொருள் பற்றியது, புறப்பொருள் பற்றியது. நெஞ்சு விடு தூது ஆன்மீகம் பற்றிக் கூறுவதால் புறப்பொருள் பற்றியது.

தூது இலக்கணம்

நற்குடியில் பிறந்தவனாகவும், அனைத்துக்கலைகளையும் அறிந்தவனாகவும், கண் சிமிட்டுதல் முதலிய சாடைகள், சிட்டிகைப் போடுதல் முதலிய செய்கைகள் இவற்றினைக் கண்டறிபவனாகவும், பொருள் விருப்பில்லா தவனாகவும், திறமையுடைய வனாகவும், நற்குலத்தில் பிறந்தவனாகவும் இருப்பவன் தூதனாவான். அத்தூதன் அனைவரையும் நேசிப்பவனாகவும் அன்புள்ள வனாகவும், நினைவாற்றல் உள்ளவனாகவும், உலக நடப்பு அறிந்தவனாகவும், உடல் வலிமை உள்ளவனாகவும், பயமில்லாதவனாகவும், பல மொழிகளைப் பேசுபவனாகவும், பகைவர் இடத்தில் மறைந்து சென்று அவன் செய்கை, எண்ணம், அவன் படையின் எண்ணம், வலிமை, ஆசை இவைகளை அறிபவனாகவும், பகைவனிடம் சென்று அவன் செய்கைகளை அறியுமிடத்துத் தனக்குத் தீங்குநேராது தப்பித்துக் கொள்பவனாகவும் இருத்தல் வேண்டும். இவ்வகைத்தூதன், தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான் என இருவகைப்படுவான். பின்னும் வேற்றரசர் பால் சென்று பேசும் பொழுது தன் செயல்களைத் தொகுத்துச் சொல்லி அவனுக்கு ஆகாத செயல்களை அறிவிக்கும் இடத்துக் கொடுஞ்சொற்களை நீக்கி, நகை விளைக்கும் சொற்களைக் கூறியும், தான் எடுத்த செயலைப் பகைவர் மனங்கொளக்கூறி அவர் சினங்கொளினும் அஞ்சாது காலத்தோடு பொருந்த அது முடிக்கத்தக்க வழி அறிபவனும், பகைவரிடம் செல்லுங்காலம், சென்றகாலம், செல்லும் இடம் அறிந்து தாம் கூறப்போம் செய்தியை முன்னே உசாவியறிந்து உரைப்பவனும், பகையரசரது அமைச்சர்களைத் தம் வயமாக்கும் வன்மை உடையவனும் தூது கூறத்தக்கவனாவான். (மநு.)

வள்ளுவர் தூதுபற்றி ஒரு அதிகாரமே பாடியுள்ளார் (69)

*"அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்துஅவாம்*
*பண்புடைமை தூதுஉரைப்பான் பண்பு"* (குறள், 681)

*" அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூது*
*உரைப்பார்க்கு*
*இன்றி யமையாத மூன்று"* (குறள், 682)

*"நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்*
*வென்றி வினையுரைப்பான் பண்பு"* (குறள்,683)

*"அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்*
*செறிவுடையான் செல்க வினைக்கு"* (குறள்.684)

*'தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி*
*நன்றி பயப்பதாம் தூது"* (குறள், 685)

*"கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்*
*தக்கது அறிவதாம் தூது"* (குறள்,686)

*"கடன்அறிந்து காலம் கருதி இடன்அறிந்து*
*எண்ணி உரைப்பான் தலை"* (குறள், 687)

*"தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்*
*வாய்மை வழியுரைப்பான் பண்பு"* (குறள்,688)

*"விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்"* (குறள்,689)

*"இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது"* (குறள்,690)

தூது விடுக்கும் வாயில்களாகத் தொல்காப்பியம் கூறுவது:

*"ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுதலிய நெறியால் சொல்லுந
போலவும் கேட்குந போலவும் சொல்லியாங்கு
அமையும் என்மனார் புலவர்"*
(தொல். பொருள். செய்யுள். 198)

உமாபதி சிவம் (சிவாச்சாரியார்) திருவரலாறு:

உமாபதி சிவம் தில்லைவாழ் அந்தணரில் ஒருவர். இவர் காலம் கி.பி. பதினான்காம் நூற்றாண்டு என்பர். இவர் தில்லைச் சிற்றம்பலத்தின்கண் திகழும் அம்மை அம்பலவாணரைப் பூசை செய்யும் உரிமை யுடையவர். இவர் ஒருநாள் பூசை முடித்துப் பல்லக்கில் ஊர்ந்து குடை, கொடி, சின்னம், பகல் விளக்கு, முதலிய சிறப்புகள் முன்னே வர வந்து கொண்டிருந்தனர். அப்பொழுது சந்தான ஆசாரியர் நால்வருள் மூன்றாம் நிலையினராய் உள்ள மறைஞான சம்பந்தர் தெருவினில் நின்று கொண்டிருந்தார். அவர் இவர்தம் செலவினைக் கண்டு "பட்ட கட்டையிற் பகல்குருடு போகுது பாரீர்" என்று பகர்ந்தருளினர். அஃதாவது பட்ட மரத்தாலாகியது, பல்லக்கு. அதன்மேற் செல்பவன் பகலில் தீப்பந்தத்தின் துணைகொண்டு செல்லுவதால் பகல் குருடு என்பதாம். எல்லாரும் இரவில் விளக்கின் துணையினை வேண்டுவர்; இவர் பகலிலும் விளக்கின் துணையினை வேண்டுபவர்; இவர் பகலிலும் விளக்கின் துணை வேண்டுவதால் பகல் குருடு எனப்பட்டார்.

இதனைச் செவியுற்றதும் உமாபதி சிவம் பல்லக்கினின்றுங் கீழிறங்கினார். நடுக் கத்துடன் மறைஞான சம்பந்தர் திருவடியில் வீழ்ந்து வணங்கினார். தன்னை ஆட்கொண்டருளும்படி முறையிட்டார். ஆசிரியரும் இவர் தம் செவ்வி முதிர்வு நோக்கி ஏற்றருளினார். ஆசிரியர் முன்னே செல்ல இவரும் நீங்கா நிழல்போல் ஓங்கிய அன்பாற் பாங்குறப் பின் தொடர்ந்தார். ஆசிரியர் கைக்கோளர் தெருவிற் சென்றார். அவர்கள் நெசவுக்காக வைத்திருந்த கஞ்சியை வார்த்தனர். ஆசிரியரும் இருகையும் ஏற்று மகிழ்வொடு பருகினார். உமாபதி சிவனாரும் ஆசிரியர் முழங்கை வழியாக ஒழுகும் எச்சிற் கஞ்சியை மிக்க காதலொடுங் கை ஏற்றுப் பருகினார்.

ஆசிரியரும் சிவதீக்கை புரிந்து ஆதி மந்திரம் எனப்படும், அருந் தமிழ் மந்திரம் அஞ்செழுத்தைச் செவியறியுறூஉ எனப்படும் அறிவுரை புரிந்தருளினர். பல்லக்கை விடுத்தலும் நடந்து தொடர்தலும் ஆகிய இரண்டானும் எனது எனப்படும் உடைமை உடற்பற்றுகள் நீங்கின. எச்சில் மயங்கி அறிவுரை கேட்டு அடிமையாயினமையின் யான் எனப்படும் அகப்பற்று நீங்கிற்று. பின் *"சிவஞான போதம்"* எனப்படும் தனித் தமிழ் மெய் கண்ட நூலை அருளினார். பின் தம் ஆசிரியர் அருளிய "சிவஞான சித்தியாரை"யும் விளக்கியருளினார். இவ்விரு பெரு நூல்களையும் முறையே உயிரும் உடம்புமாகக் கொண்டுள்ளது, சிவக் கொண்முடிபு (சித்தாந்தச் சைவ நன்னெறி) என்று தலைமேற் கொண்டார்; கொண்டு ஓதினார். ஓதி "இவ்விரண்டு நூல்களையும் விரும்பி நோக்கிக், கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து பொது உண்மையென" வகுத்துச் *"சிவப்பிரகாசம்"* என்னும் கொண்முடிபு (சித்தாந்த) நூலை அருளினார். இஃது அந் நன்னெறிக்கு உரை போன்றாகும்.

இந்நிலையில் தில்லைவாழந்தணர்கள், இவர் தனித்தமிழ் மெய்கண்ட சந்தானத்தைக் குருவாகக் கொண்டு திகழ்ந்தமையானும், *"சிவப்பிரகாசம்"* என்னும் தனித்தமிழ்ப் புடைநூல் இயற்றினமையானும் தங்கள் மரபுக்குப் புறம்பென நீக்கினர். இவரும் கொற்றவன்குடியில் திருமடம் அமைத்து வீற்றிருந்தருளினார். நன் மாணவர் பலர்க்கும் மெய்கண்ட நூல்களை நவின்றருளினார். திருமுறை வழியாக நாள்வழி பாடும் சிறப்பு வழிபாடும் புரிந்து வந்தார்.

அம்பலக் கூத்தனை அகந்தழீஇ ஒழுகுமிவர் தமக்குரிய பூசைமுறை வந்ததும், கால்நடையாக மாணவர் பலர் புடைசூழப் பொன்னம்பலம் வந்தார். வந்ததும், ஆங்குள்ள அந்தணர் இவரை மறுத்து விட்டார். இவரும் திருமடம் திரும்பினார். அந்தணரில் ஒருவர் பூசைபுரியத் தொடங்கினார். முதற்கண் செய்யப்படும் உடையவர் பூசைக்குரிய அழகிய சிற்றம்பலம் உடையாரைப் பேழையைத் திறந்து பார்த்தனர். அங்குக் காணப் பெறவில்லை. பெரிதும் நடுங்கினர். அருளொலியாக "உமாபதி சிவம் வந்தால் காணப்பெறும்" என ஒரு மொழி எழுந்தது. எல்லாரும் உமாபதி சிவத்தினிடம் வந்து அடிதொழுது வணங்கிப் பெரிதும் வேண்டினர். அவரும் வந்தார். அழகிய சிற்றம்பல முடையாரும் காணப்பெற்றார். முறைப்படி

திருமுறை வாயிலாக வழிபாடும் இயற்றி மீண்டனர்.

தில்லைமா நகரில் *'பெற்றான் சாம்பான்'* என்னும் நற்றவப் பேறுடையார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சிவப்பேறு எய்துங் காதலால் சிவத்தொண்டு புரிய உன்னினார். தாமும் மனைவியும் காட்டிற் சென்று விறகொடித்துக் கொண்டு வருவார். தம் சுமையைக் கூத்தப்பெருமான் திருமடைப் பள்ளிக்கு நல்குவார். மனைவியார் தம் சுமையை விற்று வந்து வாழ்க்கைக்குப் பயன்படுத்துவார். இவ்வாறு தொண்டு பல நாள் நிகழ்ந்து கொண்டிருந்தது. ஒருநாள் அம்பலவாணர் வெளிப்பட்டருளினார்; சாம்பனார்பால் செந்தமிழ்ச் சீட்டு ஒன்று அருளினார். அது வருமாறு:

"அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்–படியின்மிசைப்
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை"

இதனைப் பெற்ற அவர் அந்நாள் முதல் தம் விறகுத் தொண்டைத் திருமடத்துக்குப் புரிந்து வந்தார். இது *"படமாடுங் கோயிலைவிட, நடமாடுங் கோயில் சிறப்புடைத்து"* என்பதை நினைவுறுத்துவதாகும். பல நாள் செய்த தொண்டின் பின் ஒருநாள் மழை மி குதியால் தொண்டு முட்டுப்பட்டது. அதனால் திருமடத்தில் சமையல் தொண்டு சுணங்க நேர்ந்தது. இதனால் உமாபதி சிவனார்க்கு இச்செய்தி எட்டியது. அவர் சாம்பானாரைத் தம்முன் கொண்டுவரப் பணித்தார்

மறுநாள் சாம்பனார் இரண்டு விறகுச் சுமையுடன் திருமடம் வந்தார். அடியவர்கள் திருவாணைவழிச் சாம்பனாரை முதல்வர் திருமுன் கொண்டு வந்து நிறுத்தினர். தொண்டனாரும் திருச்சீட்டை வைத்து வணங்கினார். முதல்வரும் சீட்டை உச்சி மேற்கொண்டு சிவதீக்கை புரிந்தருளினர். தீக்கைச் சிறப்பால் திருவருளின் துணையால் *"பெற்றான் சாம்பனாரும்"* உடனே திருவடிப்பேறெய்தினார்.

இதனை உணர்ந்த சாம்பனாரின் மனைவியார் தெளிவு பெறாமல் அரசன்பாற் சென்று முறையிட்டார். அரசன் சிறிதும் ஐயுறவு கொண்டிலன். எனினும் அம்மையாரைத் தெளிவிக்கும் பொருட்டு அவரை உடனழைத்துக் கொண்டு முதல்வர்பால் வந்தனன். வந்து முதல்வரை வணங்கி அவரைத் தெளிவிக்கும் பொருட்டு இப்பொழுதொன்று இயற்றியருளும்படி வேண்டினர். முதல்வரும் அங்குள்ளாரை நோக்கினார். எவரும் செவ்விவாய்ந்தவராகக் காணப்படவில்லை. எனினும் தாம் வழிபடும் உடையவர்க்கு ஆட்டுந் திருமஞ்சனநீர் பாய்ந்து அதனால் வளர்ந்து அடியவர் திருவமுதுக்குக் காய் நல்குந் தன்மையிலிருந்தது முள்ளிச் செடி. அதனை உணர்ந்து அச்செடியினுக்கு அப்பொழுதே சிவதீக்கை புரிந்தருளினார். அச்செடி பலருங்காண வானிலிருந்து வந்த வானூர்தியிலேறி மேலே சென்றது. யாவரும் தொழுதனர். அரசனுங் களிகூர்ந்தனன், அம்மையாரும் உள்ளந்தெளிந்து உவகையுற்று முதல்வர் அடிதொழுது சென்றார்.

பின்னொருநாள் அம்பலவாணர் திருவிழா வந்தது. உமாபதி சிவனாரை அழையாமல் கொடி ஏற்ற முயன்றனர். பலர் கூடி இழுத்தும் கொடி ஏறிய பாடில்லை. அனைவரும் வருந்தினர். அப்பொழுதும் முன்பு போலவே அருளொலி உண்டாயது. அம்மொழி "உமாபதி சிவனார் வந்தால், கொடி ஏறும்" என்பதாம். எல்லோரும் சென்று உமாபதி சிவனாரைத் தொழுது அழைத்து வந்தனர். அவர் வந்ததும் கொடிக்கவி பாடியருளினர். அப்பொழுது அனைவருங் களிகூரக் கொடிதானாகவே ஏறி நிலை நின்றது. இதனால் திருவருள் உலகுக்கு உணர்த்தும் ஒரு பெரும் உண்மை யொன்றுண்டு. அஃதாவது: தமிழகத்துத் திருக்கோவில்கள் அனைத்திலும் நாள் விழாச் சிறப்புவிழா முதலிய எல்லாம் தனித்தமிழால் நிகழ்த்த வேண்டுமென்பதே. அதற்கென அருளால் அமைந்தனவே நால்வர் நற்றமிழ் மந்திரமும், திருமூலர் திருமந்திரமும் இவற்றோடிணைந்த ஏனைத் திருமுறைகளுமாம். இதுகொண்டே உமாபதிசிவனார் ஆற்றிய வழிபாடனைத்தும் திருமுறை வாயிலாக வென்பது துணியலாம். அம்மட்டுமன்றி உமாபதி சிவனார் மூவர் தேவாரத்தினின்றும் தொண்ணூற்று ஒன்பது திருப்பாடல்களைத் திரட்டிப் *"பதிமுதுநிலை"* முதலாக *"அணைந்தோர்தன்மை"* முடிவாகப் பத்துத் தலைப்புக்கள் அமைத்துத் *"தேவார அருண் முறைத்திரட்டு"* என்னும் பெயருடன் ஒரு நூல் வெளியிட்டுள்ளார். இத்திரட்டு நூல் முப்பொருளுண்மை தெளிவிக்கும் ஒப்பரிய நூலாகும்.

இம்முதல்வர் 1. சிவப்பிரகாசம், 2. திருவருட் பயன், 3. வினாவெண்பா, 4. போற்றிப் பஃறொடை, 5. கொடிக்கவி, 6. நெஞ்சுவிடுதூது, 7. உண்மை நெறிவிளக்கம், 8. சங்கற்ப நிராகரணம் என எட்டுக் கொண்முடிபு (சித்தாந்த) நூல்களை அருளியுள்ளார். இவை மட்டுமன்றிக் 'கோயிற்புராணம், திருமுறை கண்ட புராணம், சேக்கிழார் புராணம்' என மூன்று நூல்களும் அருளியுள்ளார். இம்முதல்வர் ஒரு நெய்ம்மீ ன் எட்டாம் (சித்திரை அத்த) நாளில் சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கலந்து பேரின்பப் பெருவாழ்வு எய்தினரென்ப.

நெஞ்சுவிடுதூது கலிவெண்பாவால் 130 கண்ணிகளால் ஆனது. கொண்முடிபு சிவனியத்தின் 96 கூறுபாடுகள் அண்டம் பற்றியும், பிண்டம் பற்றியும் கூறப்படுவது மரபு. அம்மரபுக் கருத்துகளை வெளியாக்கும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது. இருமை (துவிதம்) பற்றிய கொண்முடிபு சிவனியத்துக்கு, மெய்கண்ட சிவம் இயற்றிய சிவஞான போதம் முதல் நூலாகவும், அருள் நந்திசிவம் வகுத்து எழுதிய சிவஞானசித்தியார் வழிநூலாகவும், உமாபதி சிவம் பகுத்து எழுதிய சிவப்பிரகாசம் சார்பு நூலாகவும் உள்ளன.

இந்நூலாசிரியர் உமாபதி சிவம் தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா, இன்று தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா என்று முதிர்ச்சியுறக் குறிக்கின்றார். அவர் எழுதிய எட்டு அடிப்படை (சாத்திர) நூல்களில் இஃது ஒரு தொகுப்பு நூலாக உள்ளது. தூது நூல்களின் இலக்கிய உத்தியாகிய, வேறு பொருட்டுத்தகுதியின்றி இஃதொன்றே வாய்ப்பு மிக்கது என்பது இதில் குறைச்சுவையுடையதாக உள்ளது. எனினும் சுவையான சொற்கொண்ட அடிகள் பல இந்நூலில் காணப்படுகின்றன.

"மெய்யர்க்கு மெய்யன் வினைக்கு வினை
யாயினான் பொய்யர்க்குப் பொய்யாய
பொய்யினான்–ஐயன் படநாகம் பூண்ட பரமன் பசுவின்
இடமாய் நிறைந்த இறைவன்" (கண்ணி.7,8)

"வெளியில் வெளியில் வெளியன் வெளியில்
ஒளியில் ஒளியில் ஒளியன் – ஒளியில்
அளியில் அளியில் அளியன் அளியில்
அளவில் அளவில்அளவன்" (கண்ணி. 33, 34).

**நெஞ்சுவிரணம்** *neñju-v-iraṇam*, பெ. (n.) 1. நெஞ்சுப்புண்; inflammation of the lungs. 2. தொண்டைப்புண் (இதற்கு நெரியாசிப் பாற்செடியின் பிசினைச் சீலைத் துணியில் பூசிக் கொளுத்தி அப்புகையை இழுக்கத் தொண்டைப்புண் ஆறும்); sore throat. (styrax liguidus is smeared on a piece of cloth and burnt. Its smoke, when inhaled, cures sore throat). (சா.அக.).

*[நெஞ்சு + Skt. விரணம்.*
*விரணம் → இரணம் = காயம், புண்.]*

**நெஞ்சுள்** *neñjuḷ*, பெ. (n.) உள்ளம் (மனம்) (நன்.228, மயிலை); mind.

*[நெஞ்சு + உள்–நெஞ்சுள்]*

தலைக்குள் இருந்த அறிவைப் பழங்காலத்தில் அரத்தத்துடிப்பு பற்றி மார்புள் இருந்ததாய்ப் பொருள் செய்யப்படுவது பழமையே. அப்பொருளில் இது வழங்குவதை உணர்வதோடு, எதிர்காலத்தில் மண்டையில் இருப்பதான அறிவியல் கருத்து பரவ வேண்டும்.

**நெஞ்சுளு–த்தல்** *neñjuḷu-*, 4 செ.கு.வி.(v.i.) மனமுறிதல்; to be broken - hearted, dispirited. "*நெஞ்சு ளுக்கின னெனச் சிறிது நின்று நினையா*" (கம்பரா.விராத.25).

*[நெஞ்சு + உளு–த்தல்.]*

நெஞ்சுளுத்தல் : நெஞ்சாங்குழி உள்வாங்கி யொடிதல்.

**நெஞ்சுறைப்பு** *neñjuṟaippu*, பெ. (n.) 1. மனக் கடுமை (இ.வ.); hard-heartedness. 2. துணிவு (வின்.); boldness of heart, intrepidity. *எதிரியை நெஞ்சுறைப்புடன் எதிர்த்துத் தாக்கினான்.*

*[நெஞ்சு + உறைப்பு. உறைப்பு = காரம், கொடுமை, தாக்குகை]*

வற்றல் குழம்பில் உறைப்பு மிகுதியால் நெஞ்சுப்பகுதியில் காரமிகுதலும் நெஞ்சுறைப்பு எனப்படும்.

உறைப்பு என்னும் பண்புப்பெயர் விதந்து சுட்டுவது காரத்தையே. உறைக்கும் பொருளைச் சுள்ளென்றிருக்கிறது என்பர். காரத்தை எரிச்சல் என்று கூறுவர். இதனால் உறைத்தலைச் சுடுதலோடொப்பக் கொண்டமை புலனாம். உறைப்பு பார்க்க.

**நெஞ்சூன்றி** *neñjūṉṟi*, பெ. (n.) நெஞ்செலும்பு ஒரு பக்கம் வளைந்து மறுபக்கம்

மிதந்திருப்பது (யாழ்.அக.); that which is bent on one side with a corresponding elevation on the reverse of breast - bone.

*[நெஞ்சு + ஊன்று – நெஞ்சூன்று → நெஞ்சூன்றி]*

**நெஞ்செதிர்** *neñjedir,* வி.எ. (adv.) நேரெதிரில்; directly in front. "*பெண்களை நெஞ்செதி ராகவே கண்டால்*" (வள்ளி.கதை.MS). *உனக்குத் துணிவிருந்தால் என் நெஞ்செதிரே சொல் பார்க்கலாம். நெஞ்செதிரில் வந்து நிற்காதே.*

*[நெஞ்சு + எதிர்]*

**நெஞ்செரி—தல்** *neñjeri-,* 2 செ.கு.வி. (v.i.) 1. சினத்தால் மனங் கொதித்தல்; to burn with anger. "*தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து வாசகத்தழித்துன்னை வைதிடாமே*" (திவ்.நாய்ச்.1:3). 2. பொறாமைப் படுதல் (உ.வ.); to feel envy, to be jealous. *அவன் வளர்ச்சியைக் கண்டு நெஞ்செரிந்தான்.*

*[நெஞ்சு + எரி—.தல்]*

**நெஞ்செரிச்சல்** *neñjericcal,* பெ. (n.) 1. மார்பெரிச்சல்; burning sensation in the chest as from disease. 2. நெஞ்சாங்குலை (இதய) எரிச்சல்; heart burn. 3. வயிற்றெரிச்சல்; a burning sensations in the oesophagus. 4. புளித்தேப்பம் முதலியவற்றால் ஏற்படும் வயிறெறிச்சல் அல்லது நெஞ்சொிச்சல்; burning sensation in the stomach with sour eructations due to acid dysepsia - Pyrosis. (சா.அக.).

*[நெஞ்சு + எரிச்சல். செரியாமை போன்றவற்றால் வயிறு, மார்புப் பகுதியில் உணரப்படும் எரிச்சல்.]*

**நெஞ்செரிப்பு**[1] *neñjerippu,* பெ. (n.) நெஞ்செரிச்சல் பார்க்க; see *neñjericcal* (சா.அக.).

*[நெஞ்சு + எரிப்பு.]*

**நெஞ்செரிப்பு**[2] *neñjerippu,* பெ. (n.) பொறாமை; jealous.

*[நெஞ்சு + எரிப்பு.]*

**நெஞ்செரிவு** *neñjerivu,* பெ. (n.) நெஞ்செரிச்சல் பார்க்க; see *neñjericcal.* (சா.அக.).

*[நெஞ்சு + எரிவு.]*

**நெஞ்செலும்பு** *neñjelumbu,* பெ. (n.) நெஞ்சறையின் முன்பக்க நடுவில் வாள் போன்ற, ஒடுங்கிய தகட்டெலும்பு; dagger like flat bone in the middle front of the chest - sternum. (சா.அக.) *சரியான உணவின்மையால் நெஞ்செலும்பெல்லாம் வெளியே தெரிகின்றன. ஆட்டின் நெஞ்செலும் பெடுத்துக் குழம்பு வைத்தால் உடல் நலத்துக்கு நல்லது.*

*[நெஞ்சு + எலும்பு]*

**நெஞ்செலும்புசூப்பு** *neñjelumbu-šūppu,* பெ.(n.) ஆட்டின் நெஞ்செலும்பைக் கொண்டு வைக்கப்படும் வெஞ்சாறு; goat soup.

*[நெஞ்சு + எலும்பு + சூப். E.soup → த.சூப்பு = வெஞ்சாறு.]*

வெள்ளாட்டின் நெஞ்செலும்பைக் கொண்டு வெஞ்சாறு (soup) செய்வார்கள். இஃது உடல் நலத்திற்கு உதவும். ஆட்டுக்கால், கோழிக்கால், நண்டு முதலியவற்றாலும் வெஞ்சாறு செய்யப் படுகிறது. அனைத்தும் உடல்நலத்திற்கு உதவுபவையே.

**நெஞ்சைப்பிடி—த்தல்** *neñjai-p-piḍi-*, 4செ.குன்றாவி.(v.t.) கழுத்தைப் பிடித்தல் (வின்.); to take by the throat. *கடனைக் கட்டாததால் நெஞ்சைப் பிடித்துத் தள்ளினான்.*

*[நெஞ்சு + ஐ + பிடி—த்தல். ஐ — இரண்டாம் வேற்றுமை உருபு.]*

**நெஞ்சைப்பிள—த்தல்** *neñjai-p-piḷa-*, 3செ.குன்றாவி.(v.t.) துயரம் முதலியன மனத்தை வருத்துதல்; to break one's heart, as grief. *நண்பன் சொன்ன இறப்புச் செய்தி நெஞ்சைப் பிளப்பது போல் இருந்தது.*

*[நெஞ்சு + ஐ + பிள—த்தல். ஐ —இரண்டாம் வேற்றுமை உருபு. பிளத்தல் — இரண்டு கூறாக்குதல். கூறாக்குவது போன்று துன்பத்தால் வருந்துதல்.]*

**நெஞ்சைப்புகவாள்** *neñjai-p-pugavāḷ*, பெ. (n.) கருநாய்; black dog. (சா.அக.).

நெஞ்சில் புகும் வாள் போல் கரு நாய்க்கத்தல் இருத்தல் பற்றி எழுந்த பெயர்.

**நெஞ்சொடுகிளத்தல்** *neñjoḍu-kiḷattal*, பெ.(n.) தலைவனோ தலைவியோ தன் நெஞ்சொடு சொல்லுதலாகிய அகப்பொருட்டுறை; theme of rebuking one's heart for going after one's unresponsive lover.

*[நெஞ்சு + ஒடு + கிளத்தல். ஒடு → ஒடு.*

*கிளத்தல் = எடுத்துச்சொல்லுதல், சிறப்பாக மொழிதல்]*

ஆற்றாமை மீதூரத் தனக்கு ஒருபற்றுக்கோடும் காணாத தலைமகள் தன் நெஞ்சொடு செயல்திறன் அறியாது சொல்லுதல். இஃது உறுப்புகள் தம் நலன் அழிந்த வழி நிகழும் தன்மைத்து. இது திருக்குறளில் 125ஆம் அதிகாரமாக அமையும் அகப்பொருட்டுறை.

எடு: "*உள்ளத்தார் காத லவர்ஆக உள்ளிநீ யாருழைச் சேறியென் நெஞ்சு*" (குறள், 1249).

"*கொடிபாடித் தேர்பாடித் கொய்தண்டார் மாறன்*
*முடிபாடி முத்தாரம் பாடித் — தொடி யுலக்கை*
*கைம்மனையில் ஓச்சப் பெறுவேனோ யானுமோர்*
*அம்மனைக் காவல் உளேன்*" (முத்தொள். 34).

"*பொன்னார் சடையோன் புலியூர் புகழாரெனப் புரிநோய்*
*என்னா லறிவில்லை யானொன் றுரைக்கிலன் வந்தயலார்*
*சொன்னா ரெனுமித் தூரிசு துன் னாமைத் துணை மனனே*
*என்னாழ் துயர்வல்லை யேற்சொல்லு நீர்மை யினிவர்க்கே*" (திருக்கோ. 89 மேற்கோள்).

சென்னைப் பல்கலைக்கழக அகர முதலி நெஞ்சொடுகிளத்தல், நெஞ் சொடுபுலத்தல் இரண்டும் ஒன்றெனக் காட்டுகிறது. ஆனால் கிளத்தல் என்பது சொல்லுதலையும், புலத்தல் என்பது ஊடுதலையும் குறிக்கும். எனவே இரண்டு சொல்லும் வேறுவேறானவை.

**நெஞ்சொடுபுலத்தல்** *neñjoḍu-pulattal*, பெ. (n.) அன்பற்ற காதலரிடஞ் செல்லும் மனத்தொடு புலந்து தலைவனேனும் தலைவியேனும் கூறும் அகத்துறை (குறள்,130, அதி.); theme of rebuking one's heart for going after one's unresponsive lover.

*[நெஞ்சு + ஒடு + புலத்தல். ஒடு → ஒடு. புலத்தல் = மனம், வேறுபடுதல், துன்புறுதல், வெறுத்தல், அறிவுறுத்தல். ஒடு — மூன்றாம் வேற்றுமை உருபு.]*

இது திருக்குறளில் 130ஆம் அதிகாரமாக அமையும் அகப்பொருட்டுறை. கரணியம் உண்டாய வழியும் புலக்க (அறிவுறுத்த)க் கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும் (மனம் வேறுபடுதலும்), தலைமகன் புலத்தலும் (மனம் வேறுபடுதலும்) ஆம்.

"*அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும்*
*எவன்நெஞ்சே*
*நீஎமக்கு ஆகா தது*" (குறள், 1291).
"*பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்*
*என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்*
*பொன்னோடை நன்றென்றாள் நல்லளே*
*பொன்னோடைக்*
*கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை*
*எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்*
*திருத்தார் நன் றென்றேன் தீயேன்*"
(முத்தொள். 58).

இரண்டு எடுத்துக்காட்டுகளும் தலைமகள் புலத்தலைச்சாரும்.

"*ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ*
*பார்க்கோ பரம்பரனே என் செய்கேன் —தீர்ப்பரிய*
*ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்*
*தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து*"
(திருவாச. திருவெண்பா. 2).

இது தலைமகன் புலத்தலுக்கு எடுத்துக்காட்டு.

**நெஞ்சோர்மம்** *neñjōrmam,* பெ.(n.) நெஞ்சுத் துணிவு (வின்.); boldness, intrepidity.

*[நெஞ்சு + ஓர்மம். ஓர்மம் = துணிவு, ஒட்டுமை, திடம். ஓர்மம் → ஓரிமை]*

மனம் ஒன்றுபட்டு நின்றால் துணிவு வருவது இயல்பு

**நெட்டங்கம்** *neṭṭaṅgam,* பெ. (n.) **1.** செருக்கு; pride, haughtiness. *அவனை நெட்டங்க முடைக்கிறான்* (உ.வ.). **2.** செருக்கினாற் பழித்துரைக்கும் மொழி; words of insolent consure. "*பொட்டான தேவர்களும் நெட்டங்கம் படிப்பாரே*" (இராமநா.உயுத்.82).

*[நெடு → நெட்டு +* Skt. *அங்கம். நெட்டு = செருக்கு]*

**நெட்டநெடியது** *neṭṭa-neḍiyadu,* பெ.(n.) வெகு நீளமானது; lengthy.

*[நெடு → நெட்டு → நெட்ட → நெடியது]*

**நெட்டநெடுமை** *neṭṭa-neḍumai,* பெ. (n.) மிகு நீளம்; great length, excessive tallness or height. '*அட்டம் வளராது நெட்ட நெடுமை கொண்டன*'. (தக்கயாகப்.406,உரை). *நெட்ட நெடு மரம்.*

*[நெட்டை → நெட்ட + நெடுமை]*

**நெட்டப்பிரமட்டை** *neṭṭa-p-piramaṭṭai,* பெ. (n.) பேய் மிரட்டி; devil frightener - Anisomeles, malabarica. (சா.அக.).

**நெட்டம்**[1] *neṭṭam,* பெ. (n.) **1.** நெடுமை; tallness, length. **2.** செங்குத்து; per pendicularity.

**ம.** நீட்டெண; **கோத.** நெடெந்;

**க.** நெட்டகெ, நெட்டாந, நெட்டாநெ;

**து.** நெட்டகெ; **தெ.** நிட்ட, நிட்ர, நிட்ரமு, நெட்ரமு; **பர்.** டிட்ட; **மரா.** நீட்.

*[நெடு → நெட்டு → நெட்டம்]*

**நெட்டம்**[2] *neṭṭam,* பெ. (n.) **1.** மிளகு (மலை.); black pepper. **2.** வெள்ளை மிளகு white pepper. (சா.அக.)

நெடுதாக உறைப்பு தருதலின் மிளகிற்கு அமைந்த பெயர் ஆதல் அறிக.

**நெட்டாங்கு** *neṭṭāṅgu,* பெ. (n.) **1.** நீளவாட்டு; lengthiness. **2. நெட்டங்கம்** பார்க்க; see *neṭṭaṅgam.* **3.** அழகு காட்டுகை; mimicry.

*[நெடு → நெட்டு → நெட்டாங்கு. நெடு + ஆங்கு.]*

**நெட்டாங்குவீடு** *nettāngu-vīdu,* பெ.(n.) உத்திரத்திற் குறுக்குச் சட்டமின்றி இருபுறமும் இறங்கிய கூரை கொண்ட வீடு (C.G.); house with a slanting roof supported by a wooden post, but without trusses, standing erect on a beam. *எங்கள் முன்னோர்கள் நெட்டாங்கு வீட்டில் வாழ்ந்தனர். இப்போது நெட்டாங்கு வீடுகள் கட்டப்படுவது இல்லை.*

*[நெட்டாங்கு + வீடு]*



**நெட்டாநாராட்டி** *nettā-nārātti,* பெ. (n.) நெடுநார் அல்லது நூலிலை; long fibre plant, Polyalthia cerasoicles. (சா.அக.).

*[நெடு → நெட்டு + ஆம்–நெட்டாம் + நார் + ஆட்டி]*

**நெட்டாயம்** *nettāyam,* பெ. (n.) 1. நெட்டுக் குத்தாகச் செங்கலை அடுக்குகை(வின்.); stretchers, piling up bricks, perpendicularly or upright opp-to-kattāyam. *நெட்டாயமாக சுவர் எழுப்பினான். வீட்டுச் சுவர் எல்லாம் நெட்டாய முறையில் இருக்கும்.* 2. நீளம்; length.

ம. நெட்டாயம்

*[நெடு → நெட்டு → நெட்டாயம்]*

நெட்டாயத்திற்கு எதிர் கட்டாயம்.

கட்டாயம் = குறுக்காகச் செங்கல்லை அடுக்கிச் சுவர் கட்டும் முறை.



**நெட்டாவில்** *nettāvil,* பெ. (n.) பட்டையை உரித்து ஆடையாக அணியப்பயன்பட்ட மரவகை; bark tree-Antiaris toxicaria so called from the usefulness of the bark for making a fibre coat in olden days as a protection against cold. (சா.அக.).

பழங்காலத்தில் வெப்பம், குளிர் போன்றவற்றினின்று தன்னைக் காத்துக் கொள்ள மரத்திலிருந்து பட்டையை உரித்து ஆடைபோல் அணிந்தான் மனிதன். மரப்பட்டை மட்டுமல்லாமல் இலை, தழை, புல் போன்ற பலவற்றையும் ஆடையாக அணிந்தனர். ஆடையாக அணியப் பட்டை எடுக்கப் பயன்பட்ட மரம் – நெட்டாவில்.

போர்க்குப் போகுமுன்னரே வில் வளைத்து நாண்கட்டப் படும். எப்போதும் கட்டி வைத்திருந்தால் விற்கம்பு வளைந்து விறைப்பு நீங்கி விடும். அதுபோல் ஆடையாகக் கட்டும் மரப்பட்டைகள் காயும் வரைவிட்டு வைத்திருப்பதால் வந்தபெயர் போலும்.

**நெட்டாள்** *nettāḷ,* பெ. (n.) வரிவகை (தெ.க.தொ.7,489); tax.

*[நெடு → ஆள்]*

நெட்டாள் : வெட்டி என்னும் தற்காலிகப் பணியாள் போன்றதொரு வேலையாள். ஊர்ப் பொது வேலைகளைச் செய்வதற்கென்று அமர்த்தப்பட்டு, சிறிதே ஊதியமும் சோறும் பெறுவார். அவர்களிடம் வாங்கப்பட்ட வரி. (கல்.அக.).

**நெட்டி**[1] *neṭṭi,* பெ. (n.) **1.** உடற் பொருத்து; joints of the body. **2.** எலும்பு (அ.நி.); bone. **3.** சுடக்கு (வின்.); cracking noise of the finger- joints. **4.** சோம்பல் (நாமதீப.711); idleness, laziness.

**தெ.** நெடிக.

*[நெடு → நெட்டி.]*

**நெட்டி**[2] *neṭṭi,* பெ. (n.) **1.** இறகு போன்ற இலைகளையுடைய தண்ணீரில் மிதக்கும் ஒருவகைப் பயிரி (தாவரம்); pith plant. **2.** ஒப்பனைப் பொருள்கள் செய்யப்பயன்படும், நெட்டியின் தண்டுப் பகுதி; cork-like stalk of the pith plant. ***நெட்டி மாலை ஒன்று வாங்கி வா.*** **3.** புல்வகை; a kind of grass.

வகைகள் : 1. கொடி நெட்டி, 2. கோரை நெட்டி, 3. பூ நெட்டி, 4. வயல் நெட்டி, 5. மூங்கில் நெட்டி, 6. பெரு நெட்டி, 7. நெரி நெட்டி (சம்பம்புல்), 8. நறுக்கு நெட்டி, 9. ஆற்று நெட்டி. (சா.அக.).

நெட்டி : ஒரு சிறு செடி. நெட்டியினத்தில் பலவகை இருந்தாலும் இந்தியாவில் இரண்டு வகை நெட்டிகளே காணப்படுகின்றன. ஒரு வகை ஆற்று நெட்டி. இது வங்காளம், அசாம், தென்னிந்தியா போன்ற இடங்களில் காணப்படுகிறது. பொதுவாகச் சதுப்பான இடங்களிலும், நீர் தேங்கியுள்ள பகுதிகளிலும், மடுக்களிலும், ஓடைகளிலும், குளம், ஏரி, ஆறு ஆகியவற்றின் ஓரங்களிலும் இதைப் பார்க்கலாம். இதன் தண்டு 6 அடி முதல் 10 அடி வரை நீரில் மிதந்து கொண்டு வளரும்; கிளைகள் மிகச் சிலவே உண்டாகும்; இலைகள் தொட்டால் சுருங்கிக் கொள்ளும் இயல்பின; பூக்கள் மஞ்சள் நிறமுடையன. இதன் தண்டைத் துண்டுதுண்டாக வெட்டிக் காயவைத்துப் பயன்படுத்துவார்கள். நெட்டியானது வெப்பம் உட்புகுந்து செல்லாத காப்பீடு (insulating) பொருள். இதிலிருந்து வெயில் மறைக்கும் தொப்பி செய்வார்கள். பொம்மை, பூ, தோரணம், மாலை, விளையாட்டு பொருகள் செய்வார்கள். நீந்துதற்குரிய ஆடைகளும், நீரில் உயிர் காப்புக்குரிய பட்டிகளும் (Life belts) செய்வார்கள். புட்டிகளுக்கு அடைப்பான் செய்யவும் இது உதவும்.

இந்தியாவிலுள்ள மற்றொரு நெட்டி இனம் தக்கை என்பது. இது கடினமான நெட்டி வகை. இதன் தண்டு தடிப்பாக வளராது மெல்லியதாக வளரும். இச்செடியில் பல கிளைகள் இருக்கும். இதுவும் வங்காளம், அசாம், தென்னிந்தியா போன்றவிடங்களில் வளரும். இந்நெட்டி வகை ஆற்று நெட்டியை நோக்க மட்டமானதே. இருந்தாலும் இதிலிருந்தும் தொப்பிகள் செய்யப்படுகின்றன.

**நெட்டி**[3] *neṭṭi,* பெ. (n.) மீனின் வயிற்றுக்குள் இருக்கும் காற்றுப்பை; fish air sac part.

**மறுவ.** பாளை.

நெட்டி எடுப்பதுபோல் ஒலிவரும் காற்றுப்பை. ஆயின் நீருக்குள் வெளிப்படும் காற்று ஓசையற்றே இருக்கும்.

**நெட்டிக்கோரை** *neṭṭi-k-kōrai,* பெ. (n.) கோரைப்புல் வகை (மூ.அ.); a kind of sedge.

*[நெட்டி[2] + கோரை. நீளமான கோரைவகை.]*

**நெட்டிச்செடி** *neṭṭi-c-ceḍi,* பெ. (n.) தக்கைச் செடி; pith plant - Aeschynomens aspera.

**மறுவ.** கொக்கேரி, ஆற்று நெட்டி, சடைச்செடி, கிடைச்சி (சா.அக.)

*[நெட்டி + செடி. நெட்டி[2] பார்க்க.]*

இரண்டு ஆண்டில் காய்த்துவிடக் கூடிய செடி; இது நீரில் மிதக்கும் கிளைகள் வாய்ந்தது. இதன் இலைகள் இறகைப் போன்றது. சிற்றிலைகள் பல காணப்படும். பூக்கள் இரண்டு இதழ்களைக் கொண்டது. பூக்காம்பும் இலைக்காம்பும் மொசு மொசுப்பாயிருக்கும். பூக்கள் மஞ்சள், வெள்ளை முதலிய பல நிறம் கொண்டவை. இதன் இலையைக் கீரையாக உண்ணலாம்.

**நெட்டிசை** *neṭṭisai,* பெ. (n.) மண்டிலப்பாவின் (விருத்தத்தின்) நெடிய ஓசை (சந்தம்) (வின்.); long metre in *viruttam* verse, opp. to *kuṟṟisai.*

*[நெடு + இசை]*

எ—டு.

"*ஏறுமயில் ஏறிவிளை யாடும் முகம் ஒன்றே*
*ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே*
*கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே*
*குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்றே*
*மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே*
*வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்றே*
*ஆறுமுக மானபொருள் நீ அருளல் வேண்டும்*
*ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே*"
(திருப்புகழ்)

இது நெடிய ஓசை (சந்தம்) உள்ள எண்சீர் மண்டிலப்பா. "*இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன்கண் விடல்*" இது குற்றிசைக்கு (சந்தத்திற்கு) எடுத்துக்காட்டு.

**நெட்டிடை** *neṭṭiḍai,* பெ. (n.) நெடுந் தொலைவு; long distance. "*நீங்கினன் றன்பதி நெட்டிடை யாயினும்*" (மணிமே.3:41). "*நீல மாக்கடல் நெட்டிடை யன்றியும்*" (மணிமே. 8: 17). "*நெட்டிடை நெறிகளும் நிகரில் கானமும்*" (சீவக. 1216).

*[நெடு + இடை. இடை = தொலைவு]*

**நெட்டித்தள் ளு—தல்** *neṭṭi-t-taḷḷu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒருவரை அல்லது ஒன்றினை விசையோடு கைகளால் தள்ளுதல்; to push violently. *திருடனைக் காவலாளி நெட்டித் தள்ளினான்; பையனை நாள்தோறும் நெட்டித் தள்ளாத குறையாகப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பவேண்டியிருக்கிறது.*

*[நெட்டி¹ + தள்ளு—தல்.]*

**நெட்டிப்புல்** *neṭṭi-p-pul,* பெ. (n.) அயிரி என்ற புல்வகை (வின்.); a long grass.

மறுவ. நெட்டிக்கோரை

*[நெட்டி + புல்]*

**நெட்டிப்பூ** *neṭṭippū,* பெ. (n.) கிடைச்சி பூ; pith - flower.

*[நெட்டி² + பூ]*

**நெட்டிப்பொரி** *neṭṭi-p-pori,* பெ. (n.) நெட்டிப் பூ மாலை (வின்.); garland made of pith-flowers.

*[நெட்டி² + பொரி. பொரி = பூ]*

**நெட்டிமாலை** *neṭṭi-mālai,* பெ. (n.) *நெட்டிப் பொரி* பார்க்க; see *neṭṭi-p-pori.*

*[நெட்டி² + மாலை]*

**நெட்டிமுட்டி** *neṭṭimuṭṭi,* பெ. (n.) செடி வகை (பரி.அக.); a plant.

*[நெட்டி² + முட்டி]*

நெட்டியாகவும்,முட்டியாகவும் கிளைகளைக் கொண்ட செடிவகை.

**நெட்டிமுறி—த்தல்** *neṭṭi-muri-,* 4செ.கு.வி.(v.i.) 1. சோம்பல் முறித்தல்; to stretch onself. *படுக்கையில் இருந்து நெட்டி முறித்துக் கொண்டே எழுந்தான்.* 2. மடக்கிய அல்லது நீட்டிய விரல்களை அழுத்தி ஒலியுண்டாகு மாறு செய்தல், சொடுக்குப் போடுதல்; make a sharp crackling sound by pressing a finger. "*விளக்கு வைத்த நேரத்தில் நெட்டி முறிக்காதே*" என்று பாட்டி திட்டினாள்.

*[நெட்டி + முறி — த்தல்.*
*நெட்டி¹ = சோம்பல்]*

**நெட்டிமையார்** *neṭṭimaiyār,* பெ. (n.) கழகக் காலப் புலவர்; a Šangam poet.

இவர், நீண்ட இமைகளையுடையவர் என்னுங் காரணியம் கருதி இப்பெயர் பெற்றிருக்கலாம். இவர் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் புறநானூற்றில் (9,12,15) பாடியுள்ளார். இவர் பாடல்களால் பகைவர் அரண்களை அழித்து அவை இருந்த இடத்தைக் கழுதை பூட்டி உழுது பாழ்படுத்தும் வழக்கம் அக்காலத்து இருந்தது என்பதும், முதுகுடுமி ஊன் வேள்வியல்லாத நெய்ம்மலி (ஆகுதி பொங்கும்) வேள்வி வேட்டனன் என்பதும் புலப்படுகின்றது.

*"பாணர் தாமரை மலையவும் புலவர்*
*பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்*
*அறனே மற்றிது விறன்மாண் குடுமி*
*இன்னா வாகப் பிறர்மண்கொண்*
*டினிய செய்திநன் னார்வலர் முகத்தே."*
(புறநா.12)

*[நெடு → நெட்டு → நெட்டி + இமை + ஆர்]*

**நெட்டியிடுக்கி** *neṭṭi-y-iḍukki,* பெ.(n.) தக்கையைக் குழையினின்று விடுவிக்கும் ஒருவகைக் கருவி; cork screw. (சா.அக.)

*[நெட்டி² = தக்கை. நெட்டி + இடுக்கி]*

**நெட்டியெடு–த்தல்** *neṭṭi-y-eḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** சொடுக்கெடுத்தல்; to crack the fingers, knuckles or toes. *விரல்களை நெட்டியெடுத்து விடு.* **2.** வருத்துதல்; to oppress, exact heavy work. *வேலை இன்று நெட்டி யெடுத்து விட்டது. உடம்பு நெட்டியெடுக்க வேலை செய்து கூலி கேட்டால் சீற்றம் கொள்ளலாமா?*

**மறுவ.** சொடுக்கெடுத்தல்

*[நெட்டி¹ + எடு–த்தல்.]*

**நெட்டில்** *neṭṭil,* பெ. (n.) மூங்கில் (மலை.); bamboo.

**து.** நெடிறு (ஒருவகைப் புல்)

*[நெடு → நெட்டு → நெட்டில். நீண்டு வளரும் மூங்கில்.]*

**நெட்டிலிங்கம்** *neṭṭiliṅgam,* பெ. (n.) மரவகை (மூ.அ.); Indian mast tree.

**மறுவ.** அசோகமரம்

**நெட்டிலிங்கம் :** இதை அசோகமரம் என்றும் கூறுவதுண்டு. நகரங்களில் பூங்காக்களிலும், சாலைகளிலும் இதை வைப்பதுண்டு. இம்மரம் இலங்கையில் இருந்து இந்தியாவுக்குக் கொண்டு வந்து வளர்க்கப்பட்டதாகத் தோன்றுகிறது. இதன் கிளைகள் குட்டையானவை; இலைகள் மிகுதி, இலைகளின் விளிம்புகள் அலை அலையாய் இருக்கும்; இதன் காய்கள் கொத்துக் கொத்தாய் இருக்கும்; பூக்கள் குறுகிய மஞ்சரித்தண்டின் நுனியில் குடை மஞ்சரியாக இருக்கும். இதன் இலைகளை மாவிலைகளுடன் சேர்த்து வீடு, கோயில் முதலானவற்றில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளில் தோரணமாகக்கட்டுவர்.

குடும்பம் – Annonaceae
இனம் – polyalthia longifolia.

**நெட்டிலிங்கு** *neṭṭiliṅgu,* பெ. (n.) **நெட்டிலிங்கம்** (சங்.அக.) பார்க்க; see *neṭṭiliṅgam.*

நெட்டிலிங்கு–அம் சாரியை கெட்டது.

**நெட்டிவாங்கு–தல்** *neṭṭi-vāṅgu-,* 5 செ. குன்றாவி.(v.t.) **நெட்டியெடு–த்தல்** பார்க்க; see *neṭṭiyeḍu-.* இந்த வேலை *நெட்டி வாங்குகின்றது.*

*[நெட்டி + வாங்கு–தல்.]*

**நெட்டிவேலை** *neṭṭi-vēlai,* பெ. (n.) நெட்டியாற் செய்த ஒப்பனை வேலை; ornamental pith-work.

*[நெட்டி² + வேலை]*

**நெட்டு¹–தல்** *neṭṭu-,* 5செ.குன்றாவி.(v.t.) **1.** தள்ளுதல் (உ.வ.); to thrust, push. *கம்பால் ஒரு நெட்டு நெட்டு.* **2.** ஒன்றில் தாக்குதல் (வின்.); to strike, as a stone or ball. **3.** மிக வுண்ணுதல் (வின்.); to eat or drink to excess, used in contempt. *சாப்பாட்டை ஒரு நெட்டு நெட்டினான்.*

**தெ.** நெட்டு

*[நீள் → நெள் → நெடு → நெட்டு → நெட்டு–தல்]*

**நெட்டு²** *nettu,* பெ. (n.) 1. தள்ளுகை; pushing, thrusting. *கழியால் நெட்டினான்.* 2. தாக்குகை; striking, skipping as a stone or ball.

*[நெட்டு¹ → நெட்டு²]*

**நெட்டு³** *nettu,* பெ. (n.) 1. நெடுமை; length, tallness. *அவன் நெட்டு விட்டிருக்கிறான் (இ.வ.) அவன் நெட்டு நெடுமரமாய் வளர்ந்திருக்கிறான்.* 2. நெடுந்தொலைவு; long distance. "*நெட்டிலே யலை யாமல்*" (தாயு.மலைவளர்.2), 3. அகலம்; extent as of the breadth of a pial. 4. ஓரிடத்திற்குப் போய்த் திரும்பும் தடவை (வின்.); times, number, turn, as in going, and coming. 5. உப்பு மேடை (C.G.); platform for the storage of salt. 6. காம்பு (யாழ்ப்.); stalk, peduncle. 7. செருக்கு; pride. "*நெட்டது செய்ய லாகாது காணும்*" (இராமநா.உயுத்.23). 8. குலை (வின்.); bunch, cluster.

*[நீள்→ நெள் → நெடு → நெட்டு. (மு.தா.)]*

**நெட்டுக்கட்டு-தல்** *nettu-k-kattu-,* 5செ.கு.வி. (v.i.) குலை தள்ளுதல் (யாழ்.அக.); to shoot forth in clusters as fruits.

*[நெட்டு³ + கட்டு-தல். கட்டுதல் = பிணைத்தல், காய்களைப் பிணைத்து வெளித்தள்ளுதல்.]*

**நெட்டுக்கண்பலகை** *nettu-k-kan-palagai,* பெ. (n) மண் தாங்கிப் பலகை (C.E.M); lintel.

*[நெட்டு + கண் + பலகை. நெட்டு = அகலம்]*

**நெட்டுக்குத்தலாக** *nettu-k-kuttalāga,* பெ.எ.(adj.) செங்குத்தாக, நேராக; in a vertical position, vertically. *கைக்கழியை வயலில் நெட்டுக்குத்தாக நட்டான். ஈட்டி அவன் உடம்பில் நெட்டுக்குத்தலாகப் பாய்ந்தது.*

*[நெட்டு³ + குத்தலாக. குத்து + அல் = குத்தல் → குத்தலாக]*

**நெட்டுக்குத்து** *nettu-k-kuttu,* பெ. (n.) செங்குத்து (இ.வ.); perpendicularity.

*[நெட்டு³ + குத்து. குத்து = செங்குத்து]*

நேரடியாக நிமிர்த்து நடப்படுவதை நெட்டுக்குத்தாக நட்டதாய்ச் சொல்வார்கள்.

**நெட்டுகா** *nettukā,* பெ. (n.) ஒரு வகை உகாமரம்; sack tree - Salvadora persica. (சா.அக.).

*[நெடு → நெட்டு + உகா. நீளமாக வளரும் மரவகை.]*

**நெட்டுடை-த்தல்** *nettudai-,* 4செ.குன்றாவி. (v.t.) செருக்கையடக்குதல் (உ.வ.); to put down or break one's pride. *அந்தச் சண்டையில் அவன் நெட்டுடைந்தது.* (உ.வ.)

*[நெட்டு + உடை-த்தல். உடைத்தல் = வலியடக்குதல், வலி அழித்தல்]*

**நெட்டுயிர்¹-த்தல்** *nettuyir-,* 4செ.கு.வி. (v.i.) பெருமூச்சுவிடுதல்; to sigh, fetch a deep breath. "*நெட்டுயிர்த்துத் தட்டழிந்துளறுவார்*" (தாயு.பரிபூரண.3). *எப்போதும் நெட்டுயிர்க் கின்றான். நீண்ட அமைதிக்குப் பின்னர் ஒரு நெட்டுயிர்ப்பு மட்டுமே வெளிவந்தது.*

*[நெடு → நெட்டு + உயிர்-தல். உயிர்த்தல் = மூச்சு விடுதல்]*

**நெட்டுயிர்²** *neṭṭuyir,* பெ. (n.) உயிர் நெடில்; long vowel. "*நெட்டுயிர் காரமும்..... பெறும்*" (நன்.126).

*[நெட்டு + உயிர்]*

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழு உயிரெழுத்தும் நெட்டுயிர் (உயிர் நெடில்).

**நெட்டுயிர்ப்பு** neṭṭuyirppu, பெ. (n.) பெருமூச்சு, நீண்ட மூச்சு; sighing, deep breath as induced by pain or grief. "*நெட்டுயிர்ப் போடுற்ற பிணம்*" (நீதிநெறி.78). *குழந்தை நெட்டுயிர்ப்பு செய்கின்றது. நீண்ட நேர அமைதிக்குப் பின்னர் ஒரு நெட்டுயிர்ப்பு மட்டுமே விடையாக வந்தது.*

*[நெடு → நெட்டு + உயிர்ப்பு]*

**நெட்டுயிர்ப்புவீங்கு-தல்** neṭṭuyirppu-vīṅgu-, 5செ.கு.வி. (v.i.) **நெட்டுயிர்-த்தல்** பார்க்க; see *neṭṭuyir-.*

*[நெட்டுயிர்ப்பு + வீங்கு-தல். பெருமூச்சு விடுதல்]*

**நெட்டுயிர்ப்பெறி-தல்** neṭṭuyirppeṟi-, 2 செ.கு.வி. (v.i.) **நெட்டுயிர்**¹**-த்தல்** பார்க்க; see *neṭṭuyir¹-.*

*[நெடு + உயிர்ப்பு - நெட்டுயிர்ப்பு + எறி-தல். பெருமூச்சு விடுதல். ]*

**நெட்டுரு** *neṭṭuru,* பெ. (n.) மனப்பாடம் (உ.வ.); rote-learning. *மனப்பாடச் செய்யுள் முழுவதையும் நெட்டுரு செய்து விட்டாள்: விடையை மட்டுமல்ல, கேள்வியையும் நெட்டுருச் செய்யும் மாணவர்களும் இருக்கிறார்கள்.*

*[நெடு + உரு]*

**நெட்டுருப்படுத்து-தல்** *neṭṭuru-p-paḍu-,* 5செ.குன்றாவி. (v.t.) *நெட்டுருப்பண்ணு-தல்* பார்க்க; see *neṭṭuru-p-paṇṇu-.*

**மறுவ.** நெட்டுருப்பண்ணு.

*[நெட்டுரு + படுத்து-தல்]*

பழந்தமிழில் அசையும் சீரும், நெட்டுருப் படுத்த வாய்ப்பாயிற்று. எ.கா. எம்மை மறந்தாரை யாம் மறக்க மாட்டேமால்? (சிலப். - கானல் வரி)

**நெட்டுருப்பண்ணு-தல்** *neṭṭuru-p-paṇṇu-,* 5செ.குன்றாவி.(v.t.) மனப்பாடம் செய்தல் (உ.வ.); to learn by rote. *பாடத்தை அப்படியே நெட்டுருப் பண்ணும் மாணவரும் உள்ளனர்.*

*[நெட்டுரு + பண்ணு-தல் = மனப்பாடம் செய்தல்]*

நன்கு படியும்படிப் படித்தால் நெட்டுருப் பண்ணியது சாகும் வரை நினைவில் நிற்பதால் அறிவு நரம்புகளில் நெடிய உருக்கொள்ளுதல் இயல்பு.

**நெட்டுருப்போடு-தல்** *neṭṭuru-p-pōḍu-,* 19செ.குன்றாவி. (v.t.) *நெட்டுருப்பண்ணு-தல்* பார்க்க; see *neṭṭuru-paṇṇu-.*

*[நெட்டுரு + போடு-தல்.]*

இலக்கணத்து எதுகையும் மோனையும்
நெட்டுருப் போட வாய்ப்புச் செய்தன. எ.கா.
மலையிடைப் பிறவா மணியே என்கோ?
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ?
(சிலப்.-மனையறம்)

இக்கால் இப்பயிற்சியும் சொற்பயிற்சியும்
இல்லாததார் புதுக்கவிதை (புதுப்பா)
எழுதுகிறார்கள்.

**நெட்டுலிங்கம்** *neṭṭuliṅgam,* பெ. (n.) **நெட்டிலிங்கு** பார்க்க; see *neṭṭiliṅgu.* (சா.அக.).

*[நெட்டிலிங்கு → நெட்டுலிங்கம்]*

**நெட்டுலை** *nettulai,* பெ. (n.) விடாச் சமையல்; incessant cooking. "*நெட்டுலைக் கழுநீர்*" (கம்பரா.நாட்டு.26). *வடலூர் இராமலிங்கர் சபையில் நெட்டுலை எப்போதும் எரிந்து கொண்டிருக்கும்.*

*[நெடு + உலை]*

திருமண வீடுகளில் கொல்லைப் புறத்தில் மண்வெட்டியால் வெட்டப்பட்ட நீண்ட அடுப்பில் வைக்கப்படும் குண்டான், அண்டான் உலைகளும் ஆம்.

**நெட்டுவட்டி** *nettu-vatti,* பெ. (n.) இயல்பான (சாதாரண) வட்டி (இ.வ.); simple interest.

*[நெடு + வட்டி]*

நெடுங்காலம் தவணைதந்து பெறும் வட்டியைக் குறிக்கும். நெடிய விழுக்காடோ, நெட்டித் தள்ளி அச்சுறுத்தியோ பெறும் வட்டியாயின் கடுவட்டியைக் குறிக்கும்.

**நெட்டுவிடு-தல்** *nettuvidu-,* 20செ.கு.வி. (v.i.) நெட்டையாதல் (நெல்லை); to grow tall.

*[நெட்டு + விடு-தல்.]*

**நெட்டூத்தி** *nettūtti,* பெ. (n.) நெட்டூதி (யாழ்.அக.) பார்க்க; see *nettūdi.*

*[நெட்டு + ஊத்தி. தோன்றல் திரிபு.]*

**நெட்டூதி** *nettūdi,* பெ. (n.) 1. ஒரு வகைச் சங்கு(வின்.); a long spiral conch. 2. எக்காளம்; trumpet, a kind of cornet.

*[நெட்டு + ஊதி. ஊது → ஊதி]*

இடைவிடாது நீண்ட ஓசையைக் கொடுக்கும் சங்கு வகை.

**நெட்டெழுத்து**[1] *netteluttu,* பெ. (n.) 1. இரண்டு மாத்திரை அளவு கொண்ட உயிரெழுத்து; long vowel. "*நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே*" (தொல்.எழுத்து.41). 2. பெயர் முழுமையும் அடங்கிய கையெழுத்து; signature in full, autograph.

*[நெடு → நெட்டு + எழுத்து]*

நீரும் நீரும் சேர்ந்தாற் போலக் குற்றெழுத்து இரண்டொத்து நின்று நீண்டிசைப்பது நெட்டெழுத்து (உ.சொ.க.)

**நெட்டெழுத்து**[2] *netteluttu,* பெ. (n.) 1. ஆவணம் (பத்திர) முதலியன எழுதுகை; document writing. "*ஆவணத்தின்... நெட்டெழுத்துக்கூலி*" (பஞ்ச.திருமுக.1584). 2. ஆவணத்தின் (பத்திரத்தின்) உடல் (யாழ்.அக.); the body of a document or letter.

*[நெட்டு + எழுத்து. நெட்டு = நெடுமை]*

**நெட்டெழுத்து**[3] *netteluttu,* பெ. (n.) தொலைவு (தூரம்) பார்வை நோய் (சாலேசரம்) (இ.வ.); long-sight. *அவனுக்கு நெட்டெழுத்து வந்துவிட்டது. நாற்பது அகவைக்குப்பின் நெட்டெழுத்து வரும்.*

*[நெடு → நெட்டு + எழுத்து]*

அருகில் உள்ளவற்றைப் பார்க்க முடியாத பார்வைக்குறை நோய். இவர்களால் தொலைவில் உள்ளவற்றை மட்டுமே தெளிவாகப் பார்க்க இயலும்.

**நெட்டெழுத்துக்காரன்** *netteluttu-k-kāran,* பெ. (n.) ஆவண (பத்திர) மெழுதுவோன் (வின்.); document-writer. *ஆவணம் எழுத நெட்டெழுத்துக் காரனைக் கூட்டிவா.*

*[நெட்டெழுத்து[2] + காரன்]*

**நெட்டெழும்பல்** *nettelumbal,* பெ. (n.) காரமெழும்பல்; rising of strong pungent smell as from medicine or drugs when grinding. (சா.அக.).

*[நெட்டு + எழும்பல். நெட்டு = காரம்]*

**நெட்டை**[1] *neṭṭai,* பெ. (n.) 1. நெடுமை, மிக்கவுயரம்; tallness. "*நெட்டைக் குயவற்கு*" (திருப்பு.1038). "*ஒட்டல்வாய் நெட்டைப் பேய்கள்*" (திருவிளை.இந்திரன்பழி.43). "*நெட்டை மரங்களென நின்று புலம்பினார் பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ*" (பாஞ்சாலி சபதம், பாரதியார்). *நெட்டைப் பனைமரம், நெட்டை நெடுமரம்.* 2. படை வகை (பதிற்றுப்.42:3 உரை); a kind of weapon. 3. முழுவெலும்புக்கூடு (சது.); skeleton.

ம. நெடுக்கம்; து. நெட்டனெ; தெ. நிமர.

*[நெடு → நெட்டை]*

**நெட்டை**[2] *neṭṭai,* பெ. (n.) பிணம் (பாண்டி.); carcass.

*[நெடு → நெட்டை]*

பிணமான மாந்தர் உடல் வளையாமல் நெட்டையாய்க் கிடக்கும். இடுகாட்டில் இவ்வாறு புதைக்கப்படுவதாலும், சுடுகாட்டில் நெருப்பு வைக்கப்பட்ட பிணம், நரம்பியல் நோயாளியாயின் மடித்தெழும் அப்போது வெட்டிச்சாய்த்து நெட்டை யாக்குவதாலும் நெட்டை என்றாயிற்று.

**நெட்டை**[3] *neṭṭai,* பெ. (n.) 1. மெய்க்குற்றம் ஐந்தனுள் ஒன்றான சோம்பல் முறிக்கை (பிங்.); stretching oneself, one of five mey-k-kuṟṟam. 2. சொடுக்கு விடுகை (வின்.) ; cracking the finger-joints.

*[நெட்டி → நெட்டை]*

**மெய்க்குற்றங்கள்** : 1. கொட்டாவி, 2. நெட்டை, 3. குறுகுறுப்பு (குறட்டை), 4. கூன் கிடை, 5. நட்டுவிழல் (தலைசாய்கை).

**நெட்டைக்கங்காளம்** *neṭṭai-k-kaṅgāḷam,* பெ. (n.) நெட்டையெலும்பு, பொருத்தெலும்பு; joints of the body. (சா.அக.).

*[நெட்டை + கங்காளம். கங்காளம் = தசை கழிந்த உடலின் எலும்புக்கூடு, எலும்பு]*

**நெட்டைக்குத்து** *neṭṭai-k-kuttu,* பெ. (n.) நெட்டுக் குத்து (இ.வ.) பார்க்க; see *neṭṭu-k-kuttu.*

*[நெட்டை + குத்து. நெட்டு → நெட்டை]*

**நெட்டைக்கேழ்வரகு** *neṭṭai-k-kēḻ-varagu,* பெ. (n.) கேழ்வரகு வகை; a kind of ragi.

*[நெட்டை (=நீண்டது) + கேழ்வரகு. ஐந்து மாதத்தில் விளையும் கேழ்வரகு வகை]*

**நெட்டைக்கோரை** *neṭṭai-k-kōrai,* பெ. (n.) நீண்ட கோரை வகை; tall koray.

*[நெட்டை + கோரை. நெட்டை = உயரம், நீளம்]*

**நெட்டைநாரத்தை** *neṭṭai-nārattai,* பெ. (n.) மரவகை (L.); a kind of cherry nutmeg.

*[நெட்டை + நாரத்தை]*

நாரத்தை → நாரந்தை என்ற சொல்லைக் கிரேக்கம், இலத்தின் Norange என்று எடுத்தன. அவற்றின் வழிவந்த ஆங்கிலம் Orange எனக் கொண்டது என்பது பாவாணர் கருத்து.

**நெட்டைப்பேய்மருட்டி** *neṭṭai-p-pēy-maruṭṭi,* பெ. (n.) இரட்டைப் பேய் மருட்டி; Malabarical mint-Anisomeles malabarica. (சா.அக.).

*[நெட்டை + பேய்மருட்டி. வெதுப்படக்கி என்னுஞ்செடி வகை.]*

**நெட்டையன்** *neṭṭaiyaṉ,* பெ. (n.) நெடியவன் (உ.வ.); tall man.

க. நீடியன்

*[நெட்டை → நெட்டையன்]*

**நெட்டைவாங்கு–தல்** *neṭṭai-vāṅgu-,* 5செ.கு.வி. (v.i.) நெட்டிமுறி–த்தல் பார்க்க; see *neṭṭi-muṟi-.* (சா.அக.).

*[நெட்டை + வாங்கு–தல். நெட்டு + இ– நெட்டி, நெட்டு + ஐ–நெட்டை.]*

**நெட்டோடை** *neṭṭōḍai,* பெ. (n.) நீண்டவோடை; long brook.

*[நெடு → நெட்டு + ஓடை]*

**நெட்டோலை[1]** *neṭṭōlai,* பெ. (n.) திருமுகம்; epistle, message. "*அமணர் தங்கள்பாற் செல்லவிட்டனன் கட்டி நெட்டோலை*" (திருவாலவா.26:2).

*[நெடு + ஓலை]*

பெரும்பாலும் பனை ஒலையாலும் சிறுபான்மை தாழை மடல், தாமரை இலை போன்றவற்றாலும் முடங்கல் எழுதப்பட்டது. இன்று பலவகையிலும் செய்திகள் அனுப்பப்படுகின்றன. மன்னர்களே அன்றிக் காதலர்களும் திருமுகம் அனுப்புவர்.

மாதவி தாழை மடலில் பித்திகை மொக்கால் மடல் எழுதி கோவலனுக்கு அனுப்பியதாகச் சிலம்பதிகாரம் கூறுகிறது. "*முதிர்பூந்தாழை முடங்கல் வெண்தோட்டு ... ... ... அயலது பித்திகைக் கொழு முகை ஆணி கைக்கொண்டு*" (சிலப்.8:49,54).

**நெட்டோலை[2]** *neṭṭōlai,* பெ. (n.) பனை ஓலைப்பாய் (பறியோலை); mat of plaited palmyra-leaf. "*நெட்டோலைச் சயனத்தார்*" (நூற்றெட்டுத். திருப்புகழ்.95). "*நெட்டோலை வாசியா நின்றான் நெடுமரம்*" (ஔவையார்).

*[நெடு → நெட்டு + ஓலை. நெடு அகலத்தைக் குறிக்கும்.]*

பனையோலையிலும், தென்னைஓலையிலும் கூரையும், பாயும், தடுக்கும் அமைக்கப்பட்டன. கோரையால் பாய் முடைதலும் உண்டு.

**நெடநெடெனல்** *neḍa-neḍeṉal,* பெ. (n.) மரம் முதலியன முறிந்து விழும் ஒலிக்குறிப்பு (கூடா.); onom. expr. signifying crashing sound, as of a falling tree. *வேப்பமரம் நெடநெடென முறிந்து விழுந்தது.*

*[நெடு → நெட → நெடநெட + எனல் நெடநெடெனல் = ஈருக்கொலிக் குறிப்பு. இரட்டைக்கிளவி.]*

**நெடலை** *neḍalai,* பெ. (n.) நாரை வகை (நற்.211,உரை); a kind of stork bird.

*[நெடு → நெட → நெடலை]*

**நெடி[1]–த்தல்** *neḍi-,* 4செ.கு.வி. (v.i.) 1. பொழுது நீட்டித்தல்; to make delay. "*நெடியா தளிமின்*" (சிலப்.16:21). 2. காலந் தாழ்த்தல் ; to delay in time.

*[நெடு → நெடி → நெடி – த்தல்.]*

**நெடி[2]** *neḍi,* பெ. (n.) 1. மிளகாய் முதலியன கமறல் நாற்றம்; pungent odour causing a choking sensation, as of fried chillies. *மிளகாய் கருகும் நெடி அடிக்கிறது.* 2. காரம் (இ.வ.); strong pungent smell. *சாத்தூர் மிளகாய்க்கு நெடி மிகுதி.* 3. கெட்ட நாற்றம்; stench. *சாக்கடையில் நெடி மிகுதியாகி விட்டது, எடுக்கவேண்டும்.* 4. மருந்தின் காரல் மணம்; the pungent smell of medicinal drugs or medicine. *மருத்துவமனை நெடி தாங்க முடியவில்லை.*

க. நீடி.

*[நெடி = முகர்வதற்கு ஏற்றதாக இல்லாத மணம்.]*

**நெடி[3]** *neḍi,* பெ. (n.) சிள்வண்டு; cricket. "*நெடிபடு கானத்து*" (பு.வெ.1:3). "*நெடிக்கடிய வெங்கானடுங்கிட*" (வேதாரணியபு.சோரச்.45:8).

மறுவ. சிள்வீடு, சிள்ளீடு.

*[நுல் → நுள் → நெள் → நெடி.]*

**நெடிசு** *neḍisu,* பெ. (n.) நெடிது; long. *அவன் கால்சட்டை நெடிசு. நெடிசா வளர்ந்திருக்கிறான்.*

*[நெடு → நெடிசு]*

**நெடித்தற்பொழுது** *neḍittar-poḻudu,* பெ.(n.) காலத்தாழ்வு (தாமதம்) (திவா.); delay, procrastination.

*[நெடி → நெடித்தல் + பொழுது]*

**நெடிது**[1] *neḍidu,* வி.எ.(adv.) காலத்தாழ்வாக; to delay time. "*நெடிது வந்தன்றா னெடுந்தகை தேரே*" (புறநா.296).

*[நெடு → நெடி → நெடிது]*

**நெடிது**[2] *neḍidu,* பெ. (n.) நெடுங்காலம்; long time, long period. "*அற்றால் அளவு அறிந்து உண்க அஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்கும் ஆறு.*" (குறள்,943).

*[நெடு → நெடி → நெடிது]*

**நெடிதுயிர்–த்தல்** *neḍiduyir-,* 4செ.கு.வி. (v.i.) நெட்டுயிர்–த்தல் பார்க்க; see *neṭṭuyir-.* "*உரோகிணி நினைவனணோக்கி நெடிதுயிரா*" (நெடுநல்.163).

*[நெடு → நெடி → நெடிது + உயிர்–த்தல்.]*

**நெடிப்பினை** *neḍi-p-piṉai,* பெ. (n.) வங்க மணல்; leadore. (சா.அக.).

**நெடிப்பு** *neḍippu,* பெ. (n.) 1. நெடுநேரம்; long time. "*நெடிப்புறச் சானமுற்றிருந்து*" (சேதுபு. பராவசு.37). 2. கால நீட்சி ; lengthening of time.

*[நெடு → நெடி → நெடிப்பு]*

**நெடிய** *neḍiya,* பெ.எ. (adj.) 1. நீளமான; long. *நெடிய தெரு; நெடிய விரல்கள்.* 2. உயரமான; tall, high. *நெட்ட நெடியமரம்; நெடிய வாயில்கள்.* 3. காலத்தால் நீண்ட; long in time. *நெடிய துயில்.*

*[நெடு → நெடிய]*

**நெடியவட்டம்** *neḍiya-vaṭṭam,* பெ.(n.) பெரிய கேடகம் (சூடா.); large shield. *போரில் நெடிய வட்டம் உடைந்து விட்டது.*

*[நெடு → நெடிய + வட்டம். நெடு – அகலப் பொருளில் வந்தது.]*

**நெடியவன்** *neḍiyavaṉ,* பெ. (n.) 1. நெட்டையன்; tall man. 2. திருமால்; Lord Vishṇu. "*நெடியவன் கேழலாகி*" (திருவாத.).

*[நெடு → நெடி → நெடியவன்]*

குறுவடிவில் (வாமனம்) மாவலி என்னும் மலைஞால மன்னனிடம் இரந்து நின்று, மூவடி மண் கேட்க, அவனிசைந்ததும் நெடுவடிவம் கொண்டு ஓரடியால் மண் அளந்து, இரண்டாம் அடியால் விண் அளந்து மூன்றாம் அடிக்கு இடம் கேட்டபோது தலை தாழ்த்தினான் என்பது தொன்மக்குறிப்பு (நெடியோன் பார்க்க.)

**நெடியவாயன்** *neḍiya-vāyaṉ,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. "*ஓவிநெடிய வாயன்*" (பறாளை.பள்ளு.16).

*[நெடு → நெடிய + வாயன்]*

**நெடியன்** *neḍiyaṉ,* பெ.(n.) நெட்டையன்; a tall man.

க. நிடியன்

*[நெடு → நெடி → நெடியன்]*

**நெடியா** *neḍiyā,* பெ. (n.) குறட்டைச் செடி; round snake gourd - Trichosanthus palmata. (சா.அக.).

**நெடியாமி** *neḍiyāmi,* பெ. (n.) தென்னை; cocoanut tree - Cocos nucifera. (சா.அக.).

*[நெடு → நெடி → நெடியாமி. நீண்டு உயர்ந்த தென்னை.]*

**நெடியான்** *neḍiyāṉ,* பெ. (n.) நெட்டையன்; tall man. *"நெடியார் குறியாரை ஆற்றிலே தெரியலாம்"* (பழ.).

*[நெடியவன் → நெடியான்]*

**நெடியோன்**[1] *neḍiyōṉ,* பெ. (n.) **1.** நெட்டையானவன்; tall person. *இவனுக்கு அவன் நெடியோன்.* **2.** உலகை மூன்றடியால் அளந்த திருமால்; Vishṇu, as in His Trivikrama incarnation. *"செங்க ணெடியோ னின்ற வண்ணமும்"* (சிலப்.11:51). **3.** பெரியவன்; great person. *"முந்நீர் விழவி னெடியோன்"* (புறநா.9). *இந்த வீட்டுக்கு அவர்தான் நெடியோன்.* **4.** துளசி (மலை.); sacred basil. **5.** மூக்கிரட்டைப்புல் (மலை.); the pungent smell of medicinal spreading hogweed.

*[நெடு → நெடி → நெடியோன்.]*

திருமாலின் பத்துத் தோற்றரவுகளில் ஒன்று. மன்னர் மன்னன் மாவலியிடம் இரப்பதற்காக திருமால் குறுவடிவம் கொண்டு மூன்றடி மண் கேட்டு, மன்னன் தர பின் பேருருவம் கொண்டு விண்ணையும் மண்ணையும் ஈரடியால் அளந்து மூன்றவது அடிக்கு இடம் கேட்க மன்னன் தலையைக் காட்ட தலைமீது மூன்றாவது அடியை வைத்தார். திருமால் உலகை அளக்க கொண்ட நீண்ட வடிவே அவருக்கு நெடியோன் எனப் பெயர் ஏற்பட காரணியமாயிற்று.

அனுமனும், சிவனும் கூட நீண்ட வடிவம் எடுத்ததாகத் தொன்மக் கதைகள் வழங்குகின்றன. *"நெடியோன் குன்றம்"* என்று வடவேங்கட மலையைச் சிலப்பதிகாரம் குறிக்கிறது.

*"நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும் தமிழ்வரம்பறுத்த தண்புனல் நன்னாட்டு"* (சிலப்.8:12).

**நெடியோன்**[2] *neḍiyōṉ,* பெ. (n.) கழகக் கால பாண்டிய மன்னன்; Pandiya king.

இவன் கி.மு.3000 ஆம் ஆண்டில் குமரிநாடு, பெருவள நாடு, ஒளி நாடு முதலிய பகுதிகளைக் கைப்பற்றிப் பஃறுளி என்னும் ஆற்றை வெட்டி நாட்டை விரிவாக்கி வளப்படுத்தினான். (சி.பெ.அ.)

**நெடியோன் குன்றம்** *neḍiyōṉ-kuṉṟam,* பெ. (n.) திருவேங்கடமலை; Tirupadi, as Viṣṇu's hill. *"நெடியோன்குன்றமுந் தொடியோள் பௌவமுந் தமிழ் வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு"* (சிலப்.8:1,2)

*[நெடியோன் + குன்றம்]*



**நெடில்** *neḍil,* பெ. (n.) **1.** நீளம் (திவா.); length. **2.** நெட்டெழுத்து; long vowel, opp.to kuṟil. *"குறிலே நெடிலே குறிலிணை"* (தொல். பொருள்.315). **3.** மூங்கில் (பிங்.); bamboo. *"நெடில் படுத்த வெங்கானம்"* (பாரத.வேத்.10). **4.** மிக்கது; that which is great or excessive. *"நெடிற் கொடுங்கொலை"* (இரகு.தேனு.104). **5.** நீளமானது; long. **6.** பதினைந்து முதல் பதினேழெழுத்து வரை கொண்ட கட்டளை நெடிலடி; a kind of metrics. *"மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப"* (தொல். பொருள்.செய்.36). **7.** ஐஞ்சீரடி; line of five metrical feet. *"அளவடி நெடிலடி நாற்சீ ரைஞ்சீர்"* (யா.கா.24).

*[நெடு → நெடில். குறிலை விட ஒரு மாத்திரை அளவு நீண்டு ஒலிக்கும் உயிரெழுத்து குறிலினது வேறுபாடே (விகாரமே) நெடில் (உ.சொ.க.)]*

**நெடில்தொடர்** *nedil-todar,* பெ. (n.) *நெடிற்றொடர்* பார்க்க; see *nedirrodar.*

*[நெடில் + தொடர்]*

**நெடில்தொடர்குற்றியலுகரம்** *nedil-todar-kurriyal-ugaram,* பெ. (n.) **நெடிற்றொடர் குற்றியலுகரம்** பார்க்க; see *nedirrodar-kurriyal-ugaram.*

*[நெடில் + தொடர் + குற்றியலுகரம்.]*

**நெடிலடி** *nedil-adi,* பெ. (n.) ஐந்சீரான் வரும் அடி; line of five metrical feet. "*ஐயொருசீர் நிறைதரு பாத நெடிலடியாம்*" (யா.கா.12).

**மறுவ.** கட்டளை நெடிலடி

*[நெடில் + அடி]*

எ–டு : "மேக நாட்டிற்கும் விஞ்சையர் நாட்டிற்கும் விண்ணோர், மாக நாட்டிற்கும் மலரய னாட்டிற்கும் மற்றை, நாக நாட்டிற்கும் பாதல நாட்டிற்கும் நணுகிப்போக நாட்டிய பொன்மதில் ஆனதப் புரிசை".
(கந்தபுராணம்.)

"மூவைந்தெழுத்தே நெடிலடிக் களவே ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப" (தொல். பொருள். செய்.38). நெடிலடி பதினைந்தும், பதினாறும், பதினேழும் என மூன்று நிலம் பெறும். (தொல்.பொருள். செய்.38,இளம்.).

எ–டு :

"கெஞ்சுவ தில்லை பிறர்பால்; அவர்செய்
கேட்டினுக்கும்
அஞ்சுவ தில்லை; மொழியையும்
நாட்டையும் ஆளாமல்
துஞ்சுவ தில்லை; எனவே தமிழர்
தோளெழுந்தால்
எஞ்சுவ தில்லை; புவியில் எவரும்
எதிர்நின்றே"
(பெருஞ்சித்திரனார்)

இது பதினைந்து எழுத்தாலாய நெடிலடி.

"தேன்வந்த வாயிதழ்ச் சேயிழை யாயிளஞ்
செவ்விநவ்வி
மான்வந்த வாள்விழி வஞ்சிக்கு நீதஞ்சை
வாணன்வெற்பில்
யான்வந்த வாசென் றியம்புதி யேலவர்
யாவரென்னாள்
தான்வந்த வாவுட னேநின்னை யாரத்
தழீஇக்கொளுமே"
(துஞ்சைவா.111)

இது பதினாறு எழுத்தாலாய நெடிலடி.

"புயலே சுமந்து பிறையே அணிந்து
பொருவிலுடன்
கயலே மணந்த கமல மலர்ந்தொரு
கற்பகத்தின்
அயலே பசும்பொற் கொடிநின்ற தால்
வெள்ளை அன்னஞ் செந்நெல்
வயலே தடம்பொய்கை சூழ்தஞ்சை
வாணன் மலையத்திலே"
(துஞ்சைவா.1)

இது 17 எழுத்தாலான நெடிலடி.

தொல்காப்பியர், குறளடி என்பது 4 எழுத்து முதல் ஆறு எழுத்து வரை இடங்கொண்டு வரும் என்றும், சிந்தடி ஏழு முதல் ஒன்பது எழுத்துவரையும், அளவடி பத்துமுதல் 14 எழுத்து வரையும், நெடிலடி 15 முதல் 17 எழுத்து வரையும், கழிநெடிலடி 18–20 எழுத்து வரையும் இடங்கொண்டு வரும் என்றார்.

ஒவ்வொரு சீரும் ஐந்தெழுத்தை மிகாது என்றும் கூறினர். இவ்வாறு எழுத்துகளை அளவாகத் தொல்காப்பியர் கூற யாப்பெருங்கலக் காரிகையோ இரண்டு சீர் குறளடி, மூன்று சிந்தடி, நான்கு அளவடி, ஐந்து நெடிலடி, ஆறுக்கு மேல் கழிநெடிலடி என்று சீர்கள் கணக்கில் அடியை வரையரை செய்கிறது.

"குறளிரு சீரடி சிந்துமுச் சீரடி நாலொருசீர்,
அறைதரு காலை அளவொடு நேரடி ஐயொருசீர்,
நிறைதரு பாத நெடிலடி யாநெடு மென்பணைத்தோள்,
கறைகெழு வேற்கணல் லாய்மிக்க பாதங் கழிநெடிலே"
(யா.கா.12)

**நெடிலா** *nedilā,* பெ. (n.) சம்பங்கோரைப்புல்; small sedge grass - Cyperus, rotundus. (சா.அக.).

**நெடிலி** *nedili,* பெ. (n.) **1.** கடற்பருந்து வகை (வின்.); a large sea-heron. **2.** புல்வகை (சங்.அக.); a kind of grass.

*[நெடில் → நெடிலி. உருவத்தால் நீண்ட பருந்தையும் புல்லையும் குறித்தது.]*

**நெடிலெதுகை** *nedil-edugai,* பெ. (n.) அடிதோறும் நெடிலெழுத்து எதுகையாய் வருவது; a kind of rhyme.

*[நெடில் + எதுகை]*

எ—டு :

"போமாறு தலையசைப்பீர்" என்று சொன்னான்
புதுமாறு தலைவேண்டும் ஒருவன் மீண்டும்

ஏமாறு தலையடைந்தால் இந்த நாட்டின், எழில்மாறும்;
புகழ்மாறும் என்றான்"

(பாண்டின் பரிசு—பாவேந்தர்).

"ஏடா லலங்கல் இலங்கிலை வேல்வெற்ப
ஏழுலகும்
வாடாமல் வந்தருள் வாணன்தென்
மாறையில் வல்லியன்னான்
சூடாள் குவளையு முல்லையஞ் சூட்டுஞ்
சுனையும்பந்தும்
ஆடாள் தனக்கென்கொ லோஅடி
யேன்சென் றறிவிப்பதே"

(தஞ்சைவா.110)

"கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்" (குறள்,1087).

"ஈவார்கண் என்உண்டாம் தோற்றம்
இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை" (குறள்,1059).

"யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

(குறள்,127).

"தேமா புளிமா கருவிளங் கூவிளஞ்
சீரகவற்
காமாங் கடைகாய் அடையின்வெண்
பாவிற்கந் தங்கனியா
வாமாண் கலையல்குல் மாதே வகுத்தவஞ்
சிக்குரிச்சீர்
நாமாண் புரைத்த அசைச்சீர்க் குதாரணம்
நாள்மலரே" (யா.கா.7).

"மாணார்க் கடந்த மறவெம்போர் மாறனைக்
காணாக்கா லாயிரமுஞ் சொல்லுவேன்—
கண்டக்காற்
பூணாகந் தாவென்று புல்லப் பெறுவேனோ
நாணோ டுடன்பிறந்த நான்"

(முத்தொள்.44).

"பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே"

(திருவாச.சிவபு.66–69).

"தாயாய் முலையைத் தருவானே தாரா
தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி
இனித்தான் நல்குதியே
தாயே யென்றுன் தாளடைந்தேன் தயாநீ
யென்பா லில்லையே
நாயேன் அடிமை உடனாக ஆண்டாய்
நான்தான் வேண்டாவோ."

(திருவாச.ஆனந்தமாலை.5).

"பேராசை எனும் பிணியில் பிணிபட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா! முதுசூர் பட, வேல் எறியும்
சூரா! சுரலோக துரந்தரனே"

(கந்தரனுபூதி).

"மாலோன் மருகனை மன்றாடிமைந்தனை
வானவர்க்கு
மேலான தேவனை, மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியில்
சேலார் வயல்பொழில் செங்கோடனைச்
சென்று கண்டுதொழ
நாலாயிரம் கண்படைத்திலனே அந்த
நான்முகனே"

(கந்தரலங்காரம்).

"பூவே மணமே சரணஞ் சரணம்
பொருளே யருளே சரணஞ் சரணம்
கோவே குகனே சரணஞ் சரணம்
குருவே திருவே சரணஞ் சரணம்
தேவே தெளிவே சரணஞ் சரணம்
சிவசண் முகனே சரணஞ் சரணம்
காவே தருவே சரணஞ் சரணம்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம்"

(திருவருட்பா.)

"இரண்டாம் வழுவா எழுத்தொன்றின் எதுகை" என யாப்பெருங்கலக் காரிகை கூறும். இரண்டாமெழுத் தொன்றி வரத் தொடுப்பது எதுகை. அடிதோறும் முதற் கண் இரண்டாமெழுத் தொன்றிவரத் தொடுப்பது அடியெதுகை எனப்படும்.

எ—டு :

"நாணாக் கால் பெண்மை நலனழியும்
முன்னின்று
காணாக்கால் கைவளையுஞ் சோருமால்"

(முத்தொள்.28).

இரண்டாமெழுத்து ஒன்றிவரினும் முதலெழுத்தெல்லாம் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து நாணாக்கால் என்பதற்குக் காணாக்கால் என்பதல்லது கணாக்கால் என்பது எதுகையாகாது; நாணாக்கால் என்பதற்குக் காணாக்கால் என்பதே எதுகையாம். இது அடிஎதுகை.

ஓரடியில் உள்ள நான்கு சீர்க்கண் ஏற்படும் எதுகை வேறுபாடு (விகற்பம்):

1. இணை எதுகை : முதலிரு சீர்க்கண்ணும் எதுகை வரத்தொடுப்பது.

2. பொழிப்பெதுகை : முதற்சீர்க் கண்ணும் மூன்றாஞ் சீர்க்கண்ணும் எதுகை வரத்தொடுப்பது.

3. ஒரூஉ எதுகை : முதற்சீர்க்கண்ணும், இறுதிச் சீர்க்கண்ணும் எதுகை வரத்தொடுப்பது.

4. கூழை எதுகை : முதல் மூன்று சீர்க்கண்ணும் எதுகை வரத்தொடுப்பது.

5. மேற்கதுவாய்எதுகை : முதலயற் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் எதுகை வரத்தொடுப்பது.

6. கீழ்க்கதுவாய் எதுகை : ஈற்றயற்சீர்ககண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் எதுகை வரத் தொடுப்பது.

7. முற்று எதுகை : எல்லாச் சீர்க் கண்ணும் எதுகை வரத்தொடுப்பது.

எ–டு :

"பொன்னி னன்ன பொறிசுணங் கேந்திப்
(இணை எதுகை)
பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி
(பொழிப்பு)
மின்னவி ரொளிவடந் தாங்கி மன்னிய
(ஒரூஉ)
நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி
(கூழை)
என்னையு மிடுக்கண் துன்னுவித்
தின்னடை (மேற்கதுவாய்)
அன்ன மென்பெடை போலப் பன்மலர்க்
(கீழ்க்கதுவாய்)
கன்னியம் புன்னை யின்னிழல் துன்னிய
(முற்று)
மயிலேய் சாய லவ் வாணுதல்
அயில்வேல் உண்கணெம் அறிவு
தொலைத் தனவே" (யா.கா.)

இப்பாடல் இணை எதுகை முதலிய ஏழு வேறுபாடும் (விகற்பமும்) வரத் தொடுக்கப்பட்டது.

**நெடிற்றொடர்** *nedirrodar,* பெ. (n.) நெட்டெழுத்தை யீற்றுக் கயலெழுத்தாகத் தொடர்ந்து வருங்குற்றுகரவீற்று மொழி (நன்.94); the letter which comes after the long vowel.

*[நெடில் + தொடர்]*

**நெடிற்றொடர்க்குற்றியலுகரம்** *nedirrodar-k-k-kurriyal-ugaram,* பெ. (n.) குற்றியலுகர வகைகளில் ஒன்று; a kind of *kurriyalukaram.*

*[நெடில் + தொடர் + குற்றியலுகரம்]*

நெடிற் கீழும், நெடிலொற்றின் கீழும், குறிலிணைக் கீழும், குறிலிணை யொற்றின் கீழும், குறினெடிற் கீழும், குறினெடி லொற்றின் கீழும் குற்றொற்றின் கீழும் என்றிவ் வேழிடத்தும் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து உகரம் வந்தால் அது குற்றியலுகர மென்று வழங்கப்படும்.

"நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்
றேழ்குற் றுகரக் கிடனென மொழிப"

"எழுவகை இடத்துங் குற்றிய லுகரம்
வழுவின்றி வரூஉம் வல்லா றூர்ந்தே"

என்கிறது பல்காயம்.

எ–டு : நாகு–காசு–காடு–காது–காபு–காறு என நெடிற்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வரும்.

நெடிலொற்றின் கீழ் : நாக்கு–காச்சு–காட்டு–காத்து–காப்பு– காற்று.

குறிலிணைக்கீழ் : வரகு–முரசு–முருடு–மருது–துரபு–கவறு.

குறிலிணை ஒற்றின் கீழ் : அரக்கு–பொரிச்சு–தெருட்டு–குருத்து–பொருப்பு–சிரற்று.

குறில்நெடிற்கீழ் : அசோகு–பலாசு–மலாடு–கெடாது–புதாபு–விராது.

குறில்நெடில்ஒற்றின்கீழ் : தமாக்கு–தடாச்சு–பனாட்டு–கடாத்து–புதாப்பு–விராற்று.

குற்றொற்றின் கீழ் : அக்கு–கச்சு–கட்டு–கத்து–கப்பு–கற்று.

இது செய்யுளுக்குரிய யாப்புப் பற்றிய வரம்பாகும்.

குற்றியலுகரம் அறுவகைப்படும் எனத் தொல்காப்பியர் கூறுகின்றார். அவை, ஈரெழுத்தொரு மொழி, உயிர்த் தொடர்மொழி, இடைத்தொடர் மொழி, ஆய்தத்தொடர் மொழி, வன்றொடர் மொழி, மென்றொடர் மொழி.

"ஈரெழுத் தொருமொழி உயிர்த் தொடர்
இடைத்தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர்
மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரங் குறுகிடன்"
(தொல்.எழுத்து.குற்றியலு.1)

எ-டு : ஈரெழுத்தொருமொழி : நாகு, காசு- காடு, காவு, காபு, சோறு.

**உயிர்த்தொடர்மொழி** : வரகு, பலாசு, முருடு, எருது, மரபு, கயிறு.

**இடைத்தொடர்மொழி** : செய்கு, கொய்சு, மார்பு, சால்பு, செய்து, செய்பு.

**ஆய்தத்தொடர்மொழி** : எஃகு, கஃசு, கஃடு, அஃது, கஃபு, சுஃறு.

**வன்றொடர் மொழி** : சுக்கு, கச்சு, பட்டு, பத்து, உப்பு, பற்று.

**மென்றொடர் மொழி** : கங்கு, பஞ்சு, வண்டு, பந்து, வம்பு, கன்று.

பல்காயம் கூறும் ஏழுவகைக் குற்று கரங்களில் தொல்காப்பியர் கூறும் ஆய்தத் தொடர் இடம் பெறவில்லை. நன்னூலார் தொல்காப்பியரைத் தொடர்ந்து குற்றியலு கரத்தை அறுவகைப் படுத்தினும், தொல்காப்பியர் ஈரெழுத் தொருமொழி என்று கூறுவதை நெடிற்றெடொர் குற்றியலுகரம் என வேறு பெயர் தருகின்றார்.

"நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடைத்
தொடர் மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே''
(நன்.96).

நன்னூலார் பகுப்பு : 1. நெடிற் றொடர்க் குற்றியலுகரம், 2. ஆய்தத்தொடர், 3. உயிர்த் தொடர், 4. வன்றொடர், 5. மென்றொடர், 6. இடைத்தொடர். எனவே ஈற்றலெழுத்தை நோக்கிக் குற்றியலுகரம் முப்பத்தாறாகும்.

எனவே குறுகி யொலிக்கும் உகரம் குற்றியலுகரம். அது ऋ ल என்னும் வடமொழி யெழுத்துகளில் உள்ளஉகரம்போல இகரத் திற்கும் உகரத்திற்கும் நடுவன தாயொலிக்கும்.

ஒரு சொல்லின் கடைசியில் வல்லின மெய்யின்மேல் ஏறிவரும் உகரம் குற்றியலுகரம். குற்றியலுகரம் வருஞ்சொல் ஈரெழுத்திற்குக் குறையாது; ஈரெழுத்தாயின் முதலெழுத்து நெடிலாயிருக்கும்; மூவெழுத்தும் அதற்கு மேலுமாயின் முதலில் எந்த எழுத்து இருப்பினும் சரியே.

குற்றியலுகரச்சொல் ஈற்றயல் (கடைசிக்கு முந்தின) எழுத்துப் பற்றி ஆறு தொடராக வகுக்கப்படும்.

எழுத்துக்கள் தொடர்ந்து நிற்றலின், சொற் தொடர் எனப்பட்டது.

உ-ம்

நெடிற்றொடர்க் குற்றியலுகரம் - ஆறு, காசு
ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம் - எஃது,அஃது
உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் - வரகு, தராசு
வன்றொடர்க் குற்றியலுகரம் - பட்டு, சுக்கு
மென்றொடர்க் குற்றியலுகரம் - சங்கு, வண்டு
இடைத்தொடர்க் குற்றியலுகரம் - மார்பு, தெள்கு

ஆறு தொடர்களிலும் நெடிற்றொடரொன்றே ஈரெழுத்துள்ளது; ஏனையவைந்தும் மூவெழுத்தும் அதற்கு மேலுமுள்ளன.

நெடிற்றொடர்க்கும் உயிர்த்தொடர்க்கும் உயிரும் உயிர்மெய்யும் ஈற்றயலாக வரும்; ஆய்தத் தொடர்க்கு ஆய்தம் ஈற்றயலாக வரும். ஏனைத் தொடர்கட்கு மெய் ஈற்றயலாக வரும்.

உயிர்த்தொடரில் ஈற்றயலாய் வருவது உயிர்மெய்யேனும், அஃது உயிரும் மெய்யுமாகப் பகுக்கப்படும்போது, உயிரே ஈற்றயலாய் நிற்றலின் உயிர்தொட ரெனப்பட்டது.

நெடிற்றொடர்க்கும் உயிர்த்தொடர்க்கும் வேறுபாடு.

| நெடிற்தொடர் | உயிர்தொடர் |
|---|---|
| 1. ஈரெழுத்தாலாயது | மூவெழுத்திற்குக் குறையாதது. |
| 2. நெடிலே ஈற்றயலாக வருவது | குறிலும் நெடிலும் ஈற்றயலாக வருவது. |
| 3. உயிரும் உயிர்மெய்யும் ஈற்றயலாக வருவது. | உயிர்மெய்யே ஈற்றயலாக வருவது. |

குற்றியலுகரம் ஈற்றயலெழுத்துப் பற்றி முப்பத்தாறாகக் கூறப்படும். ஆறு தொடர்களிலும் முறையே நெடிலேழும், ஆய்தமொன்றும், ஔகார மொழிந்த உயிர்பதினொன்றும், வல்லின மெய்யாறும் மெல்லினமெய்யாறும், வகரமொழிந்த இடையினமெய் ஐந்துமாக மொத்தம் முப்பத்தாறெழுத்துகள் ஈற்றயலாக வரும்.

குற்றியலுகர முற்றியலுகரங்கள் குற்றுகரம் முற்றுகரமெனவுங் கூறப்படும். (இயற்றமிழ் இலக்கணம் – பாவணர்.)

குற்றியலுகரம் உயிரீறு கொண்டே வரும் என்று பாவாணர் நிறுவுகின்றார்.

குற்றியலுகரம் உயிரீறே

"எழுத்தெனப் படுப,
அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃ தென்ப;
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே"
(தொல்.1)

"அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன" (தொல்.2)

என்றார் தொல்காப்பியர்.

இரண்டாம் நுற்பாவில், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் எனப் பிரித்துக் கூறாது "குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்" என்று 'முப்பாற் புள்ளி' என்பது மூவெழுத்தையும் பொதுப்படத் தழுவுமாறு உம்மைத் தொகையாய்ச் சேர்த்துக் கூறியிருத்தலின், குற்றியலிகர குற்றிய லுகரங்களும் ஆய்தம் போலப் பண்டைக் காலத்திற் புள்ளி பெற்றன என்பதுணரப்படும்.

நூற்பாவில் 'முப்பாற்புள்ளி' என்பது, புள்ளி பெற்ற மூவெழுத்துகளையும் முப்புள்ளி வடிவான ஆய்தத்தையும் ஒருங்கே குறிப்பது "ஆமா கோனவ் வணையவும் பெறுமே" என்னும் நன்னூல் நூற்பாவின் 'ஆமா' என்பது போன்ற இரட்டுறலாகும்.

தொல்காப்பிய மரபியல் நூற்பா 110–ல் 'வாரா ததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்தியுரையில்,

"குற்றியலிகரத்தைப் புள்ளியென்றலும் ஆட்சியுங் குறியீடும் ஒருங்கு நிகழ்ந்தன வாகலின் அவையும் இனி வாராமையான் வந்துழி வந்துழி அவ்வாறு ஆண்டானென்பது, இனிப் புள்ளியென மேல் ஆள வாராததனைப் புள்ளியென்று ஆள்வனவற்றோடு மயங்கக் கூறுதலென்பது, 'அவைதாங் குற்றிய லிகரங் குற்றிய லுகர – மாய்த மென்ற – முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன' (தொல்–எழுத்து–நூன்.2) என்புழிக் குற்றியலிகரம், புள்ளியென்று யாண்டும் ஆள வாராமையானும் அதுதான் அவ்வழி வரவேண்டு தலானும் அங்ஙனம் புள்ளியென்று ஆள வருங் குற்றுகரத்தோடும் ஆய்தத்தோடும் உடன் கூறுதலாயிற்று. இங்ஙனம் உடன் கூறாக்காற் புள்ளியுங் குற்றிகரமுமெனச் நூற்பா (சூத்திரம்) பெறுதல் வேண்டுவ தாவான் செல்லுமென்பது" என்றுரைத்தார் பேராசிரியர்.

சிவஞான முனிவர் தம் தொல்காப்பிய முதல் நூற்பாவின் (சூத்திர) விருத்தியில்.

"*ஒரு மொழியைச் சார்ந்து வருமியல்பின்றித் தனித்தியங்கு மியல்பு தமக்கிலவென்றலின், அவை தம்மையே யெடுத்தோதிக் காட்டலாகாமையின், வரும் நூற்பாவான் (சூத்திரதான்) அவற்றிற்கு வேறுவேறு பெயரிட்டு*" "*அவைதாங் குற்றியலிகரங் குற்றியலுகர மாய்தம் என்றும், அம் மூன்றும் புள்ளி பெறுதல் பற்றிப் பொதுப் பெயராக முப்பாற் புள்ளியும்*" என்றும், அவை தனித் தெழுதப்படா வாயினும் மொழியொடு சார்த்தி யெழுதப்படுதலின் எழுத்தென்னுங் குறியீட்டிற் குரியவென்பார். 'எழுத்தோ ரன்ன' என்றும் ஓதினார் என்றார்.

நச்சினார்க்கினியரும், "*அவைதாம்... எழுத்தோ ரன்ன*" என்னும் சார்பெழுத்து நூற்பாவுரையின் இடையில்,

"*ஆய்தமென்ற ஓசைதான் அடுப்புக் கூட்டுப் போல மூன்று புள்ளி வடிவிற்றென்பது உணர்த்தற்கு ஆய்தமென்ற முப்பாற் புள்ளியுமென்றார். அதனை இக்காலத்தார் நடுவு வாங்கியிட் டெழுதுபவென்று இதற்கு வடிவு கூறினார். ஏனை யொற்றுகள்போல உயிரேறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின், எழுத்தியல் தழா ஓசைகள் போலக் கொள்ளினுங் கொள்ளற்க என்றற்கு எழுத்தேயா மென்றார். இதனைப் புள்ளி வடிவிற்றெனவே ஏனை யெழுத்துகளெல்லாம் வரிவடிவின வாதல் பெற்றாம்*" என்று கூறினாரேனும், தொடக்கத்தில்,

"*அவைதாம்–மேற்சார்ந்து வருமெனப் பட்டவைதாம் குற்றியலிகரங் குற்றியலுகரம் ஆய்தமுமென்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளி வடிவுமாம்; எழுத்தோரன்ன – அவையும் முற்கூறிய முப்பதெழுத் தோடு ஒரு தன்மையாய் வழங்கும் என்றவாறு*" என்று மூவெழுத்தும் புள்ளிபெறுமென ஒரு தன்மைப்படவே உரைத்தார்.

மயிலைநாதர், "*தொல்லை வடிவின*" என்னும் நன்னூல் நூற்பா வுரைவில்,

"*ஆண்டு என்ற மிகையானே, தாது, ஏது என்றற் றொடக்கத்து ஆரிய மொழிகளும், எட்டு கொட்டு என்றற் றொடக்கத்துப் பொது மொழிகளும், குன்றியாது, நாடியாது எட்டியாண்டுளது என்றற் றொடக்கத்துப் புணர் மொழிப் பொருள் வேறுபாடுகளும், அறிதற் பொருட்டுக் குற்றுகரக் குற்றிகரங்களுக்கு மேற்புள்ளி கொடுப்பாரும் உளரெனக் கொள்க*" என்று உரைத்தனர்.

*"குற்றியலிகரமுங் குற்றியலுகரமும் புள்ளி பெற்று நிற்கும்: என்னை?"*

*"குற்றிய லிகரமும் குற்றிய லுகரமு மற்றவை தாமே புள்ளி பெறுமே"*

என்பது கழக சங்க யாப்பாகலின் என்பது யாப்பருங்கல விருத்தி (ப.27).

மேற்கூறியவற்றால், குற்றியலிகர குற்றிய லுகரங்கள் பண்டைக் காலத்தில் புள்ளியிட் டெழுதப்பட்டனவென்றும் அங்ஙனம் எழுதினது அவற்றின் ஒலிக்குறுக்கத்தையும் 'நாடியாது', 'எட்டியாண்டு' முதலிய புணர்மொழிப் பொருள் வேறுபாட்டையும் காட்டற்கு என்றும் அறியப்படும்.

*'நாடியாது', 'எட்டியாண்டு'* என்பன, நாடி யாது, எட்டி யாண்டு என்றும் பொருள் படுமாதலின், அவை நாடு + யாது, எட்டு + யாண்டு என்னும் புணர்மொழிகள் என்று காட்டற்குக் குற்றியலிகரத்தின்மேற் புள்ளியிடப் பட்டதென்க.

குற்றுகரத்தை மேற்சுன்னமிட்டுக் காட்டு வது இன்றும் மலையாள (சேர) நாட்டு வழக்கம். குற்றிகர குற்றுகரங்கள் புள்ளி பெறுமென்று நன்னூலிற் கூறப்படாமையால், 12ஆம் நூற்றாண்டிற்கு முன்பே இவ்வழக்கு, சோழ பாண்டிய நாடுகளில் ஒழிந்தது என்பதை அறியலாம். எகர ஏகாரங்கட்கும் ஒகர ஓகாரங்கட்கும் அவை சேர்ந்துள்ள உயிர் மெய்கட்கும் வரி வேறுபாடு தொல் காப்பியத்திலே கூறப்பட்டிருப்பினும் 17ஆம் நூற்றாண்டில் அவ்வெழுத்துகள் குறில் நெடில் வேறுபாடின்றி எழுதப் பட்டாற்போல, குற்றியலுகரமும் வேறுபாடின்றி யெழுதப்பட்ட தென்க.

ஒரு பொருள் குறுகின் அப்பொருளே யன்றி வேறுபொரு ளாகாது. அதன் குறுக்கம் அளவு வேறுபாடேயன்றிப் பொருள் வேறுபாடன்று. அதுபோல், குற்றியலுகரமும், முற்றியலுகரம்போல உயிரேயன்றி மெய்யாகாது, இதனாலேயே,

"இகரஉரகங்குறுகிநின்றன, விகார வகையாற் புணர்ச்சி வேறு படுதலின், இவற்றை இங்ஙனங் குறியிட்டாளுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. சந்தனக்கோல் குறுகினால் பிரப்பங் கோலாகாது; அது போல உயிரது குறுக்கமும் உயிரேயாம். இவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் பற்றி வேறோர் எழுத்தாக வேண்டினார்" நச்சினார்க்கினியரும். பொருள் வேற்றுமை யென்றது பண்டைக் காலத்தில் கட்டு கொட்டு முதலிய சொற்கள் ஏவல் வினையாம் போது முற்றுகர வீறாயும் முதனிலைத் தொழிற்பெயராம் போது குற்றுகர வீறாயும், ஒலிக்கப்பட்டவை நோக்கி, "தருக்கு அணுக்கு என்பன வினைக்கண் வந்த முற்றுகரம்" (தொல்.36, உரை). *"காது கட்டு கத்து முறுக்கு தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற் போல"* (தொல்.68, உரை) என்று நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க. தொல்காப்பியர் தம் காலத்தில் குற்றுகரமும் மெய்போலப் புள்ளி பெற்றதனாலேயே, புணரியலில்.

*"மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்"* (தொல்.104)

*"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"* (தொல்.105)

என்று மாட்டேற்றிக் கூறினார்.

இம் மாட்டேற்றைக் கவனியாது. *"குற்றிய... மொழிப"*, என்னும் நூற்பாவிற்கு *"ஈற்றிற் குற்றிய லுகரமும் (புள்ளியீறு போல உயிரேற இடம் கொடுக்கும்) அத்தன்மைத்து என்று சொல்லுவர்'* என்று இளம்பூரணரும். *"ஈற்றுக் குற்றியலுகரமும், புள்ளியீறு போல உயிரேற இடம் கொடுக்கு மென்று கூறுவர் புலவர்"* என்று நச்சினார்க்கினியரும் உரை கூறுவது பொருந்தாது. *"அற்றென மொழிப"* என்னும் மாட்டேறு *"புள்ளியொடு நிலையல்"* என்பதையே தழுவுமாதலின் இவ் விருவரும் இங்ஙனம் உரைத்தற்கு இவர் காலத்திற்கு முன்பே குற்றியலுகரம் புள்ளி பெறும் வழக்கம் வீழ்ந்தமையே கரணியமாகும். இவர் கூறிய உரை இங்குப் பொருந்துமாயின் தொல்காப்பியர் நூன்மரபில்.

*"மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையில்"* (தொல். 15)

*"எகர ஒகரத் தியற்கையும் அற்றே"* (தொல். 16)

என்று கூறியவிடத்தும் பொருந்தல் வேண்டும்.

எகர ஒகரம் புள்ளியீறு போல உயிரேற இடங்கொடுத்த லின்மை யானும், *"எகர... அற்றே"* என்னும் நூற்பாவிற்கு *"எகர ஒகரங்களது இயல்பும் அவ்வாறு புள்ளி பெறும் இயல்பிற்று"* என்று இளம்பூரணரும், *"எகர ஒகரங்களின் நிலையும் மெய்போலப் புள்ளி பெறும் இயல்பிற்று"* என்று நச்சினார்க்கினியரும் உரை கூறுவதானும். *"குற்றிய... மொழிப"* என்னும் நூற்பாவிற்கும் குற்றுகரமும் மெய்போலப் புள்ளிபெறும் என்பதே உரையாகக் கோடல் பொருத்தமாம்.

இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும், ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளியீறு போல உயிரேற இடங்கொடுக்கு மென்று உரைத்தவிடத்தும், மாத்திரைக் குறுக்கத்தால் அங்ஙனம் இடங்கொடுக்கும்

என்னும் கருத்தினரே அன்றி மெய்யீறாய் இருத்தலால் இடங்கொடுக்கும் என்னும் கருத்தினரல்லர். "குற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடிய அரை மாத்திரையாய் நிற்றலும். முற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடியாமையும் தம்முள் வேற்றுமை" (தொல். 36, உரை) என்று நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க.

இனி, தொல்காப்பியர் கருத்தை நோக்கின், அவர் குற்றியலுகரத்தை மெய்யீறென்று கொண்டார் என்று கொள்ளுதற் எள்ளளவும் இடமில்லை. அவர்,

*"குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கின்*
*ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்"*

(தொல். 67)

எனக் குற்றியலுகரம் மொழி முதல் வருமென்றும் கூறினார். நுந்தை என்னும் சொல்லின் முதலில் (தொல்காப்பியர் கருத்தின்படி) உள்ள குற்றியலுகரம் மெய்யீறாயின், அச்சொல் ந்ந்தை என்று எழுதப்படல் வேண்டும். அங்ஙன மெழுதப்படாமையும், குற்றியலுகரத்தைத் தொல்காப்பியர் மெய்யென்று கொண்டிருப்பா ராயின், அது,

*"பன்னீ ருயிரும் மொழிமுத லாகும்."*
(தொல். 59)

*"உயிர்மெய் அல்லன மொழிமுத லாகா"*
(தொல். 60)

என்று அவர் கூறியவற்றோடு முரணுதலும் நோக்குக.

மேலும், ஒரே யுகரம் ஓரிடத்துக் குற்றுகரமாகவும் ஓரிடத்து முற்றுகரமாகவும் ஒலிக்கப்படும். அங்ஙனம் ஒலிக்கப்படு பவற்றுள் சிலவற்றிற்குக் குற்றுகர முற்றுகரப் பொருள் வேறுபாடுண்டு. சிலவற்றிற்கில்லை.

*"முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ*
*தப்பெயர் மருங்கின் நிலையிய லான"*

(தொல்.68)

என்னும் நூற்பாவையும், அதன் உரையில்,

*"காது கட்டு கத்து முருக்கு தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகர முமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற்போல, நுந்தை யென்று இதழ் குவித்து முற்றக் கூறியவிடத்தும் இதழ் குவியாமற் குறையக் கூறியவிடத்தும் ஒரு பொருளே தந்தவாறு காண்க. நுந்தாயென்பதோ வெனின், அஃது இதழ் குவித்தே கூறவேண்டுதலிற் குற்றுகரமன்று. இயலென்றதனான் இடமும் பற்றுக் கோடும் இரண்டடிற்கும் வேறுபாடின் றென்று கொள்க"* என்று நச்சினார்க்கினியர் உரைத்திருப்பதையும் நோக்குக. இதனால், குற்றியலுகரம் மெய்யீறாயின் முற்றியலுகரமும் மெய்யீற்றாய் உகரம் என்னும் உயிரே தமிழுக்கில்லையென்று பெறப்படுதலும் அங்ஙனமின்மையும் அறிக.

செய்யுளியலில், இருவகை யுகரமு மொன்றாகக் கொண்டே,

*"இருவகை யுகரமோ டியைந்தவை வரினே*
*நேர்பும் நிரைபு மாகு மென்ப"*
(தொல்.செய்.4)

என்றார் தொல்காப்பியர்.

இதன் உரையில், *"இருவகை யுகரமென்பன, குற்றுகர முற்றுகரங்கள், அவற்றோடு மேற்கூறிய நேரசையும் நிரையசையும் ஒருசொல் விழுக்காடுபட இயைந்து வரின் நிறுத்த முறையானே நேரசையோ டொன்றி வந்த குற்றுகரமும் அதனோடு ஒன்றிவந்த முற்றுகரமும் நேர்பசை யெனப்படும்; நிரைபசையோ டொன்றி வந்த குற்றுகரமும் அதனோடொன்றி வந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும் என்றவாறு..."*

"முன்னர் நேரசை நான்கும் நிரையசை நான்குமென எண்வகையான் அசைகூறி அவற்றுப்பின் இருவகை யுகரமும் வருமெனவே, அவை குற்றுகரத்தோடு எட்டும் முற்றுகரத்தோடு எட்டுமாகப் பதினாறு எடுத்துக்காட்டுப் (உதாரணப்) பகுதியவாய்ச் சென்றதேனும், அவற்றுட் குற்றெழுத்துப் பின்வரும் உகரம் நேர்பசை யாகா தென்பது *"குறிலிணை யுகர மல்வழி யான"* (தொல்.செய்.4) என்புழிச் சொல்லுதும்; ஒழிந்தன குற்றுகர நேர்பசை மூன்றும் நிரைபசை நான்குமாயின. எ—டு: வண்டு, நாகு, காம்பு, வரகு, குரங்கு, மலாடு, மலாட்டு : இவை குற்றுகரம் அடுத்து நேர்பும் நிரைபும் வந்தவாறு" என்று உரைத்தார் பேராசிரியர். இதனால், குற்றுகரமும் முற்றுகரம் போல அலகு பெறுமென்றும் அசைக் குறுப்பாமென்றும் அறியப்படும்.

சொற்கள் இலக்கண முறையிலும் இலக்கிய முறையிலும் பல வகையாகத் திரிந்து, முன்பு முற்றுகர வீறாயிருந்தவை அல்லது உகரமல்லாத ஈறாயிருந்தவை பின்பு குற்றுகர வீறாகின்றன. அவ்வகைகளாவன:

1. தொழிற்பெயர் : முதனிலை திரிந்த தொழில் பெயர் :

எ—டு: படு → பாடு, சுடு → சூடு.

ஈறுபெற்ற தொழிற்பெயர் :

எ—டு : படி + பு — படிப்பு. முடி + சு — முடிச்சு.

2. வேற்றுமைப் பெயர் :

எ—டு : யான் + கு — எனக்கு, அவர் + கு — அவர்க்கு.

**3.** குறிப்பு வினைமுற்று :

எ–டு : தாள் + து – தாட்டு, கண் + து – கட்டு, பால் + து – பாற்று. அன் + து – அற்று.

**4.** பிறவினை : எ–டு : படு + து – படுத்து. நட + து – நடத்து, வாழ் + து – வாழ்த்து, பாய் + சு – பாய்ச்சு.

**5.** போலி : எ–டு : அடைவு → அடவு → அடகு.

**6.** சொல் திரிபு : எ–டு : திரும் → திரும்பு, பொருந் → பொருந்து, உரிஞ் → உரிஞ்சு, உடன் (உடல்) → உடம் → உடம்பு, பண் → பாண் → பாடு, குள் → கொள் → கோள் → கோண் → கோடு, ஒளி → ஒளிர் → ஒளிறு. போ → போது.

மேற்காட்டிய பாடு, படிப்பு, எனக்கு, தாட்டு, படுத்து முதலிய சொற்கள், குற்றுகர வீற்றை மெய்யீறாகக் கொள்ளின் பாட்ட், படிப்ப், எனக்க், தாட்ட், படுத்த் என்ற முதல் வடிவங்களினின்று தோன்றினவாக வன்றோ கொள்ளல் வேண்டும்! இஃது எத்துணைப் பேதமையாகும்! மேலும், ஆட்டு, பாட்டு, கலக்கு, விலக்கு முதலிய பிறவினைகளும் தொழிற்பெயர்களும் முதனிலை யீற்று வலியிரட்டியும் முதனிலை யிடைமெலி வலித்தும் முறையே ஆடு, பாடு, கலங்கு, விளங்கு என்னுஞ் சொற்களினின்று திரிந்திருக்கவும், அவற்றை ஆட்ட், பாட்ட், கலக்க், விளக்க் என்னும் வடிவங் களினின்று பிறந்தனவாகக் கொள்ளல் இளஞ்சிறாரும் எள்ளி நகையாடத் தக்க தொன்றன்றோ? ஒரு சில ஒலியடிச் சொற்களொழிந்த எல்லாச் சொற்களும் ஓரசையான வேர்ச் சொற்களினின்றே பிறந்தவை யாதலின், குற்றியலுகரத்தைமெய்யீறாகக் கொள் வாரெல்லாம் சொற்பிறப்பியலை எட்டுணையும் தாமறியாதிருத்தலைமுற்றுறக் காட்டுப வரேயாவர்.

குற்றுகரவீறு மெய்யீறாயின், அறுவகைக் குற்றியலுகரத் தொடர்களும் வல்லின மெய்யீற்றின வாதல் வேண்டும்.

*"ஞணநம னயரல வழள என்னும்*
*அப்பதி னொன்றே புள்ளி யிறுதி"*
(தொல்.78)

என்று தொல்காப்பியர் பிரிநிலை யேகாரங் கொடுத்துக் கூறினமையானும், குற்றுகரவீறு தமிழ்ச் சொல்லில் ஓரிடத்தும் மெய்யீறாக எழுதப்படாமை யானும், அஃதுண்மையன்மை வெள்ளிடைமலை.

கண் + யாது – கண்ணியாது என்பது போன்றே சுக்கு + யாது – சுக்கியாது என்று குற்றுகரமும் புணர்வதால், குற்றியலுகரத்தை மெய்யீறாகக் கொள்ளலாமே யெனின், கதவு + யாது – கதவியாது என்று முற்றுகரமும் அங்ஙனம் புணர்வதால் அதுவும் மெய்யீறாகக் கொள்ளப்பட்டு உகரவுயிரே தமி ழுக்கில்லை யென்றாகும் என்று கூறி விடுக்க. தொல்காப்பியர் மொழி மரபியலில்,

*"உச்ச காரம் இருமொழிக் குரித்தே"* (தொல்.75)

*"உப்ப காரம் ஒன்றென மொழிப"* (தொல்.76)

என்று வரையறுத்தது உசு முசு தபு என்னும் மூன்று முற்றுகர வீற்றுச் சொற்களையே யன்றிக் குற்றுகரவீற்றுச் சொற்களை யன்று. சு, பு என்னும் இரு முற்றுகர ஈறுகளைக் கொண்ட சொற்கள் எத்தனை என்று வரையறுப்பதே மேற்கூறிய நூற்பாக்களின் நோக்கம். கு, டு, து, று என்னும் நான்கு முற்றுகரவீற்றுச் சொற்களும் அறுவகைக் குற்றுகர வீற்றுச் சொற்களும் அளவிறந்தன வாதலின், அவற்றை வரையறுத்திலர் தொல்காப்பியர். இகு, உகு, செகு, தகு, தொகு, நகு, நெகு, பகு, புகு மிகு, வகு விகு எனக் குகரவீறும். அடு, இடு, உடு, எடு, ஒடு, கடு, கெடு, கொடு, சுடு தடு தொடு நடு நெடு நொடு படு பிடு மடு வடு விடு என டுகரவீறும் கொண்ட முற்றுகரவீற்றுச் சொற்கள் பெருந் தொகையினவாயும் எண் வரம்பு படாதனவாயு மிருத்தல் காண்க. பிற முற்றுகரவீற்றுச் சொற்களும் இங்ஙனமே, குற்றுகரவீற்றுச் சொற்களோ வெனின், அகராதிகளாலும் வரையறுக்கப்படாத பல்லாயிரக் கணக்கின.

மேற்கூறிய நூற்பாக்களின் உரையில்,

*"உகரத்தோடு கூடிய சகாரம் இரண்டு மொழிக்கே ஈறாம் என்றவாறு"*

எ–டு : உசு. இஃது உளுவின் பெயர். முசு, இது குரங்கினுள் ஒரு இனம், பசு என்பதோவெனின், அஃது ஆரியச் சிதைவு. கச்சு குச்சு என்றாற் போல்வன குற்றுகரம். உகரம் ஏறிய சகரம் இரு மொழிக்கு ஈறாமெனவே ஏனை உயிர்கள் ஏறிய சகரம் பன்மொழிக்கு ஈறாமாயிற்று." (தொல்.75, உரை) என்றும்,

*"உகரத்தோடு கூடிய பகரம் ஒரு மொழிக்கல்லது பன்மொழிக்கு ஈறாகாதென்று கூறுவர் புலவர்."*

*"எ–டு : தபு என வரும்... உப்பு கப்பு என்றாற் போல்வன குற்றுகரம், உகரத்தோடு கூடிய பகரம் ஒன்றெனவே ஏனையுயிர்களோடு கூடிய பகரம் பன்மொழிக்கு ஈறாய்ப் பல பொருள் தருமென்றாராயிற்று"* (தொல்.76, உரை) என்றும் நச்சினார்க்கினியர் கூறியிருத்தலை நோக்குக.

இதுகாறுங் கூறியவாற்றால், குற்றியலுகரம் உயிரீறே யென்றும், தொல்காப்பியர் ஓரிடத்தும்

குற்றியலுகரத்தை மெய்யீறாகக் கொண்டிலரென்றும் இயற்கையும் எளிமையும் தனிமையும் தாய்மையும் சான்ற தமிழியல்பை யறியாத ஆரியவழி யியலாரே தம் மொழியைப் போன்றே தமிழும் ஆரிய வழித்தென்று மயங்கி, தமிழை வடமொழி வழித்தாகக் காட்டக் கருதி அதற்கு முதற்படியாகக் குற்றுகர வீற்றை மெய்யீறாகக் கூறி யிடர்ப்பட்டுப் பின்பு அவ் விடர்ப்பாட்டினின்று நீங்கப் பண்டைத் தமிழ்ச் சொற்கள் வல்லின மெய்யிலும் இற்றனவென்றும், வலியிரட்டல் என ஒரு திரிவு முறையும் அரவு என ஒரு தொழிற்பெயர் ஈறு (விகுதி) இல்லையென்றும் சொல்லியல் நூலுக்கும் மொழிநூலுக்கும் முற்றும் மாறாகத் தத்தம் உளந் திரிந்தவாறே உரைப்பரென்றும் தெற்றெனத் தெரிந்து கொள்க.

குற்றியலுகரம் மெய்யீரே என்று பெரும்புலவர் வேங்கடராசலு எழுதியதற்குப் பாவாணர், அஃது உயிரீறுதான் என்று மெய்ப்பிக்கும் கூறுகள்:

1. *"தொல்காப்பியர் கூறும் குற்றியலுகரத்துக்கும், நன்னூலார் கூறும் குற்றியலுகரத்துக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. குற்றியலுகரத்தின் தன்மைபற்றித் தொல்காப்பியர் கூறும் கருத்துகள் இயற்கையோடு இயைந்தனவாக இருக்க நன்னூலார் கூறும் கருத்துக்களோ இயற்கையோடு பொருந்தாதனவாய் இருக்கின்றன."*

தொல்காப்பியர் கூறும் குற்றியலுகரத்திற்கும் நன்னூலார் கூறும் குற்றியலுகரத்திற்கும், பெரிதும் வேறுபாடில்லை. *"உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்."* (164) என்று நன்னூலார் கூறியதே வேறுபட்டதும் வழுவுற்றதுமாகும். உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடாது; அதற்கு (உயிருக்கு) இடந்தந்து உள்ளேயே அல்லது உடனேயே நிற்கும்: பேய் கோட்பாட்டான் அல்லது தெய்வமேறினான் உயிர், முன்போல் உடனேயே நிற்கும்.

தொல்காப்பியர் குற்றியலுகரம் சொன் முதலிலும் வரும் என்று கூறிய கூற்றுதான் இயற்கைக்கும் உண்மைக்கும் முற்றும் மாறாகும். நன்னூலார் அங்ஙனம் கூறியிலர்.

*"குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்*
*ஒற்றி நகரமிசை நகரமொடு முதலும்"*
(எழுத்து.67)

என்பது தொல்காப்பியம்.

சொன் முதலில் வரும் உகரத்தைக் குறுக்கியோ இதழ் குவியாதோ ஒலிக்கும் வழக்கம் தமிழருக்கு ஒரு காலத்தும் இல்லை. குற்றியலுகரத்தின் இயல்புகள் ஒலித்திரிபு ஒலிக்குறுக்கம் என இரண்டாகும். இவற்றுள் ஒலித்திரிபே மிக்கதாம். இதுபற்றிக் குற்றியலுகரத்திற்குச் "சாயும் உகரம்" (நன்.107). என்று நன்னூலார் பெயரிட்டது மிகப் பாராட்டத் தக்கதாகும். இகரத்திற்கும் உகரத்திற்கும் இடைப்பட்டதே குற்றியலுகரம் அல்லது சாயுமுகரம். அதன் அளபு துல்லியமாய் அரையென்பது பொருந்தாது. ஆயினும், குறுக்கங்களையெல்லாம் செம்பாகமாய்க் கொள்ளும் மரபுபற்றி, முற்றுகரத்திற் சரிபாதி குற்றுகரம் எனக் கொள்ளப் பெறும். உண்மையில் அஃது அரையளபினும் சற்றுக் கூடியதாகும்.

நுந்தை யென்பதின் மறுவடிவான உந்தை யென்னுஞ் சொல்லோ; உகப்பு, உங்கு, உச்சி, உஞ்சல், உணவு, உதவி, உப்பு, உம்பர், உயரம், உலக்கை, உவமை, உழவு, உள்ளம், உறவு, உன்னு முதலிய பிற உகர முதற் சொற்களோ; நுகர், நுங்கு, நுசுப்பு, நுடங்கு, நுணா, நுதல், நும்பி, நுரை, நுவல், நுழை, நுள்ளான், நுறுங்கு, நுனி முதலிய பிற நுகர முதற்சொற்களோ எல்லாம் முதலெழுத்து முற்றுகரமாயொலிக்கும் பொழுது, நுந்தை யென்னும் சொல் முதல் மட்டும் எங்ஙனம் குற்றுகரமா யொலிக்கும்? அங்ஙனம் ஒலிப்பார் இன்றொருவரும் இல்லையே! ஒரு கால் அவர் காலத்து ஆசிரியர் சிலர் அங்ஙனம் திரித்தொலித்தார் போலும்! தமிழர் அங்ஙனம் ஒலியாமை கண்டே அவரும்.

*"முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ*
*தப்பெயர் மருங்கின் நிலையிய லான"*
(எழுத்து. 68)

என்று அதற்கு விலக்குங் கூறியுள்ளார்.

இந்நூற்பாவுக்கு,

*"காது, கட்டு, கத்து, முருக்கு, தெருட்டு என்பன முற்றுகரமுங் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற் போல, நுந்தையென்று, இதழ் குவித்து முற்றக் கூறியவிடத்தும் இதழ் குவியாமற் குறையக் கூறிய விடத்தும் ஒரு பொருளே தந்தவாறு காண்க. நுந்தா யென்பதோவெனின், அஃது இதழ் குவித்தே கூறவேண்டுதலிற் குற்றுகரமன்று. இயலென்றதனான், இடமும் பற்றுக்கோடும் இரண்டிற்கும் வேறுபாடின்றென்று கொள்க. இதனானே மொழிக்கு முதலா மெழுத்துத் தொண்ணூற்று நான்கென்று உணர்க,"* என்பது நச்சினார்க்கினியர் விளக்கவுரை. இளம்பூரணர் கருத்தும் இதே.

காது, கட்டு, கத்து முதலியன ஏவல் வினையும் தொழிற்பெயருமாய்ப் பொருள் வேறுபடுவது, முற்றுகர குற்றுகர வேறுபாட்டினாலன்று; ஒலியழுத்த (Accent) இடவேறுபாட்டினாலேயே, ஏவல் வினையாய் நிற்கும் பொழுது ஈற்றசையிலும், தொழிற்பெயராய் நிற்கும்பொழுது முதலசையிலும், ஒலியழுத்தம் விழும். 'இதைக் கட்டு' என்று ஏவல் வினையாய் ஆளும்

பொழுது டுகரத்தின் மேலும், 'கட்டுக் கட்டாய்க் கட்டினான்' என்று வினைப் பெயராய் ஆளும்பொழுது ககரத்தின் மேலும், ஒலியழுத்தம் விழும். ஒலியழுத்தத்தினால் குற்றியலுகரம் இதழ் குவிந்தொலிக்கும் முற்றுகரமாகி விடாது. இதை ஒலித்துக் காண்க.

"*நுந்தாய் என்பதோவெனின், அஃது இதழ் குவித்தே கூற வேண்டுதலிற் குற்றுகரமன்று*" என்பது, நுந்தை என்பதும் அத்தகையதே யென்னும் கொள்கைக்கு ஒருவாறு துணைபுரிதல் காண்க.

நன்னூலார் குற்றியலுகர வியல்பைத் தொல்காப்பியரினும் நன்குணர்ந்தவராதலின், அதை மொழிமுதலெழுத்துகளுள் ஒன்றாகக் கொண்டிலர்.

நன்னூலுரையாசிரியர் மயிலைநாதர், "*குற்றியலுகர முறைப்பெயர் மருங்கின் ஒற்றிய நகர மிசை நகரமொடு முதலும்*" என, ஆசிரியர் தொல்காப்பியனார் இவ்வாறு குற்றியலுகரம் மொழிக்கு முதலாமென்றாரோ வெனின்,

"*நுந்தை யுகரங் குறுகி மொழிமுதற்கண் வந்த தெனினுயிர்மெய் யாமனைத்தும் – சந்திக் குயிர்முதலா வந்தணையும் மெய்ப்புணர்ச்சி யின்றி மயலணையும் என்றதனை மாற்று*"

இவற்றை விரித்துரைத்து விதியும் விலக்கும் அறிந்து கொள்க. என்று உரைத்திருத்தலை நன்கு ஆய்ந்து தெளிக.

**2.** "*நன்னூலார் மட்டுமல்லர். குற்றியலுகரம் பற்றிய தொல்காப்பிய நூற்பாக்களுக்கு உரைகண்ட இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோரும் ஓரளவுக்குத் தொல்காப்பியர் கருத்தை நன்கு விளக்கினும், பெருமளவுக்கு உண்மைக்குப் பொருந்தா உரைகளே கூறினர்.*"

நன்னூலார் கூற்றுகள், ஒன்று தவிர ஏனைய வெல்லாம் உண்மைக்குப் பொருந்தியவை யென்பது மேற்கூறப் பெற்றது. இனியும் கூறப்பெறும்.

பெரு என்னும் குறிப்புப் பெயரெச்சம் வல்லின மெய்ம்முதலொடு புணரும் பொழுதே, பெருங்கதை, பெருஞ்சோறு, பெருந்தலை, பெரும்பானை என மகரவொற்று மிகும்; உயிரொடு புணரின், பேரளவு, பேராவல், பேரீந்து, பேரூர் என அடி நீண்டே புணரும்.

பெருமை அளவு எனப் பண்புப் பெயரை நிலைச் சொல்லாக நிறுத்திப் புணர்ப்பதும் தவறு.

**3.** "*குற்றியலுகரம் தனிமொழி இறுதியில் நிற்கும்போது அரை மாத்திரை பெறும் என்பதும், அது மெய்யீறு போலப் புள்ளி பெற்றும் வருமொழி உயிரேற இடங் கொடுத்தும் நிற்கும் என்பதும், அரைமாத்திரை அளவுள்ள குற்றுகரம் இயல்பானதே என்பதும் இடமும் பற்றுக்கோடும் காரணமாக ஒரு மாத்திரை அளவுள்ள முற்றுகரம் குறுகி அரைமாத்திரையாக விகாரப்பட்டு நின்றது அன்று என்பதும், அஃது உயிரீறுமன்று; மெய்யீறுமன்று அவ்விரண்டின் வேறுபட்டதான சார்பீறு என்பதும், தனிமொழி இறுதியில் அரை மாத்திரை பெற்று நிற்கும் குற்றுகரம் தொடர் மொழி இடைப்படும்போது ஒரு மாத்திரை பெறுகின்ற முற்றியலுகரமாக மாறிவிடும் என்பதும், ஆனால் நெறிவிலக்காக வருமொழி முதலில் உயிர் வரும்போது நிலைமொழி இறுதியில் நின்ற ஆறு தொடர்க் குற்றியலுகரமும், வருமொழி முதலில் வன்கணம் வருகின்றபோது நிலைமொழி இறுதியில் நின்ற வன்றொடர்க் குற்றியலுகரம் மட்டும் அரை மாத்திரை பெறும் முற்றுகரமாகவே நிற்கும்*" என்பதும் தொல்காப்பியர் கருத்துகளாகும்.

இவற்றுட் பல தொல்காப்பியர் கருத்துகளல்ல; புலவர் முதுகுன்றனா ருடையனவே. குற்றியலுகரமும், குற்றியலிகரமும் குறுகியொலிப்பவை யென்று காட்டுதற்கு அவற்றின்மேற் புள்ளியிடும் வழக்கம் தொன்று தொட்டு இருந்து வந்திருக்கின்றது. இதைத் தொல்காப்பியர்,

"*அவற்றுள் மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்*"

(எழுத்து.104)

என்று நெறியிட்டபின்,

"*குற்றிய லுகரமும் அற்றென மொழிப*"

(எழுத்து.105)

என்று மாட்டெறிந்ததினாலும், நூற்றொடக்கத்திலேயே,

"*அவைதாம்*
*குற்றிய லிகரம் குற்றிய லுகரம்*
*ஆய்தம் என்ற*
*முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன*"

(எழுத்து.2)

என்று சார்பெழுத்து மூன்றையும் "*முப்பாற் புள்ளி*" யெனத் தொகுத்துப் பொதுப்படக் கூறியதனாலும், அறியப்படும்.

"*முற்கூறிய இரண்டும் உம்மை தொக்கு நின்றன*" என்று நச்சினார்க்கினியரும். "*குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மை விகாரத்தால் தொக்கன*" என்று இளம்பூரணரும் உரைத்திருப்பது பொருந்தாது. உம்மை விரிந்து நிற்பினும் ஆசிரிய யாப்பு வழுவாமை யானும், விரிந்து நிற்பதே இன்னோசை பயத்தலானும், அவை உரையல்ல வென அறிக. உரையாயின், தொல்காப்பியம் முன்னொடு பின் முரண்படுதல் காண்க.

*"தொல்லை வடிவின எல்லா வெழுத்துமாண்*
*டெய்தும் எகர ஒகரமெய்ப் புள்ளி"* (நன்.43)

என்னும் நூற்பாவுரையில், *"ஆண்டு என்ற மிகையானே, தாது ஏது என்றற் றொடக்கத்து ஆரிய மொழிகளும், எட்டு கொட்டு என்றற் றொடக்கத்துப் பொதுமொழிகளும், குன்றியாது நாடியாது, எட்டியாண்டுளது என்றற் றொடக்கத்துப் புணர்மொழிப் பொருள் வேறுபாடுகளும் அறிதற் பொருட்டுக் குற்றுகரக் குற்றிகரங்களுக்கு மேற்புள்ளி கொடுப்பாரும் உளரெனக் கொள்க"* என்று மயிலைநாதர் அவர் காலத்தும் ஒரு சாராரிடை அவ் வழக்கமிருந்தாகக் கூறியிருப்பதும் காண்க.

இனி, பழஞ்சேரநாடான மலையாள நாட்டின் தென்பாகத்தார், குற்றியலுகரத்தின் மேற்புள்ளியிட்டு எழுதி வருவதும் இங்குக் கவனிக்கத் தக்கது.

இதனால், குற்றியலுகரம் புள்ளி பெறு மென்பதல்லது மெய்யீறென்பது பெறப்படாது. பெறப்படின், எகர ஒகர உயிர்களும் மெய்யெழுத் தென்றாகும்.

*"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"*
(தொல்.எழுத்து.15)

*"எகர ஒகரத் தியற்கையும் அற்றே"*
(தொல்.எழுத்து.16)

என்று தொல்காப்பியர் கூறுதல் காண்க.

குற்றியலுகரம் குறுகியும் சாய்ந்தும் ஒலித்தலினாலேயே, வருஞ் சொன் முதலுயிரேற இடங்கொடுக்கும்; அதன் மெய்த்தன்மையினாலன்று. குற்றியலுகரம் இருக்கும் எழுத்து உயிர் மெய்யாதலின், அது உயிரீ றென்பதை உணர்த்தற்கே.

*"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"*
(எழுத்து.105)

என மாட்டெறிந்த பின்,

*"உயிர்மெய் யீறும் உயிரீற் றியற்றே"*
(எழுத்து.106)

என அதையடுத்தே கூறினார் தொல்காப்பியர்.

குற்றிய லுகரமெல்லாம் திரிபெழுத்தே, அதனாலேயே அதனைச் சார்பெழுத்தென்றார் தொல்காப்பியர். சார்பென்பது பற்றுக்கோடே அது நிகழ்வது சொல்லிறுதியிலேயே, ஆதலால், இடமும் பற்றுக்கோடும் துணைக் கொண்டே குற்றியலுகரம் தோன்றும். அது தோன்றுமிடத்து முற்றியலுகரம் தோன்றாது. நெடுங்கணக்கில் உகரமே யன்றிக் குற்றியலுகரமில்லை. உகரஞ் சேர்ந்து கு,சு,டு,து,பு,று எனத் தனி யுயிர்மெய்கள் தோன்றுவது போல், குற்றியலுகரஞ் சேர்ந்து ஒரு தனி யுயிர்மெய்யுந் தோன்றாது. சொன் முதலிடையிலும், மெல்லின இடையின மெய்யூர்ந்தும் குற்றியலுகரம் தோன்றாது. ஆதலால், குற்றியலுகரம் இயல்பென்பது, நேர்நின்று காக்கை வெளிதென்பார் கூற்றே. அதற்குக் கட்கோளாறு அல்லது உட்கோளாறே கரணியமாகும்.

குற்றியலுகரத்தை நெடுங்கணக்கிற் சேர்த்துள்ள வடமொழியும், அதனை ரகர லகர மெய்களோடு சேர்த்தே ரு, லு என வழங்குகின்றது. குற்றியலுகரம் வடமொழியிலில்லை யென்று, பெரும்புலவர் வேங்கடராசுலு அவர்கள் தம் 'இலக்கணக் கட்டுரைகள்' என்னும் நூலிற் கூறியிருப்பது பொருந்தாது. வடமொழி பிற்காலத் திரிமொழியாதலின், சொல்லிடை நிகழும் அசையினைச் செயற்கை முறையிற் பிரித்தெடுத்து, தனி யெழுத்துகள் போற் காட்டி வருகின்றனர். அம், அ: என்பனவற்றிற்கு ஈதொக்கும். ரூ என்னும் நெடிலைக் குற்றுகர நீட்டமெனக் கொள்ளாது, சாயுமுகர நீட்டமெனக் கொள்ளல் வேண்டும்.

குற்றுகரம் தனிமொழி யிறுதியிற் போன்றே புணர்மொழியிடையும், குற்றுகரமாகவே நிற்கும். அதாவது, அரையளபாய்க் குறுகியும் இதழ் குவியாதும் ஒலிக்கும். அது புணர்மொழியிடை முற்றுகரமாய் மாறிவிடு மென்பது. குறளன் இருவரிடை நிற்பின் அளவனாய் விடுவான் என்பது போன்றதே. குற்றியலுகர இயல்பிற்கு எவ்வகையிலும் நெறியீட்டு விலக்கேயில்லை. வருஞ்சொன் முதலில் எவ்வெழுத்து வரினும், அதன் குற்றியலுகரத் தன்மை மாறாது. வலிமுதற் சொல் வருஞ்சொல்லாய் வரினோ, குற்றியலுகரம் மேலும் குன்றிக் கால் அளபாய் ஒலித்து நிற்கும். இது புலவர் முதுகுன்றனார் கொள்கைக்கு நேர்மாறாம்.

4. குற்றியலுகரம் அரை மாத்திரை பெறுமென்பதும், ஒரு மாத்திரை உள்ள உகரமே இடமும் பற்றுக்கோடும் காரணமாக அரை மாத்திரையாகக் குறுகி ஒலிக்கும் என்பதும், அவ்வாறு அரைமாத்திரையாகக் குறுகி யொலிப்பினும் அஃது உயிரீறே என்பதும், வருமொழி முதலில் உயிர் வரும்போது நிலைமொழி இறுதியில் உள்ள குற்றியலுகரம் மெய்யைவிட்டு ஓடும் என்பதுமே நன்னூலார் கருத்துகளாகும்."

இங்குக் கூறப்பட்டுள்ள நன்னூலார் கருத்துகளுள் குற்றியலுகரம் உயிர் முதல் வருமொழி முன் மெய்விட்டோடும் என்னும் ஒன்றே தவறான தாகும்.

*"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"* (புணரியல்.3)

என்னும் தொல்காப்பிய நூற்பா உரையில்,

*"இம் மாட்டேறு ஒரு புடைச்சேறல், புள்ளி பெறாமையின் அங்ஙனம் உயிரேறுங்காற் குற்றுகரங் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிரேறிற் றென்று கொள்ளற்க. 'நாகரிது' என்புழி முன்னர்க் குற்றுகர வோசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ்விரண்டுங் கூடி நின்றல்லது அப்பொரு ளுணர்த்த லாகாமையின், இஃது உயிரோடுங் கூடிநிற்கு மென்றார்."* என்று நச்சினார்க்கினியர் கூறியது, அந் நூற்பாவிற்குப் பொருந்தாதேனும், குற்றியலுகரம் கெடாது நின்றே உயிரொடு புணரும் என்னும் உண்மையை உணர்த்துவது கவனிக் கத்தக்கது.

ஊணில்லை என்னும் புணர்மொழியில் நிலைமொழியீற்று ணகர மெய் எங்ஙனம் கெடாது நிற்கின்றதோ, அங்ஙனமே உறவில்லை, உலகில்லை என்பவற்றுள்ளும் முறையே முற்றுகரமும் குற்றுகரமும் கெடாதே நிற்கும். இதை ஒலித்துக் காணலாம். ஆயின், சற்று எஃகுச் செவிவேண்டும். உறவ், உலக் என்னும் சொல்லின்மை, உறவு இல்லை, உலகு இல்லை என்னும் பொருளுண்மையும் அத் தொடரிடை உகரங் கெடாமைக்குச் சான்றாம்.

*"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"*

என்னும் நூற்பாவிற்குக் குற்றியலுகரமும் மெய்யெழுத்துப் போற் புள்ளியிட்டெழுதப்படும் என்பதே போந்தவுரையாம். நச்சினார்க்கினியரது, வேண்டாது கூறலும் வேறொன்று கூறலுமாகும். 'புள்ளியோடு நிலையல்' என்பதற்கு உயிரேற இடங்கொடுத்தல் என்று அவர் பொருள் கொண்டதே அதற்குக் கரணியாகும்.

குற்றியலுகரத்தின் சாயுந்தன்மையும் குறுக்கமுமே ஏனையுயிரோ இடந்தருமென வுணர்க.

5. 'தனிமொழி' இறுதியில் அரை மாத்திரை பெறும் குற்றுகரத், தொடர் மொழி இடைப்படினும் அரை மாத்திரையே பெறும் என்பது நன்னூலார் கருத்து. ஆனால்,

*"அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்*
*எல்லா இறுதியும் உகரம் நிலையும்"*
(தொல்.குற்றி.3)

என்பது தொல்காப்பியம். *"அல்வழியைச் சொல்லு மிடத்தும் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் ஆறு ஈற்றுக் குற்றியலுகரமும் நிறைந்தே முற்றுகரமாகி நிற்கும்"* என்று இளம்பூரணர் இந் நூற்பாவிற்கு உரை யெழுதியுள்ளார். பேராசிரியரும் செய்யுளியல் 43 ஆம் நூற்பாவுரையில் இளம்பூரணர் கருத்தையே சார்ந்துரைத்துள்ளார். மேற்கூறிய நூற்பாவில் 'உகரம் நிறையும்' என்பதற்கு வேறாக *"உகரம் நிலையும்"* என்று பாடங் கொண்டு வேறுபட்ட பொருள் கூறினும், இதற்கு அடுத்த நூற்பாவுரையில் (குற்றியலுகரப் புணரியல்,4) இளம்பூரணர் கொண்ட *'நிறையும்'* என்ற பாடத்தையும், அவர் எழுதிய உரையினையும் எடுத்துக்காட்டி மறுக்காது போனமையும் இங்கு எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது. செவி கருவியாக உணர்ந்து பார்க்கும்பொழுது, நாகு என்பதன் இறுதியில் வரும் குற்றுகரவோசை நாகுகடிது என்பதனுள் வாராது. ஓசை மிக்க ஒலிப்பது வெள்ளிடை மலையென விளங்கவும், நன்னூலார் முன்னூலாசிரியராகிய தொல்காப்பியரோடும், உரைகாரர்களோடும் தக்க காரணமின்றி மாறுபட்டுரைப்பது நமக்கு வியப்பாகவே உள்ளது."

சில செய்யுள்கட்கும் நூற்பாக்கட்குமுள்ள பாட வேறுபாடுகளுட் சிறந்ததைக் கண்டுபிடிப்பதே ஒரு சிறந்த புலமைத் திறனாகின்றது. பாட வேறுபாட்டினால் ஏற்படும் பொருள் வேறுபாடு ஆசிரியர் கருத்துக்கு நேர்மாறாகவும் நேர்ந்து விடுகின்றது.

மன்னார்குடி நகராட்சிக் குடிதண்ணீர் குழாயொன்றின் மீது, 'குடிதண்ணீர்க்கு மட்டும்' என்று எழுதப்பட்டிருக்க வேண்டிய தொடர். எழுதினான் தவற்றால் ககரவொற்று விடப்பட்டு, தகையாற்ற வந்தாரெல்லாம் தவறாகப் பொருள் கொண்டு தண்ணீர் குடியாதுபோக நேர்ந்தது.

*"அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்*
*எல்லா இறுதியும் உகரம் நிறையும்"*

என்னும் நூற்பா ஈற்றிலுள்ள *"நிறையும்"* என்னும் பாடத்தினும், *"நிலையும்"* என்னும் பாடமே சிறந்ததாகத் தெரிகின்றது. குற்றியலுகரம் மெய்யெழுத்துப் போல் அரையள பொலிக்குமென்றும் புள்ளி பெறுமென்றும் முன்னர்க் கூறப்பட்டதினால், புணர்ச்சியில் ஒரேவிடத்து மெய் கெடுதல் அல்லது திரிதல்போல் குற்றியலுகரமும் மெய்கெடுதலும் திரிதலுமுண்டோ வென்னும் ஐயம் நீக்குதற்கே எல்லா இறுதியும் உகரம் நிலையும்" எனக் கூற வேண்டியதாயிற்று.

இளம்பூரணர் இன்று எழுதப் பெற்றுள்ள தொல்காப்பிய வுரையாசிரியருள் முதல்வர். எத்துறையிலும் முதன்முதல் எழுதப் பெற்றது குறைபாடுள்ளதாகவே யிருக்கும். இளம்பூரணர் புலமை அவர் பெயருக்கேற்ப இளநிறைவு பெற்றதே யென்பது *"கொடிநிலை கந்தழி வள்ளி"* என்ற புறத்திணை நூற்பாவிற்கும் (33) *"பாங்கன் நிமித்தம் பன்னிரண் டென்ப"* என்னும் களவியல் நூற்பாவிற்கும் (13), அவர் கூறிய வுரையான் அறியப்படும். இளமையிலேயே நிறைவு பெற்றவர் என்பது அவர்க்கு ஏற்காது.

பேராசிரியரும் *"உகரம் நிறையும்"* என்று பாடங் கொள்ளத் தேவையில்லை. சிறுவர் சிலவகையிற் கணக்கிற் சேர்க்கப் பெற்றும் சிலவகையிற் சேர்க்கப் பெறாதும் போவதுபோல், குற்றியலுகரமும் சீர்நிலைக்கும் தளை வகைக்கும் எழுத்தெண்ணப் பெற்றும், ஐவகையடிகளின் பதினேழ் நிலைவகைக்கும் எழுத்தெண்ணப் பெறாதும், தொன்றுதொட்டு இயங்கி வந்திருக்கின்றது. தளைவகைக்கு எழுத்தெண்ணப் பெறாக்கால்.

*"முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்*
*தகநக நட்பது நட்பு"*

என்னும் குறளும்.

சீர்நிலைக்கு எழுத்தெண்ணப் பெறாக்கால்

*"முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயும்"*

என்னும் புறப்பாட்டடியும் வழுவாம்.

இனி, *"உகரம் நிறையும்"* என்னும் பாடத்தையே கொள்ளினும். குற்றுகரம் முற்றுகர மாகிவிடும் என்று பொருள் கொள்ளற்கிடமில்லை.

*"இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே*
*கடப்பா டறிந்த புணரிய லான்"*

என்று முன்னர்ப் பொதுப்படக் கூறியதனால், புணர் மொழியகத்துக் குற்யிலுகரமெல்லாம் அரையளபினுங் குறுகிக் காலா யொலிக்குமோ வெனும் ஐயத்தை அகற்றுதற்கே. *"உகரம் நிறையும்"* எனக் கூறவேண்டிய தாயிற்றெனக் கொள்க.

குற்றியலுகரப் புணரியல் 4ஆம் நூற்பாவுரையில், *"முன்னின்ற சூத்திரத்து உகர நிறையுமென்று பாடமோதி, அதற்கு உகரம் அரை மாத்திரையில் சிறிது மிக்கு நிற்குமென்று பொருள் கூறி, இச் சூத்திரத்திற்குப் பழைய அரை மாத்திரை பெற்று நிற்குமென்று, கூறுவாரும் உளர்''* என்று நச்சினார்க்கினியர் கூறி அம்மட்டோடு விட்டொழிந்தது, இளம் பூரணருரையை மறுக்கவியலாமை பற்றியன்று மறுக்க வேண்டாமை பற்றியே யென்க.

நாகு என்னும் தனிச்சொல்லின் இறுதியில் வரும் குற்றுகரமே, நாகு கடிது என்னும் தொடர்ச்சொல்லின் இடையும் நேர்கின்றது. அது ஒலியளவில் ஒருகாற் குன்றினும் குன்றுமே யொழியக் கூடுவதிலை. இதுவே தமிழரின் இயல்பான ஒலிப்பாம். இதற்கு மாறாக நீட்டியொலிப்பது வேண்டுமென்று செய்வதாகவோ வேற்று மொழியாரின் தொடர்பால் நேர்ந்ததாகவோதான் இருத்தல் வேண்டும். அல்லாக்கால் செவிப்புலக் கோளாற்றின் விளைவாயிருக்கலாம்.

தொடர்ச்சொல்லிடைக் குற்றியலுகரம் ஒலிமிக் கொலிப்பது வெள்ளிடை மலையென விளங்குவதாகப் புலவர் முதுகுன்றனார் கூறியிருப்பது நமக்கு வியப்பாகவே யிருக்கின்றது. வெள்ளிடை மலையென்னும் தொடரைப் பன்மொழித் தொடர் வகைகளுள் ஒன்றான அடையடுத்த பெயர்ச் சொற்றொடராகக் கொள்ளாது, அடையடுத்த எழுவாய்த் தொடராகக் கொண்டு ஒன்றுமில்லாத வெள்ளிடையே மலைபோல் உருக்கொண்டு தோன்றுவதாகப் பொருள் கொள்வதே இவ்விடத்திற்குப் பொருத்தமாம்.

6. *"குற்றியலுகரம் என்பதற்குக் குறிதாகிய இயல்பினையுடைய உகரம் என்பது பொருள். எவ்வாறு அகரம் தன்னியல்பில் நிற்பினும், தன்னைக் காட்டிலும் நெடிய ஓசையை உடைய ஆகாரத்தை நோக்கக் குறுகிய ஓசையுடைமையால் குற்றெழுத்து எனப்பட்டதோ, அவ்வாறே அரை மாத்திரை அளவுள்ள, விகாரப்படாத இயல்பான குற்றியலுகரமும் தன்னின் நெடிதாகிய ஒரு மாத்திரையுள்ள முற்றுகரத்தை நோக்கக் குறுகிய ஓசையுடைமையால் குற்றியலுகரம் எனப்பட்டதே தவிர, முற்றுகரம் இடமும் பற்றுக்கோடும் காரணமாகக் குறுகி ஒலித்ததால் அன்று."*

இதில் தன்முரணும் விடாப்பிடியுறழும் (விதண்டாவாதமும்) திரிபுணர்ச்சியும் விளங்கித் தோன்றுகின்றன. ஆகாரத்தை நோக்க அகரம் குறுகிக் குறிலெனப்பட்டாற் போன்று முற்றுகரத்தை நோக்கக் குற்றுகரம் குறுகிக் குற்றியலுகரம் எனப்பட்ட தென்று கூறியவரே, இயல்பானதும் திரிபுறாததும் இடமும் பற்றுக்கோடும் அற்றதுமான ஓர் அரையளபுகரம் அந்தரத்தில் தனியாக நிற்பதாக ஒரு மயக்கக் காட்சி காண்கிறார். இடமும் பற்றுக்கோடு மற்று முற்றுகரம்போல் இயல்பான உகரம் எந்த நெடுங் கணக்கில் உள்ளது? குற்றியலிகரம் எங்ஙனம் முற்றியலிகரத்தின் திரிபோ, அங்ஙனமே குற்றியலுகரமும் முற்றியலுகரத்தின் திரிபாகவன்றோ உளது! சொல்லிறுதியாகிய இடமும் வல்லின மெய்யாகிய பற்றுக்கோடு மில்லாத குற்றியலுகரம் எத்தமிழில் எந்நூலில் வழங்குகின்றது? அதை யாருக்கேனும் புலவர் முதுகுன்றனார் காட்டவொன்னுமோ? முற்றும் வழுவான ஒரு கருத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு. அதற்கேற்ப நூற்பாக்கட் கெல்லாம் உரைதிரித்துக் கூறுவது ஒல்வதொன்றோ? ஒருவர் தெளிந்த நிலையில் தம் தவற்றை உணரலாம். மயக்க நிலையில் எவ்வாறு உணர்தல் கூடும்? அந்நிலையில் அவர் கூறுவதெல்லாம் பொருளுள்ள தாகுமோ? ஏரண முறைப்படி சான்று காட்டித் தம் கொள்கையை நிறுவாது, தம்மொடு மாறுபடுவாரை நோக்கி, "இடமும் பற்றுக்கோடும் காரணமாகவே ஒரு மாத்திரை அளவுள்ள முற்றுகரம் குறுகி விகாரப்பட்டு அரை மாத்திரை யாயிற்று என்று சாதிப்பார் பலருளர்" என்று கூறி என் பயன்?

7. *"அவர் கூறும் காரணம் உண்மையாயின், இரண்டு மாத்திரை யளவுள்ள ஐகாரமும் ஔகாரமும், மொழியகத்து வேறு எழுத்துகளின் சாா்பால் ஒன்றரை மாத்திரையாகவும் ஒரு மாத்திரையாகவும் குறுகி யொலிக்கும் பொழுது ஐகாரக்குறுக்கம் எனவும் ஔகாரக் குறுக்கம் எனவும், அரை மாத்திரை அளவுள்ள மகரம் மொழியகத்து வேறு எழுத்துகளின் சார்பால் கால் மாத்திரையாகக் குறைந்து ஒலிக்கும்போது மகரக்குறுக்கம் எனவும் பெயர் தந்த தொல்லாசிரியர் இச் சார்பெழுத்துக்கும் உகரக் குறுக்கம் என்றன்றோ பெயர் தந்திருக்க வேண்டும். அவ்வாறு அவர் பெயர் கூறக் காணோமே!"*

உயிரெழுத்துகள் பன்னிரண்டனுள், ஐ ஔ என்னும் இரண்டும் பிந்தி ஏற்பட்ட புணரொலிகள் (Diphthongs). அதனாலேயே, அவை தனியொலி களான பிற, நெடில்கள்போல் காரச்சாரியை பெறாது கான் சாரியை சிறப்பாகப் பெற்றன. அவற்றிற்குக் காரச் சாரியையும் கொடுப்பது பிற்கால வழக்கு. குறிலுக்குக் கரமும் நெடிலுக்குக் காரமும் கொடுக்க வேண்டியதே நெறியாயினும், குறிலுக்கும் காரச்சாரியைக் கொடுப்பர் பிற்காலத்தார். இது வடமொழியைப் பின்பற்றின தவறான வழக்காகும். குற்றியலுகரமும் குற்றியலிகரமும் முந்தியே தோன்றியவை யாதலாலும், ஒழுங்குபட்டவை யாதலாலும், குறுகி இயல்கின்ற உகரம் என்றும் குறுகி இயல்கின்ற இகரமென்றும், பெயர் பெற்றன. இனிக் குறுகிய இயல்புள்ள இகர உகரம் என்றுமாம்.

*"அகர இகரம் ஐகாரம் ஆகும்"* (மொழி.21)

*"அகர உகரம் ஔகாரம் ஆகும்"* (மொழி.22)

என்று கூறிய தொல்காப்பியரே.

*"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்*
*ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"*

என்றும்,

*"அகரத் திம்பர் வகரப் புள்ளியும்*
*ஔவென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"*

என்றும்,

*"ஓரள பாகும் இடனுமா ருண்டே*
*தேருங் காலை மொழிவயி னான"* (மொழி.24)

என்றும், கூறியுள்ளார்.

ஐகாரம் அய் என்றும் ஔகாரம் அவ் என்றும் ஒலிக்கும்போதே, ஒன்றரையளபினவாகக் குறுகிவிடுகின்றன. இனி, இடையன், சடையன் போன்ற சொற்களின் இடையில், டகர ஐகான் டகரம் போல் ஒலித்து ஓரளபினதாகவும் குறுகிவிடுகின்றது.

ஐகார ஔகாரக் குறுக்கங்களைக் கூறும்பொழுதும்,

*"அரையளவு குறுகல் மகரம் உடைத்தே*
*இசையிடன் அருகும் தெரியும் காலை"* (நூன்.13)

என்று மகரக் குறுக்கத்தைக் கூறும்பொழுதும் அளபு குறுகுமென்றே கூறிச் செல்கின்றார் தொல்காப்பியர். இவற்றிற்கெல்லாம் குறுக்கமென்று பெயர் கொடுத்துச் சார்பெழுத்தாகக் காட்டியவர் நன்னூலாரே.

போலும், மருளும் என்னும் சொற்கள் போன்ம் மருண்ம் எனச் சிதைந்த நிலையிலேயே, அவற்றின் ஈற்று மகரமெய் குறுகியொலிக்கின்றது. வரும் வண்ணக்கன் என்னும் தொடரையும் பிரித்து, வரும் என்னும் நிலைமொழியை முந்திய அடியிறுதியிலும் வண்ணக்கன் என்னும் சொல்லைப் பிந்திய அடிமுதலிலும் நிறுத்திவிடின் மகரக்குறுக்கத்திற்கு இடமில்லை. இங்ஙனமே ஐகாரம் வரும் சொல்லையும் அசை பிரித்து வெவ்வேறு சீரிலும் அடியிலும் நிறுத்திவிடின், ஓரளபாகக் குறுகாது. குற்றியலுகர குற்றியலிகரங்களையோ இங்ஙனம் பிரித்து நிறுத்த முடியாது. ஆகவே, இகர வுகரம் முந்தித் தோன்றியவை என்பது மட்டுமன்றி, குற்றியலிகர குற்றியலுகரங்கள் ஒழுங்குபட்டவையாயு மிருக்கின்றன.

மேலும், குற்றியலுகர குற்றியலிகரங்கள் முந்தி அறியப்பட்டதினால் அப்பெயர் பெற்றனவென்றும், பிந்தி யறியப்பட்டவை யெல்லாம் குறுக்கமென வேறு வகையிற் பெயர் பெற்றன என்னும் கொள்வதில் யாதொரு இழுக்குமில்லை யென்றும், பெயர் வேறுபாட்டைக் குற்றியலுகரம் திரிபெழுத்தன்றெனக் கூறுவதற்குச் சான்றாகக் கொள்வது பொருந்தா தென்றும், கூறி விடுக்க.

7. (வேறு விளக்கம்) *"இடமும் பற்றுக்கோடும் காரணமாகவே ஒரு மாத்திரை அளவுள்ள முற்றுகரம் குறுகி விகாரப்பட்டு அரை மாத்திரையாயிற்று, என்று சாதிப்பாரும் பலருளர். அவர் கூறும் காரணம் உண்மையாயின் இரண்டு மாத்திரையளவுள்ள ஐகாரமும் ஔகாரமும், மொழியகத்து வேறு எழுத்துகளின் சார்பால் ஒன்றரை மாத்திரையாகவும் ஒரு மாத்திரையாகவும் குறுகி ஒலிக்கும்போது ஐகாரக் குறுக்கம் எனவும் ஔகாரக் குறுக்கம் எனவும், அரை அளவுள்ள மகரம் மொழியகத்து வேறு எழுத்துகளின் சார்பால் கால் மாத்திரையாகக் குறைந்து ஒலிக்கும்போது மகரக் குறுக்கம் எனவும் பெயர்தந்த தொல்லாசிரியர் இச்சார்பெழுத்துக்கும் உகரக் குறுக்கம் என்றன்றோ பெயர் தந்திருக்க வேண்டும். அவ்வாறு அவர் பெயர் கூறக் காணோமே!"*

ஐகார ஔகாரங்கள் முதன்முதலாகத் தமிழ் நெடுங்கணக்குத் தோன்றியபோதே பிறவுயிர்களோடு தோன்றிய தனியுயிர்களல்ல; சற்றுப் பிந்தியமைந்த புணரொலிகள் (Diphthongs).

*"அகர இகரம் ஐகார மாகும்"* (மொழி.54)

*"அகர உகரம் ஔகார மாகும்"* (மொழி.55)

*"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்*
*ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்'*
(மொழி.56)

*"அகரத் திம்பர் வகரப் புள்ளியும்*
*ஔஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"*

என்னும் நூற்பாக்களே இதை வலியுறுத்தும்.

*"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்...தோன்றும்"*

*"அகரத் திம்பர் வகரப் புள்ளியும்...தோன்றும்"*

என்னும் நூற்பாக்கட்கிசையச் சில சொற்களும் தோன்றியுள்ளன.

வள் = கூர்மை, வள்(வய்) – வை = கூர்மை

அள் = செறிவு, வன்மை, பெருமை (மிகுதி).

அள் – (அய்–ஐ) = பெருமை, பெரியோன், தலைவன், தந்தை, ஆசிரியன், அரசன்.

பொள்–பொய்–(பய்) பை = துளையுள்ளது, குழிவானது, உள்ளீடற்றது.

பள்–(பய்)–பயம்பு = பள்ளம், குழி.

அம்மை – அவ்வை=தாய், பாட்டி, ஒ.நோ: செம்மை – செவ்வை.

அவ்வை – ஔவை.

வாவல் = சிறகால் வாவிச் செல்வது, வாவுதல்= தாவுதல்.

வாவல் – வவ்வால் – வௌவால். பெரு வௌவால் வாவிப் பறப்பதையே எங்கும் காண்க.

முதற் காலத்தில் தோன்றிய தனியொலி நெடில்கட்குக் காரச்சாரியைக் கொடுக்கப்பட்டது. பிற்காலத்தில் தோன்றிய புணரொலி நெடில்கட்கோ அதனின்றும் வேறான 'கான்' சாரியை கொடுக்கப் பெற்றது. புணரொலி நெடில்களையும் ஐகாரம் ஔகாரம் எனக் கூறுவது, வடமொழி வழக்கைப் பின்பற்றிக் குறில்களையும், அகாரம் இகாரம் எனக் காரச்சாரியைக் கொடுத்துக் கூறும் ஒருசார் தவற்று வழக்காகும்.

முந்தித் தோன்றிய தனியொலி நெடில்கட்கும், பிந்தித் தோன்றிய புணரொலி நெடில்கட்கும் வெவ்வேறு சொல்லாற் சாரியை யமைந்தது போன்றே, முன்னூலாசிரியர் கண்ட சார்பெழுத்துகட்கும் பின்னூலாசிரியர் கூறிய எழுத்துக் குறுக்கங்கட்கும் வெவ்வேறு சொல்லாற் பெயரமைந்தன என அறிக.

மேலும், குற்றியலுகரம் போல் ஐகார ஔகாரக் குறுக்கங்கள் புணர்ச்சி வேற்றுமைப் படாமையின், சார்பெழுத்துத் தன்மையைப் பெற்றனவாகா. ஆய்தம் என்பது மெல்லிய ககரமான ஒரு நுண்ணொலி. ஆய்தம் = நுணுக்கம்.

*"ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்*
*ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்"*
(உரி.32)

என்று தொல்காப்பியங் கூறுதல் காண்க.

சார்பெழுத்துகளென்று தொல்காப்பியங் கூறும் மூன்றனுள், இரண்டு உயிரெழுத்துகளும், ஒன்று மெய்யெழுத்துமாகும், உயிரெழுத்துகள் அளவிற் குன்றியது மட்டுமன்றி, ஒலியிலும் வேறுபட்டவை. மெய்யெழுத்தான ஆய்தம் ஒலியில் மட்டும் வேறுபட்டது; அளபிற் குன்றியதன்று. அது ககரத்திற் கின்மானதென்பது, அஃகேனம் என்னும் பெயரினாலேயே அறியப்படும். அஃது ஏனச் சாரியை பெறும்போது வேறெம் மெய்யோடும் புணராமை காண்க.

குற்றியலுகர குற்றியலிகரங்கள்: முற்றியலுகர முற்றியலிகரங்கள் போல் பதினெண் மெய்யொடும் கூடி வருவனவல்ல. ஆய்தம் ஒருயிரொடும் கூடி வருவதன்று. ஐகார ஔகாரங்கள் குறுகுவது இடம் பற்றியே யன்றிப் பற்றுக்கோடும் சார்பும் பற்றியன்று. மகரக் குறுக்கம் 'போலும்', 'மருளும்' என்பன போன்ற சொற்களின் ஈற்றயல் உகரக் கேட்டினாலும், வருஞ்சொன் முதல் வகரத்தினாலுமே, நிகழும்; வருஞ்சொன் முதல் உயிரேறின் உகரம் கெட்டு மகரக் குறுக்கம் நீங்கிவிடும்.

எ–டு : போன்ம் + என்று = போன்மென்று.

இத்தகைய வேறுபாடும் சிறப்பியல்பும் நோக்கியே, முதனூலார் சார்பெழுத்து மூன்றே யெனக் கொண்டார். அதையே பல்லாயிரம் ஆண்டிற்குப் பிற்பட்ட தொல்காப்பியரும் தழுவிக் கூறினர். எழுத்துகளின் தகையும் தொகையும் பெயரும் அளவும் கூறும் எழுத்ததிகார முதலியலுக்கு நூன்மரபு என்று அவர் பெயரிட்டிருப்பதையும்,

*"எழுத்தெனப் படுப*
*அகரமுதல் னகர இறுவாய்*
*முப்பஃதென்ப*
*சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே".*

என்று வழிநூன் முறையிற் கூறியிருப்பதையும், கூர்ந்து நோக்குக.

8. *"அன்றியும், ஒரு மாத்திரை அளவுள்ள முற்றுகரமே குறுகி அரை மாத்திரையாக ஒலிப்பதாயின் நன்னூலார் போலத் தொல்காப்பியரும்".*

*"நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலியிடைத்*
*தொடர்மொழி இறுதி வன்மையூர் உகரம் அஃகும்"*

என்றன்றோ கூறியிருப்பர். அவர் அங்ஙனம் கூறிற்றிலரே! குற்றியலுகரம் தனி நெடிலுக்குப் பின்னரும், தொடர்மொழி இறுதியிலும் வரும் வல்லொற்றை ஊர்ந்து வரும் என்றுதானே கூறியுள்ளார்.

*"நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்*
*குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே"* (மொழி.3)

முன்னூலாசிரியர் இவ்வாறு தெளிவுறக் கூற, காரணமின்றி நன்னூலார் அவரோடு முரணுவானேன்?"

குற்றியலுகரம் குறுகியவியல்புடைய தென்பதும், அது நிற்குஞ் சொல் ஈற்றயலெழுத்துப் பற்றி அறுவகைப்பட்ட தென்பதும், தொல்காப்பியர் கூறிய கூற்றுகளே! நன்னூலாரும் இங்ஙனம் கூறியது அவரை முற்றும் தழுவியே.

*"ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி*
*இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி உளப்பட*
*மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே"*
(மொழிமரபு.12)

என்று தாம் வகுத்துக் கொண்டவாறே, தொல்காப்பியர் குற்றியலுகரச் சொற்களை ஈரெழுத் தொருமொழி, தொடர்மொழி என இரண்டாகப் பகுத்து,

*"நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்*
*குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே"*

என்று தொகுத்தும், பின்னர்க் குற்றியலுகரப் புணரியலில்,

*"ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்*
*ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்*
*ஆயிரு மூன்றே உகரங் குறுகிடன்"*

என்று அவ்விரு தொடரையும் ஆறாக விரித்தும், கூறியுள்ளார்.

*"உகரங் குறுகிடன்"* என்னும் தொல்காப்பியத் தொடரை "வன்மை யூர் உகரம் அஃகும்" என்னும் நன்னூற்றொடரும்: *"நெட்டெழுத் திம்பர்"* என்னும் தொல்காப்பியத் தொடரை *"நெடிற்றொடர்"* என்னும் நன்னூற் றொடரும்; முற்றும் ஒத்திருத்தல் காண்க. ஆகவே,

*"நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலியிடைத்*
*தொடர்மொழி இறுதி வன்மையூர் உகரம்*
*அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே"* (நன்.13)

என்று நன்னூலார் கூறியுள்ளது முற்றும் உண்மைக்கு ஒத்ததும் தொல்காப்பியத்தொடு இம்மியும் முரண்படாததுமாகும். ஓர் இலக்கணத்தைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறலே நூன்முறை யாதலின், தொல்காப்பியர் தம் நூலின் 1 ஆம், 36ஆம் 466ஆம் நூற்பாக்களில், முறையே, குற்றியலுகர வியல்பைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறினார் எனவறிக.

9. *"மேலும், இடமும் பற்றுக்கோடும் காரணமாக முற்றுகரம் குறுகி ஒலிப்பதாயின், காரணம் உள்வழியெல்லாம் காரியம் நிகழவேண்டுவது ஒருதலையாகலின் ஏது, தாது என்ற வடமொழிச் சொற்களில் உள்ள உகரமும் ஏற்ற இடமும் பற்றுக்கோடும் உடைமையின், குற்றியலுகரம் எனல் வேண்டும். ஆனால், அவ் வுகரம் முற்றுகரமாகவன்றோ உள்ளது. எனவே, இடமும் பற்றுக்கோடும் குற்றியலுகரம் வருவதற்குச் சார்பே தவிர, உகரம் குறுக்கம் பெறக் காரணங்கள் ஆகா.'*

இடமும் பற்றுக்கோடும் கரணியமாக முற்றுகரம் குறுகி யொலிக்கு மென்று இலக்கணியர் கூறியது. தமிழ்ச் சொற்களையே யன்றிப் பிறமொழிச் சொற்களை நோக்கியன்று.

மேலும், ஏது, தாது என்பவை வடசொற்கள் என்னும் பண்டைக் கொள்கை இனிச் செல்லாது. வடமொழி தேவமொழியென்றும், அது கடன்கொள்ளாதென்றும், அதிலுள்ள சொற்கள் யாவும் ஆரியச் சொற்களே யென்றும், குருட்டுத்தனமாக நம் முன்னோர் நம்பிய கருநாடகக் கொள்கை இன்று மொழி நூலாராய்ச்சியால் தகர்ந்து, வடசொற்களுள் ஐந்தி லிருபகுதி தென்சொல் என்னும் கொள்கை வலுத்து வருகின்றது.

ஏது, தாது என்னும் இரு சொற்களும் தென்சொல்லா என்பதை, சொற்பிறப்பியல், சொற்புணர்ச்சி என்னும் இரு கட்டளைக் கற்களில் உரைத்துக் காண்பாம்.

ஏது என்னும் சொற்கு வேர்ப்பொருள் ஏவுதல் அல்லது தூண்டுதல் ("Impulse") என்று, மானியர் உல்லியம்சு (Monier Williams) எனும் மேலைச் சமற்கிருதப் பேரறிஞர் தம் வடமொழி–ஆங்கில அகரமுதலியில் (Sankrit-English Dictionary) குறித்துள்ளார்.

கரணியம் ஒரு கருமஞ் செய்யத் தூண்டுவதாதலாலும், ஏவு என்னும் சொல்லின்

மூலமான 'ஏ' என்பதே ஏது என்னும் சொற்கும் மூலமாதலாலும், ஏது என்பது இடு என்னும் வினையொடு ஏதிடு எனப் புணர்ந்து ஏதீடு என்னும் வினைமுதல் நீண்ட தொழிற் பெயராதலாலும், இத் தொழிற்பெயர், *"கூறுதல் உசாஅதல் ஏதீடு தலைப்பாடு"* என்னும் தொல்காப்பிய அடியில் (பொருளியல்,13) ஆளப் பெற்றிருந்ததாலும், வடமொழிக்கு முந்தியது தென்மொழியாதலாலும், ஏது என்னும் சொல் தென் சொல்லே யென்று கொள்ளப் பெறும், அது குற்றியலுகரத்துடன் உயிரேறித் தென் மொழிப் புணர்ச்சி கொண்டதும், அதன் தென் சொற்றன்மை யினாலேயே என அறிக.

முத்து என்னும் தென் சொல் ஐயர் என்னும் சொல்லொடு புணரின் முத்தையர் என்றாவதே இயல்பாயினும் இக்காலத்துச் சிலர் அதை முற்றுகரமாக வொலித்து முத்துவையர் என்று புணர்ப்பது போன்றதே. *"ஏதுவின் உணர்த்தலும்"* என்னும் தொல்காப்பியத் தொடரும் (கற்பியல், 27) ஏதுவின் முடித்தல்" என்னும் நன்னூற்றொடரும் (14) என அறிக.

தாது என்னும் சொல்லின் வேர்ப்பொருள் நுறுங்கு அல்லது தூள் என்பதே.

ததைதல் = 1. சிதைதல். "சமந்ததைந்த வேல்" (பதிற்றுப். 70 : 3) 2. நுறுங்குதல்.

ததைந்தது தாது.

தாது = 1. நீறு, பொடி, (மதுரைக்.399,உரை)

2. பூந்தாது (பூஞ்சுண்ணம்)

*"தாதுண் வண்டினம்"* (மணிமே.4:20)

3. உடலின் எழுவகைக் கூறு (பிங்.)

4. விந்து (பிங்.)

வெயிலிற் காய்ந்து தூளாக உதிர்ந்துபோன சாணத்தைத் தாதெரு என்பது செய்யுள் வழக்கு.

*"தாதெரு மறுகின் மூதா ராய்கண்"* (அகநா.165)

தாதெரு பரந்து கிடக்கும் ஊர்ப்பொதுவிடம் தாதெரு மன்றம் எனப்படும்.

*"தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ"* (கலித்:103:61)

தாது + எரு = தாதெரு, இதுவும் தமிழிலக்கண நெறிப்பட்ட குற்றியலுகரப் புணர்ச்சியே.

சில குற்றியலுகர வீற்றுச் சொற்களை வடசொல்லென வழுப்படக் கொண்டு நீண்டகாலமாக இதழ்குவித் தொலிப்பதனாலேயே, அவை வடசொற்போல் தோன்றிவிடுகின்றன.

ஏதீடு, தாதெரு என்பன இலக்கணப் போலியான மரூஉக்களல்ல. அவை முதற்காலத்துத் தோன்றிய நெறிப்பட்ட புணர்ச்சிகளே. இக்காலத்தும், கிட்டிணன் (கிருட்டிணன்) என்னும் பெயரின் மரூஉவான கிட்டு என்பதையும் தம்பி என்பதன் கொச்சைத் திரிபான தம்பு என்பதையும் ஈற்றுகரத்தை இதழ் குவித்தொலித்தல் காண்க. அவற்றின் ஈற்றுகரங்களை முற்றுகரமாக ஒலித்தாலேயே, அவை, கிட்டுவை, கிட்டுவினால், கிட்டுவிற்கு எனவும், தம்புவை, தம்புவினால், தம்பிற்கு எனவும், வேற்றுமை ஏற்கின்றன. அவற்றை இலக்கண நெறிப்படி கிட்டை, கிட்டால், கிட்டிற்கு எனவும் தம்பை, தம்பால், தம்பிற்கு எனவும் வழக்கிற்கு மாறாக ஒலிப்பின், இன்னாவோசை தருதல் காண்க. இவ் விரண்டனுள், கிட்டு என்பதை வடசொற்றிரிபென வரைந்தொதுக்கினும், தம்பு என்பதை எங்ஙனம் தள்ளவியலும்?

ஆகவே, ஏது, தாது என்னும் சொற்களும், முற்றுகர வீறாக ஒலிக்கப்பட்டு வரும் நெடுங்கால வழக்கினாலேயே, வடசொற்றன்மை அல்லது வடசொற்போன்மை பெற்றுவிட்டனவென அறிக.

கருவி என்பது போன்ற கரணம் கருமம் என்னும் சொற்களும் தென்சொல்லாயிருப்பவும், கரணம் என்பதைக் கரண என்று ஈறுகெடுத்தும்; கருமம் என்பதைக் கர்மன் என்று வேறுபடுத்தும்; கரண என்பதை நீட்டிக் காரண என்றும் அதற்கேற்பக் கரு என்னும் முதனிலையினின்று கார்ய என்றும் வடவர் புதிதாய் வடசொல் ஆக்கிக்கொண்டது போன்றே, ஏது என்பதை ஹேது என்றும், தாது என்பதை dhatu என்றும் திரித்து ஆரிய மயமாக்கிக் கொண்டனர் என அறிக. (இலக்கணக்கட்டுரைகள் – பாவணர்.)

**நெடின்மோனை** *nediṉ-mōṉai,* பெ. (n.) அடிதோறும் நெடில் முதலெழுத்து ஒத்து வருவது; a kind of alliteration.

*[நெடில் + மோனை]*

எட்டு : *"தீவினையார் அஞ்சார் விழுமியார்*
*அஞ்சுவர்*
*தீவினை என்னும் செருக்கு"* (குறள்,201)

*"தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்*
*தோன்றலின் தோன்றாமை நன்று"* (குறள்,236)

*"காணுங்கால் காணேன் தவறாய; காணாக்கால்*
*காணேன் தவறல் லவை'* (குறள்,1286).

*"மாவும் புள்ளும் வதிவயிற் படர*
*மாநீர் விரிந்த பூவுங் கூம்ப*
*மாலை தொடுத்த கோதையுங் கமழ*
*மாலை வந்த வாடை*
*மாயோன் இன்னுயிர்ப் புறத்திறுத் தன்றே'*
(யா.கா.16 மேற்கோள்)

*"மால்கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ்
மால்வரைத்தோ ளாதரித்த மாலையார்–
மாலிருள் சூழ்
மாலையின் மால்கட லார்ப்ப மதன்றொடுக்கு
மாலையின் வாளி மலர்"* (தண்டி.–42, மேற்கோள்)

*"கேட கங்கண வங்கையொ டுங்கிளர்
கேட கங்கள துணிந்து கிடந்தன
கேட கங்கி ளர்கின்ற களத்தநன்
கேட கங்கள் மறிந்து கிடந்தவே"*
(கம்பரா.உத்த.3380)

*"வாழிய சீரி ராமன் வாழிய சீதை கோமான்
வாழிய கௌச லேசை மணிவயி
றுதித்த வள்ளல்
வாழிய வாலிமார்பு மராமர மேழுஞ் சாய
வாழிய கணையொன் றேவுந் தசரதன் மதலை வாழீ"*
(கம்பரா.உத்த 4357)

*"சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தமும் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதியிற் சுடுமாறு போல
சூரியன் தோற்றமுன் அற்றமலங்களே"*
(திருமந்திரம்)

*"சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதும் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடம்
சோம்பர் கண்டார்ச் சுருதிக்கண் தூக்கமே"*
(திருமந்திரம்)

*"தூங்கிக் கண்டார் சிவலோகம் தம்உள்ளே
தூங்கிக் கண்டார் சிவயோகம் தம்உள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகம் தம்உள்ளே
தூங்கிக் கண்டார் நிலை சொல்வ
தெவ்வாறே'*
(திருமந்திரம்)

*"தானே புலன் ஐந்தும் தன்வசம் ஆயிடும்
தானே புலன் ஐந்தும் தன்வசம் போயிடும்
தானே புலன் ஐந்தும் தன்னில் மடைமாறும்
தானே தனித்து எம்பிரான் தன்னைச்
சந்தித்தே"*
(திருமந்திரம்)

*"எழுவாய் எழுத்தொன்றின் மோனை"* (யா.கா.16). அடிதோறும் சீர்தோறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது மோனை. அடிதோறும முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடிமோனைத் தொடை எனப்படும். ஒரு அடியில் வரும் நான்குச் சீர்க்கண் வரும் மோனை வேறுபாடுகள் (விகற்பங்கள்): 1. இணைமோனை = முதலிரு சீர்க்கண் மோனை வரத் தொடுப்பது. 2. பொழிப்பு மோனை = முதலும் மூன்றாம் சீர்க்கண்ணும் மோனை வருவது. 3. ஒரூஉமோனை = முதல்சீர், நான்காம் சீரில் மோனை வருவது. 4. கூழைமோனை = முதல் மூன்று சீர்க்கண் மோனை வருவது. 5. மேற்கதுவாய் = முதல், மூன்று, நான்காம் சீரில் மோனை வரத் தொடுப்பது. 6. கீழ்க்கதுவாய் = முதல், இரண்டு, நான்காம் சீரில் மோனை வரத் தொடுப்பது. 7. முற்றுமோனை = நான்கு சீரிலும் மோனை வரத் தொடுப்பது.

*"இருசீர் மிசையிணை யாகும் பொழிப்பிடை
யிட் டொ ரூ உ வா ம்
இருசீ ரிடையிட்ட தீறிலி கூழை முதலிறுவாய்
வருசீ ரயலில மேல்கீழ் வகுத்தமை தீர்கதுவாய்
வருசீர் முழுவதும் ஒன்றின்முற் றாமென்ப
மற்றவையே"* (யா.கா.19)

மோனை வேறுபாடுகளுக்கு (விகற்பம்) எடுத்துக்காட்டு:

அணிமலர் அசோகின் தளிர்நலங் கவற்றி
(இணைமோனை)

அரிகுரற் கிண்கிணி அரற்றுஞ் சீறடி
(பொழிப்பு மோனை)

அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி
(ஒரூஉ மோனை)

அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல்
(கூழைமோனை)

அரும்பிய கொங்கை அவ்வளை அமைந்தோள்
(மேற்கதுவாய்)

அவிர்மதி அனைய திருநுதல் அரிவை
(கீழ்க்கதுவாய்)

அயில்வேல் அனுக்கி அம்பலைத்து அமர்ந்த
(முற்றுமோனை)

கருங்கயல் நெடுங்க ணோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே

**நெடினி** *neḍini,* பெ. (n.) பனை; palmyra - tree, Borassus filiformis. (சா.அக.).

*[நெடு → நெடி → நெடினி = நீண்ட பனைமரம்.]*

**நெடு[1]–த்தல்** *neḍu-,* 4செ.கு.வி. (v.i.) **1.** காலம், பொழுது முதலியன நீளுதல்; to be long, as time. **2.** மழை முதலியன விடாது தொடர்தல்; to continue, as rain. ***மழை நெடுநேரம் பெய்தது.*** **3.** நெட்டையாதல்; to become tall. ***நெடுக்க வளர்ந்து விட்டான்.***

*[நீள் → நீடு → நெடு → நெடு–த்தல்.]*

**நெடு²** *neḍu,* பெ. எ. (adj.) **1.** நீண்ட; long. *"வேனெடுங் கண்கள்"* (சீவக.1951). **2.** பெரிய; big. *"புரவல னெடுங்கடை குறுகிய வென்னிலை"* (பு.வெ.9:2, கொளு). **3.** பெருமை பெற்ற; great. *"நீங்கிய தாங்கு நெடுந்தெய்வந் தானெனன்"* (மணிமே.10:93). **4.** ஆழமான; deep. *"நெடும்புனலுள் வெல்லும் முதலை, அடும்புனலின் நீங்கின் அதனைப் பிற"* (குறள்,495). **5.** உயரமான; high. *"நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே"* (கம்பர் தனிப்பாடல்). **6.** மிகுந்த; much, excessive. *"நெடுமிடல்சாய"* (பதிற்றுப்.32:10). **7.** நீண்ட கால நெடும்பகை (உ.வ.); long cherished enmity. **8.** காலந் தாழ்க்கும்; delay. *"நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும் கெடுநீரார் காமக் கலன்"* (குறள்,605). **9.** புகழ்ச்சியான; praise. *"மாராயம் பெற்ற நெடுமொழி யானும்"* (தொல்.பொருள். புறத்.8).

**கோத.** நெற்ணெற்ண்; **துட.** நோற், நோறி; **க.** நிடு, நிட்டு; **து.** நிடி, நிடு, நிடுப்ப; **தெ.** நிடு, நிடுட, நிடிவி, நிடுபு.

*[நுல்(நீட்சி) → நெல் → நெள் → நெடு (வே.க.)]*

**நெடுக்கம்** *neḍukkam,* பெ. (n.) நெடுமை; extension.

**ம.** நெடுக்கம்

*[நெடுகு → நெடுக்கு + அம்]*

**நெடுக்கு** *neḍukku,* பெ. (n.) **1.** நீட்சி (இ.வ.); extension. **2.** நீளவாட்டு; length, as of a wall. *நெடுக்குச் சுவர்.*

*[நெடு → நெடுக்கு]*

**நெடுக்குச்சுவர்** *neḍukku-c-cuvar,* பெ. (n.) நீளவாட்டுச்சுவர் (வின்.); lengthwise wall, opp. to kuṟukku-c-cuvar. *வீட்டின் குறுக்கே நெடுக்குச் சுவர் கட்டவேண்டும்.*

*[நெடுக்கு + சுவர்]*

**நெடுக்குமரம்** *neḍukku-maram,* பெ. (n.) வாசற்கால் கதவுச்சட்டம் முதலியவற்றின் பக்கவடம் (இ.வ.); longitudinal frame, as of a door. *வாசக்காலுக்கு நெடுக்கு மரம் சாத்த வேண்டும்.*

*[நெடுக்கு + மரம்]*

**நெடுக** *neḍuga,* வி.எ. (adv.) **1.** நீளமாக; lengthwise, longitudinally. *நெடுக வளர்ந்த மரம். ஊர்வலம் செல்லும் பாதை நெடுக மக்கள் நின்றிருந்தனர். காணாமல் போன குடையை வழி நெடுகத் தேடினான்.* **2.** நேராகத் தொடர்ந்து; straight on. *நெடுகப்போ.* **3.** முழுத் தொலைவும்; whole distance.

*[நெடு → நெடுகு → நெடுக]*

**நெடுகதல்** *neḍu-kadal,* பெ. (n.) **1.** இறப்பு; dying. **2.** உயருகை; heightening. **3.** நீளுகை; lengthening. **4.** காணாமற் போகை; disappearing. (சா.அக.).

*[நெடு → நெடுகதல்]*

**நெடுகப்பிடி¹-த்தல்** *neḍuga-p-piḍi-,* 4செ.கு.வி. (v.i.) **1.** மழை முதலியன விடாது தொடர்தல் (உ.வ.); to continue, as rain. *மழைவிடாது நெடுகப் பிடித்துக் கொண்டது.* **2.** தங்காமற் செல்லுதல் (வின்.); to pass on without stopping. *இந்த வண்டியை நெடுப் பிடித்துக் கொண்டு சென்று கொண்டே இரு.* **3.** மிகுகாலம் இல்லாதிருத்தல் (வின்.); to be long delayed, as rain. **4.** காலம் பிடித்தல் (வின்.); to occupy or take up time.

*[நெடுக + பிடி-த்தல்.]*

**நெடுகப்பிடி²—த்தல்** *neḍuga-p-piḍi-*, 4செ.குன்றாவி. (v.t.) **1.** நீளமாகப் பிடித்தல் (வின்.); to stretch or hold a thing at full length. **2.** பொருளை அழித்தல் (யாழ்ப்.); to waste away, as property. **3.** பேச்சு முதலியவற்றை விரித்தல் (வின்.); to protract, as speech, action. *மாநாட்டில் நெடுகப் பிடித்துத் தலைவர் உரை செய்தார்.*

*[நெடுக + பிடி—த்தல்.]*

**நெடுகல்** *neḍu-kal,* பெ. (n.) **1.** நீளுகை; growing long, lengthening. **2.** உயர்கை; souring in height. (சா.அக.).

*[நெடுக → நெடுகல்]*

**நெடுகலும்** *neḍugalum,* கு.வி.எ. (adv.) **1.** எப்பொழுதும் (உ.வ.); continually, constantly, all day long. **2.** நீளத்திலே; lengthwise. *வயலை நெடுகலும் அளந்தான்.* **3.** காலம் முழுவதும்; whole time. *நெடுகலும் களவாடியே வந்திருக்கின்றான்* (உ.வ.).

*[நெடுக → நெடுகல் → நெடுகலும் (வே.க.)]*

**நெடுகவிடு—தல்** *neḍuga-viḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) **1.** நீளமாக விடுதல்; to let out, as a cord; to veer. *அந்தக் கயிற்றை நெடுகவிடு.* **2.** தள்ளி வைத்தல்(வின்.); to put off.

*[நெடு → நெடுக + விடு—தல்.]*

**நெடுகிலும்** *neḍugilum,* கு.வி.எ. (adv.) நெடுகலும் (உ.வ.) பார்க்க; see *neḍugalum. பாதை நெடுகிலும் படை குவிக்கப் பட்டிருந்தது.*

*[நெடு → நெடுகிலும்]*

**நெடுகினகாரியம்** *neḍugiṉa-kāriyam,* பெ. (n.) **1.** விடாவேலை; protracted, tedious, wearisome business. **2.** கடுமையான செயல்; desperate matter.

*[நெடு → நெடுகின + காரியம். கரு → கார் → காரியம். கருத்தல் = செய்தல். காரியம் → வ. கார்ய.]*

**நெடுகு—தல்** *neḍugu-,* 5செ.கு.வி. (v.i.) **1.** நீளுதல்; to extend, to be lengthened, to grow tall, high or long. "*உம்பர் பொதிர்த்திட நெடுகு மூக்க மானும்*" (துணிகைப்பு.நாட்116). **2.** காலத் தாழ்வாதல்; to be protracted, delayed. **3.** காணாமற் போதல் (யாழ்ப்.); to run away, to disappear, as things lent or lost. **4.** சாதல் (யாழ்ப்.); to die. **5.** ஓங்கி வளர்தல்; grow in high. **6.** நீடித்தல்; lengthen time, distance, etc.

*[நெடு → நெடுகு → நெடுகு—தல்(வே.க.)]*

**நெடுங்கடல்** *neḍu-ṅ-gaḍal,* பெ. (n.) **1.** கரையடுத்த கடல் (யாழ்.அக.); the sea adjoining a shore. **2.** பெரிய கடல்; big sea. "*நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி தான்நல்கா தாகி விடின்*" (குறள்,17). *நெடுங்கடல் ஓடியும் நிலையே கல்வி* (பழ.).

*[நெடு → நெடும் + கடல்]*

**நெடுங்கடலோடு—தல்** *neḍu-ṅ-gaḍal-ōḍu-,* 5செ.கு.வி. (v.i.) கரையோரமாய்க் கப்பல் செல்லுதல் (வின்.); to coast, sail along the coast.

*[நெடுங்கடல் + ஓடு—. ஓடுதல் = நீர் முதலியன ஓடுதல், பிளத்தல், நீங்குதல், கலம் செல்லுதல்.]*

**நெடுங்கடை** *neḍu-ṅ-gaḍai,* பெ. (n.) 1. பெரிய வாயில்; lofty gateway. *"புரவல னெடுங்கடை குறுகிய வென்னிலை"* (பு.வெ.9:2, கொளு). *"நீணெடு வாயில் நெடுங்கடை கழிந்தாங்கு"* (சிலப்.10:8). *"நெடுங்கடை நிற்றலு மிலையே கடும்பகல்"* (புறநா.69:17). *"யாமஇரவின் நெடுங்கடை நின்று"* (அகநா.208:1). *"நீங்காய் இகவாய் நெடுங்கடை நில்லாதி"* (கலித்.79:21). 2. பால்கணி; portico.

*[நெடும் + கடை. கடை = இடம், வாயில்]*

**நெடுங்கண்** *neḍu-ṅ-gaṇ,* பெ. (n.) 1. தொலை(தூர) பார்வையுள்ள கண்; farsighted eye. *அவனுக்கு நெடுங்கண் வந்துவிட்டது.* 2. பின்னிய ஓலையின் நீண்ட கண்; long squares in braiding olas. *நெடுங்கண் ஓலை.* 3. நீண்ட மட்டையினி றுதியில் விரியும் பனையோலைப் பிரிவு; separation in the sections of the palmyra leaf far from the stem. 4. தேங்காயின் தாய்க்கண்; top most of the three eyes of a cocoanut. 5. நீண்ட விழி; long eye. *"விலங்குஅரி நெடுங்கண் ஞெகிழ்மதி"* (ஐங்குறு,200:3). *"அணிமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே"* (ஐங்குறு.208:5). *"வேம்பு நனையன்ன நெடுங்கணீர் ஞெண்டு'* (அகநா.176:8).

*[நெடு + கண்]*

**நெடுங்கண்ணோலை** *neḍu-ṅ-gaṇ-ṇ-ōlai,* பெ. (n.) மட்டையினின்றும் விரிதற்கு முன்னமே பிரிந்து செல்லும் பனையோலை (வின்.); palmyra leaf with the divisions extended before separation.

*[நெடுங்கண் + ஓலை]*

**நெடுங்கண்பார்வை** *neḍu-ṅ-gaṇ-pārvai,* பெ. (n.) **நெடும்பார்வை** (வின்.) பார்க்க; see *neḍum-pārvai.*

*[நெடுங்கண் + பார்வை]*

**நெடுங்கண்விழு-தல்** *neḍu-ṅ-gaṇ-viḻu-,* 2செ.கு.வி (v.i) ஓலை முடைதலில் பெருங்கண் உடையதாதல்; to form big eyes, in braiding olas. *கீற்று நெடுங்கண் விழுந்திருக்கிறது.* (யாழ்.அக.).

*[நெடுங்கண் + விழு-தல்.]*

**நெடுங்கண்விழுதல்** *neḍu-ṅ-gaṇ-viḻudal,* பெ. (n.) கன்னமொரு பக்கம் நெடுகி மறுபக்கந் தளர்ந்திருக்கை; one side cheek to be extend and other side to grow slack.

*[நெடுங்கண் + விழுதல்]*

**நெடுங்கணக்கு** *neḍu-ṅ-gaṇakku,* பெ. (n.) 1. அரிச்சுவடி (தொல்.எழுத்து.94, உரை); alphabet. *"ஓவறு நெடுங்கணக் கோதிடுஞ்சிறார்"* (சேதுபு.கந்தமா.75). *நெடுங்கணக்குப் பொத்தகம் ஒன்று வாங்கி வா.* 2. நெடுநாட்கணக்கு (வின்.); a long account or reckoning. *அவன் கணக்கு நெடுங்கணக்கு.* 3. வாராக் கடன் (வின்.); bad debt. *அவன் கடனை நெடுங்கணக்கில் வை.*

*[நெடும் + கணக்கு. கணக்கு = எழுத்து.]*

**நெடுங்கணக்கு :** கணக்கு என்னும் பலபொருளொரு சொல்லுக்கு இங்கு எழுத்தென்று பொருளாகும். நெடுங்கணக்கு என்பது தமி ழெழுத்துகளுக்கு வழங்கும் பெயர்.

தமிழெழுத்துகள் முதல், சார்பென இரு வகைப்படும். உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு ஆக முப்பதும் முதலெழுத்துகள். சார்பெழுத்துகள் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என மூன்றெனத் தொல்காப்பியம் கூறும். நன்னூல் உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஒளகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக் குறுக்கம் என சார்பு எழுத்துப் பத்து வகையென்றும் இவற்றின் தொகை 369 என்றும் கூறும்.

உயிரெழுத்துத் தனித்தியங்கக்கூடியது. மெய்யெழுத்து உயிரின் துணை கொண்டே இயங்கும்.

"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" என்பர் தொல்காப்பியர். (தொல்.எழுத்து.46). உயிரெழுத்துகளில் குறுகிய ஓசையுடைய அ,இ,உ,எ,ஒ என்னும் ஐந்தும் குறில் எனப்பெறும். நீண்ட ஓசையை யுடைய ஆ,ஈ.,ஊ,ஏ,ஐ,ஓ,ஔ என்னும் ஏழும் நெடில் எனப்பெறும். மெய்யெழுத்துகளில் வல்லோசையுடைய க,ச,ட,த,ப,ற என்பவை வல்லெழுத்துகள். மெல்லோசையுடைய ங,ஞ,ண,ந,ம,ன என்பவை மெல்லெழுத்துகள். ய,ர,ல,வ,ழ,ள என்பவை இரண்டுமல்லா இடைநிகரன. ஆகையால், இடையெழுத்துகள் எனப்பெறும். முதலெழுத்துக் களாகிய இம்முப்பதும் ஒன்றையும் சாராமல் தாமே வழங்குவன.

குற்றியலிகரம், குற்றியலுகரம் என்பவை உயிரெழுத்தின் குறுக்கங்களே ஆகையால் சார் பெழுத்தெனப் பெற்றன. ஆய்தம் குற்றெழுத்துக்கும் உயிர்மெய் வல்லெழுத்துக்கும் நடுவே வரும் எழுத்தாகையால் சார்பெழுத்தெனப் பெற்றது. தொல்காப்பியர் கொள்ளாத மற்றைய சார்பெழுத்து களும் பயின்று வருதல் நோக்கி நன்னூலாசிரியரால் கொள்ளப் பெற்றன எனினும் அவை அத்துணைச் சிறப்படைய அல்ல.

உயிரெழுத்துச் சிறப்புக் கருதி முன் வைக்கப் பெற்றது. அவற்றுள்ளுங் குறிலது வேறுபாடே நெடிலாதலால் முதலிற் குறிலும் பிறகு நெடிலுமாக வைக்கப்பெற்றன. மெய்உயிரின் துணையால் இயங்குவதால், உயிருக்குப்பின் வைக்கப் பெற்றது. அவற்றுள், வலியார் மெலியார்க்கு முன் நிற்பது போல, வல்லெழுத்துக்கள் அவற்றிறிற்கினமான மெலலெழுத்துகளுக்கு முதலில் நின்றன. இவற்றைச் சார்ந்து வருவன ஆதலாற் சார்பெழுத்துகள் பின் வைக்கப்பெற்றன. (கலைக்களஞ்சியம்)

க் + அ = க–உயிர்மெய் உருவாதல் தமிழில் தொன்மையில் இருந்தமையும், கிரேக்க–இலத்தீன் இனமொழியான புரோகிருதம், சமற்கிருதம் தமிழைப் பார்த்து பெற்றமையும் பாவாணர் குறிக்கிறார். இன்னும் இந்தோ–ஐரோப்பிய மொழிகள் உயிர்மெய் இன்மையால் குழந்தையர் கற்கக்கடிதாதல் காண்க.

ஒரு மொழியிலுள்ள அரிவரி நிறைவுள்ள தில்லதென் றறிதற்கு, அம்மொழியிலுள்ள ஒலிகளையெல்லாம் குறித்தற்கு வரிகளுண்டா என்று காண்டல் வேண்டும். தமிழில் அதன் ஒலிகளையெல்லாம் குறித்தற்குப் போதிய வரிகளுண்டென்றே சொல்ல வேண்டும். மெய்யெழுத்துகளில் சிலவற்றிற்கு ஈரொலியும் சிலவற்றிற்கு மூவொலியு முள.

எ–டு: க – 1. க், க்கா K (வலிய ககரம்). 2. உலகு, அகம் என்னும் சொற்களில் மெல்லிய ககரம். ககரத்திற்கும் ஆய்தத்திற்கும் இடைத்தர ஒலி. 3. தங்கம் என்னும் சொல்லில் g போன்ற தொனிப்பொலி (voiced letter).

ஙகரத்தை யடுத்த ககரமெல்லாம் தொனித்தே ஒலிக்கும்.

ச – 1. ச், ச்ச ch (வலிய சகரம்). 2. சட்டி, சட்டை என்னும் சொற்களில் s போன்ற மெல்லிய ஒலி. 3. பசி, கசி என்னும் சொற்களில் s அல்லது ஸ போன்ற மெல்லிய ஒலி. 4. பஞ்சம் என்னும் சொல்லில் J போன்ற தொனிப்பொலி. ஞகரத்தை யடுத்த சகரமெல்லாம் தொனித்தே ஒலிக்கும்.

ஞ – 1. ஞ், ஏறத்தாழ ய்ங் போன்ற ஒலி 2. மஞ்சள் என்னும் சொல்லில் ɲj போன்ற ஒலி. ட–1, ட், ட்ட, ṭ போன்ற வல்லொலி 2. ட், ḍ போன்ற தொனிப்பொலி. டகரம் உயிர்மெய்யாய்த் தனித்து வரும்போதெல்லாம் தொனித்தே ஒலிக்கும்.

த – 1. த், த்த, t போன்ற வல்லொலி. தட்டை, தண்ணீர் முதலிய சொற்களிலுள்ள தகரமும் வலித்தே ஒலிக்கும். 2. விந்தை, மதி முதலிய சொற்களில் d போன்ற தொனிப்பொலி. நகர மெய்யை அடுத்துவரும் தகரமெல்லாம் தொனித்தே ஒலிக்கும்.

ப – 1. ப,ப், ப்ப. p வல்லொலி. 2. கம்பம், பண்பு, அன்பு, மரபு முதலிய சொற்களில் b போன்ற தொனிப்பொலி. ம், ண், ன் என்ற மெய்களை யடுத்துவரும் பகரம் தொனித்தே யொலிக்கும்.

ற – 1. ற, ற், வலிய றகரம் (Hard or trilled r) 2. ற்ற, t போன்ற வல்லொலி. 3. கன்று என்னும் சொல்லில் (candle என்னும் சொல்லிலுள்ள) d போன்ற மெல்லிய டகரம்.

னகரமெய்யை அடுத்து வரும் போதெல்லாம் றகரம் இங்ஙனமே ஒலிக்கும்.

றகரம் இரட்டிக்கும்போது இரண்டு மிசைந்து t போல ஒரே யொலியா யொலிக்கும்; னகர மெய்யை அடுத்துவரும்போது இரண்டு மிசைந்து. nd போல ஒலிக்கும். இதையறியாத ஆங்கிலரும், ஆங்கில வழித் தமிழறிஞரும், வெற்றி என்பதை வென்றி என்றும் வென்றி என்பதை வெற்றி என்றும் பிழைபட உச்சரிப்பர்.

எழுத்துகள் இடமும் சார்பும் பற்றிப் பற்பல வகைய ஒலிப்பதைக் குறித்தே.

*"எடுத்தல் படுத்தல் நலிதல் லுழப்பின்*
*திரிபும் தத்தமிற் சிறிதுள வாகும்"* (நன்.)

என்றார் பவணந்தியார். இங்ஙனம் ஒரெழுத்தே பற்பல வகையாக ஒலிக்கினும், எவ்விடத்தில் எவ்வொலியென் றறிய ஏதும் இடர்ப்பாடில்லை. ஏனென்றால் ஒவ்வோ ரொலியும் இயல்பாகவே இடமும் சார்பும்பற்றி வெவ்வேறொலியாய் ஒலிக்கின்றது. தமிழருள் எவர் பேசினும் இவ்வியல்பு மாறுவதின்று. பேசும்போது மட்டுமன்றி ஒரு நூலை வாசிக்கும்போதும் இவ்வியல்பு மாறுவதின்று. இதைக் கால்டுவெல் கண்காணியாரும் தமது ஒப்பியல் நூலிற் குறித்துள்ளார்.

இயல்பாகவும் எளிதாகவும் இருக்கிற தமிழ் மொழியைப் போன்றே. அதன் எழுத்து முறையும் இயல்பாகவும் எளிதாகவு மிருக்கவேண்டி நம் நுண்மாண் நுழைபுல முன்னை யாசிரியர் ஒரு வரியானேயே பல ஒலிகளைக் குறிப்பித்தனர். என்னே! அவர் அறிவின் மாண்பு!

இனி, தமிழிலுள்ள இசையும் குறிப்பும்பற்றிய பல்வகை யொலிகளையுங் குறிக்க வரியில்லை யென்னலாம்.

எ–டு : கும் கும் (gum gum) மதங்கத் (மிருதங்கத்) தொனி.

உஸ் – நாயை உஸ் காட்டல் அல்லது வேட்டை மேல் ஏவல்.

ஜல்ஜல் – தொடரி (சலங்கை) யொலி.

ஜம் – பெருமிதத் (கம்பீரத்) தோற்றக் குறிப்பு

இஸ்ஸஸ் – (ezzz) பாம்பு, வண்டு முதலியவற்றின் இரைச்சல்.

உஷ (ush-hush) அமைத்தற் குறிப்பு. இவையெல்லாம் எழுத்து முறைக் கேலாத புறவொலிகளாகக் கொண்டனரேயன்றி, பொருண் மொழிக்கு வேண்டும் எழுத்தொலி களாகக் கொண்டில ரென்க.

அற்றேல் பிற மொழிகளில் இவ்வொலிகளைக் கொண்டதென்னை யெனின், அவையெல்லாம் செயற்கை மொழிகளாதலின் அவற்றுக்குக் கொள்ளப்பட்டன வென்றும், அவற்றுள்ளும் முற்கு, வீளை, கனைப்பு, கத்து, அழுகை, தும்மல் முதலிய ஒலிகளையெல்லாம் குறிக்க வரியில்லை யென்றும், எல்லா ஒலிகளையும் குறிக்க வரியுள்ள மொழி உலகத்தில் ஒன்றுமேயில்லை யென்றும் கூறி விடுக்க.

எ, ஒ, ழ, ற என்ற ஒலிகள் வடமொழிக்கில்லை. ஆகையால் ஒட்டெலும்பு என்பதை ஓட்டேலும்பு என்றும், வாழைப்பழ வற்றல் என்பதை வாலபல வர்ரல் என்று மல்லவோ எழுத வேண்டும்?

ஞ, ண, ழ, ள என்ற ஒலிகள் ஆங்கிலத்திற் கில்லை. இவ்வொலிகள் வருகின்ற சொற்களை எங்ஙனம் ஆங்கிலத்தில் எழுத முடியும்? கண்ணியைக் கன்னியென்றும் மூளையை மூலையென்று மல்லவோ எழுத வேண்டும்?

ஆங்கிலத்தில் உள்ள f, z, zh முதலிய ஒலிகள் எத்துணையோ ஒலிகளையுடைய வடமொழிக்கும் இல்லையே! இங்ஙனம் ஒவ்வொரு மொழிக்கும் சில சிறப்பெழுத்துகளிருப்பதால், ஒரு மொழிச் சிறப்பெழுத்துச் சொற்களைப் பிறமொழியி லெழுத வொண்ணாதாகும். இதை யறியாத வடமொழி வாணன் ஒருவன். ஒரு தமிழனை நோக்கிச் சகஸ்திரதளாம்புஜம் என்பதைத் தமிழில் எழுதுக என்று பழித்தானாம். பின்பு வாழைப்பழ வற்றல் என்பதை வடமொழியில் எழுதுக என்று தமிழன் சொன்னதும் விழித்தானாம். ஆகையால் ஒரு மொழிச் சிறப்பெழுத்துச் சொற்களை இன்னொரு மொழியில் வேறுபாடின்றி (விகாரமின்றி) யெழுத வொண்ணா தென்றும், எல்லா மொழிச் சொற்களையும் தற்சமமாக எழுதும் மொழி உலகத்தே ஒன்று மில்லையென்றும் தெரிந்துகொள்க.

இதை யறியாதார் F தமிழில் இல்லையென்றும், ஐ தமிழிலில்லை யென்றும், இன்னோரன்ன எழுத்துக் களைப் புதிதாய்ச் சேர்த்தல் வேண்டுமென்றும் ஓல மிட்டுத் திரிவர். உலக முழுமைக்கும் பொதுமொழியாய் வந்து கொண்டிருக்கின்ற ஆங்கிலத்தில் ஏனைமொழிச் சிறப்பெழுத்துகளைச் சேர்க்கக் காரணமிருப்பினும், எவரேனும் ஞ, ண, ழ, ள எழுத்துகளை ஆங்கிலத்தில் சேர்க்க வேண்டு மென்று கூறின துண்டா? அன்றி, மிக நிறைவுள்ள தாகக் கருதப்படும் வடமொழி யரிவரியை இன்னும் நிறைவாக்க வேண்டி எ, ஒ, ழ, ற என்ற எழுத்துகளைச் சேர்க்க வேண்டுமென்று, எவரேனும் கூறினதுண்டா? இவரெல்லாம் அமைந்திருக்கவும் தமிழ்மட்டும் முனைந்து நிற்பதேன்? இதனானேயே பிறர்க்குத் தாய்மொழிப் பற்றுள தென்றும் தமிழர்க்கில தென்றும் விளங்குகின்றதே!

ஒரு மொழியின் அரிவரி அம் மொழி யொலிகட்கு மட்டும் அமைந்ததா? பிறமொழி யொலிகட்கும் அமைந்ததா? ஒருமொழி யரிவரியால் அம்மொழிச் சொற்களை மட்டும் எழுதாது, பிறமொழிச் சொற்களை எழுதி நகைப்பது பெரும் பேதைமை யாகும். ஒரு மொழிக்கு அதிலுள்ள ஒலிகளை யெல்லாம் குறிக்க வரியின்றெனின் அதுவே உண்மையான குறையாகும்.

தமிழில் ஒவ்வோரொலிக்கும் ஒவ்வொரு வரியுண்டு. உலகமொழிக ளெல்லாவற்றின் அரிவரிகளையும் ஒவ்வொன்றாய் உற்று நோக்கின், தமிழரிவரியே பிற மொழிகள் அழுக்கறுமாறு அத்தனை

நிரம்பினதும் வரம்பினதுமா யிருக்கின்றது. உயிரெழுத்துக்கள் பன்னிரண்டிற்கும் தனித்தனி வரியுள்ளது. குறில் குறிலாகவும் நெடில் நெடிலாகவும் உச்சரிக்கப் படும். மெய்யெழுத்துகள் எல்லா மொழிகட்கும் பொதுவாக இயற்கையான எளிய வொலிகள் பத்தொன்பதே. g ககரத்தின் பேதமும், s சகரத்தின் பேதமுமின்றித் தனியொலிக ளாகா.

ஆங்கிலத்தில் 5வரிகளால் 18 (20 Nesfield) உயிர்ஒலிகளைக் குறிப்பிடுகின்றனர். ஓரொலிக்குப் பல வரியும், ஒரு வரிக்குப் பல வொலியுமுள்ளன. C.g x (ks) w என்பன மிகை வரிகள். ங(ng), ஷ(sh), த(th), zh என்னும் ஒலிகளைக் குறிக்கத் தனி வரியில்லை, இணைவரி(digraph)களே.

அரபி மொழியில் ஏ, ய என்னும் ஈரொலிகட்கு ஒரே வரியும் ஒ, வ என்னும் ஈரொலிகட்கு ஒரே வரியும் உள்ளன.

தமிழில் ஒரு வரி பலவொலிப் பேதங்களைக் குறிப்பினும் அப்பேதங்கள் இடமும் சார்பும் பற்றி இயற்கையாலேயே தோன்றுவதால் வேண்டாத வரிகளைப் பெருக்கி நம்மை வருத்தியிலர் நம் முன்னோர்.

இனி, இசை விளி புலம்பல் ஆதியில், எழுத்துகள் எத்துணையும் நீண்டொலிப்பதைக் குறிக்கத் தமிழில் இருவகை யளபெடைகளுள. பிற மொழி கட்கிவையில்லை. வடமொழியில் உயிரளபெடையே யுண்டு; ஒற்றளபெடையில்லை.

தமிழில் வரிகள் எளிதாய் விளங்குமாறு வெவ்வேறு வடிவாயுள்ளன. ஔ என்பதிலுள்ள ள வடிவைச் சிறிதாயெழுதாதது அச்சுவார்ப்பார் குற்றமேயன்றி எழுத்தாசிரியர் குற்றமன்று. தெலுங்கு, அரபி, சமற்கிருதம் முதலிய மொழிகளில் மாணவர் மயங்குமாறு பல வரிகள் ஏறத்தாழ ஒரே வடிவா யுள்ளன.

தமிழ் வரிகள் ஆங்கில வரிகள்போல மிக நுண்ணிய (Diamond, Brilliant) வடிவிலு மெழுதப்படும். சமற்கிருதம், அரபி, தெலுங்கு முதலியவற்றின் வரிகள் அத்துணை நுணுக்கியெழுத இடந்தரா. இதனாலேயே சமற்கிருத வெழுத்துகளைக் கூட்டெழுத்து (சம்யுக்தாக்ஷரம்) களாக எழுதுவர்.

இனி, உயிரொலியும் மெய்யொலியும் உயிரும் மெய்யும் (life and body) கூடிய உயிர்மெய் (பிராணி) போல ஒன்றி ஒலிப்பது உயிர்மெய் வரிகளாற் குறிக்கப்பட்டது. உயிர், மெய், உயிர்மெய் முதலிய குறியீடுகள் தமிழரின் தத்துவவறிவை யுணர்த்தும். உயிர்மெய் வரிகளால் ஒலி நூலறிவும் வரிச்சுருக்கமும் பயனாம்.

தமிழ் அரிவரியில் உயிர் முன்னும் மெய் பின்னும் ஆய்தம் இடையும், உயிருள் குறில் முன்னும் நெடில் பின்னும், மெய்யுள் வலி முன்னும் மெலி பின்னும் இடை இடையும் வைக்கப்பட்டன.

உயிர்மெய் வரியும் எழுத்து முறையும் தமிழுக்கே சிறப்பாகும். இந்திய மொழிகட்கெல்லாம் இவை பிற்காலத்தே தமிழைப் பின்பற்றியேற்பட்டன. அரபி, கிப்ரு முதலிய சேமியக் (Semitic) கவைமொழிகள் எல்லாவற்றிற்கும், சமற்கிருத மொழிந்த ஆரியக் கவைமொழிகள் எல்லா வற்றிற்கும் இவையில்லை. எழுத்துகள் ஆங்கிலத்தில் போல உயிரும் மெய்யும் வேறு வேறு அடுத்தடுத் தெழுதப்படுவதுடன், அரிவரியில் உயிரும் மெய்யும் முறையின்றி மயங்கிக் கிடக்கும். ஆரியமும் சேமி யமுமாகிய மேலை மொழிகட்கெல்லாம் உயிர்மெய் வடிவும், எழுத்து முறையும் இல்லாதிருக்கவும், சமற்கிருதத்திற்குமட்டும் அவை எங்ஙனம் மிருந்திருத்தல் கூடும். சமற்கிருதத்திற்கு அவை இருந்தனவெனின், அதன் இனமாகிய செருமன், டச்சு, கிரேக்கு, இலத்தீன் முதலிய மொழிகட்கும், அவற்றை அடுத்து வழங்கும் சேமிய மொழிகட்கும் ஏன் அவையில்லை? வடமொழி ஆரியர் இந்தியாவிற்கு வந்தது கி.மு.3000. அவர் வருகைக்கு முன்னரே தமி ழில் எழுத்திருந்தது. அவ்வெழுத்துகள் உயிர்மெய் நீங்கலாக 31.

ஒலிமுறையினும் சொன்முறையினும் தமிழுக்கு அடுத்துள்ள கிரேக்க, இலத்தீன் மொழிகளில் முறையே எழுத்துகள் 24, 25; வடமொழியில் 48, இலத்தீன் எழுத்துகள் 24 என்றும், 23 என்றும் கணக்கிடுவதுமுண்டு. தமிழிலில்லாத சில செயற்கை யொலிகள் இலத்தீன், கிரேக்கு மொழிகளிலுள. ஆனால், அவற்றிற் பலவற்றிற்குத் தனி வரிகள் இல்லை. B,G. முதலிய தொனிப்பொலிகட்குத் தனி வரியுள. bh, gh முதலிய மூச்சொலி சேர்ந்த தொனிப்பொலிகட்குத் தனிவரியில்லை. சமற் கிருதத்தில் அவற்றிற்கெல்லாம் தனிவரி யுண்டு. அதோடு ஞ, ண முதலிய தமிழ் எழுத்து களும் சேர்க்கப்பட்டுள. மேலை மொழிகட்கும் தமிழுக்குமுள்ள எழுத்துகளிற் பெரும்பாலன வற்றிற்குத் தனிவரி யமைத்து வடமொழி யெழுத்துகளைப் பெருக்கிக் காட்டினார் வடமொழிவாணர். க,ச, ட, த, ப என்று தமிழ் முறையில் வல்லின மெய்யெழுத்து தொனிப்பதும், k, kh, g, gh என ஒவ்வொரு வல்லின மெய்யும் தொனிப்பதும், தொனியாததும், மூச்சொலி சேர்ந்ததும் சேராததுமாக நந்நான்காக உறழப்பட்டிருப்பதும், சமற்கிருதத்தின் செயற்கை யான எழுத்துப் பெருக்கைக் காட்டும்.

சமற்கிருதம், கிரேக்க இலத்தீன் மொழிகளின் திரிபு அல்லது வளர்ச்சி யென்பதற்குப் பல ஆதாரங் களுள. கிரேக்க இலத்தீன் மொழிகள் ஆரிய மொழிகளில் மிகப் பழைமையானவை. கிரேக்க இலத்தீன் எழுத்துகளினும் சமற்கிருத எழுத்துகள் மிகுதி. கிரேக்க இலத்தீனிலுள்ள பல சொற்கள் சமற்கிருதத்தில் மிகத் திரிந்துள்ளன. சமற்கிருதம் என்னும் பெயருக்கே நன்றாகச் செய்யப்பட்டது என்பது பொருள். உலகத்திலுள்ள மொழிகள் எல்லா வற்றினும் எழுத்துப் பெருக்கமும் செயற்கையொலிப் பெருக்கமுள்ளது சமற்கிருமொன்றே. அதனானேயே அது வழக்கற் றொழிந்தது.

வடமொழி யெழுத்துகளை 48 ஆகப் பெருக்கி யிருப்பினும், ஒலி முறைப்படி பார்ப்பின், அவற்றில் புணரொலிகள் அல்லது கூட்டெழுத்துகள் பலவாகும்.

'ரு', 'லு' என்பவை குற்றியலுகரம் சேர்ந்த ரகர லகரங்களாகும். 'ரூ' என்பது ரு என்பதன் நீட்டம். 'அம்' என்பது அம் என்னும் அசை. அகர உயிரும் மகரமெய்யும் சேர்ந்தது. இவை உயிர்மெய்களும் அசையுமாக இருந்தும் உயிரெழுத்துகளிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன. எ, ஒ என்ற உயிர்கள் வடமொழிக்கில்லாதது ஒரு பெருங் குறையாகும்.

மெய்யெழுத்துகளில் ஐ வருக்கத்தில் h சேர்ந்த எழுத்து களெல்லாம் இரட்டை யெழுத்துகளாகும். சந்தியக்கரங்கள் சில தனியெழுத்துகள் போற் காட்டப்படும். இதனால் வடமொழி யெழுத்துப் பெருக்கினால் ஒரு சிறப்புமில்லை யென்க.

வடமொழி ஆரியர் இந்தியாவிற்கு வந்த பின்னரே உயிர்மெய் வரியும் எழுத்துமுறையும் வடமொழிக்கு ஏற்பட்டன. வடமொழி வரிகள் தென்மொழி வரிகளின் திரிபே என்பது இருமொழி வரிகளையும் ஒப்பு நோக்குவார்க்கு இனிது புலனாம். வடமொழி யரிவரி யேற்பட்ட பின் அதையொட்டி அதன் கிளைமொழிகட்கும் பின்பு தமிழ்க் கிளைமொழி கட்கும் அரிவரிகள் ஏற்பட்டன. இதனால் பார்சி அரபி வரிகளைக் கொண்ட இந்துத்தானி யொழிந்த ஏனை யிந்திய மொழிகட்கெல்லாம் உயிர்மெய் வரியும் எழுத்துமுறையும் ஏற்பட்டுள.

ஆதியில் ஏனைய மொழிகட்கெல்லா மில்லாது உயிர்மெய் வரிகள் தமிழுக் கிருந்ததினாலேயே, அதன் அரிவரி நீண்டு நெடுங்கணக்கெனப்பட்டது. ஏற்கெனவே நெடுங்கணக்கா யிருக்கும் அரிவரியை (செந்தமிழ்ப் புரவலர் உமாமகேசுவரம் பிள்ளைய வர்கள் கூறியபடி) இன்னும் நெடுங்கணக்காக்க நினைப்பது என்னே பேதைமை!

இனி, ஒரு மொழிக்கு நிரம்பின அரிவரி யிருப்பினும், பிறமொழிச் சொற்களை அதில் மொழி பெயர்க்கப் போதிய சொற்களுளவா என்று பார்த்தல் வேண்டும். இலவெனின் பிறமொழிச் சொற்களையும் பிறமொழி யெழுத்துகளையும் அதிற் புதிதாய்ச் சேர்க்க இடமுண்டு. தமிழில் எல்லாப் பொருள் களையும் வெளியிடத்தக்க எண்ணிறந்த சொற்களுள. ஆதலின் பிறமொழிச் சொற்களை யேனும் எழுத்துகளையேனும் புதிதாய்ச் சேர்க்க எட்டுணையும் இடமின்று. பொருள்களின் சிறப்புப் பெயர் (Proper Name) களே எழுத்துப் பெயர்ப்பிற்கும் (Transliteration) தற்பவத்திற்கும் இடமாகும். இதற்குப் பிறமொழி யெழுத்துகள் வேண்டுவவல்ல. தமிழில் இயன்றதுணை எழுதுதல் தகும். ஏதேனுங் குறையிருப்பின் அது எல்லா மொழிகட்கும் பொது வாகும். இதற்கென்றே தமிழிற் புத்தெழுத்துகளைச் சேர்ப்பின் தமிழின் தூய்மையும் இயல்பும் எளிமையும் இனிமையும் கெடும். அங்ஙனம் தமிழைக் கெடுத்து வழங்குவதினும். அதை விட்டுவிட்டு அயன் மொழியை வழங்குவதே சாலச் சிறந்ததாம். அதனாற் புத்தெழுத்துகளைத் தமிழிற் புகுத்த வேண்டும் என்னும் பொருந்தாக் கூற்றைப் புறத்தே விடுக்க.

–"*செந்தமிழ்ச் செல்வி*" நளி–பாவாணர் 1934

தமிழ் உலக முதல் உயர்தனிச் செம்மொழி. இவ் வுண்மையை முன்னமே ஒரு பழம்பெரும் புலவர் கண்டு,

*"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி*
*ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் – ஆங்கவற்றுள்*
*மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது*
*தன்னே ரிலாத தமிழ்"*

என்று தெள்ளத் தெளிவாகப் பாடிவைத்திருக் கின்றார். இது உண்மை நவிற்சியே யன்றி உயர்வு நவிற்சியன்று.

குமரிமுனைக்குத் தெற்கே மடகாசுக்கர்த் தீவுவரை பரவியிருந்த பழம்பாண்டி நாடான குமரிக்கண்டம் முழுதும் மூவேறு கடல்கோள்காளால் முழுகிப் போனமையாலும், முதலிரு கழகப் பல்துறையிலக்கிய விலக்கணப் புலவியமனைத்தும் இயற்கையாலுஞ் செயற்கையாலும் அழியுண்ட மையாலும், தமிழின் தொன்மையை ஆழ்ந்த மொழியாராய்ச்சியின்றி அறியவியலாவாறு, மொழியொழிந்த பிற சான்றுகளெல்லாம் முற்றும் இறந்து பட்டன என்பதை, இற்றைத் தமிழ்ப் புலவர் முதற்கண் அறிதல் வேண்டும். ஆகவே, தொல்பொருட் கலை (Archaeology), ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழந்தமி ழக வரலாற்றிற்குப் பயன்படா தென்பதைத் தமிழ்நாட்டு வரலாற்றுத் துறைத் தலைவரும் கல்வெட்டுத் துறைத் தலைவரும் தொல் பொருளாராய்ச்சித் துறைத் தலைவரும் அறிதல் வேண்டும்.

தமிழ் தென்னாட்டு மொழியா நண்ணிலக் கடற்கரை மொழியா என்றும், குமரிநில மொழியா இற்றைநில மொழியா என்றும், திரவிட மொழிகட்குத் தாயா உடன்பிறப்பா என்றும், ஆரிய மொழிக் குடும்பத்திற்கு மூலமாக வுள்ளதா இல்லதா என்றும், தமிழன் பிறந்தகமும் மாந்தன் பிறந்தகமும் ஒன்றா வேறா என்றும், மொழி நூல் வரலாறு மாந்தனூல் ஆகிய முத்துறையிலும், நடுநிலை யுடனும், பொறுமையுடனும் நீண்டகால ஆராய்ச்சி செய்தாலன்றி, தமிழின் தொன்மை முன்மை தாய்மை தலைமை முதலிய தன்மைகளை முற்றும் அறியமுடியாது.

தொல்காப்பியம், முதலிரு கழகமும் இருந்த பழம் பாண்டிநாடு முழுதும் முழுகிய பின்பும், ஆரியப் பூசாரியர் தென்னாடு வந்து ஆரியச் சொற்களும் கருத்துகளும் தமிழிலக்கியத்திற் புகத் தொடங்கிய பின்பும், வைகை மதுரையும் கடைக்கழகமும் தோன்றுமுன் கி.மு.7 ஆம் நூற்றாண்டில், பாண்டியன் வயப்பட்ட தென் சேர நாட்டில் தோன்றிய பன்மாண் சார்பிற் சார்பான தொகுப்பு நூலாதலின், அதனையே முதனூலாகக் கொண்டு அது தோன்றிய காலமே தமிழிலக்கியப் பொற்காலமென்று கூறுவது, ஒரு பெருங்கோவிலின் திருவுண்ணாழிகையையும் இடைமண்டபத்தையும் முகமண்டபத்தையும் பாராது, கொடிக்கம்பத்தடியிலுள்ள சிற்றுருவத்தையே கோயிற் படிமையாகக் கருதித் தொழுவது போன்றதே.

*"செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு*
*முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்*
*புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"*

என்று பனம்பாரனார் கூறியதும்:

*"எழுத்தெனப் படுப..............முப்பஃ தென்ப"*

என்று எழுத்ததிகாரத் தொடக்கத்திலும்,

*"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே"*

என்று சொல்லதிகாரத் தொடக்கத்திலும்,

*"கைக்கிளை முதலா.........எழுதிணை யென்ப"*

*"அகத்திணை மருங்கின் அரில்தபவுணர்ந்தோர்*

*.................*

*திறம்படக் கிளப்பின்"*

*"நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென*
*வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே"*

*"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்"*

என்று முறையே பொருளதிகார அகத்திணையியல் புறத்திணையியல் செய்யுளியல் மரபியல் தொடக்கத்திலும், கூறியதோடு, நூல் நெடுகிலும் செய்யுளியல் மரபியல் தொடக்கத்திலும், கூறியதோடு, நூல் நெடுகலும் "என்மனார் புலவர்", "என மொழிப", "வரையார்", "என்ப உணருமோரே", "என்ப சிறந்திசி னோரே", "என்மனார் புலமை யோரே", "எனமொழிப உணர்ந்திசி னோரே", "கிளப்ப", "என்றிசி னோரே" என்றும் பிறவாறும் அடிக்கடி இடையிடை தொல்காப்பியர் கூறிச் செல்வதும்: தொல்காப்பியம் தொகுப்பு நூலேயன்றிப் புதிய வகுப்பு நூலன்று என்பதைத் தெளிவாகக் காட்டும்.

மேலும், தொல்காப்பியம் நன்னூலும் அட்டாத்யாயீ என்னும் பாணினீயமும் போல எழுத்துஞ் சொல்லும் மட்டுங் கூறாது. தமிழுக்கே சிறப்பாகவுள்ள யாப்பணி யுட்கொண்ட தொல்வரவுப் பொருளி லக்கணமுங் கூறுதலின், அதனாலும் அது தொல்காப்பியர் புதுப்படைப் பன்றென்பது வெள்ளிடை மலையாம். வடசொற் கலப்பும் சில ஆரியக் கொள்கைகளும் பற்றிய கூற்றுகளே தொல் காப்பியரின் புதுச் சேர்க்கையாகும். இதை யறியாத சில தமிழாசிரியர், தொல்காப்பியர் தாமே தமிழ் எழுத்திலக்கணத்தைத் திறம்பட வகுத்துக் கூறியதாக அவரைப் போற்றியுரைத்துத் தம் ஆராய்ச்சி யின்மையைப் புலப்படுத்துவர்.

பொருளிலக்கண மரபு குமரிநிலைத் தமிழரின் திணைநிலை வாழ்க்கைச் செய்திகளைப் போற்றிக் காத்துவருவதால், அவ்வகையிலேயே தொல்காப்பியம் பழந்தமிழ் வரலாற்றாராய்ச்சிக்குப் பயன் படுவதாகின்றது. இங்ஙனமே, புறநானூறு, கலித்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறப்பொருள் வெண்பாமாலை முதலிய சில பாத்தொகை களிலும் வனப்புகளிலும் இலக்கண நூல்களிலும் உள்ள குறிப்புகளும் பயன்படுகின்றன.

ஆராய்ச்சி யென்பது எல்லாருஞ் செய்யக்கூடிய எளியசெயலன்று. மதிநுட்பம், பரந்தகல்வி, நடுநிலை, அஞ்சாமை, தன்னலமின்மை, மெய்யறி யவா என்னும் ஆறும் ஆராய்ச்சியாளர்க்கு இன்றியமையாத பண்புகளாகும்.

உலகத்திலுள்ள மூவாயிரம் மொழிகளுள், தமிழைப் போன்று அடிமுதல் முடிவரை தருக்கப் பொருளாக விருப்பது வேறொன்றுமில்லை. பண்டை ஆரியர் பூசாரியர், தம் போன்றே தம் வழியினரும் காலமெல்லாம் தமிழரை அடிப்படுத்தி மேனத்தாக வாழ்தற் பொருட்டு, தம்மை நிலத் தேவரென்றும் தமிழ் வழிப்பட்ட தம் இலக்கிய மொழியைத் தேவமொழியென்றும் கூறி மூவேந்தரையும் ஏமாற்றித் தமிழரே தம் இனத்தைப் பகைக்கவும் தம் மொழியைப் புறக்கணிக்கவும் குமுகாயத் துறையிலும் இலக்கியத் துறையிலும் வழிவகுத்து வைத்திருக்கின்றனர்.

### பிறமொழி யெழுத்துகள்

எகிபதிய சுமேரிய நாகரிகத் தோற்றம் கி.மு.3000 ஆண்டுகட்கு முற்பட்டது. எகிபதிய எழுத்து முதற்கண் படவெழுத்து (Pictograph); பின்னர்க் கருத்தெழுத்து (Ideograph or logograph).

சுமேரிய நாகரிக வழிப்பட்ட சேமிய வெழுத்து முதற்கண் அசையெழுத்து (Syllabary கி.மு.2000); பின்னர் ஒலியெழுத்து (Alphabet கி.மு.1500).

கிரேக்கர் சேமிய ஒலியெழுத்தைப் பினீசிய (Phoenician) வணிகர் வாயிலாகக் கற்றுத் தமக்கேற்றவாறு திருத்திக்கொண்டதாகச் சொல்லப் படுகின்றது. கிரேக்க எழுத்தினின்று இலத்தீன் எழுத்தும். இலத்தீன் எழுத்தினின்று ஆங்கிலம் முதலிய பிற ஐரோப்பிய மொழி யெழுத்துகளும் அமைந்துள்ளன.

கிரேக்க எழுத்துகள் அல்பா (Alpha), பேற்றா (Beta) என்று தொடங்குவதால், அவ் வண்ணமலை 'அல்பாபேற்று' (Alphabet) எனப் பெயர் பெற்றது. இது தமிழில் உலக வழக்கில் 'அஅன்ன ஆவன்னா' (அ, ஆ, அவ்வா) என்று வழங்குவது போன்றது.

### கிரேக்க வண்ணமாலை முதற்கண்

A (short and long) B, G, D, E (short), W, Z, E (long), TH. I (short and long), K,L,M,N,X,O (short), P,R,S, T,U (short and long), PH, KH, PS, O (long) என்னும் 25 எழுத்துகளைக் கொண்டிருந்தது. பின்னர்த் திகம்மா (Digamma) என்னும் W நீக்கப்பட்டது.

### இலத்தீன் வண்ணமாலை, முதற்கண்

a, b, c, d, e, f, g, h, i, k, l, m, n, o, p, q, r, s, t, u, x என்னும் 21 எழுத்துகளைக் கொண்டிருந்தது. பின்னர் j, v, y, z என்னும் 4 எழுத்துகள் சேர்க்கப்பட்டன.

கிரேக்க எழுத்துகளுட் பலவற்றின் வடிவம் வேறு. அவற்றை இங்குக் காட்டலாகாமையால் ஆங்கில வடிவிற் குறிக்கப்பட்டுள்ளன.

சீன எழுத்து கி.மு.1000 ஆண்டுகட்கு முற்பட்டது. அது 4000 கருத்தெழுத்துகளைக் கொண்டது.

சப்பானியர் கி.பி.5ஆம் 6ஆம் நூற்றாண்டுகளில் சீனக் கருத்தெழுத்துகளைக் கடன் கொண்டனர். அவை ஐயாயிரமாகப் பெருகி ஈராயிரமாகக் குறைக்கப்பட்டுள்ளன. சொற்களின் முதனிலை களைக் குறிக்கக் கருத்தெழுத்துகளும், ஈறுகளைக் குறிக்க 'இரகன' (Hiragana), 'கற்றகன' (Katakana) என்னும் இருவகை அசையெழுத்துகளும் கையாளப்படுகின்றன வென்றும், இதனால் சப்பானிய மாணவன் 1500 சீனக் கருத்தெழுத்துகளையும் (ஏறத்தாழ 100) இருவகை அசையெழுத்துகளையும் கற்க வேண்டியுள்ள தென்றும், பாடுமேர் (Bodmer) கூறுகின்றார். (The Loom of Languages, p.438).

அரபி யிலக்கியம் கி.பி.6 ஆம் நூற்றாண்டில் தொடங்கிற்று. அதன் எழுத்தும் அக்காலத்ததே. அது 28 எழுத்துகளைக் கொண்டது. அவற்றுள் ஒன்று அ (Fatha), இ (Kasra), உ (Damma) என்னும் முக் குறிற்கும் பொதுவான குறி. வகரவெழுத்து உகரத்தையும் யகரவெழுத்து இகரத்தையும் இடத்திற்கேற்ப உணர்த்தும். இருவேறு குறிகள் சேர்ந்து ஆ, ஈ, ஊ என்னும் நெடில்களைக் குறிக்கும். சில இணைப்பெழுத்துகளும் (Ligatures) உண்டு.

அரபிக்கு இனமான எபிரேய இலக்கியம் கி.மு.12 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. அது 22 எழுத்துகளைக் கொண்டது. உயிரொலிகளை யுணர்த்தும் முறையில் அது அரபியொத்ததே. அவ்விரு மொழிகளின் வண்ணமாலைகளும் வெவ்வேறு வடிவுகொண்டனவேனும், கிரேக்கத்தைப் போன்று கானானிய மூலப் பினீசிய வண்ணமாலையினின்று திரிந்தவையே.

### தமிழின் தொன்மை

கி.மு.2000 ஆண்டுகட்கு முற்பட்ட ஊர் எனும் பாபிலோனிய நகரகழ்வில், கி.மு.3000 ஆண்டுகட்குமுன் சேரநாட்டினின்று ஏற்றுமதி செய்யப்பட்ட தேக்குமர உத்தரம் கண்டெடுக்கப் பட்டுள்ளது. ஊர் என்பது நகர் என்று பொருள்படும் அக்கேடியச் (Akkadian) சொல். அதுவே பண்டைத் தமி ழகத்தில் மருதநில நகரைக் குறித்த பொதுச்சொல்.

அப் பாபிலோனிய நகரிற் பிறந்து வளர்ந்த ஆபிரகாமின் பெயர், அப்பன் என்னும் தமிழ்ச் சொல்லின் சிதைவான ஆப் என்பதை நிலைச் சொல்லாகக் கொண்டது. அவனே அரபியர்க்கும் இசரவேலர்க்கும் பொதுவான முன்னோன். அவன் காலத்தில் அவ் வீரினத்தாரும் தோன்றவே யில்லை. ஆகவே, அரபியும் எபிரேயமுமான அவர் மொழிகளுந் தோன்றவில்லை. ஆபிரகாம் பேசின மொழி அக்கேடியன்.

### தமிழர் தோற்றமும் பரவலும்

குமரிநாட்டு மக்கள் தமிழின் வெவ்வேறு நிலையில் வெவ்வேறு திசை சென்று பரவியுள்ளனர். தமிழின் முச்சுட்டுகளினின்று தோன்றிய மூவிடப் பெயர்கள் ஒரு காலத்தில் குமரிநாட்டு மக்களொடு ஆத்திரேலியர்க்கும் சீனருக்கும் இருந்த உறவைக் காட்டுகின்றன. (கால்டுவெல் திரவிட ஒப்பியல் இலக்கணம், சென்னைப் பதிப்பு 361 ஆம் பக்கம்.)

ஏ-டு

| தமிழ் | ஆத்திரேலியம் |
|---|---|
| ஏன், யான், நான் | nga, ngali, ngatsa, nganya |
| நீன், நீ | ninna, nginne, ngintoa, ningte |
| நீம், நீயிர், நீவிர், நீர் | nimedoo, nura, niwā, ngurle |

| தமிழ் | சீனம் |
|---|---|
| நான், நாம் | ngo wo; womēn |
| நீன், நீ, நீம் | ni, nimēn |
| தான், தாம் | ta, tamēn |

நகரம் ஞகர மகரமாகவும், மகரம் வகரமாகவும், திரிதல் இயல்பே. தன்மைப் பன்மைப் பெயர் ஆங்கிலத்தில் we' என்றும் வடமொழியில் வயம் என்றும் திரிந்திருத்தல் காண்க.

'மேன்' (mēn) என்பது சீனத்தில் வகுப்பைக் குறிக்கும் தொகுதிப் பெயர். அது மன் என்னும் தென்சொல்லோடு தொடர்புடையதாயிருக்கலாம்.

மன் - மன்று - மந்து - மந்தை. மன்னுதல் = கூடுதல், மிகுதல், பெருத்தல்.

ஐம்பாற் படர்க்கைச் சுட்டுப் பெயர்கள் தோன்றுமுன் தான் தாம் என்பன படர்க்கைச் சுட்டுப் பெயர்களாகவே யிருந்தன.

பர் (Dr) (N.) இலாகோவாரி (Lahovary) தம் 'திரவிடத் தோற்றமும் மேற்கும்' (Dravidian Origins and the West) என்னும் ஒப்பியன் மொழி நூலில், தமிழொடு தொடர்புள்ள மேலையாசிய மேலையைரோப்பிய இடப் பெயர்கள், பூதப் பெயர்கள், மக்கட் பெயர்கள், உறவுப் பெயர்கள் பல்வகை உயிரினப் பெயர்கள், நிலைமைப் பெயர்கள், பல்வேறு வினைச்சொற்கள், பெயரெச்சங்கள் முதலிய நூற்றுக்கணக்கான சொற்களின் மூலத்தை அறியாது, அவற்றைத் தம் கொள்கைக்குச் சான்றுபோல் எடுத்துக் காட்டி, உண்மையில் தம் கொள்கையைத் தாமே மறுத்திருக்கின்றார்.

எ-டு : மல்=வளம், மல்-மல்லல்=வளம். "மல்லல் வளனே" (தொல்.உரி.7). மல்-மலை=இயற்கை வளம் மிக்கது. "வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே" (நன்.பாயி.28). இப்பொருளை மேலை மொழிகளிற் காண முடியாது. இங்ஙனமே ஏனையவும்.

Compare Cymri (Wales). ``It is stated that the original home of the Cymry, Cumri or Cymry was in Southern Hindustan the Southern extremity of which Cape Comorin, takes the name from the same root" - From a Historical Souvenir issued on the occasion of the meeting of the British Medical Association at Swanesa, - 1903-Editors.

A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Langauges, Third Edition, Introduction p., foot-note.

பேரா. V.R. இராமச்சந்திர தீட்சிதரின், Origin and Spread of the Tamils, Pre-Historic South India என்னும் வரலாற்று நூல்களைப் பார்க்க.

**தமிழன் பிறந்தகமே மாந்தன் பிறந்தகம்**

*"ஏதேன் தோட்டத்தை (மாந்தன் பிறந்தகத்தை) மடகாசுக்கர்த் தீவின் பாங்கர்க் காணவேண்டும்"* என்பது எக்கேல் (Ernest Haeckel) கூற்று History of Creation.

கென்யாவிற் (Kenya) கண்டெடுக்கப்பட்ட மாந்தன் மண்டையோடு இதுவரை கண்டவற்றுள் மிகப் பழைமையானதாயிருக்கலாம் என்பது, இலீக்கி (Richard Leakey) என்னும் ஆங்கில மாந்தனூலா ராய்ச்சியாளர் கருத்து.

மடகாசுக்கர் மட்டத்திற் சற்றுக் கிழக்கே தள்ளியிருந்ததே தமிழன் பிறந்தகம்.

*"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்*
*குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள*
*வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு*
*தென்றிசை யாண்ட தென்னவன் வாழி."*

(சிலப்.11:19-22)

**தமிழ் எழுத்துத் தோற்றக் காலம்**

தலைக்கழகத் தோற்றம் கி.மு.10,000 ஆண்டுகட்கு முந்தியது. அதற்குமுன் மூவதிகார இலக்கணமும் வகுக்கக் கால்நூற்றாண்டேனுஞ் சென்றிருத்தல் வேண்டும். இலக்கணத்திற்கு முன் பல்துறை இலக்கியம் தோன்ற அரை நூற்றாண்டு சென்றிருக்கும். அதற்குரிய எழுத்துத் தொகுதி அல்லது வண்ணமாலை, படவெழுத்து கருத்தெழுத்து, அசையெழுத்து, ஒலியெழுத்து என்னும் நால்நிலை கடந்து திருந்திய நிலைபெறக் கால் நூற்றாண்டாயிருக்கும்.

இலக்கிய விலக்கணப் புலவியல் பனையேட்டில் எழுத்தாணி கொண்டு சுழித்துக் கீச்சி எழுதப்பட்டது. ஏட்டின் இடப்பக்கம் (அடிப்பக்கம்) அகன்றும் வலப்பக்கம் (நுனிப்பக்கம்) சிறுத்தும் இருப்பதனால், இடம் வலமாக எழுதப்பட்டது. பட்டவன் பீடு கல்லிலும், வேந்தன் பட்டயம் கல்லிலும் செம்பிலும், பொறிக்கப்பட்டன, ஏட்டெழுத்து வளைகோடும் வெட்டெழுத்து நேர்கோடும் மிக்கிருப்பதே இயற்கை.

உயிரும் மெய்யும் மட்டும் உள்ள வண்ணமாலை குறுங்கணக்கு என்றும், உயிர்மெய்யொடுங் கூடியது

நெடுங்கணக்கு என்றும், பெயர் பெற்றன. பிறநாட்டு வண்ணமாலைகளெல்லாம் குறுங்கணக்கே. அதோடு உயிர், மெய், உயிர்மெய், குறில், நெடில், வலி, மெலி, இடை என்னும் வரிசையொழுங்கும் பிறப்பியல் முறையும் இல்லாது ஒன்றோடொன்று கலந்திருப்பன. உலகில் முதன்முதல் உயிர்மெய்யோடு கூடியதும்.

*"எண்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை*
*முதலீ றிடைநிலை போலியென் னகமும்*
*கிளவி புணர்ச்சி யெனுமிரு புறமும்."* (நன்.)

ஆகப் பன்னிருவகையில் இலக்கணங் கொண்டதுமாகத் தோன்றியது தமிழ் நெடுங்கணக்கே.

இனி, 'அலெக், பேத்' என்றோ, 'அல்பா, பேற்றா' என்றோ, 'ஏ, பீ என்றோ சொல்லாது. குறிலுக்கு அன்ன என்னுஞ் சாரியையும் நெடிலுக்கு அன்னா என்னுஞ் சாரியையும் கொடுத்து 'அ அன்ன, ஆ அன்னா' என்று ஒலியியல் முறையிலேயே தமிழர் தம் சிறுவர்க்குத் தொன்றுதொட்டுப் பயிற்றி வந்ததும் சிறப்பாகக் கவனிக்கத்தக்கது.

வடமொழி திரவிட வண்ணமாலைகள்

கிரேக்கத்திற்கும் பழம் பாரசீகத்திற்கும் நெருங்கிய ஒரு மொழியைப் பேசிய வகுப்பார். எழுத்தும் எழுதப்பட்ட இலக்கியமுமின்றி, கன்றுகாலி மேய்க்கும் முல்லை நாகரிக நிலையில் கி.மு.2000 ஆண்டுகட்குப் பின் சிறுசிறு கூட்டமாக வட இந்தியா புகுந்து, சிந்துவெளியில் தங்கித் தம் சிறு தெய்வ வழுத்துகளை எழுதாக் கிளவியாகக் கொண்டிருந்து, தமிழரின் தலைமையான நாகரிகத்தைக் கண்டபின், அவர் மதங்களாகிய சிவனியத்தையும் மாலியத்தையும் தழுவி, தமிழ் நெடுங்கணக்கைப் பின்பற்றி வடமொழி வண்ணமாலையை அமைத்துத் தமிழிலக்கியத்தைத் தொடர்ந்து மொழி பெயர்க்கவும் தம் மேம்பாட்டை நாட்டுதற் கேற்றவாறு தொன்மங் (புராணங்)களைப் புனையவும் தலைப்பட்டனர்.

பிற்காலத்தில், வடமொழி வண்ணமாலையைப் பின்பற்றிப் பல திரவிட இனத்தாரும் தத்தமக் கேற்றவாறு வண்ணமாலை வகுத்துக் கொண்டனர்.

வடமொழி வண்ணமாலையின் பின்மை

1. வடமொழி காலத்தால் தமிழுக்குப் பல்லாயிரம் ஆண்டு பிந்தியது. தமிழ் திரிந்து திரவிடமாகித் திரவிடம் ஆரியமாக மாறியபின், அதன் ஒரு பகுதி வடஇந்தியப் பிராகிருதத்துடன் கலந்து வேதமொழியாயிற்று. அவ் வேதமொழி தமிழுடன் கலந்து சமற்கிருதந் தோன்றிற்று.

2. கிரேக்கத்தில் Th, Ph, Kh என்ற மூவெழுத்துகளே மூச்சொலியுடன் கூடியவை. சமற்கிருதத்தில் க ச ட த ப ஆகிய ஐந்து வல்லெழுத்துகளும் மூச்சொலியுடனும் எடுப்பொலியுடனும் சேர்த்து, வலிப்பொலி, உரப்பொலி, எடுப்பொலி, கனைப்பொலி என நந்நான்காக வகுக்கப்பட்டுள்ளன.

3. ஆ, ஈ, ஊ (அ,இ,உ) ஆகிய மூன்றும் தமிழில் முதன்முதல் தோன்றிய சுட்டெழுத்துகள்.

ஆரியச் சுட்டுச் சொறகட்கெல்லாம் மூலம் தமிழ்ச் சுட்டெழுத்துகளே. (கால்டுவெல் திரவிட ஒப்பியலிலக்கணம், சென்னைப் பதிப்பு, 421 மற்றும் 422ஆம் பக்கம்)

4. 'ரு', 'லு' என்பவை உயிரெழுத்துகளல்ல; குற்றியலுகரத்தொடு கூடிய ரகர லகர மெய்கள்.

5. கிரேக்கத்தில் க்ஸ் (ks, x) என்றுள்ள இணைமெய் வடமொழியில் க்ஷ் (க்ஷ, ksh) என்று வளர்ச்சியடைந்துள்ளது.

6. தமிழ் ஆய்தமே வடமொழி விஸர்க்கம்.

7. வண்ணமாலை வரிசையமைப்பிலும் உயிர்மெய் யமைப்பிலும், வடமொழி முற்றும் தமிழைப் பின்பற்றியதே.

8. அம், அ: என்று இறுதியிற் சேர்த்திருக்கும் இரண்டும் தனிக்குறிலை யடுத்த மெய்யான அசைகளே யன்றித் தனி யெழுத்துகளாகா; ஒரு போதும் தனி உயிர்களாகா.

எழுத்துகளை முத்திரைகளாகச் செய்து பதித்த காலத்தில் எழுது என்னும் சொல்லுக்கு அழுந்துதல், அழுத்துதல் பொருள்கள் தோன்றின. அழுந்ததுதல் – "இருவர் நெற்றியு மெழுதின சிலகணை" (பாரத.13:89) அழுத்துதல் – "தொழுது தாளினைச் செய்யபஞ் செழுதினும்" (பாரத.சம்பவ.8).

முந்து தமிழின் தொடக்கக் காலத்தில் படவெழுத்தும் (pictographic) அதனினின்றும் தலைக்கழகக் காலத்திய அசையெழுத்தும் (syllabic) அதனினின்றும் இரண்டாம் தமிழ்க்கழக இறுதிக்காலத்தில் முப்பது முதலெழுத்துகளாகிய மூலத்தமிழ் அகரநிரற்குறியீட்டு எழுத்துகளும் தோன்றியனவாகக் கொள்ளலாம்.

எழுத்துக்குள் உருவங்கள்:

உலகில் பேசப்படும் சற்றொப்ப 3000 மொழிகளுள் 198 மொழிகளே வரிவடிவங்கள் கொண்டுள்ளன. வரிவடிவங்கள் அனைத்தும் படவெழுத்துகளிலிருந்து உருவானவை. தமிழில் படவெழுத்துகள் இருந்தன என்பதற்கும், அவையே கருத்தெழுத்தாகவும் அசையெழுத்தாகவும் இன்றைய வரியெழுத்தாகவும் வளர்ந்தன என்பதற்கும், இலக்கணச் சான்றுகளும் கல்வெட்டுச் சான்றுகளும் கிடைத்துள்ளன.

எழுத்துக்களையும் உருவங்களையும் புடைப்புச் சிற்ப வடிவில் செதுக்கி (பள்ளமும் மேடுமாக) எழுதுவதற்குப் பயன்பட்ட மாவுக்கல்லுக்கு 'எழுதுகல்' என்றே பழங்காலத்தில் பெயரிருந்தது. சிந்துவெளி முத்திரைகள் பெரும்பாலும் மாவுக்கல்லால் செய்யப்பட்டவை.

தமிழ், தொடக்க காலத்தில் சீனம் எகுபது மொழிகளைப் போல் படவெழுத்துகளில் எழுதப்பட்டது என்பதற்கு 'எழுத்து' என்னும் சொல்லே சான்றாகின்றது. 'எழுதுதல்' பழங்காலத்தில் ஓவியம் வரைதலையே குறித்தது.

கடவுள் எழுதவோர் கல்தாரானெனின் என்னும் சிலப்பதிகார வரியில் எழுதுதல் ஓவியம் வரைதலையே குறித்தது. ஓவியந் தீட்டிய மண்டபம் 'எழுத்துநிலை மண்டபம்' எனப்பட்டது. பாறை, சுவர், துணி ஆகியவற்றின் மீது ஓவியம் வரைந்த கோலெழுத்துக் காலம் முந்தியது. உருவங்களைச் செதுக்கியும் கீறியும் வரைந்த கண்ணெழுத்துக் காலம் பிந்தியது. சிந்து வெளி நாகரிக அழிபாடுகளில் கண்ணெழுத்துகள் கிடைக்கின்றன. ஓவிய உருவெழுத்துகள் கிடைக்கவில்லை. பன்னிரண்டு உருவங்கள் மட்டும் படவெழுத்து முறையின் எச்சங்களாகச் சிந்துவெளி எழுத்துகளில் நிலைத்துள்ளன. இதிலிருந்து சிந்துவெளி நாகரிகக் காலத்துக்கு முன்பே தமிழில் படவெழுத்து முறை தோன்றி நிலவியது என அறியலாம்.

படங்களாக வரையப்பட்ட உருவ வடிவங்களே பிற்காலத்தில் எழுத்து வடிவங்களாக மாறியுள்ளன. இதன் வண்ணம், உலகில் எம்மொழி எழுத்தாயினும் ஒவ்வோர் எழுத்தும் ஓர் உருவத்தின் படத்தை உள்ளடக்கியிருக்கிறது. அந்த உருவம் கண்ணுக்குப் புலப்படும் நிலைத்திணை, இயங்குதிணைப் பொருள்களில் ஒன்றாயிருக்கும். செமித்திய மொழியில் எழுத்துகளின் பெயர்கள், உயிரிகள் அல்லது பொருள்களின் பெயர்களாகவே அமைந்திருப்பது இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது. அம்மொழியில் 'B' என்னும் வடிவம் வீட்டைக் குறிக்கும். வீட்டின் வடிவமாக அமைந்திருக்கும் எழுத்தும், வீடு (Bethbeta) என்றே பெயரிடப்பட்டுள்ளது. கிரேக்கரும் செமித்தியரிடமிருந்து இதனைக் கடனாகப் பெற்றனர். இது மேலையாரிய மொழிகளில் 'பி' (B) எனக் குறுகியது. 'A' என்னும் ஆங்கிலவெழுத்து மாட்டின் தலையையும் கொம்பையும் குறிப்பது 'L' என்னும் ஒலிப்புக்குரிய 'எகுபதியே' எழுத்து முன்னாளில் 'படுத்திருக்கும் அரிமா' (Lion) வடிவமாக எழுதப்பட்டதும். எகுபதிய மொழியில் இதற்கு 'லியோ' என்று பெயர்.

பழந்தமிழிலும் எகுபதிய மொழியிலும் வல்லூறு (Flacon) வடிவமே அகர ஒலிப்பினைக் குறிப்பதாக இருந்தது. எகுபதிய மொழியில் இதற்கு 'ஆசோம்' என்று பெயர். எகுபதியர் 'நான்' எனப் பொருள்படும் சொல்லுக்கு மாந்தரின் இருகால் வடிவத்தைக் குறியீடாகக் குறித்தனர். சிந்துவெளி எழுத்து முறையில் இருகால் (II) வடிவம் 'நான்' என்னும் பொருளிலிருந்து பிறகு 'ந' என்னும் ஓசைக்குரிய அசையெழுத்துக் குறியீடாகி விட்டது. பின்னாளில் அது ஐரோப்பிய மொழிகளில் I என்ற எழுத்தாக மாறிவிட்டது. எகுபதியர், பொனீயிர், கிரேக்கர் ஆகிய மூவரும் 'D' என்ற எழுத்தை வீட்டின் கதவு வடிவமாக எழுதினர். தேனைக்குறிக்கும் 'Honey' என்னும் சொல்லின் முன்னெழுத்தான 'H' முதலில் தேன் கூட்டின் வடிவமாகவும், பின்னர் 'H' என்றும் எழுதப்பட்டது.

'M' என்னும் எழுத்து தொடக்கக் காலத்தில் ஆந்தையின் தலைவடிவமாக எழுதப்பட்டது. செமித்தியர், நீரின் அலை வடிவில் 'M' எழுத்தையும் மீன் வடிவத்தில் 'N' எழுத்தையும் எழுதினர். ஏனெனில் அம்மொழியில் 'மேம்' தண்ணீரையும், 'நூன்' மீனையும் குறித்தன. செமித்திய மொழியில் 'பே' வாய் எனப் பொருள்பட்டதால் 'P' எழுத்து வடிவம் வாயின் படமாக வரையப்பட்டது. பொனீசியர், எகுபதியர், கிரேக்கர் ஆகிய மூவரும் ஊசியின் துளை வடிவில் 'q' என்னும் எழுத்தை எழுதினர் 'U' என்பது இலத்தீன் மொழியின் 'V' சேர்ந்து 'W' ஆயிற்று. இது எகுபதிய மொழியில் 'பறவைக் குஞ்சின்' வடிவமாக எழுதப்பட்டது.

ஐரோப்பிய மொழிகள் கிரேக்கச் சொற்களைக் கடன் வாங்கிய பொழுது கிரேக்கத்தின் வாயிலாகச் செமித்திய எகுபதிய படவெழுத்துக்களின் சுருக்கமாகிய எழுத்தின் வரிவடிவங்கள் மேலையாரிய மொழிகளில் இடம்பெற்றன

சீனர் இதுகாறும் படவெழுத்துகளைப் பின்பற்றுகின்றனர். உலகப் பெருமொழிகளில் உள்ள அடிப்படைச் சொற்களின் எண்ணிக்கையை விட, சீன மொழியில் சொற்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தாலும் படவெழுத்துக்களின் எண்ணிக்கை மிகுதியாக இருக்கிறது. 40,000 படவெழுத்து களைக் கொண்ட சீனமொழி, சிந்துவெளித் தமிழைப்போல் அசையெழுத்து நிலையை யெய்தாததால், வரியெழுத்தாக வளர முடியவில்லை. ஆயின், தமிழ்மொழி எழுத்து வடிவின் நான்கு நிலைகளையும் படிப்படியாக வளர்த்துக் கொண்டிருக்கிறது.

**தமிழின் உருவெழுத்து நிலை :**

தமிழின் அனைத்து ஒலிப்புகளுக்கும் கூடாகவிருந்த உருவங்கள் சிந்துவெளி எழுத்துகளால்

புலனாகின்றன. சிந்துவெளி எழுத்தில் 12 உருவெழுத்துகள் உருவங் களையே தெளிவாகக் காட்டுகின்றன. ஏனையவை அவற்றுக்குரிய உரு வடிவமைப்பை உள்ளடக்கிய வரிவடிவங்களாக உள்ளன.

சிந்துவெளி எழுத்தில் அகரம் ஆணின் வடிவமாகவும், வல்லூறு என்னும் பறவை வடிவமாகவும் பிறகு வல்லூற்றின் இரு சிறகுகள் மட்டும் குறிப்பாகப் புலனாகும் வகையில் மேற்கோள் குறிபோன்றும் எழுதப்பட்டது. 'ஆகார' வடிவம் மாட்டின் தலையாக்வும், 'இ' கரம் ஆந்தையின் வடிவமாகவும், ஈகாரம் வண்டு, ஈ, தேனீ ஆகியவற்றின் வடிவமாகவும் 'உகரம்' காக்கையின் வடிவமாகவும், தளிரின் வடிவமாகவும் எழுதப்பட்டன என்று கருத இடந்தருகின்றது. எகரம் கோழியின் வடிவமாகவும், ஏணியின் வடிவமாகவும் 'ஏகாரம்' மான் அல்லது அம்பின் வடிவமாகவும் 'ஐ' கையின் வடிவமாகவும் 'ஒகாரம்' மயிலின் வடிவமாகவும் மயில் தோகையின் வடிவமாகவும் 'ஓகாரம்' யாழின் வடிவமாகவும் எழுதப் பட்டிருக்கலாம். ஐந்து குறில் எழுத்துகளும் ஐம்பறவைகளைக் (பஞ்சபட்சி) குறிப்பது உருவ எழுத்துகளைக் குறிப்பனவாகக் கருத இடந்தருகிறது.

தொன்முது தமிழில் 'க' கரம் கலயத்தின் வடிவமாகவும் 'சகரம்' சேல் மீனின் வடிவமாகவும் 'டகரம்' சதுர அல்லது நீள்சதுரத் துணியின் வடிவமாகவும் 'தகரம்' மழைத்தாரையின் வடிவமாகவும் ண, ன, ந, ஆகியன நாற்கால் விலங்கு, நான்கு கால்கள், நாய், நான் என்பவற்றின் குறியீடாகிய மாந்தனின் கால் அல்லது இருகோடுகள், தேன்கூடு போன்ற பலவடிவங்களாக இடந்தோறும் வேறுபடும் பாங்கினைக் கொண்டிருந்தன. 'பகரம்' கவித்து வைத்த மட்பாண்ட வடிவமாகவும் மகரம் மலை, மயில் ஆகியவற்றின் வடிவமாகவும் 'யகரம்' யா மரத்தின் வடிவமாகவும், 'லகரம்', 'செல்' (கறையான்) வடிவமாகவும் 'ழகரம்' தலைபருத்த புழுவின் வடிவமாகவும் 'ளகரம்' கரடியின் (உளியம்) வடிவமாகவும், தோலால் செய்த நீர்ப்பையின் வடிவமாகவும் 'றகரம்' ஆற்றின் வடிவமாகவும் எழுதப்பட்டன என்பதற்கு வரலாற்றுப் படிமுறைக்கு ஒத்த உருத்திரிபுகள் சான்றாகின்றன. மேற்கண்ட உருவங்களைச் சிந்துவெளி எழுத்துகளுடன் ஒப்பிட்டுக் காண்போர்க்கு இவ்வுண்மை தெற்றெனப் புலப்படும்.

தமிழி (தமிழ்ப்பிராமி) – தமிழ்ப் புலவர்களின் படைப்பு:

தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழ் எழுத்துகள் உயிரும் உடம்புமாக முப்பது என்று வரையறை செய்யப்பட்டன. இது யாரால் வரையறுக்கப்பட்டது, எக்காலத்தில் இது நிகழ்ந்தது. எங்கே முதன்முதல் செயற்பாடுற்றது என்னும் வினாக்களுக்கு விடைகாண்பது இன்றியமையாதது ஆகும்.

தொல்காப்பியர் தம் இலக்கண நூலை நூன்மரபு எனத் தொடங்கி மரபியலில் முடித்திருக்கிறார். "என்மனார், என்மனார் புலவர்" என்னும் கூற்றுகள் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளதால் தொல்காப்பியருக்கு வெகுகாலத்துக்கு முன்பே புலவர் பெருமக்கள் எழுத்துகளை உயிரெழுத்து மெய்யெழுத்து என வகைப்படுத்தியமை தெளிவாகிறது. தமிழ் எழுத்துக்களைச் சீர்திருத்தி முப்பதாக்கியவர்கள் தமிழ்ப்புலவர்களே என்பதைத் தொல்காப்பியத்தால் உறுதிப்படுத்திக் கொள்ள முடிகிறது.

தொல்காப்பியர் காலத்திய தமிழ் எழுத்துக்கு இக்காலத்தார் தமிழி என்று பெயரிட்டுள்ளனர். இதனை வடபுலத்தார் 'பிராமி' என்றனர்.

'பிரம்மம்' என்னும் சொல்லிலிருந்து 'பிராமி' என்னும் சொல் தோன்றியது. இதற்கு முதலாவது, தலைமையானது, அடிப்படையானது, மூலமானது, சிறந்தது என்று பொருள். பிரம முகூர்த்தம், பிரம குலம் (முதற்சாதி – பார்ப்பனச்சாதி), பிரமசரியம் (முதல் ஒழுகலாறு, பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சன்னியாசம் என்னும் நான்கு நிலைகளுள் முதல் ஆசிரமத்தைப் பின்பற்றுதல்) என்னும் சொற்களை நோக்குக.

பிராமி–முதலில் தோன்றிய எழுத்து என்பதே இதன் சரியான வேர்வழிப் பொருள், புலவர்களின் எழுத்து என்றிதனைக் கூறுவது வரலாற்றுப் பொருள். வரலாற்று ஆய்வாளரும் கல்வெட்டு வல்லுநருமான அறிஞர் பலர் Indian Paleography என்னும் நூலில் பிராமி என்பதற்குப் புலவர் எழுத்து என விளக்கம் தந்திருக்கின்றனர். இதிலிருந்து பிராமி எனப்படும் தமிழி எழுத்து தமிழ்க் கழகத்துப் புலவர்களால் புதிதாகத் திருத்தியமைக்கப்பட்டது எனத் தெரிகிறது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதியில் பிராமி என்பதற்கு சமற்கிருதத்திற்கு அமைக்கப்பட்ட எழுத்து எனத் தரப்பட்டுள்ள விளக்கம் முற்றிலும் தவறானது. சமற்கிருதம் எழுதப்படாத மொழி. அதை முதன் முதலில் எழுதத் தொடங்கியபோது தமிழ் மொழியினமைப்பை முற்றிலும் நோக்கி உயிரெழுத்து மெய்யெழுத்து என வகைப்படுத்திக் கொண்டனர். மேலையாரிய மொழிகளில் இத்தகைய வகைப்பாடு இல்லை.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகர் கல்வெட்டுகளில் காணப்பட்ட எழுத்துக்கு நாளடைவில், பிராமி எனப் பெயரிட்டனர். இது

முற்றிலும் தமிழுக்குரிய எழுத்து வடிவம் என்று அவர்களுக்குத் தெரியாது. பிராமி எழுத்து தமிழ், பிராகிருதம், பாலி ஆகிய மூன்று மொழிகளை எழுதுவதற்கு அக்காலத்தில் பயன்பட்ட பொது எழுத்து எனினும் இது தமிழுக்கென்றே அமைந்த மூல வரிவடிவம். பிராமி எழுத்தில் அமைந்த கல்வெட்டுகள் அசோகர் காலத்துக்கும் முன்னதாகத் தமிழகத்தில் பொறிக்கப்பட்டுள்ளன.

பட்டிப்புரோலு அழகர்மலை, கொங்கர் புளியங்குளம் போன்ற இடங்களில் கி.மு. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த பிராமி கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவற்றிற்குத் 'தமிழி எழுத்துகள்' எனப் பெயரிடப்பட்டுள்ளது.

இந்தியாவில் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் மிகவும் பழமையானவை தமிழ்நாட்டில் கிடைத்துள்ள பிராமி கல்வெட்டுகளே. இந்தியா முழுமைக்கும் ஒரே எழுத்து வடிவமாகக் கையாளப்பட்டது, பிராமி ஒன்றே. அது தெற்கிலிருந்து வடக்குப் பகுதிகளுக்குப் பரவியுள்ளது என்று உறுதிப்படுகிறது. பாலி பிராகிருத மொழிகள் வேறு எழுத்து அமைத்துக் கொள்ளவில்லை. சமற்கிருத மொழியினரும் வேறு வழியின்றி இதனையே எழுத்து வடிவாகக் கொள்ள நேர்ந்தது. வருக்க எழுத்துக்களை மட்டும் புதிதாகச் சேர்த்துக் கொண்டனர்.

இந்தியா முழுவதும் ஒரே எழுத்து வடிவமாகத் திகழ்ந்த இந்த எழுத்து வடிவத்தை 'பிராமி' என்று சொல்லாமல், 'தமிழ் எழுத்து' என்று சொல்வதே முறையானது என்று தொல்பொருள் ஆய்வுத்துறையில் ஓய்வு பெற்ற அதிகாரியும் தொல்லெழுத்து ஆய்வில் வல்லுநருமான அறிஞர் சீனிவாசன் வெளிப்படத் தெரிவித்துள்ளார்.

கி.மு. முதலிரு நூற்றாண்டுகளில் வாழ்ந்த சாதவாகன அரசர்களுள் வசிட்டி மகன் சதகன்னி வெளியிட்ட இருமொழி நாணயத்தில் ஒரு பக்கத்தில் தமிழிலும் மறுபக்கத்தில் பிராகிருத மொழியிலும் அவன் பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் இருமொழிக்கும் பிராமி எழுத்து வடிவம் ஒன்றாகவே உள்ளது. மௌரிய மன்னர்களுக்கு முன்பு மகத நாடாண்ட நந்தர் வெளியிட்ட காசுகளில் சிந்துவெளி எழுத்துகளில் நந்தன் எனப் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

யாழ்ப்பாணத்துக்கு அருகில் நடந்த அகழ்வாய்வில் பேராசிரியர் இந்திரபாலா் கண்டெடுத்த முத்திரையொன்றில் 'தீவு கோ' என்னும் பெயர் மேலே சிந்துவெளி எழுத்திலும் கீழே பிராமி எழுத்திலும் பொறிக்கப்பட்டுள்ளது. மேற்கண்ட மூன்று சான்றுகளி லிருந்து சிந்துவெளி எழுத்துக்குப் பிறகு பிராமி தோன்றியது என்பதும் ஈழத்தில் இருவகை எழுத்தும் (பழைய சிந்துவெளி எழுத்தும் புதிய தமிழி (பிராமி) எழுத்தும்) ஒரே காலத்தில் புழக்கத்தில் இருந்தன என்பதும் வெளிப்படுகின்றன. சிந்துவெளி எழுத்திலிருந்து பிராமி எழுத்து வளர்ந்திருக்கிறது என்பதை அறிஞர் பலரும் ஒப்புக் கொள்கின்றனர்.

பழைய சிந்துவெளி எழுத்து முறை உருவெழுத்திலிருந்து சுருக்கப் பெற்ற அசையெழுத்து. இது பொதுமக்களே கண்டறிந்த எழுத்து. இதனைத் திருத்தியமைக்கும் எண்ணம் கற்றவர்களிடையில்தான் தோன்ற முடியும். அதனையும் கல்வியில் சிறந்த புலவர் குழுவே செய்திருக்க முடியும். பாலி பிராகிருத மொழிகள் தோன்றுவதற்கு முன் எழுத்து வடிவிலிருந்த ஒரே மொழி தமிழ், தமிழ்ச் சங்கம் மதுரையில் நன்கு இயங்கிய காலத்தில் தமிழ்ப்புலவர்களே தமிழின் எழுத்து வடிவத்தை முப்பதாகத் திருத்திப்படைத்தனர் என்பதற்குப் பின்வரும் தொல்காப்பிய நூற்பாக்கள் சான்றாகின்றன.

"மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்"

(தொல்.எழுத்.15).

"எகர ஒகரத் தியற்கையும் அற்றே"

(தொல்.எழுத்.14).

இந்நூற்பாக்களிலிருந்து முன்பு தலைமேல் புள்ளி பெறாத எழுத்துகளைத் திருத்தியமைத்த பின் புள்ளி பெறலாயின என்று அறிய முடிகிறது. தமிழி எழுத்துகளுக்குத் தாயான சிந்துவெளி அசையெழுத்துகளும் உருவெழுத்துகளும் புள்ளி பெற வில்லை.

சிந்துவெளி அசையெழுத்தில் மெய்யெழுத்துக்கு என்று தனிக் குறியீடு இல்லை. உயிர் மெய்யெழுத்துக்கான ஒரே குறியீடு மெய்பிரட்டித்த மெய்ம்மயக்கத்துக்கும், உயிர்மெய்க்கும், மெய் யெழுத்துக்கும் ஆக மூன்று ஒலிப்புகளுக்கும் பொதுவான அசையெழுத்தாக இருந்தது.

க், க, க்க – இம்மூன்றுக்கும் ஒரே குறியீடு சிந்துவெளி எழுத்தில் காணப்படுகிறது. இது போன்றவையே ஏனையவும்.

குறில் நெடிலை மாத்திரை அளவுகோலால் வேறுடுத்தியதால் முக்குறில்களைத் துணைக் குறியீடு சேர்த்து நெடிலாக்கியது போல எகர ஒகரக்குறியீடுகளை வேறுபடுத்த முடியவில்லை. புதிதாக வகுத்த இலக்கணக் கட்டமைப்பின் வண்ணம் இ + அ – ஏ, உ + அ – ஓ என இருவேறு குறில் இணைந்து தனி நெடில்களாகி அதன் பின்னர் அவற்றின் குறிலை எகர ஒகரக் குறில்களாக்கினர் என்னும் கருத்தின் வண்ணம் ஏகாரத்திற்கு 'இஅ'

இரண்டெழுத்தாக எழுதிக் காட்டாமல், 'ஏ' என ஒரே எழுத்தாக எழுதி அதன் தலைமேல் புள்ளியிட்டுக் குறிலாக்குவது (உயர்மெய் மேல் புள்ளியிட்டு 1/2 மாத்திரை மெய்யெழுத்தாகக் குறைந்தது போல) எளிதாகத் தெரிந்தது.

எழுத்துகளுக்கு 1/4 மாத்திரை முதல், இரு மாத்திரை வரை அளவு வகுத்த தமிழ்ப் புலவர்கள் இசைத்துறையில் வல்லவராய் இருந்திருத்தல் வேண்டும் என்பதும், பாடல்களுக்குத் தாளம் வகுத்துப் பண்ணமைக்கும் உத்திக்கு உதவும் பொருட்டே எழுத்துக்களைக் குறில் நெடில் எனவும், குற்றியலுகரம், குற்றியலிகரம், மகரக் குறுக்கம் எனவும், வல்லினம், மெல்லினம், இடையினம் எனவும் பிரித்தனர் என்பதும் தெரிகிறது.

சிந்துவெளி அசையெழுத்திலிருந்துதான் தமிழ் எழுத்துகள் வடிவமைக்கப்பட்டன என்பதற்குச் சான்றாகத் தமிழ் எழுத்துகளின் வண்ண மாலையில் முதலெழுத்துகள் முப்பதுடன் 216 உயிர்மெய்யெழுத்து களின் வடிவம் (எழுதும் வேறுபாடு கருதி) செயற்கைத் தேவையாக சேர்க்கப் பட்டிருக்கிறது.

உயிர்மெய் எழுத்து உண்மையில் எழுத்து என்னும் பெயருக்குப் பொருத்தமானதன்று உயிர்மெய் எழுத்தை 'அசையெழுத்து' என்று சொல்ல வேண்டுமேயன்றி எழுத்து எனக் கூறுவது தவறு.

உயிரெழுத்து மெய்யெழுத்து ஆகிய இரண்டே எழுத்து எனப்படும்.

1. உயிர் (அ,ஆ), மெய் (க்,ங்) – தமிழில் உள்ள முப்பது முதலெழுத்துகள் – Open syllable (வெளிப்படை எழுத்து) – Phoneme.

2. உயிர்மெய், க,ங – அகத்திணைந்த அசையெழுத்து – Closed syllable.

3. உயிர்மெய் – இல், உயிர்மெய் மெய்–கல் : புறத்திணைந்த அசையெழுத்து – Compound syllable.

மேற்காட்டப் பெற்ற மூவகை எழுத்தமைதிகளில் முதலாவதொன்றே எழுத்து எனப்படுவது, இறுதியிரண்டும் செய்யுளுக்கு உறுப்பாகும் அசைகள். இவற்றை அசையெழுத்து என்றே கூறுதல் வேண்டும். சிந்துவெளி முத்திரைகளில் பயின்றுள்ளவை அனைத்தும் அசையெழுத்துகளே. செய்யுளுக்கு உறுப்பாகும் அசையெழுத்துகளிலிருந்து முதலெழுத்து களாக வடிவமைத்துள்ளவர்கள் தமிழ்ப் புலவர்களாதலின் தமிழி எழுத்து பிற்கால மக்களால் புலவர் எழுத்து (பிராமி) என்றழைக்கப்பட்டது. வடபுலத்தாரால் முதலில் தோன்றிய எழுத்து என அறிமுகப் படுத்தப்பட்டது. தமிழி எழுத்தினை அடிப்படையாகக் கொண்டு சமண முனிவர்களும், பௌத்தர்களும் பல்வேறு மொழிகளுக்குப் புதிதாக எழுத்துகளை மாற்றி யமைத்துக் கொடுத்தனர். தேவநாகரி எழுத்தும் இவ்வாறு தோன்றிய புதிய எழுத்தமைதிகளுள் ஒன்றாகும். உயிரெழுத்து வேறுபாடுகளைக் குறிக்கும் அடையாளங்கள் ஏறத்தாழ இந்திய மொழிகளில் ஒரு சீராக அமைந்திருப்பதே இதற்குச் சான்றாகும். தமிழில் அமைந்தவாறே உயிரெழுத்து வேறுபாட்டுக்குறிகள் இந்திய மொழிகளில் அமைந்துள்ளன என்பதைப் பின்வரும் சான்றுகளால் ஒப்பிட்டுத் தெளியலாம்.

1. ஆகார நெடிலுக்கு மெய்யெழுத்தின் வலப்பக்கம் கோடிழுத்தல்.

2. இகர ஒலிப்புக்கு மெய்யெழுத்தின் தலைமேல் வலமாகக் கோடிடல்.

3. உகர ஒலிப்புக்கு மெய்யெழுத்தின் கீழ் அல்லது கீழ் வலத்தில் கோடிடல்.

4. எகர ஒகர ஒலிப்புகளுக்கு மெய்யெழுத்தின் இடது மேலாக அல்லது மேற்புறத்து இடது சாய்வாகக் கோடிழுத்தல்.

5. ஐகார ஔகார வேறுபாடுகளை மெய்யெழுத்தின் இடப்பக்கத்தில் அல்லது மேற்புறத்தில் குறியீட்டுக் கோடுகளால் புலப்படுதல்.

மேற்கண்ட உயிரெழுத்து வேறுபாட்டு ஒலிப்புக் குறியீடுகள் மெய்யெழுத்துடன் சேர்த்தெழுதும் முறை, சிந்துவெளி எழுத்துக்காலம் முதற் சிறப்பாகத் தமிழிலும், குறிப்பாக அனைத்து இந்திய மொழிகளிலும் பின்பற்றப்பட்டு வந்திருப்பது புலனாகிறது.

"*ஔகார இறுவாய்ப்*
*பன்னீரெழுத்தும் உயிரென மொழிப*" (தொல். எழுத்.8)

"*னகார இறுவாய்ப்*
*பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப*"
(தொல்.எழுத்.9)

மேற்கண்ட நூற்பாக்களில் 'உயிரென மொழிப' 'மெய்யென மொழிப' எனக் கூறப்பட்டிருப்பதிலிருந்து உயிரென்றும், மெய்யென்றும் வேறுபடுத்தும் இயல்பு அதற்கு முன்பிருந்த சிந்துவெளிக்கால எழுத்தில் அறவே இல்லை என்று தெரிகிறது.

"*மெய்யோடியையினும் உயிரியல் திரியா*" (தொல்.எழுத்.10) என்று தொல்காப்பியர் கூறுகிறார். இக்கருத்து சிந்துவெளி எழுத்தில் பின்பற்றப் படவில்லை. அவர்கள் மெய்க்கும் உயிர்மெய்க்கும் மெய்ம்மயக்கத்துக்கும் ஒரே எழுத்து வடிவத்தை (அசையெழுத்து)க் கொண்டிருந்தனர். அதிலிருந்து தமிழ்ப் புலவர்கள் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பு தமிழ் எழுத்தை உயிர், மெய், உயிர்மெய் எனப் பாகுபடுத்தியதை அறிய முடிகிறது.

தமிழில் முதலெழுத்துகளைச் சீரமைத்தவர்கள் தொல்காப்பியர் காலத்துக்குச் சற்று முந்தியவர்களாக இருந்திருந்தால் அவர்களுடைய பெயரைத் தொல்காப்பியர் குறித்திருப்பார். சிந்துவெளி எழுத்தின் இறுதிக் காலம் கி.மு.1750 எனக் கூறப்படுகிறது. தொல்காப்பியரின் காலம் கி.மு.700. பிராகிருத மொழி வளர்ச்சியடைந்த காலம் கி.மு.1000. தொல்காப்பியர் குறிப்பிடும் வடசொல் என்பது பிராகிருதச் சொல்லே. இதில் பிராகிருத வடிவமுற்றுத் தமிழில் புகுந்த சமற்கிருதச் சொல்லும் அடங்கும். எனவே கி.மு.1000க்கும் 1750க்கும் இடைப்பட்ட காலத்தில் சற்றொப்பக் கி.மு.1500 ஆண்டளவில் சிந்துவெளி அசையெழுத்திலிருந்து தமிழ் முதலெழுத்துகள் 'தமிழி' வடிவம் பெற்றன எனக்கருத முடிகிறது.

பிராமி எழுத்துக்குத் தமிழர்கள் முன்பே பெயர் வைத்திருந்தார்களா என்பது அனைவரும் தொடுக்கும் வினா. சிந்துவெளி நாகரிகக் காலத்திலேயே தமிழ் எழுத்துக்குக் கண்ணெழுத்து (சிலம்பு.26:70) என்றும் கோலெழுத்து என்றும் பெயரிட்டிருந்தார்கள். எழுதப்படும் பரப்பில் கீறல் விழாமல் மையில் அல்லது வண்ணத்தில் தோய்த்து, தோல், துணி ஆகியவற்றின் மீது எழுதுவது கோலெழுத்து, எழுதப்படும். பரப்பில் கீறல் அல்லது பள்ளம் விழுமாறு குழித்து எழுதுவது கண்ணெழுத்து. தமிழைத் தவிர அக்காலத்தில் உள்நாட்டில் வேறெழுத்து முறையின்மையின் இதற்குத் தமிழ் எழுத்து என்று பெயரிட நேரவில்லை. தமிழர்கள் பெயரிடாததால் பிறமொழியாளர் பிராமி எனப் பெயரிட்டு வழங்கினர். தமிழினத்தார்க்குத் தனித்த பெயரில்லாதபோது பிறர் நம்மைத் திராவிடர் என அழைத்தது போன்றது இது. தமிழில் பிறமொழிச் சொல் புகுந்தால் நம் வரலாறே நமக்கு ஐயம் விளைவிக்கும் என்பதற்கு இது நல்ல சான்றாகும்.

உலக முழுவதும் முதுபண்டைக் காலத்தில் நிலவிய தொல்லெழுத்துகளைத் (epigraph) தொல்லெழுத்தியலார் ஆறுவகையாகப் பிரித்து ஆய்கின்றனர்.

**1.** படவெழுத்துமுறை : உருவப்படங்கள் அல்லது பொருள்களின் தெளிவான வெளிப்பாடு



**2.** கருத்தெழுத்து முறை : பொருளைக் குறித்த உன்னிப்புகள் கருத்தியலுருக்கள் ஆகியவற்றைப் புலப்படுத்தல் – குறியீடுகள் வாயிலாக.

வியப்பு
பெரிய... பெரிய மலை
சிறிய... சிறிய ஆறு
(இரண்டு கால்கள்) நான்

கருத்தெழுத்து முறை



**3.** ஒலிகொள்வடிவம் : ஒலியின் வரைகோட்டுக் குறியீடுகள். இவை மரபு வழிப்பட்ட கருத்துருக் களிலிருந்து பொருள்களுக்கு மாற்றாக வழங்கப்பட்ட ஒலிக் குறியீடுகள்; இன்னொரு வகையில் கூறினால் ஓவிய ஒலியெழுத்துப் புதிர், (அ) மீன்–மீனவன் – அரசன். கொடியில் மீன் சின்னம் உடையவன்.

ஓவிய எழுத்துப் புதிர் : (ஆ) சிறப்பும் குறிப்புப் பொருளும் உடைய எழுத்தாக்கம்–புதிய முறையில் விளக்குதல்.

ஓவிய எழுத்துப் புதிர்



**4.** சொற்குறியீடுகள் : முழுச் சொற்களுக்குக் குறியீடுகள் அமைத்தல்.



**5.** அசைநிலைக் குறியீடுகள் : சொல்லின் அசைகளோ கூறுகளோ குறியீடுகளாகக் காட்டப் பெறல்.

ஓம் + அன் ஓமன்

**6.** அகர நிரற் குறியீடுகள் : சொல்லாக் கத்திற்கு அடிப்படையான மூல ஒலியன்களைத் தனித்தனியாக எழுதிக் காட்டும் வரி வடிவம் அல்லது அடிப்படை எழுத்துகள் (உயிரெழுத்துகள், மெய்யெழுத்துகள்).

அ ஆ இ ஈ உ
ஊ எ ஏ ஐ ஒ
ஓ ஔ

அகர நிரற் குறியீடுகள்

பிராமி என்னும் தமிழி எழுத்து நேர்கோடுகளால் ஆகியது. இதனைச் சற்று வளைத்து எழுதிய வடிவமே வட்டெழுத்தாயிற்று. கி.மு. மூன்றாம் நூற்றாண்டளவில் சமணமுனிவர்களால் இந்தியாவில் பதினெட்டு மொழிகளுக்கும் பதினெட்டு வகை எழுத்துகள் உருப் பெற்றிருந்ததைச் சமவயங்க சுத்த என்னும் சமணநூல் குறிப்பிடுகிறது. கல்வெட்டு களைத் தொடக்கக் காலத்தில் பிராகிருத சமற்கிருத மொழிகளில் வெளியிட்ட பல்லவர் காலத்திலும் அதற்கடுத்த விசயநகர மன்னர் காலத்திலும் கிரந்த எழுத்து தோன்றியது. வடசொற்களைத் தமிழில் கலந்து எழுதும் ஒரே நோக்கத்திற்காகக் கிருத எழுத்துகள் புகுத்தப்பட்டன. இவை தமிழ்நாட்டில் தோன்றிய எழுத்துக்களில் ஆந்திர சாதவாகனவரை யடுத்து ஆட்சிக்கு வந்த இக்குவாகு மன்னர்கள் நாகார்ச்சுனா அமராவதி போன்ற இடங்களில் முதன்முதல் கிரந்த எழுத்தைப் பயன் படுத்தியிருக்கின்றனர். கிரந்த எழுத்து என்பதற்கு நூலில் எழுதப்பட்ட எழுத்து என்று பெயர். இதனைத் தமிழ் மக்கள் பயன்படுத்த வில்லை.

யாப்பருங்கல உரையில் (இறுதி நூற்பா விளக்கத்தில்),

*"உருவே உணர்வே ஒலியே தனிமையென*
*இருவகை எழுத்தும் ஈரிரண் டாகும்"*

என்ற உரையாசிரியர் மேற்கோள் காட்டியிருக்கிறார்.

உருவெழுத்து:
காணப்பட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப்படுவது உருவெழுத் தாகும்.

உணர்வெழுத்து :
கொண்டவோர் குறியால் கொண்ட வதனை
உண்டெடன் றுணர்வது உணர்வெழுத்தாகும்.

ஒலியெழுத்து
இசைப்படு புள்ளின் எழாஅல் போலச்
செவிப்புல னாவது ஒலியெழுத்தாகும்

தன்மையெழுத்து
முதற்கா ரணமும் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய வுணர்வும்
அவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின்
மிடற்றுப் பிறந்திசைப்பது தன்மையெழுத்தே.

நிகண்டாசிரியர்கள் காலத்தில் இந்நால்வகை எழுத்துகள் வடிவு, பெயர், தன்மை, முடிவு எழுத்துகளாகவும் வகைப்படுத்தப்பட்டன.

யாப்பருங்கல விருத்தியுரையில் பதினைந்து வகை எழுத்துகள் குறிப்பிடப்படுகின்றன.

1. ஆய எழுத்து : அ,க,ச,ட,த,ப,ய வணிக முத்திரை எழுத்து. ஆயம் – வரிப்பணம்.

2. ஓரை எழுத்து: அ,ச,ல,வ,ர,ங,ய

3. நாளெழுத்து: நளி (கார்த்திகை) முதலிய நாண்மீன் எழுத்துகள்.

4. தன்மையெழுத்து: பிறப்பியல்பு (சாதி) குறித்தல்.

5. நீட்டொலி எழுத்து (தாபம்): வேதம் ஓதுங்கால் நீட்டிப் படிக்கும் ஒலிக்குறியீடுகள்.

6. உக்கிரவெழுத்து (உச்சாடணம்): மந்திரக் குறியீடுகள்.

7. முத்திறவெழுத்து: சித்திரம் காருடம் முதலியன.

8. நால்வகையெழுத்து: பாகியல் முதலியன. (யானைப்பாகர் ஒலிப்புக் குறியீடு போல்வன).

9. நாற்கதியெழுத்து: புத்தேளிர், மாந்தர், அசுரர், நிரயர் (நரகர்) ஆகியோர்க்குரிய குறியீடுகள்.

10. ஒளியெழுத்து: கனிமம் (தாது) முதலிய மாழை (உலோகம்), எழுத்து, பச்சிலை பிழிந்துவிட் பின் எழுத்தின் வடிவங்கள் தெளிவாகப் புலப்படும்.

11. குறிப்பெழுத்து[1]: (சங்கேதம்): குறிப்பால்– பொருள் தருவன கலி முதலியனவும்.

12. குறிப்பெழுத்து[2]: குறிப்பால் பொருள் தரும் மாதடையம் முதலியனவும்.

13. பதின்மூன்றெழுத்து: பார்ப்பன வழக்காகிய வடமொழிச் சிறப்பெழுத்துக் குறியீடுகள்.

14. கட்டுரையெழுத்து: அகரநிரல் எழுத்து, வண்ணமாலை எழுத்து.

15. வடிவெழுத்து: வச்சிர முதலியன.

பௌத்தர்களும் கந்தருவ எழுத்து, நாகர் எழுத்து, இயக்கர் எழுத்து, கின்னரர் எழுத்து, கருடர் எழுத்து என ஐவகை எழுத்துகளாகக் குறிப்பிடுகின்றனர். காலப்போக்கில் திரிந்தனவும் பண்டு தொட்டே காக்கப்பட்டவையுமான எழுத்து வகைமைகளை இவை காட்டுகின்றன எனலாம். (எழுத்து[2] பார்க்க)

**நெடுங்கணவாய்** *neḍu-ṅ-gaṇavāy,* பெ. (n.) நீண்ட கணவாய் மீன்வகை (வின்.); a long cuttle fish.

*[நெடு → நெடும் + கணவாய் ]*

**நெடுங்கதை** *neḍu-ṅ-gatai,* பெ. (n.)
1. பழங்கதை (யாழ்.அக.); ancient story. *அவனுடைய நெடுங்கதையைக் கேட்கவா வந்தேன்.* 2. புதினம்(நாவல்); novel.
3. நீண்டகதை; long story or short novel.

*[நெடு → நெடும் + கதை]*

பழங்காலத்தில் செய்யுளில் சொல்லப்பட்ட கதை இலக்கியம் பல.

மறவனப்பு (இதிகாசம்); வரலாறு 3/4 பங்கு; கற்பனை 1/4 பங்கு.

பாவியம் (காப்பியம்); வரலாறு 1/2 பங்கு; கற்பனை 1/2 பங்கு.

தொன்மம் (புராணம்); இயற்கை நிகழ்ச்சி 1/4 பங்கு; இயற்கையை மீறிய நிகழ்ச்சி 3/4 பங்கு.

சமற்கிருதத்தில் இராமாயணம், மகா பாரதம் இரண்டும் மறவனப்பாக உள்ளன. தமிழில் சிலப்பதிகாரம் மணிமேகலை மறவனப்புத் தன்மை கொண்டன. சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அயல்நாட்டுக்காரர் இமயத்தில் ஏறி நின்று நும் மொழியின் முதல் இலக்கியத்தைக் கொண்டு வாருங்கள் என்று கூறினால் இந்திய தேசிய 15 மொழியாளரும் இராமாயணம் அல்லது மகாபாரதம் மொழி பெயர்ப்பைத்தான் கொண்டு செல்வர். தமிழர் மட்டுமே சிலப்பதிகாரத்தைத் தனித்தன்மையோடு எடுத்துச் செல்ல இயலும் என்றார்.

தமிழில் ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறு காப்பியம் என்று சமணமதப்பாகுபாடு கூறினாலும் சீவக சிந்தாமணி, பெருங்கதை இரண்டு மட்டுமே சிறந்தவை. பெரியபுராணம் (திருத்தொண்டர் வரலாறு) தொண்டர்பற்றிய 64 உண்மைக்கதைகளும் திருவிளையாடற் புராணம் கடவுள் பற்றிய 64 கற்பனைக் கதைகளும் கொண்டவை.

வரலாற்றுப்புதினம் – 3/4 உண்மை 1/4 கற்பனை

உளவறி புதினம் – 1/4 உண்மை 3/4 கற்பனை

வாழ்வியல் புதினம் – 1/2 உண்மை 1/2 கற்பனை

இப்பாகுபாட்டை–

இளம்பூரணர் தம் உரையில்–

உள்ளோன் தலைவனாக இல்லது கூறல் (வரலாற்று நெடுங்கதை)

உள்ளோன் தலைவனாக உள்ளது கூறல் (செய்தித்தாள் நிகழ்ச்சி)

இல்லோன் தலைவனாக உள்ளது கூறல் (வாழ்வியல் நிகழ்ச்சி)

இல்லோன் தலைவனாக இல்லது கூறல் (உளவறி நெடுங்கதை)

சிறுகதை,நெடுங்கதைகளின் அடிப் படையாக, பலர் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளை ஒருவர் வாழ்வில் நடந்ததாகக் கூறுவது என்ற உரையாசிரியர் குறிப்பு மூலக்குறிப்பு.

நெடுங்கதை = சிறுகதை அல்லாத நீண்ட கதை. புதினம் (நாவல்) (Fiction) என்னும் புனைகதை இதழ்களில் வரும்போது தொடர்கதையாகும். தென்னை, பனைபோல் கிளைகள் இல்லாதது சிறுகதை என்றும், மா, பலா போலக் கிளைகள் உள்ளது, நெடுங்கதை என்றும் கூறுவர் திறனாய்வாளர். தொடர்வண்டியிலோ, பேருந்திலோ ஒரு நிறுத்தத்திலிருந்து அடுத்த நிறுத்த நிகழ்வு சிறுகதை என்றும், தொடக்கம் முதல் இறுதி வரை காண்பது நெடுங்கதை என்றும் கூறுவார்.

முதல் புதினங்கள் (நாவல்கள்)

சென்ற நூற்றாண்டில் 1876–இல் வேதநாயகம் பிள்ளை என்ற அறிஞர் முதல்முதலாகத் தமிழுக்குப் புதின (நாவல்) இலக்கியத்தை அளித்தார். அவர் மாவட்ட முறைமன்றத்தலைவராக (நீதிபதியாக) இருந்தவர்; ஆங்கிலம் அறிந்தவர்; ஆங்கிலேயருடன் தொடர்பு உடையவர். ஆங்கிலத்தில் புதின (நாவல்) இலக்கியம் வளர்ந்திருப்பதையும், அதைப் பொழுதுபோக்காகப் பலர் படித்துப் பயன்பெறுவதையும் உணர்ந்து, தமிழர்களும் அவ்வாறு படிக்க வாய்ப்புப் பெறவேண்டும் என்று கருதினார். அந்தக் காலத்தில் செய்யுள் நூல்கள் பல எழுதிப் புகழ் பெற்ற மீனாட்சி சுந்தரம் பிள்ளையுடன் நெருங்கிய தொடர்பு உடையவர்; தாமும் பாடல் பல இயற்றியவர். ஆனாலும், செய்யுள் நூல்களை எல்லாரும் படிக்க முடியாது என்பதை உணர்ந்து, உரைநடை வாயிலாக நல்ல கருத்துகளை உணர்த்த வேண்டும் என்ற ஆர்வம் கொண்டார். கதை கேட்கும் ஆர்வம் மக்களுக்கு இயல்பாக இருப்பதால், புதினங்கள் (நாவல்கள்) வாயிலாகத் தாம் உணர்த்த விரும்பியவற்றை உணர்த்த முன் வந்தார். பிரதாப முதலியார் சரித்திரம் (1876), சுகுணசுந்தரி (1887) என்னும் புதினங்களை (நாவல்களை) இயற்றினார். அவற்றில் பலவகை மாந்தர்களைப் படைத்தார்; பலவகை உணர்ச்சிகளை அமைத்தார்; பல அறகருத்துக்களைப் (நீதிகளைப்) புகட்டினார். தஞ்சை, திருச்சி மாவட்டங்களில், கிராமங்களிலும், நகரங்களிலும் தாம் பெற்ற நுகர்வுகளைக் (அனுபவங்களைக்) கொண்டு, குடும்பக் குமுதாய வாழ்க்கை நிலைகளைச் சொல்லோவியமாக்கிக் காட்டினார்.

பின்னர் எழுதிய புதினத்தை(நாவலை)விட, முதலில் எழுதிய பிரதாப முதலியார் சரித்திரமே இலக்கியத்தரம் உடையது. கதைத் தலைவன், தலைவி ஆகிய இருவரின் பெற்றோர்க்கு இடையே பூசலும் போராட்டமும் நடக்கின்றன. தலைவன் வீட்டைவிட்டு வெளியேறுகிறான். ஒரு வேட்டைக் காட்சியைக் காண்பதற்கு முயல்கிறான். பல இன்னல்களை அடைகிறான். பணக்கார உழவர் குடும்பத்துப் போராட்டங்களைக் கதை சுவையாக வளர்த்துச் செல்கிறது. இரண்டாம் புதினத்தில் (நாவலில்), கதைத் தலைவியை ஓர் அரசன் கவர்ந்து செல்கிறான். வழியில் கன்னி மாடத்தில் புகுந்து கொள்கிறாள் அவள். அரசன் தேடிக் கண்டுபிடிக்கிறான். அதற்குள் அந்த அரசனுடைய ஆட்சியை அமைச்சன் கைப்பற்ற முயல்கிறான். போராட்டங்கள் வளர்கின்றன. முதல் புதின கதை மாந்தர் (பாத்திரம்) ஒருவர் கதை கூறுவதாக அமைந்துள்ளது. இரண்டாவதில் ஆசிரியரே கதை சொல்கிறார். நகைச்சுவை நிரம்பியுள்ளது. அறக்கருத்துகள் நிரம்பியுள்ளன.

வேதநாயகம் பிள்ளை போலவே வேறு துறைகளில் தொழில் செய்து கொண்டே தமிழ் இலக்கியத்தை வளர்க்கப் பாடுபட்டோர் பலர். அவர்களுள் நடேச சாத்திரி (1859–1906) என்பவர் ஒருவர். திராவிட பழங் (பூர்வகாலக்) கதைகள், இடைக் (மத்திய) காலக் கதைகள் எனப் பழைய கதைகளைத் திரட்டி எழுத்தில் தந்தார். முத்திராராட்சம் என்பதை வடமொழியி லிருந்து மொழிபெயர்த்து எழுதினார். ஆங்கிலத்தில் செகப்பிரியர் எழுதிய சில நாடகங்களை (Measure for Measure, Twelfth Night) தமிழில் கதையாக்கித் தந்தார். மாமி கொலுவிருக்கை, கோமளம் குமரியானது, திக்கற்ற இரு குழந்தைகள், மதிகெட்ட மனைவி என்பவை அவர் இயற்றிய கதை நூல்கள்.

வாழ்க்கையை உள்ளவாறு காட்டும் பாங்கு, நடப்பியல் (Realism) எனப்படுவதை முதல் முதலில் தமிழில் ராச(ஜ)ம் அய்யர் (1872–1898) எழுதிய 'கமலாம்பாள் சரித்திரம்' என்னும் புதினத்தில் காண்கிறோம். அதை அடுத்து, அதே பாங்கில் எழுதப்பட்டது மாதவையாவின் 'பத்மாவதி சரித்திரம்' வேதநாயகம் பிள்ளையின் நாவல்களுக்கும் இந்த இரண்டு நாவல்களுக்கும் இடையே இருபதாண்டுக் கால இடைவெளி இருக்கிறது. அப்போது புதினங்கள் தோன்றாமல் இல்லை; குருசாமி சர்மா எழுதிய 'பிரேம கலாவதியம்' முதலியன சில இருந்தன. ஆனால் அவை இலக்கியத் தரம் பெறவில்லை. 'கமலாம்பாள் சரித்திரம்' விவேகசிந்தாமணி என்னும் இதழில் 1893–95–இல் தொடர்கதையாக வந்து. 1896–இல் புத்தகமாக வெளியிடப்பட்டது. கிராம வாழ்க்கையும் சல்லிக்கட்டு என்னும் (எருதாட்டத்) திருவிழாவும் மற்றப் பழக்கவழக்கங்களும் அக்காலத்தில் இருந்தவாறே விளக்கப்பட்டுள்ளன. இளைஞரின் காதல் ஒருபுறமும், நடுவயதினரின் அன்பான குடும்ப வாழ்வு ஒருபுறமும்

இருந்து முரண்படுவதைத் தீட்டிக் காட்டியுள்ளார். அவர்க்கு அடுத்தாற்போல் புதினம் எழுதிய மாதவையாவின் 'பத்மாவதி சரித்திரம்' (1898) தெளிவான பாத்திரப் படைப்பு உடையது. அவருடைய சீர்திருத்த ஆர்வம் அதில் நன்கு புலப்படுகிறது. 'விசய மார்த்தாண்டன்', 'முத்து மீனாட்சி' (1903) என்னும் புதினங்களையும் அவர் இயற்றினார். பத்மாவதி சரித்திரத்தில் பல நிகழ்ச்சிகள் ஒன்றோடு ஒன்று பின்னிக் கிடக்கின்றன. ஒன்று மற்றொன்றினுக்குத் தொடக்கமாய் வளர்ந்து செல்லக் காண்கிறோம். பத்மாவதியின்மேல் அவளுடைய கணவனுக்கு ஏற்படும் ஐயமே நீண்ட சிக்கலாய் வளர்ந்து முடிகிறது. 'விசயமார்த்தாண்டம்' என்னும் கதையில் மறவர் சமுதாயமும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களும் வழக்கறிஞர்களும் முறைமன்ற அதிகாரிகளும் (நீதிபதி) பல கோணங்களில் காட்டப்படுகிறார்கள். 'முத்து மீனாட்சி' என்னும் புதினம் அவற்றைவிடப் புதுமை மிகுந்தது; புரட்சியானது. இளமையில் கணவனை இழந்த கைம்பெண் (விதவையானவள்) ஒருத்தி படும் துன்பங்களை அவளே எடுத்துரைக்கும் முறையில் (தன் வரலாறு என்ற போக்கில்) புதினம் அமைந்துள்ளது. இவற்றின் வாயிலாக மாதவையா, தமிழ்ப் புதினத் துறையில் உள்ளீடு (Content), வடிவு (form) ஆகிய இருவகையிலும் புதுமை வளர்த்தவர் எனலாம்.

மாதவையா (1872–1925) அரசாங்க வேலையிலிருந்து ஓய்வு பெற்றபின் 'பஞ்சாமிர்தம்' என்னும் இதழை நடத்தி அதில் பாடல் (கவிதை), சிறுகதை, இலக்கியத் திறனாய்வு, அரசியல் கட்டுரைகள் முதலியன வெளிவரச் செய்தார். 'கோணக் கோபாலன்' என்ற புனைபெயரில் தாமே பாடல் (கவிதை)களும் கட்டுரைகளும் எழுதிவந்தார். அவர்க்கு விருப்பமான குமுகாயச் (சமூகச்) சீர்திருத்தத் தொண்டுக்கு அந்த இதழ் ஒரு நல்ல கருவியாக இருந்தது. பழைய கண்மூடி வழக்கங்களை எதிர்த்துப் போராடினார். சிறுவர்கள் படிக்கக்கூடிய நடையில் பால ராமாயணம், பால விநோதக் கதைகள், தட்சிண சரித்திர வீரர் என்பன இயற்றினார். திருமலை சேதுபதி, பாரிசு(ஸ்)டர், பஞ்சுநதம் என்பவை நாடகங்கள். செகப்பிரியரின் ஒதெல்லோ நாடகத்தைத் தமிழில் தந்தார். பொதுதர்ம சத்கீத மஞ்சரி, புதுமாதிரிக் கல்யாணப்பாடல் என்பன அவர் இயற்றிய பாடல் தொகுதிகள். ஆசாரச் சீர்திருத்தம் என்னும் நூல் அவருடைய சீர்திருத்த ஆர்வத்தைப் புலப்படுத்தும். அவர் இயற்றிய சிறுகதைகள் பல. அவை சிறுகதை வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக அமைந்தவை; மூன்று தொகுதிகளாக, 'குசிகர் குட்டிக் கதைகள்' என்னும் பெயரால் வெளியாயின.

மாதவையாவுக்குப் பிறகு புதினத்(நாவல்) துறையில் மீண்டும் இடைவெளி ஏற்பட்டது. கல்வி பெருகி இலக்கியத் தரம் உள்ள கதைகளைப் பிறர் படைப்பதற்கு முன் ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார், பொன்னுசாமிப் பிள்ளை, கோதை நாயகி அம்மையார், ரங்கராசு முதலியோரின் பொழுதுபோக்குப் புதினங்களும் துப்பறியும் புதினங்களும் படிப்போர்க்கு விருந்தாக இருந்தன. அவற்றில் பெரும்பாலானவை, மேற்கு நாட்டாரின் துப்பறியும் புதினங்(நாவல்)களின் தழுவல்களாகவே இருந்தன. தமிழ்க் குமுதாயத்தின் படப்பிடிப்புக்களாக, கண்ணாடிகளாக, ஒரு சில மட்டுமே அமைந்தன.

காந்தியடிகளின் நெறியிலும் வாழ்விலும் தம் நெஞ்சைப் பறிகொடுத்து, இந்த நாட்டுக் கிராமங்களின் முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்ட கே.எசு. வெங்கடரமணி புதினத்துறையில் ஈடுபட்டார். முதலில் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டுப் பிறகு தமிழில் தாமே எழுதிவெளியிட்டார். அவற்றில் தேசநலம் மேலோங்கி நிற்கக் காண்கிறோம். தமிழ்நாட்டுக் கிராம வாழ்க்கையை உள்ளவாறு உணர்ந்து, கிராம மக்களின் நல்வாழ்வுக்கு வழிகாட்டும் முறையில் பல மாந்தர்களையும் நிகழ்ச்சிகளையும் அவற்றில் படைத்திருக்கிறார்.

கல்கி

தமிழ் இலக்கியத்தில் வரலாற்றுப் புதினங்களுக்கு ஒரு சிறப்பைத் தேடித் தந்தவர் 'கல்கி' என்ற புனைபெயர் கொண்ட இரா. கிருட்டிணமூர்த்தி (1899–1954). அவர் முதலில் 'ஆனந்தவிகடன்' என்னும் வார இதழுக்கும், பிறகு 'கல்கி' என்ற வார இதழுக்கும் ஆசிரியராக விளங்கியவர். அந்த இதழ்களில் அவர் எழுதிய தலையங்கங்களும் கட்டுரைகளும் அவருடைய எழுத்துத் திறமையில் மக்கள் ஈடுபாடுகொள்ளச் செய்தன. இசை, நாடகம், நாட்டியம், ஓவியம், சிற்பம் ஆகிய கலைகளைச் சுவைத்து மகிழும் உள்ளம் உடையவர் அவர். எதை எழுதினாலும் சுவை இல்லாமல் எழுத அறியாதவர். மக்கள் பேசும் தமிழின் நடையில் உள்ள உயிர்த்துடிப்பையும் வேகத்தையும் கண்டறிந்து, அவற்றைத் தம் எழுத்திற்கு நன்றாகப் பயன்படுத்தினார். தியாகபூமி, மகுடபதி, அலையோசை முதலான சமுதாய வாழ்வுபற்றிய புதினங்களும் எழுதினார். ஆயினும் வரலாற்றுப்புதின ஆசிரியர் என்ற வகையிலேயே அவர் பெரும் புகழ் பெற்றார்.

தமிழ்நாட்டின் வரலாற்றில் பல்லவ அரசர்களின் வரலாற்றையும் பிற்காலச் சோழர் வரலாற்றையும் நன்கு ஆராய்ந்து, அக்கால நாகரிகம், மக்கள் பழக்க வழக்கங்கள், மனநிலைகள் முதலியவற்றைத் தெளிவாக மனத்தில் இருத்திக்கொண்டு புதினங்களை

(நாவல்களை) எழுதினார். அந்த வரலாற்றுக் குறிப்புகள் கதை வடிவில் அமைவதற்காகத் தாமே சில கற்பனை மாந்தர்களைப் படைத்துச் சேர்த்தார். அவ்வாறு அவர் படைத்துத் தந்த மாந்தர்கள், இன்று தமிழ்ப்புதினங்கள் பயின்ற மக்களின் மனத்தில் நிலையாக வாழ்கிறார்கள். வரலாற்று நூல்களில் பல்லவ மன்னர்களையும் சோழ மன்னர்களையும்விட நிலைபேறு உடையவர்களாக அவர்கள் இன்று படிப்பவர்களின் நெஞ்சில் வாழ்கிறார்கள். அந்த அளவிற்குக் கல்கியின் கற்பனை, ஆற்றல் உடையதாக அமைந்தது. எடுத்துக் காட்டாக, தமிழ் நாட்டின் புகழ்பெற்ற சிற்பக் கலைக்கூடமாக விளங்கும் மாமல்லபுரத்தை (மகாபலிபுரத்தை)ச் சென்று பார்ப்பவர்கள், கல்கியின் 'சிவகாமியின் சபதம்' படித்தவர்களாக இருந்தால். அவர்கள் தவறாமல் ஆயனச் சிற்பியையும் அவருடைய மகள் சிவகாமி யையும் நினைக்கிறார்கள். அவர்களை உண்மையாக வாழ்ந்த வரலாற்று மாந்தர்கள் என்று எண்ணி, மாமல்லபுரத்தில் அவர்கள் வாழ்ந்த இடங்களை நினைந்து வியந்து நிற்கிறார்கள். பல்லவ அரசர்களையும் மறந்து அந்தக் கற்பனை மாந்தர்களைப் பாராட்டிப் போற்றுகிறார்கள்.

வரலாற்றுப் புதினங்களைப் படிப்பவர்கள் ஏதோ பழங்காலத்து நிகழ்ச்சிகளைப் படிக்கிறோம் என்ற அளவில் மட்டும் உணர்வதில்லை; அந்தக் காலத்து நிகழ்ச்சிகளையே மனக்கண்ணில் கண்டு அவற்றில் ஒன்றி விடுகிறார்கள். கல்கி முதல் முதலில் எழுதிய வரலாற்றுப் புதினத்திலும் அந்தக் கற்பனையாற்றலும் கதை கூறம் திறனும் அவ்வளவு சிறப்பாக அமைந்துள்ளன. அந்த நூல் 'பார்த்திபன் கனவு' என்பது; மகேந்திர பல்லவன் (கி.பி.ஏழாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்தவன்) வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது அது. அடுத்த வரலாற்று நூல் 'சிவகாமியின் சபதம்' அதைவிட இருமடங்கானது. அதுவும் அந்தப் பல்லவர் வரலாற்றை ஒட்டியே உருவானது. அதுவே அவருடைய படைப்புகளில் மிகச் சிறந்தது என்பது பலருடைய கருத்து, அது ஒரு காப்பியத்தின் அளவுக்குத் தமிழிலக்கிய வரலாற்றில் இடம் பெற்றுவிட்டது. பதினொன்றாம் நூற்றாண்டில் தஞ்சாவூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த பிற்காலச் சோழர்களில் இராசராசனின் வரலாற்றைக் கொண்டு அமைந்த புதினமாகிய 'பொன்னியின் செல்வன்' சிவகாமியின் சபதத்தைவிட இருமடங்கு வளர்ந்தது. அதன் கதையோட்டம் விறுவிறுப்பானது. திறமை மிகுந்த மாந்தர் பலர் அதில் படைக்கப் பட்டுள்ளார்கள். கற்பனைச் சுவையிலும் அது இணையற்றதாக உள்ளது. கதை நெடுகச் சோழப் பேரரசின் பெருமையும் வாழ்க்கையின் பெருஞ் சிக்கல்களும் விளக்கப்படுகின்றன.

சிவகாமியின் சபதத்தில் அவ்வளவு சிக்கல்கள் இல்லை. ஆயினும், சிவகாமி என்ற கலையரசி – சிற்பியின் மகள் – ஒருத்தியின் வளர்ச்சியும் போராட்டமும் இன்னலும் குறிக்கோளும் புதினத்தின் தரத்தை உயர்த்தப் போதுமானவைகளாக உள்ளன. நாட்டியக் கலையில் நிகரற்று விளங்கிய அவளுடைய கலைத் திறமை அரசியல் போராட்டங்களில் சிக்கி அல்லல் உறும்போது, கதையைப் படிப்பவர்களின் நெஞ்சம் துன்புற்றுத் துடிக்கிறது. ஆயினும் உயர்ந்தனவே எண்ணி உயர்ந்தனவே செய்து முடிக்கும் இவளுடைய வாழ்வு, படிப்பவர்களின் உள்ளத்தையும் உயர்த்தி விடுகிறது.

## இக்கால புதின ஆசிரியர்கள்

**1942**–இல் நடைபெற்ற விடுதலைப் (சுதந்திரப்) போராட்டத்திற்கு வடிவு தந்து 'தியாகத் தழும்பு' என்ற புதினம் ஆக்கியவர் நாரணதுரைக் கண்ணன். 'பிரசண்ட விகடன்' ஆசிரியராக இருந்து அவர் புதிய படைப்புகளுக்கு வரவேற்பு அளித்தார். தரங்கிணி, கோகிலா, நடுத்தெரு நாராயணன் ஆகியவை அவருடைய கதைகள்.

விடுதலை இயக்கத்தைப் பின்னணியாக வைத்துப் புதினங்கள் எழுதிய மற்றோர் ஆசிரியர் 'அகிலன்'. நேதாசியின் விடுதலைப் படையை அமைத்து எழுதப்பட்ட அவருடைய புதினம் 'நெஞ்சின் அலைகள்'. மனிதப் பண்புகளையும் எழுத்தாளர்களின் போராட்டங்களையும் உணர்ச்சி கலந்த நடையில் விளக்கும் புதினம் 'பாவை விளக்கு'. பொருந்தாத திருமணத்திற்கு ஆட்பட்டு வருந்தும் ஒருத்தியை, 'சிநேகிதி'யில் சொல்லோவியமாக்கிக் காட்டுகிறார். அவளை விருப்பம்போல் வாழவிடுவதற்கு முடிவு எடுக்கிறார் அவளுடைய கணவர். 'சித்திரப்பாவை' என்னும் நாவலில், நாகரிகத்தின் குழப்பத்தையும் பணத்தின் ஆதிக்கத்தையும் அவை கலைஞனைத் தாக்கும் தன்மைகளையும் அகிலன் விளக்குகிறார். கட்டுப்பாடுகளைத் தகர்க்கும் ஒரு வீர நங்கையை அதில் படைத்திருக்கிறார். 'வேங்கையின் மைந்தன்' என்னும் அவருடைய வரலாற்றுப்புதினம், பதினொன்றாம் நூற்றாண்டில் விளங்கிய சோழப் பேரரசைப் பின்னணியாகக் கொண்டது. 'கயல்விழி' பாண்டியரின் ஆட்சியை விளக்குவது. 'வெற்றித் திருநகர்' விசயநகர ஆட்சியைப் பின்னணியாகக் கொண்ட வரலாற்றுப்புதினம். இவை எல்லாவற்றிலும் ஆற்றொழுக்கான நடையையும் கலைமெருகு பெற்ற வடிவத்தையும் காணலாம். அவர் பல நல்ல சிறுகதைகளையும் படைத்துள்ளார். அவற்றில் அவரது இயல்பான இனிய நடையையும் வடிவச் சிறப்பையும் காணலாம். அவர் படைத்துள்ள கதை மாந்தர்கள் பல

திறப்பட்டவர்கள். கதை நிகழ்ச்சிகள் ஆசிரியரின் முதிர்ந்த உலகப் பட்டறிவைக் (அனுபவத்தைக்) காட்டுவன.

பல்வேறு வகையான சூழ்நிலைகளையும் மாந்தர்களையும் படைத்து, மிகப் பல புதினங் (நாவல்)களை எழுதியவர் கோவி. மணிசேகரன். அவர் பல்வேறு சிறுகதைகளையும் படைத்துள்ளார். 'தவமோ தத்துவமோ' என்னும் நூலில் திரைப்பட உலகத்தில் புகழ் பெறுவோரைப் போற்றி மயங்கும் மயக்கத்தை, ஒரு பேராசிரியரின் மனைவியின் வாழ்வின் வாயிலாக அம்பலப்படுத்தியுள்ளார். அவருடைய வரலாற்றுப் புதினங்கள் சுவையாகக் கதை சொல்வதுடன், வரலாற்றுப் பின்னணியை நன்கு விளக்குவன. 'அக்கினிக் கோபம்', 'பீலிவளை', 'செம்பியன் செல்வி' என்ற வரலாற்றுப் புதினங்கள் இலக்கியத் தரம் உடையவை. அவருடைய நடையில் ஒருவகை மிடுக்கு உள்ளது.

'தேவன்' என்னும் புனைபெயருடைய மகாதேவன் எட்டுச் சமுதாயப் புதினங்களை எழுதினார். எல்லாம் ஆனந்தவிகடனில் தொடர்கதைகளாக வந்தவை. 'துப்பறியும் சாம்பு' தொடர்கதைகளாக வந்தவை. 'துப்பறியும் சாம்பு' படிப்பவர் பலர்க்கும் சுவை விருந்து அளித்தது. 'மிசுடர் வேதாந்தம்' என்பதே அவருடைய படைப்புகளில் முதன்மையானது. பத்திரிகை யுலகில் ஆசிரியர் பெற்ற பட்டறிவுகளை ஒரு கதைமாந்தன் வாயிலாகத் தருகிறார். நகைச்சுவையை நிரம்பத் தருபவர் அவர். நடுத்தரக் குடும்பத்தார் வீடு கட்டும் முயற்சியைச் சித்திரிப்பது 'ராசத்தின் மனோரதம்'. அவருடைய கதை மாந்தரில் பெரும்பான்மை யானவர்கள் நடுத்தர வகுப்பாரே. அவர்களின் கனவுகளையும் குறைகளையும் நன்றாக எடுத்துக்காட்டுவன அவருடைய புதினங்கள்.

வ.ரா. புதுமையிலும் சீர்திருத்தத்திலும் ஆர்வம் நிரம்பியவர்; பழைய கண்மூடித் தன்மைகளை எள்ளி நகையாடுபவர். அவருடைய 'கோதைத் தீவு' என்னும் புதினம் குறிப்பிடத்தக்கது. மு. வரதராசன், கு. ராசவேலு ஆகியோர் எழுதும் புதினங்களின் நடை பலருடைய உள்ளங்களைக் கவர்ந்தது. நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டே கதை பின்னி, படிப்பவர் உள்ளத்தில் புதிய உணர்ச்சிகளை ஊட்டும் புதினங்கள் அவர்களுடையவை. 'கள்ளோ காவியமோ', 'அகல்விளக்கு', 'கரித்துண்டு', 'கயமை', மு.வரதராசனின் நாவல்களில் குறிக்கத்தக்கவை. 'அழகு ஆடுகிறது', 'காதல் தூங்குகிறது', 'காந்தள் முள்', 'இளவேனில்', 'மகிழம் பூ' முதலியன கு.ராசவேலுவின் கற்பனைப் படைப்புகள்.

சிதம்பர சுப்பிரமணியம் எழுதிய 'இதயநாதம்' என்ற புதினத்தில் இசைக் கலைஞர் ஒருவன் நல்ல கதைமாந்தனாகப் (பாத்திரமாகப்) புதுவகையாகப் படைக்கப்படுகிறார். அவர் தம் உரிமையையும் மதிப்பையும் பலவகை இடையூறுகளிலிருந்து காத்துக் கொள்வதற்காகப் படும்பாடு அழகாக விளக்கப்படுகிறது.

க.நா.சுப்பிரமணியம்எழுதியுள்ள புதினங் களுக்குள்ளே 'ஒரு நாள்' என்பது குறிப்பிடத் தக்கது. உலகம் சுற்றி பட்டறிவு நிரம்பிய ஒருவன் தன் கிராமத்துக்குப் போய் அதுவரையில் பெற்றிராத விழிப்பைப் பெறுகிறான். அங்கே உலகம் அறியாமல் தன் மாமி நடத்தும் வாழ்க்கையே பொருளுடைய வாழ்க்கையாக அவனுக்குத் தோன்றுகிறது. 'பொய்த் தீவு' என்பதும் நல்ல படைப்பு ஆகும்.

எம்.வி.வெங்கடராமன் பல கற்பனைப் படைப்புகளைத் தந்துள்ளார். தேனீ என்ற ஒரு மாத இதழும் சிலகாலம் நடத்தி, தம் படைப்புகளை வெளியிட்டார். அவருடைய 'நித்ய கன்னி' ஒரு நீண்ட கதை. மகாபாரதத்துள் வரும் யயாதியின் மகள் திருமணம் செய்துகொண்டு குழந்தை பெற்ற பிறகு மறுபடியும் கன்னித்தன்மை பெறுமாறு வரம் பெற்றவள். அதனால் ஒருவரை விட்டு மற்றொருவரைத் திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பு அவளுக்கு ஏற்படுகிறது. ஆனாலும் மனம் ஒன்று உள்ளதே; அது பழைய அன்பின் தொடர்பு முதலியவற்றை அப்படி எளிதில் மறந்துவிடல் இயலாது. அதனால் உருவாகும் சிக்கல்கள் இந்தக் கதையில் தீட்டப்படுகின்றன. மகாபாரத்தில் மிகச் சுருங்கிய அளவில் குறிப்பிடப்படும் ஒரு படைப்பு (பாத்திரம்) இவருடைய கற்பனையில் பெரிய அளவில் வளர்ந்து சிந்தனையைக் கவர்ந்து நிற்கக் காண்கிறோம்.

'நந்திபுரத்து நாயகி' என்பது 'விக்கிரமன்' தந்த வரலாற்றுப்புதினம். 'மகரயாழ் மங்கை', 'ஆலவாய் அழகன்', 'நாயகி நற்சோணை', 'நந்திவர்மன் காதலி', 'அருள்மொழி நங்கை', 'திருச்சிற்றம்பலம்' முதலியன செகசிற்பியன் படைத்த வரலாற்றுப் புதினங்கள். சில குமுதாய புதினங்களையும் பல சிறுகதைத் தொகுப்பு களையும் அளித்துள்ளவர் அவர். சிறுகதைகளில் இன்றைய ஏழை மக்களின் வாழ்க்கைப் போராட்டங்களுக்கு நன்கு வடிவு தந்துள்ளார். அவருடைய நேரிய நடையும் கலை மெருகும் புதினங்களுக்கு இலக்கியச் சிறப்புத் தருகின்றன.

'யவனராணி', 'கடல்புறா', 'மன்னன் மகள்', 'மலைவாசல்', 'சீவபூமி', 'கன்னிமாடம்', 'பல்லவ திலகம்' முதலிய பல வரலாற்றுப் புதினங்களின் ஆசிரியர் 'சாண்டில்யன்'. இவைதாளிகைகளில் (பத்திரிகைகளில்) தொடர்கதையாக வந்தவை. படிப்பவர்கள் ஆர்வத்துடன் நாடும் வகையில் சுவையை

மேன்மேலும் வளர்த்துக் கதை சொல்லும் திறன் உடையவர் அவர். பார்த்தசாரதி, பி.சி.கணேசன் முதலியோரும் வரலாற்றுப் புதினங்கள் எழுதித் தமிழிலக்கிய வளர்ச்சிக்கு உதவியவர்கள். அரு.ராமநாதனின் 'வீரபாண்டியன் மனைவி' என்பது குறிப்பிடத்தகுந்த வரலாற்றுக் கற்பனை.

இராதாமணாளனுடைய 'பொற்சிலை' சுவையுள்ள இலக்கியப் படைப்பாகும். டி.கே.சீனிவாசன் படைத்த 'ஆடும் மாடும்' கற்பனைச் சிறப்புடையது.

இளமைக்குப் பின் பெறும் காதலுணர்வுகளை எடுத்துக் காட்டுவது சாவியின் 'விசிறி வாழை'. பி.எம்.கண்ணன் நடப்பியல் முறையில் சில புதினங்களைப் படைத்துள்ளார். சோமு, இந்திரா பார்த்தசாரதி, நல்லபெருமாள், உமாசந்திரன், மாயாவி, செயகாந்தன் ஆகியோரின் படைப்புகள் இங்குப் பாராட்டுடன் குறிப்பிடத்தக்கவை.

தென் திருவாங்கூரில் தமிழர்கள் பேசும் பேச்சு மொழியில் கதை எழுதுபவர் கெப்சிபா சேசுதாசன். 'புத்தம் வீடு', 'டாக்டர் செல்லப்பா' என்பவை அவர்க்குப் புகழ் தேடித் தந்தன. கொங்குநாட்டுப் பேச்சுமொழியைக் கையாண்டு ஆர்.சண்முகசுந்தரம் எழுதிய கதைகள் 'பூவும் பிஞ்சும்', 'நாகம்மாள்', 'அழியாக் கோலம்' ஆகியவை. பூவை ஆறுமுகத்தின் 'தங்கச் சம்பா' என்ற நாவலும் வட்டார வாழ்வையும் பேச்சையும் அடிப்படையாகக் கொண்டது.

மதுரையில் நடைபெறும் சல்லிக்கட்டு என்னும் எருதாட்டத்தை வைத்து, சி.சு.செல்லப்பா 'வாடிவாசல்' என்னும் புதினத்தை திறம்பட எழுதியுள்ளார்.

இரகுநாதன் விறுவிறுப்பான நடையில் பொதுவுடைமைக் கருத்துகளை அமைத்து எழுதிய 'பஞ்சும் பசியும்' என்ற நூல் ஒரு புதுமையான படைப்பு. நீல. பத்மநாபன் மூன்று தலைமுறைகளின் வாழ்வை ஓவியமாக்கிக் காட்டும் 'தலைமுறைகள்' என்ற புதினம் அமைப்பிலும் நடையிலும் புதுமை உடையது. வாழ்க்கை நிலைகள் எவ்வளவு வேகமாக மாறிவந்துள்ளன என்பதை அந்த நூல் காட்டுகிறது.

நா.பார்த்தசாரதி சுவையும் கருத்தும் சிறந்து விளங்கும் புதினங்களும் சிறுகதைகளும் கட்டுரைகளும் ஆகப் பலவகை இலக்கியம் அளித்தவர். 'குறிஞ்சி மலர்', 'பொன்விலங்கு' ஆகியப் புதினங்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவை. தமக்கென்று ஒரு கவர்ச்சியான நடையும் கட்டுக்கோப்பும் அமைத்துக் கொண்டு கற்பனைப் பரபரப்புடன் இலக்கியத் தொண்டு ஆற்றுபவர் அவர். அதை அடிப்படையாகக் கொண்டு அவர் புதுமைகள் பல படைத்துள்ளார்.

கிராம மக்கள் தம் நிலத்தின்மேல் எவ்வளவு பற்றும் பாசமும் வைத்துள்ளனர் என்பதைச் சங்கரராம் எழுதிய 'மண்ணாசை' எடுத்துரைக்கிறது.

ஆர்வி சுவையாகக் கற்பனைகளை அளிப்பவர். 'அணையா விளக்கு' என்னும் அவருடையப் புதினத்தில் குமூகச் சீர்திருத்தப் போக்கு உள்ளது. 'செங்கமலவல்லி' என்னும் அவருடைய சிறுகதைத் தொகுப்பைப் போலவே, இதுவும் எளிய நடையில் அமைந்தது.

### புதினங்களும் இதழ் ஆசிரியர்களும்

முன்பெல்லாம் படித்தவர் சிலராகவே இருந்தனர். அந்தச் சிலர் எதையும் ஆழ்ந்து படிப்பவராக இருந்தனர். இப்போது படித்தவர் தொகை பல மடங்கு பெருகி வருகிறது. அந்தப் பலர்க்குள் பெரும்பாலோர் ஆழம் இல்லாமல் மேற்போக்காகப் படிப்பவர்களே. முன்பு, ஒரு நூல் எழுதப்பட்டால் படித்தவர்கள் அதைப் பாராட்ட வேண்டும் என்ற கவலை நூலாசிரியர்களுக்கு இருந்தது. அவர்களின் பாராட்டை எதிர்பார்த்த கவலை இருந்த படியால், அந்தக் கவலையோடு பொறுப்பு உணர்ந்து எழுதினார்கள். இப்போதும் அவ்வாறு பொறுப்பு உணர்ந்து எழுதுகிறவர்கள் சிலர் இருக்கிறார்கள். ஆனால் பலர் அவ்வாறு எழுதுவதில்லை; அவ்வாறு உணர்ந்து எழுதவேண்டிய கவலையும் அவர்களுக்கு இல்லை. படித்தவர் தொகை பெருகிவிட்ட இக்காலத்தில், ஆழ்ந்த சிந்தனை இல்லாமல் மேற்போக்காகப் படிக்கும் வெள்ளம் போன்ற கூட்டத்தில் ஏதேனும் ஒரு பகுதியாரின் ஆதரவு தமக்குக் கிடைத்தால் போதும் என்று அந்த எழுத்தாளர்கள் எண்ணுகிறார்கள். அந்த ஒரு பகுதியாரின் பாராட்டும் பணமும் தமக்குக் கிடைப்பதைக் கொண்டே அவர்கள் முன்னேற முடிகிறது; மேலும் மேலும் அவர்களின் ஆழம் இல்லாத–பண்படாத–சுவைக்கு ஏற்ற உணர்வை நூல்களில் தந்து எழுத்துலகத்தில் வளர்ச்சி பெற முடிகிறது. பலர் விரும்பிப் படிக்கும் எழுத்தாளர் யார் என்று ஆராய்ந்து இதழ்களின் ஆசிரியர்கள் தேடுகிறார்களே அல்லாமல், நடுநிலையாகவும் தரமாகவும் எழுதுகிற எழுத்தாளர் யார் என்று தேடுவதில்லை. ஆகவே, பத்திரிகையுலகத்திலும் முன்கூறிய எழுத்தாளர்கள் செல்வாக்குப் பெற முடிகிறது. அவர்களின் வெற்றிக்கு உரிய காரணம் இதுதான் என்று மற்றவர்கள் உணர்ந்து பின்பற்றுகிறார்கள். வாழ்க்கையில் எழுத்தாளர்களுக்கு ஏமாற்றம் மிகுதி; நிலையான வருவாய் இல்லாத காரணத்தால் வறுமையின் தாக்குதலும் மிகுதி. ஏமாற்றத்தாலும் வறுமையாலும் வாடிய எழுத்தாளர்கள், எப்படியாவது பணம் வந்தால் போதும் என்ற துணிச்சலான மனநிலை வந்தபோது, கவலை

இல்லாமல் ஏமாந்த மக்களை ஏய்த்து மயங்கும் போக்கை நேரே நாடுகிறார்கள். எதையாவது எப்படியாவது எழுதுவது என்ற பான்மையில் கதை நூல்கள் சில வெளிவருவதற்கு இதுதான் காரணம். பதைப்பில் (அவசரத்தில்) படைக்கப்பட்ட அவர்களின் எழுத்துகளில் சில, கலைவடிவம் பெற்றுவிடுதல் உண்டு. முதலில் எப்படியாவது தாளி (பத்திரி) கையுலகில் இடம் பெறவேண்டும் என்று முயன்று எழுதிப் புகழ் பெற்ற எழுத்தாளர் சிலர், புகழ் வளர்ந்தபின் பழைய தவறான முறையைக் கைவிட்டுப் பண்பட்ட—சிந்தனை வளம் உள்ள—படைப்புகளைத் தந்து நல்ல எழுத்தாளர்களாய் விளங்குவதும் உண்டு. அவர்கள் பிறகு கவர்ச்சியைப் பொருட்டுபடுத்தாமல் கலைத் தரத்தையே பெரிதாகக் கொண்டு தம் போக்கை மாற்றிக் கொள்கிறார்கள். அவர்கள் பாராட்டுக்கு உரியவர்கள். – (தமிழிலக்கிய வரலாறு—மு.வ.)

## புதினத்தின் தன்மையும், இலக்கணமும்

### உரைநடைப் பழமை

தமிழ் இலக்கிய வளர்ச்சியில் புதினங்கள் இன்று வரையுங் கூடத் தக்க இடம் பெற்றன என்று கூற இயலாது. பல காரணங்களால் பழங்காலத்தில் உரைநடை நன்கு வளர்ச்சியடையவில்லை. சிலப்பதிகாரம், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்று கூறப் பெறுவதற்கேற்பச் சில பக்கங்களை உரைநடையில் கொண்டு விளங்குகிறது, என்றாலும் அவை ஆசிரியப்பாவை நீட்டி எழுதியன போல காணப்படுகின்றனவே அன்றி உரைநடையாக இல்லை. அக்காலத்தில் உரைச்செய்யுள் என்று இலக்கணம் பேசுகிறதாகலின் ஏதேனும் உரைநூல்கள் இருந்திருத்தல் வேண்டும். ஆனால், அவை மறைந்தொழிந்தன.

முதன்முதலாக நாம் காணும் உரைநடைப் பகுதி இறையனார் களவியல் உரையேயாகும். அதனையடுத்தும் உரையாசிரியர்களுடைய உரைநடையையே காண்கிறோம். ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே முத்தமிழ் வழக்கொழிந்து 'இயல் தமிழ்' மட்டும் வளர்ச்சியடையலாயிற்று, என்றாலும் அதனுள் ஒரு பகுதியாகிய உரைநடை வளரவில்லை. ஆகவே உரைநடையால் அமையும் சிறு கதைகளும், புதினங்களும் இம்மொழியில் இல்லா தொழிந்தன. இடைக்காலத்தில் வழக்கொழிந்த இவ்வுரைநடை இலக்கியம் தொல்காப்பியனார் காலத்தில் பெருவழக்கினதாய் இருந்திருக்கும் போலும். இல்லாவிடில்.

பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின்று எழுந்த கிளவி யானும்
பொருளொடு புணாரப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்
என்று
உரைவகை நடையே நான்கென மொழிப
(தொல்.செய்யுளில், 171)

என்று இதற்கெனத் தனியே அவர் இலக்கணம் வகுத்திரார். அவரது இலக்கணத்தையும் அதற்கு உரை கண்டவர்கள் கூறியதையும் உற்றுநோக்கின் சில அரிய உண்மைகள் தெற்றெனப் புலனாகும். பாவின்று எழுந்த கிளவி என்று ஆசிரியர் குறிப்பதே, உரைநடைநூல் என்றும், 'பொருளொடு புணராப் பொய்ம் மொழி' என்பதே, பொய்ப்புதினம் என்றும் 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்பதே, புதினம் என்றும் இன்று நம்மால் வழங்கப் பெறுகின்றன. தொல்காப்பியனார் இங்ஙனம் நால்வகையாகப் பிரித்து இலக்கணங்கண்ட இப்பெரும் பிரிவினுள் ஒன்றுகூட பெருவழக்காக இருந்திருப்பின் அன்றித் தொல்காப்பியனார் இலக்கணம் கூறி இரார். எனவே, பிற்காலத்தார் தம் அரிய செல்வங்களைப் போற்றிப் பாதுகாவாமல் விட்டதாலும், இருந்தவற்றையும் ஆடிப்பெருக்கு வெள்ளத்தில் விட்டதாலும், இத்தகைய நூல்கள் அழிந்தன என்றே கொள்ளல் வேண்டும். இத்துணைவளம் நிறைந்த ஒரு மொழியில், இத்துணைக் கவிதை இலக்கியம் நிறைந்த ஒரு மொழியில், உரைநடை இல்லாதிருக்க முடியாது.

### புதினந்தோன்றக் காரணம்

உரைநடையுள் ஒன்றாகிய புதினம் என்பது தோன்ற ஒரு சீரிய காரணம் உண்டு. உலகிடை வாழும் மனிதன் மனத்தைக் கவர்ந்த பலவற்றுள் முக்கியமானது எதுவெனில் அவனைப்போன்ற மற்றைய மனிதர்களின் வாழ்க்கையேதான். மக்களின் மனத்தில் தோன்றும் உணர்ச்சிகள், போராட்டங்கள் முதலியவையே இப்புதினங்கள் முகிழ்க்கத் தக்க நிலைக்களங்களாயின. பிறமனிதர்களுடைய வாழ்க்கைப் போராட்டத்தில் ஒருவன் ஈடுபாடுகொள்ளும் இயல்பே சிறந்த இலக்கியங்கள் தோன்றக் காரணமாயின. ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு வகை இலக்கியம் சிறப்புடன் தோன்றக் காரணமாயிருந்தது, மேற்கூறிய இயல்பயோகும். கோவலன் கண்ணகி வாழ்க்கைப் போராட்டத்தில் இளங்கோ கொண்ட பற்றுத்தான் சிலப்பதிகாரமாக உருக் கொண்டது. ஒன்பதாம் நூற்றாண்டில் தமிழ் நாடுந் தமிழரும் எவ்வாறு இருந்தார்கள் என்று தெரிய வேண்டுமாயின் கம்பநாடனுடைய பாவியத்தில் (காப்பியத்தில்) உள்ள 'வரைக்காட்சிப் படலம்'. 'பூக்கொய்படலம்' முதலியவற்றில் பரக்கக் காணலாம்.

இங்ஙனம் மக்கள் வாழ்க்கையைப் எடுத்துக் காட்டும் (பிரதி பலிக்கும்) இலக்கியங்களுள் புதினமும்

ஒன்று இதே போலப் பணி செய்ய நாடகம் என்ற ஒன்றும் உளதாயினும் ஆடு களம், உடைகள், நடிப்புத்திறம் முதலிய பலவற்றின் உதவி கொண்டே நாடகஞ் சிறக்கிறது. புதினம் அவ்வாறன்று, அது சிறக்க வேண்டிய அனைத்து உறுப்புக்களும் அதனிடமே உள்ளன. எனவே நாடகத்தைப் பார்க்கிலும் புதினம் சிறப்படையக் காரணம் இருக்கிறது.

### புதின உறுப்புக்கள்

சிறந்த புதினத்திற்கு இன்றியமையாத உறுப்புக்களாக சூழ்ச்சி, மிக்க கதைமாந்தர்கள் (பாத்திரங்கள்) உரையாடல், காலம், இடம், நடை, வெளிப்படையாகவோ குறிப்பாகவோ காட்டப் பெற்றுள்ள வாழ்க்கைத் தத்துவம் என்பனவற்றைக் கூறலாம். இவை அனைத்தும் ஒரே அளவாகவோ அனைத்துமோ இருந்து தீரல்வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. ஒவ்வொன்று மிக்கும் குறைந்தும் இருப்பினும் தவறு இல்லை.

### பிண்டம்

புதினத்தில் பிண்டம் என்பதே அதன் உட்பொருளாகும். இப்பிண்டம் என்பது எத்தகைய கதை மேற்கொள்ளப் பெறுகிறதோ அதற்கேற்றபடி தோன்றுவதாகும். வாழ்க்கையில் காணப் பெறும் ஆழமான உணர்ச்சிகள், போராட்டங்கள் இவைகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் புதினங்களே மிக்க சிறப்புடையன. தமிழ் மொழியளவில் தோன்றியனவும் தோன்றுகின்றனவும் ஆகிய புதினங்கள் பெரும்பாலும் இக்குறைபாடு உடையன. சென்ற பத்து ஆண்டுகளில் நூற்றுக்கணக்கான புதினங்கள் தமிழ்மொழியில் தோன்றியுள்ளன. ஆனால், சிலவே நம் நினைவில் அழியாத இடம் பெற்றுள்ளன. வடுவூர் துரைசாமி அவர்கள் எழுதிய எத்தனையோ புதினங்கள் உண்டு. இவை அனைத்தும் 'ஆலை இல்லா ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை ஆனது' போல வேறு சிறந்த புதினங்கள் தோன்றாமையின் அப்பெயர் தாங்கி நிலவின. ஒன்றாவது பெயருக்குப் பொருத்தமுடையதன்று. வங்க எழுத்தாளர்களான சரத் சந்திரர், பங்கிம் சந்திரர், மராட்டிய எழுத்தாளர் காண்டேகர் போன்றவர்கள் புதினங்கள் மொழி பெயர்ப்பிலுங் கூடத் துடிப்புடன் நிலவுவதற்கும் தமிழர்களால் தமிழ்மொழியில் எழுதப் பெற்ற புதினங்கள் உயிரின்றி உலவுவதற்கும் காரணம் இப்பிண்டம் நன்கு அமைக்கப்படாமையேயாகும். வாழ்க்கையில் மேலாகக் காணப்பெறும் உணர்ச்சிகளைக் கொண்டு தீட்டப்பெறும் புதினங்கள் நீண்ட நாட்கள் நிலைபெறா, இவ்வாறு கூறுவதால் பொது நிலை (சாதாரண) மக்கள் பற்றிப் புதினங்கள் தோன்றலாகாதுபோலும் என்று நினைந்துவிட வேண்டா. பொதுநிலை (சாதாரண)மனிதனின் எளிமையான வாழ்க்கையை அடித்தளமாகக் கொண்டு தோன்றும் புதினமும் சிறந்ததாக இருக்கலாம். பேரரசர்களைப் பற்றியும் ஒரு குமுதாயத்தைப் பற்றியும் எழும் புதினங்கள் சிறப்பற்றும் போகலாம். இவை சிறப்படைவது அவற்றைக் கையாள்வோன் வன்மையைப் பொறுத்ததேயாம். சுருங்கக் கூறுமிடத்து ஒரு புதினம் சிறப்படைவது, கீழ்க்கண்ட பகுதிகள் அதில் அமையும் பொழுதேயாம். அதன் அடிப்படை ஆழமாகவும், அகலமாகவும் நம்முடைய ஆழ்ந்த எண்ணங்களைத் தூண்டுவதாகவும் மனித குமுதாயத்தின் பொதுக் கருத்தைக் கவருவதாகவும் இருத்தல் வேண்டும். இவ்வாறு அமையாதன வெல்லாம் புதினங்கள் அல்ல என்று கடுமையான முடிபுகூறத் தேவை இல்லை. ஆனால், அவை சிறந்தவை அல்ல என்று கூறலாம். புதினம் தோன்றுவதன் கருத்து, படிப்போர்க்கு மகிழ்ச்சி உண்டாக்குவதே யாகலின் இத்தகைய அடிப்படையில் அமையாமலும் ஒரு நூல் மகிழ்ச்சி தரக்கூடுமாயின் அதுவும் ஏற்றுக் கொள்ளற்பாலதே யாகும். இத்தகைய நூலில் முன்னர்க் கூறி பல பண்புகளில் யாதானும் ஒன்று மிக்கிருந்து மற்றைய குறைபாடுகளைப் போக்கு மாயின் நன்று.

### புதினமும் வாழ்க்கையும்

புதினம் சிறக்கும் பல பண்புகளில் சிறந்த மற்றொன்று; அது வாழ்க்கையை உள்ளவாறு கூறுவதாய் அமைதல் வேண்டும். புதினம் கட்டுக் கதைதானே என்ற எண்ணத்தால் இன்றைய எழுத்தாளர்கள் எதனையும் நுழைக்கத்தக்க இடமாக அதனைக் கருதுகின்றனர். இதைவிடப் பெருந் தவறு ஒன்றுமில்லை. வாழ்க்கையின் எந்தப் பகுதியைப் புதினம் கூற எடுத்துக்கொண்டாலும் அப்பகுதியைப் பற்றிய மெய்ம்மையைக் கூறவேண்டும். அதாவது அப்பகுதியை ஆசிரியன் நன்கு அறிந்து அதில் நன்கு பழகி இருத்தல் வேண்டும். ஆசிரியனுக்குப் பழக்கமும் பட்டறிவும் இல்லாத வாழ்க்கைப்பகுதியை எழுதத் தொடங்கினால் விளைவது மயக்கமேயாகும். இங்ஙனம் அவன் கூறும் பகுதி அவன் நேரடி பட்டறிவில் பெறுகிறதாயிருப்பின் அவன் கூற்று கற்போர் மனத்தைக் கவரும். இரண்டு விரல உயர அகலமுள்ள யானைகொம்பில் (தந்தத்தில்) தன் கைவேலையைக் காட்டும் ஒருவனும் கலைஞன்தான். நூறடி உயரம் உள்ள கோபுரத்தைச் சமைப்பவனும் கலைஞன்தான். இரண்டுவிரல அளவில் (பரிமாணத்தில்) வேலை செய்தமையின் ஒருவனைக் கலைஞன் அல்லன் என்று கூறிவிட முடியுமா? அதேபோலச் சில ஆசிரியர்கள் தமது குறைவான பட்டறிவை அடிப்படையாகக் கொண்டு குறைந்த மாந்தர்களைப் (பாத்திரங்களைப்) படைத்துக் கொண்டு எழுதுவர். ஆனால், அவற்றில் ஆழம் நிறைந்திருக்கு

மாகலின் ஒதுக்கி விடுதலாகாது. இதனினும் மாறுபட்டுத் தமது பரந்த உலகியலறிவின் துணை கொண்டு பல மாந்தர்களைப் (பாத்திரங்களை) அமைத்து எழுதுவம் உண்டு. நகரிலேயே பிறந்து வளர்ந்து கிராமக் காட்சியையே கண்டிராத ஒருவர் கிராமத்தை நிலைக்களமாகக் கொண்டு கதை எழுதுவதும் கப்பலில் ஏறி அறியாத ஒருவர் கப்பல் செலவு, இலண்டன் காட்சி முதலியனபற்றிக் கதை கதைப்பதும் இன்று நாம் காண்கின்ற ஒன்றாகும். தன் வாழ்க்கையையும் பட்டறிவையும் (அநுபவத்தையும்) கூர்ந்து நோக்குவதாயின் ஒவ்வொரு மனிதனும் குறைந்த அளவு ஒரு புதினமாவது எழுதித் தீரலாம் என்று மேலைநாட்டிலக்கியத் திறனாய்வர் கூறுகிறார்கள். ஆனால், பெரும்பாலோர் இவ்வாறு செய்யாமல் தமக்கு மிகவும் விருப்பமான ஓர் ஆசிரியரைப் பார்த்து நகல் செய்யத் தொடங்கி இறுதியில் தமக்கென ஒன்றும் இல்லாதவர் களாகிறார்கள். எல்லையற்ற கற்பனையின் துணையுடைய ஒரு சிலருக்கு இச்சட்டம் தேவை இல்லை. தாங்கள் காணாத காட்சியைக்கூடப் பிற அறிஞர் எழுதியவற்றைப் படித்த மாத்திரத்தில் தம் கற்பனையின் துணைகொண்டு இவர்கள் தம்முடைய சொந்த பட்டறிவாக்கிக் (அநுபவமாக்கிக்) கொள்கின்றனர். வேதநாயகம் பிள்ளை, மாதவையா போன்றவர்கள் இத்தொகுப்பில் சேர்ந்தவர்கள். இத்தகையவர்கள் தாம் கேட்ட அல்லது ஒருமுறை கண்ட ஒன்றை நமக்கு வர்ணிக்கத் தொடங்கினால், நாம் அதனுடன் அவர்கள் பலகாலம் பழகியவர்கள் போலும் என்று நினைக்க வேண்டியிருக்கும்.

### புதினத்தில் சூழ்ச்சி

சூழ்ச்சி என்பது அடுத்தபடி நோக்கற்குரியது. சாதாரணமான ஒரு கதையைக் கூறுவதே ஒருவகை ஆற்றல் என்று கருதப்படும். வேறு எவ்வகையான ஆற்றலும் இல்லாதவரிடத்தும் கூடக் கதை சொல்லும் ஆற்றல் நிறைந்திருத்தல் உண்டு. சிலருடைய புதினங்களைப் படிக்கும்பொழுது கதை தங்கு தடையின்றிச் செல்வதைக் காண்கிறோம். ஏனைய அழகுகள் ஒன்றும் அங்கு இல்லாவிடினும் கதைப் போக்கு நன்கு அமைந்துவிடுகிறது. ஆனால், பிற அழகுகள் அனைத்தும் நிறைந்துள்ள சில புதினங்களில் கதைப் போக்குத் தடைப்பட்டும், வலிந்தும் செல்வதைக் காண்கிறோம். இத்தகையோர் புதினங்களில் இக்குறைபாட்டைப் போக்குவது அதன் கண் உள்ள ஏனைய அழகுகளேயாகும்.

இருவகையாற்றலும் நிறைந்துள்ள புதினங்களில் காணவேண்டிய பகுதியாகும். சூழ்ச்சி என்பது கூறவந்த கதையைக் கலைத்திறமையுடன் கூறியிருக்கிறாரா என்று பார்த்தல் வேண்டும். அதாவது கதையின் பல பகுதிகளை நன்கு ஆராய்ந்தால் குற்றங் குறைகள் காணப்படுகிறனவா? கதையின் பல பகுதிகளும் தம்முள் நன்கு பொருந்தி உள்ளனவா? என்பதேயாகும்: கதையின் கட்டுக்கோப்பில் இடையில் துண்டு விழாமல் இருத்தல்வேண்டும். முன்னுக்குப் பின் முரண் இல்லாது இருத்தல் வேண்டும். கதையின் பல பகுதிகளும் தம்முள் ஒவ்வோரளவு கொண்டு இறுதியில் ஒரு முழுத்தன்மை பெற்று விளங்கவேண்டும். கதையில் வரும் பல நிகழ்ச்சிகள் திடீரென்று குதிப்பது போல் இல்லாமல் நிகழவேண்டும். ஒரு நிகழ்ச்சியின் முடிவில் மற்றொரு நிகழ்ச்சியின் தோற்றம் கருக்கொண்டிருக்க வேண்டும். நிகழ்ச்சிகளின் போக்கு எவ்வளவு புதுமையுடை யதாகவும் இயற்கையின் இறந்ததாகவும் இருப்பினும் அதன் முடிவு நிகழ்ச்சிக்குப் பொருத்தமுடையதா யிருத்தல் வேண்டும். இந்நிகழ்ச்சிகளின் முடிவு இவ்வாறு இருத்தலே தகுதி என்று கூறும்படியாக அமைதல் வேண்டும். புதின முழுவதிலும் ஊடுருவி நிற்கும் இறுதி நிகழ்ச்சி அவல நிகழ்ச்சியோ அன்றி மகிழ்ச்சியோ தோன்றும்பொழுது இதுதான் நிகழவேண்டியது என்ற எண்ணத்தை உண்டாக்கல் வேண்டும். முன்னர் நடைபெற்ற அனைத்து நிகழ்ச்சிகளின் முடிவும் இதுவாகவேதான் இருக்கும் என்று கூறத் தக்க முறையில் இறுதி நிகழ்ச்சி அமைவதே 'சூழ்ச்சி' நன்கு அமைக்கப்பட்டிருத்தலின் அடையாளம்.

### இருவகைச் சூழ்ச்சிகள்

இச்சூழ்ச்சி ஒரு புதினத்தில் கையாளும் முறையை வைத்துப் புதினங்களையே இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று உதிரிச் சூழ்ச்சி என்று கூறப் பெறும் இங்கு நிகழும் எல்லா நிகழ்ச்சிகளும் தம்முள் தொடர்புடையனவல்ல. தொடர்பற்ற இச் சம்பவங்கள் புதினத்தின் தலைவன் அல்லது தலைவி என்ற ஒருவருக்கு நிகழ்வதாலேயே அவை இங்கு இடம் பெறுகின்றன. இதன்கண் தலைவனுக்கு நிகழும் இறுதி நிகழ்ச்சி முன்னர் நடைபெற்ற சிறு நிகழ்ச்சிகளின் முத்தாய்ப்பு அன்று. தருக்க முறைப்படி அவை இம்முடி பைத் தந்தன என்று கூறல் இயலாது. இத்தகைய நூலில் தனி நிகழ்ச்சிகள் எவ்வளவு அழகுடன் விளங்கினும் இவை அனைத்தும் சேர்த்துத் தருகிற முழுத் தன்மை ஒன்றும் இல்லை.

இதற்கு மறுதலையாய் அமைந்தது ஒட்டுச் சூழ்ச்சிப் புதினம் என்பதாகும். இத்தகைய புதினத்தின் நிகழ்ச்சிகள் ஒன்றையொன்று ஒட்டி வருவதுடன் ஒன்றின் முடிபு மற்றொன்றாய்த் திகழும். இத்தகைய புதினம் இயற்றுபவர்கள் தம் நூலை முற்றிலும் மனத்தில் வாங்கிக் கொண்டு ஒவ்வொரு

நிகழ்ச்சிக்கும் தக்க இடந்தந்து அமைப்பைச் செய்யவேண்டும். இதில் வருகிற மாந்தர் (பாத்திரங்)கட்குக்கூடத் தக்க இடமும், தோன்றும் காலமும் அமைத்தல் வேண்டும். ஆனால், இத்தகைய ஒட்டுச் சூழ்ச்சிப் புதினத்தில் ஒரு இடைஞ்சல் உண்டு. எதிர்பாரா நிகழ்ச்சிகள் மிகுதியான இடத்தை இதிற் பெற்றுவிடும். எதிர்பாரா மனிதர்கள் எதிர்பாராத இடங்களில் வந்து புதிரைத் தீர்த்துவிட முனைவார்கள். எங்கோ ஓரிரு இடங்களில் இது நிகழின் சரி. கதையைக் கொண்டு செலுத்தவேண்டிய கடப்பாட்டிற்காக இதனை அதிகம் கையாண்டால் வெறுப்புத் தட்டிவிடும்.

இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்துப் புதினங்களை இங்குக் குறிப்பிட்டாலும் நல்ல புதினங்கள் அனைத்தும் இவ் இரண்டு முறையையும் மேற்கொண்டுதான் நடைபெறும். இக்கொள்கை கட்கெல்லாம் எடுத்துக்காட்டுகள் தர முடியுமாயினும் அவரவர் விருப்பு வெறுப்புக் காரணமாக அவை அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா. ஆகலின், எடுத்துகாட்டுகள் தரப்படவில்லை. புதினங்களின் ஏனைய உறுப்புக்களை அடுத்துக் காண்போம்.

### கதைமாந்தர்கள்

புதினத்தின் உறுப்புக்களில் அடுத்து நோக்கவேண்டியது கதைமாந்தர்களாகும். புதினத்தில் வரும் கதைமாந்தர்கள், நடமாடித் திரியலாம்; பேசலாம். ஆனால் அவை பல சமயங்களில் உயிருடன் நம்போல் இருப்பதாக நாம் நினைக்க முடிவதில்லை. காரணம் அம்மாந்தர்கள் நம் கற்பனையில் சென்று பொருத்துவதில்லை. சிறந்த புதினத்தில் படைக்கப் பெறும் மாந்தர்கள் நாம் வாழும் உலகில் நம்மைப் போல் தலைநிமிர்ந்து நடப்பவர்களாயிருத்தல் வேண்டும். அவர்கள் ஒரு கற்பனைக் கதையில் தோன்றும் மாந்தர்கள் என்பதை மறந்து நாம் அவர்களிடத்தில் அன்பு காட்டவும், வெறுப்புக் காட்டவும் கூடியவர்களாயிருத்தல் வேண்டும். நம்மைப் போல் இயல்புடையவர்களைக் கதாசிரியன் படைத்தால்தானே நாம் அவர்களுடைய நலம், துக்கங்களில் பங்கு கொள்ள முடியும். இயற்கையின் இறந்த இயல்புடைய மாந்தர்களாயின் அவர்களிடத்து நாம் எவ்வாறு ஊடாட முடியும்? என்றெல்லாம் வினாக்கள் தோன்றுவது இயல்பு. உண்மையைக் கூறப் போனால் எவ்வகையான மாந்தர்களாயினும் அவர்களிடம் நாம் விருப்பு வெறுப்புக்கள் கொள்ளும்படி படைத்தால் அவன் சிறந்த ஆசிரியனாகக் கருதப்படுவான். வேறு வகையில் கூறுமிடத்து அவன் படைக்கும் மாந்தர்கள் நம்மைப் போல் எலும்பும், தோலும் அரத்தமுங் கொண்டு இவ்வுலகில் உலாவும் மக்களாக அமைதல் வேண்டும். மனித இயல்பற்ற பூதங்கள், பேய்கள், பிசாசுகள் கொண்டு கதை நீட்டினாலும் அவற்றின் நடையுடைகளைப் படிக்கும் பொழுது நாம் சரி! பிசாசுகள் அப்படித்தானே செய்யும் என்று கூறத்தக்க முறையில் அமைதல் நன்று.

### கதைமாந்தர்கள் (பாத்திரம்) படைக்கும் முறை

சிற்சில புதினங்களில் இத்தகைய மாந்தர்களை நாம் சந்திக்கிறோம். 'பிரதாப முதலியார்', 'ஞானாம்பாள்' முதலிய பாத்திரங்கள் இவ்வினத்தைச் சேர்ந்தவர்கள். இப்புதின ஆசிரியர்கள் எவ்வாறு இத்தகைய மாந்தர்களைப் படைக்கிறார்கள் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அவர்களுடைய வழி துறைகள் தெரிந்தால் ஏனையோரும் அம்மாதிரி படைக்க ஏதுவாகலாம். ஆனால் இது இயலுவதில்லை. இத்தகைய படைப்புக்களைப் படைக்கும் கலைஞர்கள் ஏனையோர் போல முயன்று இம்மாந்தர்களைப் படைப்பதில்லை. அக் கலைஞர்கட்கே இம்மாந்தர்கள் எப்பொழுது தங்கள் மனத்தில் அல்லது கற்பனையில் கருக்கொண்டன என்று தெரியாதாம். தீர்ந்த சிந்தனை என்ற தலைவனும் ஆழ்ந்த 'கற்பனை' என்ற தலைவியும் சேரும்பொழுது தோன்றும் 'படைப்புக்களாகும்' இத்தகைய பாத்திரங்கள். இத்தலைவனும் தலைவியும் சேர்வதற்குரிய நிலைக்களமாக ஆசிரியன் அமைகிறான். எனவே இப்படைப்புகள் எங்ஙனந் தோன்றுகின்றன என்று அவனே அறிய முடிவதில்லை. தேக்கரே என்ற மேனாட்டுப் புதின ஆசிரியர் கீழ்க்கண்டவாறு கூறுகிறார். "என்னுடைய கதையில் தோன்றும் மாந்தர்களின்மேல் நான் ஆட்சி செலுத்துவதில்லை. அதற்கு மறுதலையாக அம்மாந்தர்களே என்னை ஆளுகின்றன. அவைகள் எங்கு வேண்டுமோ அங்கு என்னைச் செலுத்துகின்றன. அம்மாந்தர்களின் உரையாடலிற்கூட யான் பங்கு கொள்வதில்லை. பல நேரங்களில் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்த பின்னரும், ஓர் உரையாடல் நிகழ்ந்த பின்னரும் யானே அது நிகழ்ந்த முறையைக் கண்டு இறும்பூது எய்வதுண்டு". இவ்வாறு தம்முடைய புதினங்கள் பற்றிக் கூறக் கூடிய ஆசிரியர்கள் நம் நாட்டில் எத்தனை பேர் உண்டு? இயந்திரசாலையில் உற்பத்தியாவதுபோல நூல்களையும் கதைகளையும் காலையில் ஒன்று மாலையில் ஒன்றும் உற்பத்தி செய்யும் நம் புதின ஆசிரியர்கள் தயைகூர்ந்து இதனைக் கவனித்தல் வேண்டும். ஆண்டுக்கொன்று எழுதினாலும் யானைக்குட்டிபோல் உள்ள புதினங்கள் தோன்றட்டும். பன்றிக்குட்டிபோல் பல நமக்குத் தேவை இல்லை. கற்பனைத் திறத்தால் மாந்தர்களைப் படைக்கும் ஆசிரியர்கள் அமரத்துவம் வாய்ந்த கலைஞர்கள். முயற்சியாலும், வெறும் அறிவின் உதவியாலும் மாந்தர்களைத் தோற்றுவிக்கும் ஆசிரியர்கள் இயந்திரசாலைகளே அன்றிக் கலைஞர்கள் ஆகார். முன்னையோர் படைத்த

மாந்தர்ககளை நாம் எளிதில் ஆராய இயலாது. மனித மனத்தைப் போல இம்மாந்தர்களும் புதிர் நிரம்பியனவராக இருப்பர். ஆனால் இரண்டாவது வகையாரால் தோற்றுவிக்கப் படும் மாந்தர்கள், அறிவினால் அலசிப் பார்த்து, உண்மை கண்டுவிடக் கூடியனவராக அமைவர். முதல் வகையில் அறிவு மட்டும் வேலை செய்து பயனில்லை. அறிவு, பட்டறிவு, உணர்ச்சி என்ற மூன்றுஞ் சேர்ந்து அம்மாந்தர்கள் படைக்கப் பெற்றிருத்தலின் இம்மூன்றின் உதவி கொண்டே அவற்றை ஆயமுடியும்.

### இருபெரு முறைகள்

புதின ஆசிரியன் தன் மாந்தர்களின் குணநலங்களையும் செயல்களையும் விளக்க இருபெரும் முறைகளைக் கையாளலாம். ஒன்று நேரடி முறை; மற்றொன்று நாடக முறை. நேரடிமுறை என்பதில் ஆசிரியன் படர்க்கையில் நின்று தன் மாந்தர்களைச் செயல் செய்ய விடுத்து அதன் கருத்துக்களையும் அம்மாந்தர்களின் உணர்ச்சி, தூண்டுதல், எண்ணம் முதலியவற்றையும் தானே எடுத்துக் கூறுகிறான். அம்மாந்தர்கள் மேல் முடிபும் தானே கூறிவிடுகிறான். இதனை அடுத்த முறையாகிய நாடக முறையில் ஆசிரியன் நேரடியாக ஒன்றுஞ் செய்வதில்லை. அதற்குப் பதிலாக அவனால் படைக்கப்பட்ட மாந்தர்களே ஒன்றை ஒன்று ஆய்கின்றன. இரு மாந்தர்கட்கு இடையே நடக்கும் உரையாடல்களே இருவருடைய பண்புகளையும் செயல், மனம், எண்ணம் முதலியவற்றையும் விளக்கு வனவாயிருக்கும். இம்முறையில் ஆசிரியன் நேரடியாகக் கூறவேண்டியது அநேகமாக ஒன்றுமில்லை. ஒவ்வொரு புதின ஆசிரியரும் இவ் விரண்டு முறைகளில் ஒன்றைப் பெரும்பான்மையாகக் கையாள்வர் பெரும்பாண்மையாக என்று தான் கூறல்வேண்டும் ஏன் எனில் முற்றிலும் பிறிதொரு முறைக்கலப்பின்றி ஓர் ஆசிரியர் ஒரு முறையைக் கையாள்வது கடினம். இவ்விரு முறைகளும் மேனாட்டு இலக்கியங்களில் நிரம்பப் பயில்கின்றனவேனும், இவற்றுள் இரண்டாவது முறையையே தற்காலத் திறனாய்வாளர் அதிகம் போற்றுகின்றனர். மேனாட்டாரும் விரும்பி எழுதிவரும் மறைமுக முறையிலுங்கூட ஒரோவழி நேரடிமுறைப் புகாமல் இல்லை. இப்புகுதலால் பெற்ற நன்மை யாதெனில் ஆசிரியன் மாந்தர்களின் நடுவே புகுந்து தனது கருத்தை வெளியிடுதலாம். மறைமுக முறை முற்றிலும் நாடகத்திற்காகவே ஏற்பட்டது. ஆனால் இம்முறையைக் கயைாளும் புதினம், தனக்குள்ள தனிச்சிறப்பால் முன்னர்க் கூறியதுபோல் நேரடி முறையிலும் கொஞ்சம் தொட்டுக் கொள்வதால் ஒரு சிறப்பை அடைகிறது. இச்சிறப்பாவது ஒரோ வழி ஆசிரியன் நேரடியாகத் தனது மாந்தர்களின் செயல்கள் பண்பாட்டை விளக்க அவர்கள் உரையாடல் பயன்படுகிறது என்று கூறினோமன்றோ? அவற்றோடு நில்லாமல் ஆசிரியனும் அவர்கள் மனக்கருத்தை விளக்குகிறான்.

### உலகியலறிவு

எத்துணைச் சிறந்த கலைஞனாயினும் கதைமாந்தர் படைப்பின் பொழுது அவனுக்கு வேண்டிய இன்றியமையாத உறுப்புகளுள் ஒன்று நிறைந்த உலகியலறிவு. எந்தச் சூழ்நிலையில் அவன் மாந்தர்களைப் படைக்க விரும்புகிறானோ அந்தச் சூழ்நிலைப் பற்றிய முழு அறிவும் அவனுக்கு வேண்டும். அதாவது உலகத்தில் அந்தச் சூழ்நிலை எங்குக் காணப்படுகிறதோ அங்கு அவன் பழகி இருத்தல் வேண்டும். இன்றேல் அவன் மாந்தர்கள் நிலத்தில் கிடக்கும் மீன்போல் தவிக்க நேரிடும். சில கலைஞர்களின் பொதுவானதும் பரந்து விரிந்ததுமான உலகியல் அறிவு காரணமாக அவர்கள் சூழ்நிலைப் படைப்பு அவர்கள் பழகாததாக இருப்பினும் மெய்ம்மையுடையதாக அமைவதும் உண்டு.

### கலைஞனின் விருப்பு வெறுப்பு

சிறந்த கலைஞனுக்கும்கூட விருப்பு வெறுப்புக்கள் உண்டு என்பதை மறந்துவிடுதல் ஆகாது. ஆகவே அவன் படைக்கும் எல்லா மாந்தர்களும் குறிக்கோள் தன்மை பெற்று இலங்கும் என்று கூறல் இயலாது. சிற்சில பண்பாடுகள் அவனுக்குப் பிடிக்காத தாகவும் அமையலாம். அத்தகைய படைப்புக்களில் அம்மாந்தர்கட்கு உரிய பொதுத்தன்மை காணப்படுமேயன்றி ஆழ்ந்து காண வேண்டிய பண்புகள் நன்கு அமைவதில்லை.

### கதைமாந்தர் (பாத்திரம்) சிறந்த புதினம்

இதுகாறும் மாந்தர்கள் பற்றித் தனியாகவும் சூழ்ச்சி பற்றித் தனியாகவும் கூறப்பெற்றன. ஆனால் இவை இரண்டும் ஒன்றுபட்டுப் பொருந்தி நடப்பின் புதினஞ் சிறக்காது. தமிழ்மொழியளவில் உள்ள புதினங்களை நோக்குமிடத்துச் சூழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட புதினங்களே மலிந்துள்ளன. மாந்தர்கள் கொண்டு புதினங்கள் அமைக்கப்படும் இயல்பு இன்னும் தமிழ்நாட்டிற்கு நன்கு அமையவில்லை. பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் இத்துறையில் முதல் முயற்சி செய்து, 'செந்தாமரை' என்றதொரு புதினம் அமைத்தார். ஆனால், அவரே மேற்கொண்டு இம்முறையைக் கையாளவில்லை. இதன் காரணத்தைத் தேடி நீண்டதூரஞ் செல்ல வேண்டியதில்லை. நாட்டில் இத்தகைய புதினங்கட்கு நிறைந்த வரவேற்பு இல்லை. காரணம் என்ன? இவற்றை நுகர நல்ல பயிற்சியும், ஒரு முகப்பட்ட

மனநிலையும் வேண்டும். செயற்கை உலகில் சிக்கிச் சிந்தனையை இழந்து தவிக்கும் மக்கட் சமுதாயம் அச்சிந்தனையைத் தூண்டும் எதனையும் விரும்புவதில்லை. திடீர் நிகழ்ச்சிகள் நிறைந்துள்ள உலகில் வாழும் மக்கள் மாறிமாறி நடைபெறும் நிகழ்ச்சிகள் நிறைந்த புதினத்தையே பெரிதும் விரும்புகின்றனர். ஆனால், உலக இலக்கியங்களை, சிறப்பாக ஆங்கில இலக்கியத்தைப் பார்த்தால் உண்மை வேறு வகையாக இருக்கக் காணலாம். நாள் ஒன்றுக்குப் பத்துப் புதினம் வரை வெளியிடப்படும் அம்மொழியிற்கூட நிலைத்து நிற்பவை ஒருசிலவே. பழமை பெற்றனவாய் 'டிக்கன்ஸ்' 'தேக்கரெ' 'ஸ்காட்' போன்றவர்களுடைய புதினங்கள் தம் சிறப்பில் ஒரு சிறிதுங் குறையாமல் நிலவுகின்றன. அவை அனைத்தையும் ஆராயும்பொழுது. அவை முழுதும் கதைமாந்தர்களால் சிறப்புப் பெற்ற புதினங்கள் என்பது விளங்கும். இத்தகைய சிறந்த புதினங்களிலிருந்து சில உண்மைகள் அறியப்படவேண்டும்.

மாறாப் பண்பு

சிறந்த புதினங்களில் கதைமாந்தர்களும் சூழ்ச்சியும் தம்முள் நன்கு தொடர்பு கொண்டிருக்கும், கதைமாந்தரும், சூழ்ச்சியும் ஒன்றற்கொன்று இன்றியமையாதவையாக அமைதல் வேண்டும். அம்மாந்தர்களைப் பிரித்துவிட்டால் அச்சூழ்ச்சி பயனற்றுப் போய்விடும் என்ற நிலையில் அமைவதே சிறந்த புதினம். மட்டமான சூழ்ச்சி நிறைந்த புதினங்களில் தோன்றும் மாந்தர்கள், உயிருள்ள மாந்தர்களாக இராமல் பொம்மைகளாக உலாவுதல் காண்டற்குரியது. 'ஸ்காட்' என்ற சிறந்த புதின எழுத்தாளர் ஒவ்வோர் ஆசிரியனும் புதிய நிகழ்ச்சியை நுழைக்கும்பொழுது அது நுழைக்கப்பட வேண்டிய காரணத்தைக் கற்போர் மனங்கொள்ளுமாறு காட்டல் வேண்டும் என்றும் கூறுவது அறிதற்குரியது. ஒவ்வொரு மாந்தரும் ஒரு செயலில் மேற்கொள்ளும் பொழுது, 'சரி! இப்பண்பிற்கு இச்செயல் இந்நேரத்தில் ஏற்றதுதான்' என்ற எண்ணம் தோன்றவேண்டும். புதிய ஒரு நிகழ்ச்சியைத் தோற்றுவித்தற்காக ஒரு மாந்தரை அதன் பண்பிற்கு மாறாக ஒரு செயலைச் செய்யுமாறு செய்வது புதின ஆசிரியனின் வன்மைக் குறைவையே வெளியிடும். எனவே ஒரு கதைமாந்தன் என்ன பண்புடன் முதலிலிருந்து காட்டப் பெறுகிறதோ அதற்கு மாறான ஒரு செயலைச் செய்யுமாறு செய்வது தகாது. இங்ஙனம் அமைக்கப் பெறுகிற புதினந்தான் சூழ்ச்சியும் கதைமாந்தரும் நன்கு அமைக்கப் பெற்ற புதினமாகும்.

இதனையடுத்துப் புதினம் சிறப்படைவது உரையாடலாலாகும். புதினத்திலேயே மிக்க மகிழ்ச்சியை அளிக்கும் பகுதி உரையாடல் என்பதை ஆசிரியர்கள் பலர் மறந்து விடுகின்றனர். புதின ஆசிரியன் நாடகத் தன்மையை எட்டிப் பிடிப்பது இப்பகுதியில்தான். எனவே இதன் சிறப்பைப் பற்றி அதிகம் கூறத் தேவை இல்லை. இதன் சிறப்பு அதிகரிக்க அதிகரிக்க இதனைப் பயன்படுத்துவதில் உள்ள துன்பமும் அதிகமாகிறது. உரையாடல் கேவலம் பொருளற்ற வார்த்தைக் கோவையாகவும், அடுக்குமொழி ஒப்பனையா(அலங்காரமா)கவும் இருத்தலில் பயன் இல்லை. அதுவும் புதினத்தில் அவ்வாறு இருத்தல் பெருந் தவறு.

"பயனிலசொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல்" ( குறள்,186).

என்ற உண்மையை மறக்க வேண்டாம். உரையாடல் புதினத்தில் தோன்றும் பல மாந்தர்களுடைய மனம், பண்பு, குறிக்கோள், உணர்ச்சிகள் முதலியவற்றை நமக்கு எடுத்துக் காட்டும் கண்ணாடி. சிறந்த ஆசிரியன் கையில் இவ்வுரையாடல் சிறந்த பயனை அளிக்கும். கேவலம் சொல் ஒப்பனை(அலங்காரப்) புல்லியர்கள் இதன் அருமைப்பாட்டை அறிவதும், அறிவிப்பதும் கடினம். ஆங்கிலமொழிப் புதினங்களில் அதிகம் பயிலப் பெறுவது நகைச்சுவை என்பது. புதினம் கற்பவர்கட்குப் பாரமாக இராமல் இன்பந்தர இச்சுவை பயன்படுவது மட்டுமன்றி மற்றொரு பெரிய செயலையும் செய்ய உதவுகிறது. சமுதாயத்தில் காணப் பெறும் குறைபாடுகளை எடுத்துக்காட்டி அதைத் திருத்த வேண்டிய கடப்பாடு புதின ஆசிரியனுக்கும் உண்டு. இத்தகைய செயலை நேரடியாக அவன் செய்யப் புகுந்தால் அதனை யாரும் விரும்பி ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். எனவே தீமையை ஒட்டவும், சமுதாயக் குறைகளை எடுத்துக் காட்டிடவும் நகைச்சுவை பொருந்திய உரையாடலை ஆசிரியன் கையாள்கிறான். ஆனால் நகைச்சுவை என்பது இருபுறமும் கூர்மையுடைய கருவியாகும். ஆசிரியன் தக்க முறையில் இதனைப் பயன்படுத்தவில்லையாயின் இதனால் அவனுக்குக் கெட்ட பெயர்தான் மிஞ்சும். தாழ்ந்த நகைச்சுவை விளையுமாறு உரையாடல் செய்வதும், பிறர் மனம் நோகுமாறு நகைச்சுவையைக் கையாள்வதும் சிறந்த கலைஞன் செய்யாதவை.

புதினத்தில் நடைபெறும் ஒவ்வோர் உரையாடலும் நேரடியாகவோ, மறைமுகமாகவோ கதையை நடத்திச் செல்லுதல், கதைமாந்தர்களின் பண்பை விளக்கல் என்ற இரண்டில் ஒன்றைச் செய்ய வேண்டும். இவை இரண்டையுஞ் செய்யாத உரையாடல் பயனற்றது. அரசியல் விளம்பரம், சமூக சீர்திருத்தச் சொற்பொழிவு. மூடநம்பிக்கைகளைப் பற்றிய சொற்போர் முதலியவற்றிற்குப் புதினத்தில் இடமில்லை.

### சூழ்நிலைக்கேற்ற நடை

மேலும் உரையாடல் நல்ல நடையில் அமைதல் வேண்டும். அதாவது பேசுபவன் நிலைக்கு ஏற்ற நடையாக இருத்தல் வேண்டும். வாழ்க்கையில் நாம் நடத்தும் உரையாடலை அப்படியே படிப்பதானால் அது சுவையற்று இருக்கும். ஆனால் அதற்கு மறுதலையாகக் கடினமான சொற்கள் நிறைந்த உரைநடையானாலும் அதே பயன்தான் விளையும். இவை இரண்டிற்கும் இடைப்பட்ட தன்மையில் உரையாடல் அமையவேண்டும். புதின ஆசிரியன் மிகவும் கவனிக்க வேண்டிய பகுதிகளுள் இதுவும் ஒன்று. பேசுபவன் பண்புக்கு ஏற்ற உரையாடல் அமையவேண்டும். எல்லையற்ற உணர்ச்சிப் பெருக்கில் இலக்கணமாக ஒருவன் பேச ஆரம்பித்தால் படிப்போர்க்கு அவ்வுணர்ச்சி தோன்றாமல் இருப்பது ஒருபுறமிருக்க அதற்கு மறுதலையான நகைச்சுவை தோன்றுதலுங் கூடும். எனவே ஆசிரியன் உரையாடலை அமைக்கும் பொழுது பேசுபவன், பேசப்படுபவன், பேசும் சூழ்நிலையில் வெளிப்படுத்தப் படும் உணர்ச்சி, நிலைக்களம், சூழ்நிலை முதலியவற்றை மனத்துட் கொண்டுதான் அமைத்தல் வேண்டும்.

இவற்றை அடுத்துக் கவனிக்கப்பட வேண்டியன சூழ்நிலை, கொள்கை முதலியனவாம்.

### சூழ்நிலை அமைப்பு

புதினத்தின் பல்வேறு உறுப்புக்களுள் சூழ்நிலை அமைப்பு என்பதும் ஒன்று. அதாவது புதினம் கூறும் செயல்கள் நடைபெறும் காலமும் இடமும் ஆகும். இப்பகுதியில்தான் மக்கள் வாழ்க்கை, அவர்கள் பழக்க வழக்கங்கள் முதலியன இடம் பெறுகின்றன. இப்பரந்த உலகில் வாழும் மக்கட் கூட்டம் பல்வேறுபட்ட பண்பாடுகளுடன் கூடியது. எந்த இடத்தில் கதை நடைபெறுவதாகக் கூறப்படுகிறதோ அதற்கு ஏற்றபடியே இச்சூழ்நிலை அமைக்கப்படல் வேண்டும். 'தேசங்கள் தோறும் மொழிகள் வேறு' என்ற பழமொழி நிறைந்த குறிக்கோளை உடையது. இன்னும் கூறப் போனால் ஒரே மொழி பேசும் பல்வேறு பகுதியினருள்ளும் பழக்க வழக்கங்கள் தெரியாதவர் புதினத்தில் சூழ்நிலை அமைப்பது பெருந் தவறாக முடியும். யாழ்ப்பாணத்தார்களும். திருநெல்வேலி மக்களும், சென்னையார்களும் தமிழே பேசினும் இவர்கள் எண்ணங்கள், பண்பாடுகள் முதலியன பெரிதும் வேறுபட்டு இருக்கக் காணலாம். எனவே சூழ்நிலையை அமைக்கும் புதின ஆசிரியன் இதில் அதிகக் கவனஞ்செலுத்தல் வேண்டும். கிராமங்களில் செயல் நடைபெறுவதாகக் கூறவந்த ஒரு புதின ஆசிரியன் பழைய தல தொன்ம முறையில் மாட மாளிகைகளையும், கூடகோபுரங்களையும் வருணிக்கப் புகுதல் எவ்வளவு தவறு!

### இருவகை அமைப்பு

சூழ்நிலை அமைப்பை நன்கு அறிந்த புதின ஆசிரியன் இருவகை அமைப்புக்களை மேற்கொள்ளலாம். ஒன்று, சமுதாய அடிப்படையில் நிகழ்வது. மற்றொன்று இயற்கை யமைப்பு அடிப்படையில் நிகழ்வது. இவ்வகைப் பிரிவினைகள் திறனாராய்ச்சியிலும், மேலை நாட்டுப் புதினங்களிலும் காணப் பெறுகின்றனவே தவிரத் தமிழ்நாட்டில், தமிழ் மொழியில் தோன்றிய புதினங்களில் இப் பாகுபாட்டைக் காண்பது கடினம், தமிழர் சமுதாயத்தையும், பண்பாட்டையும் அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை என்று கூறத்தக்க புதினங்கள் இருக்கின்றனவா என்பது ஐயத்திற்கிடமானதே. இதுதான் இல்லை என்றாலும் அவ்வினத்தாரின் ஓரிரு பண்பாட்டையேனும் எடுத்து விளக்கக் கூடிய புதினங்கள் உண்டா என்றால் அவையும் விரல்விட்டு எண்ணத் தகுந்தனவாகவே உள்ளன. மேலே கூறிய இரண்டு குறிக்கோள்களையும் கொண்டு ஒரு புதினம் செய்தல் என்பது மிகக் கடினமானதே. ஆனால் இவ்வகையில் யாரேனும் முயன்று அதில் தோற்றுப்போனாலும் அது வரவேற்றற்குரியது.

> "கான முயலெய்த அம்பினில் யானை
> பிழைத்தவேல் ஏந்தல் இனிது" (குறள், 772.)

என்ற பேருண்மையைத் தமிழ்ப் புதின எழுத்தாளர்கள் நினைவில் கொள்வது நலம். ஒரே புதினத்தில் இவை அனைத்தும் இடம் பெறாவிடினும் ஒரே ஆசிரியர் இயற்றிய பல புதினங்களில் இவை இருப்பினும் நலமே.

### குமுகாய அடிப்படையில் உள்ள தொல்லை

இம்முறையில் உள்ள கடினம் கருதிப் போலும் மேலைநாட்டில் கூட இத்தகையோர் எண்ணிக்கை குறைந்துவிட்டது. தற்காலம் சிறப்புப் பெறுவது ஒவ்வொரு பகுதியை எடுத்துக்கொண்டு விரிக்கும் புதினமே யாகும். போர் வீரனுடைய வாழ்க்கை, மாலுமி வாழ்க்கை, மிகப் பெருஞ் செல்வன், நடுத்தரமனிதன், ஏழை முதலானவர்கள் வாழ்க்கைகளை எடுத்துக் கொண்டு புதினம் செய்யும் முறை மேலைநாட்டு இன்றைய இலக்கியங்களில் பல்கியுள்ளன. இம்முறை ஓரளவு தமிழ்ப் புதினங்களிலும் இடம் பெறினும் இன்னும் நன்கு சிறக்கவில்லை. இந்திய நாட்டில் சற்று முன்னாள் வரை தலைவிரித்தாடின. சிற்றரசர்கள் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு எத்தனையோ புதினங்கள் பெரும்பாலும் பணக்காரர்களைத் திட்டுவதும், தொழிலாளியைப் போற்றுவதும் தம் கடமையாகக் கொண்டு உள்ளன. செல்வர்களின் வாழ்க்கை முறையைப் படம் பிடித்துக் காட்டக்கூடிய புதினங்கள், அவர்கள் மனநிலையை வெளியிடும் புதினங்கள் என்று கூறத்தக்க நிலையில்

ஒன்று இல்லை. காரணம் என்ன? புதின ஆசிரியர்கள் கூர்ந்து நோக்கும் இயல்புடையவராய் இல்லாமையே ஆகும். தான் எந்தப் பகுதியை எழுதினும் ஆசிரியன் அதனைக் கூர்ந்து நோக்கி அதனிடம் காணாதனவெல்லாம் காண்டல் வேண்டும். இவ்வாறு கூறுவதால் இல்லாத பொய்களையெல்லாம் எழுத வேண்டும் என்பது கருத்தில்லை. ஏனையோர் கண்டும், உட்பொருள் அறியாமல் இருப்பவற்றின் பொருளை இவ்வாசிரியன் அறிந்து உண்மை கூறவேண்டும் என்பதே கருத்தாகும்.

### தற்கால நிலை

ஒரு காலத்தில் அரசர்களைப் பற்றிக் கூறுவதே கதை என்றிருந்ததுபோகத் தற்காலத்தில் இனப் போராட்டம், காதல் என்பவை இருப்பதே கதை என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. பொதுநிலை (சாதாரண) மனிதன் ஒருவனுடைய அன்றாட வாழ்க்கையைக்கூட ஒரு புதினத்திற்கு அடிப்படையாக்கலாம் என்பதை நம்மவர் நினைப்பதில்லை. எளியவர் வாழ்க்கையில் நடைபெறும் அன்றாடப் போராட்டங்களும்கூடச் சிறந்த கலைஞன் கையில் சிறந்த கலையாக முகிழ்க்க முடியும். நாம் அன்றாடம் பார்த்துப் பழகும் சூழ்நிலையில் கதைகள் அமைப்பதும் சிறந்த ஒன்றுதான். ஒரு சூழ்நிலையில் தோன்றி வளர்ந்த ஒருவன் முற்றிலும் மாறான மற்றோர் சூழ்நிலையில் வாழும்படிச் செய்து அதில்தோன்றும் அழகுகளையும் புதினங்கள் எடுத்துக் காட்டலாம். இம்முறைகளில் எவை கையாளப்படினும், ஒரு சமுதாயத்தின் ஒரு பகுதியைப் பற்றி மட்டும் கூறும் புதினம் கீழே தரப்பட்டுள்ள ஒரு சட்டத்தை மட்டும் மறவாமல் இருத்தல் வேண்டும். கதைமாந்தரின் குணங்கள் சூழ்நிலையைப் பொறுத்தே இருக்கும் என்ற சட்டமே அதுவாகும். இப்பகுதி சிறப்படையும் புதினமே சிறந்தது என்று கூறப்படும். தஞ்சாவூரிலுள்ள ஒரு பெரிய நிலக்கிழாரும் சென்னையிலுள்ள ஆலை முதலாளியும் பணக்காரர் என்ற பொதுப் பெயரினுள் அடங்குவரேனும் இருவருக்கும் பண்புகள் வேறுபடும். இதனை விரிப்பதே சூழ்நிலை எனப்படும். புதின ஆசிரியன் இதனை நன்கு அறிந்தே தனது கதையை நடத்திச் செல்ல வேண்டும்.

### வரலாற்றுப் புதினம்

வரலாறுகளை அடிப்படையாகக் கொண்டு எழும் ஒரு வகைப் புதினங்களும் வேற்றுமொழி இலக்கியங்களில் உண்டு. ஆனால், நம்முடைய தாய்மொழியில் இதுவும் போதிய அளவு இல்லை. இவ்வகைப் புதினங்களில் ஓரளவு ஆசிரியனுடைய உரிமை (சுதந்திரம்) கட்டுப்படுத்தப் பெறுகிறது. நடைபெற்ற நிகழ்வுகள் ஆசிரியனுடைய விருப்பம்போல் நடைபெறுவதில்லை. எனவே அவற்றை வைத்துக் கொண்டுதான் அவன் வேண்டிய அளவு பயன்படுத்திக் கொள்ளல் வேண்டும். வரலாற்றிற்கு மாறாகப் போகாமலும், கலைச்சுவை குறையாமலும் இருக்கவேண்டிய இக்கட்டான நிலை இவ்வகைப் புதினம் இயற்றும் ஆசிரியனுக்கு உண்டு.

### புதினமும் வாழ்க்கையும்

இதனையும் அடுத்துப் புதினத்தில் காணவேண்டிய இயல்பு ஒன்று உண்டு. புதின ஆசிரியன் வாழ்க்கையைப் பற்றிக் கொண்டுள்ள எண்ணமே அதுவாகும். எத்தகைய மனிதனும் உலக வாழ்க்கைபற்றி ஒரு உட்பொருளை (தத்துவம்) கருதியிருப்பான். நாடகத்தைப் போலப் புதினமும் நேரடியாக வாழ்க்கையைப் படம் பிடிப்பதுதான். மக்களுடைய எண்ணங்கள், உணர்ச்சிகள் முதலியவைதாமே நாடகத்திலும், புதினத்திலும் இடம் பெறுகின்றன? வாழ்க்கையில் காணப் பெறுகிற இவற்றை வைத்துக் கொண்டு ஆசிரியன் புதினம் இயற்றுகிறான். ஆதலின் எங்கேயாவது ஓரிடத்தில் வாழ்க்கையைப் பற்றி அவன் என்ன நினைக்கிறான் என்பதைக் கூறித்தானே ஆகவேண்டும்? வாழ்க்கையைப் பற்றிய அவன் கருத்துக்களை வெளியிட அவன் இயற்றும் புதினம் கருவியன்று; என்றாலும் அதிலேயே கிடந்து உழலும் ஒருவனுடைய மனத்தில் மேலே கூறியவைகள் ஓரிரண்டு ஆழமான பட்டறிவு (அநுபவங்)களை உண்டாக்காமல் இருப்பதில்லை. அவ்வாறு உண்டாக்கி இருப்பின் மகிழ்ச்சி, துயரம், உணர்ச்சி என்பவற்றைப் பற்றி அல்லது வாழ்க்கையைப் பற்றி அவன் கொண்டுள்ள எண்ணம் வாய்ப்பு வரும்பொழுது வெளிவரத் தானே செய்யும்?

### ஆசிரியன் கொள்கை

வாழ்க்கையின் உண்மையைப் பொருளைப் பேசச் சிறந்த இடமே புதினமா என்று கேட்கப்படலாம். இல்லை என்பதே விடை. என்றாலும் உலகில் ஒரு புதினங்கூட, அது புதினம் என்ற பெயருக்கு உரியதாக இருந்தால், இவ்வுண்மை பேசாமல் இல்லை. காரணம் என்ன? வாழ்க்கையைத்தான் புதினம் பேசுகிறது. வாழ்க்கையில் தோன்றும் பட்டறிவைத் தான் புதினம் பேசுகிறது. எனவே, வாழ்க்கையிலும், பட்டறிவிலும் தோன்றும் உண்மை அதில் இடம்பெறுதல் வியப்பன்று அல்லவா? மேலும், சிறந்த எழுத்தாளர் அனைவரும் தீர்ந்த சிந்தனையாளர்கள் அல்லவா? அவர்களுடைய சிந்தனையாகிய உலையில் உலகில் நடைபெறும் செயல்கள் சென்று வீழ்கின்றன. மேலும் அவர்கள் கூர்ந்து நோக்கும் இயல்பினர். நடைபெறும் செயலின் அடியில் இருக்கும் மனித மனத்தை அவர்கள் ஆய்ந்து இதுதான் உலகியல் என்ற முடிவுக்கு வருகின்றனர். இம்முடிவிலிருந்து வாழ்க்கையைப் பற்றி அவர்கள் கூறும் தத்துவம் செம்மையுடையதாக இருக்கும்

என்பதில் ஐயம் ஒன்றும் இல்லை. இத்தகையவர்கள் கண்ட இவ்வுண்மைகள் அவர்களுடைய புதினங்களில் இடம் பெறுதல் இயற்கை. சிலர் இயற்றிய புதினங்களில் முந்திரிக் கொட்டைபோல இவ்வுண்மை வெளியில் நீட்டிக் கொண்டிருத்தலும் உண்டு. சிறந்த ஆசிரியர்களுடைய நூல்களில் இவ்வுண்மை உள்ளே மறைந்து இருத்தலும் உண்டு.

உட்பொருள் (அ) உண்மை (தத்துவம்) வெளியீடுமுறை

இத்தகைய உட்பொருளை ஆசிரியன் எவ்வாறு நமக்குத் தருகிறான்? அவன் என்ன உட்பொருளைத் தரவேண்டும் என்று நினைக்கிறானோ அதற்கேற்ற கதைமாந்தர்களையும், சூழ்நிலையையும் செயல்களையும் ஏற்படுத்திக்கொண்டு கதையை நடத்திச் செல்லுமுகமாகவே இதனைப் பெற வைத்தல் ஒரு முறையாகும். நாடக ஆசிரியன் தன் மாந்தர்களின் செயல்கள், பேச்சுகள் என்ற இரண்டின் துணை கொண்டே இதனைச் செய்ய முடியும். ஆனால், புதின ஆசிரியனுக்கு மற்றொரு சிறந்த கருவி (சாதனம்) என்னவெனில் நேரடியாக அவனுடைய கருத்தைக் கூற ஏந்துகள் (வசதி) உண்டு என்பதேயாகும். புதினத்தில் கூறப்பெறும் உட்பொருளை (தத்துவத்தை) அளவிட இரண்டு அளவுகள் உண்டு. முதலாவது அதனுடைய உண்மைத் தன்மை; இரண்டாவது அதனுடைய நல்லியல்பு. வாழ்க்கையில் உண்மை என்பது யாது? நாம் காணக் கூடியவற்றையே உண்மை என்று கூறிப் பழகிவிட்டோம். எனவே, நம் பட்டறிவிற்கு அப்பாற்பட்டவற்றைப் புதினங்கூறி அதிலிருந்து ஒரு வாழ்க்கை உண்மையை கற்பித்து இருப்பின் அதனைப் பொய் என்று தள்ளிவிடுகிறோம். இது தவறு. நம் பட்டறிவிற்கு அப்பாற்பட்டது உண்மையற்றது அன்று. அது மெய்யா என்று வேண்டுமானால் கேட்கலாமே தவிர உண்மையா என்று கேட்பது தவறு. எனவே, புதினம் உண்மையைக் கூறவேண்டுமே தவிர, மெய்ம்மை கூறவேண்டிய இன்றியமையாமை இல்லை. மெய்ம்மை கூறும் நூல்கள் கலைகள் அல்ல; உண்மை கூறும் கலை நூல்களில் மெய்ம்மை இருக்க வேண்டும் என்ற கடப்பாடு இல்லை.

நல்லியல்பு இருக்கும் அல்லது போதிக்கும் தன்மை உள்ளதே சிறப்புப் புதினம். வாழ்க்கையில் இருப்பதை அப்படியே கூறவேண்டும். அதுவே மெய்ம்மை என்று கூறும் சிலர் நல்லியல்பை மறந்து புதினம் இயற்றுகின்றனர். ஆனால், உலக மொழிகளில் நிலைபெற்ற புதினங்களை ஆராய்ந்தால் இவ்வுண்மை வெளிப்படும். (ஜான் அடிங்டன் சைமன்ஸ்) என்ற பெரியார் கூறிய சொற்றொடர் நினைவிற்குக் கொணர்தற்குரியது. "உலக இலக்கியங்களை ஆராய்ந்தால் ஓர் உண்மை வெளிப்படுகிறது. மனித மனத்தின் ஆழத்தில் உள்ள தற்காப்பு உணர்ச்சி நல்லியல்பு இல்லாத இலக்கியங்களை உதறித் தள்ளிவிடுகிறது" என்பதே அது. (இலக்கியக் கலை அ.ச.ஞா.)

**நெடுங்கதைவிடு-தல்** *neḍu-ṅ-gatai-viḍu-,* 18செ.குன்றாவி (v.t.) காலத்தாழ்வு செய்தல் (வின்.); to put off from day to day.

*[நெடுங்கதை + விடு-தல்.]*

**நெடுங்கப்பற்று-தல்** *neḍuṅga-p-paṟṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) இறுகப் பிடித்தல்; to grasp firmly. '*கண்ட இரை நெடுங்கப் பற்றி விழுங்கிய பாம்புபோல்*' (நீலகேசி, 308, உரை).

*[நெருங்கு → நெடுங்கு + பற்று-தல்.]*

**நெடுங்கம்பு** *neḍu-ṅ-gambu,* பெ. (n.) கம்புப் பயிர் வகை (விவசா.4); a kind of bulrush millet.

*[நெடு → நெடும் + கம்பு. நீண்ட கம்புப் பயிர் வகை]*

**நெடுங்கயிற்றில்விடு-தல்** *neḍu-ṅ-gayiṟṟil-viḍu-,* 18செ.குன்றாவி. (v.t.) 1. நாட்கடத்துதல் (யாழ்.அக.); to delay procrastinate. 2. நீண்ட கயிற்றில் குழந்தையர் உருளைகளை விட்டு விளையாடுதல்; a kind of children game.

*[நெடுங்கயிறு + விடு-தல்.]*

**நெடுங்கயிறு** *neḍu-ṅ-gayiṟu,* பெ. (n.) 1. நீளமான கயிறு; long rope. *கிணற்றுக்கு நெடுங்கயிறு ஒன்று வாங்கிவா.* 2. நீண்ட வலை; large net. "*கமலக் கண்ணென்னு நெடுங்கயிறு படுத்தி*" (திவ்.நாய்ச்.14:4). "*நெடுங்கயிறு வலந்த குறுங்க ணவ்வலை*" (அகநா.30:1). 3. பெருந்தாழ்வு (தாமதம்) (வின்.); long delay.

*[நெடு → நெடும் + கயிறு. கள் → கய் → கயில் → கயிறு. கள் = கட்டுதல், பிணைத்தல்.]*

**நெடுங்கரை** *neḍu-ṅ-garai,* பெ. (n.) நீண்ட கரை; long bank. "*நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து*" (குறுந். 304:5).

*[நெடு → நெடும் + கரை. கரு → கரை. → கரு = மேடு, உயரம்.]*

**நெடுங்கல்நின்றமன்றம்** *neḍu-ṅ-gal-niṉṟa-maṉṟam,* பெ. (n.) காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள ஐந்து மன்றங்களில் ஒன்று; one among the five halls at Kāviripōm-paṭṭiṉam-in Tamilnadu. "*நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றமும்*" (சிலப்.5:127).

*[நெடுங்கல் + நின்ற + மன்றம்]*

ஐந்து மன்றங்கள்: காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் நின்ற மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம்

**சிலப்பதிகாரம் கூறும் 5 மன்றங்கள் பற்றிய செய்தி:**

அயல் நாட்டிலிருந்து வந்த புதியோர், தம் பெயர் எழுதிய அடையாள எழுத்தினை இலச்சினையாக அமைத்த, பல எண்களையுடைய பொதிகள் பண்டசாலை வாயிலில் குவிந்திருந்தன. வலிய தாழ் இட்ட கதவுகளையுடைய அரணாகிய காவலையும், அவற்றிற்கு உரிமையுடையோர் காத்திருக்கும் காவலையும் அவை நீங்கியிருந்தன. ஆயினும் அவற்றைக் களவாடுவோர் உளராயின், அவர் கழுத்து வலிக்கப் பொதியைத் தலையில் ஏற்றி வைத்துச் சுமக்கச் செய்து ஊரைச் சுற்றி வரச் செய்யும், அங்குள்ள பூதம். அவர்க்கு அதைவிட வேறு தண்டனை தருவதில்லை. எனவே இக்கடும் துன்பத்தை யெண்ணிக் களவை மனத்தால் நினைக்கவும் யாரும் அஞ்சுவர். வெளியான இடத்தில் இத்தகைய பூதம் தங்கியுள்ள வெள்ளிடை மன்றம் ஒன்று புகாரில் இருந்தது.

கூனர், குறளர் (குள்ளர்), ஊமையர், செவிடர், உடல் அழுகும் தொழு நோயாளர் ஆகியோர் முழுகி நீராடிய அளவிலே பழுதில்லாத நல்ல தோற்றத்தைப் பெற்று வலம் செய்து தொழுது நீங்குதற்குரிய பொய்கையினையுடைய 'இலஞ்சி மன்றம்' ஒன்றும் அப்புகாரில் இருந்தது.

வஞ்சனையாகச் சிலர் மருந்து தர உண்டு பித்தேறினாரும், நஞ்சை உண்டு நடுங்குதுயர் உற்றாரும், அழலும் விடத்தையுடைய பாம்பின் கூரிய பற்கள் அழுந்தக் கடியுண்டாரும், பிதுங்கிய கண்ணையுடைய பேயால் கடுந் துன்ப முற்றாரும், சுற்றி வந்து தொழுத உடனே அவர்தம் துன்பமெலாம் நீக்குகின்ற, ஒளி சொரியும் நெடிய கல் நாட்டி நிற்கும் 'நெடுங்கல் மன்றம்' ஒன்றும் அப்புகாரில் இருந்தது.

அரசனது செங்கோலாட்சி சிறிது மாறுபடினும், அறங்கூறும் அவையில் அறமு(நீதி)ரைப்போர், அற(நீதி) நூலுக்கு மாறுபட ஒருபால் சார்ந்து அறம்(நீதி) உரைக்கினும், நாவால் ஒன்றும் கூறாது துன்பக் கண்ணீர் சொரிந்து அழும் பாவை நிற்கும் 'பாவை மன்றம்' ஒன்றும் அப்புகாரில் இருந்தது.

வாழ்க்கையின் உண்மைத் தன்மையை உணர்ந்த மேலோரால் போற்றிப் புகழப்படும் அந்த ஐவகைப்பட்ட மன்றங்களிலும் மக்கள் அரிய பலியிட்டு வழிபட்டனர்.

வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த எண்ணுப் பல்பொதிக்
கடைமுக வாயிலும் கருந்தாழ்க் காவலும்
உடையோர் காவலும் ஒரீஇய வாகிக்
கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது கொடுத்தல் ஈயாது
உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்
கூனும் குறளும் ஊமும் செவிடும்
அழுகுமெய் யாளரும் முழுகினர் ஆடிப்
பழுதில் காட்சி நன்னிறம் பெற்று

வலஞ்செயாக் கழியும் இலஞ்சி மன்றமும்
வஞ்சம் உண்டு மயற்பகை யுற்றோர்
நஞ்சம் உண்டு நடுங்குதுயர் உற்றோர்
அழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்
கழல்கண் கூளிக் கடுநவைப் பட்டோர்

சுழல வந்து தொழுத்துயர் நீங்கும்
நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றமும்
தவமறைந் தொழுகும் தன்மை யிலாளர்
அவமறைந் தொழுகும் அலவற் பெண்டிர்
அறைபோகு அமைச்சர் பிறர்மனை நயப்போர்

பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காதம் நான்கும் கடுங்குர லெடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்
அரைசுகோல் கோடினும் அறங்கூறு அவையத்து

உரைநூல் கோடி ஒரு திறம் பற்றினும்
நாவொடு நவிலாது நவைநீர் உகுத்துப்
பாவைநின் றழூஉம் பாவை மன்றமும்
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் ஏத்தும்
ஐவகை மன்றத்தும் அரும்பலி உறீஇ
(சிலப்.5:111–140)

**நெடுங்கல்மன்றம்** *neḍuṅgal-maṉṟam,* பெ. (n.) **நெடுங்கல் நின்ற மன்றம்** பார்க்க; see *neḍuṅgal-niṉṟa-maṉṟam.*

*[நெடுங்கல் + மன்றம்]*

**நெடுங்கழுத்தன்** *neḍu-ṅ-gaḻuttaṉ,* பெ. (n.) **1.** நீண்ட கழுத்துள்ள ஒட்டகம் (பிங்.); camel. **2.** நீண்ட கழுத்துள்ள கோவேறு கழுதை (சூடா.); mule.

*[நெடு → நெடும் + கழுத்தன்]*

**நெடுங்கழுத்துப் பரணர்** *neḍuṅ-gaḻuttu-p-paraṇar,* பெ. (n.) *நெடுங்களத்துப்பரணர்* பார்க்க; see *neḍu-ṅ-gaḷattu-p-paraṇar.*

**நெடுங்களத்துப்பரணர்** *neḍuṅ-gaḷattu-p-paraṇar,* பெ. (n.) கழகக் காலப் புறநானூற்றுப் புலவர்; a šangam poet.

*[நெடு → நெடும் + களத்து + பரணர்]*

திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே காவிரியின் தென்கரையில் உள்ள நெடுங்களம் என்னும் ஊரினர். பரணறென்ற பெயருடைய சான்றோர் ஒருவர் இருத்தலால் அவரின் வேறுபடுத்தி அறிதற்குப் பண்டையோர் இவரது ஊராகிய நெடுங்களத்தைச் சேர்த்து நெடுங்களத்துப்பரணர் என்று வழங்கினர். ஏடுகளில் நெடுங்களத்து என்பது நெடுங்கழத்து எனப் பிழைபட்டுப் பின்னர் நெடுங்கழுத்தெனத் திரித்ததன் மேலும் திரிபடைவதாயிற்று. இவர் நெடிய கழுத்தையுடையராதல் பற்றி நெடுங்கழுத்துப் பரணர் என்று உறுப்புப் பற்றி பெயர் பெற்றனர் எனக் கூறினர். போருக்குச் செல்பவர் வெள்ளுடையுடுத்திச் செல்வது அக்கால வழக்கம் என்பது இவரது பாடலால் (புறநா.291) அறிய முடிகிறது.

*"சிறாஅஅர் துடியர் பாடுவன் மகாஅஅர்*
*தூவெள் ளறுவை மாயோற் குறுகி*
*இரும்புட் பூசல் ஓம்புமின் யானும்*
*விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்*
*என்போற் பெருவிதுப் புறுக வேந்தே*
*கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்றலை*
*மணிமருண் மாலை சூட்டி அவன்றலை*
*ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே"* (புறநா.291)

இவ்வொரு பாடல் மட்டுமே இவர் பாடியதாகக் காணப்படுகிறது.

**நெடுங்களம்** *neḍu-ṅ-gaḷam,* பெ. (n.) திருச்சி மாவட்டத்து ஊர்; a village in Trichy district. *"நிழலார் சோலை நெடுங்களத்து நிலாயநித்த மணாளன்"* – (அப்பர்)

*[நெடும் + களம். நெடும் = பரந்த. களம் = செழிப்பு. சோலைகள் நிறைந்து செழிப்புற்ற ஊர். இன்று திருநாட்டாங்குளம், திருநாட்டான்குளம் என வழங்குகிறது.]*

"தொட்டுத் தடவித் துடிப்பொன்றும் காணாது பெட்டப்பிணமென்று பேரிட்டுக் – காட்டி எடுங்கள் அத்தா என்னா முன் ஏழைமட நெஞ்சே நெடுங்களத்தார் பாதம் நினை" – (சேத்திரக் கோவை வெண்பா).

**நெடுங்காலம்** *neḍu-ṅ-gālam,* பெ. (n.) நீண்ட காலம்; long time.

*[நெடும் + காலம்]*

**நெடுங்காலி** *neḍu-ṅ-gāli,* பெ. (n.) கால் நீண்ட ஆன் (பசு) (யாழ்ப்.); long legged cow.

*[நெடும் + காலி]*

**நெடுங்கிடை** *neḍu-ṅ-giḍai,* பெ. (n.) **1.** நோயால் நீண்ட நாட்கள் படுக்கையிற் கிடக்கை (உ.வ.); being bed-ridden for a long time, as from a disease. *கால்கை வராமல் நெடுங்கிடையாய்க் கிடக்கின்றான்.* **2. நெடுஞ் சாண்கிடை** பார்க்க; see *neḍu-ñ-jāṇgiḍai. நெடுங்கிடையாய் வணங்கினான்.*

*[நெடும் + கிடை]*

**நெடுங்கிள்ளி** *neḍu-ṅ-gilli,* பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Chola king in šaṅgam age.

கோவூர்க்கிழாரால் பாடப்பட்டவன் (புறநா. 44,45,47). இவன் தம்பி (எதிரி) உறையூரிலிருந்த நலங்கிள்ளி என்னும் சோழன். நெடுங் கிள்ளிக்கு ஆவூரும் உறையூரும் சொந்தமாக இருந்தன. நலங்கிள்ளி ஆவூரை முற்றுகையிட்ட போது நெடுங்கிள்ளி அவனுடன் போரிடவியலா தென்று மதிலை அடைத்துப் பதுங்கிக் கிடந்தான். இந்நிலை நெடுங்கிள்ளிக்கு இழிவெனக் கூறிக்கோவூர் கிழார் இவனை இடித்துரைத்தார் (புறநா.44). இவனுக்குக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளியெனவும் பெயரிருப்பதால் இவன் காரியாறு என்னும் இடத்தில் இறந்திருக்கவேண்டும்.

“இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மதி பெறாஅ
திருந்து அரை நோன் வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்து உயிர்த்து
அலமரல் யானை உரும்என முழங்கவும்
பாலில் குழவி அலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்
இன்னாது அம்ம, ஈங்கு இனிது இருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்
அறவை ஆயின் நினதுஎனத் திறத்தல்
மறவை ஆயின் போரொடு திறத்தல்
அறவையும் மறவையும் அல்லையாகத்
திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்
நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக உடைத்து இது காணுங்காலே”
(புறநா.44)

**நெடுங்கு** *neḍuṅgu,* பெ. (n.) நெடுக்கு பார்க்க; see *neḍukku. சந்து நெடுங்கிலே போகிறது.*

*[நெடுக்கு → நெடுங்கு]*

**நெடுங்குடர்** *neḍu-ṅ-guḍar,* பெ. (n.) மணிக்குடல் (யாழ்.அக.); the small intestines.

*[நெடு → நெடும் + குடர். குடல் → குடர். ஒ. நோ. பந்தல் → பந்தர்.]*

**நெடுங்குயில்** *neḍu-ṅ-guyil,* பெ. (n.) சாவு; death. (சா.அக.).

*[நெடுந்துயில் → நெடுங்குயில்]*

**நெடுங்குரல்** *neḍu-ṅ-gural,* பெ. (n.) விடாத பெருங்குரல் (வின்.); long protracted cry, as in wailing, loud continued call. *“குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு”* (சிலப்.10:23). *“நின்றெறி பலியின் நெடுங்குர லோதையும்”* (மணிமே.7:85).

*[நெடு → நெடும் + குரல்]*

**நெடுங்குரல்பாய்ச்சு-தல்** *neḍu-ṅ-gural-pāyccu-,* 5 செ.கு.வி. (v.i.) நீண்ட ஓசையிடுதல்; to make a long protracted noise, as in bemoaning. *நெடுங் குரல் பாய்ச்சி அழுதாள்.*

*[நெடுங்குரல் + பாய்ச்சு-தல்.]*

**நெடுங்குரலன்** *neḍu-ṅ-guralaṉ,* பெ. (n.) பெருங் குரலுடைய கழுதை (பஞ்சதந்.); ass. as braying loudly.

*[நெடு → நெடும் + குரலன்.]*

**நெடுங்குல்லா** *neḍu-ṅ-gullā,* பெ. (n.) நீண்ட குல்லா (வின்.); high cap.

*[நெடு → நெடும் + குல்லா]*

**நெடுங்குளம்** *neḍu-ṅ-guḷam,* பெ. (n.) பாண்டி நாட்டிலுள்ள ஊர்; a village in Pāṇḍi Nāḍu.

நெடியகுளம் உள்ள ஊர் ஆகலாம்.

*[நெடு → நெடும் + குளம்]*

**நெடுங்குளிசம்** *neḍu-ṅ-guḷišam,* பெ. (n.) கற்பரிபாடாணம்; a kind of native arsenic. (சா.அக.).

**நெடுங்கூவிளி** *neḍu-ṅ-gūviḷi,* பெ. (n.) யானை முழங்குவது போன்ற பெருமுழக்கம்; loud noise, as of an elephant. "*நிறையழியானை நெடுங் கூவிளியும்*" (மணிமே.7:67).

*[நெடு → நெடும் + கூ + விளி.]*

யானை நெடிதாகக் கூவி விளிப்பது போன்ற பேரோசை.

**நெடுங்கேடு** *neḍu-ṅ-gēḍu,* பெ. (n.) தீராக்கேடு (யாழ்.அக.); endless ruin. *அவனுக்கு அந்தச் செயலால் நெடுங்கேடு விளைந்தது.*

*[நெடு → நெடும் + கேடு.]*

**நெடுங்கை**[1] *neḍu-ṅ-gai,* பெ. (n.) 1. நீண்ட கையையுடைய யானை; elephant, as having a long trunk. *"நெடுங்கைப் பிணத்திடை நின்றான்" (பு.வெ.7:13). "கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி" (அகநா.63:14). "ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை" (அகநா.111:8).* 2. முழந்தாள் தொடும் தடக்கை கொண்டவன்; a man having a long hand.

*[நெடு → நெடும் + கை.]*

**நெடுங்கைநீட்டு** *neḍu-ṅ-gai-nīṭṭu,* பெ. (n.) மிகு தொலைவு (அதிதூரம்); long distance. "*நித்ய விபூதியிலே நெடுங்கைநீட்டாக இருந்தாயாகில்*" (ஈடு, 5. 7:1).

*[நெடுங்கை + நீட்டு]*

**நெடுங்கையன்** *neḍu-ṅ-gaiyaṉ,* பெ. (n.) யானை; elephant from its long trunk. "*ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை*" (அகநா. 111:8). "*கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி*" (அகநா. 63:4).

*[நெடு–மை + கையன்]*

**நெடுங்கைவன்மான்** *neḍuṅgai-vaṉmāṉ,* பெ. (n.) யானை; an elephant. "*நெடுங்கை வன்மான் கடும்பகை யுழந்த*" (குறுந். 141:4).

*[நெடுங்கை + வன் + மான்]*

**நெடுங்கைவேண்மான்** *neḍu-ṅ-gai-vēṇmāṉ,* பெ. (n.) சோழ நாட்டு மன்னன் பெருஞ்சாத்தன் என்பானின் பட்டப்பெயர்; title, honorific name to Chola king perujñ-sāttaṉ. "*நெடுங்கை வேண்மானருங்கடிப் பிடவூர்*" (புறநா. 395:20).

*[நெடுங்கை + வேண்மான்]*

பிடவூர் எனப் பெயரியதோரூர் இதனைச் சோழநாட்டுப் பிடவூர் என்று பண்டையோர் குறித்துள்ளனர். தொண்டைநாட்டுப் பிடவூர், "மணவிற் கோட்டத்துப் புரிசைநாட்டுப் பிடவூர்" (A.R. No. 68 of 1923) என்றும், சோழநாட்டுப் பிடவூர். "பிடவூர் நாட்டுப் பிடவூர்" (A.R.No. 139 of 1930–31) என்றும் கல்வெட்டுகளிற் காணப் படுகின்றன. இப்பிடவூர்க்குரியராய் வாழ்ந்த வேளாண் மக்களின் குடி முதல்வன் பிடவூர் கிழானாவன். இவனும் இவனைச் சேர்ந்தோரும் அந்நாளில் வேந்தர்க்கு மண்டிலமாக்களும் தண்டத் தலைவருமாய்த் துணைபுரிந்தனர். மூவேந்தர்க்கு மகட்கொடை நேரும் சிறப்பும் இவர்கட்கு உண்டு. இவர்கள் வேளிரெனப்படு தலுமுண்டு. பிடவூர் வேளிர்குடி வழிவழியாக வந்து இடைக் காலத்தும் சிறந்திருந்தது. கல் வெட்டுகளுள் "பிடவூர் நாட்டுப் பிடவூர் வேள்" என்பானொருவன் (A.R. No. 139 of 1930–31) காணப்படுவதே இதற்குச் சான்று பகருகின்றது. இது நிற்க. இப்பிடவூர் உறையூர்க்குக் கிழக்கில் உளது. பெருஞ் சாத்தன் இப்பிடவூர் கிழான் மகனாவான். இவன் நெடுங்கைவேண்மான் எனவும் வழங்கப் படுவன். (புறநா.395.உரை).

**நெடுங்கொடி** *neḍu-ṅ-goḍi,* பெ. (n.) நீண்ட கொடி; a long flag. *"நெடுங்கொடி நிழன்மதி நெற்றி தைவர"* (சீவக. 54). *"நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்"* (நற். 45:4). *"மங்கல நெடுங்கொடி வானுற எடுத்து"* (சிலப். 5:146).

*[நெடும் + கொடி]*

**நெடுங்கொடி காசு** *neḍu-ṅ-goḍi-kāšu,* பெ. (n.) நெடிய கொடியின் குறி (இலச்சினை) பொறிக்கப்பட்ட காசு; a coin. *"இம்மண்டபத்துக்கு நெடுங்கொடி காசு சிகை இருபத்து நாலு கோடி காசு சிகை இழிந்தருளி"* (தெ.க.தொ.12:129).

*[நெடுங்கொடி + காசு]*

கி.பி.12ஆம் நூற்றாண்டில் சோழ மண்டலத்தில் மக்கள் வாழ்க்கைக்குரிய பொருளியல் உதவித் தொகையாக இக்காசு வழங்கப்பட்டது. (கல்.அக.)

**நெடுங்கொடி முல்லை** *neḍu-ṅ-goḍi-mullai,* பெ. (n.) நீண்ட கொடி முல்லை; a long running jasmine. *"நெடுங்கொடி முல்லை யொடு தளவமலர் உதிர"* (ஐங்குறு 422:1).

*[நெடுங்கொடி + முல்லை.]*

**நெடுங்கோடிச்சுவர்** *neḍu-ṅ-gōḍi-c-cuvar,* பெ. (n.) *நெடுக்குச்சுவர்* (C.G.) பார்க்க; see *neḍukku-c-cuvar.*

*[நெடும் + கோடு + இ + சுவர். நீள வாட்டில் கட்டப்பட்ட சுவர்.]*

**நெடுங்கோடு** *neḍu-ṅ-gōḍu,* பெ. (n.) நீண்ட கோடு, வரி; a long dividing or describing line. *"நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி"* (நற். 59:2).

*[நெடும் + கோடு]*

**நெடுங்கோணி** *neḍu-ṅ-gōṇi,* பெ. (n.) ஒட்டகம் (சங்.அக.); camel.

*[நெடும் + கோணி. கொள் → கோண் → கோணி.]*

நீண்ட வளைவான உடலமைப்பையுடைய விலங்கு, ஒட்டகம்.

**நெடுஞ்சட்டை** *neḍu-ñ-jaṭṭai,* பெ. (n.) நீண்ட அங்கி (வின்.); long coat, gown, cloak.

*[நெடும் + சட்டை. உடல் முழுமையும் அணியும் ஒரே நீண்ட சட்டை]*

**நெடுஞ்சம்பா** *neḍu-ñ-jambā,* பெ. (n.) சம்பா நெல் வகை (நாமதீப.352, உரை); a kind of Cambā paddy.

*[நெடும் + சம்பா]*

**நெடுஞ்சாங்கிடை** *neḍu-ñ-jāṅ-giḍai,* பெ. (n.) *நெடுஞ்சாண்கிடை* (உ.வ.) பார்க்க; see *neḍu-ñ-jāṇ-giḍai.*

*[நெடுஞ்சாண் + கிடை → நெடுஞ்சாங்கிடை]*

**நெடுஞ்சடையன் பராந்தகன்** *neḍu-ñ-jaḍaiyaṉ-parāndagaṉ,* பெ. (n.) புகழ்பெற்ற சோழ மன்னன்; a famous Chola king.

இவன் அரிகேசரி பராங்குசனுடைய மகன். சடையவர்மன் என்பது இவனுக்கு ஒன்றுவிட்டு வரும் மரபுப் பட்டம். தென்னவானவன், சீவரன், புனப்பூழியன், மருதபாலன் முதலிய சிறப்புப் பெயர்களைக் கொண்டவன். இவன் பெண்ணாகடத்தில் பல்லவர்களை வென்றான். வேணாட்டரசன் ஆய்வேளைப் போரில் புறங்கண்டான் எனத் தெரிகிறது. இவன் காஞ்சியில் திருமாலுக்குக் கோயில் கட்டினான் என்றும், மாலியக் குரவர் பெரியாழ்வார் இவன் காலத்தவர் என்றும் அறிய முடிகிறது.

*[நெடும் + சடையன் + பராந்தகன். மாறுகொள்வதும் சடைதலும் போர்ப்பயிற்சி பற்றிய சொற்கள்]*

**நெடுஞ்சாண்** *neḍu-ñ-jāṇ,* பெ. (n.) *நெடுஞ்சாண் கிடை* (வின்.) பார்க்க; see *neḍu-ñ-jāṇ-kiḍai.*

**நெடுஞ்சாண்கட்டை** *neḍu-ñ-jāṇ-kaṭṭai,* பெ. (n.) **நெடுஞ்சாண்கிடை** (வின்.) பார்க்க; see *neḍu-ñ-jāṇ-kiḍai.*

*[நெடுஞ்சாண் + கட்டை. கட்டைபோல் நிலத்தில் கிடத்தல்]*

**நெடுஞ்சாண்கிடை** *neḍu-ñ-jāṇ-kiḍai,* பெ. (n.) உடல் முழுவதும் நிலத்தில் படும்படிக் கிடக்கை (வின்.); lying on the ground at full length.

*[நெடுஞ்சாண் + கிடை]*

'எண்சாண் உடம்பு' என்னும் வழக்கால் முழுவுடல் படியும் வணக்கத்திற்கு இப்பெயர் வந்தது.



**நெடுஞ்சாண்கிடையாக** *neḍu-ñ-jāṇ-kiḍaiyāga,* பெ. (n.) வணங்கும் போது உடல் முழுமையும் தரையில் படும்படியாக; prostrating at full length. நெடுஞ்சாண் கிடையாக விழுந்து தாய், தந்தையை வணங்குதல் வேண்டும்.

*[நெடுஞ்சாண் + கிடையாக]*

**நெடுஞ்சாணை** *neḍu-ñ-jāṇai,* பெ.(n.) **நெடுஞ்சாண்கிடை** (யாழ்.அக.) பார்க்க; see *neḍu-ñ-jāṇ-kiḍai.*

*[நெடுஞ்சாண் → நெடுஞ்சாணை]*

**நெடுஞ்சாரை** *neḍu-ñ-jārai,* பெ. (n.) சாரைப் பாம்பு வகை; a king of rat-snake

*[நெடும் + சாரை. சாரை = சரசர வென்று செல்வதால் பெற்ற பெயர்]*



**நெடுஞ்சால்** *neḍu-ñ-jāl,* பெ. (n.) **நெடுஞ்சாலுழவு** பார்க்க; see *neḍu-ñ-jāl-uḻavu.* ***"ஊன்கிழித்தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்"*** (அகநா. 194:4).

*[நெடும் + சால்]*

**நெடுஞ்சாலுழவு** *neḍu-ñ-jāl-uḻavu,* பெ. (n.) நீட்டுப் போக்குழவு (வின்.); ploughing lengthwise.

*[நெடும் + சால் + உழவு. நீள வாட்டத்தில் உழும் உழவு.]*

**நெடுஞ்சாலை** *neḍu-ñ-jālai,* பெ. (n.) அரசுத்துறையின் நேரடிக் கண்காணிப்பில் (பராமரிப்பில்) இருக்கும் முதன்மையான (பிரதான) பொதுச்சாலை; highway. ***இந்த வேலை அரசின் நெடுஞ்சாலைத்துறை செய்தது.***

*[நெடும் + சாலை]*

**நெடுஞ்சிமை** *neḍu-ñ-jimai,* பெ. (n.) நெடிய குவடு; நீண்ட மலையுச்சி; a long mound, hillock. summit of mountain. *"முயலுநர் முற்றா ஏற்றரு நெடுஞ்சிமை"* (அகநா. 322:13).

*[நெடும் + சிமை. சிமை = மலையுச்சி.]*

**நெடுஞ்சினை** *neḍu-ñ-jiṉai,* பெ. (n.) நீண்ட அல்லது நெடிய (மரத்தின்) கிளை; a long branch of tree. *"நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு"* (நற். 31:10). *"பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை"* (குறுந். 79:2). *"கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினை"* (கலித். 40:27).

*[நெடும் + சினை. சினை = கிளை, கோடு]*

**நெடுஞ்சீர்வண்ணம்** *neḍu-ñ-jīr-vaṇṇam,* பெ. (n.) நெடிய ஓசையுடைய நெட்டெழுத்துக்கள் பயின்று வரும் ஒலி (சந்தம்); a rhythm effected by having only long syllabes. *"நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்"* (தொல். பொருள். செய். 218).

*[நெடும் + சீர் + வண்ணம்]*

எ.கா.

ஏறுமயில் ஏறிவிளையாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுகம் ஒன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருள வேண்டும்
ஆதியரு ணாசலம்அ மர்ந்தபெரு மானே
(திருப்புகழ்)

**நெடுஞ்சுடர்** *neḍu-ñ-juḍar,* பெ. (n.) நெடிய கொழுந் தினையுடைய நெருப்பு; a long flame fire. *"பாயிருள் அறநீக்கும் நோய்தபு நெடுஞ்சுடர்"* (கலித். 137:20). *"நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்து நம்"* (அகநா. 88:6). *"நிவந்தபள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து"* (அகநா. 93:14).

*[நெடும் + சுடர். நீண்ட தீச்சுவாலையை யுடைய நெருப்பு]*

**நெடுஞ்சுருட்டை** *neḍu-ñ-juruṭṭai,* பெ. (n.) சுருட்டைப் பாம்பு வகை (M.M.) ; a variety of Echis carninata, long carpet-snake.

*[நெடும் + சுருட்டை. சுருட்டை = சுருண்ட வடிவில் (இருக்கையில்) இருக்கும் பாம்பு. இஃது ஓடும் போது நீண்டு கொள்ளும் தன்மையது.]*



**நெடுஞ்சுரை** *neḍu-ñ-jurai,* பெ. (n.) சுரைக்கொடி; bottle gourd creeper - Calabash or calabash-cucumber- lagenaria vulgaris. (சா.அக.).

*[நெடும் + சுரை. சுரை = உட்டுளை, உட்டுளையுள்ள காய்.]*



**நெடுஞ்சுவர்** *neḍu-ñ-juvar,* பெ. (n.) நெடிய சுவர்; a long wall. *"ஓவுறழ் நெடுஞ்சுவர் நாள்*

*பல வெழுதி"* (பதிற்று. 68:17). *"நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து"* (அகநா. 16:4). *"நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து"* (புறநா. 373:11). "படுங்கொல் வாழி நெடுஞ் சுவர்ப்பல்லி". (நற்.69:3)

*[நெடும் + சுவர்]*

**நெடுஞ்சுழி** *nedu-ñ-juli,* பெ. (n.) ஆற்றின்கண் ஏற்படும் நீர்ச்சுழி; whirling as water. *"நெடுஞ்சுழி நித்தம் மண்ணுநள் போல"* (அகநா. 62:10).

*[நெடும் + சுழி. சுழி = சுழன்று காணப்படுவது]*

**நெடுஞ்சுனை** *nedu-ñ-junai,* பெ. (n.) நீண்ட ஆழமான நீர்ச் சுனை; a long reservoir of water on a mountain, a hill tank. *"குண்டுநீர் நெடுஞ்சுனை நோக்கிக் கவிழ்ந்து"* (நற். 151:10). *"குன்றக நெடுஞ்சுனைக் குவளை போல"* (ஐங்குறு. 500:2).

*[நெடும் + சுனை. சுனை = மலைஊற்று]*

**நெடுஞ்சூடு** *nedu-ñ-jūdu,* பெ. (n.) அதிகமான வெப்பம்; a long heat; warmth burn or scald. *"நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு"* (புறநா. 397:13).

*[சுள் → சுர் → சுடு → சூடு. சூடு = அதிக வெப்பம்]*

**நெடுஞ்செழியன்** *nedu-ñ-jeliyan,* பெ. (n.) 1. சிலப்பதிகாரக் காலத்து அரசனும் கோவலனைக் கொல்வித்தவனுமான பாண்டிய அரசன் (சிலப்.23,கட்டுரை); the Pandya king who caused the death of Kōvalan, as related in Silappadikāram. 2. மதுரைக் காஞ்சி முதலியவற்றில் புகழப்பட்டவனும் தலையாலங் கானத்துச் செருவென்ற வனுமாகிய பாண்டியன்; the Panda king of Talai-y-ālankān-am fame, celebrated in Maturai-k-kañci and other poems.

*[நெடும் + செழியன்]*

நெடுஞ்செழியன் இருவர் ஆவர். ஒருவன் சிலப்பதிகாரத்தில் வரும் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மற்றவன் தலையாலங் கானத்துச் செரு வென்றவன்.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்: இவன் சேரன் செங்குட்டுவன் காலத்திருந்த பாண்டியமன்னன் வடநாட்டு ஆரிய மன்னர்களை வென்றவன். தான் ஆராயாமல் அளித்த தீர்ப்புக்கு அஞ்சி மனைவியுடன் உயிர்விட்டவன். இவனே அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டிய நெடுஞ்செழியன். இவன் வீரனும் புலவனுமாவான். இவன் பாடிய பாட்டு புறநானூற்றில் காணப்படுகிறது.

*"உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்*
*பிற்றை நிலை முனியாது கற்ற னன்றே*
*பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்*
*சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்*
*ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக வென்னா தவருள்*
*அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்*
*வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்*
*கீழ்ப்பா லொருவன் கற்பின்*
*மேற்பா லொருவனு மவன்கட்படுமே"*
(புறநா.183).

தலையாலங்கானத்துச் செருவென்றவன் : பாண்டிய மன்னன், கல்வி கேள்வியில் சிறந்தவன். சிறந்த வீரமுள்ளவன், செய்யுள் இயற்றும் திறமுடையவன், மாங்குடி மருதனாரால் புகழப்பட்டவன், இளமையிலேயே அரசுரிமையைக் கைக் கொண்டு ஆட்சி புரிந்தவன். சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையும் சோழன் இராச சூயம் வேட்ட பெருநற் கிள்ளியும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்னும் வேளிர் ஐவரும் இந்நெடுஞ்செழியனை இகழ்ந்து கூறிப் பாண்டிய நாட்டைக் கைப்பற்றக் கருதி மதுரையை முற்றுகையிட்டார்கள். நெடுஞ்செழியன் சினமிகுந்து "நகுதக்கனரே" (புறநா.72) என்ற செய்யுளால் வஞ்சினங் கூறிப் போருக்கெழுந்து உழிஞைசூடிப் போர் செய்யத் தொடங்கினான். (புறநா.79). எழுவரையும் வென்றான் (புறநா.76). தோற்ற எழுவரும்

ஓடிச் சென்று சோழ நாட்டிற் புகும்போதும் இவன் விடாதுபின் தொடர்ந்து சென்று தலையாலங்கானத்து மறித்து நின்று பெரும் போர் நடத்தி வெற்றி பெற்றான். இடைக்குன்றூர்க் கிழாரால் பாடல் பெற்றவன். இவன் பாடிய புறப்பாடல்:

"நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய புலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே" (புறநா.72).

**நெடுஞ்சேரலாதன்** *neḍu-ñ-jēral-ādaṉ,* பெ. (n.) கழக (சங்க)க்கால இலக்கியங்களில் ஒன்றான பதிற்றுப்பத்தினுள் இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவன்; the Sērā king, celebrated in the second section of Padiṟṟu-p-pattu.

*[நெடுமை + சேரல் + ஆதன்]*

சாரல் என்பதன் திரிபு சேரல்> சேரன் எனச் சிலர் கூறுவர். ஆயின் 'சேர்ப்பன்' என்று துறைமுகத்தலைவனைக் கருப்பொருள் பட்டியலில் நம்பியகப் பொருள் சேர்ப்பதால், சேர்ப்பு, சேரல் என்பன துறைமுகத்தைக் குறிக்கும். அதன்வழி சேரல் > சேரன். சேரல் + அம் = சேரலம் > கேரளம் திரிபு பெற்றிருத்தல் அறியலாம்.

**நெடுஞ்சேரலாதன்**

இவனை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், குடவர்கோமான் நெடுஞ்சேரலாதன் என்பர். இவன் உதியஞ்சேரல் என்னும் வேந்தனுக்கு வெளியன் வேண்மான் மகள் நல்லினியிடம் பிறந்தவன். இவன் இமயம் வரையிற் படையெடுத்துச் சென்று, அம் மலையிலே தன் கொடியை நாட்டினான் (எழுதினான்) என்பதினால், இவனை இமயவரம்பன் என்பர். இவன் தமிழகம் முழுமையையும் ஆண்டான். யவன அரசரைப் போரிற் பிடித்து, அவர்கள் கையைப் பின்கட்டாகக் கட்டி, நெய்யை அவர்கள் தலையிற் பெய்து கொணர்ந்தான் என்றும், மாற்று அரசரிடம் விலையுயர்ந்த அணிகளையும் வயிரங்களையும் திறையாகப் பெற்று, அவற்றைத் தன் வஞ்சியிலுள்ளார்க்குக் கொடுத்தான் என்றும் பதிற்றுப்பத்துக் கூறுகிறது.

இவனுக்கு நற்சோணையிடம் பிறந்த மக்கள் செங்குட்டுவனும் இளங்கோவடிகளும் ஆவர். இவனுடைய மற்றொரு மனைவியான பதுமன் மகளுக்குப் பிறந்த மக்கள் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனு மாவர்.

சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் என்னும் புலவர் பாடிய பத்துச் செய்யுட்கள் பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாக அமைந்துள்ளது. இவன் குமட்டூர்க் கண்ணனார்க்கு உம்பற்காடு என்னும் பகுதியில் 500 ஊர்கள் கொடுத்ததாகவும், தென்னாட்டு வருவாயில் ஒரு பகுதியும் அளித்த தாகவும் 58 ஆண்டுகள் அரசாண்டதாகவும் பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுகிறது.

"மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மான் நல்லினி யீன்றமகன்
அமைவர லருவி யிமையம் விற்பொறித்
திமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோ னிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபி னாரியர் வணக்கி
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறன் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்றாள்
இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதன்"
(பதிற்றுப். இரண்டாம். பதி.).

**நெடுஞ்சேவிகம்** *neḍu-ñ-jēvigam,* பெ. (n.) பனைமரம்; palmyra tree-Borassus flabellifer. (சா.அக.)

**நெடுஞ்சொல்** *neḍu-ñ-jol,* பெ. (n.) புகழ், புகழ்ச்சொல் (கீர்த்தி) (வின்.) ; fame, renown.

*[நெடும் + சொல்]*

**நெடுத்தல்** *neḍuttal,* பெ. (n.) நீண்டுவளர்கை; growing tall. (சா.அக.).

மறுவ. நெடுநெடுத்தல்

*[நெடு → நெடுத்தல்]*

**நெடுந்தகை** *neḍu-n-dagai,* பெ. (n.) 1. பெரிய மேம்பாடுள்ளவன்; person of great worth. *"நேராரம் பூண்ட நெடுந்தகை"* (பு.வெ.3:11). *"நெடுந்தகை நின்று நோக்க நீள் கடற் பிறந்த கோல"* (சீவக. 1290). *"நீறுபட்டேயொளி காட்டும் பொன் மேனி நெடுந்த கையே"* (திருவாசக. நீத்தல். 11.). 2. பெரிய நிலையை யுடையவன்; person of great status. *"மொய்யிணாப் பூப்பெய் தெரியல் நெடுந்தகை"* (பு.வெ. 4:19). 3. அளத்தற்கரிய தன்மையை யுடையவன்; person of great quality. *"வெய்ய அடுந்திறல் ஆழி அரவணை யாய் என்றும் நெடுந்தகை நின்னையே யாம்"* (பு.வெ. 9:3).

*[நெடு → நெடும் + தகை. தகை = தகைமையானவன், உயர்ந்தவன்]*

**நெடுந்தகைமை** *neḍu-n-dagaimai,* பெ. (n.) மேம்பாடு, பெருந்தகைமை; greatness, nobility.

*[நெடும் + தகைமை. தகைமை = தகுதி, பெருமை, குணம், மதிப்பு, அழகு, ஒழுங்கு]*

**நெடுந்தட்டு** *neḍu-n-daṭṭu,* பெ.(n.) 1. வானில் பறக்கவிடும் தாள்பட்டவகை (வின்.); a kind of paper-kite. *பையன்கள் மாடியில் நின்று நெடுந்தட்டு விடுகின்றனர்.* 2. பொறுக்க முடியாதது; that which is unendurable. *"ருசியுடை யாரிழக்கை நெடுந்தட்டு"* (திவ்.திருப்பா.5, வியா.பக்.88).

*[நெடும் + தட்டு. தட்டு = தட்டு போன்ற பட்டம்.]*

**நெடுந்தாயம்** *neḍu-n-dāyam,* பெ. (n.) அடுத்து ஆடும்படி விழுந்தாயம் (வின்.); a winning cast of dice, as giving the right to throw again.

*[நெடும் + தாயம். தாயம் = கவறுருட்ட விழும் ஒன்று என்னும் எண். ஒன்று விழுந்தால்தான் காயை இறக்கி விளையாட்டைத் தொடரமுடியும். ஐந்து, ஆறு, பன்னிரண்டு எண் விழுந்தால் மறுபடி ஆட்டம் உண்டு.]*

**நெடுந்தாழ்ப்பாள்** *neḍu-n-dāḻppāḷ,* பெ. (n.) கதவுக்கிடும் கணையமரம் (வின்.); long wooden bar for a door.

*[நெடும் + தாழ்ப்பாள். கதவுக்குத் தடையாக குறுக்கேயிடும் மரம்]*

**நெடுந்துயில்** *neḍu-n-duyil,* பெ. (n.) 1. நீண்ட தூக்கம்; long sleep. *பையன் வேலை செய்த களைப்பால் நெடுந்துயில் கொண்டுவிட்டான்.* 2. இறப்பு (யாழ்.அக.); death. *தாத்தா நெடுந்துயில் கொண்டு நீண்ட நேரம் ஆயிற்று.*

*[நெடும் + துயில். துயில் = தூக்கம், சாவு]*

**நெடுந்துருத்தி** *neḍu-n-durutti,* பெ. (n.) நீளமான நீர்வீசுங் கருவி வகை (சீவக.86, உரை); a long squirt. *தோட்டத்துக்கு நீர்ப்பாய்ச்ச வேண்டும், ஒரு நெடுந்துருத்தி வாங்கி வா.*

*[நெடும் + துருத்தி. துருத்தி = நீர்விசுங் கருவி, தோற்பை, தோல்]*

**நெடுந்தூக்கு** *neḍu-n-dūkku,* பெ. (n.) தூக்கு ஏழனுள் எழுசீர் கொண்டது (சிலப்.3:16,

அரும்); a measure of time, composed of seven sir, one of seven *tūkku*.

*[நெடும் + தூக்கு. தூக்கு = செய்யுள், பாக்களைத் துணித்து நிறுக்குஞ் செய்யுளுறுப்பு; இசை, தாளம், இரண்டு மாத்திரைக் காலம்]*

செந்தூக்கு, மதலைத்தூக்கு, துணிவுத்தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத் தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கு என்னும் எழுவகைத் தாளத்தில் (தூக்கில்) ஒன்று இரண்டு மாத்திரைக்காலம் ஓசையுடையது.

எ–டு.

"வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினா லிளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
நேருறக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னிகளா யேழைக ளாய்நெஞ்
சிளைத்தவர் தமைக்கண்டே யிளைத்தேன்"
(அருட்பா. 203)

"வானுறு மதியை யடைந்ததுன் தட்பம்
மறிகடல் புகுந்ததுன் பெருமை
கானுறு புலியை யடைந்ததுன் சீற்றங்
கற்பக மடைந்ததுன் கொடைகள்
தேனுறு மலரா ளரியிடம் புகுந்தாள்
செந்தழ லடைந்ததுன் மேனி
யானு மென்கலியு மெவ்விடம் புகுவோம்
நந்தியே யெந்தை பிரானே!"
(நந்தி. கலம்,22)

"கடல்கலவு நிலயமிசை மகளிரகல்
குறியினொரு
கடலைவழி வளுவளென வருமனிதரைக்
கடவுள்சுத ரெனுமிழிவு புரைவொரு
குறைவிழிவு
கழறவழி யெவளவுமில் கடவுண்மகனாய்
மிடன்மகிமை யொளிவடிவ மிளிரவெளி
வருமுருகை
விகிர்தமற வெனதுமன நினைநிலைமையால்
நடலைகெட வவலநசை யுழலைகெட
விதலைகெட
நவிலரிய பரமசுக மதையடைவனே"
(குமரகுரு. பா. 56:1)

"பைந்துளவ மவுலியும யனுமிமைய வருநறிய
பனிமலர்கள் கொடுபுசனை புரிபவளர்தே
உய்ந்திடவுள் கிருடிகண லுபநிடத மவுனமுள
ருயர் மகிமை யுடையவர்க ணினைவிலுளகோ
ஐந்துமுக னுருவினிட மிளிரமலை
முருகனெனு
மருளிறையென் மனமதனி லுளளினியரோ
நைந்தொழியு மறமுழுது முதியமல வலியழிவு
நடுவுடைய நமனுருமும் வருவதிலையே"
(குமரகுரு. பா, 56:4)

"ஆறுதலை வைத்தமுடி நீணிலவெ
றிப்பவெமை
யாளுடைய பச்சை மயிலோ
டேறுமுத லற்றமது ராபுரியி லுற்றபர
மேசரொரு சற்று முணரார்
நீறுபடு துட்டமதன் வேறுருவெ டுத்தலரி
னீள்சிலைகு னித்து வழிதே
னூறுகணை தொட்டு வெளி
யேசமர்வி ளைப்பதுமென்
னூழ்வினைப லித்த துவுமே"
(மதுரைக்கலம். 19)

**நெடுந்தூரம்** *neḍu-n-dūram,* பெ. (n.) நீண்டதொலைவு; great distance, long way. *நெடுந்தூரம் நடந்த களைப்பால் கண்ணயர்ந்து விட்டான்.*

*[நெடும் + தூரம்.* Skt. *தூர > த – தூரம் = தொலைவு]*

**நெடுந்தெய்வம்** *neḍu-n-deyvam,* பெ. (n.) பெருமையும் புகழும் வாய்ந்த தெய்வம்; great deity. *"நீங்கிய தாங்கு நெடுந்தெய்வந் தானெனன்"* (மணிமே.10:93). *நெடுந்தெய்வக் கோயிலுக்குச் சென்று வந்தால் தீராத துன்பம் எல்லாம் தீரும்.*

*[நெடும் + தெய்வம்]*

**நெடுந்தெரு** *neḍu-n-deru,* பெ. (n.) 1. அங்காடிகள் நிறைந்த தெரு; bazaar street. *நெடுந்தெருவில்தான் ஒரு கடை வைக்க வேண்டும்.* 2. பெரியதெரு; main street, high road. *நெடுந்தெருவில் தான் அவன் வீடு உள்ளது. "பொன்னெடுந்தெரு விடை"* (கம்பரா. நகர்நீங்கு. 187).

*[நெடும் + தெரு]*

**நெடுந்தொகை** *nedu-n-dogai,* பெ. (n.) நெடுந்தொகை நானூறு (பன்னிருபா.159) பார்க்க; see *nedu-n-dogai-nāṉūṟu.*

*[நெடும் + தொகை. தொகை = தொகுத்த நூல்]*

**நெடுந்தொகைநானூறு** *nedu-n-dogai-nāṉūṟu,* பெ. (n.) நானூறு, நீண்ட பாடல்களைக் கொண்ட அகநானூறு (இறை,1, பக்.5); the poem Aganāṉūṟu, as being a collection of 400 lengthy stanzas.

**மறுவ.** அகநானூறு

*[நெடுந்தொகை + நானூறு]*

குறுந்தொகை 4 முதல் 8 அடிவரையும் நற்றிணை (நட்டினை) 9 முதல் 12 அடிவரையும் அமைந்த பாடல் கொண்டவை. அகநானூறு 13 முதல் 31 அடிவரை வருவதால் நெடுந்தொகை என்று பெயர் பெற்றது. அகநாறூற்றுக்கு மேல் குறிஞ்சிப்பாட்டு 103 அடி முதலாக மதுரைக்காஞ்சி 753 அடிவரை அமைந்தவைப் பத்துப்பாட்டு ஆயின.

**நெடுந்தொகை நானூறு என்னும் அகநானூறு:**

'அகம்' என்ற பெயரமைந்த பழைய இலக்கிய நூல் இஃது ஒன்றேயாகும். இது பல்வேறு புலவர்களால் இயற்றப்பட்ட நானூறு பாடல்களைக் கொண்டது. மதுரை உப்பூரி குடிக்கிழார் மகனார் உருத்திரசன்மனார் இப்பாடல்களைத் தொகுத்தார். கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். சிவ பெருமானைப் பற்றிய பாடல் இது. அகநானூறு, அகம் பற்றிய எட்டுத்தொகை நூல்களில் நீட்சி உடையதாகையால் 'நெடுந்தொகை' எனவும் வழங்குகிறது. அகநானூறு மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற் பகுதியான களிற்றி யானை நிரை, முதல் நூற்றிருபது பாடல்களைக் கொண்டது. அடுத்த பகுதியான மணிமிடைப் பவளம், அடுத்த நூற்றெண்பது பாடல்களைக் கொண்டது. இறுதிப் பகுதியான நித்திலக் கோவை, இறுதி நூறு பாடல்களைக் கொண்டது. பாடிய புலவர் நூற்று நாற்பத்தைவர். சிற்றெல்லையாக 13 அடிகளையும், பேரெல்லை யாக 31 அடிகளையும் இந்நூல் கொண்டுள்ளது. இந்நூலைத் தொகுப்பித்தோன் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. அகநானூற்றுப் பாடல்கள் ஓர் ஒழுங்கு முறையினை அடிப்படையாகக் கொண்டே கோக்கப்பட்டுள்ளன.

1, 3, 5, 7, 9 முதலான ஒற்றை எண்பெற்ற பாடல்கள் பாலைத் திணையாகவும், 2, 8, 12 முதலான (இரண்டும் எட்டுமான) எண் பெற்றவை குறிஞ்சித் திணையாகவும், 14 என நான்கை ஒட்டிய எண் பெற்றவை முல்லைத் திணையாகவும், 6, 16 முதலான ஆறு எண் பெற்றவை மருதத் திணையாகவும், 10, 20 எனப் பத்துகளாலாய எண் பெற்றவை நெய்தல் திணையாகவும் கோக்கப்பட்டுள்ளன.

பல அழகிய அகப்பாடல்களைக் கொண்டது அகநானூறு.

குழந்தையின் அழகினை வருணனை முகத்தான் கழகக் காலப் புலவர் பின் வருமாறு இனிதுற வடித்திருக்கக் காணலாம்.

"நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதின் அல்லி அயலிதழ் புரையும்
மாசில் அங்கை மணிமருள் அவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப்
புதல்வன்" – (அகம் 9)

'செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி
இன்றுவால் உரைமோ சென்றிசினோர்
திறத்து என
இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென
மழலை இன்சொல் பயிற்றும்
நாணுடை அரிவை......................' –
(அகநா. 34)

போன்ற பகுதிகள் இலக்கிய வானில் இணையற்று எஞ்ஞான்றும் ஒளிவீசித் திகழ்கின்றன. இவை முதல் பகுதியான களிற்றி யானை நிரையில் உள்ளவை.

தித்தன், நன்னன், பிட்டன், பண்ணன், கோசர், மோரியர், பாரி, காரி, கொடித்தேர்ச் செழியன், அத்தி, கங்கன், கட்டி, புல்லி முதலியவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளை நாம் அகநானூற்றில் காண்கிறோம். மக்கட் பேற்றின் சிறப்பினைச் சில பாடல்கள் எடுத்தியம்புகின்றன. ஐந்து நிலங்களின் வண்ணனை பொருத்தமுற, அழகுற, படிப்பவர் மனத்திரையில் காட்சிகளை விரிக்கின்ற அளவுக்குப் படம் தீட்டிக் காட்டப்படுகின்றன. நல்ல உவமைகளும், உள்ளுறைப் பொருள்களும் ஆங்காங்கே விரவி வரக் காண்கிறோம். புலவர்கள் ஒருவர்பால் மற்றொருவர் கொண்ட மதிப்பினைக் கண்டு வியக்கிறோம்! குடவோலை மூலம் நாட்டுக்கு வேண்டிய நல்லவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையை ஓர் அகப்பாடல் விளக்குகிறது. ஆதிமந்தியார் என்னும் பெண்பாற்புலவர் பேதுற்று அலைந்த காட்சியை ஒரு புலவர் குறிப்பிடுகிறார். திருமணம் அக் காலத்தில் எவ்வாறு நிகழ்ந்தது என்பதை நாம் அறிய

வேண்டுமானால், அகநானூற்றில் அமைந்துள்ள நல்லாவூர் கிழாரின் பாடலையே நாட வேண்டியுள்ளது. இவ்வாறு பல வகைச் சிறப்புகளையும் கொண்டு திகழ்கிறது அகநானூறு என்னும் நெடுந்தொகை நானூறு.

**நெடுந்தோட்டி** *neḍu-n-dōṭṭi,* பெ. (n.) பெரிய துறட்டி (அங்குசம்) (சீவக.1835, உரை); a large goad.

*[நெடும் + தோட்டி. தோட்டி = துறட்டி, கூரிய கருவி]*



**நெடுநல்வாடை** *neḍu-nal-vāḍai,* பெ. (n.) தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மேல் நக்கீரனாரால் பாடப்பட்டதும் கழக (சங்க) இலக்கியமான பத்துப்பாட்டினுள் ஏழாவதுமான பாட்டு; the seventh ode of Pattu-p-pāṭṭu by Nakkiraṉār, celebrating Neḍu-ñ-jeḻiyaṉ of Talaiyālaṅgāṉam fame.

*[நெடும் + நல்வாடை. நீண்ட நல்வாடை]*

நெடுநல்வாடை

இது 'கோல நெடுநல்வாடை' என்று சிறப்பிக்கப் பெறும் எட்டுத்தொகை நூல்; 188 அடிகளைக் கொண்டது; ஆசிரியப் பாவால் அமைந்தது; பகைமேற் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு அவ்வருத்தம் நீங்கும் பொருட்டு அவன் பகையை வென்று விரைவில் வருவானாக என்று கொற்றவையைப் பரவும் பெண் கூறுவதாக உள்ளது.

நெடுநல்வாடை என்பது நெடிதாகிய வாடை என விரியும். தலைவனைப் பிரிந்து வருந்தி வாடும் தலைவிக்கு ஒரு பொழுது ஓரூழியைப்போல் நெடிதாகிய வாடையாகவும், அரசன் இன்பத்தில் மனமற்று வேற்றுப்புலத்துப் போந்திருந்த இருப்பு அவனுக்கு வெற்றியைத் தரும் ஆகலின் அவனுக்கு நல்லது ஆகிய வாடையாகவும் ஆனமையின் 'நெடுநல்வாடை' எனப் பெற்றது.

நெடுநல்வாடை, சுட்டி ஒருவர்ப் பெயர் கொள்ளாமையின் அகப்பொருளாமேனும், "வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகம்" என வேந்தனது அடையாளப் பூவாகிய வேம்பைக் கூறினமையின் அகம் ஆகாது புறனே யாயிற்று; கூதிர்ப்பாசறை கூறுதலின் வாகைத்திணை யாயிற்று; கொற்றவை நிலை கூறுதலின் வஞ்சியின் தொடர்புண்டு. நெடுநல்வாடையின் 188 அடிகளில் முதல் எழுபத்திரண்டடிகளில் கூதிர்காலத்தியல்பும், அடுத்து நாற்பத்திரண்டடிகளில் கோயிலும், கோயிலுள் ஆடவர் குறுகா அருங்கடி வைப்புகளும், அவற்றுள் தலைவியிருக்கும் இல்லமும், அடுத்த இருபத்தோரடிகளில் தலைவி யமர்ந்திருக்கும் யானையின் கொம்பாலாகிய (தந்தக்) கட்டிலும் சேக்கையும், அடுத்த 31 அடிகளில் தலைவி வருத்தத்துடன் இருக்கும் இயல்பும், பின் இரண்டடிகளில் கொற்றவையை வேண்டிக் கோடலும், இறுதியிலுள்ள இருபதடிகளில் தலைவன் பாசறை யிருப்பும் கூறப்பெற்றுள்ளன.

இப்பாடலில் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் இயல்பு, பாசறையில் இருந்த மன்னனின் திறமும் சிறப்பாகக் கூறப்படுகிறது. மற்றும் கூதிர்க்காலத்தில் குளிர் மிகுதியால் ஆக்கள் கன்றுக்குப் பால் கொடாமல் உதைக்கும்; இடையர்கள் குளிர்ச்சி மிகுதியால் கையை நெருப்பிலே காய்ச்சி அதிற் கொண்ட வெம்மையைக் கன்னத்தில் படுத்துவர்.

"ஆரந்தாங்கிய அலர் முலையாகத்து, பின்னமை நெடுவீழ் தாழ" என்ற அடிகளில் நெடுவீழ் என்பதற்கு 'நெடியதாலி' என்று நச்சினார்க்கினியர் பொருள் தருவதால், தாலிகட்டும் மரபு இருந்தது அறியப்படும். வீழ் என்பதை மயில் என்பாரும் உளர்.

"தாம்வீழ்வார் மென்தோல் துயிலின் இனிது கொல்" (குறள், 1103). இக்குறளில் 'வீழ்' என்பது விரும்பற் பொருளில் வந்துள்ளது காண்க. விரும்பத்தக்கவை மயிலும், தாலியுமாகலாம்.

அரச மாளிகையைப்பற்றிய செய்திகள் கூறப் படுகின்றன. மாளிகையின் கதவுகளில் துருப்பிடிக் காதபடி சாதிலிங்கம் பூசப் பெற்ற இருப்புக் கதவுகள்

பொருத்தப்பட்டிருக்கும் நிலாமுற்றம் உண்டு. யவனர் இயற்றிய தொழில் மாட்சிமைப்பட்ட பாவை விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும். தலைவி பள்ளி கொள்ளும் யானை மருப்பாலான கட்டில், வாயில் நிலை, கதவம், முதலியவற்றின் நுட்பமமைந்த தொழிற்றிறங்களால் அக்காலத்துத் தொழில் திறனை அறியலாம். அன்றியும் அக்காலத்து மக்களின் வானநூற் புலமையையும் மனை நூற் புலமையையும் இந்நூல் தெள்ளிதின் விளக்கும்.

விலங்குகள் மேயுந்தொழிலை மறந்தன; மரத்திலுள்ள பறவைகள் கீழே வீழ்ந்தன; ஆக்கள் கன்றை உதைத்துக் கடிந்தன; குன்றையுங் குளிர்விக்கும் நடுயாமத்தில் முசுண்டைக்கொடியும் பீர்க்கும் தூறுகள் தோறும் மலர்ந்தன; கொக்குக்களும் நாரைகளும் ஈரமணலி லிருந்து கவரும்படி கயல் மீன்கள், அற்ற நீரில் எதிரே வந்தன; மேகங்கள் சிறிய துளிகளைத் தூற்றின; வயல்களில் நெற்கதிர்கள் வளைந்தன; கமுகமரங் களிற் பாக்குகள்முற்றின; பொழில்களில் மழைத்துளி கள் மாறமல் வீழ்ந்தன; மாடங்கள் உயர்ந்த ஊர் களிலுள்ள வீதிகளில் முறுக்குண்ட உடம்பினராகிய மாக்கள் கள்ளையுண்டு களித்து மழைத்துளிக்கு அஞ்சாமல் திரிந்தார்கள்; அழகிய கையையுடைய மகளிர் பூந்தட்டிலே இட்டு வைத்த பிச்சி மலர்கள் அலர்ந்தன; அவற்றின் அலர்ச்சியால் மாலைக் காலத்தின் வருகையை அம்மகளிர் அறிந்து விளக்கையேற்றி நெல்லையும் மலரையும் தூவித் தெய்வத்தைத் தொழுது மாலைக்காலத்தைக் கொண்டாடினார்கள்; வீட்டில் இருக்கும் புறாச்சேவல் பெடைகளோடு மன்றங்களிற்சென்று இரைதேடி உண்ணாமல் இரவும் பகலும் மயங்கிக் கொடுங்கையைத் தாங்கும் பலகைகளில் இருந்தன; சந்தனம் முதலியவற்றை அரைப்பதற்காக வடநாட்டிலுள்ளாரிடமிருந்து பெற்ற சந்தனக்கல்லும் தென்றிசையிற்பெற்ற சந்தனக் கட்டையும் பயனற்றுக் கிடந்தன; மகளிர் தம் கூந்தலில் மாலைகளை முடியாமல் சில மலர்களை மட்டும் வைத்து முடிக்க விரும்பிக் கூந்தலைப் புலர்த்துதற்கு அகிற்புகையை உண்டாக்கினர்; விசிறிகள் உறைகளிலே இடப்பெற்றுச் சிலந்தி கூடு கட்டும்படி முளையிலே தூங்கின; உயர்ந்த மாடங்களின் மேல்நிலையில் வேனிற்காலத்தில் தென்றல் வரும் சாளரங்களின் கதவுகள் தாழிட்டுக்கிடந்தன. எங்கும் மழைத் தூளி தூற்றப்படுவதனால் எல்லோரும் தண்ணீரை அருந்தாமல் தூபமுட்டியிலுள்ள நெருப்பின் வெம்மையை நுகர்ந்தனர்; ஆடல் மகளிர் பாடுதற்காகக் குளிர்ச்சியால் நிலைகுலைந்த யாழ் நரம்பைத் தம் மார்பிற்றடவி அங்குள்ள வெப்பத் தினால் பண்ணை முறைப்பட நிறுத்தினர்; கணவரைப் பிரிந்த மகளிர் வருந்தினர்; மழை நிறைந்தது; இவ்வாறு கூதிர்க்காலம் நிலை பெற்றது.

தலைவியிருக்கும் இவ்வரண்மனை, நல்ல வேளையிற் சிற்பநூலறிந்தார் நூலைப்பிடித்துத் திசைகளைக் குறித்துக்கொண்டு அத்திசைகளிலுள்ள தெய்வங்களையும் ஆராய்ந்தறிந்து பெரிய அரசருக்குத் தக மனையை வகுத்து அமைத்த மதிலையுடையது; பருத்த இரும்பாலே கட்டிச் சாதிலிங்கத்தைப் பூசி இரட்டைக் கதவு களையமைத்து, உத்தரக் கற்கவியிலே குவளைப்பூக்களும் பெண்யானைகளுமாகிய சித்திரங் களையமைத்து, கைத்தொழில்வல்ல தச்சன் இயைத்தனாற் குற்றமற்று விளங்குவனவும், சிறுகடுகை யப்பிநெய்யையணிந்த நெடியநிலையினை யுடையனவும், கொடியோடுயானை புகத்தக்க உயர்ச்சியை யுடையனவுமாகிய வாயில்களையுடையது; திருமகள் நிலைபெற்ற சிறப்பினையுடையது; மணல்பரந்த முற்றத்தையும் கவரிமான், அன்னம் என்பன திரியும் வாசல்முன் பினையும் உடையது. அங்கே, குதிரைகள் புல்லுணவைக் குதட்டும் ஓசையோடே நிலாமுற்றத்திலிருந்து வந்துவிழும் மழைநீர்த்தாரையின் ஓசையும் கலந்து மலையின் ஆரவாரம்போல ஒலிக்கும். இதனுள்ளேயுள்ள அந்தப்புரத்தில் சிலமகளிர் யவனர் இயற்றிய பாவைவிளக்கில் நிறைய நெய்யைச் சொரிந்து விளக்கு ஒளிமழுங்கும்போதெல்லாம் நெய்யை வார்த்துத் தூண்டி இருள்நீங்கச் செய்வார்கள். அவ்விடம் பாண்டியனன்றிப் பிற ஆண்மக்கள் அணுகாத காவலையுடையது; மலைகளைப் போன்ற உயர்ச்சியையும் இந்திரவில்லைப்போன்ற கொடி களையும் நீலமணியைப்போன்ற கருமை யையுடைய திரண்ட தூண்களையும் கொண்டுள்ளது; செம்பினாற் பண்ணினாலொத்த சுவர்களில் ஒருகொடி எழுதப்பெற்றது. அதனுள் தலைவி ஒரு பெரிய வட்டக்கட்டிலிற் படுத்திருக் கின்றாள். அக்கட்டில், நாற்பது அகவை (பிராயத்தை)யுடையதும் போரிற் பொருதுபட்டதுமாகிய யானையின் கொம்பை வெட்டிக் கனமும் செம்மையும் ஒப்பத் தச்சன் உளியாலே இயற்றி இலைத்தொழிலை இடையே அமைத்த திரண்ட குடங்களையும் உள்ளிப்புட்டிலைப்போன்ற அடியினையும் உடையது. அதில் முத்தையுடைய சாளரங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. புலிவடிவம் பொறித்த பூத்தொழிலை யுடைய கச்சுக்கள் இடமறையும்படி கட்டப்பட்டிருக் கின்றன. நிறம் ஊட்டப்பெற்ற பலசேணங்களை விரவவைத்து மான்வேட்டம் எழுதி முல்லை முதலிய மலர்களை நிரைத்து மெல்லிதாக விரித்த படுக்கை இடப்பட்டிருக்கிறது; அதன்மேல் அன்னத்தின் தூவியைப் பரப்பி அணைகளையிட்டுவைத்துத் துகில்களில் தூயவற்றை விரித்த பாயலில் அவள் இருக்கின்றனள். முன்பு முத்துமாலையை அணிந்திருந்த அவளுடைய மார்பில் தாலி

நாணொன்றுமே தாழ்ந்திருக்கிறது; தன் கணவன் பிரிந்தமையினால் நெற்றியினிடத்து உலறிக்கிடந்த சிலவாகிய அளகத்தையும், குழைகளைக் களைந்து தாளுருவியை அழுத்தினகாதையும் உடையவளாய், பொன்னாலாகிய தொடியை அணிந்திருந்த கைகளிற் சங்குவளையை அணிந்து, காப்பு நாணைக்கட்டிக் கொண்டு, முடக்கென்னும் விரற்செறியை (மோதிரத்தை)யும் பூத்தொழிலையுடைய ஆடை உடுக்கப் பெற்றிருந்த இடையில் மாசேறி விளங்கிய நூற்புடைவையையும் உடையளாய் வண்ணங் கொண்டெழுதாத சித்திரத்தைப் போலத் தோன்று கின்றனள். அழகிய மகளிர் துயிலச் செய்தற்கு எண்ணித் தன் அடியை மெல்ல வருடவும், செவிலியர்கள் குறியவும் நெடியவுமாகிய பொய்யும் மெய்யுங்கலந்த மொழிகளைப் பலகாற் சொல்லி, "இப்பொழுதே நின்காதலர் வருவார்" எனக்கூறவும் அவள் மனம் பொருந்தாளாயினுள்; மிக வருந்து கின்றாள்; கட்டிலின் மேற்கட்டியில் எழுதியுள்ள பன்னிரண்டு ஓரைகளில் (ராசிகளில்), சந்திரனோடு உள்ள உரோகிணியைப் பார்த்துத் தானும் அவ்வாறு தன் கணவனோடு இருக்கப் பெறாமையை நினைந்து நெட்டுயிர்ப்புக் கொண்டு கண்ணில் துளித்த நீர்த்துளிகளைத் தன்கைவிரலாற் கடைக்கண்களிற் சேர்த்தித் தெறித்துத் தனிமையாய் இருக்கின்றாள். இத்தகைய அன்புடைய தலைவிக்குத் தீதாயிருக்கின்றன ஆற்றுதற்கரிய துன்ப நினைவு தீரும்படி தலைவன் வருவானாக.

பாசறையிலுள்ள தலைவன் போர்க்களத்தே துதிக்கைகள் நிலத்திற் புரளும்படி களிறுகளைக் கொன்ற வீரருடைய விழுப்புண்ணைக் காணக்கருதித் தானிருக்கும் இடத்திற்குப் புறம்பே வந்து வாடைக்காற்று அடிக்குந்தோறும் விளக்கிலெரிகின்ற சுடர்கள் தென்றிசை நோக்கிச் சாய்ந்த தலையினை யுடையன வாய் எரியா நிற்க வேப்பமாலையைத் தலையிற் கட்டிய வேலோடே முன்னேசெல்கின்ற சேனாபதிவீரர்களைமுறையே தனக்குக்காட்டிக் கொண்டுவரத் தன் தோளினின்றும் நழுவி வீழ்கின்ற உடையை இடப்பக்கத்தே தழுவிக்கொண்டு வாளையுடைய வீரனது தோளில் வலக்கையை வைத்தவனாகி முகமலர்ச்சியோடு வந்து மாலையையுடைய கொற்றக்குடை மழைத்துளியை மறைக்க நடுயாமத்திலும் படுத்துறங்காமற் சில வீரர்களோடு புண்பட்ட வீரர்களைப் பார்த்துத் திரியா நிற்பான். அத்தகைய வேந்தன் பாசறையிடத்திலிருந்து பலரோடு செய்யும் போர்த்தொழில் அவனுக்கு வெற்றியைக் கொடுத்து இப்பொழுதே முடிவதாக. (உ.வே.சா.)

*"வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப்*
*பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென*
*ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்*
*ஏறுடை யினநிரை வேறுபுலம் பரப்பிப்*
*புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோடல்*
*நீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ*
*மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்*
*கைக்கொள்கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க*
*மாமேயன் மறப்ப மந்தி கூரப்*
*பறவை படிவன வீழக் கறவை*
*கன்றுகோ ளொழியக் கடிய வீசிக்*
*குன்றுகுளிர்ப் பன்ன கூதிர்ப் பானாள்."*

(நெடுநல்.1–12)

**நெடுநாக்கு** *nedu-nākku,* பெ. (n.) மங்கல் நிறமுள்ள கடல்மீன் வகை; sea - fish, brownish.

*[நெடும் + நாக்கு. நீண்ட நாக்கும் மங்கலான நிறமும் உடைய கடல் மீன்வகை]*



**நெடுநாக்குப்பூச்சி** *nedu-nākku-p-pūcci,* பெ. (n.) நாக்குப்பூச்சி வகை (M.L.) ; round nematoid intestinal worm.

*[நெடும் + நாக்குப்பூச்சி. நீண்ட நாக்குப்பூச்சி வகை]*

**நெடுநாட்சுரம்** *nedu-nāṭšuram,* பெ. (n.) நீண்ட நாளாகத் தொடரும் காய்ச்சல்; long continued fever chronic fever. (சா.அக.).

*[நெடுநாள் + சுரம்]*

**நெடுநாட்டு** *neḍu-nāṭṭu,* பெ. (n.) ஒருவகைப் பெரு மரம் (L.) ; Tranvancore lance wood.

**மறுவ.** கானக்கைதை

**நெடுநாட்பழக்கம்** *neḍu-nāṭ-paḻakkam,* பெ. (n.) *நெடும்பழக்கம்* (உ.வ.) பார்க்க; see *neḍu-m-paḻakkam.*

*[நெடு + நாள் + பழக்கம்]*

**நெடுநார்** *neḍu-nār,* பெ. (n.) ஒருவகைக் காப்பிச் செடி; a kind of dooduga, Polyalthia coffeeoides. (சா.அக.).

*[நெடு + நார்]*

**நெடுநாரை[1]** *neḍu-nārai,* பெ. (n.) செந்நாரை; a kind of red stork.

*[நெடும் + நாரை]*

**நெடுநாரை[2]** *neḍu-nārai,* பெ.(n.) **1.** பெரிய மர வகை (L.); fragrant cherry-nutmeg, Polyalthia fragrans. **2.** மரவகை; Wynaad coffee cherry-nutmeg, Polyalthia coffeeoides.

**மறுவ.** கோடாஞ்சி

*[நெடும் + நாரை. நாரை = நாரை போல் வெண்மையான பெரிய மரவகை.]*

**நெடுநாவை** *neḍu-nāvai,* பெ. (n.) கலப்பையின் நீண்டகொழு(வின்.); long ploughshare. *கலப்பைக்கு நெடுநாவைப் போட வேண்டும்.*

**மறுவ.** கலப்பைக்கொழு.

*[நெடு + நாவை. நா → நாவை = கலப்பையின் கொழு நுனி.]*

**நெடுநாள்** *neḍu-nāḷ,* பெ. (n.) நெடுங்காலம் (யாழ்.அக.); long time. *நண்பனைப் பார்த்து நெடுநாள் ஆகிவிட்டது. நெடுநாள் கழித்து ஊருக்கு வந்துள்ளான்.*

**மறுவ.** நீண்டநாள்.

*[நெடு + நாள்]*

**நெடுநிகழ்ச்சி** *neḍu-nigaḻcci,* பெ. (n.) நீண்டகாலம்; long period, long duration of time, opp. to kuṟu-nigaḻcci. "*மேலுங் கற்பத் தின்னெடு நிகழ்ச்சியும்*" (மணிமே.27:192).

**மறுவ.** நெடுங்காலம்

*[நெடும் + நிகழ்ச்சி]*

**நெடுநிரை** *neḍu-nerai,* பெ. (n.) நீண்ட அணிவகுப்பு; a long battle array. "*நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன*" (பரிபா.7:7).

*[நெடும் + நிரை. நிரை = வரிசை]*

**நெடுநீட்டு** *neḍu-nīṭṭu,* பெ.(n.) **1.** மிகு தொலைவு; long distance. *நெடுநீட்டு நடந்து போக வேண்டும்.* **2.** வெகுநீளம்; great length. *நெடுநீட்டுப் பாதை. நெடுநீட்டுச் சுவர்.*

*[நெடும் + நீட்டு. நீட்டு = நீளம்]*

**நெடுநீர்** *neḍu-nīr,* பெ. (n.) **1.** அகலமான கடல் (வின்.); sea, as wide. **2.** நீட்டித்துச் செய்யும் இயல்பு; dilatoriness, disposition to procrastinate. "*நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்*" (குறள்,605).

*[நெடும் + நீர். அகலமான கடலை குறித்த நெடுநீர் என்னும் சொல் காலம் நீட்டித்துச் செய்யும் இயல்பையும் குறித்தது.]*

**நெடுநீலி** *neḍu-nīli,* பெ.(n.) **1.** செந்தாழை; false kateerah - Sterenlia urens. **2.** சிவப்புத் தாழை; fragrant screwpine - Pandanus odoratissinus. (சா.அக.).

**நெடுநீளம்** *neḍu-nīḷam,* பெ. (n.) நேர்நீளம்; straight length.

*[நெடும் + நீளம்.]*

**நெடுநெடு—த்தல்** *neḍu-neḍu-,* 4செ.கு.வி. (v.i.) *நெடுநெடுகு*—பார்க்க; *see neḍu-nedugu.*

*[நெடு + நெடு—நெடுநெடு → நெடுநெடு—த்தல்]*

**நெடுநெடுகு—தல்** *neḍu-neḍugu-,* 5செ.கு.வி. (v.i.) மிக நீண்டு அல்லது உயர்ந்து இருத்தல் (யாழ்ப்.); to be very long, tall or high. *மரம் நெடுநெடுகென வளர்ந்துள்ளது.*

*[நெடு + நெடுகு → நெடுநெடுகு—தல்]*

**நெடுநெடுவென்று** *neḍu-neḍu-v-eṉṟu,* வி.எ. (adv.) குறிப்பிடத்தக்க அளவுக்கு உயரமாக; very tall. *ஒரு மாதத்திற்குள் செடி நெடு நெடுவென்று வளர்ந்து விட்டது.*

*[நெடு + நெடு + என்று]*

**நெடுநெடெனல்**[1] *neḍu-neḍeṉal,* பெ.(n.) *நெடநெடெனல்* (திவா.) பார்க்க; see *neḍa-neḍeṉal.*

*[நெடநெடெனல் → நெடுநெடெனல்.]*

**நெடுநெடெனல்**[2] *neḍu-neḍeṉal,* பெ.(n.) வளர்ச்சிக் குறிப்பு; expr. signifying tall growth. *நெடுநெடென பையன் வளர்ந்து விட்டான்.*

*[நெடு + நெடு + எனல்]*

**நெடுநேரம்** *neḍu-nēram,* பெ. (n.) மிகுநேரம்; long time.

*[நெடும் + நேரம்]*

**நெடுநோக்கு** *neḍu-nōkku,* பெ.(n.) வருங்காலத்தில் ஏற்படக்கூடிய நலனைக் கருத்தில் கொண்ட கணிப்பு; farsightedness. *அரசியல் திட்டங்கள் நெடுநோக்குடன் தீட்டப்பட வேண்டும்.*

*[நெடும் + நோக்கு— நெடுநோக்கு = தொலைநோக்கு]*

**நெடுப்பம்** *neḍuppam,* பெ. (n.) நீளம், நீட்சி(வின்.); length, height.

**தெ.** நிடுப்பு; **ம.** நெடுப்பு.

*[நெடு → நெடுப்பு → நெடுப்பம்]*

**நெடுப்பிணை** *neḍuppiṇai,* பெ. (n.) வங்க மணல் (யாழ்.அக.); oxide of lead.

**மறுவ.** ஈயமணல்

**நெடுப்பு** *neḍuppu,* பெ. (n.) நீளிப்பு; long.

*[நெடு → நெடுப்பு]*

**நெடும்** *neḍum,* பெ.எ.(adj.) காலம் அல்லது நீளத்தைக் குறித்து வரும் நீண்ட; long in time and length. *நெடுந்தொலைவு நடக்க வேண்டி இருக்கும். நெடுங்காலத்துக்கு முந்திய கதை. நெடும் பகலுக்கும் சாயுங்காலம் உண்டு* (பழ.)

*[நெடு → நெடும்]*

**நெடும்பகை** *neḍu-m-pagai,* பெ. (n.) நீண்ட காலமாயுள்ள பகை (உ.வ.); long-cherished

enmity. *அந்தக்குடும்பத்துக்கும் இந்தக் குடும்பத்துக்கும் நெடும்பகையுள்ளது.*

ம. நெடும்பக

*[நெடும் + பகை]*

**நெடும்பயணம்** *neḍu-m-bayaṇam,* பெ. (n.) 1. நீண்ட தொலைவு செல்லுகை; long journey or voyage. *அமெரிக்காவுக்கு நெடும்பயணம் சென்று வந்தார்.* 2. இறப்பு; death. *அவன் தாத்தா நேற்று நெடும்பயணம் சென்று விட்டார்.*

*[நெடும் + பயணம். பயணம் = செலவு]*

**நெடும்பல்லியத்தனார்** *neḍu-m-palliyattaṉār,* பெ. (n.) கழகக் காலப்புலவர்; a Saṅgam poet.

*[நெடும் + பல் + இயம் + அத்து + அன் + ஆர்]*

இயம் என்பது இசைக் கருவிகளைக் குறிக்கும். இவர் பல இசைக் கருவிகளை இசைப்பதில் உள்ள வல்லமைப் பற்றி இப்பெயர் பெற்றார் போலும். இவர் தம் செய்யுளில், *"நல்யாழாகுளி பதலையொடு சுருக்கிச் சொல்லாமோ"* (புறநா.64) என்று கூறுவதும் இதனை வற்புறுத்தும். குறுந்தொகையில் (குறுந்.203) உள்ள இவர் பாடிய செய்யுளைப் பாடியவர் *'நெடும் பல்லியத்தை'* எனவும் பாட வேறுபாடுள்ளது. இவர் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியுள்ளார்.

*"மலையிடை யிட்ட நாட்டரு மல்லர்*
*மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்*
*கண்ணிற் காண நண்ணுவழி இருந்தும்*
*கடவுள் நண்ணிய பாலோர் போல*
*ஒரீஇ யொழுகும் என்னைக்குப்*
*பரியலென் மன்யான் பண்டொரு காலே"*
(குறுந்.203)

இப்பாடலில் தலைவியினது தூய தன்மையினால் பரத்தைமையுடைய தலைவன், அதிலிருந்து நீங்கி ஒழுகுவதற்கு முனிவரது தூய்மையைக் கண்டு தூய்மை யில்லாதார் அஞ்சி விலகி யொழுகுவதை இவர் உவமையாகக் கூறியுள்ளார்.

இவர் பாடிய புறநானூற்றுப் பாடல்:

*"நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கிச்*
*சொல்லா மோதில் சில்வளை விறலி*
*களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை*
*விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப்*
*பகைப்புல் மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்*
*குடுமிக் கோமாற் கண்டு*
*நெடுநீர்ப் புற்றை நீத்தனம் வரற்கே"*
(புறநா.64)

நெடும் பல்லியத்தன் என்னும் பெயர் ஆண்பாற்கும் நெடும்பல்லியத்தை யென்பது பெண்பாற்கும் வழங்கும். இப்பாட்டின் முதலடியில் யாழ், ஆகுளி, பதலை, யெனப் பல்லியங்களைத் தொகுத்துக் கூறுதலின் இவர் நெடும்பல்லியத்தனார் ஆயினாரெனக் கருதுவோரும் உளர்.

**நெடும் பல்லியத்தை** *neḍu-m-palliyattai,* பெ. (n.) கழகப் காலப் பெண்பாற் புலவர்; a woman poet in Saṅgam age.

இவர் பெயரைக் கொண்டு, பல இசைக்கருவிகளிற் பயிற்சியுடையவர் எனத் தெரிகிறது. நெடும் பல்லியத்தனார் என்னும் ஆண்பாற் புலவரும் உண்டு. தலைவி தலைவனுக்கு அரியளா யிருத்தற்கு மூன்றாம் பிறை, கண்டு தொழுவோர்க்கு அரிய தாயிருத்தலை உவமை கூறியுள்ளார். இவர் பாடியது குறுந்தொகை.178.

*"அயிரை பரந்த அந்தண் பழனத்து*
*ஏந்தெழில் மலர தூம்புடைத் திரள்கால்*
*ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்*
*இடைமுலைக் கிடந்தும் நடுங்கல் ஆனீர்*
*தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாம் நுமக்கு*
*அரியமாகிய காலைப்*
*பெரிய நோன்றனிர் நோகோ யானே"*
(குறுந்.178)

**நெடும்பழக்கம்** *neḍu-m-baḻakkam,* பெ. (n.) 1. நீண்ட வழக்கம் (அனுபவம்); extensive practice, wide experience. *அறிவியல் துறையில் அவருக்கு நெடும் பழக்கம் உண்டு.* 2. நீடித்த நட்பு; long acquaintance. *அவர் குடும்பத்துக்கும் இவர் குடும்பத்துக்கும் நெடும் பழக்கம் உள்ளது.*

*[நெடும் + பழக்கம். பழக்கம் = பயிற்சி, ஒழுக்கம்.]*

**நெடும்பழி** *nedu-m-bali,* பெ. (n.) அழியாத பழி (கம்பரா.அகலிகை.77); lasting disgrace. ***அந்தச் செயலைச் செய்ததால் அவருக்கு நெடும்பழி வந்து சேர்ந்தது. வாலியைக் மறைந்து நின்று கொன்றதால் இராமனுக்கு நெடும்பழி வந்தது.***

*[நெடும் + பழி. பழி = பழிச்சொல், வசவு, இகழ்ச்சி]*

**நெடும்பா** *nedumbā,* பெ. (n.) ஆடாதோடை (மலை.); Malabar nut.



**நெடும்பாடு** *nedu-m-bādu,* பெ. (n.) பெருங்குறைவு; serious defect. "*ஏகாவலியிலே ஒரு ரத்னங் குறைந்தாலும் நெடும் பாடாயிருக்கும்*" (திவ்.திருப்பா.30, வியா.). ***சாப்பாட்டுக்கே நாளும் நெடும்பாடாயிருக்கு.*** (உ.வ.)

*[நெடும் + பாடு. பாடு = துன்பம், குறைவு]*

**நெடும்பாதிரி** *nedu-m-pādiri,* பெ. (n.) நீண்ட பாதிரி மரம்; a tall fragrant trempt tree-Stereopermum chelonoides. (சா.அக.).

*[நெடு → நெடும் + பாதிரி]*

**நெடும்பார்வை** *nedu-m-bārvai,* பெ. (n.) நீண்ட தொலைவு பார்க்கும் ஆற்றல் (வின்.); capacity to see a long distance. ***அவனுக்கு நெடும்பார்வை உண்டு.***

*[நெடு → நெடும் + பார்வை. பார்வை = பார்க்கும் ஆற்றல்]*

**நெடும்புகழ்** *nedu-m-pugal,* பெ. (n.) பெரும்புகழ்; great fame.

*[நெடு → நெடும் + புகழ்]*

**நெடும்புடல்** *nedu-m-pudal,* பெ. (n.) நீண்ட புடலங்காய்; snake gourd (சா.அக.)

*[நெடு → நெடும் + புடல். புழல் → புடல் ஒ.நோ. கீழ்த்திசை → கீட்டிசை.]*

**நெடும்புயம்** *nedu-m-puyam,* பெ.(n.) செந்நாவிக் கிழங்கு; red aconite root. (சா.அக.).

**நெடும்புரிவிடு—தல்** *nedu-m-buri-vidu,-* 20 செ.கு.வி.(v.i.) 1. நாட்கடத்துதல்; to put off from day to day. ***கடனைக் கொடுக்காமல் நெடும்புரி விட்டுக் கொண்டே இருக்கிறான்.*** 2. பொய் புனைந்து சொல்லுதல்; to tell a false story, to give a false excuse. ***நெடும்புரி விடுவதில் அவன் பெரிய ஆள்.***

*[நெடு → நெடும் + புரி + விடு. புரிவிடுதல் = கயிறு திரிக்கப் புரியை முறுக்குவது போல் பொய்யைப் புனைந்து கூறுதல்]*

**நெடும்புழு** *nedu-m-pulu,* பெ.(n.) புழுவால் பயிரில் விழும் (பூச்சி) நோய்வகை (நாஞ்.); a disease of crops, due to worms.

*[நெடு → நெடும் + புழு]*

**நெடும்பொழுது** *nedu-m-poludu,* பெ. (n.) நெடுநேரம்; long time.

*[நெடு → நெடும் + பொழுது.]*

**நெடும்போக்கு** *neḍu-m-bōkku,* பெ. (n.) திரும்பிவரும் நோக்கம் இல்லாத செலவு (இ.வ.); going away for good, never to return. ***வீட்டில் சண்டைபோட்டுக் கொண்டு பையன் நெடும்போக்குப் போய்விட்டான்.***

*[நெடும் + போக்கு]*

**நெடுமடல்** *neḍu-maḍal,* பெ. (n.) திருநீறு வைக்கும் ஏன (பாத்திர) வகை (தெ.க. தொ.2,419); a (metallic) vessel for sacred ashes.

*[நெடும் + மடல். நீண்ட ஏன வகை]*

**நெடுமடை** *neḍu-maḍai,* பெ. (n.) வெள்ளத் தடுப்பு அணை; flood-gate.

*[நெடும் + மடை]*

**நெடுமணம்** *neḍu-maṇam,* பெ. (n.) ஒருவகைச் செய்நஞ்சு (இரசித பாடாணம்); a kind of prepared arsenic, a mineral poison of silver. (சா.அக.).

*[நெடும் + மணம்]*

**நெடுமணி** *neḍu-maṇi,* பெ. (n.) நீண்டமணி; a long bell. ***"நெடுமணி யூபத் திட்ட தவழ் நடையாமை நீணீர்"*** (சீவக.2878).

*[நெடும் + மணி]*

**நெடுமழை** *neḍu-maḻai,* பெ. (n.) பெரு மழை; heavy rain.

*[நெடும் + மழை]*

**நெடுமன்** *neḍuman,* பெ. (n.) 1. நீண்டது (இ.வ.); long. 2. நீண்ட பாம்பு (யாழ்.அக.); long snake.

*[நெடு → நெடுமன்]*

**நெடுமாந்தடி** *neḍu-mā-n-daḍi,* பெ. (n.) 1. நீளமான கழி; a long stick or staff. 2. பயனற்றவன்; a good for nothing fellow. ***ஆள் தான் நெடுமாந்தடி போல் வளர்ந்திருக்கிறானே ஒழிய, எந்த வேலைக்கும் பயன்படமாட்டான்.***

*[நெடும் + மா + தடி]*

**நெடுமால்** *neḍu-māl,* பெ. (n.) உலகை மூவடியால் அளந்த திருமால்(பிங்.); Viṣṇu. ***"நெடுமாற் கடிமை செய்வேன்போல்"*** (திவ்.திருவாய்.8.10:1).

*[நெடும் + மால். மால் = திருமால்]*

**நெடுமாறன்** *neḍu-māṟan,* பெ. (n.) நெடுமாறனாயனார் பார்க்க; see *neḍu-māṟa-nāyaṉār.*

**மறுவ.** நெல்வேலி வென்ற நெடுமாறன்

**நெடுமாறனாயனார்** *neḍu-māṟa-nāyaṉār,* பெ. (n.) திருஞானசம்பந்தர் காலத்தவரும் பாண்டியவரசரும் நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவருமான சிவனடியார் (பெரியபு.நின்றசீர்.1); a conozied Šaiva saint, Pāṇḍiyaṉ king and contemporary of Tiru-ñāṉa-šambanda-mūrtti-nāyaṉār, one of 63.

**மறுவ.** நின்றசீர் நெடுமாறன்.

ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த பாண்டிய மன்னர். 63 நாயன்மார்களில் ஒருவர். இவர் முதலில் சமணமதத்தில் இருந்தார். இவர் மனைவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் செய்த முயற்சியால் திருஞானசம்பந்தரிடம் ஈடுபட்டுச் சிவசமயத்தைத் தழுவினார். இவர் கூன்முதுக ராயிருந்து சம்பந்தர் அளித்த திருநீறு பெற்றுக் கூன் நிமிர்ந்து நெடுமாறனானார். இறையனாரகப் பொருளுரையில் காட்டப்படும் கோவையில் காணப்பெறும் அரிகேசரி இவரே யென்பர் ஆய்வாளர்கள். சேரர்களையும், குறுநில மன்னர்களான பரவர் முதலானோரையும் பாழி, செந்நிலம், நெல்வேலி முதலிய இடங்களில் வெற்றிக் கொண்டாரென்றும், ஒரு பகலிலேயே சோழருடைய உறையூரைக்

கைப்பற்றினாரென்றும் இறையனாரகப் பொருளுரை கூறும். "நிறைகொண்ட சிந்தையால், நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்" என்று திருத்தொண்டத் தொகை இவரைப் போற்றுகின்றது. இவர் ஆட்சிக்காலத்தில் தான் சீனப் பயணி கியூன்சாங் (யுவாங்சுவாங்) என்பவர் பாண்டிய நாட்டிற்கு வந்தார் என்றும், இம்மன்னரின் தந்தையின் பெயர் செழியன்சேந்தன் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

**நெடுமான்கெளிறு** *neḍumāṉ-keḷiṟu,* பெ.(n.) மீன் வகை ; a kind of fish, Arius dussumieri.

*[நெடு + மான் + கெளிறு]*

கெளிற்று மீன் என்பது தஞ்சை மாவட்ட வழக்கு.

**நெடுமானஞ்சி** *neḍumāṉañji,* பெ. (n.) கடையெழுவள்ளல்களுள் ஒருவனான (அதியமான்) அஞ்சி; Adiyamāṉ Añji, a munificant Chief of the šangam age.

மறுவ. அதியமான் நெடுமானஞ்சி

*[நெடுமான் + அஞ்சி. அச்சன் → அச்சி → அஞ்சி]*

இவன் தகடூரை ஆண்டவன். அதியர் மரபினனாதலின் அதியமான் எனவும் கூறப்பெறுவான். இயற்பெயர் அஞ்சி என்பது போலும். "*ஆர்கலி நறவினதியர் கோமான், போரடு திருவிற் பொலந்தாரஞ்சி*" (புறநா.91) என்பதாலும் இவன் இயற்பெயரை அறியலாம். குதிரை மலைக்குத் தலைவன். வேற்று நாட்டிலிருந்து கரும்பைக் கொண்டு வந்து இந்நாட்டில் பரவச் செய்தவர்கள் இவ்வஞ்சியின் முன்னோர்களே (புறநா.99). இவன் மாற்றாருக்கு அஞ்சித் தன்னினத்தோடு காட்டில் ஒளிந்திருந்தனன் என்பதை "சினமிகு முன்பின் வயமானஞ்சி யினங்கொண்டொளிக்கு மஞ்சுவரு கவலை" (அகநா.115) என்பதால் அறியலாம். அஞ்சி யொளிந்ததனால் அஞ்சியெனப்பட்டான் என்பாரும் உளர். ஔவைக்குச் சாவாமருந்தாகிய நெல்லிக் கனிதந்து புகழடைந்தான். இவன் மகன் பொகுட் டெழினி யாவான். அஞ்சி புலவர்களுக்கு வரையாது வழங்கும் வள்ளலாக விளங்கியவன். இவன் கொடைத் தன்மையை ஔவையார் பல பாடல்களில் பாடுகிறார். தருமபுரி என்னும் தகடூரை இவன் தலைநகராக் கொண்டு ஆண்டான். இவன் சேரர்க்குரியனாய் அவர்க்குரிய கண்ணியுந் தாரும் தனக்குரியவாகக் கொண்டான். மழவர் கூட்டத்துக்கும் இவனே தலைவன்; அதனால் இவன் மழவர் பெருமகன் எனப்பட்டான்.

**நெடுமி** *neḍumi,* பெ. (n.) 1. நெடியவள் (யாழ்ப்.); tall-woman. *நெடுமி வந்தாள்.* 2. ஓங்கி நீளமாக வளர்ந்த மரம் (யாழ்ப்.); tall tree, as palm-tree. 3. மழை (யாழ்.அக.); rain.

*[நெடு → நெடுமி]*

**நெடுமிசை** *neḍu-mišai,* பெ. (n.) உச்சி; top, highest point. "*மராஅத்து நெடுமிசை*" (கலித்.36:2).

*[நெடு + மிசை. மிசை = உயர்ச்சி, மேலிடம்]*

**நெடுமிடல்** *neḍu-miḍal,* பெ. (n.) 1. வலிமை மிக்கவன்; very strong man. 2. அதியமான் நெடுமானஞ்சியின் இயற்பெயர்; proper name of Adiyamāṉ-neḍumāṉañji. "*அடுபோர்க் கொற்றவ நெடுமிடல் சாய்*" (பதிற்றுப்.32:10).

*[நெடும் + மிடல். மிடல் = வலி, வலிமை]*

**நெடுமுரல்** *neḍu-mural,* பெ. (n.) நீண்ட குழல் போன்ற மீன் வகை; a kind of pipe-fish.

*[நெடு + முரல். முரல் = மீன் வகை]*



**நெடுமுழக்கச்சை** *neḍu-muḻa-k-kaccai,* பெ. (n.) 72 முழம் (36 கஜம்) அல்லது அதற்கு மேற்பட்ட கச்சைத் துணி (யாழ்ப்.); a long cloth of thirty-six yards or more to a piece.

*[நெடு + முழம் + கச்சை. கச்சை = நீளமான புதுத்துணி]*

**நெடுமுழம்** *neḍu-muḻam,* பெ. (n.) புடைவை வகை (யாழ்.அக.); a kind of saree.

*[நெடும் + முழம்]*

**நெடுமூக்கு** *neḍu-mūkku,* பெ.(n.) 1. யானையின் துதிக்கை; elephant's trunk, as a long nose. "*நெடு மூக்கிற் கரியினுரி மூடிக்கொண்டார்*" (தேவா.1232,8). 2. நீண்டமூக்குடைய காக்கை; crow.

*[நெடும் + மூக்கு. நீண்ட மூக்காகிய யானையின் துதிக்கை]*



**நெடுமூச்சு** *neḍu-mūccu,* பெ. (n.) பெருமூச்சு; a long breath.

*[நெடும் + மூச்சு]*

**நெடுமூச்செறி[1]-தல்** *neḍu-mūcceṟi-,* 2செ.கு.வி.(v.i.) மேல் மூச்சு வாங்குதல் (உ.வ.); to pant, gasp.

*[நெடும் + மூச்சு + எறி. நீண்ட மூச்சு விடுதல்]*

**நெடுமூச்செறி[2]-தல்** *neḍu-mūcceṟi-,* 2செ.கு.வி.(v.i.) வலியால் நீண்ட மூச்சு விடல்; breathing with pain, heaving; panting. (சா.அக.).

*[நெடும் + மூச்செறி-தல்.]*

**நெடுமை[1]** *neḍumai,* பெ.(n.) 1. நீளம்; length, extension. "*குறுமையு நெடுமையும் அளவிற் கோடலின்*" (தொல்.எழுத்து.50). 2. உயரம்; tallness, height, as of a person or tree. "*நெடுமையா லுலகேழு மளந்தாய்*" (திவ்.பெரியாழ்.5.1:4). 3. காலம் முதலியவற்றின் நீட்சி (இ.வ.); continuation; protraction. 4. பெருமை (சீவக.1951, உரை); greatness. "*நெடுங்குவலய முங்கைக் கொண்டு*" (கோயிற்பு.இரணிய.13). 5. அளவின்மை (குறள்,17); boundlessness, excessiveness. 6. ஆழம் (குறள்,495); depth. 7. கொடுமை (கம்பரா.சம்பாதி.5); cruelty. 8. பெண்டிர் தலைமயிர் (திவா.); woman's hair.

**ம.** நெடு; **தெ.** நிடு

*[நெடு → நெடுமை]*

**நெடுமை[2]** *neḍumai,* பெ.(n.) நெட்டெழுத்து; long vowel. "*நெடுமையுந் தீர்க்கமு நெடிற் பெயர்*" (பேரகத்.15).

*[நெடு → நெடுமை]*

**நெடுமொழி** *neḍu-moḻi,* பெ. (n.) 1. புகழ்ந்து கூறும் சொல்; eulogy, encomium, praise. "*மாராயம் பெற்ற நெடுமொழியானும்*" (தொல்.பொருள்.63). *படைக்கு நெடுமொழி கூறி வாழ்த்தினான் மன்னன்.* 2. தன்மேம் பாட்டுரை (திவா.); boast, as of a victorious hero. "*நெடுமொழி மறந்த சிறுபேராளர்*" (புறநா.178)). 3. வஞ்சினம்; vow. "*தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்த்தலும்*" (தொல்.பொருள்.60). 4. நெடுமொழி யலங்காரம்

(மாறனலங்.212) பார்க்க; see *neḍu-moḻi-y-alaṅgāram.* **5.** தொல்பழங்கதை (சிலப்.14:49, உரை); purāṇic story. **6.** யாவரும் அறிந்த செய்தி (சிலப்.14:49, அரும்); well-known fact.

*[நெடும் + மொழி]*

**நெடுமொழிகூறு—தல்** *neḍu-moḻi-kūṟu-,* 5செ.குன்றாவி.(v.t.) புகழ்ந்துபேசுதல்; to praise. "*நீர்த்தன் றிதுவென நெடுமொழி கூறி*" (சிலப்.23:115).

*[நெடுமொழி + கூறு—தல்.]*

**நெடுமொழியலங்காரம்** *neḍu-moḻi-y-alaṅgāram,* பெ. (n.) போரில் வீரனொருவன் தனக்கு இணையில்லை யென்று மேம்படுத் துரைக்கும் அணி (மாறனலங்.212); a figure of speech in which a warrior boasts that he has no equal in war.

*[ நெடுமொழி + அலங்காரம்.* Skt.alam-kāra→ **த.** *அலங்காரம் = அணி ]*

**நெடுமொழிவஞ்சி** *neḍu-moḻi-vañji,* பெ. (n.) வீரனொருவன் பகைவர் சேனையை நெருங்கித் தன் ஆண்மையைத் தானே உயர்த்திக் கூறும் புறத்துறை (பு.வெ.3:12); theme of a warrior approaching his enemy and boasting about his prowess.

*[நெடுமொழி + வஞ்சி. வஞ்சி = வஞ்சினம் கூறும் புறத்துறை. "ஒன்னாதார் படை கெழுமித் தன்னாண்மை எடுத்துரைத் தன்று"* (பு.வெ.3:12).*]*

**நெடுவசி** *neḍu-vaśi,* பெ. (n.) போர் வீரனது புண்ணைத் தைத்தலால் உண்டாகும் ஊசித் தழும்பு; scar of stitches in sewing up a warrior's wound. "*நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்*" (பதிற்று.42)

*[நெடு + வசி. வசி = ஊசி, ஊசித் தழும்பு]*

**நெடுவட்டம்** *neḍu-vaṭṭam,* பெ. (n.) நீளவாக்கில் அமைந்த வட்டம்(வின்); spheroid-, ellipse. *நெடுவட்டம் ஒன்று வரைந்து கொடு.*

**ம.** நெடுவட்டம்

*[நெடும் + வட்டம்]*

**நெடுவட்டி** *neḍu-vaṭṭi,* பெ.(n.) **நெட்டுவட்டி** (நெல்லை) பார்க்க; see *neṭṭu-vaṭṭi.*

*[நெடும் + வட்டி]*

**நெடுவரி** *neḍu-vari,* பெ.(n.) நீண்ட வரிசை அல்லது ஒழுங்கு; long row or line. "*வான் பறைக் குருகி னெடுவரி பொற்ப*" (பதிற்றுப்.83:2).

*[நெடும் + வரி. வரி = வரிசை, ஒழுங்கு]*

**நெடுவரை** *neḍu-varai,* பெ.(n.) உயர்ந்த மலை; a high mountain. "*நெடுவரை யருவி யாடிச் சந்தன நிவந்த சோலை*" (சீவக.2815).

*[நெடு + வரை. வரை = மலை, கோடு, ஒழுங்கு, குன்று, பக்க மலை]*

**நெடுவல்** *neḍuval,* பெ.(n.) நெடிய ஆள் (யாழ்.அக); tall person.

*[நெடு → நெடுவல் = உயரமானவன்]*

**நெடுவழி** *neḍu-vaḻi,* பெ.(n.) **நெடுஞ்சாலை** பார்க்க; see *neḍuñjālai.*

*[நெடும் + வழி]*

**நெடுவாசி** *neḍu-vāśi,* பெ. (n.) பெரும் வேறுபாடு; vast difference. "*த்ரவ்ய வைஷம்யத்தால் தோஷமும் நெடுவாசிப் பட்டிருக்கும்*" (திவ்.திருமாலை.16:62).

**தெ.** நிடுவாசி.

*[நெடும் + வாசி. வாசி = வேறுபாடு]*

**நெடுவாய்** *neḍu-vāy,* பெ.(n.) உள்ளான்மீன்; a sea - fish.

*[நெடும் + வாய். நீண்டவாயையுடைய மீன் வகை]*

**நெடுவாலன்** *neḍu-vālaṉ,* பெ. (n.) **1.** கயிறு (யாழ்ப்.); rope. **2.** குரங்கு; money.

*[நெடும் + வால் + அன்]*

**நெடுவாலி** *neḍu-vāli,* பெ.(n.) உடும்பு (நாஞ்.); iguana.

*[நெடும் + வால் + இ. நீண்டவாலை யுடைய உடும்பு. இ–சொல்லாக்க ஈறு.]*

**நெடுவாலிக்கோங்கு** *neḍu-vāli-k-kōṅgu,* பெ.(n.) **நெடுவாற் கோங்கு** பார்க்க; see *neḍu-vāṟ-kōṅgu.*

*[நெடுவாலி + கோங்கு, கோங்கு = மரவகை]*

**நெடுவாலியூடகம்** *neḍu-vāli-y-ūḍagam,* பெ.(n.) **நெடுவாலூடகம்** பார்க்க; see *neḍu-vāl-ūḍagam.*

**நெடுவாலூடகம்** *neḍu-vāl-ūḍagam,* பெ.(n.) **8** விரலம் நீளம் வளர்வதும் வெண்மை நிறமுடையதுமான கடல்மீன் வகை; sea-fish, silvery, attaining **8** inch in length, Gerres filamentosus. "*செப்பலியுற்ற நெடுவாலூடகம்*" (பறாளை.பள்ளு.**75**).

*[நெடும் + வாலூடகம். வாலூடகம் = நீண்ட வெண்மையான கடல்மீன்]*

**நெடுவாற்கோங்கு** *neḍu-vāṟ-kōṅgu,* பெ. (n.) கோங்கு மரவகை; dipterocarp dammar, Hopea racophlaea.

*[நெடும் + வால்கோங்கு]*

**நெடுவாற்றிரளி** *neḍu-vāṟṟiraḷi,* பெ.(n.) வெண்ணிறமுள்ள கடல்மீன் வகை (வின்.); sea-fish, silvery, Gerres oyena.

*[நெடும் + வாற்றிரளி. வாற்றிரளி = வெண்மையான நீண்ட கடல்மீன்]*

**நெடுவாறி** *neḍu-vāṟi,* பெ. (n.) நாய்ப்பாகல்; dog carolah-Mimordica hispida, alias. Bryonia mysorensis. (சா.அக.).

**நெடுவிரல்** *neḍu-viral,* பெ.(n.) **1.** நாய்ப்பாகல் (மலை.); bryony. **2.** ஆடாதோடை (சங்.அக); Malabar nut. **3.** நீண்ட விரல்; long finger.

*[நெடும் + விரல். விரல்போன்று நீண்ட நாய்ப்பாகலும், ஆடாதோடையும் நெடுவிரல் எனப்பட்டது]*

**நெடுவிரியன்** *neḍu-viriyaṉ,* பெ.(n.) விரியன் பாம்பு வகை (M.M.);long viper.

*[நெடும் + விரியன். நீண்ட விரியன் பாம்புவகை]*

**நெடுவீடு** *neḍu-vīḍu,* பெ.(n.) துறக்கவுலகம்; salvation. "*அழகுகூடு நெடுவீடுற*" (மாறனலங்.**299**,உதா.**811**).

*[நெடும் + வீடு. நீண்ட தொலைவில் உள்ள துறக்கவுலகம்]*

**நெடுவெண்ணிலவினார்** *neḍu-veṇṇilaviṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a šaṅgam poet.

*[நெடு + வெண் + நிலவு + இன் + ஆர்]*

களவொழுக்கத்திலே இரவுக் குறிக்கண் வருந் தலைவனுக்கு இடையூறாக உள்ள நிலவை "*நெடு வெண்ணிலவே*" என்று விளித்துப்பாடியதால், "*நெடுவெண்ணிலவினார்*" என்ற பெயர் பெற்றார் என்பர். இவர் பாடியதாக குறுந்தொகை **47** ஆம்பாடல் காணப்படுகிறது.

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண்ணிலவே" (குறுந்.47)

**நெடுவெண்பாட்டு** *nedu-veṇ-pāṭṭu,* பெ. (n.) ஐந்தடி சிறுமையும் பன்னீரடிப் பெருமையும் உடைய வெண்பாவகை; stanza in veṇbā metre, consisting of 5 to 12 lines. "*நெடுவெண் பாட்டே முந்நால் அடித்தே*" (தொல்.பொருள். செய்.156).

*[நெடு + வெண்பாட்டு. வெண்பாட்டு = வெண்பாவகை]*

நெடுவெண்பாட்டு – அளவின் நெடிய பாட்டு ஐந்து முதல் பன்னிரண்டடிக்குள் வருவதை பஃறொடை வெண்பா என்றும் அதன்மேல் வரும் அடிப்பாடல் கலிவெண்பா எனவும் கூறுவர்.

ஐந்தடியாலான நெடுவெண்பாட்டு:

"*ஆர்ப்பெழுந்த ஞாட்பினுள் ஆள்ஆன் எதிர்த்தோடித்
தாக்கி எறிதர வீழ்தரும் ஒண்குருதி
கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப் போன்றனவே
போர்க்கொடித் தானைப் பொருபுனல் நீர்நாடன்
ஆர்த்தமர் அட்ட களத்து*" (களவழி,17)

ஆறடியாலான நெடுவெண்பாட்டு:

"*பன்மாடக் கூடல் மதுரை நெடுந் தெருவில்
என்னோடு நின்றா ரிருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்*" (முத்தொள்.58)

ஏழடியாலான நெடுவெண்பாட்டு:

"*வையக மெல்லாங் கழனியா—வையகத்துச்
செய்யகமே நாற்றிசையின் தேயங்கள்—செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு—வான்கரும்பின்
சாறேஅந் நாட்டுத் தலையூர்கள்—சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெலாங்—கட்டியுள்
தானேற்ற மான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி யகம்*" (யா.கா.26,மேற்.)

சென்னைப் பல்கலைக் கழக அகர முதலியில் நெடுவெண்பாட்டு என்பதற்கு "ஏழடிச் சிறுமையும் பன்னீரடிப் பெருமையும் உடைய வெண்பாவகை" என்று பொருளெழுதியுள்ளது. இதற்கு மேற்கோளாகத் தொல்காப்பியம் பொருளதிகாரம், செய்யுளியல்

"*நெடுவெண் பாட்டே முந்நால் அடித்தே
குறுவெண் பாட்டின் அளவெழு சீரே*"

என்ற நூற்பாவை (156)க் காட்டியுள்ளது.

இந்நூற்பா வெண்பாவின் அடியளவு பற்றிக் கூறுகிறது. வெண்பா, பன்னீரடிப் பெருமையும் எழுசீர் சிறுமையும் உடைத்து என்பது பொருள். எழுசீரான் அமைவது குறள் வெண்பா. நெடுவெண்பாட்டு என்பது பன்னீரடி பெருமையும் ஐஞ்சீரடி சிறுமையும் உடையதாக அமையும். குறள் வெண்பா இரண்டடியாயும் நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா போன்றவை நன் நான்கடியாகவும் அமையும். நான்கடியின் மிக்க பலவடியான்வரின் பஃறொடை வெண்பா எனப்படும். எனவே நான்கடியின் மிக்கு பன்னீரடி வரையுள்ள வெண்பா நெடுவெண்பாட்டு வகையாகும்.

**நெடுவெள்ளூசி** *nedu-veḷ-ḷ-ūśi,* பெ.(n.) 1. புண், காயம் போன்றவற்றைத் தைக்கும் ஊசி; surgical needle for stitching wounds. "*கயமூழ்கிச் சிரல் பெயர்ந்தன்ன நெடுவெள்ளூசி*" (பதிற்றுப்.42). 2. நெட்டை என்னும் கருவி (பதிற்று.42:3, உரை); a kind of weapon.

*[நெடும் + வெள்ளூசி. வெள்ளூசி = மருத்துவர் புண்களைத் தைக்கும் ஊசி]*

**நெடுவேட்டுவன்** *nedu-vēṭṭuvaṉ,* பெ.(n.) கோடை மலைப் பகுதியை ஆண்ட கடைக் கழக மன்னன்; a king ruled Kōdaimalai.

கடிய நெடுவேட்டுவன் என்பது இவனது முழுப் பெயர். கடியம் என்பது நெடுவேட்டுவன் ஊர். இது கோடைக்கானல் என்று இன்று வழங்கும் கோடைமலைச் சாரலில் உள்ளது. கோடைமலையை ஆண்டவன்.

இவன் தன்னைத் துணை வேண்டி யவர்க்குப் பெரும்புகலாகி, ஆதரவு நல்குபவன், பகைத்துப் பொரக் கருதுவாரை அவர் வலியறுத்துக் கருத்தழிவிக்கும் காட்டாண் மையுடையவன். கொடை வண்மையால் இவன் பால் பரிசிலர்கட்கு மிக்க தொடர்புண்டு. அதனால் கடலுக்குச் சென்ற முகில், நீர் பெற்றன்றி வாராதவாறு போல, இந்நெடு வேட்டுவனைக் காணும் பரிசிலர் இவனது கொடை நலத்தைப் பெற்றன்றிப் பெயர்ந்து போகாரென்னும் பெருமை இவனுக்குப் பிறங்கியிருந்தது.

இவனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ளார். (புறநா.205).

*"முற்றிய திருவின் மூவ ராயினும்*
*பெட்பின் றீதல் யாம் வேண்டலமே*
*விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி*
*உறுவர் செல்சார் வாகிச் செறுவர்*
*தாளுளந் தபுத்த வாண்மிகு தானை*
*வெள்வீ வேலிக் கோடைப் பொருத*
*சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய*
*மான்கணந் தொலைச்சிய கடுவிசைக்*
*கத நாய்*
*நோன் சிலை வேட்டுவ நோயிலை யாகுக*
*ஆர்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்*
*கடல்வயிற் குழீஇய வண்ணலங் கொண்மூ*
*நீரின்று பெயரா வாங்குத் தேரொ*
*டொளிறுமருப் பேந்திய செம்மற்*
*களிறின்று பெயரல் பரிசிலர் கடும்பே"*
(புறநா.205)

**நெடுவேர்** *nedu-vēr,* பெ. (n.) சாயமிடப் பயன்படும் பூடுவகை (மலை.); Indian maddar.

*[நெடு + வேர். நீண்டவேர்]*

**நெடுவேள்குன்றம்** *nedu-vel-kunram,* பெ. (n.) சோழ நாட்டிலுள்ள திருச்செங்குன்று; a hill in Chola country.

*[நெடு + வேள் + குன்றம்]*

**நெண்டு[1]–தல்** *nendu-,* 5செ.கு.வி.(v.i.) **1.** எதிர்க்களித்தல் (யாழ்ப்.); to rise upon the stomach, keck. **2.** நொண்டுதல்; to limp. "*நெண்டிக்கொண்டே*" (தேவா.743.8).

*[நுல்(துளை) → நுள் → நொள் →நொண்டு → நெண்டு → நெண்டு–தல்,(வே.க)]*

**நெண்டு[2]–தல்** *nendu-,* 5செ.குன்றாவி.(v.t.) தோண்டுதல் (நாமதீப.737); to dig.

*[நொண்டு → நெண்டு–தல்]*

**நெத்தகர்** *nettakar,* பெ. (n.) நெல்லுடன் முளைக்கும் களை வகை (யாழ்.அக.); a weed that grows with paddy. வயலில் நெத்தகர் அதிகமாகி விட்டது.

*[நெல் + தகர். நெல் விளைவைத் தகர்க்கும் களை]*

**நெத்தப்பலகை** *netta-p-palagai,* பெ. (n.) சூதாடும்பலகை; dice-board. "*நெத்தப் பலகையை எடுத்து நிறுத்தினாற் போன்ற... குறளனே*" (கலித்.94, உரை).

**க.** நெத்தபலகெ

*[நெட்டு + பலகை – நெட்டுப் பலகை → நெத்தப்பலகை]*

சூதாட்டம் ஆடுவதற்காக கோடுகள் வரையப்பட்ட பலகை.



**நெத்தம்** *nettam,* பெ. (n.) அரத்தம்; blood.

*[அரத்தம் → இரத்தம் → நெத்தம். ஒ.நோ. நிரம்ப → நொம்ப]*

**நெத்தல்** *nettal,* பெ. (n.) **நெய்த்தோலி** பார்க்க; see *ney-t-tōli.* (சா.அக.).

**நெத்தமண்டலி** *netta-mandali,* பெ. (n.) தேள்வகை (சங்.அக); a scorpion.

*[நெத்தம் + மண்டலி. அரத்தம் போன்று சிவந்து காணப்படும் தேள் வகை. அரத்த மண்டலி → நெத்த மண்டலி.]*

**நெத்தலி** *nettali,* பெ. (n.) **நெய்த்தோலி** பார்க்க; see *ney-t-tōli.*

*[நெத்தல் → நெத்தலி.]*

**நெத்தி** *netti,* பெ. (n.) மீன் நீந்துதற்குக் கரணியமான மிதவைப் பை (மீனவ.); swimming bladder of a fish.

*[நத்தி → நெத்தி. நத்தி = மீனின் மிதவைப்பை]*

**நெத்தியடி** *netti-y-aḍi,* பெ.(n.) செயலிழக்கச் செய்யும் தாக்குதல் அல்லது பாதிப்பு; crushing defeat. தேர்தலில் எதிர்க்கட்சி பெற்ற வெற்றி ஆளுங்கட்சிக்கு நெத்தியடியாக இருந்தது.

*[நெற்றி → நெத்தி + அடி. நெற்றியில் அடித்தால் ஏற்படும் வலி போன்றது]*

**நெத்தில்** *nettil,* பெ. (n.) **நெய்த்தோலி** பார்க்க; see *ney-t-tōli.* (சா.அக.).

**நெத்திலி** *nettili,* பெ.(n.) **நெய்த்தோலி** பார்க்க; see *ney-t-tōli.*

**தெ.** நெத்தெலு.

*[நெய்த்தோலி → நெத்திலி. வெள்ளை நிறத்தில் இருக்கும் ஒருவகைச் சிறிய கடல் மீன்]*

**நெத்திலிப்பொடி** *nettili-p-poḍi,* பெ. (n.) **1.** நெய்த்தோலிக் கருவாடு (வின்.); anchovy salted and dried. **2.** சிறு நெய்த்தோலி மீன்; small anchovy fish.

*[நெத்திலி + பொடி]*

**நெத்து** *nettu,* பெ. (n.) **நெற்று** பார்க்க; see *neṟṟu.*

*[நெற்று → நெத்து (பே.வ.)]*

**நெத்திலிவலை** *nettili-valai,* பெ. (n.) நெய்த்தோலி மீன் பிடிக்கும் வலை; anchovy fishing net.

*[நெத்திலி + வகை]*

நெத்திலி மீனுக்காகவே சிறப்பாகச் செய்யப்படும் வலை. இதில் வலைக்கண் மிகச்சிறியது. இவ்வலை 5 அடி அகலம் 5 அடி நீளம் கொண்டதாய் இருக்கும்.



**நெதி¹** *nedi,* பெ. (n.) **1.** செல்வம்; treasure. "*விழுநெதி பெறினும்*" (நற்.16). **2.** முத்து; pearl. "*நெதிசொரி சங்க மேந்தி*" (சூளா.அரசி.308)

*[நெல் → நெதி. பழங்காலத்தில் கூலியாக நெல் முதலிய கூலங்களே கொடுக்கப்பட்டது. நெல் வயல் அதிகமுள்ளவன் செல்வந்தனாக மதிக்கப்பட்டான். எனவே நெல் → நெதி என்றாயிற்று. பின் நெதி → நிதியாயிற்று.]*

**நெதி²** *nedi,* பெ. (n.) தேனிப்பு, ஊழ்கம், உள்ளொடுக்கம் (தியானம்); meditation. "*தப்பாம னெதிபண்ண*" (தத்துவப்.262).

*[நுல் → நெல் → நெதி. நெதி → நிதி = செல்வம்.]*

**நெதியம்** *nediyam,* பெ.(n.) செல்வம்; wealth riches. "*நெதிய மென்னுள்*" (தேவா.556,5).

*[நெதி → நெதியம்]*

**நெதியாளன்** *nedi-y-āḷaṉ,* பெ. (n.) குபேரன்; Kubēran. "*நெதியாளன் றோழனை*" (தேவா.688,7)

*[நெதி → நெதி + ஆளன்]*

**நெதுட்டி** *neduṯṯi,* பெ. (n.) மருது; mardah tree, Terminalia alata. (சா.அக.).

**நெம்பாணி**[1] *nembāṇi,* பெ.(n.) வண்டியில் பயன்படும் ஆணி; a kind of nail used in cart.

*[வண்டிப்பழு வில் தைக்கும் ஆணி வகை. நெம்பு + ஆணி.]*

**நெம்பாணி**[2] *nembāṇi,* பெ.(n.) நெம்பப் பயன்படும் ஆணி; a nail use to lift out.

*[நெம்பு + ஆணி]*

**நெம்பு**[1]**–தல்** *nembu-,* 5செ.குன்றாவி.(v.t.) 1. கழி அல்லது கருவியை ஒரு பொருளின் அடியிற் செலுத்தி மேலே உயரும்படி கிளப்புதல்; to lift with a leaver. *பாறையின் அடியிற் கம்பியைச் செலுத்தி ஒரே நெம்பில் கல்லைப் பெயர்த்து விட்டான்.* 2. உடைத்துத் திறத்தல்; to force open. *தாழ்ப்பாளை ஒரு நெம்பில் உடைத்து விட்டான்.*

*[எம்பு–தல் → நெம்பு–தல்]*

**நெம்பு**[2] *nembu,* பெ. (n.) 1. மேலெழுப்புகை; lifting with a lever. 2. இருபக்கமும் கூர்மையுடைய இணைப்பாணி (கட்டிட.நாமா); joining dowel or nail. 3. ஒடாணி (தெ.க.தொ.2,172); pins for jewels. 4. ஏணிப் பழு (வின்.); rung or round of a ladder. 5. ஏற்றத்தின் மடலாணி (வின்.); ribs joining together the two beams of a well-sweep, serving also as steps for the man who treads it. 6. **நெம்புதடி** (வின்.) பார்க்க; see *nembu-taḍi.* 7. விலா எலும்பு, (வின்.); ribs இன்று நெம்பு கழிய வேலை செய்தான்.

ம. நும்பு; தெ. நெம்மு.

*[எம்பு → நெம்பு]*

**நெம்புகோல்** *nembu-kōl,* பெ. (n.) ஒரு பொருளினை உயர்த்தவோ நகர்த்தவோ பயன்படும், ஒரு புள்ளியை மூலமாகக் கொண்டு இயக்கப் பயன்படும் கம்பி அல்லது கருவி; the lever. *ஒரு நெம்புகோல் இருந்தால் இந்தக் கல்லை நகர்த்தலாம். ஒரு பெரிய நெம்புகோல் கிடைத்தால் நான் உலகை நகர்த்திக் காட்டுவேன் என்று ஐசக் நியூட்டன் கூறியுள்ளார்.*

*[நெம்பு + கோல்]*



**நெம்புத்தடி** *nembu-t-taḍi,* பெ.(n.) **நெம்புதடி** (வின்.) பார்க்க; see *nembu-taḍi.*

*[நெம்பு + அடி.]*

**நெம்புதடி** *nembu-taḍi,* பெ.(n.) பொருளைக் கிளப்ப அதனடியில் செலுத்துங்கோல் (வின்.); lever, in mechanics. நெம்புதடி கொண்டு கட்டையைப் புரட்டினான்.

*[நெம்பு + தடி]*

**நெமம்** *nemam,* பெ. (n.) **நெமிசந்தனா** பார்க்க; see *nemiśandāṉa.* (சா.அக.)

**நெமமீன்** *nemamīṉ,* பெ. (n.) மூட்டுவலியை உண்டாக்குமோர் வகை மீன்; a kind of fish causing rheumatisum. (சா.அக.).

**நெமிசந்தனா** *nemiśandaṉā,* பெ. (n.) அரத்த வேங்கை மரம்; red kino tree - Pterocarpus marsupium (acuminata) (சா.அக.).

**நெமிரல்** *nemiral,* பெ.(n.) சோறு (அக.நி.); rice.

*[நிமிரல் → நெமிரல். நிமிரல் = சோறு (நற்.258). அரிசி சோறாகும்போது அதன் வடிவம் மாறி நிமிர்கிறது.]*

**நெய்¹–தல்** *ney-,* 1செ.குன்றாவி.(v.t.) 1. துணி, பாய் முதலியவற்றை உருவாக்கு வதற்காகத் தறியில் நீளவாட்டில் நூலையோ, கோரையையோ செலுத்திக் குறுக்குவாட்டில் கோத்துப் பின்னுதல், நூலை ஆடையாகச் செய்தல்; to weave, as clothes. "*நெய்யு நுண்ணூல்*" (சீவக.3019). *நெய்து கொண்டிருக்கும் பொழுது நெய்கிறதை விட்டு நினைத்துக் கொண்டானாம் கைக்கோளன்* (பழ.). *நெய்கிறவனுக்கு ஏன் குரங்குக் குட்டி?* (பழ.). 2. தொடுத்தல்; to string, to link together. "*நெய்தவை தூக்க*" (பரிபா.19:80).

**ம.** நெய்க; **தெ.** நேயு; **க.** நேய், நேயி, நெய்யு; கோத. நெச் (nec); துட, நிச் (nic); **குட.** நெய் (ne.y); **து.** நெயுநி; **கூ.** நெப; **குவி.** நெநை (nen'nai); **குரு.** எஸ்நா (essnā); **மா.** எசெ (ese = to plait).

*[நுள் → நெள் → நெய் → நெய்–தல், நுள்ளுதல் = அடைதல், பொருந்துதல், செறிதல் (த.ம.)]*

**நெய்²** *ney,* பெ. (n.) 1. ஆவின் அல்லது எருமையின் வெண்ணெயை உருக்கி உண்டாக்கும் பொருள்; ghee, clarified butter. "*நீர்நாண நெய்வழங்கியும்*" (புறநா.166:21). '*நெய்க்குடத்தில் எறும்பு மொய்த்தது போல*' (பழ.). '*நெய்யை உருக்கித் தயிரைப் பெருக்கிச் சாப்பிடவேண்டும்*' (பழ.). '*நெய்க்குடம் உடைந்தால் நாய்க்கு விருந்து*' (பழ.). "*நெய்யுண்ணோம் பாலுண்ணோம்.......... தீக்குறளை சென்றோதோம்*" (திருப்பாவை). 2. வெண்ணெய்; butter. "*நெய்குடை தயிரி னுரையொடும்*" (பரிபா.16:3). 3. ஒட்டும் நீர்ப்பொருள் (எண்ணெய்); oil. "*நெய்யணி மயக்கம்*" (தொல்.பொருள்.கற்பு.5). 4. புழுகுநெய்; civet. "*மையிருங் கூந்த னெய்யணி மறப்ப*" (சிலப்.4:56). 5. நெய்போல் ஒட்டுந்தேன்; honey. "*நெய்க்கண் ணிறாஅல்*" (கலித்.42). 6. நெய்போலுறையும் அரத்தம்; blood. "*நெய்யரி பற்றிய நீரெலாம்*" (நீர்நிறக்.51). 7. நெய்யாய் உருகும் கொழுப்பு, (நிணம்); grease, fat. "*நெய்யுண்டு*" (கல்லா.71). 8. உளம் ஒட்டும் நட்பு; friendship, love. "*நெய்பொதி நெஞ்சின் மன்னர்*" (சீவக.3049). 9. 14 ஆம் விண்மீனாகிய நெய்ம்மீன் (சித்திரை) (சூடா.); the 14th nakṣatra.

**ம.,க.** நெய்; **தெ.** நெய்யி; **வ.** ஸ்நிஹ்– ஸ்நேஹ; **கோத.** நாய் (nay=ghee); **துட.** நீய்; **கொலா., கட., பா., நா.** நெய்; **கூ.** நீசு (niju); **குவி.** நீயூ (nīyū); **குரு.** நேத (nēta=grease, fat); **மா.** நென்ய.

*[நுல்(பொருந்தல்) → நுள் → நெள் → நெய்]*

நெய்ப் பொருளெல்லாவற்றுள்ளும் ஆவின் அல்லது எருமையின் நெய் ஊட்டமான உணவிற்குரியதாய்த் தலைசிறந்ததாதலால், நெய்யென்னும் பொதுப் பெயரையே சிறப்புப் பெயராகக் கொண்டது.

முதன்முதலாக எள்ளின் நெய்யைக் குறித்த எண்ணெய் என்னும் சொல், மிகப் பெருவழக்காய் வழங்கியதால் நாளடைவில் தன் சிறப்புப் பொருளை இழந்து, நெய்யல்லாத நெய்ப் பொருள்களின் பொதுப்பெயராயிற்று. அதனால், தன் பழம்பொருளைக் குறித்தற்கு 'நல்' என்னும் அடை பெற்றது. இதனால்,

நெய்க்கு அடுத்துச் சிறந்தது நல்லெண்ணெய் என்பது பெறப்படும். *"வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக் கொடு"* என்பது பழமொழி. (வே.க.நுல்.6)

புரைகுற்றிய பாலைக் கடைவதினா லுண்டாகிய பசையுள்ள பொருளே வெண்ணெய். இவ்வெண்ணெயைத் தண்ணீர் போக உருக்கி வடிகட்டியதே நெய்யெனப்படும். நல்ல நெய் கெட்டுப்போகாமல் நெடு நாளிருக்கும். தேன் நாச்சுவையும், சந்தனம், மோப்பச்சுவையும் கொண்டவை. நெய் இருவகை சுவையும் பொருந்தியது. இது பொதுவாக எருமை அல்லது ஆவின் பாலிலிருந்து எடுக்கப்படும். இதனை உண்ண உடம்பிற்குக் குளிர்ச்சியையும் வலுவையும் உண்டாக்கும். இது மனநோய் (பைத்தியம்), காக்கைவலி, வயிறு வீக்கம் முதலியவற்றைக் குணப்படுத்தும், நினைவாற்றலை உண்டாக்கும், கண் பார்வையைத் தெளிவு படுத்தி உடம்பில் இருக்கும் நஞ்சைப் போக்கும். (சா.அக.)

**வகைகள் :** 1. ஆவின் நெய், 2. கருப்பு ஆவின் நெய், 3. எருமைநெய், 4. வெள்ளாட்டு நெய். 5. செம்மறியாட்டு நெய், 6. பள்ளையாட்டு நெய், 7. குறும்பாட்டு நெய், 8. கலப்பு நெய், 9. ஒட்டக நெய், 10. பன்றி நெய், 11. உடும்பு நெய், 12. காக்கை நெய்.

சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி கீழ்கண்ட நெய்வகைகளைக் கூறுகிறது.

**உயிரிகளின் நெய்வகைகள் :** 1. ஆவின் நெய் – இருமல், வயிற்று வலி, பித்தவிக்கல், புண், தாகம், மூலம் இவைகளுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

2. கருப்பு ஆவின்நெய் – கண், புருவம், நெற்றி, தலை முதலியவற்றின் நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.
3. எருமை நெய் – இதை உண்ண அறிவு குன்றும், கண்ணொளி மங்கும், கரப்பான் உண்டாகும்.
4. வெள்ளாட்டு நெய்–சளித்தொல்லைக்கும், பத்தியத்திற்கும் மருந்தாகப் பயன் படுகிறது.
5. செம்மறியாட்டு நெய் – இதை உண்ணச் சளிநோய் (கபநோய்) உண்டாகும்.
6. பள்ளையாட்டு நெய் – பித்தநோய்க்கு மருந்தாகப் பயன்படுகிறது.
7. குறும்பாட்டு நெய் – வளியல் (வாயு) உண்டாகும் நோய்கள் வரும்.
8. கலப்பு நெய் – இதை உண்ண உடம்பின் சூடு குறையும், பலமுண்டாகும்.
9. ஒட்டக நெய் – நீரிழிவு நோய்க்கும், பித்தத்திற்கும் மருந்து.
10. பன்றிநெய் – மூலம், மூத்திர(சிறுநீரக)க்கடுப்பு இவைகளுக்கு மருந்தாகிறது.
11. உடும்பு நெய் – அரத்தக் கழிச்சல் நோய்க்கு மருந்து.
12. காக்கை நெய் – காமாலை நோய்க்கு மருந்து.
13. ஆமை நெய் – அரத்த மூலம் நீங்கும்.
14. ஓணான் நெய் – பின்னிசிவு நீங்கும் (convulsions)
15. கரடி நெய் – மூட்டு வலி, பாத வெடிப்பு இவைகளுக்கு இது மருந்து.
16. மீன் நெய் – மாலைக்கண், இளைப்பு நோய் இவைகளுக்கு மருந்தாகிறது.

**பயிரிகளின் நெய்:**

17. ஆமணக்குநெய் – வயிற்றுவலி (குன்மம்), குடலேற்றம், உடலெரிவு, கண்ணெரிவு இவைகளுக்கு மருந்து.
18. சிற்றாமணக்கு நெய் – உடலுக்கு மருந்துகளினால் உண்டாகும் வெப்பம், மூல வெப்பம் ஆகியவற்றை நீக்கும்.
19. எள்நெய் – உடல் ஆற்றல் குறைவு (தேக பலவீனம்), கண்காது நோய், தலைச்சூடு போன்றவற்றுக்கு இது மருந்தாகிறது.
20. வேப்பெண்ணெய் – புண், சொரி, சிரங்கு இவைகளைக் குணமாக்கும் மருந்து.
21. இலுப்பெண்ணெய் – கரப்பான், கடி, நஞ்சு, சிரங்கு இவைகளுக்கு மருந்து.
22. புங்கெண்ணெய் – சொறி, சிரங்கு, வெடிப்புகளுக்கு இந்நெய்யைத் தடவ குணமாகும்.
23. வாதுமைநெய் – உடல் சூடு நீங்கும்.
24. புன்னைநெய் – முன்னிசிவு, பின்னிசிவு, வலிப்பு நீங்க இது பயன்படுகிறது.
25. தேங்காயெண்ணெய் – தீப்புண், படர்தாமரை, சிரங்கு இவைகளுக்கு மருந்து.
26. கடுகுநெய் – அரத்தக் கொதிப்பு குட்டம், மூளை, மூலம், சூலை முதலிய நோய்களுக்கு மருந்தாகிறது.
27. நீரடிமுத்து நெய் – சொறி, சிரங்கு, பெருநோய், தோல் நோய்கள் நீங்கும்.

மருந்தாகப் பயன்படும் மேலும் பல நெய் வகைகள்.

28. ஆவாரை நெய்
29. கொன்றை நெய்
30. நாவல் நெய்
31. பொன்னாங்காணிநெய்
32. கடுக்காய் நெய்

33. வில்வ நெய்
34. அவுரி நெய்
35. அறுகம்வேர் நெய்
36. சமுத்திரா பழநெய்
37. கண்டங்கத்திரிநெய்
38. தூதுவளை நெய்
39. முலைப்பால்நெய்
40. சுக்கு நெய்
41. பிரமி நெய்
42. வல்லாரை நெய்
43. சதாவேரிநெய்
44. புளியாரைநெய்
45. பூசணிநெய்
46. சோம்பு நெய்
47. கருவாப்பட்டை நெய்
48. வெற்றிலைப் பூ நெய்
49. நாரத்தை நெய்
50. எலுமிச்சை நெய்
51. ஆளி விதை நெய்
52. கையாப்புடை நெய்
53. கற்பூர நெய்
54. நாட்டு அக்ரோட் நெய்
55. சீமைச்சோம்பு நெய்
56. இலவங்க எண்ணெய்
57. கொத்தமல்லி எண்ணெய்
58. பருத்திக்கொட்டை நெய்
59. திப்பிலி நெய்
60. புன்னை நெய்
61. ஓம நெய்
62. நீலகிரி எண்ணெய்
63. மாசிப்பத்திரி நெய்
64. கரிசாலை நெய்
65. சதகுப்பை நெய்
66. முசுமுசுக்கை நெய்
67. சேரங்கொட்டை நெய்
68. தேற்றாங் கொட்டை நெய்

**நெய்³–த்தல்** *ney-,* 4செ.கு.வி.(v.i.) **1.** பளபளத்தல்; to be glossy, polished. ***"நீண்டு குழன்று நெய்த்திருண்டு"*** (கம்பரா. உருக்காட்டு.57). **2.** ஒட்டும் நீர்ப்பொருளாக உருகும் கொழுப்பு வைத்தல், கொழுத்தல்; to be fleshy, fat, plump. ***"நெய்த்த மீன்"*** (வின்.). **3.** ஒட்டும் பசைத்தன்மை யுடையதாயிருத்தல் (வின்.); to become greasy, unctuous or sticky. **4.** ஒட்டுதல்; to stick, to affix.

*[நுல்(பொருந்தல்) → நுள் → நெள் → நெய் → நெய்–த்தல் (வே.க.)]*

**நெய்⁴** *ney,* பெ. (n.) சாந்துடன் சேர்ந்து இறுகப் பிடித்துக் கொள்ளுதற்குரிய கருப்புக் கட்டி முதலியன; cementing substance. ***"மணலும் நீருங்கூட வரைத்த சாந்திற் கருப்புக் கட்டியாகிய நெய் அளவினவாறு போல"*** (நீலகேசி, 310 உரை).

*[நெய்² → நெய்⁴]*

**நெய்க்கடம்பு** *ney-k-kaḍambu,* பெ. (n.) நாய்க்கடம்பு; bastard cedar of Palghat-Hymenodictyon excelsusm. (சா.அக.).

**மறுவ.** வெள்ளைக் கடம்பு.

*[நெய் + கடம்பு]*

**நெய்க்கடல்** *ney-k-kaḍal,* பெ. (n.) ஏழுகடலுள் நெய்மயமாகிய கடல்; the ocean of ghee, one of ēḻu-kaḍal.

*[நெய் + கடல்]*

**நெய்க்கடுகு** *ney-k-kaḍugu,* பெ.(n.) **1.** வெண்ணெய் உருக்கிக் காய்ச்சியெடுக்கும் போது அடியில் நிற்கும் வண்டல்; the sediment deposited at the bottom during melting of butter into ghee. **2.** அகத்தியர் வல்லாதி 600–ல் சொல்லியிருக்கும் முறைப்படி ஆவின் நெய்யை மற்ற மருந்துச் சரக்குகளோடு சேர்த்துக் காய்ச்சி வடித்த

மருந்து நெய். இது வயிற்றில் ஏற்படும் நோய்களுக்கு மருந்தாகிறது; a medicated oil prepared with cow's ghee as chief ingredient along with other drugs according to the process laid down in Agastyar Vallathy 600. It is prescribed for all diseases of the stomach. (சா.அக.).

*[நெய் + கடுகு. கடுகு = வண்டல்]*

**நெய்க்கியாழம்** *ney-k-kiyāḻam,* பெ. (n.) ஆவின் நெய்யுடன் மற்ற கடைச்சரக்குகளைச் சேர்த்துச் செய்யும் மருந்து; medicated oil in common prepared from cow's ghee mixed with other bazaar drugs. (சா.அக.).

*[நெய் + கியாழம். கியாழம் = காய்ச்சிய மருந்து குடிநீர்]*

**நெய்க்கிழி** *ney-k-kḻi,* பெ. (n.) எண்ணெய் தோய்த்த சீலைத்துண்டு; bandage soaked in oil. "*நெய்க்கிழி வைக்கப்பட்டார்*" (சீவக.818).

*[நெய் + கிழி. கிழி = கிழிந்த துணி]*

**நெய்க்குரணி**[1] *neykkuraṇi,* பெ. (n.) அழிஞ்சில்; sage-leaved alangium.

**நெய்க்குரணி**[2] *ney-k-kuraṇi,* பெ. (n.) ஐங்கோல எண்ணெய் (ஐந்து மாதத்திய தலைப்பிண்டத்தினின்று வடிக்கும் நெய்மம்); a medicinal oil extracted from the first born fetus five months old. (சா.அக.).

**நெய்க்குழம்பு** *ney-k-kuḻambu,* பெ.(n.) 1. நெய்விட்டுத் தாளித்த குழம்பு; thick broth seasoned with ghee. 2. இறுகிய நெய்; thick ghee.

*[நெய் + குழம்பு]*

**நெய்க்குறி** *ney-k-kuṟi,* பெ. (n.) தேரையர் செய்த ஒரு மருத்துவ நூல்; a medical Tamil treatise by Theraiyer which treats about the examination of urine and their indications. (சா.அக.).

*[நெய் + குறி]*

**நெய்க்குறிநீர்க்குறி** *ney-k-kuṟi-nīr-k-kuṟi,* பெ. (n.) நெய்யில் சிறுநீரைக் (மூத்திரத்தைக்) கலந்து செய்யும் ஆராய்ச்சி (சோதனை); examining the urine by testing if in ghee.

*[நெய்க்குறி + நீர்க்குறி]*

**நெய்க்குறிநூல்** *ney-k-kuṟi-nūl,* பெ. (n.) எண்ணெய் விட்டு சிறுநீர் (மூத்திரத்) தேர்வு செய்வதைக் கூறுவதும், தேரையர் இயற்றியதுமான நூல்; a treatise by Tēraiyar on the test of urine by means of oil.

*[நெய் + குறி + நூல்]*

**நெய்க்கொட்டான்** *ney-k-koṭṭāṉ,* பெ. (n.) பூவந்தி (மலை.); soap-nut.

**மறுவ.** நெய்க்கொட்டை.

*[நெய் + கொட்டான்]*

**நெய்க்கொட்டான்விதை** *ney-k-koṭṭāṉ-vidai,* பெ. (n.) பூவந்திக்கொட்டை; soap nut. (சா.அக.).

*[நெய்க்கொட்டான் + விதை]*

**நெய்க்கொட்டை** *ney-k-koṭṭai,* பெ. (n.) 1. மரவகை (மலை.); soap-nut, Sapindus trifoliatus. 2. மரவகை; butterfly soap-nut, Harpullia cupanoides.

*[நெய் + கொட்டை. நெய் போல் பளபளப்பான கொட்டையுடைய மரம்]*

**நெய்ச்சசிகரி** *ney-c-caśikari,* பெ. (n.) சீமைத் தக்காளி; Europe brinjal, tomato, Hycopersicum esculentum (சா.அக.).

**நெய்ச்சட்டி** *ney-c-caṭṭi,* பெ. (n.) 1. செங்கழுநீர் (மலை.); purple Indian water-lily. 2. கீரைவகை (சங்.அக.); a kind of greens. 3. பவளக் குன்றிமணி (மலை.); crab's eye.

மறுவ : செங்கழுநீர்.

இச்செடி ஆண்டிற்கு ஒரு முறை வளர்ந்து ஓயும். இலை நீண்டு நான்கு மூலையுடையதாய் இருக்கும்; பூவிதழ் ஊதா நிறமுடையது; வங்காளம், கொ்ரநாடு, மலையாளம் ஆகிய பகுதிகளில் வளர்கிறது. இதைக் குடிநீராக்கிக் காய்ச்சலுக்குக் கொடுக்கலாம்; உடற்சூட்டை இது தணிக்கும். பசி, அழகு இவைகளை உண்டாகும். வாந்தி, அழற்சி இவைகளைப் போக்கும். இதன் பூ கண் சிவப்பை மாற்றும்; காமாலை, கைகால்எரிச்சல், கண்ணோய்கள் முதலியன நீங்கும். (சா.அக.).

**நெய்ச்சட்டிக்கீரை** *ney-c-caṭṭi-k-kīrai,* பெ. (n.) வேப்பெண்ணெயை நெய்யாகச் செய்யும் (சீதேவியார்) செங்கழுநீர் கீரை; a kind of waterlily, Nymphae odorata or Grewia orbiculata. It converts margose oil into ghee. (சா.அக.).

*[நெய்ச்சட்டி + கீரை]*

**நெய்ச்சாதம்** *ney-c-cādam,* பெ. (n.) நெய்ச்சோறு; ghee rice.

*[நெய் + சாதம்]*

சாதம் என்பதற்கு வேர் வடமொழியியில்லை. அரிசி சதசதவென்று கொதிபெற்று மலர்வதால் சாதம் தமிழ்ச் சொல்லே.

**நெய்ச்சாரிகம்** *ney-c-cārigam,* பெ. (n.) அரத்த வேங்கை மரம்; red kino tree, Pterocarpus marsupium (சா.அக.).

**நெய்ச்சி**[1] *neycci,* பெ. (n.) எண்ணெய்ச்சிக்கு; oil-sediment. (சா.அக.).

*[நெய் → நெய்ச்சி. நெய் + சி(க்கு).]*

சிக்கு என்பதில் முதலெழுத்து நின்று பிற இரண்டும் நீங்கின.

**நெய்ச்சி**[2] *neycci,* பெ. (n.) நெய்யால் செய்த பண்ணியம் (பலகாரம்); ghee preparation of sweet confection.

*[நெய் → நெய்ச்சி]*

**நெய்ச்சிக்கு** *ney-c-cikku,* பெ. (n.) 1. நெய் குடலில் தங்குதலினா லுண்டாகும் செரிமானத் தடை; indigestion caused by ghee. 2. நெய்யைப் பூசிக்கொள்வதனா லுண்டாம் நாற்றம் (இ.வ.); rancid smell caused by smearing one's body with ghee.

*[நெய் + சிக்கு. சிக்கு = சிக்கிக் கொள்ளுகை, தடை செய்கை, எண்ணெய்ச்சிக்கு, சிக்கு நாற்றம்]*

**நெய்ச்சிக்குபேதி** *ney-c-cikku-pedi,* பெ. (n.) சிக்குப்பட்ட நெய்யை உட்கொள்வதனால் ஏற்படும் கழிச்சல்; purging due to taking rancid ghee in food. (சா.அக.).

*[நெய்ச்சிக்கு + Skt. பேதி]*

**நெய்ச்சிக்குபோக்கி** *ney-c-cikku-pōkki,* பெ. (n.) சிகைக்காய் (சீயக்காய்); soap-nut. (சா.அக.).

*[நெய்ச்சிக்கு + போக்கி]*

**நெய்ச்சிட்டி** *ney-c-ciṭṭi,* பெ. (n.) 1. காட்டுச் சீரகம்; wild cumin. 2. மரவகை; round sage-leaved Indian linden. 3. பவளக் குன்றிமணி (மலை.); crab's eye.

**நெய்ச்சிட்டிக்கிழங்கு** *ney-c-ciṭṭi-k-kiḻaṅgu,* பெ. (n.) செங்கழுநீர்க்கிழங்கு; bulb of Nymphae odorata. (சா.அக.).

*[நெய்ச்சிட்டி + கிழங்கு]*

**நெய்ச்சிந்தி** *ney-c-cindi,* பெ. (n.) பேய்க்கடலை; bitter Bengal gram - Cicer genus. (சா.அக.).

**நெய்ச்சீலா** *ney-c-cīla,* பெ. (n.) விலையும் சுவையும் மிகுதியான சீலா மீன் வகை; a kind of šīla fish. (க.ப.அ).

**நெய்ச்சீவிகம்** *ney-c-cīvigam,* பெ. (n.) **நெய்ச்சிந்தி** பார்க்க; see *ney-c-cindi.* (சா.அக.)

**நெய்ச்சுட்டி** *ney-c-cuṭṭi,* பெ. (n.) கீரை வகை (வின்.); a kind of greens.

*[நெய்ச்சட்டி → நெய்ச்சுட்டி]*

**நெய்ச்சுண்டு** *ney-c-cuṇḍu,* பெ. (n.) **1.** கலயத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் நெய் (வின்.); small quantity of ghee sticking to a pot. **2.** நெய்யளக்க உதவுஞ் சிறிய அளவுக்கருவி (தஞ்சை); small vessel for measuring ghee.

*[நெய் + சுண்டு. சுண்டு = ஒரு சிற்றளவு. காய்ச்சும்போது ஏனத்தின் அடியில் தங்குவது]*

**நெய்சாயம்** *ney-šāyam,* பெ. (n.) மெருகெண்ணெய்; varnish.

*[நெய் + சாயம். சாயம் = வண்ணம்]*

**நெய்த்தானம்** *ney-t-tāṉam,* பெ. (n.) தஞ்சை மாவட்ட ஊர்; a village in Tanjore district.

இவ்வூர் திருநெய்த்தானம் என்று முன் அடை பெற்று இன்று தில்லைத் தானம் என்று வழங்குகிறது. இவ்வூரை அப்பர் ***"நிலா வெண்மதி யுரிஞ்ச நீண்டமாட நிறைவயல் சூழ் நெய்த்தானம்"*** எனவும்,

*சம்பந்தர்,*

***"அறையும் புனல்வரு காவிரி யலை சேர் வடகரைமேல் நிறையும் புனை மடவார் பயில் நெய்த்தானமெனீரே"*** எனவும் புகழ்ந்து பாடுகின்றனர். முதலில் கோவில் பெயராக இருந்து பின் ஊர்ப்பெயராக மாறி இருக்கலாம்.

*[நெய் + தானம். கோயிலில் விளக்கெரிக்க நெய் அதிகமாக வழங்கிய ஊராக இருக்கும்.]*

**நெய்த்திருக்கை** *ney-t-tirukkai,* பெ. (n.) திருக்கை மீன் வகை (வின்.); a kind of thorn-back fish.

*[நெய் + திருக்கை. நெய் மிகுந்திருக்கும் மீன் வகை]*

**நெய்த்துடுப்பு** *ney-t-tuḍuppu,* பெ.(n.) **1.** வேள்விகளில் பயன்படுத்தும் நெய்க்கரண்டி (திவா.); spatula, used especially in Vēdic sacrifices. **2.** தீவட்டிக்காரர் பயன்படுத்தும் எண்ணெய்க்கலம்; vessel for oil used by torch bearers.

*[நெய் + துடுப்பு. துடுப்பு = சட்டுவம், அகப்பை, கரண்டி ]*

**நெய்த்தோர்[1]** *neyttōr,* பெ. (n.) நெய்ப்பதமுள்ள அல்லது நெய்போலுறையும் அரத்தம்; blood. ***"நெய்த்தோரிடையறா தொழுகுங் கோட்டு"*** (நைடதம்.போர்புர்.21). ***"நெய்த்தோர் வாய... குருளை"*** (நற்.2).

**க.** நெத் + தரு; **தெ.** நெத்துரு; **துட.** நெத்ஸ்; **கோத.** நெத்ர் (netr); **குட.** நெத்த; **து.** நெத்தரு; **கொலா.**நெத்ரு; **நா.** நெத்துரு; **பர்.** நெதிர்; **கட.** நெத்துர்; **கோண.**நத்துர்; **கூ.** நெகுதரி; **குவி.** நெதொரி; **பிரா.** திதர்.

*[நெய்+துவர் → நெய்த்தோர். துவர் = சிவப்பு, அரத்தம்.]*

**நெய்த்தோர்²** *neyttōr,* பெ. (n.) ஒதியமரம் (வைத்தியபரி); Indian ash tree.

**நெய்த்தோலி** *ney-t-tōli,* பெ. (n.) வெண்ணிற முள்ள சிறிய கடல் மீன் வகை (பதார்த்த.938); anchovy, silvery, Engraulis indicus.

*[நெய் + தோலி. நெய்போல் பளபளப்பும் வெண்மையும் உடைய மீன் வகை.]*

தீவக்குறை இந்தியாவின் கிழக்கு, மேற்கு ஆகிய இரண்டு கடற்கரைகளிலும் காணப்படும் சிறுமீன்கள். இவை மெல்லிய உடலினையும் கூரிய முகத்தையும் உடையன. தலைமுதல் வால் வரை வெள்ளி போன்று பளபளப்பான பட்டை ஒன்றிருக்கும். மேற்குக் கடற்கரைப்பகுதியில் ஆண்டுதோறும் இம்மீன் அதிகம் பிடிக்கப் படுகிறது. சுறவ மாதம் முதல் கடக (சனவரி முதல் சூன்) மாதம் வரை இம்மீன்கள் அதிகம் பிடிக்கப்படுகின்றன. இம்மீனை கருவாடாகச் செய்து சேமித்து வைப்பர். இம்மீன்கள் கரையருகேயே வாழும் இயல்புடையது.



**நெய்தல்¹** *neydal,* பெ. (n.) **1.** வெள்ளாம்பல்; white Indian water-lily. "*பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்கும்*" (ஐங்குறு.2) (திவா.). **2.** கருங்குவளைமலர்; blue nelumbo. "*காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்*" (குறிஞ்சிப்.84). **3.** செங்கழுநீர்க்கிழங்கு (சங்.அக.); tuber of red Indian water-lily.

**ம.** நெய்தல்; **து.** நைதிலெ; **க.** நெய்தல்.

*[நெய் → நெய்தல் = வறண்ட கோடைக் காலத்தும் குளநிலத்தோ டொட்டியிருக்கும் கொடி வகை.*

*"........அக்குளத்திற் கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே ஒட்டி யுறுவார் உறவு" (மூதுரை,17)]*

**நெய்தல்²** *neydal,* பெ. (n.) **1.** கடலும் கடல் சார்ந்த இடமும்; maritime tract. "*எற்பாடு நெய்த லாதல் மெய்பெறத் தோன்றும்*" (தொல்.பொருள்.8). **2.** நெய்தற்றிணையின் உரிப்பொருளாகிய இரங்கல்; sorrow of lovers due to separation, assigned by poetic convention to the maritime tract. "*நெய்தல் சான்ற வளம்பல*" (மதுரைக்.325). **3.** சாப்பறை; funeral drum. "*ஓரினெய்தல் கறங்க*" (புறநா.194). **4.** ஒரு பேரெண்; a big number. "*நெய்தலுங் குவளையும்*" (பரிபா.2:13)

**ம., க.** நெய்தல்.

*[நெய் → நெய்தல் = நெய்தல் கொடி வளரும் கடற்கரை (வே.க.)]*

**நெய்தல் தத்தனார்** *neydal-tattaṉar,* பெ. (n.) நெய்தற்றத்தனார் பார்க்க; see *neydaṟṟattaṉār.*

*[நெய்தல் + தத்தனார்]*

தத்தனார் என்பது இயற்பெயர். நெய்தலைப் பாடுவதில் வல்ல வராயிருந்ததால் நெய்தல் தத்தனார் என்று பெயர் வந்திருக்கலாம். நற்றிணையில் இவர் பாடிய பாட்டு நெய்தல் நிலத்தைப் புனைந்த துரைக்கிறது.

**நெய்தல்நிலம்** *neydal-nilam,* பெ. (n.) கடலோரப் பகுதி; sea coast countries maritime tract. (சா.அக.).

*[நெய்தல் + நிலம்]*

பழந்தமிழ்நாட்டில் நிலத்தியல்பைக் கொண்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாலை என ஐவகையாக நிலத்தைப் பிரித்தனர். இவற்றுள் கடலும் கடல் சார்ந்த பகுதிகளும் நெய்தல் எனப்படும். இந்நிலப்பகுதியில் நெய்தல் மலர் நிறைந்திருப்பதைக் கொண்டு இப்பெயர் வந்ததென்பர். இரங்கலும் இரங்கல் (நிமித்தமுமாகிய) குறியுமாகிய ஒழுக்கம் பற்றி இப்பெயர் வந்த தென்பாரும் உண்டு.

நெய்தல் நிலத்தலைவன் சேர்ப்பன், புலம்பன்; தலைவி பரத்தி, நுளைச்சி. இந்நிலமக்கள் பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர், வலையர், வலைச்சியர், என்று அழைக்கப்படுவர். இவர்களின் கடவுள் மழைக்கடவுளான வருணன். *"வருணன் மேய பெருமணலுலகம்"* என்பர் தொல்காப்பியர். இந்நிலமக்கள் உப்பையும் மீனையும் விற்றுக் கிடைக்கும் உணவுப் பொருளைக் கொண்டு வாழ்வர். இவர்களின் தொழில், மீன் பிடித்தலும், உப்பு விளைத்தலும், மீனைக் காயவைத்தலும், பறவைகளை யோட்டுதலும், கடலாடுதலும், தெப்பம் விடுதலும் ஆகும். இவர்கள் மீன்கோட் பறை, பம்பை, விளரியாழ் என்னும் இசைக் கருவிகளைப் பயன்படுத்துவர்; செவ்வழி என்னும் பண்ணை இசைப்பர். இங்குள்ள விலங்குகள் உப்பு மூட்டைகளைச் சுமக்கும் பகடும், கடற்சுறாவும், முதலையுமாகும். பறவைகள் அன்னமும் அன்றிலும். தாழை, நீர்முள்ளி, அடம்பு, புன்னை, ஞாழல் என்னும் மலர்களை இம்மக்கள் அணிவர். இவர்களுக்கு உவர் நீர்க்கேணியிலிருந்தும், மணற்கேணி யிலிருந்தும் நீர் கிடைக்கும். இவர்களின் ஊர் பேரூர், பட்டினம், சிற்றூர், பாக்கம் எனப்பெறும்.

காதலரைப் பிரிந்தவர்கள் தனிமை பொறாமல் இரங்கலும் அதற்குரிய குறியும் இந்நிலத்துக் குரிய அகவொழுக்கமென அகப்பொருளி லக்கணம் கூறும். புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடலென்னும் எல்லா அகவொழுக்கமும் எல்லா நிலத்திற்கும் உரியவை யெனினும், இந்நிலத்திற்கு இரக்கமே அகவொழுக்கமெனக் கூறுவது புலனெறிவழக்க மென்பர். இக்கரணியம்பற்றியே பிற்பகலாகிய எற்பாடு எனும் சிறு பொழுது இந்நிலத்திற்குரிய தென்பர். இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி யென்னும் பெரும் பொழுதுகள் ஆறும் இந்நிலத்திற் குரியனவே.

தன்வலிமையே பொருளாக வந்த வேந்தனை, மற்றொரு மன்னன் சென்று தடுத்துப் பொருவதாகிய தும்பைத் திணை இந்நிலத்திற்குரிய புறவொழுக்கம், மணல் பரந்த வெளியுங் களர்நிலமும் போர் செய் வதற்குத் தக்க சிறந்த இடமெனக் கொண்டு இத்திணை யிந்நிலத்திற் சிறந்த தென்பர்.

**நெய்தல்திணை** *neydal-tiṇai,* பெ. (n.) நெய்தல் நிலம்; coastal region.

*[ நெய்தல் + திணை.*
*திணை = ஒழுக்கம், நிலம் ]*

**நெய்தல்தெய்வம்** *neydal-teyvam,* பெ. (n.) வாரணன், மழைக்கடவுள் (வருணன்); Varuṇaṉ.

*[நெய்தல் + தெய்வம்]*

நெய்தல் தெய்வம் : நெய்தல் நில மக்கள், கடலில் மீன்பிடித்தும், உப்பு விளைவித்தும், முத்தும் பவழமுங் குளித்தும், நீர் வாணிகஞ் செய்தும், கடலாலேயே வாழ்ந்ததனால், தம் தெய்வத்தைக் கடல் தெய்வமாகவே கொண்டு, அதற்கு வாரணன் என்று பெயரிட்டனர்.

வள் → வர் → வார் → வார்தல் = வளைதல். வார் + அணம் = வாரணம். நிலத்தை வளைந்து அல்லது சூழ்ந்து இருப்பதால், கடல் வாரணம் எனப்பட்டது. வலம்புரியும் இடம்புரியுமான சங்கு வாரணம் எனப் பெயர் பெற்றதும், உள் வளைந்திருப்பதனாலேயே. வாரணம் → வாரணன் = கடலோன். வாரணன் → வ. வருண.

தொல்காப்பியர் ஆரியம் தமிழகத்தில் வேரூன்றிய காலத்தவராதலின், வருணன் என்று வடசொல் வடிவிற் குறித்தார்.

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"
(தொல்பொருள்.அகத்.5)

இந்திய வாரியிலும், அமைதி (Pacific) வாரியிலும் பெரியதும் வலியதும் கொடியதுமான மீன் சுறாவாதலால், அதன் முதுகந் தண்டை வாரணன்

சின்னமாக நட்டு, நெய்தல் வாணரான பரதவர் வணங்கியும் விழாவெடுத்தும் வந்தனர்.

"சினைச் சுறவின் கோடுநட்டு
மனைச் சேர்த்திய வல்லணங்கினால்
மடற்றாழை மலர் மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்
புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா
துவவுமடிந் துண்டாடியும்
புலவுமணற் பூங்கானல்
மாமலை யணைந்த கொண்மூப் போலவும்
தாய்முலை தழுவிய குழவிபோலவும்
தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை
மணக்கும்
மலியோதத் தொலிகூடற்
தீதுநீங்கக் கடலாடியும்" (பட்டினப்.86-99)

**நெய்தல்நிலத் தலைவன்** *neydal-nila-t-talaivaṉ,* பெ. (n.) சேர்ப்பன்; chief of maritime tract.

*[நெய்தல் + நிலம் + தலைவன். நெய்தல் நிலத் தலைவனின் பெயர்]*

**நெய்தல் நிலநீர்** *neydal-nila-nīr,* பெ. (n.) உவர்நீர்; brackish water.

*[நெய்தல் + நிலநீர். நெய்தல் நிலத்திற்குரிய நீர்]*

**நெய்தல்நிலவூர்** *neydal-nila-v-ūr,* பெ. (n.) பாக்கம்; Pākkam, the sea side village.

*[நெய்தல் + நிலவூர்]*

**நெய்தல்நிலப்பறவை** *neydal-nila-p-paṟavai,* பெ. (n.) கடல் காக்கை; a kind of sea-bird.

*[நெய்தல் + நிலப்பறவை. நெய்தல் நிலமான கடற்பகுதியில் காணப்படும் பறவை]*

**நெய்தல்நிலப்பறை** *neydal-nila-p-paṟai,* பெ. (n.) பம்பை (பிங்.); tabour coarse.

*[நெய்தல் + நிலப்பறை. கடலும் கடல் சார்ந்த நிலமான நெய்தல் நிலத்து முழங்கும் பறை]*



**நெய்தல்நிலப்பெண்** *neydal-nila-p-peṇ,* பெ. (n.) மீனவப் பெண், நுளைச்சி (பிங்.); a fisher-woman.

*[நெய்தல் + நிலப்பெண்]*

**நெய்தல்நிலமரம்** *neydal-nila-maram,* பெ. (n.)
1. அடம்புமரம்; a fragrant flowering tree.
2. கோங்குமரம்; red cotton tree.
3. தாழைமரம்; screw pine tree.
4. புன்னைமரம்; Indian beech tree.
5. முள்ளிச்செடி; thorny plant.

*[நெய்தல் + நிலம் + மரம். நெய்தல் நிலத்து வளரும் மரஞ்செடி கொடிகள்.]*

**நெய்தல்நிலத்தொழில்** *neydal-nila-t-toḻil,* பெ. (n.) 1. மீன்பிடிக்கை; fishing. 2. உப்பு விளைவிக்கை; salt plantation.

*[நெய்தல் + நிலம் + தொழில். நெய்தல் நிலமக்கள் செய்யும் தொழில்.]*

**நெய்தல்பூண்டோன்** *neydal-pūṇḍōṉ,* பெ. (n.) நெய்தல் மாலையணிந்த ஐயனார்

என்னும் ஊர்த் தெய்வம் (நாமதீப.43); a village deity, as wearing a garland of neydal.

*[நெய்தல் + பூண்டோன். பூண்டோன் = அணிந்தவன்.]*

**நெய்தல்யாழ்** *neydal-yāḻ*, பெ. (n.) நெய்தல் நிலப் பெரும்பண்களுள் ஒன்று (திவா.); a primary melody-type of neydal tract.

*[நெய்தல் + யாழ். நெய்தல் நிலமக்கள் இசைக்கும் யாழ்.]*

**நெய்தல்யாழ்த்திறம்** *neydal-yāl-t-tiṟam*, பெ. (n.) நெய்தல் நிலப்பண் வகை (திவா.); a secondary melody-type-of the neydal class.

*[நெய்தல் + யாழ்த்திறம். யாழ்த்திறம் = இசைப்பண்]*

**நெய்தல்வாயில்** *neydal-vāyil*, பெ.(n.) திருவள்ளுவர் மாவட்டம் பொன்னேரி வட்டத்தில் உள்ள ஊர்; a village in Thiruvalluvar Dt., Ponnēri taluk.

*[நெய்தல் + வாயில்]*

நெய்தல் நிலத்துக்கு இவ்வூர் வாயிலாக அமைவதாலும் நெய்தல் வாயில் எனப்பெயர் பெற்றது. நெய்தல் வாயில் மருவி நெய்தல் வாயல் என்று வழங்குகிறது.

**நெய்தல்விளைவு** *neydal-viḷaivu*, பெ. (n.) **1.** உப்பு; common salt. **2.** மீன்; fish. **3.** கடலில் மூழ்கிக் கிடைக்கும் பொருள்களான பவளம், முத்து முதலியன; substances obtained from the sea such as coral, pearl amber etc. (சா.அக.).

**மறுவ.** கடல்படுபொருள்கள்.

*[நெய்தல் + விளைவு]*

**நெய்தலாம்பல்** *neydal-āmbal*, பெ.(n.) ஒருவகை நீர்ச்செடி (M.M.588); fringed water-lily, Limnanthemum cristatum.

*[நெய்தல் + ஆம்பல். நெய்தல் நிலத்து வளரும் ஆம்பல் செடி.]*

**நெய்தற்கருப்பொருள்** *neydaṟ-karupporuḷ*, பெ.(n.) நெய்தல் நிலக் கருப்பொருள்; growing, ripening grain in Neydal land.

*[நெய்தல் + கருப்பொருள்]*

தெய்வம், தலைவர், மாக்கள், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணா, பறை, யாழ், பண், தொழில் முதலிய பதினான்கும் நெய்தல் நிலக் கருப் பொருள்கள். *"ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள் விலங்கு ஊர் நீர் பூ மரம் உணாப்பறை யாழ்பண் தொழிலெனக் கரு ஈ ரெழுவகைத் தாகும்"* (நம்பியகப்.19).

**நெய்தலின் கருப்பொருள்கள்**

| | | |
|---|---|---|
| தெய்வம் | : | வாரணன் (வருணன்) |
| தலைவன் | : | சேர்ப்பன், புலம்பன் |
| மக்கள் | : | பரத்தி, நுளைச்சி, நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர். |
| புள் | : | கடற்காக்கை |
| விலங்கு | : | சுறவம் |
| ஊர் | : | பாக்கம், பட்டினம் |
| நீர் | : | உவர் நீர்க்கேணி |
| பூ | : | நெய்தல், முண்டகம், கைதை, அடம்பு |
| மரம் | : | புன்னை, ஞாழல் |
| உணவு | : | மீன், உப்பு இவைகள் விற்றுப் பெறுவன |
| பறை | : | மீன்கோட்பறை, நாவாய், பம்பை |
| யாழ் | : | விளரியாழ். |
| பண் | : | செவ்வழிப்பண் |
| தொழில் | : | மீன் உப்புப்படுத்தல் (கருவாடாக்கல்) மீனை |

உணங்கவைத்தல், விற்றல்,
மீனை உணக்கல், புல்
ஒப்பல் நெடுங்கடல் ஆடல்.

"வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பரும அல்குல் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்
அளவர் அளத்தியர் அலைகடற் காக்கை
சுறவம் பாக்கம் பெறலரும் பட்டினம்
உவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டகம் அடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்
புலவு மீன்உப்பு விலைகளிற் பெற்றன
நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
விளரியாழ் செவ்வழி மீன் உப்புப்படுத்தல்
உணங்கவை விற்றல்மீன் உணக்கல்புள் ஒப்பல்
நெடுங்கடல் ஆடல் நெய்தற்கருப் பொருளே"
(நம்பியகப்.24)

## நெய்தற்கார்க்கியர் *neydar-kārkkiyar,*

பெ. (n.) கழகக் காலப் புலவர்; Šaṅgam poet.

*[நெய்தல் + கார்க்கியர்]*

கார்க்கியர் என்பது இவரின் இயற்பெயர். நெய்தல் திணையைப் பற்றி இவரது பாடல்கள் அமைவதால் நெய்தற்கார்க்கியர் எனப்பட்டார். 'மணிப்பூ முண்டகத்தின் வேறாய் மணிமருள் நெய்தலை மணப்பூ என வழங்கிக் காட்டி யதனால் இவர் நெய்தற்கார்க்கியர் எனப் பட்டனர் ஆவார்' என ஊகிப்பாருமுளர். நெய்தல் நிலத்தின் கழியிலுள்ள நீலப்பூக்கள் கூம்புவதும், கடல்வளி வீசுவதும் ஊதைக் காற்றுத் துன்பத்தை உண்டாக்குவதும், தலைவன் மணியொலிக்கத் தேரிலேறிக் கடற்கரை வழியாக வருவதும் இவர் பாடல் களில் சொல்லப்படுகின்றன. இவர் குறுந் தொகையில்.55, 212 ஆகிய பாடல்களைப் பாடியுள்ளார்.

"மார்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரைப் பொங்குபிதிர்த் துவலையொடு மங்குல் தைஇக் கையற வந்த தைவரல் ஊதையொடு இன்னா வுறையுட் டாகும் சின்னாட் டம்மவிச் சிறுநல்லூரே" (குறுந்.55).

"கொண்கன் ஊர்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்
தெண்கட லடைகரைத் தெளிமணி யொலிப்பக்
காணவந்து நாணப் பெயரும்
அளிதோ தானே காமம்
விளிவது மன்ற நோகோ யானே"
(குறுந்.212).

## நெய்தற்கிழங்கு *neydar-kilaṅgu,* பெ. (n.)

ஆம்பற்கிழங்கு; the tuberous roots of white Indian water lily, Nymphae pubescens alias N.stellata. (சா.அக.).

*[நெய்தல் + கிழங்கு]*

இக்கிழங்கை அவித்துச் சருக்கரையிட்டுச் சாப்பிட உடம்பிற்குக் குளிர்ச்சி ஏற்படும். பித்த எரிச்சல், அரத்தக் கழிச்சல் நீங்கும்.

## நெய்தற்சாய்த்துய்த்தஆவூர்கிழார் *neydar-cāyttuytta-āvūr-kilār,*

பெ. (n.) கடைக்கழகக் காலத்து வாழ்ந்த ஒரு புலவர்; Šaṅgam poet.

வேளாண்குலத்தவர். தலை மகனைத் தோழி வரைவு கடாவுவதாகச் செய்துள்ள இவரது அகப்பாடல் படிப்போர்க்கு இன்பம் தருவதாக அமைந்துள்ளது. இப்பாடலால் "மிக்க வேட்கை யுடையவரேனும் சான்றோர் பழியோடு வரும் இன்பத்தை விரும்பார், புகழோடு வரும் இன்பத்தையே விரும்புவர்" என்னும் நெறி விளக்கப்படுகிறது. இவ்வொரு பாட்டு மட்டுமே இவர் பாடியதாகக் காணப்படுகிறது.

"கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோ டுடைய வாங்கி
இரைநசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்
ஈன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி
ஒளிறேந்து மருப்பின் களிறட்டுக் குழுமும்
பனியிருஞ் சோலை எமியம் என்னாய்
தீங்கு செய் தனையே ஈங்குவந் தோயே
நாளிடைப் படினென் தோழி வாழாள்
தோளிடை முயக்க நீயும் வெய்யை
கழியாக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப
கணக்கலை இகுக்குங் கறியிவர் சிலம்பின்
மணப்பருங் காமம் புணர்ந்தமை அறியார்
தொன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலவிவள்
புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே"
(அகநா.112)

## நெய்தற்பறை *neydar-parai,* பெ. (n.)

1. நெய்தல் நிலத்து மக்கள் முழக்கும்

மீன்கோட் பறை, நாவாய் பறை (நம்பியகப்.24); drum peculiar to maritime tracts. 2. சாப்பறை (குறள்,1115, உரை); funeral drum.

*[நெய்தல் + பறை. பறை = கொட்டிசைக் கருவி.]*

**நெய்தற்றத்தனார்** *neydaṟṟattaṉār,* பெ. (n.) கடைக் கழகக் காலப் புலவர்; šaṅgam poet.

*[நெய்தல் + தத்தனார்]*

இவர் குடிக்கிழார் மகனார் நெய்தற்றத்தனார் எனவும் அழைக்கப்பட்டார். கொடியூர் கிழார் மகனார் நெய்தற்றத்தனார் எனவும் கூறப்படுகிறார் (அகநா.243). இவர் அகநா.243, நற்.49,130 ஆகிய பாடல்களைப் பாடியுள்ளார். இவரது இயற்பெயர் தத்தன். நெய்தலையும், பாலையையும் பாடுவதில் வல்லவர். நீ படும் துன்பத்தைத் தலைமகன் ஊருக்குச்சென்று அவன் அறிந்து கொள்ளும்படி கூறுவோம் என்று தோழி தலை மகளை நோக்கிக் கூறியதாக இவரது பாடல் காணப்படுகிறது.

"படுதிரை கொழீஇய பானிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறைபுலம் பின்றே
முடிவலை முகந்த முடங்கிறாப் பாவைப்
படுபுள் ளோப்பலிற் பகன்மாய்ந் தன்றே
கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்டமடிந்து
எமரும் அல்கினர் ஏமார்ந் தனமெனச்
சென்றுநாம் அறியின் எவனோ தோழி
மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றிற் றாழையொடு கமழுந்
தென்கடற் சேர்ப்பன்வாழ் சிறுநல் ஊர்க்கே"
(நற்.49).

இதுநெய்தற்றிணைப் பாடல்.

"அவரை ஆய்மலர் உதிரத் துவரின
வாங்குதுளைத் துகிரின் ஈங்கை பூப்ப
இறங்குபோ தவிழ்ந்த ஈர்ம்புதற் பகன்றை
கறங்குநுண் துவலையின் ஊருழை யணியப்
பெயனீர் புதுவரல் தவிரச் சினைநேர்பு பீள்விரிந்
திறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி
நெல்லொலி பாசவல் துழைஇக் கல்லெனக்
கடிதுவந் திறுத்த கண்ணில் வாடை
நெடிதுவந் தனையென நில்லா தேகிப்
பலபுலந் துறையுந் துணையில் வாழ்க்கை
நம்வலத் தன்மை கூறி யவர்நிலை
அறியு மாயின் நன்றுமன் தில்ல
பனிவார் கண்ணே மாகி யினியது
நமக்கே யெவ்வம் ஆகின்று
அனைத்தாற் றோழிநந் தொல்வினைப் பயனே"
(அகநா.243).

இது பாலைத் திணைப்பாடல்.

**நெய்தனிலநீர்** *neydaṉila-nīr,* பெ. (n.) உவரி நீர்; salt water. (சா.அக.).

*[நெய்தல் + நிலம் + 'நீர்]*

**நெய்தனிலப்பறவை** *neydaṉila-p-paṟavai,* பெ. (n.) கடற் காக்கை (நம்பியகப்.24); sea crow.

*[நெய்தல் + நிலம் + பறவை]*

**நெய்தனிலமக்கள்** *neydaṉila-makkaḷ,* பெ. (n.) கடற்கரைப் பகுதியில் வாழும் மக்கள் நுளையன், நுளைச்சி (நம்பியகப்.24); people living in the maritime coastal tract.

*[நெய்தல் + நிலம் + மக்கள்]*

**நெய்தாங்கி** *ney-tāṅgi,* பெ. (n.) விளக்கு வகை (I.M.P.S.A.402); a lamp.

*[நெய் + தாங்கி. நெய்யூற்றி எரிக்கும் விளக்குவகை]*

**நெய்தை** *neydai,* பெ. (n.) பெருமை (பிங்.); greatness, dignity, importance.

*[நெய்–³ → நெய்தை]*

**நெய்நெட்டி** *ney-neṭṭi,* பெ. (n.) சம்பங்கோரை (சங்.அக); elephant grass.

*[நெய் + நெட்டி. நெட்டி = கோரைவகை. நெய்போல் பளபளப்பான சம்பங்கோரை]*

**நெய்ப்பசை** *ney-p-pašai,* பெ. (n.) எண்ணெய்ப் பசை; oilness, greasiness. (சா.அக.)

*[நெய் + பசை]*

**நெய்ப்பந்தம்** *ney-p-pandam,* பெ. (n.) 1. நெய்யூற்றி எரிக்கும் பந்தம்; torch burning ghee. 2. இறந்தவரின் உடலுக்குக் கொள்ளி வைப்பதற்காக நெய்யில் நனைத்த தீப்பந்தம்; torch fed with ghee used for lighting funeral pyre. 3. இறந்தவரின் உடலைச் சுற்றி பேரன், பேர்த்திகள் பிடிக்கும் நெய்யில் நனைத்த பந்தம்; torch fed with ghee holding grand son and grand daughter at the time of funeral. *தாத்தாவின் சாவில் பேரன்பேத்திகள் நெய்ப் பந்தம் பிடித்தல் மரபு.*

*[நெய் + பந்தம். பந்தம் = தீவட்டி, தீத்திரள்]*

**நெய்ப்பயிறு** *ney-p-payaṟu,* பெ.(n.) சிறுதுவரை; small leaved ebony, Diosphyros microphylla. (சா.அக.).

**நெய்ப்பரி** *ney-p-pari,* பெ.(n.) பன்னாடை; the web at the bottom of the palmyra tree the fiber covering about the base of palmyra tree. (சா.அக.).

*[நெய்யரி → நெய்ப்பரி]*

**நெய்ப்பற்று** *ney-p-paṟṟu,* பெ. (n.) 1. நெய்யின் ஒட்டுந்தன்மை; greasiness, stickiness of ghee. *இத்தின்பண்டத்தில் நெய்ப்பற்று மிகுந்ததுள்ளது.* 2. கொழுப்பு; fat corpulence.

*[நெய் + பற்று. பற்று = பசை]*

**நெய்ப்பாகம்** *ney-p-pāgam,* பெ.(n.) நெய்யினால் செய்யும் பண்டங்கள்; ghee preparations. (சா.அக.).

*[நெய் + பாகம்]*

**நெய்ப்பான** *ney-p-pāṉa,* கு.பெ.எ.(adj.) கொழுத்த; filled with fat, fatty.

*[நெய் → நெய்ப்பான]*

**நெய்ப்பிடி** *ney-p-piḍi,* பெ. (n.) நெய்ப்பற்று (வின்.) பார்க்க; see *ney-p-paṟṟu.*

*[நெய் + பிடி]*

**நெய்ப்பிடிப்பு** *ney-p-piḍippu,* பெ. (n.) நெய்ப்பற்று (வின்.) பார்க்க; see *ney-p-paṟṟu. சர்க்கரைப் பொங்கலில் நெய் பிடிப்பு மிகுதி.*

*[நெய் + பிடிப்பு]*

**நெய்ப்பிரியக்காய்ச்சு-தல்** *ney-p-piriya-k-kāyccu-,* 5செ.குன்றாவி.(v.t.) எண்ணெய் வெளிவரும்படி காய்ச்சுதல்; boiling down till the material which is boiled gives out or sheds all its oil contents. (சா.அக.)

*[நெய் + பிரிய + காய்ச்சு-தல்]*

**நெய்ப்பிலி** *neyppili,* பெ.(n.) ஒரு வகை மாணிக்கக் குற்றம்; flaw in a ruby. "*சந்தை நெய்ப்பிலி யெனத் தகுபதினாறும்*" (கல்லா.97).

*[நெய்ப்பு + இலி. நெய்ப்பு இல்லாத மாணிக்கம். நெய்ப்பு = பளபளப்பு]*

**நெய்ப்பீர்க்கு** *ney-p-pīrkku,* பெ.(n.) நுரைப்பீர்க்கு (மலை.); oil-giving luffa.

*[நெய் + பீர்க்கு]*

**நெய்ப்பு**[1] *neyppu,* பெ. (n.) 1. நெய்ப்பத முடைத்தாயிருக்கை (திருக்கோ.56,உரை); unctuousness, oiliness. *இனிப்பில் நெய்ப்புத்*

*தன்மை அதிகம்.* 2. பளபளப்பு (சீவக.169. உரை); shining appearance, gloss, polish. 3. கொழுப்பு (வின்.); fatness, plumpness. 4. சீழ் (வின்.); pus, matter.

*[நெய் → நெய்ப்பு. நெய் = பளபளப்பு]*

**நெய்ப்பு**[2] *neyppu,* பெ. (n.) 1. சிதல்; white ant. 2. புல்லாமணக்கு; creeping castor plant, Sebastiana chamaclea. (சா.அக.).

*[நெய் → நெய்ப்பு]*

**நெய்ப்புச்சுவரி** *neyppu-c-cuvari,* பெ. (n.) மான் செவிக்கள்ளி (சங்.அக.); spurge.

*[நெய்ப்பு + சுவரி. சுவறுதல் = வற்றுதல், உறிஞ்சப்படுதல். சுவறு → சுவரி.]*

**நெய்ப்புள்ள** *neyppul̩l̩a,* பெ.எ. (adj.) 1. கொழுப்புள்ள; unctuous. 2. எண்ணெய்ப் பசையுள்ள; oleaginous. (சா.அக.).

*[நெய் → நெய்ப்பு + உள்ள]*

**நெய்ம்மிதி** *ney-m-midi,* பெ.(n.) *நெய்ம்மி திகவளம்* பார்க்க; see *ney-m-midi-kaval̩am.* "*நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மதி பெறாஅ*" (புறநா.44).

*[நெய் + மிதி]*

**நெய்ம்மிதிகவளம்** *ney-m-midi-kaval̩am,* பெ.(n.) குதிரை, யானைக்குக் கொடுக்க நெய்கலந்து மிதித்துத் திரட்டப்பட்ட உணவு; food for elephants and horses, rolled into balls after mixing it with ghee and trampling it with foot. "*நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளம்*" (பெரும்பாண்.394)

*[நெய்ம்மிதி + கவளம். கவளம் = உணவுத்திரள்]*

**நெய்ம்மீன்** *ney-m-min,* பெ. (n.) 1. பதினான்காம் விண்மீன் (சித்திரை); the 14th nakṣatra. 2. வெள்ளிறால் மீன் (வின்.); white prawn.

*[நெய் + மீன். நெய்யின் தன்மை கொண்ட மீன்.]*

**நெய்மரம்** *ney-maram,* பெ. (n.) நெய்யைப் போல் உறையும் எண்ணெய் உள்ள வெண்ணெய் மரம்; name given to several tress, the fruit or bark which yields a solid oily or fatty substance such as Mowah butter, Cokum butter, Cocoa butter etc.

**மறுவ.** வெண்ணெய் மரம்

*[நெய் + மரம்]*

**நெய்முட்டை** *ney-muṭṭai,* பெ.(n.) நெய் யெடுக்குங் கரண்டி; spoon for taking ghee. "*நெய்முட்டை யொன்று வெள்ளி எண்பத்தேழு கழஞ்சு*" (தெ.க.தொ.2:418).

*[நெய் + முட்டை. முட்டை = சிறுகரண்டி]*

இங்கு முட்டி எடுப்பதால் முட்டை என்பது கரண்டி என்ற பொருளில் வந்தது.

**நெய்யடிசில்** *ney-y-aḍišil,* பெ. (n.) நெய் கலந்த சோறு; rice food mixed cow's ghee. (சா.அக.).

**மறுவ.** நெய்ச்சோறு.

*[நெய் + அடிசில்]*

**நெய்யணி** *ney-y-aṇi,* பெ. (n.) மகப்பேற்றின் பிறகு குழந்தைக்குச் செய்யும் மங்கல நீராட்டுச் சடங்கு; the ceremonial oil-bath taken after the birth of a child. "*கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை*"

(தொல்.பொருள்.147). *"மையாடிய தடங்கண்ண னொரு நன் மகவுயிர்த்து நெய்யாடினள்"* (வெங்கைக்கோவை,360).

*[நெய் + அணி. எண்ணெய் கலந்த நீரால் குழந்தையைக் குளிப்பாட்டும் விழா.]*

**நெய்யரி** *ney-y-ari,* பெ. (n.) தென்னை, பனை முதலிய மரங்களில் மட்டைகளை மரத்தோடு பிணைக்கும் வலைபோன்ற பகுதி, பன்னாடை; the fibrous covering about the base of the palmyra or cocoanut stalk. *"அன்னமாவே மண்ணொடுகிளியே யில்லிக்குடமா டெருமை நெய்யரி அன்னர்"* (நன்.38).

*[நெய் + அரி. அரி = பனங்கருக்கு]*

**நெய்யல்** *neyyal,* பெ. (n.) நெசவு செய்கை; weaving.

*[நெய் → நெய்யல்]*

**நெய்யற்கயிறு** *neyyar-kayiru,* பெ. (n.) நெசவு செய்யும் நெய்வார் கருவியுளொன்று (யாழ்.அக.); a weaver's implement.

*[நெய்யல்+ கயிறு. நெய்வதற்குப் பயன்படும் கயிறு]*



**நெய்யன்னம்** *ney-y-annam,* பெ. (n.) **நெய்யடிசில்** பார்க்க; see *ney-y-adišil.* (சா.அக.).

*[நெய் + அன்னம்]*

**நெய்யாட்டல்** *ney-y-āttal,* பெ. (n.) வெண்ணெய் திரட்டல்; collecting butter. (சா.அக.).

*[நெய் + ஆட்டல். நெய் என்ற சொல் வெள் + நெய் = வெண்ணெய், எள் + நெய் = எண்ணெய் என்னும் பொருளில் வருவது வழக்கம்.]*

**நெய்யாட்டு** *ney-y-āttu,* பெ. (n.) **நெய்யாடல்** பார்க்க; see *ney-y-āḍal.* (சா.அக.).

*[நெய் + ஆட்டு]*

**நெய்யாடல்** *ney-y-āḍal,* பெ. (n.) **1.** திருவிழாக் காலங்களில் மங்கலமாக ஆடும் எண்ணெய் முழுக்கு; oil bath. *"இவளைத் தோற்பித்ததுக்கு நெய்யாடல் போற்றுகிறபடி"* (ஈடு, 7.3:1). **2. நெய்யணி** பார்க்க; see *ney-y-aṇi.*

*[நெய் + ஆடல். ஆடல் = நீராடல். அல்– ஈற்றுத் தொழிற் பெயர்.]*

**நெய்யாடு–தல்** *ney-y-āḍu-,* 5செ.கு.வி. (v.i.) **1.** எண்ணெய்த் தேய்த்து மங்கல நீராடல்; to take oil-bath, on festive occasions. *"அண்டர் மிண்டிப்புகுந்து நெய்யாடினார்"* (திவ். பெரியாழ்.1.1:5). **2.** நெய்பூசுதல்; to anoint. *நெய்யாடிய வேல்.*

*[நெய் + ஆடு. ஆடுதல் = நெய் முதலியன பூசி நீராடுதல். இது தல்லீற்றுத் தொழிற் பெயராகவும் வரும்.]*

**நெய்யுண்டை** *ney-y-uṇḍai,* பெ. (n.) நெய் கலந்த சோற்றுத் திரள் (இ.வ.); ball of food mixed with ghee. *கோயிலில் நெய்யுண்டை கொடுத்தார்கள்.*

*[நெய் + உண்டை. உண்டை = சோற்றுத் திரள், கவளம். உருண்டை → உண்டைஇடைக்குறை.]*

**நெய்யுண்ணி** *ney-y-uṇṇi,* பெ. (n.) கொடி வகை, ஐவிரலி; ghee eater from its medicinal property, creeper known as bryony, Bryonia laciniosa. (சா.அக.).

**நெய்யுருண்டை** *ney-y-uruṇḍai,* பெ. (n.) நெய்யுண்டை (இ.வ.) பார்க்க; see *ney-y-uṇḍai.*

*[நெய் + உருண்டை]*

**நெய்யுலை** *ney-y-ulai,* பெ.(n.) உணவு சமைத்தற்காக நெய் காய்ச்சுகின்ற உலை; pot of ghee heated for cooking. "*நெய்யுலை சொரிந்த மையூ னோசை*" (புறநா.261)

*[நெய் + உலை. உலை = நெருப்புள்ள அடுப்பு]*

**நெய்யேற்று-தல்** *ney-y-ēṟṟu-,* 5செ.கு.வி.(v.i.) அருகம்புல்லை நெய்யிற் தோய்த்து மணமக்கள் தலையில் மகளிர் வாழ்த்தித் தடவுதல்; to bless a bride and bridegroom by stroking their heads with quitch grass soaked in ghee. "*மன்னுவாய் திருவோ டென்று வாழ்த்திநெய் யேற்றினாரே*" (சீவக.2417).

*[நெய் + ஏற்று. ஏற்றுதல் = வாழ்த்துதல்]*

**நெய்வண்ணவோவியம்** *ney-vaṇṇa-v-ōviyam,* பெ. (n.) எண்ணெயில் வண்ணங் களைக் கரைத்து வரைந்த ஓவியம்; oil painting.

*[நெய் + வண்ணம் + ஓவியம்]*

ஓவியக்கலை சிறந்த நிலையை அடைய நெய்வண்ண முறை முதற் கரணியமாக இருந்தது. இம்முறையைப் பெல்சிய நாட்டு பிளாண்டர் (flanders) பகுதியைச் சேர்ந்த யான் வான் ஐக் (Jan Van Eyck 1389–1440) என்பவர் கண்டுபிடித்தார். இவருக்கு முன்பு வண்ணங்களைக் குழைக்க முட்டைக் கருவையோ, தண்ணீரையோ பயன்படுத்தினர். இவருடைய முயற்சியால் ஆளிவிதை போன்ற விதைகளின் எண்ணெய் பயன்படும் என்பது தெரிய வந்தது. எண்ணெயில் கரைத்துத் தீட்டப் பெறும் ஓவியங்கள் ஒளிபெற விளங்குவதோடு தண்ணீர்பட்டால் அழி வதில்லை.

மற்ற முறைகளில் ஓவியத்தை வரைந்த பிறகு அதன்மேல் வேறு வண்ணங்களைத் தீட்டிப் படத்தை மாற்ற முடியாது; மாற்றவும் கூடாது. ஆனால், நெய்வண்ணங்களைப் பலவாறு, பலநாள், பலமாதம், பல ஆண்டுங்கூட வண்ணந் தீட்டிக் கொண்டி ருக்கலாம்.

**நெய்வார்** *neyvār,* பெ. (n.) நெசவு செய்பவர் (யாழ்.அக.); the caste of weavers.

க. நேயுவவரு

*[நெய்[1] → நெய்வு + ஆர்]*

**நெய்வான்மீன்** *ney-vāṉ-mīṉ,* பெ.(n.) 14 ஆம் விண்மீன் (சித்திரை); (திவா.) the 14th *nakṣatra.*

மறுவ. நெய்ம்மீன்.

*[நெய் + வான்மீன். விண்ணில் உள்ள 27 நாண்மீன் தொகுதிகளுள் ஒன்று.]*

**நெய்விலை** *ney-vilai,* பெ. (n.) வரிவகை (தெ.க.தொ.2, 352); a tax.

*[நெய் + விலை. சாந்துடன் சேர்ந்து இறுகப் பிடித்துக் கொள்ளும் நெய் போன்ற பொருளுக்கு வாங்கப்பட்ட வரியாகலாம்.]*

**நெய்விழா** *ney-viḻā,* பெ. (n.) நெய்யாடல் பார்க்க; see *ney-y-āḍal.* "*உலகெலா முவகை நெய்விழாப் பரம்பின்*" (கம்பரா.மருத்து.106).

*[நெய் + விழா. நெய்யால் குளிப்பாட்டும் விழா.]*

**நெய்விழுது** *ney-viḻudu,* பெ.(n.) **1.** உறைந்த நெய்; congealed ghee. **2.** புதிதாகத் திரண்ட வெண்ணெய் (வின்.); butter freshly prepared from cream.

*[நெய் + விழுது. விழுது = வெண்ணெய், நீர்விட்டரைத்துத் திரட்டியது]*

**நெய்விளக்கு**[1] *ney-viḷakku,* பெ. (n.) **1.** கோயில்களில் நெய்யூற்றி யெரிக்கும் விளக்கு; lamp fed with ghee. ***கோயிலில் நெய்விளக்கு வைத்தால் ஊழ் வினை அகலும் என்பது பழமை நம்பிக்கை.*** **2.** தெய்வத்துக்கு முன் ஏற்றும் மாவிளக்கு (இ.வ.); lamp of dough burnt with ghee before an idol. ***நெய் விளக்குப் போட நேர்ந்து கொண்டேன்.***

*[நெய் + விளக்கு]*



**நெய்விளக்கு**[2] *ney-viḷakku,* பெ. (n.) நாகை மாவட்டம் திருமறைக்காடு வட்டத்தில் உள்ள ஊர்; a village in Thirumaṟaikkāḍu taluk, Nāgapaṭṭiṉam district.

திருமறைக்காட்டுக் கோயிலில் விளக்கு எரிப்பதற்காக இவ்வூர்ப் பகுதியில் இலுப்பை மரங்கள் வளர்க்கப்பட்டன. அதற்காகவே இப்பகுதி மானியமாக வழங்கப்பட்டது. விளக்கெரிக்க நெய் கொடுக்கும் ஊராகையால் நெய் விளக்கு எனப்பட்டது.

**நெய்வு** *neyvu,* பெ. (n.) நெசவு (உ.வ.); weaving. ***நூலை நெய்வு செய்ய வேண்டும். நெய்வுக்கு ஆள்வேண்டும்.***

*[நெய்[1] → நெய்வு]*

**நெய்வெட்டி** *ney-veṭṭi,* பெ. (n.) **1.** பழுப்பு நிறமுள்ள கடல் மீன் வகை; mud-skipper, olive-brown, *Periophthalmus koelreuteri.* **2.** ஒன்பது விரலம் வளரக் கூடியதும் பழுப்பு நிறமுள்ளதுமான கடல் மீன் வகை; mud-skipper, brownish, attaining **9** inch in length, Periophthalmus schlosseri.

*[நெய் + வெட்டி. நெய்யின் மணமும், எண்ணெய்ப் பசையுமுடைய மீன் வகை]*



**நெய்வேலி** *neyvēli,* பெ. (n.) தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டத்தில் அமைந்துள்ள நகரம்; a town in Cuddalore district.

தமிழ்நாட்டில் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் இடம். இந்நிலக்கரியைப் பயன்படுத்தி அனல் மின்சாரம் இங்குச் செய்யப்படுகிறது. நிலநடுக்கத்தில் நிலத்துள் புதைந்த காடு சில்லாயிரம் ஆண்டுகளில் வெட்டப்படின் பழுப்பு நிலக்கரியும், பல்லாயிரம் ஆண்டுகள் கழித்து வெட்டப்படின் கருப்பு நிலக்கரியும், ஓரிலக்கம் ஆண்டு சென்ற பின் வெட்டி எடுக்கப்படின் வயிரமும் கிடைக்கும் என்பது நிலவியல் ஆய்வுக் குறிப்பு.

'வேலி' என்பது நிலவளவைப் பெயர்களுள் ஒன்று. சில இடங்களில் நெல் விளையும் கழனியையும் 'வேலி' என்னும் சொல் குறிக்கிறது. (நெல் வயல்கள் நிறைந்த இடத்தில் அமைந்த ஊராகையால் நெல்வேலி எனப் பெயர் பெற்று பின் நெய்வேலி ஆயிற்று எனலாம்.)

**நெய்வை—த்தல்** *ney-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மருந்து நெய் செய்தல்; (இ.வ.); to make medicated ghee. 2. கொழுப்பேறுதல் (யாழ்.அக.); to become fat. *உடம்பில் நெய் வைத்து விட்டது.*

*[நெய் + வை—த்தல்.]*

**நெர்க்குண்டி** *nerkkuṇḍi,* பெ. (n.) நொச்சி மரம் (மலை.); chaste tree.

**நெரடு¹—தல்** *neraḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நெருடு—தல்* பார்க்க; see *neruḍu-.*

*[நெருடு—தல் → நெரடு—தல்.]*

**நெரடு²—தல்** *neraḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கடினமாதல்; to be rough, hard. *தரை நெரடுது.* 2. தட்டுப்படுதல் (வின்.); to be halting. *அந்தப்பாட்டில் இரண்டிடங்கள் நெரடுகின்றன. நாவில் ஏதோ நெரடுது.*

*[நெருடு → நெரடு—தல்]*

**நெரடு³** *neraḍu,* பெ. (n.) *நெருடு* பார்க்க; see *neruḍu.*

*[நெருடு + நெரடு.]*

**நெரலைத்தாளி** *neralai-t-tāḷi,* பெ. (n.) தாளிக்கொடி வகை; a kind of hedge bind weed, Ipomaea genus. (சா.அக.).

**நெரளைதாளி** *neraḷai-tāḷi,* பெ. (n.) மரவகை (பாண்டி) ; a tree, Antidesma alexiteria.

**நெரி¹—தல்** *neri-,* 2 செ.கு.வி. (v.i.) 1. நெருங்கியுரசி நொறுங்குதல்; to be crushed, broken, smashed; to crack. *"தலை பத்து நெரியக் காலாற் றொட்டானை"* (தேவா.17,7). 2. நிலை கெடுதல் (சூடா.); to be routed. 3. நெருங்குதல்; to be crowded together. *"நெரிமுகைக் காந்தள்"* (பரிபா.14:13). 4. வளைதல்; to arch, curve, bend. *"புருவம் நெரிந்தேற"* (திவ்.பெரியாழ்.3.6:2). 5. நசுங்குதல்; to crack. "செழும் பரம்பு தோறும் படிந்து நெரிந்தவே" (அரிச்ச. நாட்டுச்.34).

ம. நெரியுக

*[நுல்(பொருந்தல்) → நுள் → நெள் → நெரு → நெரி →நெரி—தல் (மு.தா). நெரிதல் = நெருங்குதல், உரசுதல், நசுங்குதல், வளைதல். இது தன்வினைவடிவம்.]*

**நெரி²—த்தல்** *neri-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நொறுக்குதல்; to break to pieces. 2. நசுக்குதல்; to crush, press, squeeze. *"கழை நெரித்து வீழ்த்த சாறு"* (சேதுபு. திருநாட்.78). *"வளைக்கரநெரித்து"* (திருவிளை. விருத்த 34.). *பொதுகூட்ட நெரிசலில் சிக்கிக் காலை இழந்து விட்டான்.* 3. கையால் கூலம் (தவச) முதலியவற்றை நிமிண்டுதல் (வின்.); to rub or crush with the hand, as ears of grain. *கம்பங் கதிரைக் கையால் நெரித்துத் தின்றான். "கம்பங் கதிரைக் கண்டாலும் கை நிக்காது அம்மான் மகளைக் கண்டாலும் வாய் நிக்காது" (பழ.).* 4. துன்பம் முதலியவற்றால் மகளிர் கைவிரல்களை அழுத்திச் சேர்த்தல்; to break the knuckles, as women in distress. *"கையைக் கையினெரிக்கும்"* (கம்பரா. நகர்நீங்கு.11). 5. கைவிரல்களைச் சுடக்குதல்; to crack, as the fingers. *கால் விரல்களைச் கொஞ்சம் நெரித்து விடு.* 6. நிலைகெடச் செய்தல் (திவா.); to rout. 7. திறமையாய் நடத்துதல் (வின்.); to acquit oneself creditably. 8. நெருங்குதல்; to approach. *"ஊரிப்பூம் பழன நெரித்து"* (புறநா.249). 9. குவித்தல் (இ.வ.); to crowd together. 10. இறுக்கி அழுத்துதல்; strangle throtile. *நான் தான் அவர் விரலை நெரித்து ஒடித்தேன்.*

*[நெரி¹— → நெரி²—. இது பிறவினை வடிவம்.]*

**நெரி³** *neri,* பெ. (n.) **1.** நெரிவு; crack, bruise, smash. **2.** புடைவையின் கொய்சகம் (யாழ்.அக.); close and short plaits of cloth in wearing. **3.** சொரசொரப்பு; roughness. *"நெரிபுறத்தடற்று வாளும்"* (சீவக.2517).

*[நெரி¹ → நெரி³]*

**நெரி⁴** *neri,* பெ. (n.) **1.** புண்புறப்பாடு முதலியவற்றால் கைகாற் சந்துகளில் உண்டாகும் புடைப்பு; temporary swelling in joints due to boil, etc. *இந்தக் காயத்தின் கரணியமாகக் தொடையில் நெரிகட்டி யிருக்கிறது. "தென்னை மரத்தில் தேள் கொட்டினால் பனைமரத்தில் நெரி கட்டுமா" (பழ.).* **2.** நோய்வகை; debility.

*[நெறி → நெரி]*

**நெரிக்கோரை** *neri-k-kōrai,* பெ. (n.) கோரைவகை (இ.வ.); a kind of sedge.

*[நெரி¹ + கோரை. கோரை = புல்வகை.]*

**நெரிகட்டி** *neri-katti,* பெ. (n.) *நெறிக்கட்டி* பார்க்க; see *neṟi-k-katti.*

*[நெரி → நெரிகட்டி. புண் முதலியவற்றில் உள்ள நோயை உண்டாக்கும் பூச்சிகள், நுண்ணுயிரிகள் (கிருமிகள்) உடலில் பரவாமல் தடுப்பதற்காக அவற்றின் அருகில் உள்ள நிணநீர் முடிச்சு வீக்கம் அடைதல்]*

**நெரிகட்டிசுரம்** *neri-katti-šuram,* பெ. (n.) *நெறிக்கட்டிச் சுவரம்* பார்க்க; see *neṟi-k-katti-šuvaram.*

*[நெறிக்கட்டிச்சுவரம் → நெரிகட்டிசுரம்]*

**நெரிகுரல்படு-தல்** *neri-kural-padu-,* 20செ.கு.வி. (v.i.) குழந்தைகட்கு குற்றம், தீட்டு (தோஷம்) முதலியவைகளால் குரல் கம்முதல்; affection of throat through cold, sore throat in children due to planetary influence. (சா.அக.).

*[நெரிகுரல் + படு-தல்]*

**நெரிகொட்டை** *neri-kottai,* பெ. (n.) நறுக்கிய பாக்கு (யாழ்ப்.); crumpled areca nuts.

*[நெரி + கொட்டை. நெரித்தல் = நொறுக் குதல். கொட்டை = பாக்குக் கொட்டை]*

**நெரிசம்** *nerišam,* பெ. (n.) ஈட்டி (இ.வ.); spear.

**நெரிசல்¹** *nerišal,* பெ. (n.) **1.** நெரிந்தது; anything broken or cracked. **2.** நெருக்கமாக இருக்கும் கூட்டம்; the state of being overcrowed, as of a place. *கடற்கரைக் கூட்டத்தில் நெரிசல் மிகுதி. தலைவரின் இறுதி ஊர்வல நெரிசலில் பலர் மாண்டனர். கோயில் திருவிழா நெரிசலில் பலருக்குப் புண் ஏற்பட்டது.* **3.** மனவேறுபாடு; misunderstanding.

*[நெரி¹ → நெரியல் → நெரிசல்]*

ஓரிடத்தில் அளவுக்கு அதிகமாக மக்கள் அல்லது ஊர்திகள் குவிவதால் ஏற்படும் தேக்கநிலை.

**நெரிசல்²** *nerišal,* பெ. (n.) **1.** கண்ணோவு வகை (இ.வ.); corneal ulcer. **2.** பசலை நோய் (நாமதீப்.585); dull colour of the skin.

*[நெரி → நெரிசல். நெரிதல் = நிலை கெடுதல்.]*

**நெரிஞ்சகத்தி** *neriñjakatti,* பெ. (n.) நெரிஞ்சியிலை; leaf of caltrops - Ground burnut, Tribulus terrestris-leaf of. (சா.அக.).

**நெரிஞ்சி** *neriñji,* பெ. (n.) *நெருஞ்சி* (உ.வ.) பார்க்க; see *neruñji.*

*[நெரி→ நெரிஞ்சி. நெரிதல் = நொறுங்குதல்]*

நெருஞ்சியை சாம்பசிவம் மருத்துவ அகர முதலி நெரிஞ்சி என்றே வழங்குகிறது. நெரிஞ்சி என்பது பேச்சு வழக்கு.

**நெரிஞ்சிக்கீரை** *neriñji-k-kīrai,* பெ. (n.) நெருஞ்சியிலை; leaves of small caltrops. (சா.அக.).

*[நெரிஞ்சி + கீரை]*

**நெரிஞ்சிமுள்** *neriñji-muḷ,* பெ. (n.) நெருஞ்சிக்கொடியின் முள்; leaves of small caltrops. (சா.அக.).

*[நெரிஞ்சி + முள்]*



**நெரிஞ்சில்** *neriñjil,* பெ. (n.) *நெருஞ்சில்* பார்க்க; see; *neruñjil.* (சா.அக.).

*[நெருஞ்சில் + நெரிஞ்சில்]*

**நெரிநெட்டி** *neri-neṭṭi,* பெ. (n.) சம்பங்கோரை (மலை.); elephant-grass.

*[நெரி + நெட்டி. நெட்டி = கோரை வகை. நெருங்கி வளரும் கோரை வகை.]*

**நெரிநெட்டிவாங்கு–தல்** *neri-neṭṭi-vāṅgu-,* 5செ.கு.வி.(v.i.) நெட்டியை முறித்தல்; to be arduous exhausting. *வேலை நெரிநெட்டி வாங்குகிறது.*

*[நெரி³ + நெட்டிவாங்கு–தல்]*

**நெரிநேவி** *neri-nēvi,* பெ. (n.) *நெரிநெட்டி* பார்க்க; see *neri-neṭṭi* (சா.அக.).

**நெரிபிடி–த்தல்** *neri-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கொய்சகம் வைத்தல் (யாழ்.அக.); to plait one's cloth in wearing. *நெரிபிடித்துச் சேலை கட்டக் கற்றுக் கொள்.*

*[நெரி³ + பிடி–த்தல்]*

**நெரிபுருவம்** *neri-puruvam,* பெ. (n.) கண் புருவம்; eye-brow

*[நெரி + புருவம்.]*

**நெரிபுலம்** *neri-pulam,* பெ. (n.) கண் புருவம்; eye-brow (சா.அக.).

*[நெரி + புலம்.]*

**நெரிபூசம்** *neri-pūšam,* பெ. (n.) சொக்காங் கீரை; a kind of grans. (சா.அக.).

**மறுவ.** சொக்காக்கீரை

**நெரிமடு–தல்** *neri-maḍu-,* 4 செ.கு.வி. (v.i.) நசுங்குதல்; be crumpled. *திருவிழாக் கூட்டத்தில் நெரிமடுபட்டு வெளியே வருவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.*

*[நெரி + மடு–தல். மடுதல் – தன்வினை. மடுத்தல் – பிறவினை.]*

**நெரிமீட்டான்** *neri-miṭṭāṉ,* பெ. (n.) புண்ணை ஆற்றும் ஒருவகைப் பூடு(வின்.); a herb the root of which is used for curing bruises.

*[நெரி[1] + மீட்டான்]*

**நெரியரிசிப்பால்** *neri-y-ariši-p-pāl,* பெ. (n.) *நெரியாசிப்பாற்செடி* (M.M. **856**) பார்க்க; *see neriyāši-p-pāṟ-ceḍi.*

*[நெரி + அரிசி + பால். நெரியாசி → நெரியரிசி + பால்]*

**நெரியல்** *neriyal,* பெ. (n.) மிளகு; black pepper. "*நெரியற் புணர்ப்பொறை தாங்கிய... கழுதை*" (பெரும்பாண்.78).

*[மிரியல் → நெரியல்.மிரியல் = மிளகு]*

உறைப்புமிக்க மிளகைத் தேள் கடி போன்ற சிறு நச்சு இறங்க சிலர் அரிசியோடு கலந்து உண்பர். வெறும் மிளகை மிகுதியாய் உண்டால் குரலில் மாற்றம் ஏற்படும்.

**நெரியாசம்[1]** *neriyašam,* பெ. (n.) நறும்புகை யுண்டாக்குதற்குரிய பண்டத்தொகுதி ஆறனுள் ஒன்றான, நெரியாசிப்பால் மரத்தின் பிசின்; juice of Java storax.

*[நிரியாசம் → நெரியாசம். நிரியாசம் = ஒருவகை மணப்பிசின்]*

நறும்புகை யெழுப்பப் பயன்படும் பொருள்கள்: நேர்கட்டி, செந்தேன், நிரியாசம், கர்ப்பூரம், ஆரம், அகில். "நேர்கட்டி செந்தேன், நிரியாசம், பச்சிலை ஆரம் அகிலு றுப்போராறு" என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். 5:14). "நேர்கட்டி செந்தேன் நிரியாசங் கப்பூரம் ஆர மகிலுறுப்போ ரைந்து" (சீவக.534.) என்று நச்சினார்க்கினியர் கூறுவார்.

**நெரியாசம்[2]** *neriyāšam,* பெ.(n.) எரிகாசு, காசுக்கட்டி; a kind of perfuming ingredient (சா.அக.).

**நெரியாசி** *neriyāši,* பெ.(n.) *நெரியாசிப்பால்[2]* பார்க்க; see *neriyāši-p-pāl.*

**நெரியாசிப்பால்[1]** *neriyāši-p-pāl,* பெ. (n.) ஒருவகைப் பெருமரம் (M.M. **856**); Java storax, Altingia excelsa.

**நெரியாசிப்பால்[2]** *neriyāši-p-pāl,* பெ. (n.) **1.** நெரியாசிப்பாற் செடியின் பட்டையினின்று வடிக்கும் ஒருவகைப் பாற்பிசின்; Indian storax, Liquid amber orientale. It is a milk resin collected from the bark of the gigantic tree. It is also known as Indian silaurus. (சா.அக.) **2.** ஒருவகை மரம்; Indian storax tree, Liquidambar orientale.

இப்பிசின் உடம்பின் வெப்பத்தைப் போக்கும், தலைநோய், தும்மல், இசிவு முதலியவற்றையும் குணமாக்கும் என்பது பழைய மருத்துவக் குறிப்பு.

*[நெரியாசி + பால்.]*

சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலி நெரியாசிப்பால் நெரியாசிப்பாற் செடி என இரண்டாக காட்டும் மரவகையைச் சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி ஒன்றாக ஒரே மரவகை யாகக் காட்டுகிறது. சென்னை பல்கலைக் கழக அகரமுதலி Java storax, Altingia excelsa என்பதைப் பெருமரம் என்றும், Indian storax, Liquid amber orientole என்பதை நீண்ட மரவகை என்றும் கூறுகிறது. ஆனால் சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி Java storax என்பதைக் கூறவில்லை. Indian storax-Altangia excelsa alias liquid amber altingis என்று இரண்டு பயிரியல் பெயர்களையும் ஒன்றாகவே காட்டுகிறது.

**நெரியாசிப்பாலெண்ணெய்** *neriyāši-p-pāleṇṇey,* பெ.(n.) *நெரியாசிப் பாற்செடி* பார்க்க; see *neriyāši-p-pāṟceḍi.* (சா.அக.).

**நெரியாசிப்பாற்செடி** *neriyāši-p-pāṟceḍi,* பெ. (n.) நீண்ட மரவகை, நெரியாசிப் பால் மரம்; Indian storax tree, Liquidambar orientale.

இது செடி என்னும் பெயரிலுள்ள ஒரு மரம். இது அறுபது முதல் 100 அடி வரை உயரமான மரம். இதன் இலையின் இருபுறமும் மொசுமொசுப்பாய் அல்லது இலையின் அடிப்பாகத்தின் நரம்புகளில் இழைகள் பொருந்தியிருக்கும். இதன் பட்டை கசப்பு, உறைப்பு குணமுடையது; மணமுடையது; குத்தினால் பால் வரும். இதன் பாலினின்று வடிக்கும் எண்ணெய் மருத்துவ குண முடையது. (சா.அக.).

**நெரிவருணச்சுக்கிரன்** *neri-varuṇa-c-cukkiraṉ,* பெ.(n.) கருவிழியில் சிவந்த புள்ளியை உண்டாக்கும் ஒருவகைக் கண்ணோய்; a red flesh growth in the black of the eye. (சா.அக.).

**நெரிவிடம்** *neri-viḍam,* பெ. (n.) கலப்பைக் கிழங்கு; plough root, Gloriosa superba. (சா.அக.)

**நெரிவிளா** *neriviḷā,* பெ. (n.) நிலவாகை; Indian senna, Tinneveely senna, Senna indica alias cassia lanceolata alias c.elongata. (சா.அக.)

**நெரிவு** *nerivu,* பெ. (n.) 1. சொடுக்கு; cracking. *விரல்களில் நெரிவு எடுப்பதில் இவன் வல்லவன்* 2. நசுக்குகை; pressing, crushing. 3. பகை (வின்.); variance, discord, disunion.

*[நெரி[1] → நெரிவு]*

**நெருக்கட்டியெனல்** *neru-k-kaṭṭi-y-eṉal,* பெ. (n.) 1. எதிர்பாராது வருதற்குறிப்பு; onom. expr-signifying suddenness, abruptness. 2. விரைவுக்குறிப்பு; promptness, quickness. 3. ஒடிதற்குறிப்பு; sudden breaking, as of a stick. 4. ஒலியுடன் திடீரென விழுதற்குறிப்பு (வின்.); falling suddenly with a crash.

*[நெருக்கடி → நெருக்கட்டி + எனல்]*

**நெருக்கடம்** *nerukkaḍam,* பெ. (n.) நெருக்கம், (இ.வ.); நெருக்கியழுத்தும் நிலை; pressure. *வாழ்க்கையில் ஒரு நெருக்கடமும் இல்லை.*

தெ. நெக்கடமு

*[நெருக்கு → நெருக்கடம்]*

**நெருக்கடி** *nerukkaḍi,* பெ. (n.) 1. நெருக்கம் (இ.வ.); pressure. *நெருக்கடியில் வந்து பணம் கேட்டான். கடன் நெருக்கடி.* 2. இக்கட்டான நேரம்; busy time; time of preoccupation, critical time. *இந்தியாவுக்கு இது நெருக்கடியான நேரம்.* 3. போக்குவரவு ஊர்திகள், மக்கள் போக வர இயங்க இடம் போதாத நிலை; want of space. 4. தேவையான பொருட்கள் கிடைக்காத நிலை, பற்றாக்குறை; financial squeeze or straits. *பணநெருக்கடி.* 5. நெருக்கும் மக்கட் கூட்டம்; overcrowed of people. 6. சடுத்த நிலை; urgency. 7. வறுமைத்தொல்லை; poverty. 8. கடுந்துன்ப நிலை; difficulty.

*[நெருக்கு → நெருக்கடி]*

**நெருக்கடிநிலை** *nerukkaḍi-nilai,* பெ.(n.) உள்நாட்டுப்போர், கலகம் முதலானவை ஏற்படுகின்ற நேரத்தில் அரசு கூடுதல் அதிகாரங்களை மேற்கொண்டு செயல்பட வேண்டிய நிலை; state of emergency in a country. (சா.அக.).

*[நெருக்கடி + நிலை]*

**நெருக்கம்** *nerukkam,* பெ. (n.) 1. இடைவெளியில்லாத செறிவு (பிங்.); denseness, crowded state. 2. ஒடுக்கம்; narrowness, straitness, tightness. *நெருக்கமான பாதை.* 3. வேலைக்கடினம், வேலையினால் ஏற்படும் துன்பம் (உ.வ.); pressure of business,

closeness of application. **4.** இடைவிடாமை; frequency, constancy. *பணம் வேண்டு மென்று நெருக்கமாய் வந்து கேட்டான். அவனுக்கு அருகில் நெருக்கமாக உட்கார்ந்து கொண்டான்.* **5.** *விரைவு;* urgency. *திருமணம் நெருக்கத்தில் நடந்ததால் உனக்கு அழைப்பிதழ் அனுப்ப இயலவில்லை.* **6.** துன்பம்; distress, trouble. **7.** வலுக்கட்டாயம் **(உ.வ.)**; complusion, restraint. **8.** கொடுமை **(வின்.)**; oppression, tyranny. **9.** நோய் முதலியவற்றின் கடுமை; severity, as of the times, the weather or an epidemic. **10.** கையிறுக்கம்; closefistedness. **11.** நெருக்கமான உறவுகள், அண்மை, nearness, closeness. **12.** இறுதிக் காலம், (இறப்பு வாயில்); approach of death. **13.** நெருங்கிய பழக்கம்; closeness, intimacy. *நெருக்கமான உறவினர்களை மட்டுமே திருமணத்திற்கு அழைத்தான்.* **14.** குறைந்த வேறுபாடு, மிகுந்த ஒற்றுமை; affinity, closeness. *தமிழும், மலையாளமும் நெருக்கமான தொடர்புடைய மொழிகள். நாட்டியத்திற்கும் இசைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.*

*[நெருக்கு → நெருக்கம்]*

**நெருக்கமான** *nerukkamāṉa,* பெ. (n.) **1.** செறிவான; dense. **2.** இறுக்கமாக இணைக்கப்பட்ட; compact.

*[நெருக்கம் + ஆன – நெருக்கமான.]*

**நெருக்கல்[1]** *nerukkal,* தொ.பொ. (vbl.n.) *நெருங்கு–தல்* பார்க்க; see *nerṅkku-.*

**நெருக்கல்[2]** *nerukkal,* தொ.பொ.(vbl.n.) நெருக்குதல்; to press hard. "நேரடர்ந்து நெருக்கலின்" **(அரிச்சந். நகரச்.3.).**

*[நெருக்கு → நெருக்கல்]*

**நெருக்கவாரம்** *nerukka-vāram,* பெ. (n.) **1.** வறுமை (தரித்திரம்); destitution. **2.** நெருக்கம்; be close together.

**நெருக்கிக்கூறு–தல்** *nerukki-k-kūru-,* 5 செ.குன்றாவி. (v.t.) இடித்துச் சொல்லுதல்; to rebuke.

*[நெருக்கு → நெருக்கி + கூறு–தல்]*

**நெருக்கிடை** *nerukkiḍai,* பெ. (n.) *நெருக்கடி* பார்க்க; see *nerukkaḍi.*

*[நெருங்கு → நெருக்கு + இடை – நெருக்கிடை]*

**நெருக்கித்தள்ளு–தல்** *nerukki-t-taḷḷu-,* 5செ.கு.வி. (v.i.) முட்டி மோதுதல்; to knock against.

*[நெருக்கி + தள்ளு–தல்.]*

**நெருக்கித்தாக்கு–தல்** *nerukki-t-tākku-,* 5 செ.கு.வி. (v.i.) சூழ்ந்துகொண்டு தாக்குதல்; to beset. **(ந.அக.)**

**நெருக்கிப்பார்–த்தல்** *nerukki-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** வற்புறுத்துதல்; to press. *நெருக்கிப் பார்த்துக் கடனைக்கேள்.* **2.** முயற்சி யெடுத்தல் **(வின்.)**; to try, take pains. *தேர்வுக்கு எவ்வளவோ நெருக்கிப் பார்த்தேன்; இருந்தாலும் மதிப்பெண் குறைவு தான்.*

*[நெருக்கு + இ + பார்–த்தல்]*

**நெருக்கிப்பிடி[1]–த்தல்** *nerukki-p-piḍi-,* 4செ.குன்றாவி. (v.t.) **1.** தொடர்ந்து பற்றுதல்; to come in close pursuit of, to press hard, to overtake. *கையை நெருக்கிப் பிடித்துக்*

*கொண்டு செல்.* **2.** செட்டாக இருந்து மிச்சம் பிடித்தல் (உ.வ.); to save by economy.

*[நெருக்கு+ இ + பிடி –த்தல்]*

**நெருக்கிப்பிடி²–த்தல்** *nerukki-p-piḍi-,* 4செ.கு.வி.(v.i.) மிகுதியாக வுண்ணுதல் (வின்.); to eat too fast or too much, used in burlesque. *சாப்பாட்டை இன்று நெருக்கிப் பிடித்தேன்.*

*[நெருக்கு+ இ + பிடி –த்தல்]*

**நெருக்கு¹–தல்** *nerukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** செறியச் செய்தல்; to put close, to set thick. *நெருக்கி யம்முடி நின்றிசை வானவர் (தேவா.927,5).* **2.** சுருக்குதல்; to circumscribe, contract. **3.** ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளுதல்; to press hard, exert pressure upon. *மரமுமலையும்... சென்று நெருக்கலால் (கம்பரா.முதற்போர்.10). கூட்ட மில்லா விட்டாலும் நெருக்கித் தள்ளுகின்றனர்.* **4.** நசுக்குதல் (தேவா.1117,9); to squeeze, bruise, mash.**5.** வருந்துதல் (பு.வெ.11, பெண்பாற்.8,உரை); to oppress, persecute, distress. **6.** வருத்திக் கேட்டல்; to urge, importune, solicit earnestly, as a creditor. *கடன் கொடுத்தவர்கள் நெருக்குகின்றனர்* **7.** அமுக்குதல்; to choke, smother, throttle. **8.** கட்டாயப் படுத்துதல் (பலவந்தம் பண்ணுதல்); to compel, force, coerce. **9.** தாக்குதல் (வின்.); to attack, assail, assault.

*[நெருங்கு –தல் → நெருக்கு –தல். பிறவினை வடிவம்.]*

**நெருக்கு²–தல்** *nerukku-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** விடாப்பிடியாயிருத்தல்; to be frequent persevere. **2.** உரத்தல்; to rage, prevail, as famine; to be severe, as epidemics; to be abundant, as rain.

*[நெருங்கு –தல் → நெருக்கு –தல். பிறவினை வடிவம்]*

**நெருக்கு³–தல்** *nerukku-,* 5செ.குன்றாவி.(v.t.) **1.** ஆலை, செக்கு முதலியவற்றிலிட்டு ஆட்டுதல்; to press, as in a mill, to crush. *"நல்ல கரும்பு நெருக்கிச் சாறுதிரட்டி வட்டாகச் செய்த அக்காரமும்"* (திவ். பெரியாழ்.2.9:7, வியா.பக்.468). **2.** குறிப்பிட்ட ஒரு செயலைச் செய்யும்படி வலியுறுத்துதல்; வற்புறுத்துதல்; pressurize. *வாங்கிய கடனைத் திருப்பித் தரும்படி நெருக்குகின்றனர். உடனே வேலையை முடிக்கச் சொல்லி நெருக் கினார்கள்.*

*[நெருங்கு –தல் → நெருக்கு –தல் பிறவினை வடிவம்]*

**நெருக்கு⁴** *nerrukku,* பெ. (n.) *நெருக்கம்* (பு.வெ.11, பெண்பாற்.8, உரை) பார்க்க; see *nerukkam.*

*[நெருங்கு → நெருக்கு]*

**நெருக்கு⁵** *nerukku,* பெ. (n.) வள்ளத்தின் உள்ளுறுப்பு (மீனவ); canoe's part. (க.ப.அ.)

வள்ளம் = மீன்பிடிபடகு

**நெருக்குவாரம்** *nerukkuvāram,* பெ.(n.) *நெருக்கடி* (யாழ்ப்.) பார்க்க; *see nerukkaḍi.*

*[நெருக்கு + வாரம்]*

**நெருக்கெனல்** *nerukkeṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு (வின்.); expr. of suddenness, promptness.

*[நெருக்கு + எனல்]*

**நெருங்கப்பிசைதல்** *neruṅga-p-pišaidal,* பெ.(n.) அழுத்திப் பிசைதல்; squeezing by pressing hard with force. (சா.அக.).

*[நெருங்கு + பிசைதல் → நெருங்கப்பிசைதல். பிசைதல்– தல் ஈற்றுத்தொழிற்பெயர்]*

**நெருங்கல்** *neruṅgal,* பெ. (n.) **1.** செறிவு (திவா.); throng, press. **2.** கண்டிப்புச் சொல் (வின்.); reprimand.

*[நெருங்கு + அல். அல்– தொ.பெ.]*

**நெருங்கவியலாத** *neruṅga-v-iyalāda,* பெ.எ. (adj.) அருகில் சென்றிட முடியாத; difficult to meet or reach.

*[நெருங்கு → நெருங்க + இயலாத]*

**நெருங்கிக்கூறு–தல்** *neruṅgi-k-kūṟu-,* 5செ.கு.வி.(v.i.) மறுதலித்தல்; to rebuke. (ரு.அக.)

*[நெருங்கு → நெருங்கி + கூறு–தல்]*

**நெருங்கித்தழுவு–தல்** *neruṅgi-t-taḻuvu-,* 5செ.கு.வி.(v.i.) மிக அருகில் சென்று அணைத்தல்; to snuggle. (சா.அக.).

*[நெருங்கு → நெருங்கி + தழுவு–தல்]*

**நெருங்கிய** *neruṅgiya,* பெ.எ.(adj.) உறவு, நட்பு, தொடர்பு முதலியவற்றால் நெருக்கமான; close, intimate. *நெருங்கிய உறவினர், நெருங்கிய நண்பர், நெருங்கியத் தொடர்புடைய மொழிகள்.*

*[நெருங்கு → நெருங்கி → நெருங்கிய]*

**நெருங்கியநாடி** *neruṅgiya-nāḍi,* பெ.(n.) படபடப்பாகத்துடிக்கும் நாடி; frequent pulse. (சா.அக.).

*[நெருங்கிய + நாடி.]*

**நெருங்கு¹–தல்** *neruṅgu-,* 5செ.கு.வி.(v.i.) **1.** அண்மையாதல்; to be near, approximate. *பேருந்து நெருங்கி வந்து விட்டது, மாட்டு வண்டியை ஒதுக்கி ஓட்டு.* **2.** செறிதல்; to be close together, to crowd. *"நெருங்கு மடியார்களு நீயுநின்று"* (திருவாச.21:7). **3.** நெருங்கிய வுறவாதல்; to be close, as relationship, connection. *நெருங்கின சுற்றத்தான்.* **4.** ஒடுக்கமாதல்; to be confined, narrow, as a road or doorway. **5.** நசுங்குதல் (வின்.); to be pressed, compressed, squeezed. **6.** தொடர்தல்; to be frequent. *என்னிடம் நெருங்கி வருபவன்.* **7.** முனைப் பாதல் (திவா.); to be vehement, to prevail, as disease, famine, wild beasts, robbers. **8.** நிகழ்ச்சி அல்லது ஒன்றைச் செய்வதற்குரிய நேரம் விரைந்து வருதல், விரைவாதல்; to be urgent. *கடமை (காரியம்) நெருங்குகிறது.* விளக்கணி விழா (தீபாவளி) *நெருங்கி விட்டது.* **9.** மீதூர்தல் (திவா.); to increase; to grow excessive; to be overwhelming.

*[நுல்(பொருந்தல்) → நுள் → நிள் → நிர் → நெர் → நெரு → நெருங்கு → நெருங்கு–தல் (வே.க.)]*

**நெருங்கு²–தல்** *neruṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** கிட்டுதல், அணுகுதல்; to approach; to go near. *"பொய்கைகளை நெருங்க"* (புறநா.249, உரை). *அந்தக் கட்சியின் ஊர்வலம் கடற்கரையை நெருங்கியது.* **2.** இடித்துக் கூறுதல்; to rebuke. *"கிழவனை நெருங்கி யிழைத்து"* (தொல்.பொருள்.150). **3.** சினத்தல்; to be angry with. *"மகப்பழித்து நெருங்கலும்"* (தொல்.பொருள்.147). **4.** உறவில், கொள்கையில் வேற்றுமை குறைந்து ஒற்றுமைப்படுதல்; come closer in understanding etc. *எதிரும் புதிருமாக இருந்த நண்பர்கள் நெருங்கி வருகின்றனர். எதிரும் புதிருமாக இருந்த கட்சிகள் தேர்தல் நேரத்தில் உறவுகொள்ள நெருங்கி வருகின்றன.*

*[நெருங்கு–¹ → நெருங்கு–² ]*

**நெருஞ்சி** *neruñji,* பெ. (n.) முட்கள் நிறைந்த காய்களையும், மஞ்சள் நிறப் பூக்களையும், சிறுசிறு இலைகளையும் கொண்ட, கொத்தாகத் தரையில் படர்ந்து வளரக்கூடிய செடி வகை; cow's thorn, a small prostrate herb, Tribulusterrestris. *"நெருஞ்சிக் காடுறு கடுநெறியாக"* (பதிற்றுப்.26). *நெருஞ்சி முள் தைத்தாலும் குனிந்துதான் பிடுங்க வேண்டும்.* (பழ.)

நெருஞ்சி : இது ஒரு முட்செடி, ஒன்றை ஒன்று பற்றி நிற்கும். இலைகள் நேர் நேராகச் சிறகைப் போன்றது. இலைக்காம்பு இலையைவிடக் குட்டையானது. பூக்கள் கிளைகளினின்று பிரிந்து சிறு காம்புகளின் மேல் நிற்கும். உள்ளிதழ் 5 பிரிவுகளாயிருக்கும். இலைகள் அகலமாகவும் நான்கு மூலையாகவும் இருக்கும். காய்கள் சிறியவை, முள்ளுள்ளது; பூக்கள் பெரியன, மஞ்சள் நிறமுடையது; ஆண்டு முழுதும் பூக்கும். எங்கும் காணப்படும்; குளம், குட்டை, வாய்க்கால் எங்கும் காணப்படும்.

இதன் காய், இலை, வேர் இவைகள் மருந்தாகப் பயன்படுகின்றன. நீரை வெளிப்படுத்தும்; பாண்டு, வெள்ளை முதலியவற்றைக் குணப்படுத்தும். இதன் கொம்புகளை மோரில் போட்டு அதனைத் தடிப்பாக்குவர். காய்கள் முள்ளுள்ளதால் நடப்போர்க்குத் துன்பம் தரும். துணிகளில் ஒட்டிக் கொண்டு குத்தும்.

இது உலகம் முழுவதும் காணப்படும் செடி; தரையின் மேல் படிந்து, பல கிளைகள் விட்டு படர்ந்து வளரும். ஒரு கணுவில் வளரும் இரண்டு கூட்டிலைகளில் ஒன்று பெரியதாகவும், ஒன்று சிறியதாகவும் இருக்கும். அடுத்த கணுவில் பெரிய இலை இருந்த பக்கம் சிறிய இலையும், சிறிய இலை இருந்த பக்கம் பெரிய இலையுமாக மாறி இருக்கும். இப்படியே கிளை நெடுகிலும் இருக்கும். இதனால் இலைகள் ஒன்றை யொன்று மறைக்காமல் எல்லாம் ஞாயிற்றின் ஒளியை முற்றிலும் ஏற்கக் கூடும். பூக்கள் இலை கக்கங்களில் தனித்து (solitary) உண்டாகும். இதன் கனி கடலை அளவினது; கனியின் முதுகுப்புறத்தில் முட்கள் இருக்கும்; இதுகாலில் குத்தும் இயல்புடையது; அதனால் தரைத் தொந்தரவு என்ற பெயரும் உண்டு.

வகைகள் : 1. ஆணை நெருஞ்சில், 2. செப்பு நெருஞ்சில், 3. சிறுநெருஞ்சில், 4. கருநெருஞ்சில், 5. கொடி நெருஞ்சில், 6. பெரு நெருஞ்சில் (சா.அக.).

சிறுநீர் தொடர்பான நோய்களுக்கு நெருஞ்சி மருந்தாகிறது என்பது சித்தமருத்துவக்குறிப்பு.



**நெருஞ்சிப்பச்சை** *neruñji-p-paccai,* பெ. (n.) *நெருஞ்சி* பார்க்க; *see neruñji.* (சா.அக.).

**நெருஞ்சிப்பாகல்** *neruñji-p-pāgal,* பெ. (n.) மிதி பாகல்; a kind of balsam pear.

*[நெருஞ்சி + பாகல். நெருஞ்சிமுள் போன்ற (மேல்பகுதி) தோற்ற முடையபாகல்]*

**நெருஞ்சிப்பூ** *neruñji-p-pū,* பெ. (n.) ஓரணிகலன் (கல்.); an ornament.

*[நெருஞ்சி + பூ. நெருஞ்சிமுள் போல தோற்றமுடைய அணிகலன். இஃது உவமையாகுபெயர்]*

**நெருஞ்சிப்பூச் செயல்** *neruñji-p-pū-c-ceyal,* பெ. (n.) நெற்றிப் பட்டையின் தொங்கல் வகை (தெ.க.தொ.2,163); a neruñji-shaped pendant of a frontlet.

*[நெருஞ்சி + பூச்செயல். நெருஞ்சிப்பூ போல் அழகு செய்யப்பட்ட தொங்கல் வகை.]*

**நெருஞ்சில்** *neruñjil,* பெ. (n.) *நெருஞ்சி* பார்க்க; *see neruñji. "நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தான்"* (திருமந்.1617.).

*[நெருஞ்சி → நெருஞ்சில்]*

**நெருஞ்சின்முள்** *neruñjiṉ-muḷ,* பெ. (n.) படைக்கல வகை (சூடா.); a weapon.

*[நெருஞ்சில் + முள். நெருஞ்சி முள்போல் குத்தும் படைக்கலன். இஃது உவமைத் தொகை.]*

*நெருஞ்சி முள்போல் வடிவமும், வலிமையும் உடைய படைக்கலக் கருவியாகக் கொள்ளலாம்.*

**நெருட்டுக்கருத்து** *neruṭṭu-k-karuttu,* பெ. (n.) 1. கருகலான கருத்து; abstruse notion. 2. கருகலான பொருள்; abstruse meaning, as of a passage.

*[நெருடு → நெருட்டு + கருத்து. நெருடு = கருகலானது, கரடுமுருடானது, வஞ்சமானது.]*

**நெருட்டுப்புத்தி** *neruṭṭu-p-putti,* பெ. (n.) 1. கரவு (வஞ்சக) நெஞ்சம்; guileful disposition. 2. கோணலறிவு; perverted intellect.

*[நெருடு → நெருட்டு + புத்தி. நெருடு = ஏய்ப்பு (வஞ்சனை). Skt. buddhi → த.புத்தி = அறிவு]*

**நெருடல்[1]** *neruḍal,* பெ. (n.) 1. தன்னுடைய தவறான செய்கை அல்லது கரணியம் (காரணம்) புரியாத பிறருடைய செயல் பாட்டினால் மனதில் உண்டாகும் நிகழ்வு; the troubled feelings resulting from one's guilty conscience or one's inability to figure out something. *இராமன் வாலியை ஏன் மறைந்து நின்று கொன்றான் என்ற நெருடல் மனதில் இருந்து கொண்டே இருந்தது. இக்கட்டான நேரத்தில் நண்பனுக்கு உதவமுடியவில்லையே என்ற நெருடல் மனதில் இருந்து கொண்டே இருக்கிறது.* 2. ஒத்துக் கொள்ளத் தயக்கம் ஏற்படுத்தும் சிறு வேறுபாடு; uneasy feeling caused by unevenness. *கதையில் ஒரே ஒரு இடத்தில் தான் நெருடல்; தேர்வில் ஓர் இடத்தில் நெருடல் ஏற்பட்டது.*

*[நெருடு → நெருடல்]*

**நெருடல்[2]** *neruḍal,* பெ. (n.) ஒத்துக் கொள்ளத் தயங்கும் நிலையை உண்டாக்கும் சிறு வேறுபாடு; an uneasy feeling caused by unevenness.

*[நெருடு → நெருடல்]*

**நெருடன்** *neruḍaṉ,* பெ. (n.) 1. ஏய்ப்பவன் (வஞ்சகன்) (வின்.); deceitful, scheming man. 2. கெட்டிக்காரன் (இ.வ.); clever man.

*[நெருடு → நெருடன். நெருடு = வஞ்சனை]*

**நெருடி** *neruḍi,* பெ. (n.) 1. ஏய்ப்பவள் (வஞ்சகி); deceitful, scheming. 2. கெட்டிக்காரி; clever woman.

*[நெருடன் (ஆ.பா.) → நெருடி(பெ.பா)]*

**நெருடு[1]-தல்** *neruḍu-,* 5செ.குன்றாவி.(v.t.) 1. நிமிண்டுதல்; to roll in the hand; to rub gently with the fingers. *"ஒருகை யாலொரு முலைமுக நெருடா"* (திவ்.பெருமாள்.7:7). *முள்ளை நெருடிக் கொண்டே இருக்காதே குத்தி விடும்.* 2. நிமிண்டிஇழை பொருத்துதல்; to roll two broken ends of yarn between the fingers and join them. *"இழை நக்கி நூனெருடு மேழை அறிவேனோ"* (தமிழ்நா.19). 3. திரித்தல்; to twist. *"அருமைப் பழைய மொழியைத் திருடி நெருடிக் கவிபாடி"* (திருப்பு.265). *நூலைக் கொஞ்சம் நெருடிக் கொடு.* 4. கை, கால் ஆகியவற்றால் தடவுதல் (வின்,); to feel with the hand. *மாட்டின்*

*முதுகை நெருடிக் கொண்டிராதே.* **5.** ஏய்த்தல், (வஞ்சித்தல்) (யாழ்ப்.); to deceive, cheat. **6.** ஒன்றின் மீது சிறிய பொருள் அல்லது சமபரப்பு அழுத்தி உராசுதல்; have an uneasy sensation. *காலில் முள் நெருடுகிறது. உள்ளங்கையில் ஏதோ நெருடுகிறது; பிடுங்க வேண்டும்.* **7.** ஒத்துக் கொள்ளத தயக்கம் ஏற்படும் வகையில் சிறிது வேறுபடுதல்; feel uneasy because something is uneven. *கட்டுரையின் நான்காம் பத்தி கொஞ்சம் நெருடுகிறது.*

*[நுல் → நுள் → நிள் → நிர் → நெர் → நெரு → நெருடு → நெருடு–தல்]*

**நெருடு²** *nerudu,* பெ. (n.) **1.** நிமிண்டுகை; rubbing with the fingers. **2.** இழை பொருத்துகை; twisting two ends of yarn between the fingers and joining them. **3.** தடவுகை; feeling with the hands. **4.** ஆடையிற் பிதிர்ந்தெழும் நூல் முடிச்சு (வின்.); knots in a cloth from the joinings of the yarn. **5.** கருகலானது; that which is knotty or abstruse, as a passage. *இச்சொற்றொடர் நெருடு.* **6.** கரடான சொல்லுடையது; that which is ragged, as style. இப்பாட்டின் நடை நெருடு. **7.** கரடுமுரடானது; that which is rough, as a road. இச்சாலை கரடுமுரடானது. **8.** ஏய்ப்பு (வஞ்சனை) (யாழ்ப்.); guile, deceit, intrigue.

**க., து.** நரடு.

*[நெருடு¹ → நெருடு²]*

**நெருணாகம்** *nerunāgam,* பெ.(n.) சவ்வரிசி; sago. (சா.அக.).

**நெருதலைநாள்** *neru-talai-nāḷ,* பெ. (n.) நேற்று (திருக்கோ.21, துறை விளக்கம்); yesterday.

*[நெருநலைநாள் → நெருதலைநாள்]*

**நெருநல்** *nerunal,* பெ. (n.) கு.வி.எ. (adv.) நேற்று; yesterday. *"நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும் பெருமை உடைத்துஇவ் வுலகு"* (குறள்,336).

**ம.** இந்நாளே; **கோத.** நெர்; **துட.** ஈநெர்; **க.** நிந்நெ; **குட.** நிந்நாந்தீ; **தெ.** நிந்நா; **கோண்.** நிந்நே; **பிரா.** தரோ.

*[நெருநாள் → நெருநல்]*

**நெருநலைநாள்** *nerunalai-nāḷ,* பெ. (n.) கு.வி.எ.(adv.) *நெருநல்* (திருக்கோ.21 துறை விளக்கம்) பார்க்க; *see nerunal.*

*[நெருநல் → நெருநலை + நாள்]*

**நெருநற்று** *nerunaṟṟu,* பெ. (n.) கு.வி.எ. (adv.) *நெருநல்* பார்க்க; *see nerunal. "நெருநற்றுச் சென்றாரெம் காதலர் யாமும் எழுநாளேம் மேனி பசந்து"* (குறள்,1278).

*[நெருநல் → நெருநற்று]*

**நெருநாள்** *neru-nāḷ,* பெ. (n.) நேற்று; நெருங்கியநாள்; yesterday.

*[நுல்(பொருந்தல்) → நுள் → நிள் → நிர் → நெர் → நெரு → நெருநாள் (வே.க.)]*

**நெருநெரு–த்தல்** *neruneru-,* 4செ.கு.வி.(v.i.) **1.** திடீரென வயிறு முதலியன வலித்தல்; to feel sudden pain, as in the stomach. **2.** திடீரென ஒடிதல்; to snap off suddenly, as a stick.

**நெருநெருப்பு** *neruneruppu,* பெ.(n.) **1.** வயிற்றுவலி (வின்.); pain in the abdomen; internal pain. **2.** பேறுகாலத்து உண்டாகும்

இடுப்புவலி (வின்.); early labour-pain. **3.** விரைவு; quickness, suddenness. *செயல் நெருநெருப்பாய் நடக்கிறது (இவ.).*

*[நெருநெரு → நெருநெருப்பு]*

**நெருநெரெனல்** *nerunerenal,* பெ. (n.) **1.** திடீரென வயிறு வலித்தற் குறிப்பு; onom. expr. of sudden pain in the stomach. **2.** திடீரெனற் குறிப்பு; suddenness. *நெருநெரென்று முள்ளேறி* விட்டது. **3.** நெரிதற் குறிப்பு; crashing sound. *நெருநெரென்று முறிந்தது.*

**நெருநை** *nerunai,* பெ.(n.) & கு.வி.எ.(adv) *நெருநல்* பார்க்க; see *neruanl.* "*நெருநையி னின்றுநன்று*" (கலித்.91). "*நெருநைப் புணர்ந் தோர் புது நலம் வெளவி*" (நற்.360:3). "*எஃகுடை எழில்நலத் தொருத்தியொடு நெருநை*" (அகநா.116:9).

க. நிருனெ

*[நெருநல் → நெருநை]*

**நெருப்பன்** *neruppan,* பெ. (n.) **1.** கடுஞ்சின முடையோன்; angry man. **2.** கலகக்காரன்; incendiary; firebrand. **3.** பொல்லாதவன்; dangerous man.

*[நெருப்பு + அன். நெருப்புப் போன்ற குணமுடையவன்.]*

**நெருப்பாறு** *neruppāru,* பெ.(n.) நெருப்பு மலையிலிருந்தோடுங் குழம்பு (வின்.); lava.

*[நெருப்பு + ஆறு]*

இது பெரும்பாலும் எரிமலை வெடித்து அதிலிருந்து ஓடும் நெருப்புக்குழம்பைக் குறிக்கும்.

**நெருப்பி[1]** *neruppi,* பெ.(n.) **1.** கடுஞ்சின முடையாள்; angry woman. **2.** கலகக்காரி; firebrand. **3.** பொல்லாதவள்; dangerous woman.

*[நெருப்பன்(ஆ.பா.) → நெருப்பி(பெ.பா.). நெருப்பு + இ]*

**நெருப்பி[2]** *neruppi,* பெ. (n.) கலைச் செம்பு; superior kind of pure copper. (சா.அக.).

*[நெருப்பு → நெருப்பி.]*

செம்பு நெருப்புப் போன்ற நிறத்தில் உள்ளதால் பெற்ற பெயராகலாம்.

**நெருப்பிடல்** *neruppidal,* பெ. (n.) **1.** புடமெரித்தல்; to set up a conflagration of fire for calcining medicines. **2.** பிணம் சுடுதல்; to set fire to the corpse. (சா.அக.)

*[நெருப்பு + இடல். நெருப்பில் இடுதல்]*

**நெருப்பிடுகலம்** *neruppidu-kalam,* பெ. (n.) **நெடுப்புச்சட்டி** (பிங்.) பார்க்க; see *neruppu-c-catti.*

*[ நெருப்பு + இடு + கலம். நெருப்பு வைக்கும் ஏனம். ]*

**நெருப்பு[1]** *neruppu,* பெ. (n.) **1.** தீ; fire. "*நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை*" (புறநா.125). "*நெருப்பெழும்படிப் பிசைந்து*" (கூர்மபு.தக்கன்வேள்.36). *நெருப்பில்லாமல் புகை வருமா* (பழ.). *நெருப்பைக் கண்டு மிதித்தாலும் சுடும்; காணாமல் மிதித்தாலும் சுடும்* (பழ.). *நெருப்பில் ஈ மொய்க்குமா* (பழ.). *நெருப்பு என்றால் வாய் வேகுமா.* (பழ.). *நெருப்பைத் தலைகீழாய்ப் பிடித்தாலும் அதன் சுடர் கீழாகுமா* (பழ.). **2.** இடி; thunderbolt. "*அண்டமுகடு நெருப்பறாது*" (இலக்.வி. 655.உதா).

3. உடற்சூடு; feverishness, abnormal heat of the body. 4. சின முதலியவற்றின் கடுமை (வின்.); strong feelings, as great grief, envy, jealousy, anger. 5. *நெருப்புத்துண்டம்* (உ.வ.) பார்க்க; see *neruppu-t-tuṇḍam.*

தெ. நிப்பு; அரபி. நார்; கொலா. நிப்க; மா. நரெ.

1. *[நுல்(துளை) → நொல் → நெல் → நெலி → நெலி-தல் = கடைதல். நெல் → நெர் → நெரு → நெருப்பு = மூங்கில் ஒன்றோ டொன்று உரசிப் பற்றும் தீ (வே.க.நுல்[2])]*

2. *[நுல்(ஒளி) → நெல் → நெரு → நெருப்பு = உரசிப் பற்றும் தீ (வே.க.நுல்[3])]*

நெருப்புப் பற்றிய 'சுள்' அடிச்சொற்கள்

உ-உல்-உல. உலத்தல் = எரிதல், காய்தல். உல-உலவை = காய்ந்த மரக்கிளை. "*இலைதீந்த வுலவையால்*" (கலித்.11).

உல-உலர். உலர்தல் = காய்தல்.

உலர்-உலறு. உலறுதல் = காய்தல், சினத்தல், வற்றுதல்.

உல-உலை = 1. நெருப்புள்ள அடுப்பு. 2. கொல்லன் அடுப்பு. 3. சோறு சமைக்கக் கொதிக்க வைக்கும் நீர்.

உல்-அல்-அன்று → அன்றுதல் = எரிதல், சினத்தல், பகைத்தல்.

அல்-அன்-அனல் = நெருப்பு. அனலுதல் = எரிதல்.

அனல்-அனலி = 1. நெருப்பு. 2. கதிரவன்.

அனல்-அனலம் = நெருப்பு. அனலம்-வ. அநல.

அனலம்-அனலன் =நெருப்புத் தெய்வம்.

உல்-உள்-ஒள்-ஒண்மை = 1. நெருப்பின் தன்மையான விளக்கம். 2. உள்ளொளி, நல்லறிவு. 3. இயற்கையழகு 4. நன்மை.

ஒள்-ஒளி = 1. நெருப்பின் விளக்கம். 2. ஒளிபோல் விளங்கும் புகழ். 3. உள்ளொளி.

ஒளி-ஒளிர். ஒளிர்தல் = விளங்குதல்.

ஒளிர்-ஒளிறு. ஒளிறுதல் = விளங்குதல்.

ஒள்-ஒள்ளிய = ஒளியுள்ள, அறிவு மிக்க, நல்ல அழகிய.

ஒள்ளியன் = அறிவுடையோன். ஒள்ளியோன் = விளக்கம் மிக்க வெள்ளிக்கோள்.

ஒளி = 1. ஒளியுள்ள 2. அழகிய. ஒள் + தொடி - ஒண்டொடி = விளங்கும் வளைய லணிந்த பெண். ஒள் + நுதல் - ஒண்ணுதல் = விளங்கும் நெற்றியுடைய பெண்.

ஒள் + பு = ஒண்பு-ஒட்பு-ஒட்பம் = அறிவு. "*கல்லாதா னொட்பங் கழியநன் றாயினும்*" (குறள்,404).

உள்-அள்-அழ-அழல் = 1. நெருப்பு. 2. வெப்பம். 3. எரிவு. 4. நரகம். 5. துளங்கொளி (கேட்டை) 6. செவ்வாய் 7. சினம்.

அழலவன் = 1. தீத்தெய்வம் 2. கதிரவன் 3. செவ்வாய்.

அழலுதல் = 1. எரிதல் 2. விளங்குதல். 3. காந்துதல் 4. சினத்தல்.

அழல்-அழற்று (பி.வி.), அழற்றுதல் = எரித்தல், வெம்மை செய்தல்.

அழல்-அழறு-அளறு = நிரயம்(நரகம்).

"அண்ணாத்தல் செய்யா தளறு" என்னுங் குறளடியில் (255) 'அளறு' என்னும் சொல் ஏட்டுப் பிழையாகவும் இருக்கலாம்.

"பூரியர்கள் ஆழும் அளறு" என்னுங் குளறடி (919) சேற்று வடிவான நிரய(நரக) வகையென்று கொள்ள இடந்தரினும், நிரயம் (நரகம்) நெருப்புலக மென்றே பொதுவாகக் கொள்ளப்படுவதனாலும், அழல், எரி முதலிய பெயர்கள் அதற்குண்மையாலும், ஊற்றளவிலேயே நெருப்புத் துன்புறுத்துவதனாலும், அழறு என்னுஞ் சொல்லே அளறு என மருவிற்றென்றோ, ஏட்டுப் பிழையாக நேர்ந்ததென்றோ கொள்வது பொருத்தமானதே.

அழல்-அழலி = நெருப்பு. அழலித்தல் = எரிச்சல்.

அழல்-அழலை = தொண்டைக் கரகரப்பு.

அழல்-அழன்-அழனம் = 1. நெருப்பு 2. வெம்மை.

"அழனம்மை நீக்குவிக்கும்" என்னும் தேவார (1225:4) அடியிலுள்ள 'அழனம்மை' என்னுந் தொடரை, அழன் + நம்மை என்றும் பிரிக்கலாம்.

அழன்-அழனி. ஒ.நோ : அழல்-அழலி, களன்-கழனி.

அழ—அக—அகை. அகைதல்=எரிதல். "அகையெரி யானாது" (கலித்.139:26). ஒ.நோ.:மழ—மக.

அழனி—அகனி—வ. அக்நி (agni) -L. ignis. இதற்கு யாசுகர் (Yaskar) தம் நிருத்தத்திற் (Nirukta) கூறியிருக்கும் வேர்ப்பொருட் கரணியங்கள் முற்றும் பொருந்தாப் பொய்த்தல் என்பதை அங்கு நோக்கிக் காண்க. புதுச்சேரி அரவிந்தர் தவநிலைய இருக்குவேதப் பதிப்பு அகோ (ago) என்று மூலங்காட்டுவதும், முற்றும் தவறாம். இது சமற்கிருதத்தில் அஜ் என்றே நிற்கும்.

உள்—உண்—உண்ணம்=வெப்பம். "உண்ண வண்ணத் தொளிநஞ்ச முண்டு" (தேவா.510:6).

உண்ணம்—வ.உஷ்ண. மராத். ஊன்.

உண்—உண— உணத்தல்=காய்தல். மிளகாய் உணந்துவிட்டது (உ.வ.). உணந்த மிளகாய் (உ.வ.) = மிளகாய் வற்றல்.

உண—உணத்து (பி.வி.)— உணத்துதல் = 1. காயப் போடுதல், நெல்லை உணத்தினார் (உ.வ.). 2. உடம்பை மெலிவித்தல் அல்லது வற்ற வைத்தல். "மெய்யுணத்தலும்" (தைலவ. தைல.110).

உண—உணங்கு— உணங்குதல் = நெல் முதலியன காய்தல். "உணங்குணாக்கவரும்" (பட்டினப்.22). "தினைவிளைத்தார் முற்றந் தினையுணங்கும்" (தமிழ்நா.154). 2. மெலிதல். "ஊட லுணங்க விடுவாரோடு" (குறள்,1310). 3. வாடுதல். "உணங்கிய சிந்தையீர்" (கந்தபு.மோன.21). 4. சுருங்குதல். "உணங்கரும் புகழ்" (காஞ்சிப்பு.நாட்டுப்.1).

உணங்கு—உணங்கல் = 1. உலர்த்திய கூலம். "உணங்கல் கெடக் கழுதை யுதடாட்டங் கண்டென் பயன்" (திவ்.திருவாய், 4.6:7). 2. வற்றல். "வெள்ளென் புணங்கலும்" (மணிமே.16:67). 3. உலர்ந்த பூ (பிங்.).

உணங்கு—உணக்கு (பி.வி.)—உணக்குதல் = உலர்த்துதல். "தொடிப்புழுதி கஃசா வுணக்கின்" (குறள், 1037).

உணக்கு—உணக்கம் = வாட்டம்.

ம. உணக்கம்; க. ஒணகிலு(g); து. ஒணகெலு.

உணக்கு = வாட்டம். "உணக்கி லாததோர் வித்து" (திருவாச.30:1).

"உல்—உர்—உரு— உருத்தல் = 1. அழலுதல். "ஆக முருப்ப நூறி" (புறநா.25:10). 2. பெருஞ்சினங் கொள்ளுதல். "ஒரு பகலெல்லா முருத் தெழுந்து" (கலித்.39:23).

உரு—உருத்திரம் = பெருஞ்சினம். உருத்திரம்—வ. ருத்ர. 'திரம்' ஒரு தொழிற் பண்பீறு. ஒ.நோ: மாத்தல் = அளத்தல்.

மா + திரம் = மாத்திரம் (அளவு). அவன் எனக்கு எம்மாத்திரம்? என்னும் வழக்கை நோக்குக. மானம் (மா + அனம்) என்னும் அளவுப் பொதுப் பெயரையும், மா, அரைமா, ஒருமா, இருமா, மாகாணி முதலிய அளவுச் சிறப்புப் பெயர்களையும், மேலை வ.ஆ. மாவட்டத்தில் படி என்னும் முகத்தலளவைப் பெயர் மானம் என்று வழங்குதலையும் நோக்குக. மாத்தல் என்னும் வினைச்சொல் பண்டே வழக்கிறந்தது. திரம் — திரை. மா + திரை = மாத்திரை = அளவு, எழுத்தொலிக்குங் கால அளவு, உண்ணும் மருந்தளவு.

சினம் தீயொத்தலால், தீப் பற்றிய சொற்களெல்லாம் சினத்தையுங் குறிக்கும்.

உருத்திரம் – வ. ரௌத்ர (raudar) = வெகுளி

ஒ.நோ. E. wrath, n.anger, O.E. wrreththu, AS. and ON. wraedo, ME. wrathe.

E. wroth, adj. angry. OE. wrath, OS. wreth, OHG.reid, ON.reithr.

கீற்றும் (Skeat) கிளேனும் (Klein) இச்சொற்களை reid (twristed) என்னும் மூலத்தினின்று திரிக்கின்றனர். இது தென்சொல்லை அறியாமையாலும் இருக்கலாம்.

உரு – உரும் – உருமம் = 1. வெப்பம், 2. வெப்பம் மிக்க நண்பகல்.

உரும் – உருமி– உருமித்தல் = வெப்பமாதல், புழுங்குதல்.

உரும் – உரும்பு = 1. கொதிப்பு, 2. வெகுளி. "உரும்பில் கூற்றத் தன்னநின்" (பதிற்றுப்.26:13).

உரும்பு – உருப்பு = 1. வெப்பம். "கனமிசை யுருப்பிறக் கனைதுளி சிதறென" (கலித்.16:7). 2. சினத்தீ. "உருப்பற நிரப்பினை யாதலின்" (பதிற்றுப்.50:16). 3. கொடுமை. "உரும்பில் சுற்றமோடு" (பெரும்பாண்.447).

உருப்பு – உருப்பம் = 1. வெப்பம். "கனலும்... உருப்பமெழ" (அரிச்சந்.பு.விவா.104). 2. சினம்.

உரு – உருகு– உருகுதல் = 1. வெப்பத்தால் இளகுதல். 2. மனம் நெகிழ்தல்.

உருகு – உருக்கம் = 1. இளக்கம். 2. மன நெகிழ்ச்சி, இரக்கம்.

உருகு – உருக்கு(பி.வி.)–உருக்கு = உருக்கிய இரும்பு. உருக்குதல் = 1. இளக்குதல், 2. வாட்டுதல், மெலிவித்தல்.

உருக்கு – உருக்கன் = உடம்பை வாட்டும் நோய்.

உருக்கு – உருக்கி = 1. மாழை வகைகளை உருக்குபவன். 2. உடம்பை உருக்கும் நோய்.

உருக்காங்கல் = உருகிப் போன செங்கல்.

உல் – சுல் – சுல்லி = 1. அடுப்பு (திவா.). 2. மடைப்பள்ளி. (இலக்.அக.). சுல்லி – வ.சுல்லீ (c). சுல் – சுள்– சுள்ளெனல் = வெயில் காய்தற் குறிப்பு, உறைத்தற் குறிப்பு. சுள் = கருவாடு (காய்ந்த மீன்). "சுள்ளினைக் கறித்தனர்" (கந்தபு.அசமுகி நகர்.18).

சுள் – சுள்ளம் = சினம் (வின்.)

சுள்ளம் – சுள்ளகம் – சுள்ளக்கம் = 1. சினம் (யாழ்.அக.). 2. வேர்க்குரு (சங்.அக.). சுள்ளக்கம் – வ.க்ஷுல்லக.

சுள்ளக்காய் = மிளகாய். உறைப்புச்சுவை சுடுதல்போன்றிருத்தலின், சுடுதற்கருத்தினின்று உறைப்புக் கருத்துத் தோன்றும்.

ஒ.நோ.E.hot = of high temperature, pungent.

சுள் – சுள்ளி = காய்ந்த குச்சு. சுள் – சுள்ளை = செங்கல் சுடுமிடம். சுள்ளை – சூளை.

சுள் – சுளுந்து = தீவட்டி, பந்தம் எரிக்கும் மரக்கழி.

சுள் – சுள்கு – சுட்கு – சுட்குதல் = காய்தல், வற்றுதல்(வின்.).

ஒ.நோ.: வெள்கு – வெட்கு – வெட்கம்.

சுட்கு – சுட்கம் = 1. வறட்சி, 2. வறண்டது. 3. உடம்பை வாட்டும் ஒரு நோய். 4. பணம் முதலிய பொருட்குறைவு. 5. இவறன்மை (கஞ்சத்தனம்). சுட்கஞ் செய்யாதே (உ.வ.)

சுட்க தருக்கம் = வீண் சொற்போர்.

சுட்கு – சுக்கு– சுக்குதல் = உலர்தல் (நாஞ்.).

சுக்கு = காய்ந்த இஞ்சி. சுள் – வ.சுஷ் (to dry.)

ஒ.நோ: உள்(ஒள்)–வ.உஷ்(to burn)–உஷா = ஒளி தோன்றும் விடியற்காலம்.

சுக்கு– வ.சுஷ்க.

சுக்கு – சுக்கான் = 1. சுண்ணாம்புக்கல், 2. உருக்குச் செங்கல்.

சுக்கு = காய்ந்தது, வறண்டது, பயனற்றது.

சுட்கம்–சுக்கம் = 1. வறட்சி, 2. கஞ்சத்தனம்.

சுக்கஞ்செட்டி–கடுஞ்செட்டுள்ளவன்.

சுள்–சுள்பு–சுட்பு–சுப்பு–சுப்பி = சுள்ளி. சுள்ளிசுப்பி என்பது மரபிணைச் சொல்.

சுப்பெனல் = ஈரமுள்ளது காய்தல் அல்லது வறண்ட நிலம் நீரை உள்ளிழுத்தற் குறிப்பு.

சுள்–சுண்–சுண்ணம் = 1. காளவாயிற் சுட்டகல். 2. அக்கல்லை நீற்றின நீறு. 3. நீறு. 4. நறும்பொடி. 5. பூந்தாது.

சுண்ணம் – சுண்ணம்பு – சுண்ணாம்பு = 1. சுட்ட சுண்ணாம்புக்கல். 2. நீற்றின சுண்ணாம்பு.

சுண்ணக்கல் = சுக்கான்கல் (யாழ்.அக.)

சுண்ணம்–சுண்ணகம் = விழா நாள்களில் மக்கள்மேல் தூவும் நறும்பொடி.

சுள் –சுண்டு– சுண்டுதல் = (செ.கு.வி.) 1. நீர் வற்றுதல். 2. வாடுதல், சுருங்குதல். அச்செய்தி கேட்டவுடன் அவன் முகஞ் சுண்டிப் போயிற்று (உ.வ.)–(செ.குன்றாவி.) நீர் வற்றக் காய்ச்சுதல் அல்லது அவித்தல். இன்றைக்குக் கடலைச் சுண்டினார்கள் (உ.வ.)

சுண்டு–சுண்டல் = 1. நீர் முற்றும் வற்ற அவித்த கடலைப் பயறு. 2. சுண்டற்கறி.

சுண்டு–சுண்டான் = சிறு பிள்ளைகள் விளையாட்டாகக் கொளுத்தும் கொள்ளிக்குச்சு.

சுண்டு–சுண்டி = 1. சுக்கு (காய்ந்த இஞ்சி). 2. தொட்டாற் சுருங்கி, தொட்டாற் சிணுங்கி, தொட்டால் வாடி என்னும் பூண்டு.

சுண்டி (சுக்கு)–வ.சுண்டி(th). இது வடமொழியிற் 'சுண்ட்டி' என வலித்தொலிக்கும்.

சுண்டி–சுண்டில் = தொட்டாற்சுருங்கி, வாடினது சுருங்கும்.

சுள்–சுடு–சுடுவல் = வெதும்பும் அரத்தம் (திவா.)

சுடுவல்–சுடுவன் = வெதும்பும் அரத்தம் (பிங்.)

சுடுவான் = மரக்கலச் சமையலறை.

சுடு → சுடல் → சுடலை = சுடுகாடு.

சுடு–சுடர்–சுடரோன் (சுடரவன்) = கதிரவன்.

சுடு–சூடு.

சுல்–சுர்–சுரீர் + எனல் = 1. நெருப்புச் சுடும்

குறிப்பு. 2. தழலிற்படும் நீர் சுண்டும் குறிப்பு.

சுர்–சுரம் = 1. காய்ச்சல், 2. சுடும் பாலைநிலம். "சுரமென மொழியினும்" (தொல்.பொருள்.216).

சுரம் (காய்ச்சல்)–வ.ஜ்வர.

சுர்–சூர் = 1. நெருப்பு. 2. கதிரவன். "சூர்புக வரியது... ...தொன்மதில்" (கம்பரா.கவந்த.21).

சூர்–சூரன் = 1. நெருப்பு (பிங்.). 2. கதிரவன் (பிங்.). "காதற் சூரனை யனைய சூரா" (பாரத. பதினேழாம்.49).

சூரன்–வ.ஸூர(sūra) – ஸூர்ய(sūrya)

சூர் என்னும் சொல்லிற்கு, அச்சம், கொடுமை, உறைப்பு, மிளகு முதலிய பொருள்களிருப்பதும், அதைத்தென்சொல் லெனத் தெரிவிக்கும்.

சுள் (சுல்–சொல்)– L.sol, sun; Icel. sol; OE., ON.sol; Dan., Swed. sol; E.sol; Goth, soule; Lith, soule; Lett, soule; Ir. sūl; Russ, solntse; W.haul (for saul); Co.heuul, hau; Bret. heol, sun.

girasol, parasol, rosolio, turnsole என்னும் கூட்டுச் சொற்களின் இரண்டாம் உறுப்புகள், கதிரவனைக் குறிப்பனவே.

solar என்பது sol என்பதன் குறிப்புப் (adj.) பெயரெச்ச வடிவம்.

சகர (ஸகர) முதல் ஹகர முதலாகத் திரிதல் இயல்பே.

சிந்து–பார. ஹிந்து, L.sex (E.six)-Gk. hex.

(சுல்–சுன். சொன்–சன்). E.sun; ME. sonne; OE. sunne; ON., OS., OHG. sunna; MDu. sonne; Du.zon; G.sonne; Goth. sunna=sun.

இவற்றிற்கெல்லாம் ஸூ (sū), ஸெள (sau) என்பன உய்த்துணர்வு மூலமாகக் காட்டப் படுகின்றன. மேலையாரியர் தமிழின் தொன்மை, முன்மை, தென்மைத் தன்மைகளை அறியாமையால் இங்ஙனங் கூறுகின்றனர்; அல்லது கொள்கின்றனர். இவற்றிற்கெல்லாம் சுல் என்னும் தென்சொல்லே அடிமூலம்.

சுல்–சொல் = நெருப்புப் போல் அல்லது பொன்போல் விளங்கித் தோன்றும் நெல்.

"சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு" என்று நளவெண்பா (சுயம்வர.68) கூறுதலையும், பொன்விளைந்த களத்தூர் என்னும் வழக்கையும் நோக்குக. நெல் என்னும் பெயரும் இப்பொருட் கரணியம் (காரணம்) கொண்டதே.

நில்–நில–நிலா–நிலவு. நிலத்தல் = ஒளிர்தல், விளங்குதல். நில்–நெல்.

சொல்–சொலி–சொலித்தல் = 1. எரிதல். "நாப்பண் அழல் சொலிப்பதாகவுன்னி" (பிரபோத.44:15). 2. ஒளிர்தல். "மானமென் றுரைப்ப தெழுந்துமேற் சொலித்து வருவது போன்றும்' (பிரபோத. 11:1).

சொலி–ஜொலி–வ.ஜ்வலி என்று திரிந்துள்ளது. ஜ்வல் என்பதை மூலமாகக் காட்டுவர் வடமொழியாளர். இது செயற்கை மூலம்.

சொலித்தல் வினைச்சொல் ஆளப்பட்ட முன்னூல்கள் வழக்கிறந்தமையால், பின்னூலினின்று மேற்கொள் காட்டப்பட்டது.

சொல்–சொன்–சொன்னம் = விளங்கும் நிறப்பொன் (திவா.). "சொன்னதானப் பயனெனச் சொல்லுவர்" (கம்பரா.சிறப்பு).

சொன்னம்–வ.ஸுவர்ண = நன்னிறமுள்ளது, தங்கம். இது பொருந்தப் பொய்த்தலான சொற்றிரிப்பு.

இனி, சூர் என்பதையே cur என்று திரித்து, சூர்ண (curna) என்னுஞ் சொல்லைத் தோற்றுவித்தனர்.

சூர் (cur) = எரி (to burn). சூர்ண–த. சூரணம் = நீறு, பொடி.

சூரணம்–சூரணி. சூரணித்தல் = நீற்றுதல், பொடி செய்தல்.

ஒ.நோ = சுள்–சுள்ளம்–சுண்ணம். சுள்ளல் = எரிதல் (வழக்கிறந்த வினைச்சொல்).

இனி, சுள் என்னும் அடி போன்றே குள், துள், நுள், புள், முள் என்னும் வழியடிகளும் உள் என்னும் மூல அடியினின்று திரிந்து, நெருப்புப் பற்றிய பல்வேறு சொற்களைப் பிறப்பிக்கும்.

நெருப்பு : நெருப்பு பழங்காலத்தில் 1. கடைதல், 2. அறுத்தல், 3. தேய்த்தல், 4. அடித்தல் – என்ற நான்கு முறைகளில் உண்டாக்கப்பட்டது.

மட்பாண்டம் செய்யத் தெரிவதற்கு முன்பே மக்கள் நெருப்பின் பயனை அறிந்திருந்தனர்.

**1. நெருப்புக் கடைதல் :** மரத்தைக் கடைந்தோ, அறுத்தோ, தேய்த்தோ, நெருப்பை உண்டாக்கு வதற்குக் கடினமரத்துண்டு ஒன்றும், மென்மையான மரத்துண்டு ஒன்றும் இருக்கும். கடின மரத்துண்டில் சிறு குழியிருக்கும். மென்மை மரத்துண்டு ஒரு

நீண்ட குச்சியாக இருக்கும். கடினத்துண்டைத் தரையில் அசையாதபடி வைத்துக் கொண்டு, குச்சியை அதன் குழியில் நட்டுக் கையால் தயிர் மத்தைக் கடைவதுபோல் கடைந்தால் அதனால் பிரியும் மரத்தூளில் நெருப்புப் பற்றிக் கொள்கிறது. இந்த நெருப்புக்கடை மத்து இப்போது இலங்கையில் வெட்டர் (veddas) களிடம் காணப்படுகிறது. தென்னிந்தியாவில் ஆதிக்குடிகளான நாயாடிகள், ஏனாதிகள், கணிகர்கள் இதைப் பயன்படுத்துகின்றனர். படகர்களும் தொதவர்களும் மத்தைக் கையால் கடையாமல் கயிறு கொண்டு கடைவர்.

**2.** அறுப்புமுறை : ஒரு மூங்கில் நீளமான பள்ளம் செய்து, அதைத் தரையில் அசையாதபடி வைத்துக்கொண்டு, மூங்கிலின் குறுக்கேயுள்ள பள்ளங்களில் மற்றொரு மூங்கிலைப் பலமுறை ஓட்டித் தேய்ப்பர். ஒருவரே செய்வதுமுண்டு; அல்லது ஒருவர் தரை மூங்கிலை அழுத்திக் கொள்வர், மற்றொருவர் தேய்ப்பர். மலையாளப் பணியர்கள் இம்முறையைப் பயன் படுத்துகின்றனர்.

**3.** தேய்ப்புமுறை : ஒரு மரத்தில் V வடிவமான பள்ளம் வெட்டி வைத்துக் கொண்டு, ஆப்புப் போன்ற உருவமுடைய மற்றொரு மரத்துண்டால் அதில் பலமுறை தேய்த்தால், அப்போது பிரியும் மரத்தூள் நெருப்புப் பற்றி எரியும். இதற்கு நீர்ப்பருத்தி மரம் என்னும் மரத்தையே பயன்படுத்துவது வழக்கம். இம்முறை ஆப்பிரிக்கா, அமெரிக்கா, தென்கிழக்கு ஆசியத் தீவுகள் முதலியவற்றில் காணப்படுகிறது.

**4.** அடித்தல் முறை : இம்முறையில் இரண்டு இரும்புக் கட்டிகளைப் (Iron pyrites) பயன்படுத்துவர். ஒன்றைக் கொண்டு மற்றதை அடித்தும், தீக்கல்லை எஃகு கொண்டு அடித்தும் நெருப்பை உண்டாக்குவர். இது தமிழ் நாட்டில் சிக்கிமுக்கிக் கல் முறை எனப்படும். தீக்கல் எஃகு முறையானது எசுக்கிமோக்கள், அமெரிக்க இந்தியர்கள், செஞ்சுக்கள் ஆகியோரிடம் காணப்படும்.

இவ்வாறு கடையும்போதும், தேய்க்கும் போதும், அறுக்கும்போதும் தீப்பற்றவைக்கப் பனை நாரைப் பயன்படுத்துவர். தீக்குச்சி செய்யப் பெறும் காலம் வரை சிக்கிமுக்கிக் கல் முறையே வழக்கிலிருந்தது.

தென்கிழக்கு ஆசியாவில் மலேயா, பர்மா, போர்னியோ ஆகிய இடங்களிலுள்ள சில வகை ஆதிக்குடிகள் மற்றொரு முறையைப் பயன்படுத்தினர். இது தண்டுமுறை எனப்படும். இம்முறையில், ஒரு குழலின் அடிமுனை மூடியிருக்கும். திறந்துள்ள மேல்முனை வழியே ஒரு தண்டு இறுக்கமாகப் பொருந்தியிருக்கும். குழலின் அடிப்பக்கமுள்ள சிறு பள்ளத்தில் தீப்பற்றியை வைத்துக்கொண்டு தண்டைப் பலமாக அடித்தால் குழாயிலுள்ள காற்று அழுத்தப்படும். அப்போது நெருப்பு உண்டாகும். உடனே தண்டை வெளியே எடுத்துவிட்டு நெருப்பைப் பயன்படுத்துவர்.

நெருப்புப் பற்றிய பழமொழிகள்

நெருப்பிலே (நெருப்பை) ஈ மொய்க்குமா?

நெருப்பிருக்கிற காட்டை நம்பினாலும் நீரிருக்கிற காட்டை நம்பக்கூடாது.

நெருப்பிலும் பொல்லாச் செருப்பு.

நெருப்பிலே நெய் விட்டதுபோல்.

நெருப்பிலே புழு பற்றுமா?

நெருப்பிலே போட்டாலும் நெஞ்சு வேகாது.

நெருப்பிலே புழுப்போலத் துடிக்கிறது.

நெருப்பினும் பொல்லாது கருப்பின் வாதை.

நெருப்பு ஆறும் மயிர்ப் பாலமும்.

நெருப்பு இல்லாமல் நீள் புகை எழும்புமா?

நெருப்பு என்றால் வாய் வெந்து போமா?

நெருப்பு சிறிது என்று முன்றானையில் முடியலாமா?

நெருப்பு நின்ற காட்டிலே ஏதாவது நிற்கும் நீர் நின்ற காட்டில் ஒன்றும் நிற்காது.

நெருப்புப் பந்தம் கட்டிக் கொண்டு நிற்கிறான்.

நெருப்பைக் கண்டு மிதித்தாலும் சுடும் காணாமல் மிதித்தாலும் சுடும்.

நெருப்பைச் சார்ந்த யாவும் அதன் நிறமாகும்.

நெருப்புப் பந்தலிலே மெழுகுப் பதுமை ஆடுமா?

நெருப்பைத் தலைகிழாகப் பிடித்தாலும் சுவாலை கீழாகுமா?

நெருப்பை மடியிலே கட்டிக் கொண்டிருக்கிறாள்.

நெருப்பை மடியிலே முடிகிறதா?

**நெருப்பு[2]** *neruppu,* பெ. (n.) **1.** கத்தூரி மான்; musk. **2.** வெடியுப்பு; nitre. (சா.அக.).

*நிறத்தால் பெற்ற பெயர்*

**நெருப்பு[3]** *neruppu,* பெ. (n.) **1.** கத்தூரி மான்; musk. **2.** வெடியுப்பு; nitre. (சா.அக.).

*நிறத்தால் பெற்ற பெயர்.*

**நெருப்புக்கட்டை** *neruppu-k-kaṭṭai,* பெ. (n.) தீக்கொள்ளி (வின்.); fire brand.

*[நெருப்பு + கட்டை]*

**நெருப்புக்கண்** *neruppu-k-kaṇ,* பெ.(n.) **1.** கொள்ளிக்கண் (திட்டிவிழுங்கண்); evil eye. **2.** அனற்பொறி பறக்குங்கண்; fiery eye. **3.** பொறாமைக்கண்; envious eye. **4.** சிவனின் நெற்றிக்கண்; frontal eye of a Šiva.

*[நெருப்பு + கண்]*

**நெருப்புக்கல்** *neruppu-k-kal,* பெ. (n.) **1.** தீத்தட்டிக்கல் (வின்.); flint. **2.** காடிக்காரம் (யாழ்.அக.); nitrate of silver.

*[நெருப்பு + கல்]*

**நெருப்புக்காடு** *neruppu-k-kāḍu,* பெ.(n.) **1.** பெருநெருப்பு; conflagration. **2.** கடுவெயில்; scorching, hot sun. **3.** கடுஞ்சினம்; intense anger, fury or rage.

*[நெருப்பு + காடு. காடு = மிகுதி]தால் பெற்ற பெயர்.*

**நெருப்புக்கட்டை** *neruppu-k-kaṭṭai,* பெ. (n.) தீக்கொள்ளி (வின்.); fire brand.

*[நெருப்பு + கட்டை]*

**நெருப்புக்கண்** *neruppu-k-kaṇ,* பெ.(n.) **1.** கொள்ளிக்கண் (திட்டிவிழுங்கண்); evil eye. **2.** அனற்பொறி பறக்குங்கண்; fiery eye. **3.** பொறாமைக்கண்; envious eye. **4.** சிவனின் நெற்றிக்கண்; frontal eye of a Šiva.

*[நெருப்பு + கண்]*

**நெருப்புக்கல்** *neruppu-k-kal,* பெ. (n.) **1.** தீத்தட்டிக்கல் (வின்.); flint. **2.** காடிக்காரம் (யாழ்.அக.); nitrate of silver.

*[நெருப்பு + கல்]*

**நெருப்புக்காடு** *neruppu-k-kāḍu,* பெ. (n.) **1.** பெருநெருப்பு; conflagration. **2.** கடுவெயில்; scorching, hot sun. **3.** கடுஞ்சினம்; intense anger, fury or rage.

*[நெருப்பு + காடு. காடு = மிகுதி]*

**நெருப்புக்காலி** *neruppu-k-kāli,* பெ. (n.) ஒருவகைச் சிலந்திப் பூச்சி; a kind of spider. (சா.அக.).

*[நெருப்பு + காலி. நெருப்பு வண்ணக்கால்களையுடைய பூச்சி]*

**நெருப்புக்காறாதகல்** *neruppukkāṟāta-kal,* பெ.(n.) நெருப்பில் உருகாத செங்கல் வகை (C.E.M.); fire-brick.

*[நெருப்பு + ஆறு + ஆ + கல். ஆ –எ.ம.இ. நிலை. நெருப்பிலும் உருகாத செங்கல் வகை]*

**நெருப்புக்கிரை** *neruppu-k-k-irai,* பெ. (n.) **1.** பிணம்; dead. **2.** நீர்; water. (சா.அக.)

*[நெருப்பு + கு + இரை. நெருப்புக்கு இரையாகும் பொருட்கள்]*

**நெருப்புக்குச்சி** *neruppu-k-kucci,* பெ. (n.) தீக்குச்சி; match. *நெருப்புக் குச்சியைக் கொளுத்து.*

*[நெருப்பு + குச்சி. நெருப்பையுண்டாக்கும் குச்சி.]*



**நெருப்புக்குள்ளுப்பு** *neruppu-k-kuḷ-ḷ-uppu,* பெ. (n.) வளையலுப்பு; glass gall-Febvitri. (சா.அக.).

**நெருப்புக்கொப்புளம்** *neruppu-k-koppuḷam,* பெ.(n.) தீப்புண்; burns. (சா.அக.).

*[நெருப்பு + கொப்புளம். நெருப்புப்பட்டதால் ஏற்பட்ட கொப்புளம்.]*

**நெருப்புக்கொள்ளி** *neruppu-k-koḷḷi,* பெ. (n.) **1.** தீக்கொள்ளி; firebrand. **2.** கெட்டவன்; atrociously wicked man. **3.** கலக்காரன்; incendiary, firebrand. **4.** தேள்கடி; scorpion sting.

*[நெருப்பு + கொள்ளி. கொள்ளி = 1. கொள்ளிக்கட்டை, 2. கலகமூட்டுபவன், 3. கெட்ட குணமுள்ளவன்]*

**நெருப்புக்கொளுத்து[1]–தல்** *neruppu-k-koḷuttu-,* 5செ.கு.வி.(v.i.) **1.** தீமூட்டுதல் (வின்.) அடுப்பில் தீ மூட்டுதல்; to kindle of fire, as in an oven. **2.** கடுவெயி லெரித்தல் (உ.வ.); to be hot, scorching, as the sun. **3.** கடுமையாதல் (வின்.); to be very severe, as showing anger in reproof. **4.** தீமை செய்தல் (வின்.); to do injustice; to tyrannise. **5.** கலகமூட்டுதல் (உ.வ.); to foment or instigate a quarrel.

*[நெருப்பு + கொளுத்து + தல்]*

**நெருப்புக்கொளுத்து[2]–தல்** *neruppu-k-koḷuttu-,* 5செ.குன்றாவி.(v.t.) தீக்கொளுத்துதல். (உ.வ.); to set fire to.

*[நெருப்பு + கொளுத்து–தல்.]*

**நெருப்புக்கோழி** *neruppu-k-kōḻi,* பெ. (n.) **1.** நீண்ட காலும், கழுத்தும் சிறிய தலையும் பறக்கப் பயன்படாத பெரிய சிறகுகளும் கொண்ட தீத்தணலை விழுங்கும் கோழிவகை; ostrich, as eating embers. **2.** நெருப்புப் போன்று சிவந்த தொண்டையையுடைய வான்கோழி (வின்.); Turkey-cock, as having fire-red throat.

*[நெருப்பு + கோழி]*



நெருப்புக்கோழி : இது பறவைகளில் பெரியது; நிமிர்ந்திருக்கும்போது ஆறு அடி முதல் எட்டு அடி உயரமிருக்கும். அரேபியாவிலும், தென்னாப்பிரிக் காவிலும் இதனைக் காணலாம்; பறக்க முடியாது; காலில் இரண்டே விரல்கள் உண்டு. முட்டை இட்டு அடை காக்கும்; ஆண்டுக்கு ஒரு முறையே முட்டையிடும்; முட்டை பெரியது. இதன் கழுத்திலும் தொடைகளிலும் இறகுகளில்லாத படியால் அப்பாகங்கள் நெருப்புப் போல் சிவப்பாயிருக்கும். இஃது உண்ணும் உணவைச் செரிப்பிக்க வேண்டிக் கற்களையும் ஆணிகளையும் விழுங்கும் தன்மையது.

**நெருப்புச்சட்டி** *neruppu-c-caṭṭi,* பெ.(n.) கணப்புச் சட்டி; firepan.

*[நெருப்பு + சட்டி. நெருப்புவைக்கும் சட்டி]*

**நெருப்புச்சயநீர்** *neruppu-c-cayanīr,* பெ.(n.) **நெருப்புத் தண்ணீர்** (யாழ்.அக.) பார்க்க; see *neruppu-t-taṇṇīr.*

*[நெருப்பு + சயநீர். சயநீர் = சுண்ணாம்பு, எரியுப்பு (நவச்சாரமும்) கலந்த நீர். செய் + நீர் – செயநீர் → சயநீர்.]*

**நெருப்புச்சாணை** *neruppu-c-cāṇai,* பெ. (n.) சாணைக்கல் வகை (யாழ்.அக.); a kind of grindstone.

*[நெருப்பு + சாணை. சாணை → சாணைக்கல் = படைக்கலன் முதலிய கருவிகளைக் கூர்மை யாக்கும் கல்.]*

**நெருப்புச்சூடு** *neruppu-c-cūḍu,* பெ.(n.) தீப்பட்ட புண் (M.L.); burns and scalds.

*[நெருப்பு + சூடு. சுடு → சூடு. சுட்டதால் ஏற்பட்டபுண்.]*

**நெருப்புச்செயநீர்** *neruppu-c-ceyanīr,* பெ.(n.) **நெருப்புச் சயநீர்** பார்க்க; see *neruppu-c-cayanīr.*

**நெருப்புத்தண்ணீர்**[1] *neruppu-t-taṇṇīr,* பெ.(n.) வெடியுப்பு சாரம் (அமிலம்) (வின்.); nitric acid.

*[நெருப்பு + தண்ணீர். எரியுப்பு நீர்.]*

**நெருப்புத்தண்ணீர்**[2] *neruppu-t-taṇṇīr,* பெ.(n.) **1.** தீநீர்; distilled water. **2.** கொதி நீர்; boiling water. **3.** நீராவி; steam. **4.** மிதமிஞ்சிய குளிர்நீர்; extremely chill water. (சா.அக.).

*[நெருப்பு + தண்ணீர்.]*

**நெருப்புத்தணல்** *neruppu-t-taṇal,* பெ. (n.) கட்டை நெருப்பு (உ.வ.); live coal.

*[நெருப்பு + தணல். நெருப்புத் துண்டம்.]*

**நெருப்புத்தழல்** *neruppu-t-taḻal,* பெ.(n.) **நெருப்புத் தணல்** (யாழ்.அக.) பார்க்க; see *neruppu-t-taṇal.*

*[நெருப்பு + தழல். தழல் = கனிந்த நெருப்பு, நெருப்பு]*

**நெருப்புத்தள்ளி** *neruppu-t-taḷḷi,* பெ.(n.) நெருப்புத் தள்ளுமொரு இரும்புக் கருவி (கட்டட.நாமா.40); poker.

*[நெருப்பு + தள்ளி. தள்ளி = தள்ளு வதற்குப் பயன்படும் குச்சி, கருவி. நெருப்பைத் தள்ளும் கோல்.]*

**நெருப்புத்திராவகம்** *neruppu-t-tirāvagam,* பெ.(n.) **நெருப்புத் தண்ணீர்** (வின்.) பார்க்க; see *neruppu-t-taṇṇīr.*

*[நெருப்பு + திராவகம். Skt.drava → த. திரவம் → திராவகம். திராவகம் = செய்நீர், சாரம்.]*

**நெருப்புத்துண்டம்** *neruppu-t-tuṇḍam,* பெ. (n.) ஒழுக்கத்தில் ஒரு போதும் தவறாதவ–ன்–ள் (உ.வ.); a strict observer of moral and religious principles. *அவள் ஒரு நெருப்புத் துண்டம். அவளிடம் யாரும் விளையாட முடியாது.*

*[நெருப்பு + துண்டம். நெருப்புத் துண்டு போல் தீயதை அழிப்பவன்–ள். தவறு செய்யாத, தவறுகள் நெருங்க முடியாதவன்–ள்]*

**நெருப்புத்தூண்** *neruppu-t-tūṉ,* பெ.(n.) அடர்ந்து, உயர்ந் தெரியுந் தீப்பிழம்பு (வின்.); pillar of fire.

*[நெருப்பு + தூண். தூண்போல் உயர்ந்து அடர்ந்து காணப்படும் தீப்பிழம்பு]*

**நெருப்புப்பட்டபுண்** *neruppu-p-paṭṭa-puṇ,* பெ.(n.) **1.** தீப்புண்; burns. **2.** நான்கு வகையான தீச்சுட்ட புண் (**1.** நிறமாற்றுப்புண், **2.** கொப்புளப் புண், **3.** தீய்ந்த புண், **4.** அழிபுண்); the four kinds of or degrees of burns viz., **1.** with change of a colour. **2.** one accompained by blister. **3.** black without much pain. **4.** sloughing wound. (சா.அக.).

*[நெருப்பு + பட்ட + புண்]*

**நெருப்புப்படு—தல்** *neruppu-p-paḍu-,* 20செ.கு.வி.(v.i.) **1.** நெருப்பால் அழிதல்; to be consumed by fire. *நெருப்புப்பட்டு துணி ஓட்டையாகி விட்டது.* **2.** கடுங்கோடையால் வருந்துதல்; to be consumed with drought. **3.** தெய்வத்தண்டனை முதலியவற்றால் அழிதல் (வின்.); to be destroyed, as by divine retribution. *கண்ணகியின் கடுஞ்சினத்தால் நெருப்புப் பட்டு மதுரை அழிந்தது.* **4.** முறையற்ற அரசனின் ஆட்சியால் துன்புறுதல் (வின்.); to suffer oppression, injustice, as from a wicked ruler. **5.** விலை முதலியன மிகுதியாதல்; to be abnormal as prices.

*[நெருப்பு + படு—தல். நெருப்புப்படுவதால் ஏற்படும் அழிவைப் போல், துன்பத்தைப்போல், கடுங்கோடையும், முறையற்ற அரசனும், விலை ஏற்றமும், மக்களை வாட்டும் தன்மையான வாதலால் நெருப்புப் படுதல் என்ற சொல்லுக்கு மேற்கண்ட பொருள்கள் அமைந்தன.]*

**நெருப்புப்பற்று—தல்** *neruppu-p-paṟṟu-,* 5செ.கு.வி. (v.i.) *நெருப்புப்பிடி—த்தல்* பார்க்க; see *neruppu-p-piḍi-. வீடு நெருப்புப் பற்றிக் கொண்டது.*

*[நெருப்பு + பற்று—தல். பற்றுதல் = பற்றிக் கொள்ளுதல்.]*

**நெருப்புப்பறக்குஞ்சுரம்** *neruppu-p-paṟakkuñjuram,* பெ.(n.) சூடும் வலியுமுள்ள காய்ச்சல் நோய்; fever accompanied by excessive heat and burning sensation. Ardent thermal fever. (சா.அக.).

*[நெருப்பு + பறக்கும் + சுரம்]*

**நெருப்புப்பிடி—த்தல்** *neruppu-p-piḍi-,* 4செ.கு.வி.(v.i.) தீப்பற்றி யெரிதல் (உ.வ.); to catch fire.

*[நெருப்பு + பிடி—த்தல்.]*

**நெருப்புப்புண்** *neruppu-p-puṇ,* பெ.(n.) நெருப்புச் சூடு (பைஷஜ.) பார்க்க; see *neruppu-c-cūḍu.*

*[நெருப்பு + புண்]*

**நெருப்புப்பூ—த்தல்** *neruppu-p-pū-,* 6செ.கு.வி.(v.i.) நீறுபூத்தல் (இ.வ.); to smoulder, as live charcoal.

*[நெருப்பு + பூ—த்தல். நெருப்பின் மேல் சாம்பல் படிந்திருத்தல்]*

**நெருப்புப்பெட்டி** *neruppu-p-peṭṭi,* பெ. (n.) தீப்பெட்டி; match box. *நெருப்புப் பெட்டி ஒன்று வாங்கி வா.*

*[நெருப்பு + பெட்டி. நெருப்புக் குச்சிகள் வைக்கும் பெட்டி.]*



**நெருப்புப்பொறி** *neruppu-p-pori,* பெ. (n.) தீப்பொறி (வின்.); sparks of fire.

*[நெருப்பு + பொறி. நெருப்பில் இருந்து கிளம்பும் பொறி.]*

**நெருப்புமணத்தல்** *neruppu-maṇattal,* பெ. (n.) புகை நாற்றம் (வின்.); smell of fire, fumigation.

*[நெருப்பு + மணத்தல்]*

**நெருப்புமரம்** *neruppu-maram,* பெ.(n.) தில்லைமரம்; Tillai-tree. (சா.அக.).

*[நெருப்பு + மரம். இம்மரம் மிகவும் வெப்பமானது. இதன் நிழல் அல்லது புகை பட்டாலும் கண் குருடாகும். நெருப்புப் போல் வெப்பமானதால் இம்மரம் நெருப்பு மரம் எனப்பட்டது.]*

**நெருப்புமழை** *neruppu-malai,* பெ.(n.) ஊழிக் காலத்தில் நீல வண்ணமுகில் பொழியுந் தீமழை (வின்.); rain of fire from the nīla-varṇam clouds, at the universal dissolution.

*[நெருப்பு + மழை. உலக அழிவுக் காலத்தில் பெய்யும் நெருப்பாலாகிய மழை.]*

**நெருப்புமூட்டு–தல்** *neruppu-mūṭṭu-,* 5செ.கு.வி.(v.i.) **1.** தீப்பற்ற வைத்தல்; to kindle fire. *நெருப்பு மூட்டிக் குளிர் காய்ந்தான்.* **2.** கலகம் உண்டாக்குதல் (உ.வ.); to arouse a disturbance, to instigate a quarrel. *வீட்டில் நெருப்பு மூட்டி விட்டான். இனி அமைதியைக் காணமுடியாது.*

*[நெருப்பு + மூட்டு. நெருப்பை யுண்டாக்கி உணவு சமைத்தலும் உண்டு. நெருப்பை உண்டாக்கிப் பொருள்களை அழித்தலும் உண்டு. அழித்தல் பொருளில் கலகம் உண்டாக்குதல் வந்தது. அஃது அமைதியை அழித்தல் என்பதாம்.]*

**நெருப்புமூலி** *neruppu-mūli,* பெ. (n.) **1.** தீச்சுட்டது போல் எரிச்சலையுண்டாக்கும் ஓர்பூடு, கொடிவேலி; a drug causing burning sensation - lead wort - Plumbago zeylanica. **2.** மிக்க சூட்டை யுண்டாக்கும் மூலி; drug causing intense heat in the system. **3.** கொப்புள மெழுப்பும் மூலி; drug causing blisters. **4.** ஒளி (சோதி)ப்புல்; burning bush. (சா.அக.).

*[நெருப்பு + மூலி. நெருப்புச் சூட்டைப் போல் எரிச்சலையுண்டாக்கும் பூடு.]*

**நெருப்புமேனி** *neruppu-mēṉi,* பெ.(n.) நெருப்பைப்போல் சிவந்த உடம்பு; red body as bright as fire. (சா.அக.).

*[நெருப்பு + மேனி. நெருப்பைப் போன்ற நிறமுடைய உடம்பு]*

**நெருப்புவண்டு** *neruppu-vaṇḍu,* பெ.(n.) கடித்தால் கொப்புள மெழுப்பும் வண்டு; telini fly canth arides raising blisters. (சா.அக.).

*[நெருப்பு + வண்டு. நெருப்பு வண்ண வண்டு.]*

**நெருப்புவண்ணம்** *neruppu-vaṉṉam,* பெ. (n.) சிவந்த நிறம்; red colour.

*[நெருப்பு + வண்ணம்]*

**நெருப்புவிரணம்** *neruppu-v-iraṇam,* பெ. (n.) *நெருப்புப் புண்* பார்க்க; see *neruppu-p-puṇ.* (சா.அக.).

*[நெருப்பு + Skt-விரணம்]*

**நெருப்புவிழுங்கி** *neruppu-viḻuṅgi,* பெ. (n.) நெருப்புக் கோழி; astrich. (சா.அக.).

*[நெருப்பு + விழுங்கி. நெருப்பை உணவாக உட்கொள்ளும் பறவை.]*

**நெருப்புவிழுங்குகோழி** *neruppu-viḻuṅgu-kōḻi,* பெ.(n.) **நெருப்புக் கோழி** (வின்.) பார்க்க; see *neruppu-k-kōḻi.*

*[நெருப்பு + விழுங்கு + கோழி. தீத்தணலையே உணவாக உட்கொள்ளும் கோழி.]*

**நெருப்புவிழுதல்** *neruppu-viḻudal,* பெ. (n.) **1.** தீப்பொறி பறக்கை (வின்.); flying of sparks, as from fire-wood, flint or grindstone. **2.** தணலுண்டாகை (உ.வ.); formation of live embers as in an oven. *அடுப்பில் நெருப்பு விழுந்துவிட்டது. இனி விரைவில் சமைக்கலாம்.* **3.** கூரைமேல் தீத்திரள் விழுகை; falling of balls of fire over roofs. **4.** முறைகேடு (அநீதி) முதலியவற்றால் அழிகை; destruction, as by injustice of famine. **5.** நெருப்பினா லழிகை (யாழ்.அக.); being consumed by fire. *நெருப்பு விழுந்து துணி எரிந்து விட்டது.* **5.** தன்னிலை யழிகை (வின்.); discomfiture, disheartenment.

*[நெருப்பு + விழுதல். நெருப்புப் பொறி பறந்து, துணி, வீடு முதலியவற்றை அழிப்பது போல் முறையற்ற வழியில் நடப்பவனையும் அழிக்கும். தன்னிலையில் இருந்து மாறியவனையும் அழிக்கும் என்பதையும் இச்சொல் காட்டுகிறது.]*

**நெருப்பெறும்பு** *nerupperumbu,* பெ. (n.) கடித்த விடத்து நெருப்புப்பட்டது போல வலியுண்டாக்கும் ஒருவகைச் சிவப்புச் சிற்றெறும்பு (இ.வ.); a kind of small red ant whose bite is very painful. *நெருப்பெறும்பு கடித்தால் வலி பொறுக்க முடியாது.*

*[நெருப்பு + எறும்பு. நெருப்புப் போன்ற சிவப்பு நிறமுடைய எறும்பு.]*

**நெருப்போடு** *neruppōḍu,* பெ.(n.) தட்டார் வேலைக்குரிய நெருப்புச் சட்டி (உ.வ.); chafing dish, used by goldsmith.

*[நெருப்பு + ஓடு. ஓடு = சட்டி. தட்டார் பொன்னைச் சுட்டெடுக்கப் பயன்படும் உமியும் நெருப்பும் உள்ள சட்டி.]*



**நெருமதங்கைக்குறியான்** *nerumadaṅgai-k-kuṟiyāṉ,* பெ. (n.) வெட்டிவேர்; cuscus root, Andropogon aromaticus. (சா.அக.).

**நெருமு—தல்** *nerumu-,* 5செ.குன்றாவி. (&) செ.கு.வி. (v.t. & v.i) **1.** பல்லைக் கடித்தல்; to

grind the teeth, gnash. **2.** பல்லாற் கடித்தல்; to bruise, crush between the teeth.

*[நருமு—தல் → நெருமு—தல். நெருமு—தல் = பல்கலைக் கடித்தல்.]*

**நெருள்** *neruḷ,* பெ. (n.) திணுங்கிய மக்கட் திரள், மக்கட் கூட்டம் (இ.வ.); dense crowd of people. "*யானை போகிற போக்கைப் பார், பார்க்கப் போகிற நெருளைப் பார்*" (பழ.).

*[நுல்→ நுள்→ நிள் → நிர் → நெர் → நெரு → நெருள்]*

**நெரேலெனல்** *nerēl-eṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு (திவா.); expr. of suddenness.

**நெல்**[1] *nel,* பெ. (n.) **1.** உணவுக்குப் பயன்படும் அரிசியைத் தரும் பயிர் வகை; rice plant. "*நெடுங்கதிர் நெல்லின் நாண்மேய லாரும்*" (ஐங்குறு.95). "*நெல்லும் உயிரன்றே நீருமுயிரன்றே மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்*" (புறநா.184). "*நெல்லுக் கிரைத்த நீர் வாய்க்கால் வழியோடி புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம், நானிலத்தில் நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை* (ஒளவையார்). **2.** நெல்மணி; grain of paddy. "*நெல்லும் பொரியும்*" (மணிமே.6:95). **3.** உணவு; food. "*நெல்லுண்ட நெஞ்சிற் கோர் நோய்*" (திரிகடு.79). **4.** எட்டு எள்ளளவு கொண்ட நீட்டலளவை (சிலப்.3:100, உரை); standard of linear measures = 8 sesame seeds. **5.** வாகை (அக.நி.); siris. "*நெல்லினா லலக்குங் காலு நிரப்பினான்*" (கம்பரா.ஒற்றுக்கே.11).

**ம., க., கோத.** நெல்; **துட.** நெசு; **குட.** நெல்லீ

*[நுல்(ஒளி) → நெல் = பொன் போல் விளங்கும் தவசம் (கூலம்). "சடைச் செந்நெல் பொன் விளைக்குந் தன்னாடு" (நள.68). "பொன் விளைந்த களத்தூர்" என்னுந் தொடர்களை நோக்கு. நெல்லிற்குச் சொல் என்னும் பெயர் தோன்றியதும் இக்கரணியம் பற்றியே. சுல் → சுல்லி = அடுப்பு, மடைப்பள்ளி. சுல் → சுள் → சுடு → சுடர். சுல் → சொல் → சொலி → சொலித்தல் = எரிதல், விளங்குதல். சொலி → வ.ஜ்வல். நெற்கஞ்சி, நெற்சோறு, நெற்பொரி என்னும் கூட்டுச் சொற்களில் நெல் என்பது நெல்லரிசியைக் குறிக்கும்.]*

'நெல்' புல்வகையைச் சேர்ந்த பயிர். இது உலகிலுள்ள எறும்பு முதல் யானை யீறாக உள்ள அனைத்து விலங்குகளுக்கும் உணவாகவுள்ளது. இது நன்செய், புன்செய் நிலங்களில் விளையும் பயிர். இவ்வகை நெற்கள் உருவ வேறுபாட்டினும், உரிசை வேறுபாட்டினும் பலவகைப்படும். இந்தியாவில் 100க்கு மேற்பட்ட வகை நெற்கள் கிடைக்கின்றன. இவற்றின் நிறம் பொன்மை, வெண்மை. இதன் தாயகம் தென்னிந்தியா. இந்தியா, சீனா, பர்மா, சப்பான் போன்ற நாடுகளில் அதிகமாகப் பயிர் செய்யப்படுகிறது.

பெரும்பாலார் உழவைக் கொண்டே எல்லா செல்வங்களையும் பெற்றனர். அரசனும் உழவரிடம் பெற்ற வரியாலேயே அரசாண்டான்.

இவ்வகைப் பெருமை பெற்ற நெல்லின் வகைகள்:

1. அரிக்கிராவி, 2.அரியான், 3. அருஞ்சோதி, 4. அழகியவாணன், 5. அறுபதாம் குறுவை – 60 நாளில் விளையும் பயிர், 6. அன்னதானக் குறுவை – மூன்று மாதப் பயிர். 7. அன்னதானச் சம்பா, 8. அனுமந்தச் சம்பா, 9. ஆடிக்கோடை – ஆடியில் அறுவடையாகும் நெல். 10. ஆவாரம் பூச்சம்பா, 11. ஆனைக் கொம்பன், 12. இராசன்னம் – உயர்ந்த நெல் வகை, 13. இராமன் சம்பா, 14. இருப்பைப் பூச்சம்பா, 15. இளங்கார் – இறங்குமோட்டான், 16. ஈசுரக்கோவை, 17. ஈர்க்குச் சம்பா, 18. உருண்டைக்கார் – 4 மாதப் பயிர், 19. உருண்டைச் சம்பா – 5 மாதப் பயிர், 20. ஊசிச்சம்பா, 21. ஒட்டன், 22. கட்டிச்சம்பா –4 மாதங்களில் பயிராகும் நெல், 23. கடப்பநெல் – கறுங்குறுவை நெல் மூன்றுமாதப் பயிர், 24. கடம்பநெல், 25. கந்தசாலி – உயர்ந்த நெல்வகை, 26. கந்தபத்தம், 27. கம்பஞ்சம்பா, 28. கமுகம் பூச்சம்பா, 29. கருங்குறுவை, 30. கருடன் சம்பா, 31. கருணை வெள்ளை,

32. கல்மணவாரி–4 மாதப்பயிர், 33. கல்லுண்டைச் சம்பா–6 மாதப்பயிர், 34. கலவஞ்சம்பா (சிறுமணிநெல்)– 6 மாதப்பயிர், 35. கலிங்கஞ்சம்பா–4 அல்லது 5 மாதப்பயிர், 36. கலிவிராயன், 37. கவரிச்சம்பா–5 மாதப்பயிர், 38. கற்றாழைச்சம்பா, 39. கறுத்தகார்–5 மாதப் பயிர், 40. கறுப்பன்–மூன்று மாதப்பயிர், 41. கனகச் சம்பா–உயர்ந்த நெல்வகை. 42. காடைக்கழுத்தன்–5 மாதப்பயிர், 43. காடைச் சம்பா, 44. கார்த்திகைச்சம்பா, 45. கார் நெல், 46. காலிங்கராயன் சம்பா, 47. காளான் சம்பா, 48. கிச்சடி சம்பா, 49. குங்குமச்சம்பா, 50. குடப்பட்சி, 51. குடுப்புக்கார், 52. குண்டுச்சம்பா, 53. குத்தாளை–மானாவாரி நெல், 54. குதிரைவாலிச் சம்பா, 55. கும்பாளைச் சம்பா, 56. குருவிக்கார், 57. குருவிவாலன், 58. குலவாழை–7 அல்லது 8 மாதங்களில் அறுவடையாகும் சம்பா நெல், 59. குழியடிச்சான், 60. குளவாழை–குளக்கசிவு நீரில் பயிராகும் நெல்வகை, 61. குறுவைநெல், 62. குறுஞ்சம்பா, 63. குன்றிமணிச்சம்பா–செந்நிறநெல், 64. கூர்க்கருப்பன்–உயர்ந்த நெல் வகை, 65. கூரன், 66. கைவளைச்சம்பா, 67. கோடைச் சம்பா, 68. சடைச்செந்நெல்–சம்பா வகை நெல், 69. சண்டிக்கார்–கார் நெல்வகை, 70. சம்பாநெல், 71. சரப்பாளிச் சம்பா, 72. சரை நெல், 73. சவர் நாயகம், 74. சாரலி, 75. சித்திரைக் கடப்பு, 76. சித்திரைக் கார், 77. சித்திரைக் காலி, 78. சித்திரையன், 79. சிரசுத கோப்பு, 80. சிலுவைக் கடப்பு – கடப்பநெல் வகை, 81. சிவப்புக் குத்தாளை, 82. சிவப்புச் சிறுமணியான், 83. சிவப்புச் சிறு முறியன், 84. சிவப்பு மிளகுச் சம்பா, 85. சிறுகிட்டாஞ்சி, 86. சிறுகுரும்பை, 87. சிறு குறுவை, 88. சிறுபாளைச் சம்பா, 89. சிறுமணிச்சம்பா, 90. சின்னச்சம்பா, 91. சீரகச் சம்பா, 92. சீரங்கி, 93. சீவன்சம்பா, 94. சீனட்டி, 95. சீனநெல், 96. சுகதாசுச்சம்பா, 97. சுத்தல் சம்பா, 98. சுருணை வெள்ளை, 99. செங்கண்ணி, 100. செங்கணிக்கார், 101. செங்கணிக் குறுவை, 102. செங்கலதை, 103. செஞ்சம்பா, 104. செத்துவிருப்பா நெல், 105. செம்பவளச் சம்பா, 106. செம்பாளை, 107. செம்மிளகிச்சம்பா, 108. செருப்பளிச் சம்பா, 109. செருமலை யரியன், 110. சேமாளைச் சம்பா, 111. சேரலி, 112. சொளி குரும்பை, 113. தங்கச் சம்பா, 114. தட்டார வெள்ளை, 115. திருவரங்கம்–திருவரங்கம் பகுதியில் பயிராவது, 116. தில்லை–சிதம்பரம் பகுதியில் பயிராவது, 117. துய்யமல்லிச் சம்பா, 118. துலுக்கடுவன், 119. துவரன்சம்பா–தென்னெல், 120. தோட்டச் சம்பா, 121. நயேந்திரப் பாலை, 122. நரியன் சம்பா, 123. நரையான், 124. நவரப் புஞ்சை, 125. நவரை, 126. நாவல் நெல், 127. நீலச் சம்பா (நீர்பாய்ச்சல் இல்லாமல் விளைவது), 128. நேத்திரப்பள்ளி, 129. பங்களாச்சம்பா, 130. பஞ்ச பாலை, 131. பரக்கொடை, 132. பரவழச் சம்பா, 133. பலான் சம்பா, 134. பலுக்கினியன், 135. பழனிச்சம்பா, 136. பள்ளக்கருக்காய், 137. பாலன் சம்பா, 138. பிச்சைவாரி, 139. பிசானம், 140. பிசினி, 141. புட்டரிசிநெல், 142. புழுகுச் சம்பா, 143. புளங்கல், 144. புனுகுச் சம்பா, 145. பூம்பாளை, 146. பெங்காளம், 147. பெரிய சம்பா, 148. பொங்கற்சம்பா, 149. பொச்சாலி, 150. பொன்கம்பி, 151. மடங்கல், 152. மடுவிழுங்கி, 153. மணக்கத்தைநெல், 154. மணிச்சம்பா, 155. மல்லிகைச்சம்பா, 156. மலைகுலுக்கி, 157. மானாவாரி, 158. மிளகுச்சம்பா, 159. முட்டைக்கார், 160. மைக்கண், 161. மைச்சம்பா, 162. மோசணம், 163. வரிச்சம்பா, 164. வளைதடிச்சம்பா, 165. வாடைச்சம்பா, 166. வாலான் (குதிரைவாலன்), 167. வெண்ணெல், 168. வெள்ளைக்கார், 169. வெள்ளை மிளகுச் சம்பா.

நெய்பயிருக்கு ஏற்ற எருவகை : எருக்கிலை, கொழுஞ்சி, அவிரி, ஆவிரை, வேப்பிலை, நொச்சி, வாகை, பூவரசு, புங்கு, வாதநாராயணன் இலைகளும், ஆமணக்கு, வேம்பு, வேர்க்கடலை, இருப்பை, புங்கு, புன்னை முதலான பிண்ணாக்குகளும் போடலாம். நிலத்தில் களர் இருந்தால் பாச்சான், பிரண்டை, பனையோலைகளைப் போட்டு மிதித்து அதிகத் தண்ணீர் கட்டினால் களர் எடுபட்டுப்போம். ஆவின் எருவைப் போட்டால் சோறு சுவையாக இருக்கும்.

நெய்பயிருக்கு தக்க நிலம்: நெற்பயிரானது அதிகத் தண்ணீருள்ள இடங்களிலெல்லாம் மிகுதியாக விளையக் கூடினும் களிமண், செம்மண், ஆற்றோரம், மணல்படுக்கை, மிச்சரமண் முதலானவையே இப்பயிருக்கு ஏற்றவை.

நெற்பயிருக்கு வேண்டிய உழவு : "நெல்லுக்கு நான்குழவு" என்னும் பழமொழி நம் நாட்டாருக்குத் தெரிந்த செய்தி. நெல் தொன்றுதொட்டுச் சேற்றில் விளையும் பயிராகையால் இதற்குப் புழுதியுழவு கூடாது. மேலும், மண்மட்க வேண்டியதைக் கருதி நான்கு நாள் விட்டு, விட்டு உழுதல் வேண்டும்.

நெற்பயிரின் வேர் ஒரு விரலம் (அங்குலம்) வளர்ந்து பரவும் தன்மையுடையதாதலால் உழவுக்குத் தக்கபடி பயிர் செழித்து வளரும்.

நெற்பயிர் : இது புன்செய், நன்செய் நிலங்களில் பயிரிடப்படுவது. நிலத்தை நன்றாய்யுழுது புழுதியாக்கி உலர்த்தி நன்றாகக் காய்ந்த விதைகளைப் புழுதியில் விதைப்பர். இது புழுதி கால் பயிர். கழனியை உழுது நீர்ப்பாய்ச்சி எருத்தழை முதலியன போட்டு அவை நன்றாயழுகிய பின் பறம்படித்து நாற்றுக்களைத் தொலைவாக நட்டுப் பயிரிடுவது நடவு. இது நன்செய் பயிர்.

நெல் பற்றிய பழமொழிகள்

நெல் எடுக்கவும் புல் எடுக்கவும் ஆச்சோ?

நெல்லும் உப்பும் பிசைந்து உண்ணக் கூடுமா?

நெல்லுவகை எண்ணினாலும் பள்ளி வகை எண்ண முடியாது.

நெல் இருக்கப் பொன், எள் இருக்க மண்.

நெல்லால் அடித்தால் கல்லால் அடிப்பான்.

நெல்லுக்கடை மாடு கன்று போடட்டும்.

நெல்லுக் காய்க்கிற மரம் கேட்டவன் போல. நெல்லுக் குத்துகிறவனுக்குக் கல்லுப் பரீட்சை தெரியுமா?

நெல்லுக்குப் பாய்கிற தண்ணீர் புல்லுக்குப் பாயும்.

நெல்லுக்குள்ளே அரிசி.

நெல் விளைகிற நிலமும் தெரியாது, நிலாக் காய்கிற இடமும் தெரியாது.

**நெல்[2]** *nel,* பெ. (n.) 1. நெல்லி; Indian gooseberry. 2. கீழாநெல்லி; a small plant with slender green main branches - Phyllanthus niruri. (சா.அக.).

*[நெல்லி → நெல். கடைக்குறை]*

**நெல்காரிகம்** *nel-kārigam,* பெ. (n.) கருங்குறுவையரிசி; red rice with black hush. (சா.அக.).

*[நெல் + கார் + இகம் – நெல்காரிகம்= காரரிசி, கருங்குறுவையரிசி.]*

**நெல்குத்து–தல்** *nel-kuttu-,* 5செ.குன்றாவி. (v.t.) நெல்லை உரலிலிட்டு உலக்கையால் குத்தி அரிசியாக்குதல்; to pound paddy in a mortar.

*[நெல் + குத்து–தல்]*

நெல்லறைக்கும் ஆலை வருவதற்கு முன் நெல்லை உரலிலிட்டு உலக்கைக் கொண்டு கையால் குத்தியே அரிசி எடுத்துச் சமைத்து உண்டனர். இவ்வாறு எடுக்கப்படும் அரிசியில் உயிர்ச்சத்துகள் அதிகம் இருக்கும் என்பர் அறிவியலாளர்கள்.

**நெல்குற்றுச்சாலை** *nel-kuṟṟu-c-cālai,* பெ.(n.) கோவிலில் படையலுக்கு வேண்டிய நெல்லைக் குத்தி அரிசியாக்கும் தொழில் நடக்கும் இடம்; the place where the paddy is pounded.

*[நெல் + குற்று + சாலை. குத்து → குற்று. சாலை = இடம்]*

திருக்கோயில்களில் திருவமுது படைக்கத் தேவைப்படும் அரிசிக்குரிய நெல்லைத் தூய்மையுடன் குத்தி அரிசியாக்கித் தரும் தொழில் நிகழும் இடம். இதனை 'நெற்குறுசாலை' என்றும் கல்வெட்டுக்களில் காணலாம். நெற்குறு சாலை பார்க்க. குறு → குற்று (கல்.அக.).

**நெற்குறுசாலை** *neṟkuṟu-šālai,* பெ. (n.) நெல்லைக் குத்தி அரிசியாக்கும் இடம்; a hall is alloted to pound the paddy.

*"உடையார் திருவொற்றியூருடைய நாயனார்க்கு நெற்குறுசாலைக்கு நெற்குற்றக் கொண்டு விட்ட பெரிய நாச்சியையும் இவள் மகள் மாரியையும்"* (தெ.க.தொ.4:558).

*[நெல்குத்தும் சாலை → நெல்குற்றுச் சாலை → நெற்குறுசாலை.]*

திருக்கோயில்களில் திருவமுதுக்குரிய நெல்லை நாள்தோறும் அளவுப்படி குத்தி அரிசியாக்கித் தரும் தொழிற்சாலை. இச்சாலையில் நெல் குற்றுதற்கு நிலையாகப் பெண்கள் அமர்த்தப் பெறுதல் வழக்காம். (கல்.அக.).

**நெல்மணி** *nel-maṇi,* பெ.(n.) நெல்; paddy seed. (சா.அக.).

*[நெல் + மணி]*

**நெல்முளைக்கிருமி** *nel-muḷai-k-kirumi,* பெ.(n.) சளியால் (சிலேட்டுமத்தால்) இரைப்பையில் தோன்றி உள்ளாகவே உலாவும் ஒருவகைப் பூச்சி; a very small worm or organism found to be moving about in the stomach, the existence of which is due to phlegmatic causes. (சா.அக.).

*[நெல் + முளை + Skt.கிருமி]*

**நெல்முறி** *nel-muṟi,* பெ. (n.) 1. சரிக்குச்சரி விளைவில் இருந்து (மாசூலிலிருந்து) வரிநெல்லைத் திட்டப்படுத்தி அவ்வவ் வாண்டு நடப்பு விலையாற் பணமாக்கிச் செலுத்தி வந்த வரி (R.T.); a system of assessment in Tanjore under which each village was assessed with a definite quantiy of grain calculated on the average produce of past years and convertible into money rent at the current market price in each year. 2. நெல்லுமுறி பார்க்க; see *nellu-muṟi.*

*[நெல் + முறி. முறி = ஆவணம், பற்றுச் சீட்டு. முறிதல் = தன்மை மாறுதல், முற்றுதல்]*

**நெல்லடை** *nel-l-aḍai,* பெ. (n.) பத்திலொரு பங்காய் நெல்லாகச் செலுத்தும் அரசிறை (யாழ்ப்.); tithe of paddy given as revenue.

*[நெல் + அடை. அடை = நிலவரி]*

**நெல்லம்புல்** *nel-l-am-bul,* பெ.(n.) வைக்கோல் (வின்.); rice - straw.

க. நெல்லுகுல்லு

*[நெல் → நெல்லம் + புல்.]*

**நெல்லரி** *nel-l-ari,* பெ. (n.) அரியப்பட்ட கைப்பிடியளவான நெற்கதிர்; sheaf of rice-corn.

*[நெல் + அரி. அரி = கைப்பிடிக் கதிர், கதிர்க் குவியல்.]*

**நெல்லரிகிணை** *nel-l-ari-kiṇai,* பெ.(n.) மருதநிலப் பறை வகை (இறை. களவி.1:18); harvest drum of the agricultural tract.

*[நெல்லரி + கிணை. கிணை = மருதநிலப் பறை.]*

**நெல்லரிசி** *nellariśi,* பெ.(n.) நெல்குத்திய அரிசி; rice from husked paddy. (சா.அக.).

*[நெல் + அரிசி.]*

**நெல்லவல்** *nellaval,* பெ. (n.) அரிசியவல்; pounded flat rice (flaked rice) obtained from fried paddy. (சா.அக.).

*[நெல் + அவல். நெல்லை அவித்து நசுக்கி இடித்துப் பெறும்பொருள்.]*

உள்ளத்தில் பள்ளம் விழுவதை அவலம் என்பர். அவல் + அம். அவித்த நெல்லை பள்ளமாய் இடித்துப் பெறுவதால் அவல் என்று பெயர். கவலை ஏற்றம் என்பது பள்ளநீர் ஏற்றுவது பற்றி வருவது போல் கவல் + ஐ மனக்கவலை குறிக்கும்.

**நெல்லளவு** *nellaḷavu,* பெ. (n.) நெல்லின் எடையளவு; paddy grain weight. (சா.அக.).

*[நெல் + அளவு]*

**நெல்லாயம்** *nel-l-āyam,* பெ. (n.) நெல்லாகக் கொடுக்கும் அரசிறை; revenue paid in paddy. "*நாற்பாக் கெல்லைக்கும் உட்பட்ட கடமையும் பாடிகாவலும் சாரிகையும் வெட்டிவரி கொள்வரியும் உட்பட்ட எப்பேற்பட்ட நெல்லாயங்களும்*" (தெ.க.தொ.4.648).

*[நெல் + ஆயம். ஆயம் = வரி, வருவாய், குடியிறை, கடமை]*

**நெல்லாயம் :** அரசு நெல்லாகப் பெறும் வரி. தவசங்களை ஒரு இடத்திலிருந்து

மற்றோரிடத்திற்குச் சாலை வழியாகக் கொண்டு செல்லுங் காலத்தில் அதற்குரிய வரியை நெல்லாக அரசு பெறுவது. (கல்.அக.).

**நெல்லானி** *nellāni,* பெ. (n.) வம்மி மரவகை (L.); guinea peach.

**நெல்லி** *nelli,* பெ. (n.) **1.** மரவகை; emblic myrobalan. *"சிறியிலை நெல்லி"* (ஐங்குறு.334). *உள்ளங்கை நெல்லிக்கனி.* **2.** திரிபலை யிலொன்றான நெல்லிக்காய் (பதார்த்த.672); fruit of emblic myrobalan. *நெல்லிக்காய் ஊறுகாய் உடலுக்கு நல்லது.*

**ம., க., து., குட., தெ.** நெல்லி; **பர்.** நெல்ல; **கோண்.** நல்லி, நெல்லி.

**மறுவ.** காட்டு நெல்லி, தோப்பு நெல்லி, ஆமலகம், தாத்திரி.

இது இரட்டை விதையிலைப் பயிரிகளில் ஆமணக்குக் குடும்பத்தைச் சார்ந்தது. இந்தியாவிலும், இலங்கை, மலேயா. மலேயாத் தீவுகள், சீனா ஆசிய நாடுகளிலும் உள்ளது. இது தானாகவும் வளரும். மக்கள் பயிர் வைப்பதும் உண்டு. இஃது ஒரு சிறு அல்லது நடுத்தர மரம். மரம் கோணலாகவும் நெருடுள்ளதாகவும் இருக்கும். இதன் பட்டை சாம்பல் நிறமாக அல்லது வெளுப்பான பழுப்பு நிறமாக இருக்கும்.

இதன் இலைகள், பார்வைக்குக் கூட்டிலைகள் போலத் தோன்றும். உண்மையில் கூட்டிலைகளாகத் தோன்றுபவை சிறிய கிளைகள். அக்கிளைகளிலே மிகச் சிறிய தனியிலைகள் மாற்றொழுங்கில் பொருந்தியிருக்கும். இதன் பூக்கள் ஒரு பாலின. ஆண் பூ, பெண் பூ இரண்டும் ஒரே மரத்தில் ஒவ்வொரு சிறு கிளையிலும் உண்டு. பூக்கள் மிகச் சிறியவை. எளிதில் உதிர்ந்து விடும். இதன் கனி உள்ளோட்டுச் சதைக் கனி. ஏறக்குறைய உருண்டையாக இருக்கும். நெடுக்கில் பள்ளமான வரிகள் காணப்படும். ஆறு பிரிவுகளாக இருக்கும், பச்சையாக அல்லது சிறிது மஞ்சள் கலந்ததாக அல்லது சிவப்புச் சாயையுடையதாக இருக்கும். கனியின் சதை துவர்ப்பாகவும், கசப்பாகவும், புளிப்பாகவும், இனிப்பாகவும் இருக்கும்.

இம்மரம் கோடையில் பூக்கும். கனிகள் அடுத்த குளிர்காலத்தில் முதிரும். கனியைப் பச்சையாகவும் உண்ணலாம், சமைப்பதும் உண்டு. மிகுதியும் ஊறுகாய் போடுவார்கள். இதில் சத்துப் பொருள்கள் மிகுதியும் உண்டு.

நெல்லிக்கனி நாட்டு மருத்துவத்தில் பெரிதும் சிறந்த பொருள். இது துவர்ப்பி; குளிர்ச்சியை யுண்டாக்கி, மலமிளக்கி, சிறுநீர்ப் பெருக்கியாகவும் செயல்படும்.

இம்மரம் எங்கும் வளரும் தன்மைத்து; கோணலாக இருக்கும். மனித உடலைப் போல் கனமுள்ளதாய் இருக்கும். பூக்கும் மரவகையைச் சார்ந்தது, இலைக்காம்பு நீளமானது. காய்கள் உருண்டையாக சதைப் பற்று மிக்கு இருக்கும். கொட்டை முக்கோண வடிவுள்ளது. பூக்கள் சிறியவை, பச்சை கலந்த மஞ்சள் நிறமுள்ளவை. மேழம் (சித்திரை) முதல் நளி (கார்த்திகை) வரை பூக்கும். இதன் காய் குளிர்ச்சிக்காகவும், பித்தத்தைப் போக்கவும் பயன்படுகிறது. இம்மரத்தின் இலை, பூ, பட்டை, காய் அனைத்தும் மருந்தாகப் பயன்படுகிறது. இதன் காயை வற்றல் செய்தும் பயன்படுத்துவர்.

நெல்லி வகைகள் : 1. நில நெல்லி, 2. தோப்பு நெல்லி, 3. காட்டு நெல்லி, 4. கரு நெல்லி, 5. கொடி நெல்லி, 6. சீமை நெல்லி, 7. அரு நெல்லி, 8. செந்நெல்லி, 9. மேலா நெல்லி (கருநெல்லி). 10. கீழாநெல்லி, 11. நீர்நெல்லி (கருநெல்லி), 12. சிறுநெல்லி (அருநெல்லி), 13. வெண்ணெல்லி. (சா.அக.).



**நெல்லிக்கந்தகம்** *nelli-k-kandagam,* பெ. (n.) **நெல்லிக்காய்க் கந்தகம்** பார்க்க; see *nelli-k-kāy-k-kandagam.* (சா.அக.).

**நெல்லிக்கா** *nellikkā,* பெ. (n.) தஞ்சை மாவட்டவூர்; a village in Tanjore district.

சம்பந்தர் பாடல் பெற்றவூர், நெல்லி மரங்கள் அடர்ந்து பூங்கா போல ஆனமை பற்றி அமைந்த பெயர்.

**நெல்லிக்காய்** *nelli-k-kāy,* பெ.(n.) தின்றபின் நீர் குடித்தால் இனிப்புச் சுவை தரும் பச்சை நிறச் சிறிய உருண்டை வடிவக் (நெல்லி மரத்தின்) காய்; the fruit of Indian goose berry - Emblica myrobalan. (சா.அக.).

*[நெல்லி + காய்]*

மஞ்சள் நிறமும் சதைப்பற்றும் மிக்க காய். இது புளிப்பும், துவர்ப்பும் உடையது. இக்காயை வடையாகவும், பச்சடியாகவும், துவையலாகவும் செய்து சாப்பிட குமட்டல் (வாந்தி), தலை சுற்றல், சளி, முதலிய நோய்கள் நீங்கும். இதன் வற்றல் சூடு, பித்த மயக்கம், ஒக்காளம் முதலிய நோய்கள் நீங்கும். பச்சை நெல்லிக்காயை அரைத்துத் தொப்புளின் கீழ்த் தடவ நீர்க்கட்டு உடையும். (சா.அக.).



**நெல்லிக்காய்த்தயிலம்** *nelli-k-kāy-t-tayilam,* பெ.(n.) **நெல்லிக்காயெண்ணெய்** பார்க்க; see *nelli-k-kāy-eṇṇey.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + தயிலம்]*

**நெல்லிக்காய்க்கந்தகம்** *nelli-k-kāy-k-kandagam,* பெ.(n.) கந்தக வகை (வின்.); a kind of Sulphur.

*[நெல்லி + காய் + கந்தகம். கந்தகம் = வெடி மருந்து. தீக்குச்சி செய்யப் பயன்படும் கார நெடியுள்ள மஞ்சள் நிறக் கனிமப்பொருள்.]*

நெல்லிக் காயைப் போல் மஞ்சள் நிறமான கந்தகம். இது படிகாரத்தைப்போல் துண்டு துண்டுகளாகக் கிடைக்கும். மற்ற கந்தகங்களை விடத் தூய்மையானது. இது குட்டம், வல்லைக்கட்டி, வயிற்றுவலி, பெண்ணோய் முதலியவற்றிற்கு மருந்தாகப் பயன்படுகிறது. (சா.அக.).

**நெல்லிக்காய்க்குண்டு** *nelli-k-kāy-kuṇḍu,* பெ.(n.) **நெல்லிக்காய்மணி** (வின்.) பார்க்க; see *nelli-k-kāy-maṇi.*

**நெல்லிக்காய்சர்பத்** *nelli-k-kāy-šarpad,* பெ.(n.) பச்சை நெல்லிக் காயினின்று செய்யும், சருக்கரைப்பாகு சேர்த்த ஒரு குடிநீர். இது உடம்பிற்குக் குளிர்ச்சியைத் தருவதோடு சிறுநீரை (மூத்திரத்தை)ப் போக்கும்; the shrup prepared from fresh fruit, it is a cooling drink which is said to have diuretic effect. *நெல்லிக்காய் சுவைநீர் (சர்பத்) சாப்பிட்டால் உடல் சூடு தணியும்.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + சர்பத்]*

Skt. சர்பத்து → த. குடிப்பு, குடிநீர்.

**நெல்லிக்காய்ச்சாறு** *nelli-k-kāy-c-cāṟu,* பெ.(n.) பச்சை நெல்லிகாயினின்று பிழிந்த சாறு. இது மலத்தை இளக்கிச் சிறுநீரை (மூத்திரத்தை)ப் போக்கும் குணமுள்ளது; குளிர்ச்சியையும் தரும்; juice extracted from emblic myrobalam. It is a laxative and diuretic. (சா.அக.). *நெல்லிக்காய்ச்சாறு குளிர்ச்சியைத் தரும்.*

*[நெல்லிக்காய் + சாறு]*

**நெல்லிக்காய்த் துவையல்** *nelli-k-kāy-t-tuvaiyal,* பெ.(n.) பச்சை நெல்லிக்காயை அடுப்புக் கும்பியில் செருகி, நீர்வற்றிய பின் கொட்டை நீக்கி அத்துடன் கொத்த மல்லியிலை, கொப்பரைத்தேங்காய், வெங்காயம்,

பூண்டு, உப்பு, பச்சை மிளகாய் முதலியவற்றைத் திட்டப்படிச் சேர்த்து, பழச்சாறு விட்டரைத்துச் செய்யும் துவையல்; condiment paste of emblic myrobalan. It is a paste prepared in the kitchen in the following manner. The fruit is burried in the hot ashes of the oven and taken out after sometime when the water is completely dried out. The nut is removed and to the pulp is added corriander leaves, dried cocoanut, onion, garlic, common salt, green chillies etc., and ground into a paste with the juice of lime or lemon. *நெல்லிக்காய் துவையல் சாப்பிட்டால் பசியைத் தூண்டும், சூட்டைத் தணிக்கும், பித்தம் குறையும்.* (சா.அக.).

*[நெல்லி + காய் + துவையல்]*

**நெல்லிக்காய்ப்பற்று** *nelli-k-kāy-p-paṟṟu,* பெ.(n.) கொட்டை நீக்கிய பச்சை நெல்லிக்காயை அரைத்துப் போடும் பற்று. தொப்புளின் கீழ்பற்றுப் போட சிறுநீர்ப்பை (மூத்திரப்பை) அழற்சி நீங்கும்; a paste of Indian gooseberry after removing the nut is a useful external application over the public region in irritability or inflammation of the bladder. *நெல்லிக்காய்ப்பற்று சிறுநீர் (மூத்திர) நோயைப் போக்கும்.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + பற்று]*

**நெல்லிக்காய்மணி** *nelli-k-kāy-maṇi,* பெ. (n.) நெல்லிக்காய் போன்ற மணிகளாலமைந்த கழுத்தணி (வின்.); gold beads of a necklace in the form of nelli fruit.

*[நெல்லி + காய் + மணி. மணி = கழுத்தணி, அணிகலன்.]*

**நெல்லிக்காய்முத்து** *nelli-k-kāy-muttu,* பெ.(n.) கழுத்தணி வகை (தெ.க.தொ.8,59); a kind of necklace.

*[நெல்லிக்காய் + முத்து. நெல்லிக்காய் போன்ற உருக்களைக் கோத்த கழுத்தணி]*

**நெல்லிக்காய்முறப்பா** *nelli-k-kāy-muṟappā,* பெ.(n.) நெல்லிக்காயைக் கொட்டை நீக்கித் தறித்துத் தேனிலிட்டு ஊறவைக்கும் உ(யு)னானி மருத்துவமுறை. இதனால் காய்ச்சல், தாகம் நீங்கும்; a Unani medical preparation in which the fresh emblic myrobalan is deprived of its nut and then cut in small pieces and preserved in honey the whole fruit is also preserved in honey. *நெல்லிக்காய்முறப்பா நா வறட்சியை நீக்கும்.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + முறப்பா]*

**நெல்லிக்காய்மூட்டை** *nelli-k-kāy-mūṭṭai,* பெ.(n.) ஒற்றுமையற்றவர்; a body of persons wanting in solidarity. *கலவரத்தால் நெல்லிக்காய் மூட்டை சிதறியது போல் கூட்டம் கலைந்து ஓடியது.*

*[நெல்லி + காய் + மூட்டை. மூட்டை = பொதி, உள்ளே பண்டம் வைத்துக் கட்டப்பட்ட கட்டு. நெல்லிக்காயை மூட்டையாக் கட்டினாலும் அவைகள் ஒன்றாகாது. தனித் தனியாகவே இருக்கும். அதுபோல ஒற்றுமை யற்றவர்கள் கூட்டமாக இருந்தாலும், அவர்களுள் ஒற்றுமை இல்லை. நெல்லிக்காய் கொட்டியதும் சிதறி ஓடுவதுபோல் ஒற்றுமை இல்லாமல் சிதறி ஓடுவர்.]*

**நெல்லிக்காயடை** *nelli-k-kāyaḍai,* பெ. (n.) பச்சை நெல்லிக்காயைக் கொட்டை நீக்கி அரைத்து அடையாகத் தட்டிக் காய வைத்தது; a thin round cake prepared by grinding the pulp of the fresh Indian goose berry and making it like a cake and drying it under

the sun. *நெல்லிக்காயடை உடலுக்கு நல்லது, தலைச் சுற்றல், உவட்டல் (வாந்தி) நீங்கும்.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + அடை]*

**நெல்லிக்காயரிட்டம்** *nelli-k-kāyariṭṭam,* பெ. (n.) நெல்லிக்காய்ச் சாற்றுடன் தேன், திப்பிலி, சருக்கரை சேர்த்துக் கொதிக்க வைத்துச் சாடியில் ஊற்றிச் சில நாள் புளிக்க வைத்து எடுக்கும் மருந்து. இது காமாலை, வயிற்று வலி, இருமல் முதலியவற்றைக் குணமாக்கும்; fermented liquor of emblic myrobalan is prepared as follows, fresh juice of the fruit mixed with 1/8 quantity of honey, powdered long pepper and sugar is boiled sufficiently for a while and than allowed to ferment in an earthern jar. It is prescribed for jaundice, dyspepsia, indigestion, cough etc. (சா.அக.).

*[நெல்லிக்காய் + அரிட்டம். அரிட்டம் = கள், புளிப்பேறிய நீர்]*

**நெல்லிக்காயூறுகாய்** *nelli-k-kāyūṟu-kāy,* பெ.(n.) பச்சை நெல்லிக்காயை உப்பிலிட்டு ஊறப் போட்டு, அல்லது முழுக்காயோடு உப்பும், சாந்தும் (மசாலையும்) சேர்த்து நல்லெண்ணெயில் ஊறப்போட்டு பதப்படுத்தி செய்யும் ஊறுகாய்; pickle of emblic myrobalan simply soaked in common salt and condiments added to it and preserved in gingelly oil. The fruits may be preserved with the common salt only. *நெல்லிக் காயூறுகாய், தலைச்சுற்றல் வாந்தி, சளி போன்றவற்றைக் குணபடுத்தும்.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + ஊறுகாய்]*

**நெல்லிக்காயெண்ணெய்** *nelli-k-kāyeṇṇey,* பெ.(n.) நெல்லிக்காய்ச் சாற்றுடன் மற்ற கடைச்சரக்குகளை முறைப்படி கலந்து காய்ச்சி வடித்த எண்ணெய்; medicated oil prepared with the juice of emblic myrobalan as the chief ingredient with other bazaar drugs added to it and then boiled down as per rules laid down. *நெல்லிக்கா யெண்ணெய் தலைமயிர் வளர உதவும்.* (சா.அக.).

*[நெல்லிக்காய் + எண்ணெய்]*

**நெல்லிக்காயெழுத்தாணி** *nelli-k-kāy-eluttāṇi,* பெ.(n.) எழுத்தாணி வகை (வின்.); a kind of iron style, with head like nelli fruit.

*[நெல்லிக்காய் + எழுத்தாணி. தலைப்பகுதி நெல்லிக்காய் போல் உருண்டை வடிவான எழுதும் ஆணி, எழுதுகோல்.]*

**நெல்லிக்குப்பம்** *nelli-k-kuppam,* பெ.(n.) தென்னிந்தியாவில் தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டத்தில் கடலூருக்கு அருகில் உள்ள ஊர்; a village in Cuddalore district near in Cuddalore. சருக்கரைத் தொழிற் சாலை உள்ள ஊர்.

*[நெல்லி + குப்பம். நெல்லி மரங்கள் நிறைந்த ஊராக இருந்திருக்கும்.]*

**நெல்லிச்சாந்து** *nelli-c-cāndu,* பெ.(n.) காய்ந்த நெல்லியின் அரைத்த விழுது; paste of dried nelli fruit. "*வியன்காய் நெல்லிச் சாந் தரைத்து*" (சீவக.2692).

*[நெல்லி + சாந்து. சாந்து = அரைத்த கூழ் போன்ற பொருள், விழுது.]*

**நெல்லிச்சாறு** *nelli-c-cāṟu,* பெ. (n.) **நெல்லிக்காய்ச் சாறு** பார்க்க; see *nelli-k-kāy-c-cāṟu,* (சா.அக.).

*[நெல்லி + சாறு]*

**நெல்லிச்சி** *nellicci,* பெ. (n.) வரிக் கூத்து வகை (சிலப்.3:13, அரும்.); a masquerade dance.

*[நெல்லி + சி]*

நெல்லிக்காய் உருள்தல் போல் பெண்கள் ஆடும் கூத்தாகலாம்.

**நெல்லிடை** *nelliḍai,* பெ. (n.) நெல்லினளவு; the weight of a paddy grain. *ஒரு நெல்லிடை அளவு மருந்து கொடுத்தால் நோய் நீங்கி விடும்.* (சா.அக.).

*[நெல் + எடை – நெல்லெடை → நெல்லிடை. நெல்லெடை பார்க்க.]*

**நெல்லித்தாளி** *nelli-t-tāḷi,* பெ. (n.) செம்பை; sesban, Coronilla sesban. (சா.அக.).

**நெல்லித்துத்தி** *nelli-t-tutti,* பெ. (n.) ஒருவகைப் பூடு (யாழ்.அக.); a kind of plant.

**நெல்லிப்பசை** *nelli-p-pašai,* பெ.(n.) **நெல்லிக்காய்ப் பற்று** பார்க்க; see *nelli-k-kāy-p-paṟṟu.* (சா.அக.).

*[நெல்லி + பசை]*

**நெல்லிப்பருப்பு**[1] *nelli-p-paruppu,* பெ. (n.) நெல்லிக் கொட்டையின் பருப்பு; the kernel inside the nut of emblic myrobalan. (சா.அக.).

*[நெல்லி + பருப்பு]*

**நெல்லிப்பருப்பு**[2] *nelli-p-paruppu,* பெ. (n.) **நெல்லி முள்ளி** (இ.வ.) பார்க்க; see *nelli-muḷḷi.*

**நெல்லிப்பூ** *nelli-p-pū,* பெ. (n.) நெல்லி மரத்தின் பூ. இது வெப்பத்தைத் தணித்து மலத்தை இளக்கும்; flowers of emblic myrobalan. They are refrigerent and aperient. *நெல்லிப்பூ சாப்பிடு, மலத்தை இளக்கும்.* (சா.அக.).

*[நெல்லி + பூ]*

**நெல்லிமாதிகம்** *nelli-mādigam,* பெ. (n.) நெல்லிப்பட்டை; the bark of Indian gooseberry tree, Emlica officinalis. (சா.அக.)

**நெல்லிமுள்ளி** *nelli-muḷḷi,* பெ. (n.) காய்ந்த நெல்லித் தோல் (பதார்த்த.976); dried flesh of the emblic myrobalan.

*[நெல்லி + முள்ளி. முள்ளி = தோல், வற்றிய தோல்.]*

**நெல்லிமுள்ளிலேகியம்** *nelli-muḷḷi-lēgiyam,* பெ.(n.) நெரு நெல்லி வற்றலைக் கொண்டு செய்யும் இளகியம். இது காமாலை, பித்த நோய், சோகை முதலியவற்றைக் குணமாக்கும்; an electuary prepared with the dried fruits of emblic myrobalan as the chief ingredient as per process laid down in Agastiya Vallathi. It is said to cure dropy anaemia etc. (சா.அக.)

*[நெல்லி + முள்ளி + இளகியம்]*

**நெல்லிமுளி** *nelli-muḷi,* பெ.(n.) **நெல்லி முள்ளி(வின்.)** பார்க்க; see *nelli-muḷḷi.*

*[நெல்லி + முளி. முளி = வற்றிய தோல். முள்ளி → முளி – இடைக்குறை.]*

**நெல்லிலக்கம்** *nel-l-ilakkam,* பெ. (n.) நெல் அளவு வாய்ப்பாடு (M.M.) ; reckoning by grains instead of abstract figures, opp. to. poṉ-ṉ-illakkam.

*[நெல் + இலக்கம். முகத்தலளவு வாய்ப்பாடு. இலக்கம் = எண், எண்குறி, வாய்ப்பாடு.]*

நெல்லிலக்கவுட்பிரிவு

| | |
|---|---|
| 1 செவிடு | 4 மரக்கால் |
| 2 செவிடு | (1 தூணி) |
| 3 செவிடு | 5 மரக்கால் |
| 4 செவிடு | 6 மரக்கால் |
| ஆழாக்கு | 7 மரக்கால் |
| (5 செவிடு) | 8 மரக்கால் |
| உழக்கு | (இருதூணி) |
| மூவாழக்கு | 9 மரக்கால் |
| உரி (1/2 படி) | 10 மரக்கால் |
| மூவுழக்கு | 11 மரக்கால் |
| 7 ஆழாக்கு | 12 மரக்கால் |
| 1 படி | (1 கலம்) |
| 1 மரக்கால் | 13 மரக்கால் |
| (8 படி) | 14 மரக்கால் |
| பதக்கு | 15 மரக்கால் |
| (2 குறுணி) | 16 மரக்கால் |
| முக்குறுணி | 20 மரக்கால் |

(கணக்கதி.பக்.20)

**நெல்லிலாச்சம்** *nel-l-ilāccam,* பெ. (n.) புன்செய் நில அளவுவகை (வின்.); a land measure for dry-fields.

*[நெல் + இல் + இலாச்சம். இலாச்சம் = நில அளவுவகை. நெல் விளையாத புன்செய் நில அளவு வகை. இல் – எதிர்மறை இடைநிலை]*

**நெல்லிவட்டு** *nelli-vaṭṭu,* பெ. (n.) நெல்லிக் காயாகிய விளையாட்டுக் கருவி வகை; game-pieces of nelli fruits. "*கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டாடும்*" (நற்.3).

*[நெல்லி + வட்டு. வட்டு = விளையாட்டுக் கருவி வகை]*

**நெல்லிவற்றல்** *nelli-vaṟṟal,* பெ. (n.) காய வைத்த நெல்லிக்காய். இது ஒரு கடைச் சரக்கு. இதில் துவர்ப்பு நீர் அதிக அளவில் இருப்பதால் அரத்த ஒழுக்குக் குணமாகும். இதைத் தண்ணீரில் ஊறப் போட்டு வைத்து அத்தண்ணீரை இறுத்துக் கண்ணோய்க்குப் பயன்படுத்தலாம்; the dried fruit of emblic myrobalan. It is a bazaar drug containing a large proportion of gallic acid and is therefore very useful in haemorrhage. It is immersed in water for a whole night and the infusion so obtained is used as collyrium in opthalmia. (சா.அக.).

*[நெல்லி + வற்றல்]*

துயில் நீங்கியவுடன் அதிகாலையில் நெல்லி வற்றல், தான்றி, கடுக்காய் ஊறியநீரில் சூடத்தைக் கரைத்துக் கண்ணைக் கழுவுவது தென்னாட்டுப் பழக்கம்.

**நெல்லிவேர்** *nelli-vēr,* பெ.(n.) நெல்லி மரத்தின் வேர்; root of emblica officinelis. (சா.அக.).

*[நெல்லி + வேர்]*

**நெல்லிற்புதை–த்தல்** *nelliṟpudai-,* 4 செ. குன்றாவி. (v.t.) நெல்லுக்குள் சில பொருட்களை அல்லது மருந்துகளைப் புதைத்து வைத்தல்; preserving by burying under the heap of paddy for sometime by generally for forty days. *மருந்தை நெல்லிற் புதைத்து 40 நாள் சென்ற பின் சாப்பிட நோய் குணமாகும்.* (சா.அக.).

*[நெல் + இல் + புதை–த்தல்.]*

**நெல்லினூர்** *nelli-ṉūr,* பெ. (n.) சாலியூர்; a village name. "*சீர்சான்றவுயர் நெல்லி னூர் கொண்டவுயர் கொற்றவ*" (மதுரை.87,88).

*[நெல் + இன் + ஊர்]*

சாலி = நெல். சாலி + ஊர். சாலியூர் நெல் அதிகமாக விளைந்த ஊராகலாம். சாலியூர் என்பது மதுரைக் காஞ்சியில் நெல்லினூர் என்று வந்துள்ளது.

**நெல்லு** *nellu,* பெ. (n.) **நெல்** பார்க்க; see *nel.* "*நெல்லு நீள்வயல்*" (தேவா.466,7). *நெல்லுச் சோறு, நெல்லுமூட்டை.*

*[நெல் + உ – நெல்லு (பே.வ.). உ –சாரியை]*

**நெல்லுக்கட்டு–தல்** *nelliu-k-kaṭṭu-,* 5செ.கு.வி.(v.i.) **நெல்லுப்பிடி–1** பார்க்க; see *nellu-p-piḍi-1.*

*[நெல் → நெல்லு + கட்டு. கட்டுதல் = கட்டி வைத்தல். நெல் → நெல்லு – பேச்சு வழக்கு.]*

**நெல்லுப்பருத்தி** *nellu-p-parutti,* பெ. (n.) பருத்தி வகை (M.E.R.1915, P.107); a kind of cotton.

*[நெல் → நெல்லு + பருத்தி]*

**நெல்லுப்பிடி–த்தல்** *nellu-p-piḍi-,* 4செ.கு.வி. (v.i.) **1.** நெல்லைக் கட்டி வைத்தல் (வின்.); to lay up paddy in store. *மூட்டையில் நெல்லைப் பிடித்து அடுக்கி வைக்க வேண்டும்.* **2.** நெல்லை மிகுதியாக விலைக்கு வாங்குதல்; to buy paddy in large quantities for sale. *நெல்லுப்பிடித்து வாணிகம் செய்து முன்னேறியவன் இவன்.*

*[நெல் → நெல்லு + பிடி. பிடித்தல் = விலைக்கு வாங்குதல், மூட்டையில் பிடித்தல்.]*

**நெல்லுப்புல்** *nellu-p-pul,* பெ. (n.) சாமை (M.M.); little millet.

*[நெல் → நெல்லு + புல். புல் = புன்செய் தவசம், புல்லரிசி. நெற்பயிரைப் போல் தோன்றும் சாமை வகை.]*

**நெல்லுப்புல்லு** *nellu-p-pullu,* பெ. (n.) **1.** உணவு தவச வகைகள்; edible grains. *நிலத்தில் நெல்லுபுல்லு ஏதாச்சம் போட்டீயா?* **2.** ஒருவகைப் புஞ்செய்ப் பயிர், குதிரை வாலி (A); poor-man's millet.

*[நெல்லு + புல்லு. நெல் → நெல்லு (பே.வ.) புல் → புல்லு (பே.வ.). நெல் = நன்செய்ப் பயிர். புல் = புன்செய்ப்பயிர்.]*

**நெல்லுப்பொரி** *nellu-p-pori,* பெ. (n.) **நெற்பொரி** பார்க்க; see *neṟpori.*

**நெல்லுமா** *nellu-mā,* பெ.(n.) நென்மா (நாநார்த்த.2,உரை); rice flour.

*[நெல் + மா. மா = மாவு]*

**நெல்லுமுறி** *nellu-muṟi,* பெ. (n.) முற்றின நெற்பயிர் (வின்.); ripe paddy crop.

*[நெல் → நெல்லு + முறி. முறி = இளமைத் தன்மை மாறி முதிர்ந்த பயிர்.]*

**நெல்லுறை** *nellu-l-uṟai,* பெ. (n.) **1.** அளந்த நெல்லளவைக் குறிக்க இடும் பிடிநெல் (தஞ்சை); handful of paddy put down as a mark in measuring. **2.** நெற்கதிர்; a receptacle for paddy.

*[நெல் + உறை. உறை = ஓரளவு, அளவுக் குறி, பண்டம் பெய்யும் கூடு, குதிர்]*

**நெல்லூர்ப்புதுமாடை** *nellūr-p-pudumāḍai,* பெ. (n.) காசுவகை (M.E.R.116 of 1929–39); a coin.

*[நெல்லூர் + புதுமாடை. புதுமாடை = புதிய காசு. நெல்லூர்ப் பகுதியில் புதிதாக வழங்கிய காசாகலாம். மாடு = செல்வம். "மாடல்ல மற்றை யவை" (குறள்,400).]*

**நெல்லூர்மாடை** *nellūr-māḍai,* பெ. (n.) காசுவகை (M.E.R.356 of 1919B); a coin.

*[நெல்லூர் + மாடை. மாடை = காசு வகை. நெல்லூர்ப் பகுதியில் வழங்கிய காசுவகை.]*

**நெல்லெடை** *nel-l-eḍai,* பெ.(n.) பொன் நிறுக்க வுதவுஞ் சிறிய எடை வகை ; weight of a grain of paddy, used as a unit in weighing gold. ஒரு நெல்லெடை = ஒரு வீசம் (கணக்கதி.பக்.23).

*[நெல் + எடை.]*

நெல், நிறுத்தல் அளவு, நீட்டலளவு, முகத்தலளவு ஆகியவற்றிற்கு மூலப் பொருளாக அமைந்துள்ளது. 360 நெல் = 1 செவிடு; 5 செவிடு = ஒரு ஆழாக்கு. இது முகத்தலளவை. 8 எள்ளு = 1 நெல்லு, 8 நெல்லு = 1 விரற்கிடை – இது நீட்டளவை. (கணக்கதி.பக். 21,22).

**நெல்லை** *nellai,* பெ. (n.) 1. திருநெல்வேலி எனும் நகரம்; Tinnaveli town. "*பரங்கிரி மதுரை நெல்லைத் திருநகர்*" (குற்றா.தல. திருமால்.32). 2. திருநெல்வேலி மாவட்டம்; Tinnavēli district. *நெல்லை மாவட்ட வழக்குச் சொற்கள்.*

*[நெல்வேலி → நெல்லை. இதுமரூஉ. ஒ.நோ. தஞ்சாவூர் → தஞ்சை]*

**நெல்லைநாதர்** *nellai-nādar,* பெ.(n.) 18 ஆம் நூற்றாண்டில் சிவராத்திரிப்புராணம் பாடிய புலவர்; author of Sivarāttiri-p-purāṇam in 18th century.

**நெல்லையப்ப கவிராச பண்டாரம்** *nellai-y-āppa-kavirāša-paṇḍāram,* பெ.(n.) திருமலை யமகவந்தாதி பாடிய புலவர், 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; author of Tirumalai Yamagavandati in 19th century.

தகப்பனார் முத்துக் குமாரசாமிக் கவிராசர், சொந்தவூர் திருநெல்வேலி. வாழ்ந்த காலம் 1832–1905. கவிராச நெல்லையப்ப பிள்ளை என்பது இவரின் மற்றொரு பெயராகும். இவர் மு.ரா. கந்தசாமிக் கவிராயர், மு.ரா.அருணாசலாக் கவிராயர், கல்போத்துப் பிச்சுவையர், மேலகரம் சுப்பிரமணியக் கவிராயர் முதலியவர்களிடம் கல்வி பயின்றவர். சந்திவிநாயகர் பதிகம், சந்திவிநாயகர் இரட்டை மணிமாலை, சுப்பிரமணியர் தோத்திரம், சுப்பிரமணியர் பதிகம், பழனியாண்டவர் தோத்திரம், சோமசுந்தரரேசர் பதிகம், சுதர்ம சாரசங்கிரகம், கால்நடை மருத்துவ நூல், சந்தத் தமிழ்ப் பத்து ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

**நெல்லையப்ப கவிராயர்** *nellai-y-appa-kavirāyar,* பெ. (n.) திருநெல்வேலித் தலபுராணம் பாடிய புலவர்; 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; author of Thirunelvēli-t-talapurāṇam in 19th century.

மறுவ. நெல்லையப்ப பிள்ளை

**நெல்லையப்ப பிள்ளை¹** *nellai-y-appa-piḷḷai,* பெ.(n.) திருநெல்வேலியைச் சேர்ந்த புலவர்; a poet in Tinnavēli.

சங்கரமூர்த்திப் பிள்ளையின் மகனாவார். இவர் பள்ளிக் கல்வியைப் பயின்று முடிந்த பின் தக்கார்பால் தமிழ்க் கல்வியினைக் கற்றார். இவர் திருநெல்வேலிப் புராணம் என்ற நூலினைப் பாடியுள்ளார். இந்நூலை இறைவன் அடியவர் வேடத்தில் வந்து இவரிடம் கேட்டுக் கொண்டதற்கிணங்கப் பாடப் பெற்றதாக ஒரு கதை வழங்குகிறது. இந்நூலினை, ஆசிரியர் நீலகண்ட சாத்திரி என்ற புலவரிடம் வடமொழி மான்மியத்தைப் பெற்றுத் தக்கார் பால் அதன் பொருளறிந்து தமிழில் இயற்றியுள்ளார். இப்புராணத்தில் 120 சருக்கங்களும் 6892 செய்யுட்களும் உள்ளன. நைமிசாரணியச் சிறப்பு, நகரச் சிறப்பு, அகத்தியர் வரவு, தக்கன் வேள்வி, திருநீற்றுப் பெருமை, ஐந்தெழுத்துப் பெருமை, சிவபூசை பெருமை, தொண்டர்கள் பெருமை, மகளிர் இலக்கணம், ஆசாரம், இல்லறம், துறவறம் முதலிய சிறப்புக்களும் பல வரலாற்றுச் செய்திகளும் உள்ளன.

**நெல்லையப்ப பிள்ளை²** *nellai-y-appa-piḷḷai,* பெ.(n.) *நெல்லையப்பகவிராயர்* பார்க்க; see *nellai-yappa-kavirāyar.*

இவர் திருநெல்வேலித் தலபுராணம், திருமலை சுப்பிரமணியர் தோத்திரம், தென் பழநியாண்டவர் தோத்திரம் போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

**நெல்லையப்ப பிள்ளை³** *nellai-y-appa-piḷḷai,* பெ.(n.) திருநெல்வேலியைச் சேர்ந்த புலவர்; a poet in Tiṉṉavēli.

திருநெல்வேலிக்கு அருகேயுள்ள மாறாந்தை என்ற ஊரைச் சேர்ந்தவர். இவர் இளங்கலை வரை கல்வி கற்று வட்டாட்சியராகப் பணியாற்றியவர். தமிழ் நூல்களையும், சிவசமய நூல்களையும் கற்றுப் புலமை பெற்றவர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திலும், தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்திலும் தலைவராகப் பணியாற்றியவர். 'செந்தமிழ்' இதழாசிரியர் குழுவிலும் பணியாற்றிப் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். சிவகெண் முடிவைப் (சைவ சித்தாந்தைப்) பரப்பும் பணியில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தவர். திருக்குறளில் அமைந்துள்ள சிவசமய உண்மைகள் குறித்து ஆய்ந்து சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். அருள் முறைத் திரட்டு உரை, திருவாசகத் திரட்டு உரை போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

**நெல்லையப்பர்** *nellai-y-appar,* பெ. (n.) பாண்டிய நாட்டைச் சேர்ந்த புலவர்; a poet in Pāṇḍianāḍu.

இவர் பாண்டிய நாட்டில் வீரவநல்லூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். மேலைக் கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத் தமிழ், சுதந்திரப் பரணி, மகாத்மா காந்தியடிகள் வரலாறு, பழனியாண்டவர் பாராயணத்திரட்டு, எடப்பாடி ஆறுமுகசாமி கலம்பகம் போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

**நெல்லொட்டு** *nel-l-oṭṭu,* பெ. (n.) நெற்பயிரின் அறுத்த தாள் (வின்.); rice stubble.

*[நெல் + ஒட்டு. ஒட்டு = கதிர் அறுத்த தாள்.]*

**நெல்வட்டி** *nel-vaṭṭi,* பெ. (n.) நெல்லாகக் கொடுக்கும் வட்டி; interest paid in paddy.

*[நெல் + வட்டி. வட்டி = பணத்தைப் பிறர் பயன்படுத்தியதற்காக உடையான் பெறும் ஊதியம்]*

தொகை வட்டியைவிடச் சிற்றூர்களில் தரும் நெல்வட்டி முறை பல மடங்கு பயன் உள்ளது.

**நெல்வரகு** *nel-varagu,* பெ. (n.) பூடுவகை (A.); silt grass, Paspalum distichum.

*[நெல் + வரகு. வரகு = புன்செய்ப் பயிர். நெற்பயிர் போல் தோற்றமளிக்கும் வரகுப் பயிர்.]*

**நெல்வரி** *nel-vari,* பெ. (n.) நெல் விற்பனை செய்பவரிடம் பெறும் வரி வகை; paddy tax.

*[நெல் + வரி. நெல் விற்பவரிடம் நெல்லாகவே பெறும் வரி. (கல்.அக.)]*

**நெல்வால்** *nel-vāl,* பெ. (n.) நென்மணியுடன் சேர்ந்த சிறு தாள்; beard or awn of paddy grain. "*ஒருநெல்வா லூன்ற வருந்து முடம்பிதனை மகிழாது*" (தேவா.934,6).

*[நெல் + வால். நென்மணியுடன் ஒட்டி யிருக்கும் வால் போன்ற பகுதி]*

**நெல்வாற்பூச்சி** *nel-vāṟ-pūcci,* பெ. (n.) வயிற்றில் இருக்கும் குடற்பூச்சி வகை (M.L.); threadworm, pinworm.

**மறுவ.** நூற்புழு, ஊசிப்புழு.

*[நெல்வால் + பூச்சி. நெல்வால் போல் தோற்ற மளிக்கும் குடற்பூச்சி வகை]*

**நெல்வெண்ணெய்** *nelveṇṇai,* பெ. (n.) கடலூர் வட்டத்தில் அமைந்துள்ள ஊர்; a village in Cuddalore district. இவ்வூர் இன்று நெய்வெண்ணை என அழைக்கப்படுகிறது. சம்பந்தர் பாடல் பெற்றவூர். "நிச்சலும் மடியவர் தொழுதெழு நெல்வெணெய்"; "நிரைவிரி தொல்புகழ் நெல்வெணெய் மேவிய கரைவிரி கோவணத்தீரே"; "நீர்மல்கு தொல்புகழ் நெல்வெணெய்"; "நீடிளம்

பொழிலணி நெல்வெண்ணெய்''; நெல், வெண்ணெய் என்பதைக் கொண்டு இவ்வூரின் பெயர் அமைந்திருக்கலாம்.

**நெல்வேலி** *nel-vēli,* பெ. (n.) திருநெல்வேலி நகரம்; Tinnevēlly town.

தேவாரப் பாடல் பெற்ற 108 ஊர்களும் 'திரு' அடி பெற்றன. அவற்றுள் இஃது ஒன்று.

**நெலி—தல்** *neli-,* 2செ.கு.வி.(v.i.) கடைதல்; to churn.

**மறுவ.** ஞெலிதல்.

*[நுல்(துளை) → நொல் → நெல் → நெலி → நெலி—தல் (வே.க.)]*

**நெழில்** *neḻil,* பெ.(n.) கொடிக்கொற்றான்; green thread creeper, Cassytha filiformis. (சா.அக.)

**நெள்ளல்** *neḷḷal,* பெ.(n.) 1. பள்ளம்; pit. 2. குழிவு; hollowness.

*[நுல்(துளை) → நுள் → நொள் → நெள் நெள்ளல்(வே.க.)]*

**நெளி¹—தல்** *neḷi-,* 2செ.கு.வி.(v.i.) 1. புழு, பாம்பு முதலியவை வளைந்து நகர்தல்; to crawl. *நெளிந்து நெளிந்து பாம்பு சென்றது. கத்திரிக்காயில் புழு நெளிந்தது.* 2. சுருளுதல்; to bend, roll in. "*நெளிதிரைக் கடலுலகெலாம்*" (சீகாளத்.பு. நக்கீ.43). *அவனுக்கு நெளி மயிர்* 3. குழிதல்; to be hollow. "*நிலனெளி மருங்கி னீர்நிலை பெருகத் தட்டோர்*" (புறநா.18). 4. வெட்கத்தால் நேராக நிற்காமல் உடல் வளைதல்; to wriggle, writhe. "*சேட னெளிதரப் பெயர்வார்*" (கந்தபு. கயமுகனுற்.46). *உடலை நெளித்து நெளித்து நடக்கின்றான். விடை சொல்லத் தெரியாமல் நெளிகிறான். அவன் பொறுமை யிழந்து நெளிகிறான்.* 5. வருந்துதல்; to suffer. "*பொய்யாச் செந்நா நெளிய வேத்திப் பாடுப*" (புறநா.168). 6. குலைதல்; to be put into confusion, to be routed. "*அனைய படைநெளிய*" (கம்பரா. மூலபல.159). 7. அதுங்குதல்; to be dented, bent out of shape, as vessels. 8. மிகுதியாதல்; to swarm, abound, as children. *அவனுக்குக் குழந்தைகள் மிகுதியாக நெளிந்து கொண்டிருக்கின்றன.* 9. ஏனம் முதலியவை அடிபட்டுப் பள்ளமாதல்; get dented, buckle. *குடம் கிழே விழுந்து நெளிந்து விட்டது.* 10. புரளுதல்; to roll over; to tumble over. "*நெளிய ராக்குருளை*" (திருவிளை.இந்திரன் பழிதீ,73).

*[நுள்(வளைவு) → நெள் → நெளி = வளைவு (முதா.) நெளி → நெளிதல்.]*

**நெளி²—த்தல்** *neḷi-,* 4செ.குன்றாவி.(v.t.) 1. வளைத்தல்; to cause to bend, to be inclined, to be crumpled; to twist. *உடம்பை எத்தனை நெளி நெளிக்கிறான்.* 2. கோணுதல்; to wriggle or distort the body in walking, commonly in affectation. *சாலை நெளிந்து செல்லுகிறது. உடலை நெளித்து நெளித்து ஆடிய பாம்பு நடனம் அருமை.* 3. அசைத்தல்; to shake "*தண்டொன்று... நெளிப்பது*" (கம்பரா.பிரமாத்.113). 4. வேலையைக் குழப்புதல்; to shirk work. 5. ஏனம் முதலியவற்றில் நெளிவு ஏற்படுத்துதல்; cause a dent. *குடத்தின் வாய்ப் பகுதியைத் தட்டி நெளித்து விட்டாள்.*

*[நெளி¹ → நெளி²]*

**நெளி³—த்தல்** *neḷi-,* 4செ.குன்றாவி.(v.t.) செருக்குறுதல் (வின்.); to make affected gestures in pride or contempt, to be insolent.

**நெளி⁴** *neḷi,* பெ. (n.) வளைந்த விரலணி வகை; a kind of ring, as having a peculiar

curve. *"அலங்கார நெளியிட்ட கையைக்காட்டாய்"* (குற்றா.குற.66:2). *நெளி கணையாழி (மோதிரம்) அணிந்தவள்.*

*[நுள் → நெள் → நெளி = வளைவு, வளைந்த அணி (மு.தா.)]*

**நெளிச்சல்** *neḷiccal,* பெ. (n.) **நெளியல்** (வின்.) பார்க்க; *see neḷiyal.*

*[நெளி → நெளிச்சல்]*

**நெளிச்சலன்** *neḷiccalaṉ,* பெ.(n.) **நெளியலன்** (யாழ்.அக) பார்க்க; *see neḷiyalaṉ.*

*[நெளிச்சல் = வளைவு. நெளிச்சல் + அன் – நெளிச்சலன் = கூனன்.]*

**நெளிசம்** *neḷišam,* பெ.(n.) தங்கரளி; exile oleander, *Tecoma staus.* (சா.அக.).

**நெளிசல்** *neḷišal,* பெ. (n.) **நெளிச்சல்** (இ.வ.) பார்க்க; *see neḷiccal.*

*[நெளிசு + அல்]*

**நெளித்தகுண்டி** *neḷitta-kuṇḍi,* பெ.(n.) குந்து புறம் (பிட்டம்) பின்பக்கம் மிகுதியாக வளைந்து காணப்படுவது; projecting buttocks. (சா.அக.)

*[நெளித்த + குண்டி. குண்டி = குந்துபுறம் (பிட்டம்).]*

**நெளிதம்** *neḷidam,* பெ.(n.) **1.** சிறுமை, புன்மை; insignificance. **2.** இலேசு; lightness, ease.

*[நெளி¹ → நெளிதம்]*

**நெளிப்பு** *neḷippu,* பெ. (n.) **1.** செருக்கு (கருவம்) முதலியவற்றால் செய்யும் உடலசைவு (அங்கசேட்டை) (உ.வ.); affected gestures of the body, as of a vain person. **2.** இறுமாப்பு (யாழ்.அக.); pride. *அவனுக்கு என்னதான் இருந்தாலும், இந்த நெளிப்பு ஆகாது.* **3.** ஏளனம் (பரிகாசம்) (யாழ்.அக.); ridicule. **4.** துன்பம் (அருட்பா,4, பிள்ளைப்பெரு,25); trouble, affliction.

*[நெளி³ + பு]*

**நெளிப்புக்காட்டு–தல்** *neḷippu-k-kāṭṭu-,* 5செ.கு.வி.(v.i.) செருக்கு முதலியவற்றால் உடலை ஆட்டிக் கொள்ளுதல்; to make affected gestures. *எத்தனைச் செல்வ மிருந்தாலும் இத்தனை நெளிப்புக் காட்டக் கூடாது.*

*[நெளிப்பு = செருக்கு, இறுமாப்பு. நெளிப்பு + காட்டு–தல்]*

**நெளிப்புக்காரன்** *neḷippu-k-kāraṉ,* பெ. (n.) பகட்டு ஆரவாரக்காரன் (வின்.); vain person, fop.

*[நெளிப்பு + காரன் – நெளிப்புக்காரன். நெளிப்பு = செருக்கு, இறுமாப்பு]*

**நெளிப்புப்பேசு–தல்** *neḷippu-p-pēšu-.* 5செ.கு.வி.(v.i.) ஏளனமாகப் பேசுதல் (வின்.); to speak contemptuously. *யாரையும் பார்த்து நெளிப்புப் பேசாதே, உனக்கும் அந்நிலை ஏற்படும்.*

*[நெளிப்பு = ஏளனம். நெளிப்பு + பேசு–தல்.]*

**நெளிமோதிரம்** *neḷi-mōdiram,* பெ.(n.) *நெளி⁴* பார்க்க (வின்.); *see neḷi⁴*

*[நெளி⁴ + மோதிரம். மோதிரம் = கணையாழி]*

**நெளியல்** *neḷiyal,* பெ. (n.) **1.** வளைவு; crookedness, deformity. **2.** வளைந்தது; anything bent or warped.

*[நெளி[1] + அல் – நெளியல். அல்லீற்றுத் தொழிற் பெயர்]*

**நெளியலன்** *neḷiyalaṉ,* பெ. (n.) கூனன் (யாழ்ப்.); humpback.

*[நெளியல் = வளைவு, வளைந்தது. நெளி + அல் + அன் – நெளியலன்.]*

அல்–இடைநிலையாக எதிர்மறைப் பொருளிலும் சாரியையாக உடன்பாட்டுப் பொருளிலும் வரும். ஈண்டு உடன்பாட்டுப் பொருளில் வந்துள்ளது. “பயனில் சொல் பாராட்டுவானை மகனெனல் மக்கட் பதடி எனல்” (திருக்குறள்) அல்முதலது எதிர்மறை; பின்னது உடன்பாடு.

**நெளியலி** *neḷiyali,* பெ. (n.) கூனி (வின்.); humpback.

*[நெளியலன் (ஆ.பா.) → நெளியலி (பெ.பா.)]*

**நெளியலெடு–த்தல்** *neḷiyal-eḍu-,* 4செ.குன்றாவி.(v.t.) கோணல் நீக்குதல்; to repair a bend.

*[நெளியல் + எடு–த்தல். நெளியல் = கோணல். எடுத்தல் = நீக்குதல்.]*

**நெளியன்** *neḷiyaṉ,* பெ. (n.) **1.** இரண்டடி நீளம் வளர்வதும் சாம்பல் நிறமுள்ளதுமான கடல் மீன்வகை; shark, grey, attaining 2ft.in length. **2.** பயிரை அழிக்கும் புழுவகை (இ.வ.); a worm blighting crops.

*[நெளிதல் = வளைந்து நகருதல். நெளி[1] → நெளியன்]*

**நெளிர்[1]–தல்** *neḷir-,* 2செ.கு.வி.(v.i.) ஓசையிடுதல் (பிங்.); to make noise.

**நெளிர்[2]** *neḷir,* பெ. (n.) எடுத்தலோசை (பிங்.); voice at a high pitch, high tone.

பூஉ–எனவிற்போன் கூவுவது

**நெளிவண்ணச்சேலை** *neḷi-vaṇṇa-c-cēlai,* பெ.(n.) புடவை வகை (பஞ்ச.திருமுக.1160); a kind of saree.

*[நெளி + வண்ணம் + சேலை. இடையிடையே கோடுவந்த வண்ணச் சேலை வகை.]*

**நெளிவு[1]** *neḷivu,* பெ. (n.) **1.** வளைகை; crawling, writhing. *வாழ்க்கை அமைதியாக இருக்க வேண்டுமானால் கொஞ்சமாவது நெளிவு சுளிவு தேவை.* **2.** துன்பம்; suffering. “நெளிவுண்டாக் கருதாதே” (தேவா.29,3). *வாணிகத்தால் அவனுக்கு நெளிவில்லை.* **3.** இணங்குகை; bending, yielding. **4.** கமுக்கம் (மர்மம்); ins and outs, real nature. *அவன் வாழ்வில் ஏதோ நெளிவு ஒன்று இருக்கிறது.* **5.** வளைந்த விரலணி வகை (நெல்லை); a kind of ring, as having a peculiar curve. *என்தங்கை மகளுக்கு நெளி (கணயாழி) மோதிரம் ஒன்று வாங்கிக் கொடுத்தேன்.* **6.** உள் மடங்கிப்பின் நேராகும் இடத்தில் உள்ள வளைவு; bend, curve. *சாலை வளைவோ நெளிவோ இல்லாமல் நேராக இருந்தது.* **7.** கூந்தலின் சுருளான நிலை; curl. அவனுக்கு *கூந்தல் சுருள் சுருளாக இருந்தது. அவனுக்கு கருகருவென்ற நெளிவே இல்லாத முடி.* **8.** ஏனம் முதலியவற்றில் அடிபட்டதால் ஏற்படும் வடிவக்குறைவு; dent is a vessel. *ஏனத்தின் நெளிவைத் தட்டிச் சரியாக்கு.*

*[நெளிதல் = வளைதல், வருந்துதல் நெளி[1] → நெளிவு]*

**நெளிவு**[2] *neḷivu,* பெ. (n.) செருக்கு, இறுமாப்பு; pride. *இப்போதெல்லாம் அவன் நெளிவோடு நடந்து கொள்கின்றான்.*

*[நெளித்தல் = செருக்குறுதல் நெளி[3] → நெளிவு]*

**நெளிவுசுளிவு** *neḷivu-šuḷivu,* பெ. (n.) 1. கமுக்கம் (மர்மம்) (உ.வ.); ins and outs, real nature. *நெளிவு சுளிவோடு பேசவேண்டும்.* 2. ஏற்றத்தாழ்வு (இ.வ.); excess and deficiency. 3. வாங்குதல், விற்றல் போன்றவற்றில் விட்டுக் கொடுத்துப் போக வேண்டிய நிலை; ins and outs of a business, learning or knowing the ropes. *ஒரே ஆண்டில் வரவு செலவில் நெளிவு சுளிவுகளைத் தெரிந்து கொண்டான்.*

*[நெளிவு = வளைவு, வளைகை. நெளிவு + சுளிவு. சுளிவு = சினம். நிலைமைக் கேற்ப வளைந்து கொடுத்தும், சினப்பட்டும் செயலை முடித்துக் கொள்வது.]*

**நெளிவெடு**[1]**-த்தல்** *neḷiveḍu-,* 5செ.குன்றாவி. (v.t.) வளைவு நீக்குதல் (உ.வ.); to mend anything bent or warped, to correct an irregularity. *இந்த ஏனத்தை நெளிவெடுத்துக் கொடு.*

*[நெளிவு + எடு-த்தல்]*

**நெளிவெடு**[2]**-த்தல்** *neḷiveḍu-,* 4செ.கு.வி. (v.i.) நெளி கணையாழி (மோதிரம்) முதலியவற்றில் வளைவை உண்டாக்குதல் (வின்.); to make the flexure as to a neḷi ring.

*[நெளிவு + எடு-த்தல். எடுத்தல் = உண்டாக்குதல்]*

**நெளுநெளு-த்தல்** *neḷu-neḷu-,* 4செ.கு.வி. (v.i.) 1. நெகிழ்தல்; to become soft. 2. குழைதல்; to mash.

*[நுள் → நொள் → நெள் → நெளு → நெளுநெளு → நெளுநெளு-த்தல் (முதா.)]*

**நெற்கடமை** *neṟ-kaḍamai,* பெ. (n.) *நெல்வரி* பார்க்க; *see nel-vari.*

*[நெல் + கடமை - நெற்கடமை = நெல் விற்பவரிடம் வாங்கும் வரி. இது நெல்லாகவே பெறப்படும். கடம் = கடமை, முறைமை. கடு → கடன் → கடம். கடு = விரைவு, விரைந்து செய்தல். கடன் = விரைந்து செய்யத்தக்க பணி. கடமை = விரைந்து கட்டாயம் செய்ய வேண்டியபணி.]*

**நெற்கடை**[1] *neṟkaḍai,* பெ. (n.) ஒரு நெல்லளவு கொண்ட இடம்; space occupied by a paddy. *இந்தச் சொத்திலிருந்து நெற்கடை அளவு இடம் கூட உனக்குக் கிடைக்காது.* (சா.அக.)

*[நெல் + கடை. கடை = இடம்.]*

**நெற்கடை**[2] *neṟkaḍai,* பெ. (n.) பத்தொன்பதாம் விண்மீனாகிய குருகு (மூலம்) (அக.நி.); the 19th naksatra.

**நெற்கணக்கு** *neṟ-kaṇakku,* பெ. (n.) நெல்லளவை வாய்பாடு (யாழ்.அக.); table of dry measure for paddy. *இப்போதைய வாய்பாட்டுநூலில் நெற்கணக்கு வாய்பாடு இல்லை.*

*[நெல் + கணக்கு. குள் → கள் → கண் → கண → கணகு → கணக்கு = அளவு, எண், தொகை, கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் முதலிய*

*அளவீடு. அதற்கொரு கணக்கில்லை, கணக்கு வழக்கற்றுக் கிடக்கிறது என்னுந்தொடர்களில், கணக்கு என்னுஞ் சொல் அளவைக் குறித்தல்காண்க. நெல் தமிழ்நாட்டில் முகத்தலளவைக்கும், நிறுத்தல் அளவைக்கும் அடிப்படைப் பொருளாக இருந்திருக்கின்றது.]*

முகத்தலளவை

360 நெல் = 1 செவிடு (செவி+இடு)
5 செவிடு = 1 ஆழாக்கு (அரை உழக்கு → ஆழாக்கு)
2 ஆழாக்கு = 1 உழக்கு
2 உழக்கு = 1 உரி
3 உழக்கு = மூவுழக்கு
2 உரி = 1 நாழி
8 நாழி (படி) = 1 குறுணி (மரக்கால்)
2 குறுணி = 1 பதக்கு
3 குறுணி = 1 முக்குறுணி
2 பதக்கு (4 குறுணி) = 1 தூணி
2 தூணி = 8 குறுணி (குறு + உணி)
3 தூணி = 1 கலம்
5 மரக்கால் = 1 பறை
80 பறை அல்லது 400 மரக்கால் = 1 கரிசை

நிறுத்தலளவை

1 நெல்லெடை = 1 வீசம் (வீசு+அம்)
2 வீசம் = 1 பிளவு
2 பிளவு = 1 குன்றிமணி
2 குன்றிமணி = 1 மஞ்சாடி (மஞ்சு+ஆடி)
2 மஞ்சாடி =1 பணவெடை

5 மஞ்சாடி = 1 கழஞ்சு
2 கழஞ்சு = 1 கஃசு (1/4 பலம்)

4கஃசு = 1 பலம்
100 பலம் = 1 தூக்கு
2 தூக்கு = 1 துலாம்
32 துலாம் = 1 பாரம்
2 துலாம் = 1 பிசு
32 குன்றிமணி = 1 வாரகனெடை
9 வராகனெடை = 1 ஒஞ்சை
9 ஒஞ்சை = 1 சேர்
16 மஞ்சாடி = 1 வாரகனெடை
9 பணவெடை = 1 பூவராகன்
10 பணவெடை = 1 கழஞ்சு
10 பணவெடை = 1/8 ரவை மஞ்சாடி = 1 கழஞ்சு பழகம்
10 1/2 மாத்துடையது = தங்கம்
3 1/2 மாத்துடையது = வராகன்
1/16 வராகனெடை= 1ரதி(பச்சை.)

*பழந்தமிழ்நாட்டில் இதே முகத்தல், நிறுத்தல் அளவைகளைக் கொண்டு அனைத்து வகைக் கூலங்களும் அளக்கப்பட்டன.*

*நெற்கணக்குப் போலவே குதிரைக் கணக்கு, ஓணான் கணக்கு, யானைக் கணக்கு, அடிகணக்கு, வெற்றிலைக் கணக்கு, நெல்விற்பனைக்கணக்கு பால்கணக்கு, முத்துக்கணக்கு, களவுகணக்கு, எண்ணெய்க் கணக்கு, மிளகுகணக்கு, பலகாரந் தின்ற கணக்கு மாம்பழக்கணக்கு, விளம்பழக் கணக்கு, கற்பூரக் கணக்குப் போன்றவை களும் இருந்தன. (கணக்கதிகாரம்).*

**நெற்கழி** *neṟ-kaḻi,* பெ. (n.) நெல் சாகுபடி யாதற்கேற்ற ஒருவகைநிலம் (யாழ்.அக.); a kind of soil fit for paddy cultivation. *அவன் பாகமாக நெற்கழி நாலுகாணி வந்தது.*

*[நெல் + கழி. கழி = நிலம். கழிமுகம் = உப்பங்கழியை ஒட்டிய நிலப்பரப்பு, நன்செய்நிலப்பகுதி, நீர்நிற்கும் நிலப்பரப்பு.]*

**நெற்களஞ்சியம்** *neṟ-kaḷañjiyam,* பெ. (n.) 1. நெல்லிட்டு வைக்கும் புரை (உ. வ.); granary for paddy. *பழங்கால வீடுகளில் நெற்களஞ்சியம் இருக்கும்.* 2. நெல் அதிகம் விளையும் இடம்; place where paddy is cultivated in abundance. *தஞ்சை மாவட்டம் தமிழகத்தின் நெற்களஞ்சியம்.*

*[நெல் + களஞ்சியம். களஞ்சியம் = தவசம் சேமித்து வைக்கும் இடம், கலம், கருவூலம், சரக்கறை, பண்டசாலை. குறைந்தளவு நெல்லைச் சேமிக்குமிடத்தை குழுமை என்றும் அழைப்பர். கலைபற்றிய செய்திகள் சேமித்து வைக்கும் இடம், பொத்தகக் கலைக்களஞ்சியம் எனப்படும். சொற்கள் பற்றிய விரிவான*

*விளக்கங்கள் அனைத்து மொழிகளிலும் தொகுக்கப்பட்டுக் கலைக்களஞ்சியம் வெளியிடப்பட்டு வருகிறது.]*

**நெற்கனம்** *neṟkaṉam,* பெ. (n.) நெற்பருமன்; as thick as paddy. (சா.அக.) *நென்மணி பருத்து இருந்தால் திடமான நல்ல நெல் என்று அழைப்பர்.*

*[நெல் + கனம்.]*

**நெற்காணி** *neṟ-kāṇi,* பெ. (n.) நெல் விளையும் நிலம் (யாழ்.அக.); land in which paddy is cultivated. *புன்செய்க்காணி நாலும் நெற்காணி ஒன்றும் அவன் பங்குக்கு வந்தன.*

*[நெல் + காணி. காணி = நிலம். "ஊரிலேன் காணியில்லை" (திவ். திருமாலை. 29). காணி என்பது நில அளவைப் பெயராகவும், கீழ்வாய் இலக்க எண்ணாகவும் இருக்கின்றது. காணி = 400 குழி. காணி = 1/80]*

**நெற்காரிகம்** *neṟkārigam,* பெ. (n.) கருங்குறுவை; red rice having husk. (சா.அக.).

*[நெல் + காரிகம். தோல் மெல்லிய கருமை படர்ந்து காவிநிறமுடைய அரிசியைக் கொண்டிருக்கும் நெல்வகை. இது மூன்று மாதப்பயிர்.]*

**நெற்கிடை** *neṟ-kiḍai,* பெ. (n.) ஒரு நெல்லளவு கொண்ட இடம் (இ.வ.); space, as much as to hold a grain of paddy. *அவனுக்கு ஒரு நெற்கிடை இடம் கூடக் கொடுக்க முடியாது.*

*[நெற்கு + இடை. ஒரு நெல்லின் இடைப்பட்ட பாகம்; நெல் + கு – நெற்கு ]*

**நெற்குண்டி** *neṟkuṇḍi,* பெ. (n.) 1. வெண்ணொச்சி; white notchi- Vitex negundo. 2. தாமரைக் கிழங்கு; lotus root. 3. கருநொச்சி; black variety of five leaved chaste tree-Vitex negundo. (சா.அக.).

மறுவ. நிர்க்குண்டி.

**நெற்குணம்** *neṟ-kuṇam,* பெ. (n.) நெற்குன்றம் பார்க்க; see *neṟkuṉṟam.*

*[குன்றம் என்பது குன்னம் எனவும் குணம் எனவும் தமிழ்நாட்டில் மருவி வழங்கும். ஒன்று என்னும் சொல் ஒன்னு என்றும் ஒண்ணு என்றும் பேச்சுத்தமிழில் வழங்குதல் காண்க. குன்றம், குன்னம் என்றாகி குணம் எனக் குறுகி, நெற்குணம் என வழங்குகிறது. ]*

**நெற்குத்தகை** *neṟ-kuttagai,* பெ. (n.) நெற்பாட்டத்துக்கு அடைக்குங் குத்தகை; lease of land in which paddy is payable as rent. *நிலத்தை நெற்குத்தகைக்கு விட்டு விட்டான்.*

*[நெல் + குத்தகை. குல் + தகை – குத்தகை = குறுகிய கால ஒப்பந்தம். உரிமையாளரோ நிருவாகமோ ஒருவருக்கு நுதர்தல் உரிமையை அளித்துத் தன் பங்கைத் தவசமாகவோ பணமாகவோ பெற்றுக்கொள்ளும் சட்டவழியான ஒப்பந்தம். நெற்குத்தகை = நெல்லைக் குத்தகைப் பொருளாகப் பெறுதல். ]*

**நெற்குழி** *neṟ-kuḻi,* பெ. (n.) நெல்லிட்டு வைக்கும் நிலவறை (வின்.); under-ground pit for paddy. *வீட்டில் நெற்குழி ஒன்று அமைக்க வேண்டும்.*

*[நெல் + குழி. குழி = பள்ளம், கிடங்கு. நெற்குழி = நெல்லைச்சேமித்து வைக்க நிலத்தில் அமைக்கப்பட்ட நிலவறை. ]*

**நெற்குழியிலிடு—தல்** *ner-kuliyil-idu-*, 18 செ. குன்றாவி. (v.t.) **நெல்லிற்புதை—த்தல்** பார்க்க; see *nellirpudai-*. (சா.அக.).

*[நெல் + குழியில் + இடு—தல்]*

**நெற்குறி** *ner-kuri*, பெ. (n.) நெல்லைக் கொண்டு கட்டுவிச்சி கூறும் கணியம் (திருக்கோ. 285, துறைவிளக்கம்); fortune-telling by kurava women by means of paddy. *நெற்குறி கேட்டு வந்தான்.*

*[நெல் + குறி. குறி = குறிப்பு, முன்னறிந்து கூறும் குறிப்பு.]*

**நெற்குறுசாலை** *ner-kuru-šālai*, பெ. (n.) நெல்லைக்குத்துமிடம் (தெ.க.தொ. 4, 188); place where paddy is husked.

*[நெல் + குறு + சாலை. குற்று → (குத்து) → குறு. சாலை = இடம்.]*

**நெற்குறுவை** *nerkuruvai*, பெ. (n.) **நெற்காரிகம்** பார்க்க; see *nerkārigam*. (சா.அக.).

*[நெல் + குறுவை. குறுவை = குறுகிய காலப்பயிர்.]*

*மூன்றுமாத நெற்பயிரைக்குறுவை என்றும் ஆறுமாத நெற்பயிரைச் சம்பா என்றும் கூறுவது தஞ்சைமாவட்ட வழக்கு.*

**நெற்குன்றம்** *ner-kunram*, பெ. (n.) **1.** வந்தவாசி வட்டத்தில் உள்ள ஊர்; a village in Vandavāši taluk. **2.** திருக்கோவிலூர் வட்டத்தில் உள்ள ஊர்; a village in Tirukkōvilūr taluk. **3.** சென்னைக்கருகில் கோயம்பேட்டை அடுத்துள்ள ஊர்; a village near in Chennai.

*[குன்றின் பெயர் கொண்ட ஊர்கள் தமிழ்நாட்டில் சில உண்டு. திருப்பரங் குன்றம், திருக்கழுக்குன்றம், நெற்குன்றம், செங்குன்றம். நெல் + குன்றம். நெல் அதிகம் விளையும் இடமாகவும் கொள்ளலாம். நல்→நெல் + குன்றம் = நல்ல குன்று அமைந்த இடமாகவும் கொள்ள முடியும்.]*

**நெற்குன்றவாணர்** *ner-kunra-vāņar*, பெ. (n.) ஒட்டக்கூத்தர் காலத்துத் தமிழ்ப்புலவர்; a Tamil poet lived in Ottakkūttar period.

*[நெற்குன்றம் + வாணர். வாணன் → வாணர். வாழ்நன் → வாணன் = ஊர்க்காக வாழ்பவன்]*

இவர் புலவராக இருந்ததோடு வள்ளலாகவும் இருந்திருக்கிறார். நம்பிகாளி என்னும் புலவருக்குப் பொருள் கொடுத்ததோடு அவர் புலமைக்கு அடிமைப்பட்டேனென்று சிறப்புக் கவியுங் கொடுத்தவரென்று தமிழ்நாவலர் சரிதை கூறும். இவர் திருப்புகலூர் சிவன் மேல் அந்தாதி நூலொன்றும் பாடியுள்ளார். அந்நூலின் இறுதியில் '*களப்பாளன் நெற்குன்ற வாணன்*' என்ற குறிப்பிருப்பதால் இவர் களப்பாள மரபினர் என்பது தெரிகின்றது. திருப்புகலூர்ச் சிவன் கோயிற் கல்வெட் டொன்றில், 'நெற்குன்றங் கிழார் அரையன் கருவுணாயகரான களப்பாள ராஜர் செய்வித்த சாலை' என்று குறிப் பிட்டிருப்பது நெற்குன்ற வாணரை யேயாம் என்று சாசனத்தமிழ்க் கவி சரிதம் கருதுகிறது. இங்குக் குறித்த நெற்குன்றம் காஞ்சிமாவட்டத் (செங்கல் பட்டு மாவட்டம்) தில் சென்னைக் கருகில் உள்ளது.

**நெற்கூடு** *ner-kūdu*, பெ. (n.) **நெற்களஞ்சியம்** (புறநா.148,உரை) பார்க்க; see *ner-kalañjiyam*. *நெற்கூடு ஒன்று செய்ய வேண்டும்.*

*[நெல் + கூடு. நெற்கூடு = நெல்லைக் கொட்டி வைக்கக் கூடுவடிவில் செய்யப்பட்ட அமைப்பு]*

**நெற்கூர்** *neṟ-kūr,* பெ. (n.) **நெல்வால்** பார்க்க; (யாழ். அக.); see *nel-vāl.*

*[நெல் + கூர். கூர் = கூர்மை, கூர்மையான நுனி, நெல்மணியோடு சேர்ந்த சிறிய தாள், கதிர்கூர். கூர்க்கருப்பன் என்றொரு நெல்வகை உண்டு.]*

**நெற்சப்பி** *neṟ-cappi,* பெ. (n.) புல்வகை (யாழ்ப்.); a kind of grass. *வயல் முழுமையும் நெற்சப்பி நிறைந்துவிட்டது.*

*[நெல் + சப்பி. சப்பி = பதர், புல். நெல்பயிரைக் கெடுக்கும் புல் வகை]*

**நெற்சம்பளம்** *neṟ-cambaḷam,* பெ. (n.) நெல்லாகப் பெறுங்கூலி; salary paid in paddy. *"பணம் வேறு நெற்சம்பளம் வேறு பற்றி"* (சரவண. பணவிடு.120)

*[நெல் + சம்பளம். சம்பளம் = கூலி. சம்பா + அளம் → சம்பளம் மருதநிலத்தில் சம்பாநெல்லும், நெய்தல்நிலத்தில் அளத்துப் பொருளாகிய மீனும், உப்பும் கூலியாகத்தரப்படுதலின் சம்பளம் என்ற சொல் உருவானதாகப் பாவாணர் கருதுகிறார். (சொ.ஆ.க.).]*

**நெற்சிறுதாலி** *neṟ-ciṟu-tāli,* பெ. (n.) தாலிவகை; a kind of marriage badge. *"நெற்சிறு தாலி நிரல்கிடந்திலங்க"* (பெருங். வத்தவ. 16:29).

*[நெல் + சிறுதாலி.]*

*சிறுதாலி = சிறிய தாலி வகை. சிறுதாலி = 1. கணவன் வாழ்நாள் வரை மகளிர் கழுத்தில் கயிற்றுடன் எப்பொழுதுமுள்ள தாலி. 2. வைப்பாட்டிக்குக் கொடுக்கும் தாலி. சிறுதாலிக்கட்டும் மரபு கைக் கோளரினத்தில் காணப்படுகிறது. திருமணத்திற்கிசையாத மாமன்மகள் அல்லது அத்தை மகளை விரும்பின ஒருவன், அவள் தன்னை மணம்புரியும் படி தாலியையேனும் துணியையேனும் தூங்கும்போது அவள் கழுத்திற் கட்டுவது, சிறுதாலிகட்டுதல் எனப்படும்.*

*நெற்சிறுதாலி = மணவுறுதிவிழாவில் கணவர் பெயர் குறித்த ஓலையைக் காதில் தென்புற மகளிர் அணிந்தது போல வயற்புற ஊர் மகளிர் கழுத்தில் பொன்தாலி அணிவிப்பதற்கு முன் நெல் முடிச்சிட்ட தாலி கட்டப்பட்டது என்று அறிக.*

**நெற்சூடு** *neṟ-cūḍu,* பெ. (n.) கடாவடிபடாத நெற்கதிர்த்தொகுதி; stack of unthreshed sheaves of paddy. *"நெற்சூடு மிதித்திடும்"* (ஏரெழு. 55). *இன்று வயலில் நெற்சூடு தூக்க வேணும்.*

*[நெல் + சூடு. சூடு = பிணையல் விடாத அரிக்கட்டு]*

**நெற்செய்-தல்** *neṟ-cey-,* 1. செ.கு.வி. (v.i.) நெற் பயிரிடுதல்; to cultivate paddy. *"நெற் செய்யப் புற்றேய்ந்தாற்போல"* (பழ. 53)

*[நெல் + செய். செய்தல் = பயிர்செய்தல், உண்டாக்குதல்]*

**நெற்சேர்** *neṟ-cēr,* பெ. (n.) நெல்லை வைப்பதற்கு வைக்கோற்றாளையும் புரியையுங் கொண்டு அமைந்த குதிர் (இ.வ.); strawbin or granary for storing paddy. *வீட்டில் இரண்டு நெற்சேர் உண்டு.*

*[நெல் + சேர். சேர் = வைக்கோற் புரியால் அமைந்த நெற்குதிர்]*

**நெற்சோளம்** *neṟcōḷam,* பெ. (n.) இருங்குசோளம்; a kind of maize, redmillet-Holcus saccharatus.

*[நெல் + சோளம். நெல்போன்ற வண்ண முடைய சோளம்]*

**நெற்பரப்பு** *ner̠-parappu,* பெ. (n.) பன்னிரண்டு குழியுள்ள ஒருவகை நிலவளவு (வின்.); a kind of land measure = 12 kuḻi.

*[நெல் + பரப்பு. பரப்பு = இடவிரிவு, ஒருவகை நிலவளவு]*

**நெற்பழம்** *ner̠-paḻam,* பெ. (n.) 1. அடுத்துவரும் விளைவின் குறைவைக் குறிப்பிக்கும் கறுப்புவிழுந்த தவசப் பழம்; matured grain marked with black spots, indicative of the next crop being scanty. 2. நல்விளைவின் குறியாக முற்றி வெடிக்கும் நென்மணி (யாழ்ப்.); rice grains bursting from rankness, indicative of a good crop. 3. மழை மிகுதியாவதால் ஏற்படும் நெல்லின் நோய் (நெல்லை); a disease affecting paddy, due to excessive rains.

*[நெல் + பழம்]*

**நெற்பாசினி** *ner̠-pāšin̠i,* பெ. (n.) சுணை வெண்டை; bendy (ladies finger) covered with rough hairs as opposed to smooth bendy. (சா.அக.)

**நெற்பிரமாணம்** *ner̠piramāṇam,* பெ. (n.) எட்டு எள்கொண்ட நெல்லளவு; size of paddy which is equivalent to that of 8 seasamum seeds.

*[நெல் + Skt. பிரமாணம்.]*

**நெற்பு** *ner̠pu,* பெ. (n.) 1. சீழ்; pus. 2. மெலிவு; weakness lankiness.

*[நுல் + நெல்→ நெள்→ நெற்பு. நெள் →நெளிவு.]*

**நெற்புகொள்ளல்** *ner̠pu-koḷḷal,* பெ. (n.) 1. சீழ் கொள்ளல்; the process or state of suppurating or producing pus as in a wound or abscess. 2. அம்மைப்பால் கொள்ளல்; pustules containing pus as in small pox. (சா.அக.).

*[நெற்பு + கொள்ளல். நெற்பு = சீழ்.]*

**நெற்புடம்** *ner̠-puḍam,* பெ. (n.) சில மருந்துகளை நெற்குவையுட் புகுத்திச் சூடேற்றிப் பதப்படுத்தும் முறை (தைலவ.தைல. 46, உரை); method of warming certain medicines by inserting them into a heap of paddy.

*[நெல் + புடம். புடம் = மருந்துகளைப் பதஞ்செய்யும் முறை.]*

**நெற்புல்** *ner̠-pul,* பெ. (n.) குறத்திப்பாசி (M.M.668); Job's tears.

*[நெல் + புல். நெல் போல் தோற்ற மளிப்பதும், வெண்மையும் உருட்சியுமான காய்களையுடையதுமான புல்வகை.]*

**நெற்பொரி** *ner̠-pori,* பெ. (n.) வறுப்பதால் விரிந்து மலரும் அரிசி (பு.வெ. 3:5, உரை); popped paddy.

*[நெல் + பொரி. பொரி = பொரித்த நெல் முதலியன.]*

**நெற்பொரிக்கஞ்சி** *ner̠pori-k-kañji,* பெ. (n.) நெற்பொரியினால் மலர்ந்த அரிசியைக் கொண்டு காய்ச்சும் கஞ்சி. இது பசியை நீக்கிக் களைப்பைப் போக்கும். வயிற்றுச் சிக்கலையும், மார்பு நோயையும் குணப்படுத்தும்; the boiled conjee prepared

from the expanded rice of the fried paddy is very useful for debilitated patients. It is easily digestible and affords much relief to patients tired of hunger. (சா.அக.).

*[நெற்பொரி + கஞ்சி]*

நெற்பொரிக்கஞ்சி எளிதில் செரிமான மாகி நோயையும் குணப் படுத்தும் தன்மை வாய்ந்தது.

**நெற்பொரிமாக்காடி** *neṟpori-mākkāḍi,* பெ. (n.) நெற்பொரியை மாவாக அரைத்துத் தண்ணீரில் கரைத்துப் புளிக்க வைத்த காடி; a fermented liquor prepared out of a solution of expanded rice flour. (சா.அக.).

*[நெற்பொரி + மாக்காடி.]*

மாக்காடி = மாவைத் தண்ணீரில் கரைத்துப் புளிக்கவைத்தது.

**நெற்பொரியுருண்டை** *neṟpori-y-uruṇḍai,* பெ. (n.) நெற்பொரியை வெல்லப் பாகிலிட்டுப் பிடித்தவுருண்டை; ball of a expanded rice of fried paddy mixed with jaggery syrup. (சா.அக.).

மறுவ. பொரியுருண்டை.

*[நெற்பொரி + உருண்டை.]*

**நெற்போர்** *neṟpōr,* பெ. (n.) கடாவடி அடிக்காத வைக்கோற் போர் (பிரபுலிங். மாயை. உற்.15); large stack of half-thrashed sheaves of paddy.

*[நெல் + போர். போர் = கதிர் வைக்கோல் களின் குவியல். நெற்குவை (சூடா.)]*

"மாடுகட்டிப் போர் அடித்ததால் மாளாது செந்நெல் என்று யானைகட்டிப் போர் அடிக்கும் அழகான தென்மதுரை" (நாட்புற.) போர் என்பது சண்டையைக் குறிப்பது. பொரு → போர் என்று உணர்க. பொருந்துதல் என்னும் தொழிற்பெயரின் பகுதி. பொரு → போர் என வைக்கோல் போரையும் படைக்களப் போரையும் நடிப்புக் காட்சியையும் குறித்து வருதல் அறிக.

**நெற்போலாகி** *neṟpōlāgi,* பெ. (n.) மூக்கறட்டை; cat's jasmine - Boerhaeia repens alias B. diandra. (சா.அக.).

**நெற்றகர்** *neṟṟakar,* பெ. (n.) புன்செய்த் தவச வகை (இ.வ.) a dry grain.

*[நெற்று + அகர். அகம் → அகர் நெற்றிய மணிகள் கொண்ட புன்செய்த் தவசங்கள்]*

**நெற்றம்** *neṟṟam,* பெ. (n.) நெற்று பார்க்க; see *neṟṟu.* *"உழிஞ்சிற்றாறு சினைவிளைந்த நெற்றம்"* (அகநா. 151:9). *"செல்வளி தூக்கலின் இலைதீர் நெற்றம் கல்லிழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்"* (நற். 107).

*[நெற்று → நெற்றம்.]*

**நெற்றலன்** *neṟṟalaṉ,* பெ. (n.) மெலிந்துணங்கி யவன் (யாழ்.அக.); emaciated man.

*[நெற்று + நெற்றலன். நெற்று = முதிர்ந்து காய்ந்த காய். நெற்றலன் = முதிர்ந்து காய்ந்த காய்போலானவன், மெலிந்தவன், நெற்று + அல் + அன்.]*

**நெற்றலி** *neṟṟali,* பெ. (n.) நெய்த்தோலி (யாழ். அக.) பார்க்க; see *ney-t-tōli.*

*[நெய்த்தோலி → நெற்றலி.]*

**நெற்றி**[1] *neṟṟi,* பெ. (n.) 1. தலைமுடிக்குக் கீழும் புருவங்கட்கு மேலுமுள்ள முகத்தின் பகுதி; நுதல்; forehead. *"கண்சுமந்த நெற்றிக்கடவுள் கலிமதுரை"* (திருவாச. 8:8). *"மறங்கொள் சேரி மாறுபொரு செருவின் மாறா துற்ற வடுப்படுநெற்றி"* (மதுரைக்.594,595). *"நெய்துடிந்தட்ட விளரூன் அம்புகை எறிந்த

*நெற்றிச் சிறுநுண் பல்வியர் பொறித்த குறுநடைக் கூட்டம் வேண்டுவோரே"* (நற்.41). *"தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்"* (குறுந்.107). *"நெற்றி விழியா நிறைத்திலக மிட்டாளே"* (பரிபா. 11:99). *"சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக்காரி விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்குடர் சொரியக் குத்திக் குலைப்பதன் தோற்றங்காண்"* (கலித்.101). *"நெற்றிச்சிவலை நிறையழித்தான் நீண் மார்பில்"* (கலித்.104). *"வள்ளுருள் நேமியான் வாய்வைத்த வளைபோலத் தெள்ளிதின் விளங்குஞ் சுரி நெற்றிக் காரியும்"* (கலித்.105). *"எல்லித் தங்கிக் குடுமி நெற்றி நெடுமரச் சேவல் தலைக்குரல் விடியல் போகி"* (அகநா. 87). *"மகர நெற்றி வான்றோய் புரிசைச் சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லில்"* (அகநா. 181). *"குடுமிநெற்றி நெடுமாத் தோகை"* (அகநா. 194). *"தளிர்புரை கொடிற்றிற் செறிமயிர் எருத்திற் கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ அன்ன நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்"* (அகநா. 367). *"பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கத்துக் கவிர்ப் பூ நெற்றிச் சேவலின் தணியும் அருமிளை இருக்கை"* (புறநா. 326). *"கானல் மேய்ந்து வியன் புலத்து அல்கும் புல்வாய் இரலை நெற்றி அன்ன"* (புறநா. 374). *"கயலெழுதிய இமய நெற்றியின் அயலெழுதிய புலியும் வில்லும்"* (சிலப். 17:1). *"நெற்றிச் செகிலை யடர்த்தாற் குரியவிப் பொற்றொடி மாதராள் தோள்"* (சிலப். 17–கொளு.–2). *"மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு"* (மணிமே. 19:19). 2. முன்பகுதி; front. *"நிடதத்தி னெற்றி"* (கம்பரா. மருத்து.17). 3. உச்சி; top. *"கமுகினெற்றிப் பூமாண்ட தீந்தேன் றொடை"* (சீவக.31). *"நீளுறு மேருவி னெற்றிமுற்றிய"* (கம்பரா. சடாயுகாண்.7). 4. வானம்; sky. *"நெறிந்தன மாசுண நெற்றியே"* (தக்கயாகப். 524). 5. கட்டடத்தின் மேனிலை முகப்பு; front side of the storey of a building, facade. 6. தண்டிகை முதலியவற்றின் தலைப்பு (வின்.); end or extremity of a board, timber etc. 7. மரத்திலிருந்து கிளைகள் பிரிகின்ற இடம் (வின்.); the upper part of the trunk of a tree where it branches off. 8. முன்னணி, முன்படை; van of an army. *"நெற்றியி லரக்கர் பதிசெல்ல"* (கம்பரா. ஒற்றுக்கேள்வி. 6). *"தனியனெற்றி யிற்சார்வலென்றனன்"* (கந்தபு. அசுரர்யா. 3.) 9. தலை; head. *"முகிற்றழீஇயசும்பறாத நெற்றிய"* (சீவக. நாமக.71). 10. முகம்; face. *"சோலை நெற்றியிற்றொடுத்த"* (கூர்மபு. அட்ட. 18).

ம. நெற்றி; **க.,தெ.,து.** நெத்தி; துட. நித்தி; **கோத.** நெக் (nec); **குட.** நெத்தி; **கொலா.** நெத்தி; **நா.** நெத்தி; **கோண்.** நேக் (nēc); **மா.** நெபெ.

*[நுல்(முன்மை) → நொல் → நெல் → நெறி → நெற்றி.]*

**நெற்றி[2]** *neṟṟi,* பெ. (n.) முயற்சி; effort. "நெற்றி அல்பமாய்ப் பலம் கனக்கப்பெறுமதிறே" (ஈ.டு,9.1:4).

*[நெற்று + இ. எண்ணம் நெற்றாகியதும் முயற்சி தொடங்கும்.]*

**நெற்றி[3]** *neṟṟi,* பெ. (n.) நடு; middle. *"காலை நெற்றியி லகிலமுஞ்சுடு கனலிகுறைபட"* (தக்கயாகப். 334).

**நெற்றிக்கட்டு** *neṟṟi-k-kaṭṭu,* பெ. (n.) மாதரணிகின்ற தலைமாலை (கலித்.66, உரை); a garland worn on forehead by woman.

*[நெற்றி[1]+கட்டு. நெற்றியைச்சுற்றி அணியும் மாலை.]*

**நெற்றிக்கண்** *neṟṟi-k-kaṇ,* பெ. (n.) சிவனின் மூன்றாங் கண்; நுதல்விழி; Śiva's eye in the forehead. 2. உத்தர மட்டத்திலிருந்து ஓட்டு முகப்புவரையில் முக்கோணமாக அமைக்கும் சுவர் (கட்ட. நாமா.); gable. 3. மொட்டைமச்சுக் கட்டடத்தில் துலாக் கட்டைகளின் இடைவெளிப் பகுதி (இ.வ).; the interspaces between the joists of a terraced building.

*[நெற்றி[1] + கண்]*

**நெற்றிக்கண்ணன்** *neṟṟi-k-kaṇṇaṉ*, சிவன்; Šiva, as having an eye in the forehead.

*[நெற்றி + கண்+அன்.அன்–ஆண்பால் ஒருமை. நெற்றியில் மூன்றாங் கண்ணுடைய சிவன்.]*

**நெற்றிக்கல்** *neṟṟi-k-kal*, பெ. (n.) கட்டட வளைவின் (கமான்) நடுவில் வைக்கும் முகப்புக்கல்; key-stone.

*[நெற்றி + கல். கட்டடத்தின் முகப்பாகிய நெற்றிபோன்ற பகுதியில் வைக்கும் கல்]*

**நெற்றிக்கயிறு** *neṟṟi-k-kayiṟu*, பெ. (n.) நெற்றியில் கட்டும் கயிறு; a rope tied around the head.

*[நெற்றி + கயிறு.]*

கால்நடைகளின் நெற்றியில் கட்டும் கயிறு. சிறுவர்களும் நெற்றியில் ஒப்பனைக்காக வண்ணக்கயிறு கட்டிக்கொள்வர். நெற்றியில் கட்டுங்கயிறு, மண்டைக்கயிறு.



**நெற்றிக்கிடு–தல்** *neṟṟikkiḍu-*, 18 செ. குன்றாவி. & 20செ.கு.வி. (v.t.&v.i.) நெற்றியில் திருநீறு, திருமண் முதலியவற்றால் குறியிடுதல்; to put sectarian marks on the forehead. *நாள்தோறும் நெற்றிக்கிட்டுக் கொண்டுதான் வெளியில் செல்வார்.*

*[நெற்றிக்கு+இடு–தல்.]*

சிவனியர்கள் நெற்றியில் திருநீற்றால் கிடையாக மூன்றுபட்டைகளும், மாலியர்கள் செங்குத்தாக வெண்மண்ணாலும், காவியாலும் மூன்று கோடுகளும் இட்டுக்கொள்வர். இக்கால அரசியல்கட்சிகள் வேட்டிக்கரையில் வண்ணக்கோடு காட்டுவது நெற்றிக்கிடுதலின் மாற்றமே.

**நெற்றிக்குறி** *neṟṟi-k-kuṟi*, பெ. (n.) நெற்றியிலிடும் குங்குமம் முதலியன (சூடா.); the sectarian marks put on the forehead.

*[நெற்றி + குறி.]*

சமய அடிப்படையில் நெற்றியில் குறியிட்டுக் கொள்வது இந்தியரின் வழக்கம். சிவனை வணங்குபவர்கள் நெற்றியில் திருநீற்றால் முப்பட்டை இட்டுக் கொள்வர். உடலில் மார்பு, கை, வயிறு போன்ற பகுதிகளிலும் குறியிட்டுக்கொள்வர். திருமாலை வணங்கும் மாலியர்கள், வெண்மண், செம்மண் போன்றவற்றால் நெற்றி, மார்பு, கை போன்ற இடங்களில் மூன்று செங்குத்துக்கோடுகளால் ஆன குறியிட்டுக்கொள்வர். பெண்கள் நெற்றியில் குங்குமம் (சிவப்பு) அணிவர் கைம்பெண்கள் திருநீறு அணிவர்.



**நெற்றிக்கை** *neṟṟi-k-kai*, பெ. (n.) முன்படை; van of an army. *"இவற்றுக்கெல்லாம் நாம் நெற்றிக் கையன்றோ"* (ஈடு, 7. 7:7) **2.** மேற்கூரை தாங்கும் எதிர்க் கைமரம் (வின்.); couple or chevron of a roof.

*[நெற்றி+கை. நெற்றி போன்று மேற் கூரையைத் தாங்கும் (கைபோன்ற) மரம்.]*

**நெற்றிச்சிட்டி** *neṟṟi-c-ciṭṭi,* பெ. (n.) *நெற்றிச்சுட்டி,* 2 பார்க்க; see *neṟṟi-c-cuṭṭi,* 2.

*[நெற்றி + சிட்டி. சுட்டி → சிட்டி.]*

**நெற்றிச்சுட்டி** *neṟṟi-c-cuṭṭi,* பெ. (n.) 1. மகளிரும் குழந்தைகளும் அணியும் நுதலணிவகை; an ornament worn on the forehead by women and children. *மகளுக்கு நெற்றிச்சுட்டி வாங்கி வந்தார்.* 2. விலங்கின் நெற்றி வெள்ளை; blaze on the forehead of an animal. *நெற்றிச்சுட்டி உள்ள மாட்டைப் பிடித்து வா.*

*[நெற்றி+சுட்டி. சூட்டி → சுட்டி = நெற்றியணி. விலங்குகளுக்கு இருக்கும் வெண் சுழி, நெற்றிப்பட்டம். நெற்றிச்சுட்டி= பெண்கள் தலையில் அணிந்து வகிடுவழியாக நெற்றியில் தொங்கவிட்டுக் கொள்ளும் சங்கிலியோடு கூடிய வில்லை. இதைத் திவாக நிகண்டு சுடிகை எனக்குறிக்கிறது.]*



**நெற்றிச்சலங்கை** *neṟṟi-c-calaṅgai,* பெ. (n.) நெற்றியில் கட்டப்படும் சிறு மணிகளின் தொகுப்பு; tinny bells tied around the head.

*[நெற்றி + சலங்கை. சதங்கை → சலங்கை.]*

**நெற்றிச்சுழி** *neṟṟi-c-cuḻi,* பெ. (n.) விலங்கின் நெற்றியிலுள்ள மயிர்ச்சுழி; hair-curl on the forehead of an ox or horse.

*[நெற்றி + சுழி. சுழி = மயிர்ச்சுழி. மாட்டைச் சுழி பார்த்து வாங்க வேண்டும்.]*

**நெற்றிச்சூட்டு** *neṟṟi-c-cūṭṭu,* பெ. (n.) மகளிரணியும் நுதலணிவகை (சீவக. 484, உரை); an ornament for a woman's forehead.

*[நெற்றி+சூட்டு. சுட்டி → சூட்டி → சூட்டு = பெண்கட்குரிய நுதலணி.]*

**நெற்றித்தலம்** *neṟṟi-t-talam,* பெ. (n.) நெற்றியின் பகுதி; the region of forehead.

*[நெற்றி + தலம். தடம் = இடம். தடம் → தளம் → தலம்.]*

**நெற்றித்திலகம்** *neṟṟi-t-tilagam,* பெ. (n.) நுதற்பொட்டு; mark on the forehead, as of sandal or vermilion.

*[நெற்றி+திலகம்.* Skt. tilaka → *த. திலகம் = நெற்றிப்பொட்டு.]*

**நெற்றித்திலதம்** *neṟṟi-t-tiladam,* பெ. (n.) *நெற்றித்திலகம்* (வின்.) பார்க்க; see *nēṟṟi-t-tilagam.*

*[நெற்றி+திலதம்.* Skt. tilaka → *த. திலகம் → திலதம் = நெற்றிப்பொட்டு தில(த)ம் என்பது எள்ளைக்குறிக்கும். பழங்காலத்தில் எள்ளை நெற்றியில் எண்ணெய்க்கசிந்து ஒட்டுமாறு அழுத்தி இட்டுக்கொண்டனர்.]*

**நெற்றிநாளம்** *neṟṟi-nāḷam,* பெ. (n.) நெற்றியின் நடுவேயோடும் இரண்டுநாளம்; a pair of veins which rundown the middle line of forehead - Frontal vein. (சா.அக.).

*[நெற்றி + நாளம். நாளம் → நாடி]*

**நெற்றிப்பட்டம்**[1] *neṟṟi-p-paṭṭam,* பெ. (n.) நுதலிலணியும் பட்டம் (வின்.); thin plate of metal worn on the forehead, as an ornament or badge of distinction. "*முன்னோ னெடுந்துளைக் கைப்பிடித்தேறி நெற்றிப்பட்டத் துலவி*" (சேதுபு. கடவுள்வா. 5).

*[நெற்றி + பட்டம். பட்டம் = சிறப்புக்கு அறிகுறியாக நெற்றியிலணியும் பொற்றகடு, மாதர் நுதலணி, பட்டையான துண்டு.]*

**நெற்றிப்பட்டம்**[2] *neṟṟi-p-paṭṭam,* பெ. (n.) திருமணத்தின் போது பெண்ணுக்குத் தாய்மாமன் முறையினர் நெற்றியில் கட்டும் தங்கத்தினாலான சிறிய (நீண்ட) தகடு ; a thin gold plate worn on the forehead by maternal uncle.

மறுவ. நெத்திப்பட்டம்.

*[நெற்றி + பட்டம்.]*

மாமன் முறையாளர் தமக்கை மகளுக்கோ தங்கை மகளுக்கோ திருமணத்தின் போது கட்டும் (பட்டம்) பொற்காசு.

தாய்மாமனால் கட்டப்படுவது அம்மான் பட்டம் எனவும், நாத்திகளால் கட்டப்படுவது நாத்திப்பட்டமெனவும், மாமியால் கட்டப்படுவது மாமிப்பட்டமெனவும், பெயர்பெறும். பட்டம் பொற்காசுகளாகவும் இருக்கும். தமிழர் திருமண விழாவில் இஃது ஒரு முதன்மையான நிகழ்வு

**நெற்றிப்பற்று** *neṟṟi-p-paṟṟu,* பெ. (n.) தலைவலி, மண்டைக்குத்தல் முதலிய நோய்களுக்கு நெற்றியில் போடும் மருந்துப்பற்று; an ointment, or liniment or paste applied to forehead in cases of headache cold, neuralgia and other nervous effections. (சா. அக.) *கிராமங்களில் தலைவலிக்குச் சூடான கேழ்வரகுக் கூழை நெற்றிப்பற்றிடுவார்கள்.*

*[நெற்றி + பற்று. பற்று = பசை, கட்டு, மருந்துப்பூச்சு.]*

உடலில் ஏற்படும் வெப்பத்தைத் தணிக்க, நெற்றியில் மஞ்சள், சுண்ணாம்பு, பச்சிலை, கூழ்வகைகள், மருந்துவகைகள் முதலியவற்றால் பற்றிடுவது பழைய வழக்கம்.

**நெற்றிப்பால்** *neṟṟi-p-pāl,* பெ. (n.) வெப்பத்தைக் குறைக்க நெற்றியில் பற்றுப் போடும் முலைப்பால்; women's breast milk as a liniment to the forehead. It is reduces the temperature. (சா.அக.).

*[நெற்றி+பால்.]*

காய்ச்சலின் கடுமையைக் குறைக்க முலைப்பாலைத் துணியில் நனைத்து நெற்றியில் போட்டுப் போட்டு எடுப்பர். இவ்வாறு செய்வதால் காய்ச்சலின் கடுமை குறையும் என்பர்.

**நெற்றிப்புருவம்** *neṟṟi-p-puruvam,* பெ. (n.) கண்புருவம்; eye-brow.

*[நெற்றி + புருவம். நெற்றியில் இருக்கும் (கண்) புருவம்]*

**நெற்றிப்பொட்டு** *neṟṟi-p-poṭṭu,* பெ. (n.) 1. நெற்றி ஓரத்திற்கும் காதிற்கும் இடையே உள்ள பகுதி; temple of the forehead. *நெற்றிப் பொட்டில் அடித்ததால் இறந்துவிட்டான்.* 2. நெற்றியில் வைக்கும் பொட்டு; mark on the forehead, as of sandal or vermilion.

*[நெற்றி + பொட்டு. பொட்டு = 1. நெற்றியில் வைக்கும் பொட்டு. 2. பொன்னால் செய்த ஒரு வகைத்தாலி. 3. ஒருவகை அணி. பொட்டுமணி சிறுபெண்கள் கழுத்தில் அணிவர். 4. கன்னத்தின் மேல் இணைப்பு.]*

இசைவேளாளர் குடும்பப் பெண்டிரைக் கோவிலுக்கு நேர்ந்துவிட, பொற் காசை நெற்றியில் பொட்டாகக்கட்டி ஆடல், பாடல் வளர்ச்சிக்கு விடுவர்.

**நெற்றிமாலை** *neṟṟi-mālai,* பெ. (n.) நெற்றிக்கட்டு (வின்.) பார்க்க; see *neṟṟi-k-kaṭṭu.*

*[நெற்றி + மாலை. மாலை = மகளிர் அணியும் தொங்கல் தலைமாலை.]*

**நெற்றிமுட்டு** *neṟṟi-muṭṭu,* பெ. (n.) 1. நேர்சுருக்குவழி; short, direct course or way. **நெற்றிமுட்டு வழியாக விரைந்து வந்தான்.** 2. நெற்றிக்கை, 2 பார்க்க; see *neṟṟi-k-kai.* 3. கைமரத்தினடி; lower end of a rafter. 4. திடீரென ஒருவரையொருவர் இடித்துச் சந்திக்கை (இ.வ.); sudden meeting of two persons face to face.

*[நெற்றி + முட்டு. முட்டு = தடை, குறைவு, முட்டிக்கொள்வது ]*

**நெற்றிமூஞ்சி** *neṟṟi-mūñji,* பெ. (n.) *நெற்றிக்கண்,* 2. பார்க்க; see *neṟṟi-k-kaṇ,2.*

*[நெற்றி + மூஞ்சி. மூஞ்சி = முகம், உடலுக்கு முகம் அமைந்துள்ளதைப் போல் கட்டடத்திலிருந்து ஓட்டுமுகப்பு வரையில் முக்கோணமாக அமைக்கும் சுவர். ]*

மூக்கும் வாயும் அமைந்த பகுதியை மூஞ்சி (மூஞ்சி + உறு = மூஞ்சுறு) என்றும், தாடையைச் சேர்த்து முகரை என்றும், முழுமையை முகம் என்றும் கூறும் போக்கு பேச்சுவழக்கில் உள்ளது.

**நெற்றியிற்கல்வை-த்தல்** *neṟṟiyiṟ-kal-val-,* 4 செ.குன்றாவி.(v.t.) நெற்றியிற் கல்லேற்றித் தண்டித்தல் (வின்.); to torture by placing a stone weight on the forehead, as a punishment.

*[நெற்யில் + கல்வை-த்தல்.]*

சேரன் செங்குட்டுவன் கனக விசயர் தலையில் கல்லேற்றிக் கொண்டு வந்து கண்ணகிக்குக் கோயில் கட்டினான். நெற்றியில் கல்லேற்றித்தண்டித்தல் என்பதில் நெற்றி என்பது தலையையும் குறித்திருக்கலாம். தலையிலோ நெற்றியிலோ கல்லை வைத்துத் தண்டிக்கும் பழக்கம் சிலப்பதிகாரக் காலத்திற்கு முன்பிருந்தே தமிழ்நாட்டில் இருந்திருக்கிறது.

"வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடியேற்றி"

(சிலப்.27:1-4).

**நெற்றியுதயம்** *neṟṟi-y-udayam,* பெ. (n.) பிள்ளைப்பேற்றின் போது முதலில் வெளிவரும் நெற்றியின் நிலை; presentation of forehead in delivery.

*[நெற்றி + Skt. உதயம் = த. தோற்றம்.]*

**நெற்றியெலும்பு** *neṟṟi-y-elumbu,* பெ.(n.) நெற்றியிலுள்ள எலும்பு; bones of the forehead-Osfrontis.

**மறுவ:** நெற்றியோடு

*[ நெற்றி + எலும்பு ]*

எலும்பு : முதுகெலும்புள்ளவற்றின் மென்மையான தசை, நரம்பு முதலிய இழைமங்களுக்கும் (திசுக்களுக்கும்), மூளை, கண், இதயம் போன்ற உறுப்புகளுக்கும் பற்றுக்கோடாகவும், பாதுகாப்பாகவும் உள்ள உறுதியான அகச்சட்டகம். மனித உடலில் 206 எலும்புகள் உள்ளன.

உருவமைப்பைக் கொண்டு எலும்புகள், நீண்ட எலும்பு, குட்டை எலும்பு, தட்டை எலும்பு, வளைவு எலும்பு என நான்குவகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கை, கால்களில் உள்ளவை நீண்ட எலும்புகள்; மணிக்கட்டு, கணுக்கால்களில் உள்ளவை குட்டை எலும்புகள். தோள்பட்டை எலும்பு, இடுப்பு எலும்பு, மண்டை எலும்புகள் தட்டை எலும்புகள். முதுகெலும்பிலுள்ள முள்ளெலும்புகளும் vertebral தலையிலுள்ள சில எலும்புகளும் வளைவு எலும்புகள்.

மனித உடலில் உள்ள எலும்புகளின் எண்ணிக்கை 206.

1. முதுகெலும்புத்தொடர் - 26.
2. தலையெலும்புகள் - 29

3. விலா எலும்புகள், மார்பெலும்பு – 25
4. கை எலும்புகள் – 64
5. கால் எலும்புகள் – 62.

தலையில் மண்டை, முகம் என இரு பகுதிகள் உண்டு. இவற்றில் நெற்றி எலும்பு ஒன்றும், சல்லடை எலும்பு ஒன்றும், ஆப்பு எலும்பு ஒன்றும், மண்டைப்பக்க எலும்பு இரண்டும், பின் மண்டை எலும்பு ஒன்றும், மூக்கு எலும்பு இரண்டும், பொட்டு எலும்பு இரண்டும், கீழ்மூக்குச் சங்கெலும்பு இரண்டும், கொழுவெலும்பு ஒன்றும், மேல்தாடையெலும்பு இரண்டும், கன்னவெலும்பு இரண்டும், கீழ்த்தாடையெலும்பு ஒன்றும் என இருபத்திரண்டு எலும்புகள் உள்ளன. கீழ்த்தாடை எலும்பைத்தவிர அனைத்து எலும்புகளும் அசையாமலும் பிரியாமலும் இணைக்கப்பட்டுள்ளன.

முதுகுத்தண்டு, எலும்புக்கூட்டின் அச்சாகும். உடலில் உள்ள மற்ற எல்லா எலும்புகளும் நேரிடையாகவோ வேறு எலும்புகளின் வழியாகவோ இதனுடன் இணைந்திருக்கின்றன. இதில் 25 எலும்புகள் உள்ளன. முதுகெலும்பின் மேற்புறத்தில் 24 தனி முள்ளெலும்புகள் உள்ளன. கழுத்தில் ஏழு முள்ளெலும்புகள் உள்ளன.

மார்புப் பகுதியில் 12 முள்ளெலும்புகள் உள்ளன. மார்பின் இருபுறமுள்ள விலா எலும்புகள் அவற்றோடு பொருந்தியுள்ளன. 12 இணைப்பழுவெலும்புகளில், முதல் ஏழு இணைகள் முன்மார்பிலுள்ள குருத்தெலும்புடன் பொருந்தியுள்ளன. எட்டாம் பழுக்குருத்தெலும்பு ஏழாம் பழுக்குருத்தெலும்புடனும், 9 ஆவது எட்டுடனும், பத்தாவது ஒன்பதாவதுடனும் சேர்த்துள்ளன. 11, 12 ஆம் பழுவெலும்புகள் மட்டும் சேராமல் மிதக்கும் பழுவெலும்புகளாக உள்ளன. அனைத்தும் ஒரு கூண்டு போல் அமைந்துள்ளன. இக்கூண்டினில் (இதயம்) நெஞ்சாங்குலை நுரையீரல் போன்றவை காப்பாக வைக்கப்பட்டுள்ளன.

தோள்முதல் முழங்கை வரையில் மேற்கை எலும்பு ஒன்றும், முன்கைப்பெருவிரல் பக்கமாக ஆரை எலும்பும், சிறுவிரல் பக்கமாக முழங்கை எலும்பும், மணிக்கட்டில் எட்டுச் சிறு எலும்புகளும், உள்ளங்கையில் ஐந்து நீண்ட எலும்புகளும், பெருவிரலில் இரண்டும், மற்ற விரல்கள் ஒவ்வொன்றிலும் மூன்றும் என முப்பது எலும்புகள் கையில் உள்ளன.

தொடை எலும்பு உடலில் உள்ள மற்ற எலும்புகளை விடப்பெரியது. கணுக்காலில் ஏழும், பாதத்தில் ஐந்தும், விரல்களில் 14 உம் என இருபத்தாறு எலும்புகள் உள்ளன.

**நெற்றியோடு** *neṟṟi-y-ōḍu,* பெ. (n.) நெற்றியெலும்பு ; frontal bone

*[நெற்றி + ஓடு. ஓடு = எலும்பு, நெற்றியெலும்பு ]*

**நெற்றிலி** *neṟṟili,* பெ. (n.) **நெய்த்தோலி** (இ.வ.) பார்க்க; see *ney-t-tōli.*

*[நெய்த்தோலி → நெற்றிலி.]*

**நெற்றிலிவலை** *neṟṟili-valai,* பெ. (n.) சிறுமீன்களைப் பிடிக்க உதவும் வலை; a kind of net for catching small fish.

*[நெற்றிலி + வலை. வலை = உயிரிகளை அகப்படுத்தும், பிடிக்கப் பயன்படும் வலை. நெய்த்தோலி மீன்கள் மட்டுமின்றி வேறு மீன்களையும் பிடிக்க இவ்வலை பயன்படுகிறது.]*

**நெற்று¹–தல்** *neṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மோதுதல்; to thrust, dash. ***என்னைச் சுவரில் நெற்றினான்.*** 2. இலக்கில் தட்டுதல் (வின்.); to strike a mark, as with balls. 3. இடறுதல்; to stumble.

**தெ.**நெட்டு; **கோண்.**நத்தாநா; **குட.**நேட்ட. (nēṭṭ)

*[எற்று – தல் → நெற்று – தல். எற்றுதல் = மோதுதல், எறிதல், அடித்தல்]*

**நெற்று²–தல்** *neṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பெறுதல் (பாண்டி.); to attain as an end.

**நெற்று³–தல்** *neṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) முதிர்தல்; to mature, ripen.

*[நெறி¹–தல். → நெற்று–தல்.]*

**நெற்று**[4] *neṟṟu,* பெ. (n.) 1. தேங்காய் முதலியவற்றின் முதிர்ந்து காய்ந்த காய்; a dried, mature seed or nut. *"வாகை வெண்ணெற் றொலிக்கும்"* (குறுந். 7). *தேங்காய், நெற்றுகாயாகப் பார்த்து வாங்கிவா. "நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்"* (குறுந். 39). *"அத்த வாகை அமலை வால் நெற்று"* (குறுந். 369). *"வாடல் உழிஞ்சில் விளை நெற்று அந்துணர் ஆடுகளப் பறையின் அரிப்பன வொலிப்ப"* (அகநா.45). *"சிள்வீடு கறங்கும் சிறிஇலை வேலத்து ஊழ்உறு விளைநெற்று உதிரக் காழியர் கவ்வைப் பரப்பின் வெவ் உவர்ப்பு ஒழியக் களரி பரந்த"* (அகநா. 89). *"ஒள்ளிணர்ச் சுடர்ப்பூங் கொன்றை ஊழுறு விளை நெற்று அறை மிசைத் தாஅம் அத்தம் நீளிடை"* (அகநா.115). *"பெருநீர் மேவல் தண்ணடை எருமை இரு மருப்பு உறழும் நெடுமாண் நெற்றின் பைம் பயறு உதிர்த்த கோதின் கோல் அணை"* (புறநா. 297). *"முற்றற் சிறு மந்தி முற்பட்ட தந்தையை நெற்றுக் கண்டன்ன விரலான் ஞெமிர்த்திட்டுக் குற்றிப் பறிக்கும் மலைநாட"* (நாலடி. 237). 2. நெறிப்பு (இலக். அக.); stiffness. 3. உலர்ந்த பழம்; dry-fruit *"நெற்றாப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற"* (கந்தரல. 58).

*[நெறி → நெறு → நெறு¹ → நெற்று. 1. மீண்டும் முளைப்பதற் குரிய அளவில் முற்றிய காய். 2. வேர்க்கடலை போன்றதின்முதிர்வு. 3. தேங்காய், பீர்க்கு முதலியவற்றின் காய் முதிர்ச்சி. 4. உலர்ந்த பழம்]*

**நெற்றுக்குவிடு—தல்** *neṟṟukku-viḍu-,* 18. செ. குன்றாவி. (v.t.) மரஞ்செடிகளில் காயை விதைக்காக முதிர்ந்துலரவிடுதல் (வின்.); to let nuts and berries to mature and run to seed. *முருங்கைக்காய் நான்கை நெற்றுக்கு விட்டுவை.*

*[நெற்று → நெற்றுக்கு + விடுதல்.]*

விதை எடுப்பதற்காக பறிக்காமல் மரத்திலேயே விட்டு வைத்தல். இப்படி விடப்படும் காய் நன்கு முற்றி பழுத்து விளைந்து நல்ல விதையைக் கொடுக்கும். விதைக்காய், விதை நெல்லு என்ற உலக வழக்கும் உண்டு. அவரை, வெண்டை, கொத்தவரை, முருங்கை, பீர்க்கு, சுரை போன்றவை நெற்றுக்கு விடும் காய் வகைகளில் சில.

**நெற்றுப்படு—தல்** *neṟṟu-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.), கறிக்குதவாதபடி காய் முற்றிப் போதல் (வின்.); to become too ripe for use in cooking. *அவரைக்காய் நெற்றுப் பட்டுவிட்டது.*

*[நெற்று + படு—தல்]*

**நெற்றெடு**[1]**—த்தல்** *neṟṟeḍu-,* 4. செ. குன்றாவி. (v.t.), நெற்றையுதிர்த்து விதையெடுத்தல் (வின்.); to shell dried beans for seed.

*[நெற்று + எடு—தல்]*

அவரை, முருங்கை, கொத்தவரை, பீர்க்கு, சுரை போன்றவற்றின் நெற்றை உதிர்த்து விதை எடுத்தல்.

**நெற்றெடு**[2]**—த்தல்** *neṟṟeḍu-,* 4 செ.கு.வி. (v.i.), விதை சேர்த்து வைத்தல் (இ.வ.); to collect seeds. *அவரையின் நெற்றெடுத்து வைத்தான்.*

*[நெற்று + எடு—த்தல்]*

**நெறதழநாவி** *neṟadaḻa-nāvi,* பெ. (n.) அலரி; oleander. (சா.அக.).

**நெறநெறெனல்** *neṟa-neṟeṉal,* பெ. (n.) ஓர்ஒலிக்குறிப்பு; onm. expr. of grinding or gnashing the teeth. *"நிகரறுமுரகன் முடிநெறநெறென"* (திருப்போ. சந். பெருங். 2:6). *பல்லை நெறநெறென கடித்தான்.* 2. மென்மையற்றிருத்தற் குறிப்பு; expr. signifying roughness or coarseness. *மா நெறநெறென்றிருக்கிறது.*

*[நெறநெற + எனல். ஈரடுக்கு ஒலிக்குறிப்பு]*

**நெறி¹–தல்** *neri-,* 2 செ. கு. வி. (v.i.) மயிர் குழற்சியாதல்; to be wavy, curly, as the hair of a person. "*நெறிந்தகருங் குழல்மடவாய்*" (திவ். பெரியாழ். 3. 10:1).

*[நெரி → நெறி → நெறி – தல் = வளைதல், நொறுங்குதல், நிலைகெடுதல், நெருங்குதல்]*

**நெறி²–த்தல்** *neri-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. புறவித ழொடித்தல்; to strip a flower of its calyx. "*மலர் வாங்கி நெறித்து*" (கலித்.76). 2. சினத்தால் நெற்றியைச்சுருக்கிப் புருவத்தை வளைத்தல்; to contract, as the brow in anger. "*நெறித்த நெற்றியர்*" (கம்பரா. கரன்வதை.43). *புருவத்தை நெறித்து என்னைப் பார்த்தார். 3. நிமிர்த்துதல்;* to prick up. as the ears. *காதை நெறித்தான்.* 4. கையாற் பிடித்து விடுதல் (கலித்.32) to press firmly with the hand. 5. இரண்டு கைவிரல்களையும் கோத்துச் சொடுக்கு ஓசை கேட்க வைத்தல்; to crack the fingers. "*நீ நாசமாய்ப்போ*" *என்று கைவிரல்களை நெறித்துச் வசவு (சாபம்) சொன்னான்.*

**து.** நெசிபுநி

*[நெறி¹ → நெறி²]*

**நெறி³–த்தல்** *neri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. முறுக்காயிருத்தல் (இ.வ.); to be stiff. 2. மயிர்சுருளல், மயிர் குழலுதல்; to curl in ringlets, as hair. "*நெறித்திட்ட மென்கூழை*" (திவ். பெரியதி. 10. 6: 8). "*நெறிசுரிபூங்குழல்*" (யா.கா.செய்.3). 3. நெளித்தல்; to cause to bend.

*[நெறி¹ → நெறி³–த்தல்.]*

**நெறி⁴–த்தல்** *neri-,* 4 செ. குன்றாவி. (v.t.) நோக்குதல் (நீலகேசி, 53,உரை); to look.

*[நெறி¹ → நெறி⁴–த்தல்.]*

**நெறி⁵** *neri,* பெ. (n.) 1. முடக்கம், வளைவு; bend, curve, turning, as of a road. "*நெறிகொள் வரிக்குடர்*" (புறநா. 160). 2. சுருள்; curliness of hair. "*குறுநெறிக் கொண்ட கூந்தல்*" (பெரும்பாண். 162). 3. கருமணல், அறல்; black sand. "நெறிமருப்பெருமை" (சீவக. நாமக. 15). 4. வழி, way, road, path. "*கல்வரையு முண்டா நெறி*" (நாலடி, 154). "*ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி உளப்பட மூன்றே மொழி நிலை தோன்றிய நெறியே*" (தொல். எழுத்து. 45). "*கோடியர் தலைவ கொண்ட தறிந அறியாமையின் நெறிதிரிந் தொராஅ தாற்றெதிர்ப் படுதலு நோற்றதன் பயனே*" (பொருந.57,59). "*நூனெறி மரபிற் பண்ணி யானாது*" (சிறுபாண்.230). "*பல்லெருத்துமணர் பதிபோகு நெடுநெறி எல்லிடைக் கழியுநர்க் கேமமாக*" (பொரும்பா.65,66). "*படுத்து வைத்தன்ன பாறை மருங்கின் எடுத்து நிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி*" (மலைபடு.15,16). "*நெடுநெறிச் சகடம் மணல் மடுத்து உரறும் ஓசை*" (நற்.4). "*புலிபார்த்துறையும் புல்லதர்ச் சிறுநெறி*" (நற்.29). "*பல்லா நெடுநெறிக் ககன்று வந்தென*" (குறுந்.64). "*இறையுற வோங்கிய நெறியயல் மராஅத்த*" (குறுந்.92). "*கல்லுடை நெடுநெறி போழ்ந்து சுரனறுப்ப*" (பதிற்றுப்.19:2). "*நெறிகெட விலங்கிய நீயிரிச்சுர மறிதலு மறிதிரோ வென்னுநர்ப் பெறினே*" (அகநா.8). "*யறு நீ ரம்பியி னெறிமுத லுணங்கு*" (அகநா.29). "*நாஅல் வேத நெறி திரியினும்*" (புறநா. 3). "*அறநெறி முதற்றே அரசின் கொற்றம்*" (புறநா.55). "*காம நெறிபடருங் கண்ணினார்க் கில்லையே ஏம நெறிபடரு மாறு*" (நாலடி,13). "*ஒழிந்தாரைப் போற்றி நெறிநின்மின் இற்றிதன் பண்பென்று சாற்றுங்கொல் சாலச் சிரித்து*" (நாலடி,49). "*நூனெறி மரபின் அரங்கம் அளக்குங் கோலளவு இருபத்து நால்விரலாக*" (சிலப்.3:99,100). "*குயிலுவமாக்கள் நெறிப்பட நிற்ப*" (சிலப்.3:130). "*தீநெறிப் படரா நெஞ்சினை யாகுமதி*" (மணிமே.5:29). "*பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்*" (குறள்,6).

*"நின்றிடைவிடாது நெறிசென்றுற நெருக்கி"* (கம்பரா. மந்திரப். 55).

ம., க. நெறி.

*[நெறி[1] → நெறி[5]]*

நெறி: குணம் அல்லது பண்பணிகளின் தொகுதியை நெறி அல்லது மார்க்கம் என்பர். தண்டியாசிரியர் செய்யுள் நெறி இரண்டென்று கூறுவார். அவை வைதருப்பம், கவுடம் என்பன. வைதருப்பம் = விதர்ப்பநாட்டுமொழிநடை (நெறி). கவுடம் = கவுடநாட்டு மொழிநடை. இந்நெறியை முறைமை (ரீதி) என்று வாமனகாரிகை முதலிய வடநூல்கள் கூறும்.

நெறி என்பது, சொல்லும் பொருளும் நோக்கிய தொரு வரையறை. அது செய்யுள் நடையென்று குறிப்பர். வீரசோழியமும் தண்டியலங்காரமும் வைதருப்பம், கவுடம் என்னும் இரண்டை உரைத்து, வை தருப்பத்தையே சிறந்ததாகக் கருதின. அதற்குரிய குணங்கள் பத்து.

"மெய்பெறு மரபின் விரித்தசெய் யுட்கு
வைதருப் பம்மே கௌடம் என்றாங்கு
எய்திய நெறிதாம் இருவகைப் படுமே" (தண்டி. 18) என்பது தண்டி யலங்காரம்.

மாறனலங்காரத்தார் மூன்று நெறி கொண்டார். அவை வைதருப்பம், கவுடம், பாஞ்சாலம் என்பன. வாமனரும் இம் மூன்றைக் கூறினார். வாமனருடைய காலம் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். (some aspects of literary criticism in Sanskrit, p.29).

மாறனலங்கார ஆசிரியர் 16–ஆம் நூற்றாண்டினர். ஆதலின், வாமனர் நூலைப் பின்பற்றியே மாறனலங்கார நூலாசிரியர் நெறி மூன்று வகுத்தனர் என்று கொள்ளலாம்.

தமிழ் விடு தூது நூலின் ஆசிரியர் நெறி நான்கு என்றனர். "நல்ல நெறி, நாலே விதையா". 9–ஆம் நூற்றாண்டில் வாழ்ந் திருந்த, ருத்திரர் என்ற ஆசிரியர் இயற்றிய வடமொழி அணியிலக்கணத்தில் வைதருப்பி, கௌடி, பாஞ்சாலி, இலாடீயம் என்னும் நான்கு நெறிகள் கூறப்படுகின்றன. அக்கினி புராணத்திலும் இந்நான்கு நெறிகளும் காணப்படும். போசன் இயற்றிய சரசுவதி கண்டாபரணத்தில் மேற்கூறிய நான்கு நெறி யோடு மாகதி, அவந்திகா என்ற இரண்டும் சேர்த்து ஆறாகக் கூறப்படுகின்றன.

வாமனர் இந்நெறிகளுக்கு உறுப்புகளாக இருப்பவை குண அணிகள் என்றும், அவைகளில் ஒவ்வொன்றும் சொல்லின் குணம், பொருளின் குணம் என இருவகை ஆகும் என்றும் கூறுவர். நெறிகளைப் பற்றி மாறனங்கார நூலாசிரியர், அவை ஒவ்வொரு நாட்டிலும் வழங்கும் முறைபற்றிப் பெயர் பெற்றன என்பர்.

"மன்னியபேர் யாப்பிற்கு வைதருப்பம் வான்கவுடம்,
பன்னியபாஞ் சாலம் எனப்பகுத்து – மி
ன்னிடையாய், நன்னூன் முழுதுணர்ந்தோர்
நாட்டகத்து நாட்டலுறீஇ, முன்னூலுட் கண்ட நெறி
மூன்று" (மாறனலங்.77).

உரையாசிரியர்கள் நெறியைப் பாகம் என்ற சொல்லாலும் குறிப்பர். மெல்லென்ற விழுமிய இனிய மொழியும் மெல்லென்ற விழுமிய இனிய அறம் முதலிய நாற்பொருளும் பொருந்துவன வைதருப்ப பாகம் (நெறி) என்றும், விழுமிய சொற்கடினமும் பொருட் கடினமும் தோய்ந்து அரிய நடைத்தாய்ப் புலவனாற் கூறப்படுவது கவுட பாகம் (நெறி) என்றும், மென்மையும் கடினமுமாகிய வைதருப்ப கவுடங்களோடு கூடாதே இடைநிலைப்பட்டனவாம். இனிய சொல்லாலும் பொருளாலும் தடையின்றி நடைபெற்று ஒழுகுவது பாஞ்சாலம் என்றும் கூறுவர்.

அவ்வந் நெறியாலே பாடும் கவிகளுக்கு அந்நெறியினாலே பெயர் வழங்கும். ஒட்டக் கூத்தர் கவுடப்புலவர் என்று கூறப்படுதல் காண்க. நெறிகளில் வைதருப்ப நெறியே யாவராலும் விரும்பி ஏற்றுக் கொள்ளக்கூடியது. (தமிழ்க்காப்பியங்கள், கி.வா.செ.).

**நெறி[6]** *neṟi,* பெ. (n.) **1.** சமயம் (கம்பரா. கோலங்.12); religion. **2.** சமயக் கொள்கைக் காகவோ தனி மனித ஒழுக்கத்துக்காகவோ ஏற்படுத்தப்பட்ட முறை (விதி); precept, rule, principle. *"நாஅல் வேத நெறிதிரியினும்"* (புறநா. 2). *இறுதிவரை சிவ நெறியைக் கடைப்பிடித்தார்* **3.** நல்லொழுக்கம்; path of virtue, righteousness. *நெறிதப்புவார்க்கு அறிவிப்பது வீண் (பழ.)* **4.** செய்யுணடை; style of poetic composition. *"எய்திய நெறி"* (தண்டி. 12). **5.** குலம்; line, lineage. *"மதிநெறி மாதை வேட்பான்"* (திருவாலவா. 4:24) **6.** சூழ்ச்சி (உபாயம்); method; means. *"நெறி காட்டி நீக்குதியோ"* (திவ்.இயற்.பெரியதி. 6). **7.** கோயில் (யாழ்.அக.); temple. **8.** வீடுபேறு (அக.நி.); salvation. **9.** மனநிலை (வின்.); state

of mind, temper. **10.** ஆணை, ஆளுகை; rule, sovereignty. *"குடபுல வரசர்கணெறி செய்து"* (திருவிளை. அன்னக்குழி. 20). **11.** குதிரை முதலியவற்றின்நடை; pace, as of a horse. *"நெறியைந்து மோங்க"* (திருவாலவா. 28:34). **12.** வரிசை (வின்); order, row, series. **13.** அறம், முறைமை (நீதி) (சூடா.); justice.

ம., க. நெறி.

**நெறி⁷** *neṟi,* பெ. (n.) நெறிக்கட்டி (உ.வ.); inflammation of the gland. "தென்னை மரத்தில் தேள் கொட்டினால் பனை மரத்தில் நெறி கட்டினது போல" (பழ.).

*[நெரி → நெறி. இது ர- றகரப் பிழைத்திரிபு]*

கை கால்களில் காயங்கள் உண்டானால் தொடையிடுக்கிலும், அக்குளிலும் எழும் கட்டி போன்ற அமைப்பு.

**நெறி⁸** *neṟi,* பெ. (n.) **1.** தாழ்ப்பாள் (கட்டட. நாமா.); bolt, staple. **2.** மண்டைக்குழி (வின்.); temples. **3.** புறவித ழொடிக்கை; stripping flower of its calyx. *"முழுநெறிப்பகைத் தழை"* (அகநா.156).

*[நெரி → நெறி]*

**நெறிக்கட்டி** *neṟi-k-kaṭṭi,* பெ. (n.) புண் கட்டிக்காக உடற்சந்துகளிலுண்டாகும் புடைப்பு (M.L); inflammation of the lymphatic gland.

*[நெரி → நெறி + கட்டி.]*

உடலில் உண்டாகும் புண், கட்டி போன்ற வற்றின் கரணியாமாக தோள்மடிப்பு தொடைச் சந்துகளில் உண்டாகும் கட்டி போன்ற அமைப்பு.

**நெறிக்கட்டிக்காய்ச்சல்** *neṟi-k-kaṭṭi-k-kāyccal,* பெ. (n.) புண் அல்லது கட்டி அல்லது யானைக்கால் நோய் அல்லது யானைப் பிடுக்கு நோய் காண்பதற்கு முன், இரண்டு அக்குள் அல்லது இரண்டு தொடைச்சந்திலும் கட்டி ஏற்படுவதால் உண்டாகும் காய்ச்சல்; filarial fever; fever accompanying the swelling of the lymphaglands. *நெறிக்கட்டிக் காய்ச்சலால் நேற்றுமுழுவதும் துன்பப்பட்டான்.*

*[நெறிக்கட்டி + காய்ச்சல்.]*

**நெறிக்கட்டிச்சுரம்** *neṟi-k-kaṭṭi-c-curam,* பெ. (n.) *நெறிக்கட்டிக் காய்ச்சல்* பார்க்க; see *neṟi-k-kaṭṭi-k-kāyccal.*

*[நெறி + கட்டி + சுரம்.]*

**நெறிக்கட்டிவீக்கம்** *neṟi-k-kaṭṭi-vīkkam,* பெ. (n.) **நெறிக்கட்டி** (M.L): பார்க்க; see *neṟi-k-kaṭṭi.*

*[நெரிக்கட்டி → நெறிக்கட்டி+ வீக்கம்.]*

**நெறிக்கட்டு** *neṟi-k-kaṭṭu,* பெ. (n.) **நெறிக்கட்டி** (M.L): பார்க்க; see *neṟi-k-kaṭṭi.*

*[நெரி² → நெறி + கட்டு.]*

**நெறிக்கல்** *neṟi-k-kal,* பெ. (n.) சுக்காங்கல் (யாழ்.அக.); kunkur.

*[நெறி² + கல்.]*

**நெறிக்காய்ச்சல்** *neṟi-k-kāyccal,* பெ. (n.) **நெறிக்கட்டிக்காய்ச்சல்** பார்க்க; see *neṟi-k-kaṭṭi-k-kāyccal.*

*[நெறி² + காய்ச்சல்.]*

**நெறிக்கோரை** *neṟi-k-kōrai,* பெ. (n.) *நெரிக்கோரை* (வின்.) பார்க்க; see *neri-k-kōrai.*

*[நெறி + கோரை.]*

**நெறிகட்டி** *neṟi-kaṭṭi,* பெ. (n.) *நெறிக்கட்டி* (M.L): பார்க்க; see *neṟi-k-kaṭṭi.*

*[நெறி[2] + கட்டி.]*

**நெறிகாட்டுநாதர்** *neṟi-kāṭṭu-nādar,* பெ. (n.) திருக்கூடலையாற்றூர் இறைவன்பெயர்; a god in Thirukkūḍalai-y-āṟṟūr.

*[நெறி (=வழி) + காட்டு + நாதர்]*

திருக்கூடலையாற்றூர் என்பது திருப்புறம்பயம், திருமுது குன்றம் இடையில் உள்ள ஊர். தேவாரப் பாடல் பெற்ற தலம். இங்குள்ள இறைவன் பெயர் நெறிகாட்டு நாதர் திருஞானசம்பந்தர் திருப்புறம் பியத்திலிருந்து திருமுது குன்றத்துக்குச் செல்கையில் எதிரில் மறையவர் கோலத்தில் வந்த இறைவனை அறியாது திருமுது குன்றத்துக்கு வழி கேட்க இறைவனும் *"இவ்வழி திருக்கூடலை யாற்றூருக்குச் செல்கிறது"* என்றுகூறி வழி (நெறி) காட்டித் தாமும் ஊரெல்லை வரை சென்று மறைந்தார் என்பர். இதனால் இவ்வூரில் உள்ள இறைவர்க்கு இப்பெயர் வந்தது. (சி.பெ.அ.)

**நெறிகேடன்** *neṟi-kēḍaṉ,* பெ. (n.) நெறிகெட்டவன்; the person having immoral qualities.

*[நெறி+ கேடன். கேடு → கேடன்.]*

*[நல்வழியில் வாழ்வை அமைத்துக் கொள்ளாதவன்.]*

**நெறிகேடு** *neṟi-kēḍu,* பெ. (n.) **1.** முறைகேடு (அநீதி); injustice. **2.** தீயொழுக்கம்; immorality.

*[நெறி[4] + கேடு.]*

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்" (குறள். 131.)

பெண்ணுக்குப் கற்புப் போல ஆணுக்கு ஒழுக்கம் உயிர்போல் காக்க வேண்டும். காவாவிடின் உயிர்போம்; எய்ப்பு (எய்ட்ஸ்) நோய்வருமென்று அறிக.

**நெறிசெய்—தல்** *neṟi-šey-,* 1 செ. குன்றாவி. (v.t.) **1.** நல்வழிப் படுத்துதல்; to lead in righteous path. *"நெறிசெய்தருளி... என்னை"* (திருவாச. 13:8). **2.** ஆளுதல், to reign, sway. "குடபுல வரசர்க ணெறி செய்து" (திருவிளை. அன்னக்குழி. 20)

*[நெறி[4] + செய்—தல்.]*

**நெறித்தழை** *neṟi-t-taḻai,* பெ. (n.) தழை ஆடை; leaf cloth, foliage cloth. *"கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல் அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ"* (நற். 96). *"அயவெள் ளாம்பல் அம்பகை நெறித்தழை"* (குறுந்.293).

*[நெறி+ தழை. நெறிதல்=அடர்தல், நெருங்குதல்.]*

நூலாடைக்கு முன்னர் மாந்தர்இலை, தழைகளை முறையாக முன்பின் திறவாமல் இருக்கும்படி கட்டிய ஆடை என்றுணர்க.

**நெறிதவறிநட—த்தல்** *neṟi-tavaṟi-naḍa-,* 3 செ. கு. வி. (v.i.) முறை தவறி நடத்தல்; to behave badly. *நெறி தவறி நடந்தால் வாழ்வில் முன்னேற முடியாது.*

*[நெறிதவறி + நட—த்தல்]*

வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டிய வழியில் அல்லாமல் முறைதவறிய வழியில் நடத்தல். நெறி தவறாமல் முறையான வழியில் நடப்பதால் அடையும் பயனைத் திருவள்ளுவர்

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வானுறையும், தெய்வத்துள் வைக்கப் படும்" (குறள், 50). என்று கூறுகிறார்.

**நெறிதவறிய நடத்தை** *neṟi-tavaṟiya-naḍattai,* பெ. (n.) தவறான நடத்தை; mis-conduct. செங்கோல் நெறி தவறிய நடத்தையால் நெடுஞ்செழியன் தானே இறந்தான்.

*[நெறிதவறிய+ நடத்தை. முறையற்ற ஒழுக்கத்தை மேற்கொண்டு நடத்தல்.]*

பசி, காமம் என்னும் இயற்கைப் பண்புகளுக்கு உரிய தீர்வுகளை அடையும் நடைதவறும் குறுக்குவழி, நடத்தை.

**நெறிநீர்** *neṟi-nīr,* பெ. (n.) கடல்; sea. "*நெறிநீர் வளையும் நிழனித்திலமும்*" (சீவக. 1522).

*[நெறி[1]+ நீர்.]*

உலகக்கோளத்தில் 70 விழுக்காடு பரப்பில் தேங்கியுள்ள கடல், அலையடித்தாலும் கரைகடவாது, நெறியோடு நிற்றல் காண்க. காற்றழுத்த மண்டிலத்தால் புயல் வருங்கால் நீர்கடத்தல் நெறி (விதி) விலக்கு.

**நெறிநெட்டி** *neṟi-neṭṭi,* பெ. (n.) *நெரி நெட்டி* (உ.வ.) பார்க்க; see *neri-neṭṭi.*

*[நெரிநெட்டி → நெறிநெட்டி.]*

**நெறிநெட்டிக்கோரை** *neṟi-neṭṭi-k-kōṟai,* பெ. (n.) *நெரிக்கோரை* (சங்.அக.) பார்க்க; see *neri-k-kōrai.*

*[நெறி + நெட்டிக்கோரை. கோரைவகை.]*

**நெறிப்படு-தல்** *neṟi-p-paḍu-,* 20 செ. கு. வி. (v.i.) **1.** ஒழுங்கு படுதல்; to be put in order; to be kept within bounds. "நெறிப்படச் சுவலசைஇ" (கலித்.9). "*மற்றவர் குறிப்பிற் கண்டிசின் யானே நெறிப்பட வேலும் இலங்கிலை துடைப்ப*" (நற்.177). "*நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த வெறி கமழ் கொண்ட நாற்றமுஞ் சிறிய*" (நற்.368). "*கைவள் ளோரி கானந் தீண்டி எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்*" (குறுந். 199:4). "*நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு வளை தலைமாத்த தாழ்கரும் பாசவர்*" (பதிற் 67:15). *நெறிப்பட பொருள்களை வைக்க வேண்டும்.* **2.** நல்லொழுக்கத்தில் நிலைபெறுதல்; to be established in a good moral or religious course. **3.** ஒன்றன் வழிப்படுதல்; to follow one's lead. *யாற்றுப் பெருக்கின் நெறிப்பட்ட புணை.* **4.** உள்ளடங்குதல்; to come under one's power or control.

*[நெறி + படு—தல். படுதல்=அகப்படுதல், நிலைபெறுதல், ஒழுங்காதல் இது தன்வினை.]*

**நெறிப்படுத்து-தல்** *neṟi-p-paḍuttu-,* 5 செ.கு.வி. (v.i.) வழிமுறைக்கு உட்படுத்துதல்; operate in a particular way.

*[நெறி + படுத்து—தல். இதுபிறவினை]*

**நெறிப்பிறழ்வு** *neṟi-p-piṟalvu,* பெ. (n.) கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க முறையில் இருந்து மாறுகை; delinquency.

*[நெறி + பிறழ்வு. நிற்க வேண்டிய, கடை பிடித்து நடக்க வேண்டிய முறையினின்று தவறுகை.]*

முற்காலத்தில் நெறிப்பிறழ்வு என்பது அறவழிதவறி நடக்கும் நடத்தை என்றும், அதற்குச் செய்ய வேண்டியது தண்டனை தருவது ஒன்றே என்றும் கருதப்பட்டு வந்தது. நாளடைவில் பலவகைக் கரணியங்கள் அறியப்பட்டன. இந்தக் கரணியங்களை மரபு நிலையின (Heridatary) என்றும், சூழ்நிலையின (Environmental) என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். இவை யிரண்டும் ஒன்றொடுஒன்று தொடர்புடையன. ஒன்றையொன்று மாற்றுவன.

சூழ்நிலையில் வீட்டுநிலைமை, பாட சாலையில் கற்றவை, அக்கம்பக்கத்து நிலைமை, பொருளியல் நிலைமை, கற்கும் விளையாட்டுகள், சேரும் நண்பர்கள் ஆகியவை அடங்கும்.

வறுமையும் நெறிப்பிறழ்வுக்கு ஒரு முதன்மைக் கரணியம். வறியவர் வீட்டுக் குழந்தைத் திருடவாய்ப்பிருக்கிறது.

ஆளுமை பற்றிய நெறிப்பிறழ்வு கரணியம் இருவகைப்படும். உடல்பற்றியவை; உள்ளம் பற்றியவை.

உடல்பற்றியவையின் குடிவழியில் (பாரம்பரியம்), உடற் குறைகள், சுரப்புக்களின் குறைகள் என்பன அடங்கும். இவற்றால் மட்டுமே நெறிப்பிறழ்வு உண்டாகிவிடும் என்று சொல்லிவிட முடியாது. ஆனால் நல்ல இயல்புகள் இல்லாதபோது இவை மிகுந்த முதன்மையான கரணியங்களாக ஆகிவிடுகின்றன.

உள்ளம் பற்றியவை என்பன உள்ளத்தில் உண்டாகும் முரண்பாடுகளும், அவற்றால் உருவாகும் ஆளுமைப் பண்புகளுமாம். மனிதனுக்குப் பாதுகாவல், அன்பு, மதிப்பு, போன்ற பல தேவைகள் உள்ளன. அவற்றை முழுமை செய்யாவிடில் அவை முழுமையாக வேறுவழிகளைத் தேடும்.

ஆளுமைப்பண்பும் (personality) முதன்மை யானது. ஆளுமைப்பண்பை உளவியலார் புறமுகன் (extrovert) என்றும், அகமுகன் (introvert) என்றும் இருகூறாகப் பிரிந்துள்ளனர். புறமுகன் உரத்தகுரலில் வெளிப்படையாகப்பேசி, நண்பரோடு சேர்ந்து இயங்கி, ஊரில் இன்ப நிகழ்ச்சியோ, துன்ப நிகழ்ச்சியோ நடந்தால் பங்கேற்பான். அகமுகன் இப்பண்புகளுக்கு மாறானவனாக இருப்பான். இருவரும் தம் பண்பில் வழிமாறினால் நெறிப்பிறழ்வே குடும்பத்திலும், சூழ்நிலை யிலும் ஏற்படும் குறைகளால் ஆளுமை வளர்ச்சிக்குத் தடை உண்டாகுமாயினும் நெறிப்பிறழ்வு தோன்றும்.

நெறிப்பிறழ்வைத் தடுப்பதற்குப் பெற்றோர்கள் தக்க கல்வி தருவது இன்றியமையாததாகும். எந்த வகையிலும் நெறிப்பிறழ்வு உண்டாகாமல் தடுப்பது குமுகாயத்தின் முதற் கடமையாகும். நெறிப்பிறழ்வு உண்டாவதன் கரணியத்தைக் கண்டுபிடித்து அதை நீக்குவதற்கேற்ற செயல்களைச் செய்தல் வேண்டும்.

**நெறிப்பு**[1] *ne̱rippu,* பெ. (n.) **1.** புருவத்தை வளைக்கை; knitting of the brows. *“பேரண்ட மனைத்தும் புருவச்சிறு நெறிப்பாற் குமைக்கும் பெருமான்”* (விநாயகபு. 33:13). **2.** நிமிர்ந்திருக்கை; standing erect; bristling, stiffness. **3.** செருக்குக் கொள்கை (அகங்ரிக்கை) (வின்.); insolence, haughtiness.

*[நெறி[2] → நெறிப்பு.]*

**நெறிப்பு**[2] *ne̱rippu,* பெ. (n.) **1.** சிலிர்ப்பு; sprouting. **2.** முரிப்பு; break; (சா.அக.) **3.** பெண்டிரின் மயிர் நெறிப்பு; curl and woman's hair.

*[நெறி → நெறிப்பு.]*

**நெறிபடு-தல்** *ne̱ri-paḍu-,* 20 செ. கு. வி. (v.i.) நெருங்குதல்; to be close together. *“எறிவளி கமழு நெறிபடு கூந்தல்”* (குறுந். 199). *“நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு”* (பதிற்றுப். 67:15). *“நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த”* (நற்.368).

*[நெறி[1] + படு-தல்]*

**நெறிபு** *ne̱ribu,* பெ. (n.) **நெறிப்பு**[2] பார்க்க; see *ne̱rippu. “சிறுபுறம் புதைய நெறிபு தாழ்ந் தனகொல்”* (அகநா.117:14)

*[நெறிப்பு → நெறிபு-இஃ்து இடைக்குறை]*

**நெறிபொறி** *ne̱ri-po̱ri,* பெ. (n.) முனைப்புச்செயற்பாடு; intense activity. *வேலையின் நெறிபொறி* (நெல்லை).

*[நெறி[2] + பொறி]*

**நெறிமணல்** *ne̱ri-maṇal,* பெ. (n.) **1.** கருமணல்; black sand. *“நெறி மணனேடினர் செல்லச் சொல் லேற்று”* (பரிபா.20:43) **2.** நுண்மணல்; fine sand.

*[நெறி + மணல்.]*

**நெறிமயிர்** *ne̱ri-mayir,* பெ. (n.) சிலிர்த்தமயிர்; hair standing on ends. (சா.அக.).

*[நெறி + மயிர்.]*

**நெறிமருப்பு** *ne̱ri-maruppu,* பெ. (n.) எருமை மான் முதலியவற்றின் முடங்கின கொம்பு;

curved horn. "*நெறிமருப் பெருமை*" (ஐங்குறு.91:1). "*துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு, ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்து*" (அகநா.316:2)

*[நெறி[1]+மருப்பு. மருப்பு=கொம்பு. கலைமான் என்னும் ஆண்மான் நெறிமருப்பு உடையது.]*

**நெறிமாணவையம்** *neṟi-māṇ-avaiyam,* பெ. (n.) அறத்தைத் தெளியவுணர்ந்த ஒழுக்கத்தில் சிறந்த அவைக்களம்; assembly of gracious persons. "*அறமறக் கண்ட நெறிமா ணவையத்து*" (புறநா.224)

*[நெறிமாண்+அவையம். நெறிமான் → நெறிமாண். நெறிமாண்=அறங்கூறும் அவை]*

**நெறிமாறு—தல்** *neṟi-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) வழிதப்புதல்; to lose one's way. "*நொந்து நெறிமாறி வந்த விருந்தும்*" (திரிகடு.69).

*[நெறி[4]+மாறு—. மாறுதல்=வேறுபடுதல், நீங்குதல்]*

**நெறிமான்** *neṟi-māṉ,* பெ. (n.) அறங்கூறுவோன் (நீதிமான்) (யாழ். அக.) ; person of integrity, just man. *நெறிமான் வரும்வரை கூட்டம் கலையாது காத்திருந்தது.*

*[நெறி + மான். ஆன், ஆர் போல மான், மார் ஒருமை பன்மைக்கு ஆதல் காண்க.]*

**நெறிமுதல்** *neṟi-mudal,* பெ. எ. (adj.) வழியின் கண்ணே உள்ள; way side. "*குறுநடை பலவுள் ளலமே நெறிமுதல் கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சி*" (குறுந்.209). "*நீர்மருங் கறியாது நேர்மருங் கோடி யறுநீ ரம்பியி னெறிமுத லுணங்கு*" (அகநா. 29:18). "*பரலவல் படுநீர் மாந்தித் துணையோ டிரலை நன்மா னெறிமுத லுகளும்*" (குறுந். 250:2).

*[நெறி + முதல். நெறி = வழி.]*

**நெறிமுறை** *neṟi-muṟai,* பெ. (n.) செயற்படும் போது பின்பற்றுவதற்கென வகுக்கப்பட்ட வழிமுறை; proper method. *சாலை நெறிமுறையைக் கடைப்பிடித்து வண்டியை ஓட்டவேண்டும். ஆய்வு நெறி முறைகள்.*

*[நெறி + முறை. நெறி = வழி]*

**நெறிமுறைமை** *neṟi-muṟaimai,* பெ. (n.) அறவழி (நியாயவழி) (வின்.); rules of propriety, rectitude or equity.

*[நெறி[4]+முறைமை.]*

**நெறிமை** *neṟimai,* பெ. (n.) 1. முறை (விதி); rule. "*நிதியினை.... நெறிமையால் நினைய வல்லார்*" (திவ். திருக்குறுந். 1). "*நெறிமையினான்காய் வருநிரையசையே*" (யா.கா.உறுப்.2, உரை) 2. நன்னெறி; rectitude, honesty. 3. வழக்கு; usage, literary usage. "*எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேற் பொற்புடை நெறிமை இன்மை யான*". (தொல். பொருள். 35).

*[நெறி → நெறிமை]*

**நெறியரு நீள்சுரம்** *neṟi-y-aru-nīḷ-šuram,* பெ. (n.) கடத்தற்கரிய பாலை நிலம்; desert. "*சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறும் நெறியரு நீள்சுரத்(து) அல்குவர் கொல் தோழி*" (தி. மொ. 15).

*[நெறி +அரு+நீள்சுரம். அரு=அரியதான. நீள்சுரம்=நீண்டபாலை நிலம்].*

**நெறியிலார்** *neṟiyilār,* பெ. (n.) 1. கீழ்மக்கள்; lowmen; persons inferior in status. 2. கேடர், ruined, miserable men.

*[நெறி + இலார். இல்லார் → இலார்.]*

**நெறியாணங்கை** *neṟiyāṇaṅgai,* பெ. (n.) சிறியாணங்கைச்செடி; a species of small milkwort, Polygala glabra. (சா.அக.).

*[நெறியாள் + நங்கை; சிறியாள் + நங்கை. நங்கைச்செடி].*

**நெறியாள்கை** *neṟi-y-āḷgai,* பெ. (n.) நாடகம், திரைப்படம் போன்றவற்றின் இயக்கம்; direction of a film, drama, etc.

*[நெறி +ஆள்கை. ஆள்கை = ஆட்சிச்செய்வது, ஆளுவது, இயக்குவது.]*

**நெறியாளர்** *neṟi-y-āḷar,* பெ. (n.) 1. ஆய்வு மாணவர்களுக்கு வழிகாட்டும் ஆசிரியர்; guide for one's doctorial dissertation. *முனைவர் பட்டத்திற்குச் சரியான நெறியாளர் அமையவேண்டும்.* 2. நாடக, திரைப்பட இயக்குநர்; drama, film director. *இந்த நாடகத்தின் பொருளாளரும் நெறியாளரும் ஒருவரே.*

*[நெறி → நெறியாளர்.]*

**நெறியிருங்கதுப்பு** *neṟi-y-iruṅgaduppu,* பெ. (n.) நெறிப்பினையுடைய கரிய கூந்தல்; long, flowing tresses of a woman. "*நெறியிருங் கதுப்பொடு பெருந்தோணீவி*" (குறுந். 190). "*நுண்ணறல் கடுக்கு நெறியிருங் கதுப்பினென் பேதை*" (அகநா. 35). "*நெறியிருங் கதுப்பும் நீண்ட தோளும்*" (நற். 387).

*[நெறி + இரும் + கதுப்பு. நெறி = வளைவு, சுருள். இரும் = இருண்ட, கரிய. கதுப்பு = கூந்தல், தலைமயிர்.]*

**நெறியிலார்** *neṟi-yilār,* பெ. (n.) நல்லொழுக்க மில்லாதவர் (உரி.நி.); lawless or immoral persons.

*[நெறி +இல்+ஆர். இல் –எதிர்மறை இடைநிலை. 'ஆர்'–உயர்வுப்பன்மை]*

**நெறியிலி** *neṟi-y-ili,* பெ. (n.) கெட்ட வழியில் நடப்போன்; vicious man.

*[நெறி +இலி. நெறிமுறையில்லாதவன். ஒ. நோ. அறிவு + இலி = அறிவிலி]*

**நெறியுரை** *neṟi-y-urai,* பெ. (n.) அறவுரை; motto.

*[நெறி +உரை.]*

**நெறியோன்** *neṟiyōṉ,* பெ. (n.) பெரியோன் (அக.நி); great, noble- minded man.

*[நெறி → நெறியோன்.]*

நெறியோன் இயல்பு :

"*இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்து விடல்*". (குறள், 314).
"*இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு.*" (குறள், 987).

**நெறிவிடம்** *neṟi-viḍam,* பெ. (n.) 1. கொடிய நஞ்சு; virulent poison. 2. நஞ்சற்ற நாபிக்கிழங்கு; non-poisonous aconite root- Delphinium denudatum. (சா.அக.).

*[நெறி + Skt.விடம். = த. நஞ்சு.]*

**நெறிவிலக்கல்** *neṟi-vilakkal,* பெ. (n.) வழியின் ஏதமுணர்த்தி இரவில் அவ்வழியே தலைவியிடம் வருதல் தகாதெனத் தோழி தலைவனை விலக்கும் அகத்துறை (மாறனலங். 101, உரை, பக்.148); theme in which the hero

is pointed out the danger of the way he treads during night in meeting the heroine clandestinely and is dissuaded by the maid from that course.

*[நெறி +விலக்கல். நெறி = வழி. விலக்கல் = நீக்கல், தடுத்தல்.]*

**நெறு** *neṟu,* பெ. (n.) ஓசை (அக.நி.); sound, noise.

**நெறுக்கிடல்** *neṟukkiḍal,* பெ. (n.) நெறுக்கென்று ஒடிகை (யாழ்ப்.); snapping.

*[நெறு → நெறுக்கு + இடல். நெறு = ஓசை. நெறுக்கென்று ஓசை கேட்கும்படி ஒடிதல். நெருக்கு → நெறுக்கு – பிழைவழக்கு.]*

**நெறுக்கெனல்** *neṟukkeṉal,* பெ. (n.) ஒடிதல், முறிதல் முதலியவற்றால் உண்டாம் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying snapping sound. "*கயிலையைப் பற்றிய கையுமெய்யும் நெறுக்கென்றிற*" (தேவா. 587.10).

*[நெறு → நெறுக்கு + எனல்]*

**நெறுநெறு–த்தல்** *neṟu-neṟu-,* 4 செ. கு. வி. (v.i.) 1. பல்லைக் கடித்தல்; to nash one's teeth. *அச்சமிகுதியால் நெறு நெறுவென்று பல்லைக் கடித்தான்.* 2. ஒலிபடப் பிளவுறுதல்; to snap, as a stick in breaking. *முருங்கைமரம் நெறுநெறுவென முறிந்தது.* 3. உறுமுதல்; to growl, rumble. 4. நெரிந்தொலித்தல்; to sound as the biting of a hard, brittle or crispy substance.

*[நெறு = ஓசை. நெறு + நெறு – நெறுநெறு → நெறுநெறு–த்தல்.]*

**நெறுநெறெனல்** *neṟuneṟeṉal,* பெ. (n.) 1. ஓசைக்குறிப்பு; crashing sound. "*நெறுநெ றெனக்கொடு நிலவறையிற்புக நெடியவன்*" (பாரத. கிருட்டிண. 191). 2. முறிதற் குறிப்பு; snapping or breaking sound. "*அசுர நிறைகளவை நெறுநெறென வெறிய*" (திவ்.பெரியதி 5.10:4).

*[நெறுநெறு + எனல்]*

**நெறுமு–தல்** *neṟumu-,* 5 செ. கு. வி. (v.i.) & செ.குன்றாவி. (v.t.) நெருமு–(யாழ்.அக.) பார்க்க; see *nerumu-.*

*[நறுமு → நெறுமு. நறுமு = பல்லால்கடித்தல், பல்லைக்கடித்தல்.]*

**நென்பு** *neṉbu,* பெ. (n.) 1. ஏணிப்பழு (யாழ்ப்.); rung of a ladder. 2. ஆப்பு (யாழ்.அக.); wooden pin.

*[நெம்பு = ஏணிப்பழு. நெம்பு → நென்பு]*

**நென்புடவை** *neṉ-puḍavai,* பெ. (n.) மெல்லிய ஆடைவகை; a kind of fine cloth. "*நென்புடவை பொதி ஒன்றுக்குக் காசு இருபதும்*" (தெ.க.தொ. 8, 233).

*[மென்மை + புடவை– மென்புடவை → நென்புடவை. ம → ந – திரிபு; முப்பது → நுப்பது.]*

**நென்மணி** *neṉ-maṇi,* பெ. (n.) நெல்லின் தவசம்; grain of paddy. 2. குறத்திப் பாசி (A); Job's tears. 3. அரைக் குன்றிமணி கொண்ட சிறிய எடை; goldsmith's weight = 1/2 kuṉṟimaṇi = 3/8 grain. 4. மங்கல அரிசி (அட்சதை); rice mixed with turmeric. "நென்மணி நீட்டுவாரும்" (இரகு.குறைகூறு.5).

*[நெல்+மணி. மணி=அரிசி, அரிசிமணி.]*

**நென்மா** *neṉ-mā,* பெ. (n.) அரிசிமாவு (திவா.); rice flour. "*நென்மா நீரிற் குழைத்து*" (காஞ்சிப்பு. தான்றோ. 4).

*[நெல்+மா. நெல் அரிசியை அரைத்தமாவு.]*

ஈண்டுநெல் ஆகுபெயராக அரிசியைக் குறிக்கும்.

**நென்மெலி** *neṉmeli,* பெ. (n.) திருமால் கோயிலுள்ள இடம்; (திவ்.2.9:8); a shrine of Thirumal.

**நென்னல்** *neṉṉal,* பெ. (n.) & வி.எ. (adv.) முன்னாள்; yesterday.

"*அன்னந் துணையோ டாடக் கண்டு
நென்னல் நோக்கி நின்றா ரொருவர் நென்னல்
நோக்கி நின்றா ரவர்தம் பொன்னேர் சுணங்கிற்
போவா ரல்லர்*".
(சிலப். 7, பாட். 45).

"*அம்மவாழிதோழி நென்னல் ஓங்குதிரை வெண்மணல் உடைக்கும் துறைவன்*" (ஐங்குறு. 113).

*[நெருநல் → நென்னல்.]*

ஒ.நோ. திருநின்றவூர்→தின்னனூர் – வழக்குத்திரிபு.

**நென்னேற்று** *neṉṉeṟṟu,* பெ. (n.) & வி.எ. (adv.) நென்னல் பார்க்க; see *neṉṉal.* "*காலைப் பிடிக்கா நின்ற நென்னேற்றும்*" (திவ். திருப்பா.16, வியா.158).

*[நெருநல் → நென்னல் → நென்னற்று → நென்னேற்று.]*

*[நெருநல் → நெருநற்று → நென்னேற்று → நேற்று.]*

**நே¹** *nē,* பெ. (n.) நகரமெய்யும் ஏகார உயிரும் சேர்ந்து பிறந்த உயிர்மெய்யெழுத்து; the compound of 'n' and 'ē'

*[ந் + ஏ–நே.]*

**நே²** *nē,* பெ. (n.) 1. அன்பு; love. 2. ஈரம்; compassion, mercy, grace. "*நேமி யுய்த்த நேஎ நெஞ்சிற் றவிரா வீகைக் கவுரியர் மருக*" (புறநா. 3).

*[நுள் → நெள் → நெய் → நே = அன்பு, ஈரம் (வ. மொ. வ). நுள் = இளமை, மென்மை, நட்பு]*

மொழிமூலர் தேவநேயப்பாவாணர் தமிழர் அனைவர் பெயரும் தமிழாய் இருக்கவேண்டும் என்று வலியுறுத்துவார். அவர் பிறந்தநாள் வேண்டுகோளாக இதையே வைத்துள்ளார். ஆயின் தமிழர் பெயர்கள் சமற்கிருதமாகவும் முன்னெழுத்து intial ஆங்கிலமாகவும் உள்ள வழு என்று நீங்குமோ. பாவாணரின் '*தேவநேசன்*' என்னும் இயற்பெயர் வடசொல் என்று சிலர் கூறியபோது விளக்கிய கட்டுரையில் தீ → தே + நெய் → நே(யம்) என்று விளக்கியுள்ளார்.

**நேக¹** *nēga,* வி. எ. (adv.) மிகப்பொடியாக; very minutely. '*மாவை நேகஅரைத்து வை*'. (வின்.)

*[நெகு → நேக. நெகுதல் = பொடியாதல்]*

*[நொய் → நொய்வு → நேய்வு → நேவு → நேவாக → நே(வா)க– என்று இடைக்குறையாக வந்திருக்க வாய்ப்புண்டு]*

**நேக²** *nēga,* வி.எ. (adv.) நுண்மையாக நேர்மையாக; fine state, as in grinding. நேக வரைத்தல். (சா.அக.).

*[நேக¹ → நேக²]*

நே(ரா)க என்பதன் இடைக்குறை

**நேகல்** *nēgal,* பெ. (n.) ஒருவகைப் பொடிமணல்; (G.TP.D.i. 175); fine, flinty sand.

*[நெகு → நேக → நேகல். நெகுதல் = பொடியாதல். நேக = பொடியாக. நேக → நேகல் = பொடிமணல்]*

*[நொய் → நெய் → நே(வா)கல்.]*

**நேகவரை–த்தல்** *nēga-v-ari-,* 4.செ. கு. வி. (v.i.) நன்றாகத் தூளாகும்படி அரைத்தல்; reducing to dust or fine powder when grinding, pulverising, machined into a pulp.

*[ நொய் → நோ →நே(ஆ) க +அரை–த்தல்.]*

**நேசக்குழு** *nēšakkuḻu,* பெ. (n.) ஒத்த கருத்துடைய கூட்டணி; confederacy.

*[நேயம் → நேசம் + குழு. ஒ.நோ. தோயை → தோசை]*

**நேசகன்** *nēšagaṉ,* பெ. (n.) வண்ணான் (யாழ்.அக.); washerman.

*[நேயம் → நேசம் + அகன் = நேசகன். துணியை ஈரமாக்கிவெளுப்பவன்]*

*திருமணவிழாவிற்குச் செல்வார்க்கு உரிய நாளில் கொண்டு வந்து ஆடைகளைத்தந்தால் நேயம் உண்டாகும்.*

**நேசத்தி** *nēšatti,* பெ. (n.) பேய்க்கடலை; bengal gram. (சா.அக.).

*[நேயம் → நேசம் + அத்து + இ]*

*பெருங்கடலையை வறுத்துண்ணும் போதும், அவித்து உண்ணும் போதும் சுவை வேறுபடுதலின் நேசத்துக்கு உரியதாகும்.*

**நேசநாடுகள்** *nēša-nāḍugaḷ,* பெ. (n.) உலகப் போரில் இணைந்து போராடிய இங்கிலாந்து, அமெரிக்கா, உருசியா முதலிய நாடுகள்; allied nations as opposed to axis countries.

*[நேயம் → நேசம் + நாடுகள். ஒ.நோ நெயவு → நெசவு]*

**நேசநாயனார்** *nēša-nāyaṉār,* பெ. (n.) பாராட்டிக்கூறப்பெறும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர்; one of 63cononized šaiva saints in Periyapurānam.

*[நேயன் → நேசன் + நாயனார். நாயகனார் → நாயனார்]*

*இவரின் ஊர் காம்பிலி; சாலியர் குலத்தினர்; சிவனடியார்; சிவனடி யார்களை வழிபடும் இயல்பினர் சிவனடியார்களுக்கு உடை செய்து கொடுத்துத் தொண்டு புரிந்தவர்.*

**நேசம்** *nēšam,* பெ. (n.) 1. அன்பு, இணக்கம்; love, affection, piety. "*நேசமுடைய வடியவர்கள்*" (திருவாச.9:4). கணவன் மனைவியிடம் நேசமில்லாமல் வாழ்கிறார். 2. ஆர்வம்; desire, as for learning. "*வரும் பொருளுணரு நேசமாசறு தயிலம் வாக்கி*" (இராகு. இரகுவு.38). 3. தகுதி; suitability. "*பூச்சியின் வாயினூல் பட்டென்று பூசைக்கு நேசமாகும்*" (குமரே. சத.59). 4. விருப்பம்; appetite. "*நேசமும் வைத்தனையோ*" (திருவாச. திருவெ.2)

ம. நேசம்

*[நேயம் → நேசம். நேயம் = அன்பு. ஒ.நோ. வாயகம் → வாசகம்]*

**நேசமாக்கு–தல்** *nēšam-ākku-,* 5செ.கு.வி. (v.i) ஒன்று கூடுதல்; to ally.

*[நேயம் → நேயம் + ஆக்கு–தல்.]*

**நேசமில்லாத** *nēšam-iḷḷāda,* பெ.எ (adj.) 1. அன்பில்லாத; lacking in love. *சிலர் நட்பு நேசமில்லாத நட்பு.* 2. கனிவில்லாத; affectionless.

*[நேசம் + இல்லாத.]*

*"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு"* (குறள்,788). இன்பத்திலும் துன்பத்திலும் பங்கேற்காதார் நட்பு(நேய) நேசமற்றது.

**நேசயம்** *nēšayam,* பெ. (n.) நிலப்பனை; ground palm, Curculigo orchioides.

**நேசர்** *nēšar,* பெ. (n.) *நேசன்* பார்க்க; see *nēšaṉ.* *"செய்ய சிவநேசர்தாம் வைகறையிலெழுந்து"* (சிவரக.நந்திநமனு.15)

*[நேசம் → நேசர்]*

**நேசல்** *nēšal,* பெ. (n.) பொடிமணல்; fine sand. (சா.அக.).

*[நேக → (நேகசல்) → நேசல். நேக = மிகப்பொடியாக]*

**நேசன்** *nēšaṉ,* பெ. (n.) 1. நண்பன்; friend, ally. *"நேச ரிதங்கூற"* (நள. காப்பு). 2. கடவுளடியார் (பத்தன்); votary, devotee; *"சிவநேசர்தாம் வைகறையி லெழுந்து"* (சிவரக. நந்தி. நம. 15).

*[நேயம் = அன்பு. நேயம் → நேசம் → நேசன்]*

**நேசானுசாரி** *nēšāṉušāri,* பெ. (n.) உண்மையாய் நடப்பவன்; faithful adherent. *"துறவு மார்க்கத்தி னிச்சைபோல நேசானுசாரியாய் விவகரிப்பேன்"* (தாயு. பரிபூரணா. 1)

*[நேசம் + அனுசாரி. நேயம் → நேசம்.* Skt. anu-sārin → த. அனுசாரி = பின்பற்றுபவன், அடியான்*]*

**நேசி[1]–த்தல்** *nēši-,* 4.செ. குன்றாவி. (v.t.) 1. அன்புவைத்தல்; விரும்புதல் to love. *"நேசிக்குஞ் சிந்தை"* (தாயு. உடல்பொய். 32). *"நேசித்தரு நூன் முறை"* (சேதுபு.சங்கர.84) *அனைத்து உயிர்களையும் நேசிக்க வேண்டும். அம்பிகாபதி அமராவதியை உயிருக்குயிராய் நேசித்தான்.* 2.காதலித்தல்; to love of the opposite sex. 3. ஆர்வங் கொள்ளுதல்; to affect. *"நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்"* (தாயு. பரிபூர).

*[நேசம் → நேசி → நேசி–த்தல்.]*

**நேசி[2]** *nēši,* பெ. (n.) 1. அன்புடையவள் (யாழ்.அக.), காதலி; female friend. 2. அன்பன்; friend,companion, husband, lover.

*[நேசம்+இ– நேசி. இல்லாளி–என்பதில் ஆண், பெண் குறிக்கும் ஈறாய் வந்த இகர ஈறு போன்றது இது. நேசி[2] –* love *– முன்னிலை ஏவல்]*

**நேசிப்பு** *nēšippu,* பெ. (n.) அன்பு; love.

*[நேசம் + இ + பு.]*

**நேட்டகாதுவரப்பி** *nēṭṭakāduvarappi,* பெ. (n.), இலவம்பிசின்; gum of silk cotton tree, Bombax malabarica. (சா.அக.).

*[நேட்டகாது+வரப்பி= வரு+அப்பி–வரப்பி. வரப்பி=பிசின்,மரத்திலிருந்து வந்து அப்பும் (ஒட்டும்) தன்மையுடையது]*

**நேட்டம்** *nēṭṭam,* பெ. (n.), ஈட்டியபொருள் (நாஞ்); acquired properity.

*[நேடு → நேட்டம். நேடுதல் = தேடுதல், ஈட்டுதல் (சம்பாதித்தல்)]*

**நேடன்** *nēḍaṉ,* பெ. (n.), நாவல் மரம்; jaumoon tree, Eugenia jambolina.

*[நேடு + அன். நேடுதல் = தேடுதல். பழங்களில் தேடி பறித்து உண்ணும் பழம். அன் = சொல்லாக்க ஈறு.]*

**நேடி** *nēḍi,* பெ. (n.), மூங்கில் (மலை.); bamboo.

*[நல் = துணை. நல் → நுள் → நள் → நாள் → நாளம் = உட்டுளை, உட்டுளைப் பொருள், தண்டு. நாளம் → நாளி = உட்டுளையுள்ள மூங்கில். நாளி → நாடி → நேடி = மூங்கில். (வே.க.)]*

**நேடு—தல்** *nēḍu-,* 5.செ. குன்றாவி. (v.t.), 1. தேடுதல்; to seek, look out for. *"கொண்டவனிருப்ப மற்றோர் .... வேலினானை நேடிய நெடுங்கணாளும்"* (சீவக. 252). *"நெறிமணனேடினர் செல்லச் சொல் லேற்று"* (பரிபா. 20:43). *" சினகரமொருவிப் போகுவான் வழிகணேடினேன்"* (பிரமோத்.4:11). 2. பொருளீட்டுதல் (நாஞ்.); to earn. 3. விரும்புதல் (யாழ். அக.); to desire, wish. 4. எண்ணுதல்; to consider, think, lay to heart. *"சூரபன் மனிளவறன் முடிவுநேடி"* (கந்தபு. அசுரேந். 65). 5. இலக்காகக் கொள்ளுதல் (வின்.); to aim at, pursue.

ம.நேடுக; க.நிட்டிசு; குட.நேட்.

*[நோண்டு → நேண்டு → நேடு → நேடு—தல். நோண்டுதல் = தோண்டித் தேடுதல் (வே. க). ஒ. நோ. தோண்டு → தேண்டு → தேடு → தேடு—தல்]*

**நேத்தி**[1] *nētti,* பெ. (n.), நேர்த்தி; beauty. *நேத்தியான பொருள்.* (சா.அக.).

*[நேர்த்தி → நேத்தி (பே. வ.) — இடைக்குறை]*

**நேத்தி**[2] *nētti,* பெ. (n.), துத்தம்; vitriol. (சா.அக.).

**நேத்தி**[3] *nētti,* பெ. (n.), நெற்றி; forehead.

*[நெற்றி → நெத்தி → நேத்தி. இருமடித்திரிபு.]*

**நேந்தாடுபாவை** *nēndāḍu-pāvai,* பெ. (n.), சேந்தாடுபாவை; an unknown plant šēndāḍupāvai. (சா.அக.),

*[நேர்ந்து + ஆடு + பாவை]*

**நேந்திரப்பள்ளி** *nēndirappaḷḷi,* பெ. (n.), நெல்லின் வகை (நாமதீப. 351); a kind of paddy.

*[நேந்திரப்பள்ளி என்னும் இடத்தில் சிறப்பாக விளையும் நெல்லாகலாம்]*

**நேந்திரம்** *nēndiram,* பெ. (n.), ஒருவகை வாழை; இது மேற்குக் கடற்கரைப்பகுதிகளில் விளையும்; a kind of plantain tree grown in the Western coast. Chips prepared out of it are very tasty, ripe fruits are also eaten. (சா.அக.).

ம. நேந்த்ரவாழ; து. நேந்த்ரபாரே

**நேந்துநிரவிப்போ—தல்** *nēndu-niravi-p-pō-,* 8 செ. கு. வி. (v.i.), சற்று ஏறக்குறைய இருந்தாலும் சரிக் கட்டிக் கொண்டு போதல்; to rectify, correct, redress, to adjust, indemnify, reimburse.

*[நே(ர்)ந்து + நிரவி + போ-தல்]*

மனமொத்துக் கூட இருப்பதைக் குறைவாக இருப்பதில் இட்டு சரி செய்துபோவது நேந்து நிரவிப் போதலாகும். நேந்து போதல் = குறைதல், மெலிதல். நிரவுதல் = இருப்பதிலிருந்து குறைவதற்குப் போடுதல்.

**நேபம்** *nēbam,* பெ. (n.), 1. கண்ணீர்; tears. 2. தண்ணீர்; ordinary water. (சா.அக.).

**நேபாலிகை** *nēpāligai,* பெ. (n.), ஒருவகை நஞ்சு (பாடாணம்) (மூ. அ.); a kind of poison.

**நேபாளக்கரும்பு** *nēpāḷa-k-karumbu,* பெ. (n.), நேபாள நாட்டில் விளையும் கரும்பு; sugar-cane grown in Nepal.

*[நேபாளம் + கரும்பு]*

புறநானூற்றில் ஔவையார் அதியமானைப் பற்றிப்பாடிய பாடலில் 'கரும்பிவண் தந்தும்' என்று குறிக்கின்றார். கரும்பு சீனத்திலிருந்து கொணர்ந்ததாக வரலாற்றாய்வாளர் கூறுவர். அதுநேபாளம் வழியே வந்ததால் அமைந்த பெயராகலாம்.

**நேபாளங்கொட்டை** *nēpāḷaṅ-goṭṭai,* பெ. (n.), நேர்வாளங்கொட்டை; croton seed or nut. (சா.அக.).

*[நேர்வாளம் → நேபாளம் + கொட்டை.]*

**நேபாளசம்** *nēpāḷašam,* பெ. (n.), நேபாளத்தில் கிடைக்கும் ஒரு வகைக்களிம்பேறிய செம்பு; a kind of impure copper probably found in Napal. (சா.அக.).

*[நேபாளம் + (செம்பு) → சம்]*

**நேபாளம்**[1] *nēpāḷam,* பெ. (n.), ஐம்பத்தாறு நாட்டுளொன்று; the kingdom of Nepal one of 56 tešam.

**நேபாளம்**[2] *nepāḷam,* பெ. (n.), *நேர்வாளம்* (மலை.) பார்க்க; see *nērvāḷam.*

**நேபாளம்**[3] *nēpāḷam,* பெ. (n.), சீமையாமணக்கு; Nepal castrol plant, Balios permum montana alias croton polyandrum. (சா.அக.).

சீமை ஆமணக்கு நேபாளப் பயிர்போலும்

**நேபாளவேம்பு** *nēpāḷa-vēmbu,* பெ. (n.), நேபாளத்தில் விளையும் வேப்பமரம்; margosa tree of Nepal. (சா.அக.).

*[நேபாளம் + வேம்பு]*

**நேபாளி** *nēpāḷi,* பெ. (n.), 1. நோபாள நாட்டு மக்கள்; people in Nepal. 2. இருவாட்சி; a kind of Jasmine, Jasminum sambae. (சா.அக.).

*[நேபாளம் + இ. 'இ' சொல்லாக்க ஈறு]*

**நேம்** *nēm,* பெ. (n.), அன்பு; love.

*[நேயம் → நேம். ஒ.நோ. தேயம் → தேஅம் → தேம்.]*

**நேம்பு-தல்** *nēmbu-,* 5.செ. குன்றாவி. (v.t.), கொழித்தல்(வின்.); to winnow.

**தெ.** நேமு; **ம.** நேம்புக; **கோண்.** ஏமாநா; **கூய்.** ஏம்ப; **குரு.** நாபநா.

*[நோம்பு → நேம்பு. நோம்பு-தல். தவசங்களைக் கற்களில் இருந்து கொழித்துப் பிரித்தல்]*

**நேமநாற்சுகம்** *nēmanāṟcugam,* பெ. (n.), கரும்பு அகரம் என்னும் மருந்துவகை; a bazaar drug. (சா.அக.).

**நேமி¹** *nēmi,* பெ. (n.), 1. வட்டம் (திவா.); circle. 2. தேருருளை; wheel of a chariot. *"குன்றிழி அருவியின் வெண்டேர் முடுக இளம்பிறையன்ன விளங்குசுடர் நேமி"* (குறுந். 189). *"ஆரஞ் சூழ்ந்த வாயில் வாய் நேமி யொடு"* (சிறுபாண். 253). *"வன்பால் முரம்பின் நேமி அதிர"* (நற்.394:5). 3. சக்கர ஆய்தம்; discus. *''திண்பூஞ் சுடர்நுதி நேமியஞ் செல்வர்''* (திவ். இயற். திருவிருத். 9). *"நனந்தலையுலகம் வளைஇ நேமியொடு"* (முல்லை.1). 4. செங்கோலாழி (ஆணைச் சக்கரம்); wheel of sovereignty. *"ஏம முரசம் இழுமென முழங்க நேமி உய்த்த நேஎ நெஞ்சின்''* (புறநா. 3). 5. சக்கரவாள மலைத்தொடர்; mythical range of mountains. *"நேமிமுதல் தொல்லிசையமையும் புலவராய், புரைத்த புனைநெடுங்குன்றம்"* (பரிபா. 15:3, 4). *"நேர்கொ ணெடுவரை நேமியிற்றொடுத்த"* (மலைபாடு. 238). 6. சக்கரம் போன்ற நிலவுலகம் (திவா.); earth. 7. உலகைச் சூழ்ந்தகடல் (திவா.); sea, ocean. *"நேமியிற் செல்லு நெய்க்கணிறாஅல்"* (மலைபடு. 525.) 8. விரற்செறி (பிங்.); ring. 9. சக்கரவாகப் பறவை; cakra bird. *"பொலஞ்சூட்டு நேமி வாண்முகஞ் துமிப்ப''* (குறுந். 227). 10. சக்கரப் படையுடைய திருமால்; Tirumāl, as wielding the discus. *"நேமியோ குலிசியோ நெடுங் கணிச்சியோ"* (கம்பரா. பிணிவீட் 70). 11. சமணத் தலைவர் இருபத்து நால்வருள் ஒருவர்; an Arhat, one of 24 Tirttankarar. *"நிகரி னேமிதனீணகா"* (சீவக. 912).

**நேமி²** *nēmi,* பெ. (n.), தேர்செய்யப் பயன்படும் மரவகை. இதிலிருந்து சிவப்புத் துவர்ப்புப் பிசின் எடுக்கப்படும்; chariot tree gives astringent red gum. (சா.அக.).

**நேமிச்சந்திரன்** *nēmi-c-candiran,* பெ. (n.), சமணத்தலைவர் இருபத்து நால்வரில் ஒருவர்; an Arhat, one of 24 Tirttankarar.

*[நேமி + சந்திரன்.]*

**நேமிசந்தனா** *nēmi-šandanā,* பெ. (n.), வேங்கை மரம் (மலை.); Indian kino tree.

*[நேமி + சந்தனம். சந்தனம் → சந்தனா]*

**நேமிசாரம்** *nēmi-šāram,* பெ. (n.), காந்தாரியுப்பு (சத்திசாரம்); an acrid salt. (சா.அக.).

*[நேமி + சாரம். சாரம் = உப்பு]*

**நேமிநாதம்** *nēminādam,* பெ. (n.), குணவீரபண்டிதர் இயற்றிய ஒரு தமிழ்நூல்; a treatise on Tamil grammar by Kuṉa-vīra-paṇḍidar.

*"தொல்காப்பியக் கடலிற் சொற்றீ பச்சுற்றளக்கப்*
*பல்காற் கொண்டோடும் பட வென்ப—*
*பல்கோட்டுக்*
*கோமி காமற்புலனை வெல்லுங்குணவீர*
*நேமிநாதத்தினெறி'* (நேமிநாதம்)

தமிழ் இலக்கணநூல்களில் ஒன்று. குணவீர பண்டிதர் என்னும் சமண ஆசிரியரால் நேமிநாதர் என்னும் தீர்த்தங்கரர் பெயரால் செய்யப்பெற்றது. இந்நூல் திரிபுவன தேவன் என்னும் குலோத்துங்கன் காலத்தில் செய்யப்பெற்ற தென இந்நூற் பாயிரவுரையால் அறியலாம்.

இந்நூல், தொல்காப்பியர் கூறிய எழுத்துக்கும் சொல்லுக்குமான இலக் கணத்தைச் சுருக்கிக் கூறுகிறது இதன் முதல்நூல் தொலகாப்பியம். முதல்நூலை நோக்க இது மிகச்சிறுநூலாதலின் சின்னூல் என்றும் வழங்கப்பெறுகிறது. இது வெண்பாவால் ஆனநூல்.

**நூல் அமைப்பு:** முதலில் அருகக் கடவுளை வாழ்த்தி, அவையடக்கங் கூறிய இரண்டு செய்யுட்களாற் பாயிரம் அமைந்துள்ளது. எழுத்ததிகாரம் 24 செய்யுட்களாலும், சொல்லதிகாரம் 71 செய்யுட்களாலும் அமைந்துள்ளது. எழுத்ததி காரத்தில் இயல் வரையில்லை. சொல்லதிகாரம் தொல் காப்பியத்தைப் போலவே ஒன்பதியல்களைக் கொண் டுள்ளது. தொல்காப்பிய இயல்களின் பெயர்களே சிறிய மாற்றங்களுடன் அமைந்துள்ளன.

தொல்காப்பியம் படிக்கும் முன், சின்னூலாகிய இதனைப் படிக்கும் வழக்கம் முற்காலத்தில் இருந்ததென்பது தெரிகிறது. இந்நூலுக்குப் பின்பே நன்னூல் தோன்றியது. பெயர் தெரியாத ஒருவரின் சிறந்த உரை ஒன்று இந்நூலுக்கு உள்ளது. இவ்வுரை

கருத்துரை, பொழிப்புரை, எடுத்துக்காட்டு, வினாவிடை, விளக்கம் ஆகியயாவுங் கொண்ட விருத்தியுரையாகக் கிடைக்கின்றது. இவ்வுரையில் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சீவகசிந்தாமணி, மணிமேகலை, பதினெண் கீழ்க்கணக்கு முதலிய நூல்களினின்றும் மேற்கோள்கள் வந்துள்ளன.

**நேமிநாதன்** *nēminādaṉ,* பெ. (n.) அருகதேவன் (சூடா.); Arhat.

சமணத் தலைவர்கள் (தீர்த்தங்கரர்) 24–ல் இருபத்திரண்டாமவராவர். இவரைத் துவாரகையை ஆண்ட கண்ணபிரானுக்குத் (தாயாதி மகனாரான) தமையன் முறையினர் என்பர், சமணர்கள். இவர் பெயரால் குணவீரபண்டிதர் 'நேமிநாதம்' என்னும் தமி ழிலக்கணநூல் செய்தார்.

இவருக்குத் தமிழ் நாட்டிற்பல இடங்களிற் கோயில்களிருந்தன. அவற்றுள் மயிலா(ர்)ப் பூரில் இருந்த கோயில், கடலோரத்தில் இருந்ததனாற் கடலில் மூழ்கிவிடும் என்றெண்ணி அப்புறப்படுத்தப் பெற்றது. தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள மேல்சித்தாமூரில் சமணக் கோயில் இருக்கிறது என்று தென்னார்க்காடு மாவட்ட அரசிதழில் 367 ஆம்பக்கத்தில் குறிக்கப் பட்டுள்ளது. மயிலா(ர்)ப்பூரில் நேமிநாதருக்குக் கோயிலிருந்த தென்பதைத் திருநூற்றந்தாதி, நேமி நாதர் பதிகம் என்னும் இரண்டு நூல்களும், நேமி நாதப் பாயிரவுரையும் வலியுறுத்துகின்றன.

மயிலா(ர்)ப்பூரிற் கோயில்கொண்ட நேமிநாதருக்கு மயிலைநாத ரென்னும் பெயரும் உண்டு. இப்பெயரையே நன்னூலுக்கு உரையெழுதிய மயிலைநாதரும் கொண்டிருந்தார். திருநூற்றந்தாதி பாடிய அவிரோதியாழ்வாரென்பவர் மயிலை நேமிநாதர் மேல் 'திருவெம்பாவை' ஒன்றும் எழுதியிருக்கிறார். இந்நூல் இப்போதும் மார்கழித்திங்களிற் படிக்கப் பெறுகிறது.

**நேமிப்புள்** *nēmi-p-puḷ,* பெ. (n.), சக்கரவாகப்பறவை (சூடா.); cakara bird.

*[நேமி + புள். நேமி = சக்கரம்]*

**நேமியங்கனி** *nēmiyaṅgaṉi,* பெ. (n.), திராட்சை; grapes, Vities vinifera. (சா.அக.).

*[நேமி + அம் + கனி. திராட்சை என்னும் கொடிமுந்திரிப் பழங்கள் கோளவடிவில் இருப்பதால் நேமியங்கனி எனப்பட்டது. கருஞ்சாற்றுப்பருகலைக் 'கோனா' என்பதும் தமிழாதல் இதன் வழிக் காண்க.]*

**நேமியஞ்செல்வன்** *nēmiyañ-jelvaṉ,* பெ. (n.), மன்னர்மன்னன் (சக்கரவர்த்தி); emperor. "*வையநின்னடி நிழலின் வைகி நேமியஞ் செல்வனாகி*" (சீவக. 2417).

*[நேமி = வட்டம், சக்கரப்படை, உலகம், கடல். நேமி + அம் + செல்வன். = உலகை யாளும், மன்னர்களுக்கெல்லாம் மன்னன்.]*

**நேமியம்** *nēmiyam,* பெ. (n.), நிலப்பனை; ground palm, Curculigo orchioides. (சா.அக.).

*[நேமி + அம். நேமி = நிலம், வட்டமான நிலவுலகம்]*

**நேமியான்** *nēmiyāṉ,* பெ. (n.), சக்கரப் படையையுடைய திருமால்; Visṇu, as wielding the discus. "*வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோல*" (கலித். 105).

*[நேமி → நேமியான்]*

**நேமியோர்** *nēmiyōr,* பெ. (n.), செங்கோலாழி (ஆணைச் சக்கரம்) யையுடைய அரசர்; king. "*நிலந்தவவுருட்டிய நேமியோரும்*" (புறநா. 270:3).

*[நேமி → நேமியோர். நேமி = ஆணைச் சக்கரம்.]*

**நேமியோன்** *nēmiyōṉ,* பெ. (n.), நேமியான் பார்க்க; see *nēmiyāṉ.* "*நீனிறவுருவி னேமி யோனுமென்*" (புறநா. 58:15).

*[நேமியான் → நேமியோன்]*

**நேயம்**[1] *nēyam,* பெ. (n.), **1.** அன்பு; love, affection. "*நேயத்தாய் நென்ன லென்னைப் புணர்ந்து*" (திருக்கோ. 39). "நன்னேயமுடன் பூசிப்போர்" (சிவரக.நந்திநமனு.14). **2.** இறைப்பற்று; piety, devotion. "*நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி*" (திருவாச. 1:13). **3.** நெய் (பிங்.); ghee. **4.** எண்ணெய் (பிங்.). oil. **5.** நன்மை(யாழ். அக.); good, benefit.

பிரா.நேஅம்; வ. ஸ்நேஹ.

*[நுள் → (நெள்) → நெய் → நேய் → நேயம். (வே.க.) = நெய்போல் ஒட்டும் குணமாகிய அன்பு. ஒ. நோ. பசை → பாசம் = அன்பு. நீரம் → ஈரம் = அன்பு. நெள்→ நெய் → நே → நேயம்(வ.மொ.வ.). நேயம் → நேசம் → நேசன் (மு. தா.). நுல் = இளமை, மென்மை. நுல் → நுள் → நண்பு→ நட்பு. (நுள்)→ நள் → (நய்) நய → நயத்தல் = அன்பு செய்தல்]*

வடவர்காட்டும் ஸ்நிஹ் (ஒட்டு) என்னும் மூலம், நெய் என்னும் தென்சொற்றிரிபே. snow என்னும் ஆங்கிலச் சொல் ஸ்நேஹ என்பதனோடு தொடர்புள்ள தாயின், அதற்கும் தென்சொல்லே அடிமூலமாக இருத்தல் வேண்டும். (த.ம.)

**நேயம்**[2] *nēyam,* பெ. (n.) நிலப்பனை (மலை.); a plant common in sandy situations.

*[நேமியம் → நேயம். நேமி + அம் → நேமியம். மி–இடைக்குறை. நே+(ய்) அம் –நேயம்]*

**நேயர்** *nēyar,* பெ. (n.), **1.** வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை விரும்புபவர்; radio listeners; television viewer. *நேயர்விருப்பம் கேட்டால் மனத்துக்கு ஆறுதல் கிடைக்கும். "வணக்கம் நேயர்களே" என்று கூறிவிட்டு நிகழ்ச்சியைத் தொடங்கினார் அறிவிப்பாளர்.* **2.** தாளிகை (பத்திரிகை) களை விரும் பிப்படிப்பவர்; reader of magazine.

*[நேயம்[1] → நேயர்]*

**நேயவை** *nēyavai,* பெ. (n.), இடுதிரை (அக. நி.); curtain.

*[நெய் → நேயவை. நெய் = நெய்தல்]*

**நேயா** *nēyā,* பெ. (n.), **1.** நேயமரம்; a kind of tree. **2.** பெருமருந்து கொடிவகை; Indian birth wort, Aristolochia indica. (சா.அக)

**நேர்**[1]**–தல்** *nēr-,* 2.செ. கு. வி. (v.i.), **1.** பொருந்துதல்; to be fit or appropriate. "*நேரத் தோன்று மெழுத்தின் சாரியை*" (தொல். எழுத்து. 134). **2.** நிரம்புதல்; to be complete. "*நேரத் தோன்றும் பலரறி சொல்லே*" (தொல். சொல். 7). **3.** இவ்வாறு செய்யவேண்டும் என்ற நோக்கமில்லாமல் நிகழ்தல்; to happen, occur, transpire. *இது காலத்தால் நேர்ந்தது. கோவில் திருவிழாவில் கலவரம் ஏற்படாமல் இருக்க வலுத்தகாவல் போடப்பட்டுள்ளது. அழைப்பிதழ் அச்சிடுவதில் ஒரு சிறு தவறு நேர்ந்துவிட்டது.* **4.** எதிர்ப்படுதல்; to appear, come to view. "*பொழிலோவொன்று நேர்ந்ததுவே*" (வெங்கைக்கோ. 321). **5.** இளைத்துப்போதல்; to grow thin, lean; to be emaciated. *உடம்பு நேர்ந்துபோய் விட்டது.* **6.** மென்மையாதல்; to be soft; to yield to the touch. "*ஐந்து நேர்ந்தே*" (காசிக. சிவ. அக். 18).

குட. நேர் (to come to view.).

*[நுல்(பொருந்தல்) → நுள் → நிள் → நிர் → நெர் → நேர் → நேர்–தல்]*

**நேர்**[2]**–தல்** *nēr-,* 2.செ. குன்றாவி. (v.t.), **1.** எதிர்தல்; to meet. "*வேந்தன்றனை நேர்ந்து காண்பானா*" (இரகு. தசரதன். 21). **2.** நெருங்குதல்; to approach, come near to. "*வெங்கரி.... வீரவாகுத் தலைவனை நேர்ந்து சொல்லும்*" (கந்தபு. தருமகோப. 71). **3.** தீண்டுதல்; to seize, take hold of.

"குழலித்திங்கட் கோணேர்ந்தாங்கு" (பெரும்பாண். 384). 4. பெறுதல்; to obtain. "நிலையிலா நீர்மை யாக்க நேர்ந்துழி" (சேதுபு.திருநாட்.21). 5. கொடுத்தல்; to grant, bestow. "கரவாளை நேர்ந்தானிடம் போலும்" (தேவா. 111, 8). 6. உடன்படுதல்; to agree, consent. "அழும்பில் வேளுரைப்ப நிறையருந்தானை வேந்தனு நேர்ந்து" (சிலப். 25:178). "நெருப்பிலா விடத்துப்புகையிலை யெனனோர" (மணிமே.29:102) "மகிழ்வுணாங்கவை நேரார" (கூர்ம.அரியய.8) 7. ஒத்தல்; to resemble, equal."கைவலிளையர் நேர்கை நிரப்ப" (பதிற்றுப் 48:8). "நெல்லினேரே வெண்கலுப்பென" (அகநா 140:7). "கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற் கலக்குண்டு" (திருவாச. 5: 27). 8. உறுதிசெய்தல்; to resolve, vow, take vow. "நற்றார்கலவே மென நேர்ந்தும்" (பு. வெ. 12, பெண்பாற். 7). 9. அமர்த்துதல் (நியமித்தல்) (வின்); to appoint, designate, appropriate, assign. 10. தண்டனைக்குட்படுத்துதல் (வின்.); to consign, doom. 11. வேண்டுதல் (அக. நி.); to entreat, pray. 12. சொல்லுதல்; to say; to speak. "சீர்ச்சடகோபன் நேர்தலாயிரத்து" (திவ். திருவாய். 1.8:11). 13. கடவுளிடம் வேண்டுதலுக்காக (பிரார்த்தனைக்காக) வைத்தல்; பொருத்தனை பண்ணுதல்; to appropriate, as an offering to God; to consecrate, dedicate. "தடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவி வைத்தேன்" (திவ். நாய்ச். 9:6). "செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளை" (கலித்.101:27). பழனிக்குத் காவடி எடுக்க நேர்ந்து கொண்டான் (உ. வ.). 14. எதிர்த்தல்; to oppose, resist, encounter, attack. "அமர்கோள் நேரிகந்து ஆர்எயில் கடக்கும் பெரும்பல் யானைக்குட்டுவன்" (பதிற்றுப். 29:13, 14). "தானையை நேர்ந்து கொன்று" (கம்பரா. மூலபல. 57). 15. அறுத்தல்; to cut off, sever. "ஓராதான் பொன்முடி யொன்பதோ டொன்றையும் நேரா" (திவ். பெரியாழ். 3. 9: 10).

க. நேர்; ம. நேருக; கோத. நெர் (opposite), நேர் (to come to view); து. நெரியுநி, நெரெவுநி (to assemble); தெ. நேர்சு (to learn).

[நுல்(பொருந்தல்) → நுள் → நிள் → நிர் → நெர் → நேர் → நேர்–தல்]

**நேர்³–த்தல்** *nēr-,* 4.செ. குன்றாவி. (v.t.), 1. ஒத்தல்; to resemble, equal. "திண்ணறி வாளரை நேர்ப்பார் யார்" (நாலடி, 27). "கைவலிளையர் நேர்கை நிரப்ப" (பதிற்றுப். 48:8). "நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த" (சிலப். 7:8). "பொன்னே ரனையாய் புகுந்தது கேளாய்" (மணிமே. 2:16) 2. எதிர்த்தல்; to oppose, attack. "நேர்த் தின்னா மற்றவர் செய்தக்கால்" (நாலடி, 67).

[நேர்² → நேர்³–. இது பிறவினை வடிவம்.]

**நேர்⁴** *nēr,* பெ. (n.), செய்ய, செய்யும்படி ஆகிய வடிவங்களின்பின் ஒருசெயல் நிகழ்ந்தது தற்செயலாக அல்லது சூழ்நிலையின் கரணியமாக என்பதை உணர்த்தும் துணை வினை; after the infinitive or future relative participle (paḍi) used to express the sense of 'happen to' 'be forced to'. *அஞ்சல் வந்ததால் உடனே புறப்பட்டு வரநேர்ந்தது. வழியில் அவரைப் பார்க்கும்படி நேர்ந்தது.*

[நேர்¹ → நேர்⁴]

**நேர்⁵** *nēr,* பெ. (n.), 1. வளைவு அல்லது விலகல் எதுவும் இல்லாதது, செவ்வை; straightness, directness. *நேர்வகிடு; நேராக நில். நேரா நோன்பு சீர் ஆகாது* (பழ.). "முழங்குகட றந்த விளங்குகதிர் முத்தம் அரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளை" (மதுரைக். 315,316). "நேர்சீர் சுருக்கிக்காய கலப்பையிரீ" (மலைபடு. 13). "ஒண்ணுதல் மகளிர் ஓங்கு கழிக்குற்ற கண்நேர் ஒப்பின்

*கமழ்நறு நெய்தல்"* (நற். 283). 2. அறம் (நீதி); rightness, justness, impartiality. *அவன் நேர்பட நடவாதவன். நேர்படஒழுகு* (பழ.). *"புரையில் நுண்ணோர் எல்வளை நெகிழ்த் தோன்குன்றத்து"* (நற்.236). 3. நல்லொழுக்கம்; morality, virtue, honesty. 4. திருந்திய தன்மை; refinement, nicety. *"நேரிழையாய்"* (திருவாச. 7:2). 5. மாறுபாடு (யாப். வி. 57:222); opposition. 6. உடன்பாடு (திவா.); agreement, consent, settlement. 7. *நேர்விடை* பார்க்க; see *nēr-viḍai.* *"சுட்டு மறைநேர்"* (நன். 386). 8. நிலைப்பாடு (யாப். வி. 58, உரை); firmness. 9. முன்; front. 10. உயிர் அல்லது உயிர் மெய் தனித்த நேரசை (தொல். பொருள். 315); a metrical syllable consisting of a short or long letter, singly or followed by a consonant. *"குறிலே நெடிலே குறிலிணை குறினெடில் ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி நேரும் நிரையும் என்றிசின் பெயரே"* (தொல். பொருள். செய். 3). *"குறிலே நெடிலே குறலிணை குறிலிணையேனைக் குறினெடிலே நெறியே வரினு நிரைந்தொற் றடுப்பினும் நேர்நிரை யென்றறிவே"* (யா. கா. 5)

ம. நேர்; க. நேர்; குட. நேரீ (truth, fact); து. நேரே.

*[நேர்¹ → நேர்⁵]*

**நேர்⁶** *nēr,* பெ. (n.), 1. நீளம்(சூடா.); length, extension. 2. பொருந்திய வரிசை (வின்.); row, series, regularity. 3. பாதி(திவா.); half, moiety. 4. நுண்மை; minuteness, smallness, fineness, slenderness. *"துடிகொ ணேரிடையாள்"* (திருவாச. 29:5). 5. செலவு (கதி) (வின்.); tendency, course, direction. 6. ஊர்த்துவநிலை; verticality. *"நேரவிரும் புண்டரர்க் கருள்வான்"* (அஷ்டப். திருவேங்கடத்தந். 6). 7. தனிமை (திவா.); solitariness, solitude. 8. நிகர்; equal. *பாவேந்தர் தமிழை உயிருக்கு நேர் என்று கூறினார். "நெல்லி னேரே வெண்கலுப்பென"* (அகநா. 140:7). *"நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால் மற்றது தாரித் திருத்தல் தகுதி"* (நாலடி, 72). *"கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களைகட்டதனொடு நேர்"* (குறள், 550). 9. நேரடி; direct. இஃது என் நேர் விருப்பம்.

ம, க. நேர்; தெ. நேரு; து. நேரெ.

*[நேர்¹ → நேர்⁶]*

**நேர்⁷** *nēr,* பெ. (n.), 1. கொடை (சூடா.); gift. 2. மிகுதி (திவா.); excess, excessiveness. 3. வலிமை; strength. *"நேர் மரப்பலகையும்"* (சீவக. 2218). 4. உவமை; comparison, similarity. *"தன்னே ரில்லோன்"* (திருவாச. 3:30). *"தன்னேரில்லாத சிவன்றனை"* (சிவரக.நந்திகேசுரநமனுக்கு.14). 5. மென்மை; soft. *"பிணங்குநேர் ஐம்பாலோர் பெண்கொண்டதுவே"* (சிலப். 7:13). *"நேரிமலர் நிறைசுனை உறையுஞ்"* (அகநா. 198:16).

*[நேர்¹ → நேர்⁷]*

**நேர்⁸** *nēr,* பெ. (n.), திருச்சுற்று; manner. *"இந்நேரிலே தந்தம் பிள்ளைகள் தாய்மார் பக்கலிலே அழுது சென்றால் தரிப்பார்களோ"* (திவ். பெரியாழ். 2.2:3 வியா. பக். 253)

*[நேர்¹ → நேர்⁸]*

**நேர்க்கச்சாங்காத்து** *nērkkccāṅgāttu,* பெ. (n.), நேர் தென்திசையிலிருந்து வடதிசை நோக்கி வீசும் கடற்காற்று (மீனவ.); a kind of wind blowing south to north. (க. ப. அ.)

*[நேர்¹+ கச்சான் + காத்து. காற்று → காத்து; கச்சான் = கடற்கரை.]*

**நேர்கட்டி** *nēr-kaṭṭi,* பெ. (n.), ஒருவகை மணப்பொருள்; a kind of frankincense. *'நேர்கட்டி செந்தே னிரியாசங் கற்பூரம், ஆர மகிலுறுப்போ ராறு'* (சீவக. 534. உரை).

*[நேர்[1] + கட்டி. கட்டி = இறுகிய மணப் பொருள்]*

**நேர்கட்டு-தல்** *nēr-kaṭṭu-,* 5.செ. குன்றாவி. (v.t.), சரிகட்டுதல் (யாழ். அக.); to settle amicably. *எடைகுறைந்ததற்கு வேறு பொருள்களைப் போட்டு நேர்கட்டினான்.*

*[நேர் + கட்டு-தல்.]*

**நேர்கட்டை** *nēr+kaṭṭai,* பெ. (n.), நெட்டி; solah pith. (சா.அக.).

**நேர்கடன்[1]** *nēr-kaḍaṉ,* பெ. (n.), *நேர்த்திக் கடன்* (யாழ். அகு.) பார்க்க; see *nērtti-k-kaḍaṉ.*

*[நேர் + கடன் -நேர்கடன் = இறைவனுக்கு நேர்ந்து கொள்ளும் வேண்டு தலை வினைத்தொகை வடிவம்]*

**நேர்கடன்[2]** *ner-kaḍaṉ,* பெ. (n.), நேரில் வட்டிகேட்டு வாங்கும் கடன்; a kind of debt.

*[நேர் + கடன்.]*

சிலர்சிறுவட்டிக்குவாங்கிப் பெருவட்டிக்குக் கொடுப்பர். ஆதலால் அவ்வாறான சுற்றுக்கடன் அன்றி வட்டி குறைத்து வாங்கும் நேர்கடனை இது குறிக்கும். வேற்றுமைத் தொகை வடிவம்.

**நேர்காட்டு[1]-தல்** *nēr-kāṭṭu-,* 5.செ. குன்றாவி. (v.t.), 1. எதிர்த்தல்; to face, look forward. 2. ஒரு திசையை நோக்கிச் செலுத்துதல்; to aim at, direct towards. 3. வரிசையாக வைத்தல்; to put or lay down in a straight or direct posture. 4. முன் காட்டுதல்; to expose, as to beasts of prey. 5. நீர்க்கால் மாற்றுதல்; to lead the water in a channel for irrigation. 6. ஏர் நடத்துதல்; to lead a team at ploughing.

*[நேர் + காட்டு-தல் .நேர் = வரிசை]*

முகத்துக்கு எதிர்முகமாகப் பேசுவது எதிர்த்தலாகவும், ஒருதிசையில் வரிசையாகப் போவது ஏற்றலாகவும் அமைதல் காண்க.

**நேர்காட்டு[2]-தல்** *nēr-kāṭṭu-,* 5.செ. குன்றாவி. (v.t.), 1. கொல்லுதல்; to kill, murder. 2. மரம் முதலியவற்றைச் சரியாகப் பிளத்தற்கு வெட்டிக்காட்டுதல்; to make the first gash or cleft down a tree for splitting. 3. இறக்குந் தறுவாயில் இருத்தல்; to lay out a person about to breathe his last. 4. விழுங்குதல்; to swallow.

*[நேர் + காட்டு- தல்.]*

கொலைக்காகக் குத்துவாளைப் பகைவன் உடம்பில் செலுத்தும்போது மேல் நோக்கியோ கீழ்நோக்கியோ நேரே இழுத்தல் அறிக.

**நேர்காட்டு[3]-தல்** *nēr-kāṭṭu-,* 5.செ. கு. வி. (v.i.), நீட்டிநிமிர்ந்து படுத்தல் (வின்.); to stretch oneself at length in lying down to sleep.

*[நேர் + காட்டு-தல்.]*

**நேர்காணல்** *nēr-kāṇal,* பெ. (n.), நேர்முகத்தேர்வு; interview.

*[நேர்[1] + காணல்.]*

அஞ்சலில் வந்தவிண்ணப்பம் கண்டு ஆளைக்குறித்த நாளில் வருவித்து சான்றிதழ்களும் சொற்கள் ஊன்றிதழ் களும் கொண்டு மனத்திறம் காணும் தேர்வு.

**நேர்காற்று** *nēr-kāṟṟu,* பெ. (n.), பயனுள்ள (உதவியான) காற்று (வின்.); favourable wind.

*[நேர் + காற்று]*

**நேர்கூட்டல்** *nēr-kūṭṭal,* பெ. (n.), சமன் சேர்க்கை; adding equal quantity. (சா. அக.)

*[நேர் + கூட்டல். கூட்டல் = கூடுகை, இணைகை.]*

நேர்க்கூட்டல் என ஒற்று மிகுந்தும், மிகாமலும் உறழ்ச்சி (விகற்பம்) ஆகவரும்.

**நேர்கூறு** *nēr-kūṟu,* பெ. (n.), சரிபாகம்(வின்.); equal shares.

*[நேர் + கூறு. கூறு = பங்கு.]*

**நேர்கொடுநேரே** *nēr-koḍu-nērē,* கு. வி. எ. (adv.), வெளிப்படையாக; directly, openly. *"அதுதான் நேர் கொடுநேரே கிடையாமையாலே நேர்கொடு நேரே சொல்லவும் மாட்டாரே"* (ஈடு, 1.7:3)

*[நேர் + கொ(ண்)டுநேரே]*

**நேர்கொண்டகாத்து** *nēr-koṇḍa-kāttu,* பெ. (n.), நேர்கிழக்குத் திசையிலிருந்து மேற்குத்திசை நோக்கி வீசுங்காற்று (மீனவ.); a kind of wind blowing east to west.

*[நேர் + கொண்டல் + காத்து. கொண்டல் = கிழக்கு. காற்று → காத்து]*

குணக்கு என்னும் கிழக்குத்திசையில் இருந்து வீசும் காற்று கொண்டல் எனப்படும். ஒ.நோ.தென்திசைக்காற்று தென்றல்.

**நேர்கோடு** *nēr-kōḍu,* பெ. (n.), வளையாத கோடு; straight line.

*[நேர் + கோடு.கோடு = வரி(line)]*

**நேர்கோடைக்காத்து** *nēr-kōḍai-k-kāttu,* பெ. (n.), நேர்மேற்குத் திசையிலிருந்து கிழக்குத் திசை நோக்கி வீசுங்காற்று (மீனவ.); a kind of wind blowing west to east.

*[நேர் + கோடை + காத்து. காற்று → காத்து]*

குடகு திசை என்னும் மேற்குத் திசையிலிருந்து வீசும் காற்று கோடைக் காற்று எனப்படும். ஒ.நோ. வடக்குத் திசையிலிருந்துவீசும் காற்று வாடைக் காற்று என்று அழைக்கப்படும்.

**நேர்கோணக்கருவி** *nēr-kōṇa-k-karuvi,* பெ. (n.), மூலை மட்டப்பலகை (பாண்டி.); mason's rule.

*[நேர் + கோணம் + கருவி]*



**நேர் கோணம்** *nēr-kōṇam,* பெ. (n.), ஒன்றுக்கொன்று செங்குத்தான கோடுகளின் இடையேயுள்ள கோணம் (பாண்டி.); right angle.

*[நேர் + கோணம். கோணம் = மூலை]*

**நேர்ச்சி**[1] *nērcci,* பெ. (n.) **1.** போக்கு (வின்.); tendency, direction. **2.** தகுதி (வின்.); adaptation, fitness, appropriateness. **3.** உடன்பாடு (சம்மதம்) (வின்.); consent, agreement, harmony. **4.** கடவுளுக்கு வேண்டிக்கொள்கை (பிரதிக்கினை) (வின்.);

vow. 5. நட்பு; friendliness, amity, love. *"கொடை பகை நேர்ச்சி"* (நன். 298). 6. சிறப்பு; excellence, elegance. 7. நிகழ்ச்சி; event, function.

*[நேர்¹ + ச் + சி. 'சி' தொ.பெ.ஈறு.]*

**†நேர்ச்சி²** *nērcci,* பெ. (n.), கருதிச் செய்யப்படாத செயல்; accident.

*[நேர் + ச் + சி. 'சி' தொ.பெ.ஈறு. எதிர்பாராது நிகழும் செயல் நேரிடி, ஊறு, இடமோதல் என்ற வேறு பெயர்களும் உண்டு. விபத்து என்னும் சமற்கிருதச் சொல்லுக்குப் பாவாணர் படைத்த சொல் 'நேர்ச்சி' என்பதாகும்.]*

**நேர்ச்சிக்கடன்** *nērcci-k-kaḍaṉ,* பெ. (n.), *நேர்த்திக்கடன்* (வின்.) பார்க்க; see *nertti-k-kaḍaṉ*. *நேர்ச்சிக்கடன் ஒன்று மிச்சமிருக்கிறது; உடனே செய்து விட வேண்டும்.*

*[நேர்த்தி → நேர்ச்சி + கடன். ஒ.நோ. பிய்த்து எடுத்தல் → பிச்சுயெடுத்தல்.]*

**நேர்ச்சிக்கடா** *nērcci-k-kaḍā,* பெ. (n.), வேண்டுதலுக்கென நேர்ந்து விட்ட ஆட்டுக்கடா. (நாஞ்.); ram; intended as a vow-offering to a deity.

*[நேர்த்தி → நேர்ச்சி + கடா.கடு + ஆ – கடா. கடுத்தல் = விரைவாக ஓடுதல் கடா = விரைவாக ஓடும்கடா.]*



**நேர்ச்சை** *nērccai,* பெ. (n.), *நேர்த்திக்கடன்* (நாஞ்.) பார்க்க; see *nērtti-k-kaḍaṉ*. கோயிலுக்கு நேர்ச்சை செய்யப் போக வேண்டும்

*[நேர்ச்சி → நேர்ச்சை]*

**நேர்சீர்** *nēr-šīr,* பெ. (n.) 1. ஒழுங்கு (யாழ்ப்.); due order, proper condition, propriety. 2. மனவொற்றுமை (யாழ்ப்.); amitableness. 3. தகுதிக்கேற்ப நடக்கை; adaptability. **நேர்சீராகப் போக வேண்டும்.**

*[நேர்+ சீர். சீர் = அழகு, நன்மை, தலைமை, புகழ், மதிப்பு, இயல்பு, நேர்மை, ஒழுங்கு.]*

**நேர்சொல்(லு)–தல்** *nēr-šol(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) ஆணை (சத்தியம்) கூறுதல்; to promise.

*[நேர்+ சொல்(லு)–தல். ]*

**நேர்சோழகம்** *nēr-šoḻagam,* பெ. (n.) நேராக வீசுந்தென்றற்காற்று (வின்.); wind direct from the south.

*[நேர்+ சோழகம் .சோழகம் = தென்றிசையில் இருந்து வீசுங்காற்று. ]*

தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை ஆகிய மாவட்டங்களாகிய சோழநாட்டிலிருந்து தொண்டை நாட்டுக்கு வீசும் காற்று தெற்குக் காற்றென்னும் தென்றல்.
திசை கூறாமல் நாடு கூறும் வழக்கும் உண்டு. ஆற்றுவெள்ளம் நாளைவரத் தோற்றுதேகுறி–மலையாள மின்னல் ஈழ மின்னல் சூழமின்னுதே (முக்கூடற்).

**நேர்ஞ்சங்கிலி** *nēr-ñ-jaṅgili,* பெ. (n.) கழுத்திலணியும், வேலைப்பாடுடன் கூடிய தொடரி (சங்கிலி) (சிலப். 6: 99, உரை); a necklace of exquisite workmanship

*[நேர்+ சங்கிலி. = நேர்ஞ்சங்கிலி. ஒ.நோ. புளி + சோறு = புளிஞ்சோறு. ]*

**நேர்த்தம்** *nērttam,* பெ. (n.) **1.** நட்பு; friendship. **2.** உடன்பாடு; agreement.

*[நேர் → நேர்த்தம். (வே.க.).]*

*[நேர்த்து + அம். ]*

**நேர்த்தரவு** *nēr-t-taravu,* பெ. (n.) செய்த குற்றத்தைப் பொறுத்தோம் என்று நேரிற் கூறும் ஆணை; pardon granted by one's master in person. *"பொறுத்தோ மென்று நேர்த்தரவு கொடுத்தபின்பு"* (ஈடு, 5. 4: 5). *"அபராதத்துக்கு நேர்த்தரவு கொடுக்கும் முறுவலிறே"* (திவ். திருநெடுந். 18, வியா. 142)

*[நேர்+ தரவு. தரவு = தருகை, ஆணை. தரவு என்னும் சொல் கலிப்பாவின் முதல் உறுப்புக்குப் பெயராக இருந்து இக்கால் முனைவர் ஆய்வேடுகளில் (new arraivals) தரவு என்னும் பொருளில் புதிய வரவுகள் குறிக்கப்படுகின்றன.]*

**நேர்த்தி** *nērtti,* பெ. (n.) **1.** சிறப்பு; excellence, elegance. *'பாடின கவியின் நேர்த்தி இது'* (ஈடு, **3. 9: 4**). *அவர் கதை சொல்லும் நேர்த்தி சிறந்தது.* **2.** திருத்தமுள்ளது; that which is correct, equitable or just. **3.** *நேர்த்திக்கடன்* பார்க்க; see *nērtti-k-kaḍaṉ.* **4.** முயற்சி; effort, labour. *'பெறுகிறபேற்றின் கனத்தையும் இவனுடைய நேர்த்தியில் அல்பதையையும் பார்த்து'* (ஈடு, **3. 3: 6**). **5.** பொருத்தனை, கடனுக்கு நேர்ந்துகொள்கை; vow. **6.** நேரான நிலை; straight. **7.** திருந்திய நிலை; correctness, perfectness.

*[நேர் → நேர்த்தி = ஒன்றின் தோற்றத்தில், அமைப்பில், செயலில் வெளிப்படும் சீர், ஒழுங்கு, அழகு முதலியவை வாய்ந்த சிறப்பான தன்மை. ]*

**நேர்த்திக்கடன்** *nērtti-k-kaḍaṉ,* பெ. (n.) **1.** கடவுளிடம் நேர்ந்து கொள்ளும் வேண்டுகோள்; vow made to a deity. *நேர்த்திக்கடனை நிறைவேற்றுவதாக வேண்டிக் கொண்டார்.* **2.** தெய்வத்திடம் வேண்டுகோளுக்காக வைத்த பொருள்; offering in fulfilment of a vow. *கோயிலுக்குச் சென்று நேர்த்திக்கடனை முடிக்க வேண்டும்.*

*[நேர்த்தி + கடன். கடம் → கடன்.]*

கடவுளுக்கு வேண்டிக் கொள்வதை "நேர்ந்து கொள்ளுதல்" என்று சொல்வார்கள். அந்த வேண்டுகோளை முடிக்கும் வரை அதை ஒரு கடனாகவே நினைப்பார்கள். திடுதிப்பென்று, நோய்வாய் பட்டுச் சாகும் தறுவாயில் கூடத்தன் மக்களிடம் *"இன்ன கோயிலுக்கு இன்னது செய்வதாக நேர்ந்து கொண்டிருக்கிறேன். அந்த நேர்த்திக்கடனைச் செய்து விடுங்கள்"* என்று கூறுவார்கள். நேர்த்திக்குமுன் ஒட்டாக, செய்நேர்த்தி என்றுவரும் போது கலைத்திறனையும், சீர்செய்ந் நேர்த்தி (சீர்செனத்தி) என்பது மணமான மகளுக்குத் தந்தைதரும் வேலைப்பாடு மிக்க பொருள்களையும் குறிக்கும்.

**நேர்த்திக்குறிப்பு** *nērtti-k-kuṟippu,* பெ. (n.) செயல்தவறாமை; unfailing.

*[நேர்த்தி = சிறப்பு, நேருதல். நேர்த்தி + குறிப்பு ]*

**நேர்தப்பு-தல்** *nēr-tappu-,* 5 செ.கு.வி. (v.i.) நேர்மை தவறுதல்; to deviate from the path of justice or righteousness. *நடுவர் நேர்தப்பிப் பேசியதால் அவன் வாழ்வு அழிந்தது.*

*[நேர் + தப்பு - தல் நேர் = நேர்மை, முறைமை]*

**நேர்தரவு** *nēr-taravu,* பெ. (n.) *நேர்த்தரவு* பார்க்க; see *nēr-t-taravu. "தம் பொறையாகிற நேர்தரவை"* (ஈடு, **1.4:7**).

*[நேர்த்தரவு → நேர்தரவு ]*

**நேர்தவம்** *nēr-tavam,* பெ. (n.) வாய்க்காற் சடைச்சி; a kind of pith plant found near channels. (சா.அக.).

*[நேர் + தவம். தவம் = காடு, வயற்காடு, வயற்காடுகளில் (வாய்க்கால்) காணப்படும் செடி. ]*

வளர்ச்சிக்கு நீண்டநாள் எடுத்துக் கொண்டு, ஒற்றைக்காலால் நிற்றல்போல் தோன்றுவதால் செடி, தவப்பெயர் பெறுகிறது.

**நேர்திறம்** *nēr-tiram,* பெ. (n.) *நோதிறம்* (அக.நி.) பார்க்க; see *nōdiram.*

*[நோதிறம் → நேர்திறம் ]*

**நேர்ந்தபடி** *nērnda-padi,* கு.வி.எ. (adv.) **1.** தொடர்பின்றி; at random. **2.** விரும்பியபடி; at pleasure. **3.** முன்னறிவின்றி; rashly, thoughtlessly, heedlessly.

*[நேர் → நேர்ந்த + படி. படி = தன்மை]*

நேர்ந்தபடி நிகழ்வதில் தொடர்பின்றியும், விரும்பியபடியும், முன்னறிவின்றியும் நடத்தல் காணலாம்.

**நேர்ந்தபாடு** *nērnda-pādu,* கு.வி.எ. (adv.) நேர்ந்தபடி,1 பார்க்க, (யாழ்ப்.) see *nērnda-padi,*1.

*[நேர் → நேர்ந்த + பாடு. பாடு = நிலைமை, முறைமை, நுகர்ச்சி ]*

**நேர்ந்தபார்** *nērnda-pār,* கு.வி.எ. (adv.) **நேர்ந்தபடி,1** பார்க்க (யாழ்ப்.); see *nērnda-padi,*1.

*[நேர்ந்தபடி → நேர்ந்தபார். ]*

**நேர்ந்தபோக்கு** *nērnda-pōkku,* பெ. (n.) விடாப்பிடி (பிடிவாதம்) (வின்.); rashness, precipitancy.

*[நேர் → நேர்ந்த + போக்கு. போக்கு = வழி, நடை. ]*

**நேர்ந்தவாக்கில்** *nērnda-vākkil,* வி. எ. (adv.) தொடர்பின்றி; at random. **2.** விருப்பப்படி; at pleasure.

*[நேர் → நேர்ந்த + வாக்கில். வகு → வாகு → வாக்கில் ]*

**நேர்ந்தவாக்கு** *nērnda-vākku,* பெ. (n.) நேர்ந்த போக்கு (வின்.); rashness.

*[நேர் → நேர்ந்த + வாக்கு. வகு → வாக்கு = ஒழுங்கு ]*

**நேர்ந்தார்** *nērndār,* பெ. (n.) நண்பர் (பிங்.); friends.

*[நேர்[5] → நேர்ந்தார் ]*

உறவினர் சார்ந்தாராகவும் நண்பர் நேர்ந்தாராகவும் அமைதல் காண்க.

**நேர்ந்துகட்டு—தல்** *nērndu-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வேண்டுதலுக்காகக் காப்புக் கட்டுதல்; to make a vow and tie a thread in token of it on the thing vowed. *கையில் நூலைத் தெய்வத்துக்கு நேர்ந்து கட்டிக் கொண்டான்.*

*[நேர் → நேர்ந்து + கட்டு—தல்.]*

**நேர்ந்துகொள்(ளு)—தல்** *nērndu-koḷ-,* 16 செ. குன்றாவி. (v.t.) கடவுளிடம் வேண்டுதல் செய்து கொள்ளுதல்; to take vow. *தலைவலி நின்றால் மொட்டை போடுவதாக நேர்ந்து கொண்டான். வயிற்று வலி குணமானால் கடவுளுக்கு ஆடு வெட்டுவதாக நேர்ந்து கொண்டான்.*

*[நேர் → நேர்ந்து + கொள்(ளு)—தல்.]*

நேர்ந்து கொள்ளுதல் = விரும்பிய செயல் நடந்தால் கடவுளுக்குக் காணிக்கையாக இன்னதைச் செய்வேன் என்று கூறி வேண்டிக் கொள்ளுதல்.

**நேர்ந்துபோ–தல்** *nērndu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. நிகழ்தல் (சம்பவித்தல்); to happen. *கல்லூரிக்கு அருகிலே வீடு நேர்ந்து போச்சு. அவன் மாட்டு வண்டியில் வருவதும் இவன் நடந்து வருவதும் ஒரே நேரத்தில் நேர்ந்து போயின.* 2. மெலிதல் (வின்.); to grow thin, wither, as a limb.

*[நேர் → நேர்ந்து + போ–தல்.]*

**நேர்ந்துவிடு[1]–தல்** *nērndu-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) தெய்வத்துக்கு வேண்டுதல் செய்வதற்காக விலங்கு முதலியவற்றைக் கோயிலுக்கு விடுதல்; to offer or consecrate to a deity by a vow, as an animal. *கோயிலுக்கு நேர்ந்துவிட்ட கடா இது.*

*[நேர் → நேர்ந்து + விடு–தல்.]*

**நேர்ந்துவிடு[2]–தல்** *nērndu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மெலிதல்; to grow thin, wither, as a limb. நோயால் உடல் நேர்ந்து போயிற்று.

*[நேர் → நேர்ந்து + விடு–தல்.]*

**நேர்ந்துவை–த்தல்** *nērndu-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) **நேர்ந்து விடுதல்** பார்க்க; see *nērndu-viḍu-. கடவுளுக்குப் படையலிடத் தேங்காயை நேர்ந்து வைத்தான்.*

*[நேர் → நேர்ந்து + வை–த்தல்.]*

**நேர்நஞ்சு** *nēr-nañju,* பெ. (n.) கன்மத மென்னும் மருந்துச் சரக்கு (சங்.அக.); rock alum.

**நேர்நிர–த்தல்** *nēr-nira,* 3 செ.கு.வி. (v.i.) சமமாய் நிற்றல்; to stand equal. *"குன்றொடு நேர்நிரந்து"* (பரிபா. 18:5)

*[நேர் + நிர–த்தல். நிரத்தல் = நிரலாக நிற்றல்.]*

**நேர்நில்–தல் (நேர்நிற்றல்)** *nēr-nil-,* 14 செ.கு.வி. (v.i.) 1. எதிர்நிற்றல், முன்னால் நிற்றல்; to stand directly opposite or in front. *'ஆறு கிண்ணக மெடுத்தால் நேர்நின்ற மரங்கள் பறியுண்டுபோய்க் கடலிலே புகும்'* (ஈடு, 1.1:1 அவ.) 2. ஒழுங்காய் நிற்றல்; to stand in a line.

*[நேர் + நில்–தல். நில்–தல் = நிற்றல்]*

**நேர்நிலைவஞ்சி** *nēr-nilai-vañji,* பெ. (n.) சமநிலை வஞ்சி (தொல். பொருள். செய்.41); a kind of *vañji* stanza.

மறுவ. சமநிலை வஞ்சி

*[நேர் + நிலைவஞ்சி. இரண்டு சீர்களை உடையதாய், ஒவ்வொருசீரும் ஆறு எழுத்துகள் கொண்டதாய் வருவது நேர்நிலை வஞ்சி. "நேர்நிலை வஞ்சிக்கு ஆறும் ஆகும்" (தொல்.பொருள்.செய்.41)] எ–டு: "மலைப்பொழிந்தநீர் கடற் பரப்பவும்" (பட்டினப்.127)*

**நேர்நிறை** *nēr-niṟai,* பெ. (n.) 1. சமமான சுமை (சரிபாரம்); equal weight. 2. அறம், முறைமை; impartiality, justice. 3. கற்பு; chastity.

*[நேர் + நிறை]*

**நேர்நெட்டி** *nēr-neṭṭi,* பெ. (n.) பூடுவகை (சங்.அக.); a plant.

*[நேர் + நெட்டி. நேராக வளரும் பூடுவகை]*

**நேர்ப்பம்** *nērppam,* பெ. (n.) 1. இயற்கை மூலம் (பிரகிருதி) (ஈடு, 8.1:6); primordial matter. 2. திறமை (சாமர்த்தியம்); skill, ability. *"சுழற்றிய நேர்ப்பம் இருந்தபடி'* (திவ். இயற். திருவிருத். 51, வியா.).

*[நேர்[1] → நேர்ப்பு + அம்.]*

**நேர்ப்பிசின்** *nērppiśiṉ,* பெ. (n.) ஒருவகை அரத்தைச் செடி (M.M. 94); false, zedoary, Koempferia rotunda.

*[நேர் + பிசின்.]*

நேர்ப்பிசின்: பூவின் மணம், அழகு இவைகளுக்காகத் தோட்டங்களில் பயிர் செய்யப்படும் செடி. இதன் இலைகள் பெரியன. வேர் உட்டுளையுள்ளது. பூக்கள் நெருக்கமாக இருக்கும்; வெண்மையும் ஊதாவும் கலந்த நிறம், மேழ (சித்திரை) மாதத்தில் பூக்கும். இதன் வேர் இஞ்சியின் மணத்தையுடையது. இச்செடியை அரைத்துப் புண்ணுக்குத் தடவ வீக்கங் குறையும், புண் ஆறும். (சா.அக.).

**நேர்நில்–தல் (நேர்நிற்றல்)** *nērppu,* பெ. (n.) *நேர்த்தி* பார்க்க; see *nērtti.*

*[நேர்[1] → நேர்ப்பு]*

**நேர்ப்பு[2]** *nērppu,* பெ. (n.) ஒத்தது (பரிபா.); similarity. (த.சொ.அக.)

*[(நிகர்) → நேர் → நேர்ப்பு.]*

**நேர்பசை** *nērpaśai,* பெ. (n.) குற்றுகர முற்றுகரங்களோடு இயைந்து வரும் நேரசை (தொல். பொருள். செய்.4, உரை.); nēr-aśai with 'u' or shortened 'u' added at its end.

*[நேர்[1] → நேர்பு + அசை]*

நேர்பு, நிரைபு என்று தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டவை பிற்காலத்தில் காசு, பிறப்பு ஆயின.

எ.டு.

“*சிறப்பொடு பூசனை செல்லாது; வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு*” (குறள்,18). ஈண்டு– நேர் + நேர். குற்றுகரத்தால் அமைந்த நேர்பசை.

“*இறந்த வெகுளியின் தீதே; சிறந்த உவகை மகிழ்ச்சியின் சோர்வு*” (குறள்,531). சோர்வு– நேர் + நேர். முற்றுகரத்தால் அமைந்த நேர்பசை.

**நேர்படல்** *nērpaḍal,* தொ.பெ. (vbl.n.) **நேர்படு–தல்** பார்க்க. see *nēr-paḍu-.*

*[நேர் + படல்.]*

அல்லீற்றுத்தொழிற்பெயர்

**நேர்படு[1]–தல்** *nēr-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. சந்தித்தல் (வின்.); to meet; to be in conjunction with, as planets. 2. நன்கு கற்றல், பயிலுதல்; to learn well. “*இவை பத்தும் நேர்பட்டார்*” (திவ். திருவாய். 8.9:11). 3. உடன் படல்; to agree, assent. 4. கிடைத்தல்; to be obtained. “*இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டாலென*” (திருவிளை. விருத்த.14)

*[நேர் + படு–தல். படுதல் = தோன்றுதல், சந்தித்தல். தல்லீற்றுத்தொழிற்பெயர்.]*

**நேர்படு[2]–தல்** *nēr-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. நிகழ்தல் (சம்பவித்தல்); to occur. 2. ஏற்புடையதாதல்; to be appropriate, worthy. 3. வாய்த்தல்; to fall in one's way. “*கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டு*” (திருவாச. 40.9). 4. காணப்படுதல்; to appear. “*நேர்பட்ட நிரை மூவுலகுக்கும்*” (திவ். திருவாய். 8.9:11). 5. எதிர்ப்படுதல்; to come in front, meet. “*வஞ்சி நேர்பட்ட காலையில்*” (தனிப்பா. 1, 146:46). 6. நட்பாதல் (வின்.); to be in harmony or on good terms. 7. ஒழுங்குபடுதல்; to be in order. “*ஒன்றொ டொன்று நேர்படாம லோடு நாய்கள்*” (பெரியபு. கண்ணப். 69).

*[நேர் + படு–தல். படுதல் = நிகழ்தல், தோன்றுதல். இது தன் வினைவடிவம்.]*

**நேர்படுத்து–தல்** *nēr-paḍuttu-,* பெ. (n.) 1 **நேர்பிடி–த்தல்,** (உ.வ) பார்க்க; see *nēr-piḍi.,* *வீட்டுக்கு வந்ததும் பொருள்களை நேர்படுத்தவே நேரம் சரியாயிருந்தது.* 2. நலம் பெறச் செய்தல் (சுகப்படுத்துதல்); to cure,

remedy. 3. **நேர்பண்ணு–தல்** பார்க்க; see *nēr-paṇṇu-.*

*[நேர் + படுத்து – தல். இச்சொல் பிற வினை வடிவம்.]*

**நேர்பண்ணு[1]–தல்** *nēr-paṇṇu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. ஒழுங்குபடுத்துதல்; to make even. *வீட்டுப் பொருள்களை நேர்பண்ணி வைக்க வேண்டும்.* 2. ஒன்றுபடுத்துதல்; to reconcile, unite.

*[நேர்[1] + பண்ணு – தல். பண்ணுதல் = செய்தல்.]*

**நேர்பண்ணு[2]–தல்** *nēr-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) ஆணையிடுதல்; to take oath, swear.

*[நேர் + பண்ணு – தல். பண்ணுதல் = செய்தல், ஆணையிடுதல்]*

**நேர்பாடு** *nēr-pāḍu,* பெ. (n.) 1. தற்செயலான நிகழ்ச்சி; chance occurrence. *'காட்டகத்து விழுப்பொருள் எடுத்துக் கொண்டாற் போன்ற தொரு நேர்பாடன்று'* (புறநா. 70, உரை). 2. வழிவகை (உபாயம்); means, method. *"தங்கணிடந்தப்பிற் காணுநேர்பா டெண்ணு வார்"* (பெரியபு. கண்ணப். 182). 3. உடன்பாடு, இயைபு (வின்.); consent, compliance. 4. முறைமை, அறம் (நீதி); justice. *"கோணே நேர்பாடாயிருந்தான்"* (பாரத. சூது. 227). 5. நீளம் (திவா.); length. 6. *நேர்த்திக்கடன்* (இ.வ.) பார்க்க; *nērtti-k-kaḍaṉ.*

*[நேர் + பாடு. பாடு = நிகழ்ச்சி, முறைமை]*

**நேர்பாடுசீர்பாடு** *nērpāḍu-šīrpāḍu,* பெ. (n.) *நேர்சீர்* (இ.வ.) பார்க்க; see *nēr-šīr.*

*[நேர்பாடு + சீர்பாடு. சீர்பாடு = மேம்பாடு]*

**நேர்பாடுசொற்பாடு** *nēr-pāḍu-šoṟ-pāḍu,* பெ. (n.) வாய்ச்சொல்பலிக்கை (வின்.); accidental fulfilment of words or predictions spoken at randon.

*[நேர்பாடு + சொற்பாடு. சொற்பாடு = உடன்படிக்கை]*

சொற்பாடு நேர்பாடு – முன்பின்னாக நின்றுபொருள்தருகிறது.

**நேர்பிடி[1]–த்தல்** *nēr-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நேர்வழி செலுத்துதல்; to lead through a straight course. 2. முடிவுக்குக் கொண்டுவருதல்; to bring to a successful issue, as an untoward business. 3. சரிப்படுத்துதல்; to mend, rectify, to adjust; to accomplish properly. 4. அமைதிப் படுத்துதல்; to reconcile; to bring to an agreement, as contending parties.

*[நேர் + பிடி – த்தல். பிடித்தல் = வயப் படுத்துதல், அகப்படுத்துதல், மேற்கொள் ளுதல்.]*

**நேர்பிடி[2]–த்தல்** *nēr-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நலமாதல் (சுகமாதல்); to be cured, as a disease. *உடம்பு நோயிலிருந்து நேர்பிடிக்க நாளாகும்.* 2. சாதல்; to terminate by death.

*[நேர் + பிடி – த்தல். பிடித்தல் = அடங்குதல், செலவாதல், நலமாதல்]*

**நேர்பு** *nērpu,* பெ. (n.) 1. *நேர்பசை* பார்க்க; see *nēr-pašai.* *"நேர்புநிரைபு மாகுமென்ப"* (தொல்.பொருள். செய்.4). 2. நீளம் (சூடா.); length. 3. எழுச்சி (சது.); rising. 4. சந்திப்பு (வின்.); meeting. 5. நிகழ்ச்சி (வின்.); occurence, happening. 6. போக்கு (வின்.); tendency, course.

*[நேர்[1] → நேர்பு.]*

**நேர்போ–தல்** *nēr-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. இணங்குதல்; to yield, agree. 2. குணமாதல்; to be cured. 3. சரியாய்ப் போதல்; to become all right.

*[நேர் + போ–தல். போதல் = செல்லுதல், நீங்குதல்]*

**நேர்ம்புணை** *nēr-m-puṇai,* பெ. (n.) மெல்லிய தெப்பம்; light raft. "*நீரணிமாடவாவி நேர்ம்புணை நிறைத்து*" (சீவக. 2654).

*[நேர் + ம் + புணை. புணை = தெப்பம், மரக்கலம், மூங்கில்]*

**நேர்மாறு** *nēr-māṟu,* பெ. (n.) சொல்லுவதற்கு முற்றும் எதிரானது; just opposite. *குணத்தில் அவன் மனைவி அவனுக்கு நேர்மாறு. நான் சொல்லுவதற்கு நேர்மாறாக எதையாவது சொல்லாதே. எதிர்பார்த்தலுக்கு நேர்மாறாக உன் செயல் அமைகிறது.*

*[நேர் + மாறு]*

**நேர்முகத்தேர்வு** *nēr-muga-t-tērvu,* பெ. (n.) வேலைக்கோ, படிப்புக்கோ விண்ணப்பம் செய்தவரின் தகுதியை வாய்மொழியாகக் கேள்விகள் கேட்டு அறியும் தேர்வு; interview. *முதல்வகுப்புச் சான்றிதழ்கள் கொண்டு சென்றாலும் நேர்முகத் தேர்வில் தோற்றுவிட்டான்.*

*[நேர்முகம் + தேர்வு]*

**நேர்முகம்** *nēr-mugam,* பெ. (n.) 1. எதிர்முகம் (யாழ்.அக.); front. 2. ஒருவரை நேரடியாகச் சந்தித்து நிகழ்த்தும் (பேட்டி) தேர்வு; interview. *பெயர்பெற்ற எழுத்தாளரின் நேர்முகப் பேட்டியை இன்று தொலைக்காட்சியில் ஒலி பரப்புகின்றனர்.* 3. நேருக்கு நேர் நிகழ்த்துவது; நேரடி கண்காணிப்பில் இயங்குவது; direct; face to face. *அவரை நேர்முகமாகப் பார்த்து விட்டால் எல்லாம் சரியாகிவிடும். தீவிரவாதிகள் நேர்முகமாகப் போரிட மாட்டார்கள்.* 4. உடன்பாடு; agreement, assent.

*[நேர் + முகம் . முகத்துக்கு நேர் பேசுவது]*

**நேர்முகவர்ணனை** *nēr-muga-varṇaṇai,* பெ. (n.) விழா, விளையாட்டு போன்ற வற்றினை நேரிடையாகப் பார்த்து வானொலி, தொலைக்காட்சியில் உடனுக்குடன் தருகின்ற விளக்கம்; live, running commentary.

*[நேர்முகம் + வர்ணனை. வண்ணனை → வர்ணனை.]*

பண்பின் கூறுகள் நான்கென்று இலக்கண நூல்கள் கூறும். வண்ணம், வடிவம், தன்மை, அளவு. இவற்றுள் 'வண்ணத்தின்' என்றுதொல்காப்பியநூற்பா கையாண்ட பழஞ்சொல் இடைக்காலத்தில் 'வர்ண' என்று வடமொழியாளரால் கையாளப் பட்டது. அண்ணா(மலை) → அர்ணா. (அருணா – சலம் என்பது போல).

**நேர்முகவரி** *nēr-muga-vari,* பெ. (n.) சொத்துவரி, வருமானவரி போன்றவற்றைத் தனியாள் அல்லது ஒரு அமைப்பு போன்றவை நேரிடையாகச் செலுத்திட வேண்டியவரி; direct tax.

*[நேர்முகம் + வரி.]*

அரசு வணிகரிடம் பெறுவது நேர்முக வரி. வணிகர் மக்களிடம் பெறுவது மறைமுகவரி.

**நேர்முகவுதவியாளர்** *nēr-muga-v-udaviyāḷar,* பெ. (n.) அமைச்சர், மேலதிகாரி போன்றோருக்கு நிகழ்வுகளை வரிசைப் படுத்துதல், பார்வையாளர்கள் சந்திப்பை முறைப்படுத்துதல்போன்ற பணிகளைச் செய்திடும் உதவியாளர்; personel assistant to a minister, a higher officer, etc.

*[நேர்முகம் + உதவி+ஆளர்.]*

**நேர்முட்டுச்செடிச்சி** *nēr-muṭṭu-c-ceḍicci,* பெ. (n.) பேய்த்தும்மை; bitter laucas. (சா.அக.).

*[நேர் + முட்டு + செடி + சி.]*

**நேர்மை**[1] *nērmai,* பெ. (n.) 1. செம்மை; straightness, directness. "*முக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு போதிப்பதாச்சு*" (தாயு.சுகவா.9). 2. உண்மை (வின்.); faith fulness, fidelity, honesty. **இந்தச் செயலில் அவன் நேர்மையாய் நடந்து கொண்டான்.** 3. முறைமை (நீதி); impartiality; justness, propriety. 4. அறம்; morality, virtue. 5.நுண்மை (ஐங்குறு.அரும்.); fineness, thinness, minuteness. 6. திருத்தம் (வின்.); accuracy, exactness, correctness. 7. சமம் (சீவக.835); equality; uniformity. 8. இசைவு (யாழ்.அக.); harmony, agreement. 9. நன்னிலை; good condition. **அந்தக் குடும்பம் நேர்மையோடு இருக்கிறது.** 10. இணக்கம்; friendship, familiarity. *அவனுக்குமிவனுக்கும் நேர்மையில்லை.*

*[நேர்[1] → நேர்மை. தன் நலத்துக்காக பொய் சொல்லுதல், ஏமாற்றுதல் போன்ற முறைகளைக் கையாளாத உண்மை நிலை; உண்மையைச் சொல்லி வெளிப்படையாக நடந்துகொள்ளும் தன்மை.]*

**நேர்மை**[2] *nērmai,* பெ. (n.) நிகழ்வு, நிகழ்ச்சி (சம்பவம்); occurence. "*இதுகண் டிந்நேர்மை புதிதென்றதிசயித்தான்*" (மகாராசாதுறவு,111).

*[நேர் → நேர்வு → நேர்மை]*

**நேர்வழி** *nēr-vaḻi,* பெ. (n.) 1. ஓரிடத்தைச் சென்றடையும் நேரான பாதை; straight road, direct course. 2. நல்லொழுக்கம்; upright conduct.

*[நேர் + வழி.]*

**நேர்வளம்** *nēr-vaḷam,* பெ. (n.) 1. செவ்வழி யாழ்த்திறம்; a secondary melody-type of *mullai* class. 2. பாலையாழ்த்திறம்; secondary melody-type of *pālai* class.

*[நேர் + வளம். வளம் = செழுமை, செல்வம், பயன்.]*

**நேர்வளாந்தான்** *nēr-vaḷāndāṉ,* பெ. (n.) சுக்கு; dried ginger. (சா.அக.).

**நேர்வா—தல்(நேர்வருதல்)** *nēr-vā-,* 18 செ.கு.வி (v.i.) & 15 செ.குன்றாவி. (v.t.) ஒத்துவருதல்; to resemble. "*கலிநீர் தில்லைவானவ னோர்வருமே*" (திருக்கோ.85).

*[நேர் + வா—தல். வா—தல் = வருதல்]*

**நேர்வாக்கில்** *nēr-vākkil,* பெ. (n.) 1. நேராக; straight. *நேர்வாக்கில் வகிடெடுத்து சீவு.* 2. நேராகப் பார்த்தபடி; frontal view. *நேர்வாக்கில் எடுத்தபடம். நேர்வாக்கில் படுத்துக்கொள்.*

*[நேர் + வாகு + இல் – நேர்வாக்கில்.]*

**நேர்வாடைக்காத்து** *nēr-vāḍai-k-kāttu,* பெ. (n.) நேர்வடதிசையிலிருந்து தென்திசை நோக்கி வீசும்காற்று(மீனவ.); a kind of wind blowing North to South

*[நேர் + வாடை + (காற்று →) காத்து.]*

**நேர்வாய்க்கட்டளை** *nēr-vāy-k-kaṭṭaḷai,* பெ. (n.) மாளிகையின் மேல் மாடத்திலுள்ள பலகணி; window in an upper storey,as of a palace. "*தென்வளிதரூஉ நேர்வாய்க் கட்டளை திரியாது*" (நெடுநல்.62).

*[நேர் + வாய் + கட்டளை]*



**நேர்வாளஎண்ணெய்** *nērvāḷa-eṇṇey,* பெ. (n.) நேர்வாளப்பருப்பினின்று வடிக்கும் எண்ணெய்; croton oil extracted from croton seeds.

*[நேர்வாளம் + எண்ணெய்.]*

இவ்எண்ணெய் சிறுநீரை அதிகமாக உண்டாக்கப்பயன்படுகிறது. கழிச்சலை உண்டாக்கும். தோலைச்சிவப்பாக்கி எரிச்சலைத் தரும். இவ்எண்ணெய் குடற்சிக்கல், பாண்டு, தோல் நோய், கீல்மூட்டுவலி, நரம்பிழுப்பு, நீர்க்கோவை, உடல்வலி இவைகளுக்கு மருந்தாகிறது. இவ்வெண்ணெய்யைத் தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெய் போன்றவற்றுடன் கலந்தே பயன்படுத்த வேண்டும். தனியே தடவினால் எரிச்சல், கொப்புளம் உண்டாகும். (சா.அக.).

**நேர்வாளக்கொட்டை** *nēr-vāḷa-k-koṭṭai,* பெ. (n.) நேர்வாளப்பருப்பின் கொட்டை; croton seed or nut (சா.அக.).

*[நேர் + வாளம் + கொட்டை]*

**நேர்வாளபூசுதைலம்** *nērvāḷa-pūšu-tailam,* பெ. (n.) மேற்பூச்சு மருந்தாகப் பயன்படும் நேர்வாள எண்ணெய்; oil extracted from croton seed. it is used as liniment. (சா.அக.).

*[நேர்வாளம் + பூசு + Skt. தைலம். பூச்சு → பூசு]*

**நேர்வாளம்** *nērvāḷam,* பெ. (n.) **1.** சிறுமரவகை (பதார்த்த.1063); true croton oil plant, Croton tiglium. **2. நேர்வாளமரம்;** பார்க்க; see *nērvāḷa-maram.*

ம.நேர்வாளம்; க.நேபாள; தெ.நேபாளமு.

*[நேபாளம் → நேர்வாளம். நேபாளத்திலிருந்து வந்த மரம்]*

**நேர்வாளமரம்** *nērvāḷa-maram,* பெ. (n.) நேர்வாளக் கொட்டை தரும் ஒரு சிறிய மரவகை; croton seed plant-Croton tiglium.

**மறுவ.** வாளம், நேபாளம்

*[நேர்வாளம் + மரம்.]*

இதன்கிளைகள் பக்கவாட்டில் பரவியதாகக் காணப்படும். இலைகள் மாறிமாறி அண்டவடிவாயும், கோணங்கள் வாய்ந்தும், வழவழப்பாயுமிருக்கும். இதன் கொழுந்து மொசுமொசுப்பாயிருக்கும். இம்மரத்தின் பூவில் ஆண்பூ மேலாகவும் பெண்பூ கீழாகவும் இருக்கும். விதையின் வெளிப்பக்கம்ஓடு அமைந்திருக்கும். இதன் பூக்கள் மஞ்சளாகவும் சிறியதாகவும் இருக்கும். மேழ (சித்திரை) மாதம், ஆடவை (வைகாசி) மாதங்களில் பூக்கும். இதன் விதை, இலை முதலியவை மருந்தாகப் பயன்படுகின்றன. இது நேபாளத்தில் இருந்து மிகுதியாக வருவதால் நேபாளம் → நேர்வாளம் எனப்பெயர் பெற்றது. (சா.அக.).

இரட்டைவிதையிலைப் பயிர். இலையுதிராச் சிறுமரம். இது வங்காளம், அசாம், தென்னிந்தியா, மியான்மர்(பர்மா), இலங்கை மலேயா தீவுகள் ஆகிய



இடங்களில் வளருகிறது. இதன் விதை, ஆமணக்கு விதை போலிருக்கும். கொட்டைக்குள் இருக்கும் முளைசூழ் தசைச் செம்பழுப்பு நிறமானது. இதிலிருந்து எடுக்கும் எண்ணெய், மிகக் கொடிய கழிச்சல் மருந்து. இம்மருந்தை அதிகமாகக்கொடுத்தால் இறப்பு ஏற்படும். இந்த எண்ணெய் பழுப்பு அல்லது வெளுப்பான மஞ்சள் நிறமாக இருப்பதுடன் ஒருவகை நாற்றமுடனும் இருக்கும். பெரும்பாலும் இக்காலத்தில் இதனை மனிதர்களுக்குக் கழிச்சல் மருந்தாகப் பயன்படுத்துவதில்லை. கால் நடைகளுக்கே மிகுதியும் பயன் படுத்தப்படுகிறது.

**நேர்வாளமுத்து** *nērvāḷa-muttu,* பெ. (n.) நேர்வாளவிதை; true croton seeds.

*[நேர்வாளம் + முத்து. முத்து = விதை. ஒ.நோ. ஆமணக்குக் கொட்டை முத்து எண்ணெய்.]*

**நேர்வான்** *nērvāṉ,* பெ. (n.) பதினான்காம் விண்மீன், நெய்ம்மீன் (சித்திரை) (பிங்.252); the 14th nakāṣtra.

**நேர்வானிகம்** *nērvāṉigam,* பெ. (n.) புரசமரம்; battle of plassey tree,Butea frondosa. (சா.அக.).

**நேர்விடை** *nēr-viḍai,* பெ. (n.) **1.** உடன்பாட்டை நேரே குறிக்கும் விடை (நன். 386,உரை); affirmative answer. **2.** நேராகச் சொல்லும் விடை; direct, straight answer.

*[நேர் + விடை.]*

**நேர்வு** *nērvu,* பெ. (n.) **1.** நிகழ்ச்சி (வின்.); happening. **2.** உடன்பாடு (யாழ்.அக.); consent. **3.** கொடுக்கை; giving. "*நாள் நாகம் நாறும் நனைகுழலாள் நல்கித்தன் பூணாகம் நேர்வளவும் போக்காது*" (தி.மா.16). **4.** வேண்டுகை (வின்.); soliciting. **5.** எதிர்கை; opposing. "*வஞ்ச னிராமனை நேர்வுறா*" (கம்பரா.இராவணன் வதை.183). **6.** பொருகை (வின்.); fighting. **7.** சரிந்து விழுகை (யாழ்.அக.); dropping.

*[நேர்[1]→ நேர்வு.]*

**நேர** *nēra,* இடை. (part.) ஓர் உவமவுருபு; a particle of comparison, "*போல மறுப்ப ஒப்பக் காய்த்த நேர வியர்ப்ப நளிய நந்த என்று*" (தொல்.பொருள். உவம.16).

*[நிகர → நேர. நேர்[1]→நேர.]*

**நேரக்களி** *nērakkaḷi,* பெ. (n.) நௌரக்களி பார்க்க; see *naurakkaḷi.* (சா.அக.).

**நேரக்குலம்** *nēra-k-kulam,* பெ. (n.) நேர காலம், 2,3 (நெல்லை) பார்க்க; see *nēra-kālam,*2,3.

*[நேரம் + குலம். காலம்→ கலம் → குலம்]*

**நேரகாலம்** *nēra-kālam,* பெ. (n.) **1.** ஏற்றகாலம்; right time, suitable time. **2.** பிறப்பியத்தின் (சாதகத்தின்) படி கெடுதியான காலம் (யாழ்ப்.); dangerous or critical time, as determined from one's horoscope. **3.** ஊழ் (விதி) காலம் (வின்.); special time when fate exercises its influence, commonly evil. **4.** தற்காலம் (யாழ்.அக.); present time.

*[நேரம்[1]+ காலம்]*

**நேரங்கடத்து—தல்** *nēraṅ-gaḍattu-,* 5செ.கு.வி. (v.i.) **1.** காலம் போக்குதல் (வின்.); to while away one's time. *தூங்குவது போல் நடித்து நேரங்கடத்திக்கொண்டிருக்கிறான்.* **2.** வேலையில் மந்தமாயிருத்தல் (உ.வ.); to be

slow in work. *மதுரை வந்தியின் கூலியாளாக வந்த சொக்கேசர் வேலை செய்யாமல் நேரங்கடத்திக்கொண்டிருந்தார்.*

*[நேரம் + கடத்து-தல். கடத்துதல் = போக்குதல், செலுத்துதல், குழப்புதல் ]*

**நேரங்காட்டி** *nēraṅ-gāṭṭi,* பெ. (n.) சூரியகாந்திச் செடி; sunflower plant-Helianthus indicus. (சா.அக.).

*[நேரம் + காட்டி. கதிரவன் செல்லும் திசை நோக்கித் திரும்பி நேரத்தைக் காட்டும் செடி.]*

*மணிப்பொறி இல்லாத பழங்காலத்தே மன்னர் மாளிகையில் மேற்குவளையினின்று கிழக்குவளைக்கு நீர் சொட்டவிட்டு அறியும் நாழிகை காட்டிகள் இருப்பினும், மக்கள் கதிரவனைக் கண்டுணரக் கண்கூசும்போது நேரம் அறியச் சூரிய காந்திப்பூ பயன்பட்டது அறிக.*

**நேரங்கெட்டநேரத்தில்** *nēraṅ-geṭṭa-nērattil,* வி.எ. (adv.) நேரம் கழித்து; at an ungodly hour. **நேரங்கெட்ட நேரத்தில் வீட்டுக்கு வராதே. நேரங்கெட்ட நேரத்தில் சாப்பிடாதே.**

*[நேரம் + கெட்டநேரத்தில்]*

நேரம் கெட்ட நேரத்தில் வீட்டிற்கு வருபவர் கதவைத்தட்டுவதனால், உழைத்து அயர்ந்து உறங்கிக் கொண்டிருப்போர்க்குத் தூக்கங் கலையும், தொல்லைவரும். சூடுஆறிய உணவு சுவை குன்றியிருக்கும் என்பதனால் இத்தொடர் அமைந்ததென்க.

**நேரங்கெட்டநேரம்** *nēraṅ-geṭṭa-nēram,* பெ. (n.) **1.** தகுதியற்ற காலம்; unseasonable hour, as for visiting or eating. *நேரங்கெட்ட நேரத்தில் சொந்தக்காரர்கள் வந்து விட்டனர்.* **2.** பேய்கள் உலவுவதாகக் கருதப்படும் காலமல்லாக்காலம்; unpropitious time, as midday or dusk, when demons are supposed to be abroad. *நேரங் கெட்டநேரத்தில் வீட்டுக்கு வராமல் நேரத்தோடு வந்துவிடு.*

*[நேரம் + கெட்ட நேரம்]*

உறவினர் வந்தால் உணவு ஏற்பாட்டுத் துயர் உண்டாகும். தனிமையும், இருண்மையும் பேய் அச்சம் உண்டாகும்.

**நேரசை** *nēr-asai,* பெ. (n.) குறிலும் நெடிலும் தனித்தேனும் ஒற்றடுத்தேனும் வரும் அசைவகை (யாப்.வி.6.); a metrical syllable consisting of a short or long letter, singly or followed by a consonant. "*நெடில்குறிறனியே நின்றுமொற்றடுத்தும் நடைபெறுநேரசை நால்வகையானே*" (யாப்.வி.6).

*[நேர் + அசை.]*

*எ.டு:* ஆழி, வெள், வேல்,
ஆ-ழி- வெள் - வேல்

"குறிலே நெடிலே........

நெறியே வரினும் நிரைந்தொற் றடுப் பினும்
நேர்...." (யா.கா.5)

"குறிலே நெடிலே..... ஒற்றொடு
வருதலொடு மெய்ப்பட நாடி நேரும்"
(தொல்.பொருள்.செய்.3)

நேரசை, நிரையசை பிரிப்பு தமிழில் யாப்போசைக்கு அடிப்படை. தனி நேர்க்கு நாள் என்றும், நேர்நேர்க்குத் தேமா என்றும், நேர்நேர், நேர்-க்கு தேமாங்காய் என்றும், நேர்நேர்நேர்நேர் நான்கிற்குத் தேமாந்தண்பூ என்றும் வாய்பாடு கூறுவது வழக்கம். நேர்க்கு இணையாக வடமொழியில் 'லகு' என்றும் நிரைக்குக் குருவென்றும் வழங்குவர்.

**நேரஞ்சாய்-தல்** *nēraň-jāy-,* 1செ.கு.வி. (v.i.) பொழுதிறங்குதல் (இ.வ.); to draw towards evening, decline, as the day. ***நேரஞ் சாயும் பொழுது வீட்டுக்குவா.***

*[நேரம்[1] + சாய்-தல்.]*

**நேரஞ்செல்(லு)—தல்** *nērañ-jel(lu)-*, 13செ.கு.வி. (v.i.) **1.** நீண்ட காலம் பிடித்தல்; to take a long time, as a work. **2.** காலத் தாழ்வாதல் (வின்.); to be protracted or delayed; to become late.

*[நேரம்[1] + செல்(லு)—தல்.]*

**நேரடம்** *nēradam*, பெ. (n.) நாவல்; jaumoon, Eugenia jambolina. (சா.அக.).

**நேரடி[1]** *nēr-adi*, பெ. (n.) ஐந்துவகை செய்யுளடிகளில் நாற்சீரால் வருவது; a line of four metrical feet, one of five kinds of adi. *"பத்தெழுத் தென்ப நேரடிக் களவே ஒத்த நாலெழுத்து ஒற்றலங் கடையே"* (தொல்.1295). *"நாலொருசீர்அறை தருகாலையளவொடு நேரடி"* (யா.கா.12).

*[நேர்+ அடி.]*

ஐந்துவகைஅடிகள்: குறளடி, சிந்தடி, நேரடி, நெடிலடி, கழிநெடிலடி.

குறளடி: இரண்டு சீரால் ஆகியது.

எ.டு. "திரைத்த சாலிகை
நிரைத்த போனிரந்
திரைப்ப தேன்களே
விரைக்கொள் மாலையாய்" (யா.கா.13 மேற்கோள்)

"வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச்செறுவி னீணெய்தல்
பூச்சாம்பும் புலத்தாங்கண்
காய்ச்செந்நெற் கதிரருந்தும்
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழற் றுயில்வதியும்" (பட்டினப். 5–15)

சிந்தடி: மூன்று சீரான் ஆகியது.

எ.டு. இருது வேற்றமை யின்மையாற்
சுருதி மேற்றுறக் கத்தினோ
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடங் கையினாய்"
(சூளா.சீய.170)

"சோலை யார்ந்த சுரத்திடைக்
காலை யார்கழ லார்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்கண் இவள்வாழுமே"
(யா.கா.46 மேற்கோள்)

"கயலெழுதிய விமய நெற்றியின்
அயலெழுதிய புலியும் வில்லும்
நாவலந் தண்பொழின் மன்னர்
ஏவல் கேட்பப் பாரர சாண்ட" (சிலப்.17:1)

நேரடி: நேரடி எனினும் அளவடி எனினும் ஒக்கும். நாற்சீரால் அமையும் அடி

எ.டு:

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"(குறுந்.18)

"சூரல் பம்பிய சிறுகால் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரலை யெனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே"(யா.கா.34, மேற்கொள்)

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ
கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமே லவன்வயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ"
(சிலப். 17–பாட்டு 1,2,3)

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த வாரமு மகிலும்
தென்கடன் முத்துங் குணகடற் றுகிரும்
கங்கை வாரியுங் காவிரிப் பயனும்
ஈழத் துணவுங் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவு நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்"
(பட்டின.185–193)

"முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்
அன்னை யிட்டதீ அடிவ யிற்றிலே
யானு மிட்டதீ மூள்க மூள்கவே"
(பட்டினத். பொது. அன்னை.8)

நெடிலடி: ஐந்து சீரான் அமையும் அடி.

"வேதத்தி னுட்பொருள் மண்ணாசை
மங்கையை விட்டுவிடப்
போதித்த வன்மொழி கேட்டிலை யோசெய்த
புண்ணியத்தால்
ஆதித்தன் சந்திரன் போலே வெளிச்சம்
தாம்பொழுது
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே"

(பட்டினத். பொது. 11)

"கடையவ னேனைக் கருணையி னால்கலந்
தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல்
வேங்கையின்தோல்
உடையவ னேமன்னும் உத்தர கோசமங்
கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பி ரான்என்னைத்
தாங்கிக் கொள்ளே" (திருவாச. நீத்தல்.1)

"நாளென் செயும்வினை தானென் செயுமெனை
நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென்
செயுங்கும ரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும்
சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து
தோன்றிடினே." (கந்தரலங்காரம்)

"சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச்செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ்நூல் விரித்தோனை
விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில்
வாகனனைச்
சார்ந்துணைப் போதும் மறவாதவர்க்கு
ஒருதாழ்வு இல்லையே".
(கந்தரலங்காரம்)

"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை
வானவர்க்கு
மேலான தேவனே மெய்ஞ்ஞான தெய்வத்தை
மேதினியில்
சேலார் வயல்பொழில் செங்கோடனைச் சென்று
கண்டுதொழ
நாலாயிரம் கண்படைத் திலனே அந்த
நான்முகனே".

(கந்தரலங்காரம்)

கழிநெடிலடி: ஐந்துசீரின் மிக்குவருவது.
அறுசீர்:

"தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்க
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளை
கண்விழித்து நோக்க
தெண்திரை எழினி காட்ட தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும்
மாதோ" (கம்பரா.பால.36)

"முத்து வடஞ்சேர் முகிழ்முலை மேல்
முயங்குங் கொழுநர் மணிச்செவ்வாய்
வைத்த பவள வடம்புனைவீர்
மணிப்பொற் கபாடம் திறமினோ"
(கலிங்.கடை.30)

"கலவிக் களியின் மயக்கத்தாற்
கலைபோய் அகலக் கலைமதியின்
நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்
நீள்பொற் கபாடந் திறமினோ."

(கலிங்.கடை.34)

எழுசீர் கழிநெடிலடி:

"வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினா லிளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
நேருறக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னிகளா யேழைக ளாய்நெஞ்
சிளைத்தவர் தமைக்கண்டே யிளைத்தேன்."
(அருட்பா.)

எண்சீர் கழிநெடிலடி:

"கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளிஒளி உயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்கு
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறைஉறை சிவபெருமானே
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே"
(திருவாச. திருப்பள்ளி.3)

**நேரடி[2]** *nēr-aḍi,* பெ. (n.) **1.** மற்றொன்றின் மூலம் அல்லாத பங்கேற்பு, இடையில் எதுவும் குறுக்கிடாத பங்கேற்பு; direct.(without any intervention of or mediation of someone or

something.) *கலவரத்தில் நேரடியாகவோ மறைமுகமாகவோ ஈடுபட்டவருக்குத் தண்டனை உண்டு.* 2. நேருக்கு நேர்; நேர்முகம்; face to face. *இந்தத் தேர்தலில் மூன்று தொகுதிகளில் நேரடிப் போட்டி இருக்கும். கேட்ட கேள்விக்கு நேரடியாகப் பதிலைச் சொல்லுங்கள்.* 3. கோயில் விழா, விளையாட்டுகள் முதலியவை ஒலிபரப்பாகும் போது அல்லது நடைபெறும் இடத்திலிருந்து உடனடியாக அனுப்பப்படுவது; live broadcasting. *மின் தடைகாரணமாக நேரடி ஒளிபரப்பில் தடங்கல் ஏற்பட்டுள்ளது.* 4. போக்குவரத்துப்பற்றிக் கூறும்போது இடையில் நிறுத்தங்கள் இல்லாமல் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மட்டும் என்று அமைவது; with reference to public transport through. *விழாவுக்கு என்று ஐந்து பேருந்துகள் நேரடிப்போக்குவரத்துக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. இலங்கைக்கும் தமிழ்நாட்டுக்கும் நேரடிப்போக்குவரத்து உண்டு.*

*[நேர் → நேரடி]*

**நேரந்தப்பு–தல்** *nēran-tappu-,* 5செ.கு.வி. (v.i.) காலந்தவறுதல்; to be untimely or out of time. *நேரந்தப்பி விதைத்ததால் பயிர் சரியாக விளையவில்லை.*

*[நேரம் + தப்பு–தல்.தப்புதல் = தவறுதல்.]*

**நேரப்பட** *nēra-p-paḍa,* கு.வி.எ. (adv.) காலத்தாழ்வாய் (தாமதமாய்) (வின்.); late.

*[நேரம்¹ + பட.]*

**நேரப்பலன்** *nēra-p-palaṉ,* பெ. (n.) செயல் தொடங்கப்பட்ட வேளையின் பயன் (நாஞ்.); astrological effect of the time when a work is commenced.

*[நேரம் + பலன்.]*

**நேரப்போக்கு** *nēra-p-pōkku,* பெ. (n.) பொழுது போக்குகை; pastime. "*வெற்றுநேரப் போக்காய்ப் புகல் விநோதமுமன்று*" (இரட்சணிய.பக்.2).

*[நேரம் + போக்கு.]*

**நேரபாரமறி–தல்** *nēra-pāram-aṟi-,* 2செ.கு.வி. (v.i.) அடக்க வொழுக்கமறிதல் (இ.வ.); to pay regard to modesty or propriety.

*[நேரம் + பாரம் + அறி–தல்.]*

**நேரம்¹** *nēram,* பெ. (n.) 1. வினை நேருங்காலப் பகுதி; time. "*நேரம் பார்த்து நெடுந்தகைக் குரிசிலை மீட்டிடம் பெற்று*" (பெருங். உஞ்சைக்.57:74). *நேரங் காலம் பார்த்து வேலையைத்துவங்க வேண்டும்.* 2. தக்க சமையம்; வேளை (தருணம்),பொழுது (திருக்கோ.290, துறைவிளக்கம்); opportunity, season. "ஆண்டொருபத்துடனாறு நிரம்பிய தந்நேரம்" (சேதுபு.துத்தம்.14.). *கொடுப்பினைக்கும் நேரம் வாய்க்க வேண்டும்.* 3. இருசாமங்கொண்ட அரைநாள்; பகலிற் பாதியாகிய காலவளவு (திவா.); a measure of the day = 2 šāmam = 1/2 pagal = about six hours. 4. மணி; hour. *குறித்த நேரத்தில் வந்து விடுவேன்.* 5. இத்தனை மணியெனக் கணக்கிடும் காலவளவு; length of time. *ஒருவர்குறைந்தது எட்டு மணிநேரமாவது தூங்கவேண்டும்.*

*ம.*நேரம்; *இ.* தேர்.
*குட.* நெர; *து.* நேர்டே

*[நேர் → நேரம்]*

**நேரம்²** *nēram,* பெ. (n.) 1. குற்றம்; guilt, fault. 2. தண்டம் (அபராதம்); fine.

தெ.நேரமு.

*[ நேர்வு → நேர் + அம்]*



நேத்திரப்பூண்டு



நேர்வாளம்

**நேரம்தவறாத** *nēram-davaṟāda,* பெ. எ (adj.) காலம் தவறிடாத; punctual.

*[நேரம் + தவறாத.]*

**நேரம்பெற** *nēram-peṟa,* வி.எ. (adv.) விரைவாக (நெல்லை); early.

*[நேரம்¹ + பெற.]*

**நேரல்** *nēral,* பெ. (n.) **நேர்வு** (திவா.) பார்க்க; see *nērvu.*

*[நேர் → நேரல்.]*

**நேரல்லார்** *nēr-allār,* பெ. (n.) கீழோர்; inferiors, vulgar people. "*நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால்*" (நாலடி,72).

*[நேர் + அல்லார். நேர்மையாக நடக்காத கீழோர்]*

**நேரலன்¹** *nēr-alaṉ,* பெ. (n.) பகைவன் (திவா.); enemy.

*[நேர் + அல் + அன். அல் – எதிர்மறை இடைநிலை. அன் – ஆண்பால் ஒருமை ஈறு.]*

**நேரலன்²** *nēralaṉ,* பெ. (n.) 1. நேர்மை யானவன்; impartial, just person. 2. வளையாதது, நேரானது, நிறுதிட்டமானது (யாழ்ப்.); that which is straight or erect.

*[நேரல் → நேரலன். நேர்¹ → நேரல்]*

**நேராக** *nēr-āka,* கு.வி.எ. (adv.) 1. பிறர் மூலமாகவன்றித் தானே; directly in person. *தானே நேராக ஈடுபட்டான்.* 2. தெளிவாக (பிரத்தியட்சமாக); before one's eyes, in sight. 3. உண்மையாய்; honestly, straight for wardly. 4. முழுமையும்; completely. '*அகவாயிலுள்ளது நேராகப் போனவாறே*' (ஈடு, 4.4:10). 5. புறப்பட்ட விடத்திலிருந்து வேறு எங்கும் செல்லாமல்; straight from. *நேராகப் பள்ளிக்குச் செல்லுதல் வேண்டும். பள்ளிக்கூடம் விட்டதும் நேராக வீட்டுக்கு வா.* 5.வளையாமல், திரும்பாமல் காட்டிய வழியிலேயே; straight a head. *வலப்புறம் சென்று நேராகப்போனால் ஊர்வரும். இந்த வழியே நேராகச் சென்றால் குளத்தை யடையலாம்.*

*[நேர் → நேராக]*

**நேராதார்** *nērādār,* பெ. (n.) பகைவர் enemies. "*நேராதார் வளநாட்டை*" (பு.வெ.3:14, கொளு). "*நீர் முற்றி மதில் பொரூஉம் பகையல்லால் நேராதார்*" (கலித்.67:4).

*[நேர்¹ + ஆ + த் + ஆர் – நேராதார். ஆ –எ.ம.இ.நி. த் – சந்தி. ஆர் –பலர் பால் ஈறு.]*

**நேரார்** *nērār,* பெ. (n.) **நேராதார்** பார்க்க; see *nērādār.* "*நிதியந் திறையளந்தார் நேராரும்*" (பு.வெ.3:10). "நேரார் நேரு நீணிதி துஞ்சுந் நிறைகோயில்" (சீவக.1635). "*நேரார் தம்மைக் கொலைகண்டு மகிழாமல்*" (*பாரத. கிருட்டிணன்.தூ.11*).

*[நேர் → நேரார். எதிர்மறை இடைநிலை குன்றியது.]*

**நேராளி** *nēr-āḷi,* பெ. (n.) நேர்மையுள்ளவன் (யாழ்.அக.); upright, honest person.

*[நேர் + ஆளி. ஆள் → ஆளி. ஒ.நோ. போர் + ஆளி = போராளி.]*

**நேரி¹** *nēri,* பெ. (n.) தமிழ்நாட்டிலுள்ளதும் சோழர்க்குரியதுமான ஒருமலை (பதிற்றுப்.40); a hill in the Tamil country belonging to the Chōḷās. **"நேரி வெற்பன்"** (சூடா.2:16)

*[நேர் + இ. இ.சொல்லாக்க ஈறு செங்குத்தாக நிற்கும் மலை.]*

இம்மலையால் சோழனை நேரியன் என்று பழைய நூல்கள் கூறுகின்றன. *"நீரிமிழ் சிலம்பின் நேரியோன்"* (பதிற்றுப்.40). *"பாடுசால் நெடுவரைக் கல்லுயர் நேரிப்பொருநன்"* (பதிற்றுப்.67). உறையூரின் தெற்கு வாயிலில் உள்ள ஓர் ஊரை நேரிவாயில் என்று சிலப்பதிகாரம் (28:117) கூறுகிறது. இங்குச் சேரன் செங்குட்டுவன் தன் மைத்துனனான சோழனுக்குப் பரிந்து ஒன்பது மன்னரை வென்றான் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது. *"ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை நேரிவாயில் நிலைச்செரு வென்று"* (சிலப்.28:116,117).

**†நேரி²** *nēri,* பெ. (n.) மக்களாட்சி முறையில் தங்களின் அரசைத் தாங்களே தேர்ந்தெடுக்க மக்களில் குறிப்பிட்ட அகவைக்கு மேற்பட்டவர்கள் அனைவருக்கும் உள்ள அடிப்படை உரிமை; மேற்குறிப்பிட்ட உரிமையைக் காட்டும் முத்திரைக் குத்தப்படும் சீட்டு; Vote(s). *எங்கள் தொகுதியில் ஐம்பது விழுக்காடு நேரிகள் பதிவாகியது. தேர்தல் முடிந்து இரண்டுநாள்கள் கழித்து நேரிகள் எண்ணப்படும்.*

*[நேர் + இ. (படைத்.பாவாணர்.)]*

**நேரிசம்** *nērišam,* பெ. (n.) எறிபடை; javelin. *"மாகடைக்க ணேரிசத்தான் மறைக்களிற்றை மதமடக்கி"* (குற்றா.தல. தருமசாமி.74). 2. அம்புவகை (யாழ்.அக.); a kind of arrow.

*[நேர் + இசம். இயம் → இசம் = நேராகச் செல்லும் படைக்கருவி]*

**நேரிசை** *nēr-iši,* பெ. (n.) 1. நேரிசைவெண்பா (இலக்.வி.729) பார்க்க; see *nērišai-veṇbā.* 2. பண்வகை (இராகவகை); a melody. **"***நேரிசையாக வறுபதமுரன்று***"** (தேவா.85,3).

*[நேர் → நேரிசை.]*

இரண்டாம் அடியில் மூன்றாம் சீருக்கு அடுத்துத் தனிச் சொல்லாகவரும் முறையில் சிறுகோடு இட்டு இரண்டடி எதுகையோடு ஒத்துவருவதைக் குறிக்கும். எதுகை ஒவ்வாமல் வரின் இன்னிசை என்று கூறப்படும்.

*"கொடிமதில் பாய்ந்திற்ற கோடும் அரசர்*
*முடியிடறித் தேய்த்த நகமும் –பிடிமுன்பு*
*பொல்லாமை நாணிப் புறங்கடை*
*நின்றதே*
*கல்லார்தோள் கிள்ளி களிறு."*
*(முத்தொள்.72)*

**நேரிசைச்சிந்தியல்வெண்பா** *nēr-išai-c-cindiyal-veṇbā,* பெ. (n.) இரண்டாம் அடியில் தனிச்சொல்பெற்று வரும் சிந்தியல்வெண்பா வகை; a species of šindiyal-veṇbā with a detached foot at the end of the second line. **"***நேரிசை இன்னிசைபோல நடந்தடிமூன்றின் வந்தால் நேரிசை இன்னிசை சிந்திய லாகும்***"** (யா.கா.28).

*[நேரிசை + சிந்தியல்வெண்பா. சிந்தியல் வெண்பா. = இரண்டாம் அடியில் தனிச்சொல் பெற்று மூன்றடியாய் இருவி கற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் அமையும் வெண்பா வகை.]*

எ.டு.

"நற்கொற்ற வாயில் நறுங்குவளைத்
தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப்புடைத்தாளே பொற்றேரான்
மாலைநல் வாயில் மகள்" (யா.கா.28.மேற்.)

*"அறிந்தானை ஏத்தி யறிவாங் கறிந்து*
*சிறந்தார்க்குச் செல்வ னுரைப்ப–சிறந்தார்*
*சிறந்தமை யாராய்ந்து கொண்டு."*
(யா.கா.28.மேற்.)

**நேரிசையாசிரியப்பா** *nēr-išai-y-āširiya-p-pā,* பெ. (n.) ஈற்றயலடி முச்சீராய் வரும்

ஆசிரியப்பா வகைகளில் ஒன்று; a kind of *āširiya-p-pā* in which the penultimate line has three feet. *"ஈற்றதன் அயலடி ஒருசீர் குறைய நிற்பது நேரிசை ஆசிரியம்மே."* (அவிநயம்).

*[நேரிசை + ஆசிரியப்பா. ஆசிரியப்பா: நான்குபாவகைகளில் ஒன்று. நான்கு பாவகைகள்: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா]*

*எ.டு:*

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே; சாரற்*
*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கு நாடனொடு நட்பே"*
*(குறுந்.3)*

*"வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்*
*மனையுறை மகளிர்க் காடவர் உயிரென*
*நமக்குரைத் தோருந் தாமே*
*அழாஅல் தோழி அழுங்குவர் செல்வே"*
*(குறுந்:135)*

*"நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்*
*என்றும் என்றோள் பிரிபறி யலரே*
*தாமரைத் தண்டா தூதி மீமிசைச்*
*சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்*
*புரைய மன்ற புரையோர் கேண்மை*
*நீரின் றமையா வுலகம் போலத்*
*தம்மின் றமையா நந்நயந் தருளி*
*நறுநுதல் பசத்த லஞ்சிச்*
*சிறுமை உறுபவோ செய்பறி யலரே"*
*(நற்.1)*

**நேரிசையொத்தாழிசைக்கலிப்பா** *nēr-išai-y-ottāḻišai-k-kali-p-pā*, பெ. (n.) தரவொன்றும் தாழிசை மூன்றும் தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்றுவருங் கலிப்பா; a kind of *Kalippā*, having one *taravu*, three *tāḻišai*, one detached foot and *šuridagam*. *'தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொற் சுரிதகமாய் நிரலொன்றி னேரிசை யொத்தாழிசைக்கலி"* *(யா.கா.38).*

*[நேரிசை + ஒத்தாழிசை + கலிப்பா.]*

ஒத்தாழிசைக்கலிப்பா மூன்று வகைப்படும். அவையாவன: நேரிசையொத்தாழிசைக்கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக்கலிப்பா. வண்ணக ஒத்தாழிசைக்கலிப்பா, நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா, தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்ற நான்கு உறுப்போடும்; அம்போதரங்கயொத் தாழிசைக் கலிப்பா, தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்ற ஐந்து உறுப்போடும்; வண்ணகவொத் தாழிசைக்கலிப்பா தரவு, தாழிசை, வண்ணகம் (அராகம்), அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்போடும் வரும்.

முன் ஒரு தரவு வந்து, அதன் பின்பு மூன்று தாழிசைவந்து, அதன் பின் ஒரு தனிச்சொல் வந்து, அதன்பின் ஆசிரியத்தானாவது, வெண்பாவானாவது ஒரு சுரிதக உறுப்புப் பெற்று வருவது நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா. (யா.கா.**38**).

தரவு எனினும், எருத்தம் எனினும் ஒக்கும்; தாழிசை எனினும், இடைநிலைப்பாட்டு எனினும் ஒக்கும்; தனிச்சொல் எனினும், விட்டிசை எனினும், கூன் எனினும், தனிநிலை எனினும் ஒக்கும்; சுரிதகம் எனினும், அடக்கியல் எனினும், வாரம் எனினும், வைப்பு எனினும் , போக்கியல் எனினும் ஒக்கும்.

ஆசிரியச் சுரிதகத்தால் அமைந்த நேரிசை யொத்தாழிசைக் கலிப்பாவிற்கு எடுத்துக்காட்டு

(1.) "வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே
றுய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர்
பசப்பினவாய்ப்
பூணொடுங்கு முலைகண்டும் பொருட்பிரிதல்
வலிப்பவோ.

இது தரவு.

சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய
வென்பவாற்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரரோ
பெரியவரே,
சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய
வென்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ
நலமிலரே
சிலம்படைந்த வெங்கானஞ் சீரிலவே
யென்பவாற்
புலம்படைந்து நலந்தொலையப் போவாரோ
பொருளிலரே.

இவை மூன்றுந் தாழிசை.
எனவாங்கு.

இது தனிச்சொல்.

அருளெனு மிலராய்ப் பொருள் வயிற்
பிரிவோர்பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடு தானையிற்
பொலிந்தே."

இது சுரிதகம்.

இது தரவு மூன்றடியாய்த், தாழிசை மூன்றும் இரண்டிரண்டடியாய்த், தனிச்சொற்பெற்று, மூன்றடி ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா.

இதனை மயேச்சுரர்,

"தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொற் கிடந்து சுரிதகந் தழுவ
வைத்த மரபின தொத்தா ழிசைக்கலி"
எனவும், காக்கைபாடினியார்

"தரவு தாழிசை தனிச்சொற் சுரிதகம்
எனுநான் குறுப்பின தொத்தா ழிசைக்கலி"
எனவும் கூறுகின்றார். (யா.கா.38 உரை.)
எடுத்துக்காட்டு (2)

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற
முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா
நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை
யந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ
ரிவ்விடை
என்மக ளொருத்தியும் பிறண்மக
னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும
காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவர றாயிர்நீர் போறிர்;
பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா
மென்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங்
கனையளே;
ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;
எனவாங்கு,
இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே"(கலித்.9)

இது தரவு பதினோறடியாய், தாழிசை மூன்றும் மூன்றடியாய், தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் அமைந்த நேரிசை ஒத்தாழிசைக்கலிப்பா.

வெள்ளைச் சுரிதகத்தால் அமைந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு எடுத்துக்காட்டு.

"முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ்
முனைவனே
எத்திசையும் பல்லுயிர்க ளின்புற வினிதிருந்து
பத்துறு திசையனைத்தும் பகைபசி பிணிநீங்க
உத்தமர்க டொழுதேத்த வொளிர்வரைபோற்
செலவினாய்

இது தரவு.

எள்ளனைத்து மிடரின்றி யெழின்மாண்ட
பொன்னெயில்
உள்ளிருந்த வுன்னையே வுறுதுணையென்
றடைந்தோரை
வெள்ளில்சேர் வியன்காட்டு ளுறைகென்றல்
விழுமிதோ.
குணங்களின் வரம்பிகந்து கூடிய
பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன்
னடைந்தோரைப்
பிணம்பிறங்கு பெருங்காட்டு ளுறைகென்
றல்பெருமையோ
விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச்
செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கநின்
னடைந்தோரைத்
தடத்தகைய காடுறைக வென்பதுநின்
றகுதியோ.
இவை மூன்றுந் தாழிசை.
எனவாங்கு
எனைத் துணையை யாயினு மாகமற் றுன்கட்
டினைத்துணையுந் தீயவை யின்மையிற் சேர்தும்
வினைத்தொகையை வீட்டுக வென்று."

இது சுரிதகம்.

இது தரவு நான்கடியாய், தாழிசை மூன்றும் மும்மூன்றடியாய், தனிச்சொல் பெற்று மூன்றடி வெள்ளைச் சுரிதகத்தால் அமைந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா. (யா.கா.38 உரை.)

**நேரிசை வெண்பா** *nēr-iśai-veṇbā*, பெ. (n.)

செய்யுளின் இரண்டாமடி யீற்றில் தனிச்சொற் பெற்றுவரும் வெண்பா வகை; a kind of venbā having a detached foot at the end of the second line.

*[நேரிசை + வெண்பா.]*

இரண்டு குறள் வெண்பாவாய் நடுவு முதற்றொடைக் கேற்ற தனிச்சொல்லால் அடி நிரம்பிச், செப்பலோசை வழுவாது முதலிரண்டடியும் ஒரு விகற்பமாய்க் கடையிரண்டடியும் மற்றொரு விகற்பமாய் வரினும், நான்கடியும் ஒரு விகற்பமாய் வரினும் இருகுறள் நேரிசை வெண்பா அல்லது நேரிசை வெண்பா எனப்படும்.

எ–டு:

*"தடமண்டு தாமரையின் றாதா டலவன்*
*இடமண்டிச் செல்வதனைக் கண்டு–*
*பெடைஞெண்டு*
*பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந் தூழி*
*நடாயினா னூர்"* (யா.கா.24 மேற்கோள்)

இது இரண்டு குறள் வெண்பாவாய், நடுவுமுதற் றொடைக்கேற்ற தனிச்சொல்லான் அடிநிரம்பிச், செப்பலோசை வழுவாது இரண்டு விகற்பத்தான் வந்த நேரிசை வெண்பா.

*"அரிய வரைகீண்டு காட்டுவார் யாரே*
*பெரிய வரைவயிரங் கொண்டு–தெரியிற்*
*கரிய வரைநிலையார் காய்ந்தாலென்*
*செய்வார்*
*பெரிய வரைவயிரங் கொண்டு"*

இது இரண்டு குறள் வெண்பாவாய், நடுவு முதற்றொடைக்கேற்ற தனிச்சொல்லான் அடிநிரம்பிச், செப்பலோசை வழுவாது ஒருவிகற்பத்தான் வந்த நேரிசைவெண்பா.

முதற் குறட்பாவினோடு தனிச்சொல் இடைவேறுபட்டு விட்டிசைப்பின், ஒற்றுமைப் படாத மாழைகளை (உலோகங்களை) ஒற்றுமைப்படப் பற்றாசிட்டு விளக்கினாற்போல முதற் குறட்பாவினிறுதிக்கண் ஒன்றும் இரண்டும் அசைகூட்டி உச்சரிக்கப்பட்டு இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவனவுமுள; அவை ஆசிடை நேரிசை வெண்பா வெனப்படும்.

*"தாமரையின் றாதாடித் தண்டுவலைச்*
*சேறளைந்து*
*தாமரையின் நாற்றமே தானாறுந்–தாமரைபோற்*
*கண்ணான் முகத்தான் கரதலத்தான்*
*சேவடியனென்*
*கண்ணார்வஞ் செய்யுங் கருத்து"* (யா.கா.24.மேற்)

இது முதற் குறட்பாவின் இறுதிக் கண் ஈரசையான், ஆசிட்டு இரண்டு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

"கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கே செய்யா–ஒருநிலையே
முட்டின்றி மூன்று முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற காலம்" (நாலடி,அறிவு.10).

இது முதற் குறட்பாவின் இறுதிக்கண் ஓரசையான் ஆசிட்டு இரண்டு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

*"ஆர்த்த வறிவின ராண்டிளைய ராயினுங்*
*காத்தோம்பித் தம்மை யடக்குப–*
*மூத்தொறூஉந்*
*தீத்தொழிலே கன்றித் திரிதந்*
*தெருவைபோற்*
*போத்தறார் புல்லறிவி னார்"*
(நாலடி, கயமை1).

இது முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஓரசையான் ஆசிட்டு ஒருவிகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

*"வஞ்சியே னென்றவன்ற னூருரைத்தான்*
*யானுமவன்*
*வஞ்சியா னென்பதனால் வாய்நேர்ந்தேன்*
*வஞ்சியான்*
*வஞ்சியேன் வஞ்சியே னென்றுரைத்தும்*
*வஞ்சித்தான் வஞ்சியாய்*
*வஞ்சியார் கோ"* (யா.கா.24 மேற்.)

இது முதற்குறட்பாவின் இறுதிக் கண் ஈரசையான் ஆசிட்டு ஒருவிற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

*நேரிசைவெண்பாவிற்கு மேலும் சில எடுத்துக் காட்டுகள்:*

"பிறர்மனை கள்களவு சூது கொலையோடு
அறனறிந்தார் இவ்வைந்தும் நோக்கார்–
திறனிலர் என்(று)
என்னப் படுவதூஉம் அன்றி நிரயத்துச்
செல்வழி உய்த்திடுத லால்". (ஆச்சார.37)

"நாணாக்கால் பெண்மை நலனழியும்
முன்னின்று
காணாக்கால் கைவளையுஞ் சோருமால் –
காணேனான்
வண்டெவ்வந் தீர்தார் வயமான் வழுதியைக்
கண்டெவ்வந் தீர்வதோர் ஆறு" (முத்தொள்.28).

"தோற்ற மழிவுமருள் சூர்நோய் வரைப்பிலதா
யாற்ற லறிவுண்மை யாய்த்தூய்தாய்ப் – போற்று
மளவ ருளத்தளவா யான்றவறங் கோடா
துளது விடாப் பொருளா கும்." (சேந். செ.2)

"இறையே தமையா எடிகளென வெண்ணார் கறையே யொழியார் களிகொன் – மிறையேசெய் தின்ன றருமளறே யெய்துபுபன் னாளுழல்வ ரென்னு மறைபொய் யிலை. (சேந். செ.4)

"நோக்கி விழிகளிப்ப நுண்செவிகேட் டுக்களிப்ப நாக்கிழமை சொற்று நனிகளிப்ப – நீக்க நினைந்தெனெஞ் சங்களிப்ப நீமஞ்ஞை வந்துட் களிந்தழைதெள் ளின்பக் கடால்" (சேந்.செ.16)

"கண்ணாளர் போற்றுமெண் கண்ணாற்கு மாலுக்கு மண்ணா மலைப்பெயரா எற்கந்தா – டண்ணார் பெருக்கி யருள்புரிந்த பெய்கழற்சே யிந்நாள் வெருக்கொ ளெனக்குமருள் வீடு." (சேந்.செ.30)

**நேரிடு–தல்** *nēr-iḍu-,* 20 செ.கு.வி (v.i.) **1.** பொருந்துதல்; to be fit or appropriate. **2.** எதிர்ப்படுதல்; to appear, come to view. '*நீண்ட மதகரிமுன் னேரிட்டு*" (கொண்டல்விடு.374). **3.** கைகூடுதல் (வின்.); to succeed, prove successful, come to hand.

*[நேர் → நேரிடு–தல்.]*

**நேரிடை** *nēriḍai,* பெ. (n.) *நேரடி* பார்க்க; see nēraḍi.

**நேரிய** *nēriya,* பெ. எ (adj.) சீரிய; சிறந்த; excellent; of high order or quality. நேரிய ஆராய்ச்சி.

*[நேர் → நேரிய.]*

**நேரியது**[1] *nēriyadu,* பெ. (n.) ஒருவகை நல்லாடை (நாஞ்.); a kind of fine cloth.

*[நேரியல் → நேரியது.]*

**நேரியது**[2] *nēriyadu,* பெ. (n.) நேரானது; anything straight, true, exact. *நெல்லுக்கு நேரியது புல்* (உ.வ.)

*[நேர் → நேரியது.]*

**நேரியர்** *nēriyar,* பெ. (n.) **1.** வாக்காளர்; voter. **2.** நேர்மையானவர்; honesty person. **3.** நேரியன் பார்க்க; see *nēriyaṉ.*

*[நேரி → நேரியர்.]*

**நேரியல்**[1] *nēr-iyal,* பெ. (n.) ஒருவகை நேர்த்தியான மேலாடை (நெல்லை); a kind of fine cloth worn over the shoulders.

ம. நேரியல்.

*[நேர் → நேரியல் = தோளில் போட்டுக் கொள்ளும் துணி; ஆடை.]*

**நேரியல்**[2] *nēriyal,* பெ. (n.) மிளகு; black papper, Pipernigrum. (சா.அக.).

**நேரியன்**[1] *nēriyaṉ,* பெ. (n.) நேரி வெற்புக்குரிய (நேரி குன்றுக்குரிய) சோழமன்னன் (திவா.); the Chōḷā king, as lord of the Nēri hill.

*[நேரி → நேரியன்.]*

**நேரியன்**[2] *nēriyaṉ,* பெ. (n.) **1.** நுண்ணறிவுள்ளவன் (வின்.); a man of subtle intellect. **2.** அணுவுக்கு அணுவாயிருப்பவன்; the most subtle Being. "*நேரியனுமாய்ப் பரியனுமாய்*" (சி.சி.8:28).

*[நேர்[1] → நேரியன்]*

**நேரில்** *nēril,* வி.எ (adv.) **1.** மற்றொருவரின் மூலமாகவோ கடிதத்தின் மூலமாகவோ இல்லாமல் குறிப்பிட்டவரிடம் அல்லது குறிப்பிட்ட இடத்தில் தானே; in person. *தலைவரை நேரில் பார்த்துத் தன் குறைகளைக் கூறினான். இந்தத் திட்டத்தில் சேர விரும்புவோர் அலுவலகத்துக்கு நேரில் வரவும்*

2. பார்த்தல், கேட்டல், குறித்து வருகையில் தன் கண்களால் அல்லது காதால்; தானே சான்றாக; with one's own eyes or ears; personally. *அண்ணாவை நான் நேரில் பார்க்கவில்லை. அவர் நடித்ததை நான் நேரில் பார்த்தேன்.*

*[நேர் → நேரில்.]*

**நேரிவெற்பன்** *nēri-veṟpaṉ,* பெ. (n.) *நேரியன்*[1] (திவா.) பார்க்க; see *nēriyaṉ*[1].

*[நேரி + வெற்பன். நேரிமலைக்குரியவன்.]*

**நேரிழை** *nēr-iḻai,* பெ. (n.) **1.** அழகிய, நேர்த்தியான அணிகலன் அணிந்த பெண்; lady, as adorned with fine jewels. "*நேரிழையாய் நேரிழையீர்*" (திருவாச.7:2). "*யாரா குவர்கொ றாமே நேரிழை*" (புறநா. 337:20). "*தேர்தர வந்த நேரிழை மகளிர்*" (அகநா.336:11). "நெடிய நீடினம் நேரிழை மறந்தே" (ஐங்குறு. 484:4). "வாராய் பாண நகுகம் நேரிழை" (நற்.370:1).

*[நேர்*[1] *+ இழை. பொருத்தமான அணிகலன் அணிந்த பெண்.]*

**நேரிளமிகுதி** *nēriḷa-migudi,* பெ. (n.) வெறுமை (சூனியம்); non entity. nothingness. (சா.அக.).

[நேர் + இள + மிகுதி. இளநீர்க்கு முன்பு குறும்பை எனக்கூறுதல்போல் நேரிளமைக்கு முந்தைய மிக்குநிலை வெறுமையாகிறது. ]

**நேரிறை**[1] *nēr-iṟai,* பெ. (n.) *நேர்விடை,1* பார்க்க; see *nēr-viḍai,*1.

*[நேர் + இறை. இறை = விடை.]*

**நேரிறை**[2] *nēr-iṟai,* பெ. (n.) *நேரியன்*[1] (திவா.) பார்க்க; see *nēriyaṉ*[1]

*[நேரி + இறை. நேரி = மலை. இறை = அரசன். நேரிமலை அரசன், சோழன்.]*

**நேரீனம்** *nēr-īṉam,* பெ. (n.) உண்மை தவறுகை (யாழ்ப்.); dis-honesty, unfairness; unfaithfulness.

*[நேர் + ஈனம். நேர்மையில் இருந்து மாறுபடுதல்; நேர்மையில் குறைபடுதல், நம்பிக்கையின்மை.]*

**நேருக்குச்சீர்** *nērukku-c-cīr,* பெ. (n.) *நேர்சீர்* (யாழ்.அக.) பார்க்க; see *nēr-šīr.*

**நேருக்குநேர்** *nērukku-nēr,* வி.எ. (adv.) நேராகச் சந்தித்து, நேரில் போய்ப் பார்த்து; personally; face to face. *என்னை நேருக்கு நேர்பார்த்துப் பேசு. பல மாணவர்களுடன் நேருக்குநேர் பேசியே இந்த முடிவுக்கு வந்தேன்*

*[நேர் → நேருக்கு + நேர். ]*

**நேருக்குநேர்வழி** *nērukku-nēr-vaḻi,* பெ. (n.) குறுக்குவழி (உ.வ.); shortcut.

*[நேர் → நேருக்கு + நேர்வழி.]*

நேருக்கு நேரானது குறுக்காவது காண்க.

**நேருக்குநேராக** *nērukku-nērāga,* வி.எ (adv.) நேராக[1] பார்க்க; see *nērāga*[1].

**நேருக்குநேராய்நில்–தல் (நேருக்கு நேராய் நிற்றல்)** *nērukku-nērāy-nil-,* 14 செ.கு.வி. (v.i.) **1.** சரிநேராதல்; to be exactly straight or direct. ***என்னுடன் உன்னால் நேருக்கு***

*நேராய் நிற்க முடியுமா?* 2. நேரெதிராயிருத்தல்; to be exactly opposite. 3. பிறனொருவன் தன்னிடம் நடந்து கொள்வதுபோலத் தானும் நடந்து கொள்ளுதல்; to behave or conduct oneself towards a person exactly in conformity with his behaviour.

*[நேர் → நேருக்கு + நேராய் + நில்—தல். ]*

**நேருக்குப்போ—தல்** *nērukku-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) 1. நேராக முன்செல்லுதல்; to go straight. 2. சேர்ந்து வரிசையாய்ப் போதல்; to go abreast.

*[நேர் → நேருக்கு + போ—தல்.]*

**நேருக்குவா—தல்(நேருக்குவருதல்)** *nērukku-vā-*, 18 செ.கு.வி. (v.i.) இணங்கி வருதல்; to come to terms, yield.

*[நேர் → நேருக்கு + வா—தல்.]*

**நேரே** *nērē*, வி.எ. (adv.) *நேராக* பார்க்க; see *nērāga*.

*[நேர் + எ]*

**நேரேடம்** *nēr-ēḍam*, பெ. (n.) *நேரேடு* (பிங்.); பார்க்க; see *nēr-ēḍu*.

**நேரேடு** *nēr-ēḍu*, பெ. (n.) நாவல் (சூடா.); jaumoon plum.

தெ. நேரேடு.

**நேரொ—த்தல்** *nēr-o-*, 4செ.கு.வி. (v.i.) 1. இணையாயிருத்தல்; to be a match, to be similar. 2. மாறுபாடின்றி யிருத்தல்; to be unchanging. "*நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கி*"(நாலடி,202). 3. மிகப்பொருந்தி யிருத்தல்; to be exactly suited, as a wife to her husband. '*அவனுக்கு நேரொவ்வாதிருக்கிறேனோ ஒத்திருக்கிறேனோ*' (குருபரம்.31,ஆறா.).

*[நேர்[1] + ஒ—த்தல்.]*

**நேரொத்தூமம்** *nērottūmam*, பெ. (n.) குருந்தக்கல்; a variety of corundum, Emery. (சா.அக.).

**நேரொன்றாசிரியத்தளை** *nēronrāširiya-taḷai*, பெ. (n.) ஆசிரிய உரிச்சீர் நின்று தன் வருஞ்சீர் முதலசையொடு நேராய் ஒன்றுவது(யா.கா.10 உரை;) metrical connection between any two adjoining šir where the last syllable of the preceding and the first syllable of the succeeding šir of nēr.

"*உள்ளார் கொல்லோ தோழி, முள்ளுடை*
*அலங்குகுலை ஈந்தின் சிலம்பிபொதி*
*செங்காய்*
*துகில் பொதி பவளம் ஏய்க்கும்*
*அகில்படு கள்ளியங் காடிறந் தோரே*"(யா.கா.11. மேற்.).

*[நேர் + ஒன்று + ஆசிரியத்தளை]*

*ஆசிரியப்பாவில் ஒரு சீரின் ஈற்றுச்சீர் 'நேர்' என்ற அசையில் நிற்க, வருஞ் சீரின் முதற்சீர் நேர் அசையாகவே இருந்தால் அது நேரொன்று ஆசிரியத் தளை என்று வழங்கப்படும்.*

**நேரோடம்** *nērōḍam*, பெ. (n.) *நேரேடு* (மலை.) பார்க்க; see *nērēḍu*.

*[நேர் + (ஏடு→) ஓடு + அம்]*

**நேரோடல்** *nēr-ōḍal*, பெ. (n.) குதிரையின் நேரோட்டம் (திவா.); straight forward trotting of a horse.

*[நேர் + ஓடல்.]*

**நேளி** *nē̤li,* பெ. (n.) தாமரை (அக.நி.); lotus.

*[நளி → நேளி. நளி = அகலம்; அகன்ற பெரிய மலர்; பெருமை மிக்க மலர்]*

**நேற்றி** *nēṟṟi,* பெ. (n.) *நேற்று* பார்க்க; see *nēṟṟu.*

*[நேற்று → நேற்றி → நேத்து – உ.வ.*
*ஒ.நோ.*
*எண்ணூற்றுமூன்று → எண்ணூற்றிமூன்று.*
*என்பத்துநான்கு → எண்பத்திநான்கு.]*

**நேற்று** *nēṟṟu,* வி.எ. (adv.) 1. நிகழும் நாளுக்கு முதனாள்; yesterday. "*என் செய்தாய் நேற்றிரா முற்றும்*" (குலோத். கோ.298). *நேற்றைப் பொழுது (நன். உயிரீற்றுப. 35உரை). நேற்று என்ன செய்தாய்? நேற்று வந்த மொட்டைச்சி நெய்வார்த்து உண்ணச் சிணுங்குகிறாள் (பழ.). நேற்று வந்தானாம் குடி அவன் தலையில் விழுந்த தாம் இடி (பழ.).* 2. சற்று முன் காலத்தில்; lately, recently. *நேற்றுப்பிறந்த பையன்.*

ம. நேற்று; க. நென்னெ; தெ. நின்னெ

*[நுல் (பொருந்தல்) → நுள் → நிள் →*
*நெள் → நெரு → நெருநல்.*
*நெருநற்று →நேற்று. (வே.க.)]*

**நேற்றுமுந்தாநாள்** *nēṟṟu-mundā-nāḷ,* வி.எ. (adv.) அண்மைக் காலத்தில் (நெல்லை); during the recent past. *நேற்று முந்தாநாள் செய்த வேலை.* 2. நேற்றைக்கு முந்திய நாள்; (அதாவது இந்நாளிலிருந்து மூன்று நாளுக்கு முன்); day before yesterday.

*[நேற்று + முந்து + ஆம் + நாள்.]*

**நேற்றைக்கு** *nēṟṟaikku,* வி.எ (adv.) *நேற்று* பார்க்க; see *nēṟṟu.*

*[நேற்று → நேற்றைக்கு]*

**நேற்றைய** *nēṟṟaiya,* பெ.எ. (adj.) 1. நேற்று நடந்த; yesterday's event, etc. *நேற்றைய கூத்து நன்றாயிருந்தது.* 2. கடந்த காலத்திலிருந்த; of the past. *நேற்றைய மனிதர்களைப் போல் நாமும் இருக்கக்கூடாது.*

*[நேற்று → நேற்றைய]*

**நேற்றையதினம்** *nēṟṟaiya-diṉam,* பெ. (n.) & வி.எ. (adv.) நெருநல்; yesterday.

*[நேற்று → நேற்றைய + தினம்.* Skt. dina *→ த.தினம்]*

**நேறிட்டதாகை** *nēṟitta-tāgai,* பெ. (n.) கரிசலாங்கண்ணி; eclipse plant-Eclipta prostata. (சா.அக.).

**நேறுகுழை** *nēṟu-kuḷai,* பெ. (n.) வச்சிரக்கல் (வைரம்); diamond. (சா.அக.).

**நை¹** *nai,* நகரமெய்யும் ஐகார உயிரும் சேர்ந்த உயிர்மெய் எழுத்து; the compound of 'n' and 'ai.'

*[ந் + ஐ – நை]*

*உயிர் மெய் எழுத்து வடிவம் தமிழிலிருந்து வடமொழி பெற்றது. ஆங்கிலம் அரைவளர்ச்சி நிலையிலேயே அசை (sylable) மொழியாக உள்ளது. அதனால்தான் தமிழ்க்குழந்தைகள் எழுத்துக்கூட்டலுக்கு இடர்ப்படுகிறார்கள். நைனா என்ற பெயரை* Nai Na *என்ற உயிர் மெய்க்கட்டமிட்டுக் கற்பித்தால் எளிதாய்ப் பயில்வர்.*

**நை²–தல்** *nai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. நசுங்குதல்; to be crushed, bruised. 2. தளர்தல்; to droop, languish, faint.

"*இடைநைவது கண்டு*" (திருக்கோ.134). **3.** வாடுதல் (வின்.); to fade. **4.** மனம் வருந்துதல்; to be wounded in one's feelings; to be distressed. "*நைந்து சாமவர்க்கே*" (திருநூற்.43). **5.** இரங்குதல்; to feel pity. "*நீ நல்காமையி னைவரச் சாஅய்*" (புறநா.146). **6.**சுருங்குதல்;to a dwindle, decrease."*நையாத வாயுளுஞ் செல்வமும்*" (அருட்பா.5பொது. 2). *நண்பன் குடும்பம் வறுமையில் மிகவும் நைந்துவிட்டது.* **7.** தனக்கே உரிய மாத்திரை அளவில் குறைதல்; to be shortened in quantity, as a vowel. "*வன்மைமே லுகர முறுவது நையும்*" (வீரசோ. சந்தி.2). **8.** நிலைகெடுதல்; to be injured. spoiled, over- ripe, as fruits; to be frayed. worn out, as cloth *மாம்பழம் பழுத்து நைந்து போச்சு.* **9.** கெடுதல் (வின்.); to waste away, perish. **10.** இற்றுப்போய் நூல்நூலாகப் பிரிதல்; to frayed; became threadbare. *அவர் உடல் நைந்த பழைய துணிபோல் கிடந்தது.* **11.** துன்பம்; sadness. **12.** தன்வயப்படாமை (அவசமாதல்); to forget oneself;to lose command of oneself. "அரிவை நைய" (சீவக.492).

*[நொய் → நை. ஒ.நோ. பொய் (உட்டுளை) → பை.நை → நைதல்.(வே.க) இது தன்வினை வடிவம்.]*

**நை³–த்தல்** *nai-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** நசுக்குதல்; to crush. **2.** அழித்தல்; to destroy."*வேலேகுறும்படைந்த வரண்கடந்தவர் நறுங்கள்ளி னாடுநைத்தலின்*" (புறநா.97). **3.** எரித்தல்; to burn. "*ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது*" (புறநா.240).

*[நொய் → நை. இது பிறவினை வடிவம்]*

**நை⁴** *nai,* இடை. (int.) இகழ்ச்சிக்குறிப்பு (வின்.); expr.signifying disdain or mockery.

**நைக்காட்டு–தல்** *nai-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கேலி காட்டுதல் (யாழ்ப்.); to ridicule, make one a laughing stock.

*[நை⁴ + காட்டு–தல்.]*

**நைகரம்** *naikaram,* பெ. (n.) **1.** துன்பம்; anxiety, care, distress. "*நைகர மொழிந்து*" (விநாயகபு.57:18). **2.** குறைவு; deficiency. "*நைகர மிலாவன்பி னங்கையார்*" (பெரியபு. அரிவாட்.12).

*[நை² → நைகரம்.]*

**நைகொதி** *nai-kodi,* பெ. (n.) அரைகுறையான கொதிப்புள்ளது (யாழ்ப்.); being half-boiled; being insufficiently or badly boiled.

*[நை² + கொதி.]*

**நைச்சாந்து** *nai-c-cāndu,* பெ. (n.) கைக்கு மெதுவாம்படி நன்றாயரைக்கப்பட்ட சுண்ணாம்பு (சுன்னக்கரை); well-ground mortar, fine plaster.

*[நை² + சாந்து]*

**நைச்சி** *naicci,* பெ. (n.) **1.** காக்கை (அக.நி.); crow. **2.** பாம்பு வகை (யாழ்.அக.); a kind of snake.

*[நைசியம்² → நைச்சி. நைசியம் = காக்கை]*

**நைச்சிகம்** *naiccigam,* பெ. (n.) *நைச்சியம்* (இ.வ.) பார்க்க; see *naicciyam.*

*[நைச்சியம்→ நைச்சிகம்]*

**நைச்சியம்** *naicciyam,* பெ. (n.) **1.** தாழ்மை; humility. "*செய்கின்ற நைச்சியத்தைச்*

*சிந்தித்து"* (திருவாய்.நூற்.16). 2. தாழ்வு, கயமை, இழிவு; lowness, meanness, baseness. 3. தன்வயப்படுத்துகை (உ.வ.); winning over to one's side.

*[நை[2] → நைச்சியம் = எதிரியைத் தன்வழியில் திருப்ப, எதிரியின் மனத்தில் மகிழ்ச்சியூட்டும் படிப் பேசுதல்]*

**நைச்சியம்பண்ணு-தல்** *naicciyam-paṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தன்வயப்படுத்துதல் (உ.வ.); to win over to one's side.

*[நைச்சியம் + பண்ணு-தல்.]*

**நைசல்[1]** *naišal,* பெ. (n.) நோய் (யாழ்.அக.); disease.

*[நைதல் → நைசல். த-ச திரிபு. தசை → சதை.]*

**நைசல்[2]** *naišal,* பெ. (n.) காக்கை; crow.

*[நசை → நைசல்.]*

ஒரு காக்கைக்கு உணவு வைத்தால் பத்துக் காக்கைகளை அழைப்பதும் இறந்துவிட்டால் நூறு காக்கைகளை அழைப்பதும் ஆன நசை கொண்டது காக்கை இனம்.

"காக்கை கரவாக் கரைந்துண்ணும் ஆக்கமும் அன்னநீ ரார்க்கே உள" (குறள், 527).

**நைசிகம்[1]** *naišigam,* பெ. (n.) *நைசியம்[1]* (வின்.) பார்க்க; see *naišiyam.*

*[நைசியம் → நைசிகம்]*

**நைசிகம்[2]** *naišigam,* பெ. (n.) *நைசியம்[2]* (வின்.) பார்க்க; see *naišiyam[2]*.

*[நைசியம் → நைசிகம்]*

**நைசிகரவேம்பு** *naišikara-vēmbu,* பெ. (n.) சூரத்து நிலவேம்பு; Surat chiretta. (சா.அக.).

**நைசியம்[1]** *naišiyam,* பெ. (n.) மூக்கில் விடும் சொட்டு மருந்து (சங்.அக.); medicine inhaled by the nose.

*[நை → நைசியம். நைவாக = துளித்துளியாக விடும் சொட்டுமருந்து]*

**நைசியம்[2]** *naišiyam,* பெ. (n.) காக்கை (சது.); crow.

*[நைசல் → நைசியம்]*

**நைசிரவம்** *naiširavam,* பெ. (n.) துவரை; red gram, Cajanus indicus. (சா.அக.).

**நைடதம்[1]** *naiḍadam,* பெ. (n.) வடமொழி நூலை (நைஷதம்) மூலமாகக் கொண்டு அதிவீரராமபாண்டியன் இயற்றிய தமிழ்க் காப்பியம்; a poem in Tamil by Adivīrarāmā-pāṇḍiyaṉ, adapted from Sri Harṣha's Naisadha.

*[நிடதம் → நைடதம்.]*

நைடதம் ஒரு தமிழ்க் காப்பியம். நிடதநாட்டு மன்னன் நளனுடைய கதையைக் கூறுவதால் நைடதம் எனப் பெயர் பெற்றது. நளனைப் பற்றியக் குறிப்பு, சிலப்பதிகாரத்தில் காணப்படுவதால் நளன்கதை தமிழ்நாட்டில் நீண்டநாட்களாக வழங்கி வந்தமை புலனாகும்.

நைடதம், வடமொழியில் கர்ச புலவர் இயற்றிய *'நைச(ஷ)தம்'* என்னும் வனப்பின் (காப்பியத்தின்) மொழி பெயர்ப்பு. வடமொழி நூலின் சுவை குன்றாமல் அதிவீரராம பாண்டியர் மொழி பெயர்த்துள்ளார் என்று இருமொழியிலும் இந்த நூல்களைக் கற்றோர் கூறுகின்றனர். இந்நூலின் முதலில் நிடத நாட்டின் வளமும் மாவிந்த நகரத்தின் சிறப்பும் (நாட்டுப்படலம், நகரப்படலம் என்ற படலங்களிற்) கூறப் பெற்றுப் பின்னர் அன்னத்தைக் கண்ணுற்ற படலம் முதலாக அரசாட்சிப் படலம் ஈறாக இருப்பதாறு படலங்களால்

1173 செய்யுட்களில் நளன்கதை கூறப்பெறுகிறது. *'நைடதம் புலவர்க்கவுடதம்'* என்று வழங்கும் சிறப்புரைக் கேற்ப. இந்நூல் புலவர்களின் அறிவுக்கு விருந்தாய்க் கற்பனைக் கருவூலமாக விளங்குகிறது. இந்நூலில் சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் மணிமேகலை முதலிய பழைய தமிழ் நூல்களின் கருத்துக்களும் சொற்றொடர்களும் விரவியுள்ளன.

இந்நூலின் தனிச்சிறப்பு, அன்னம் தமயந்தியிடம் நளனுக்காகத் தூது சென்ற பகுதியைக் கூறுவது. இதை அன்னத்தைத் தூதுவிட்ட படலத்திற் காணலாம். தூதரின் இலக்கணத்திற்கு இலக்கியமாக அன்னம் விளங்கும்படி இந்நூலாசிரியர் அமைத்திருப்பது பாராட்டத் தக்கது. இந்நூலில் தமிழ்ப் பண்பாட்டுக்கு மாறாகப் பெண்பாற் கைக்கிளை வந்துள்ளது.

*"அமிழ்தினை முனிந்து சாரல் அருவிதாழ் மலயமீன்ற தமிழினம் இனிய தீஞ்சொற் றையல்"* (சுயம்வரப்படலம்.140) எனக் கலைமகள் தமயந்தியை விளக்குங் கூற்றாக கூறியிருப்பதைக் கொண்டு இந்நூலாசிரியர் தமிழின் சுவையிலே ஊறியவ ரென்பதை அறியலாம்.

இந்நூல் காதலின் சிறப்பையும் சூதின் கெடுதியையும் நன்கு விளக்குகிறது. இந்நூலிலுள்ள செய்யுட்கள் மிக்க கடுமையும், மிக்க எளிமையுமின்றிச் செம்பாகமான நடையையுடையன.

இந்நூலை இயற்றியவர், பாண்டிய மன்னர்களில் ஒருவரான அதிவீரராம பாண்டியர். இவர் சிவனிடம் மிகுந்த அன்பு கொண்டவர். காசிக்காண்டம், திருக் கருவையந்தாதி முதலிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

நறுந்தொகை அல்லது வெற்றிவேற்கை என்னும் குழந்தை இலக்கியமும் படைத்துள்ளார்.

"கற்கை நன்றே, கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே."

என்பது அந்நூலில் வரும் பொன்வரி.

**நைதிகை** *naidigai,* பெ. (n.) **1.** ஊசிமல்லிகை (பிங்.); eared jasmine. **2.** முல்லைக் கொடி; smooth jasmine, Jasminum trichotomum.

**நைதெனல்** *naideṉal,* பெ. (n.) **1.** இரக்கக் குறிப்பு (யாழ்.அக.); expr.signifying pity, sympathy. **2.** மெலிதற் குறிப்பு (சது.); expr.signifying thiness. **3.** மனநோதற் குறிப்பு (வின்.); expr.signifying grief.

*[நை → நைது + எனல்]*

**நைந்தசோறு** *nainda-šoṟu,* பெ. (n.) பதனழிந்த சோறு; stale cooked rice; rotton cooked rice. (சா.அக.).

*[நை → நைந்த + சோறு. நை → நைதல்= குழைதல், வாடல்]*

**நைந்தபழம்** *nainda-paḻam,* பெ. (n.) கனிந்து இளகிய பழம்; over riped fruit. (சா.அக.).

*[நை → நைந்த + பழம். நை → நைதல் = இளகுதல், பதனழிதல்]*

**நைந்தான்** *naindāṉ,* பெ. (n.) மெலிந்தான்; weak person.

*[ நை$^{2}$ → நைந்தான்]*

**நைந்திகை** *naindigai,* பெ. (n.) முல்லை மலர் (மலை.); trichotomus-flowering smooth jasmine.

*[நைதிகை = ஊசிமல்லிகை. நைதிகை → நைந்திகை.]*

**நைந்து** *naindu,* வி.எ. (adv.) மனமிரங்கி; pity.

*"நைந்துள்ளி யுகுவது போலுமென் னெஞ்சு"* (கலித்.33:16).

*[நை → நைந்து. நை + து ]*

**நைந்தோ** *naindō,* பெ. (n.) பள்ளர் இனமக்கள் தம் தலைவரை அழைக்குஞ் சொல் (இ.வ.); an expression used by Paḷḷars in villages in addressing masters.

*[நைந்தை = தலைவன். நைந்தை → நைதோ.]*

தன்வாழ்வுக்கும், பின் தலைமுறைக்கும் பாடுபட்டவனைப் பாட்டன் என்று கூறுவதுபோல், உழைத்து நைந்து போன தந்தையை நைந்தை என அழைக்கும் மரபு இருந்தது.

**நைநையெனல்** *nai-nai-y-eṉal,* பெ. (n.) 1. இகழ்ச்சிக்குறிப்பு; expr. signifying contempt. *நைநையென்று அவனைத் திட்டிக்கொண்டேஇருக்கின்றான்.* 2. குழந்தை விடாது அழுது தொந்தரவு செய்தல் குறிப்பு; expr. signifying fretting cry, puling as of children. *வயிற்றுவலியால் குழந்தை நைநையென அழுதுகொண்டே இருக்கிறது.*

*[நை² + நை – நைநை + எனல். நய் → நை ]*

**நைப்பாசை** *naippāšai,* பெ. (n.) நிறைவேறாது எனத்தெரிந்தும் அது எப்படியாவது நிறைவேறிடாதா என்ற எதிர்பார்ப்பு; fond hope.

*[நம்பு + ஆசை – நம்பாசை → நப்பாசை → நய்ப்பாசை → நைப்பாசை. ]*

**நைப்பாளை** *nai-p-pāḷai,* பெ. (n.) ஆடு தின்னாப் பாளை; ulcer plant, *Aristolochia bracteata.* (சா.அக.).

**நைப்பு** *naippu,* பெ. (n.) ஈரப்பசை; moisture. *தரை நைப்பாய் இருக்கிறது; கீழே உட்காராதே*

*[நசிப்பு → நைப்பு. ]*

**நைப்பூதிகம்** *naippūdigam,* பெ. (n.) சூலி மரம்; toon tree, *Cedula toona.*

**நைப்பூலிகம்** *naippūligam,* பெ. (n.) காரைச் செடி; thorny webera-can rhium parviflorum. (சா.அக.)

**நைபடு–தல்** *nai-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நசுக்கப்படுதல்; to be crushed.

*[நய் → நை + படு–தல். ]*

**நைபத்தியம்** *naipattiyam,* பெ. (n.) நடிப்பவன் கொள்ளும் வேடம் (இலக். அக.); costume of an actor.

*[நை(ப்)பு + அத்து + இயம். ஈரங் கலந்த மாவைப்பூசி (அரிதாரம்) நடிப்பவன் கொள்ளும் வேடம் ]*

**நைபவர்** *naipavar,* பெ. (n.) 1. வறியவர்; pauper. 2. நிலைமை தாழ்ந்தவர்; cheap person. *"நைபவ ரெனினும் நொய்ய வுரை யேல்"* (கொன்றை. 56).

*[நய்பு + அவர்– நய்பவர் → நைபவர் ]*

**நைபாரிசம்** *naipārišam,* பெ. (n.) செங்கரும்பு: red sugar-cane. (சா.அக.).

*[நைபார் + இசம். ஈரப்பசையுடைய கரும்பு ]*

**நைபாலி**[1] *naipāli,* பெ. (n.) அடுக்குமல்லிகை (மலை.); double jasmine.

**நைபாலி**[2] *naipāli,* பெ. (n.) 1. சிவந்த செய் நஞ்சு (பாடாணம்); red arsenic. 2. சீர்பந்த செய் நஞ்சு (பாடாணம்); a prepared poison. 3. நீலம்; blue. (சா.அக.).

**நைபாலிகம்** *naipāligam,* பெ. (n.) 1. செம்பு; copper. 2. பித்தளை (யாழ்.அக.); brass.

**நைபானி** *naipāṉi,* பெ. (n.) **நைபாலி**[1] **(சங்.அக.)** பார்க்க *see naipāli*[1].

*[ நைபாலி → நைபானி ]*

**நைமாமிசம்** *naimāmišam,* பெ. (n.) வெங்காயப் பூடு; onion plant, Allium cepa. **(சா.அக.).**

**நைமிசாரண்யம்** *naimi-šaraṇiyam,* பெ. (n.) பனிமலைக்கு அருகில் உள்ள காடு; a forest near Himalaya mountains.

*[ நேமி → நைமி + சாரண்யம். நேமி = சக்கரம். ]*

இருடிகள் தாங்கள் தவமியற்றுதற்கு ஏதுவான நல்ல இடம் அருளுக என நான்முகனிடம் வேண்ட நான்முகன் ஆய்ந்து தருப்பையொன்றை எடுத்து நேமி (சக்கரம்) போற்செய்து அதனை உருட்டி இதன்பின் செல்க, இது எவ்விடத்து நிற்குமோ அந்த இடமே தவமியற்றுதற்கு ஏதுவான இடம் எனச் சொல்ல, அதன்படியே நேமி நின்ற இடமாதலால் இதற்கு இப்பெயர் வந்தது என்பர்.

**நையத்தட்டு–தல்** *naiya-t-taṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) தூளாகும்படி தட்டுதல்; striking to make into powder. **(சா.அக.)**

*[ நை → நைய + தட்டு–தல். ]*

**நையநருக்கு–தல்** *naiya-narukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) **நையநறுக்கு–தல்** பார்க்க; see *naiya-naṟukku-. அவனை நைய நருக்கி விட்டார்கள்.*

*[ நொய் → நை → நைய + நருக்கு–தல். நறுக்கு → நருக்கு. ]*

**நையநறுக்கு–தல்** *naiya-naṟukku-,* 5 செ. குன்றாவி. (v.t.) **1.** பொடியாக்குதல்; to pulverise, comminute. **2. நையப்புடை–பார்க்க;** *see naiya-p-puḍai.* **(சா.அக.).**

*[ நொய் → நை → நைய + நறுக்கு–தல். ]*

**நையநறுங்கத்தட்டு–தல்** *naiya-naṟuṅga-t-taṭṭu-* 5 செ.குன்றாவி. (v.t.) மிக நொறுங்கச் சதைத்தல்; to pulverise.

*[ நை → நைய + நறுங்க + தட்டு–தல். ]*

**நையப்பாடு–தல்** *naiya-p-pāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பல்லைக்காட்டிக் கெஞ்சுதல் (இ.வ.); to cringe.

**மறுவ.** நையம் பாடுதல்

*[ நை[2] → நைய + பாடு–தல். ]*

**நையப்புடை–த்தல்** *naiya-p-puḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** உடம்பு தளர நன்றாக அடித்தல்; to belabour, thrash soundly. *திருடனை விரட்டிப்பிடித்து நையப்புடைத்துக் காவலில் வைத்தனர். ஆசிரியர் மாணவனைப் பிரம்பால் ஆறுமுறை நையப் புடைத்ததால் கை புடைத்துக் கொண்டது.* **2.** மொத்தையாக்குதல்; to beat into a pulpy mass, Mashing.

*[ நொய் → நை → நைய + புடை–த்தல். ]*

**நையம்**[1] *naiyam,* பெ. (n.) **நைசியம்**[1] (யாழ்.அக.) பார்க்க; *see naišiyam*[1].

**மறுவ.** நச்சியம்.

*[நைசியம்[1] → நையம் ]*

**நையம்**[2] *naiyam,* பெ. (n.) **நைசியம்**[2] (யாழ்.அக.) பார்க்க; *see naišiyam*[2].

*[ நைசியம்[2] → நையம். ]*

**நையம்பாடு–தல்** *naiyam-pāḍu-,* **5.** செ.கு.வி. (v.i.) நையப்பாடு–தல் (இ.வ.) பார்க்க; *see naiya-p-pāḍu-.*

*[ நையப்பாடு–தல் → நையம்பாடு–தல்.]*

**நையமசிதல்** *naiya-mašidal,* பெ. (n.) நன்றாய் அரைபடுகை; grinding to fineness. (சா.அக.).

*[ நை → நைய + மசிதல் ]*

**நையல்** *naiyal-,* பெ. (n.) **1.** மெலியச் செய்யும் நோய்; emaciating disease. **2.** அம்மை நோய்; small-pox.

*[ நை² → நையல். ]*

**நையவேகல்** *naiya-vēgal,* பெ. (n.) சோறு முதலியன குழைகை; becoming soft by over boiling. *சோறு நையவெந்து போச்சு.*

*[ நை → நைய + வேகல்]*

**நையாடல்** *naiyāḍal,* பெ. (n.) எண்ணெய் விளையாட்டு (திவ். திருப்பா. 4 வியா.); oil bath.

*[ நெய் → நை + ஆடல். ]*

**நையாண்டி** *naiyāṇḍi,* பெ. (n.) **1.** நாடோடிப் பாட்டுவகை; a kind of papular song. *"இரண்டு நையாண்டி பாடினான்"* (திருவாலவா. 54:23). **2.** கேலி; scoff, ridicule, mockery, sarcasm. *யாரையும் நையாண்டி செய்யாதே* **3.** சிரிப்புச் சொல் (வின்.); jest, drollery.

**ம.** நையாண்டு.

*[ நை⁴ → நையாண்டி = குறையை அல்லது தவற்றைச் சிரிக்கத்தகுந்ததாக ஆக்கும் பேச்சு அல்லது செயல்.]*

*[ நகை + ஆண்டி –நகையாண்டி → நையாண்டி.]*

**நையாண்டிமேளம்** *naiyāṇḍi-mēḷam,* பெ. (n.) நாட்டுப்புறக் கலைகளான கரகம், காவடி முதலியவற்றுக்கு இசைக்கப் படும் ஒருவகை இசைக் கருவி; an ensemble of musical instruments.

*[ நையாண்டி + மேளம் ]*

உறுமிமேள வகை. பேரிசை (பாண்டு) இசைக்காரர் போன்று ஒன்றே போல உடை உடுத்தி, மேளம் இசைப்பார்கள். பாடல்கள் கருநாடக இசையாக மட்டும் இல்லாமல் பலவகைப் பாடல்களையும் பாடுவார்கள்; ஆடுவார்கள்.

**நையாண்டிப்புலவர்** *naiyāṇḍi-p-pulavar,* பெ. (n.) 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்; Tamil poet lived in 19th century.

இவர் இராமச்சந்திர கவிராயர் காலத்து வாழ்ந்தவர்; தொண்டை நாட்டினர். இவர் பள்ளிகொண்டான் என்னும் பரதவன்மீது

"வள்ளி கொண்டான் மயிலேறிக் கொண்டான் மதிபோலு மலை
வெள்ளி கொண்டான் விடையேறிக் கொண்டான் விண்ணவர்க்கமுதம்
துள்ளி கொண்டான் சுபசோபனஞ் சேர்
பள்ளி கொண்டான் புகழேறிக் கொண்டா னென்று பார்க்கவென்றே"

என்று புகழ்பாடிப் பரிசு பெற்றவர்.

**நைலம்** *nailam,* பெ. (n.) கடற்பாசி மருந்து (M.L.); iodine.

*[ நீலம் → நைலம்.]*

**நைவரு–தல்** *nai-varu-,* 18 செ.கு.வி.(v.i.) நைவா–தல் பார்க்க; see *naivā-.*

*[ நைவா–தல் → நைவரு–தல்]*

**நைவளம்** *naiyalam,* பெ. (n.) **1.** பாலைப் பண்வகை; a secondary melody-type of the

Pālai class. *"நைவளம் பழுநிய பாலை வல்லோன்"* (குறிஞ்சிப். 146.). **2.** குறிஞ்சி யாழ்த்திற வகை (பிங்.); a secondary melody-type of the kuṟiñji class. **3.** தாளத்தையுடைய பாட்டு; a kind of musical song. *"நைவளம் பூத்த நரம்பியை சீர்ப் பொய் வளம்"* (பரிபா. 18:20).

**நைவனம்** *naivaṉam,* பெ. (n.) **1.** நடனம்; dancing. **2.** வீரன்; warrior, hero.

**நைவா–தல் (நைவருதல்)** *nai-vā-,* 18 செ.கு.வி. (v.i.) **1.** வருந்துதல்; to be distressed. *"நைவாரா வாயமக டோள்"* (கலித். 103: 66). **2.** இரங்குதல்; to pity; to be merciful. *"நல்காமையினைவரச் சாஅய்"* (புறநா. 146).

*[ நை[4] + வா–தல்.]*

**நைவு** *naivu,* பெ. (n.) **1.** வாடினது; anything injured or spoiled. **2.** மிகப் பழுத்தது; over-ripenness. **3.** வருந்துகை; suffering. **4.** நோய்; disease. *"நாளு நைவகன்ற"* (தைலவ. தைல. பாயி. 1.).

*[ நை[4] → நைவு ]*

**நொ[1]** *no,* நகர மெய்யும் ஒகர உயிரும் சேர்ந்து பிறந்த உயிர் மெய் எழுத்து; the compound of 'n' and 'o'.

*[ ந் + ஒ - நொ ]*

**நொ[2]** *no,* பெ. (n.) **1.** துன்பம் (தொல். எழுத்து. 72); pain, distress, suffering. *"நொவ்வுற லெய்தி"* (கந்பு. திருவவ. 39.). **2.** நோய் (வின்.); disease, sickness.

**ம., க.** நோ
*[ நோ → நொ. ஓரெழுத்து ஒருமொழி. ]*

**நொ[3]** *no,* பெ. (n.) மெத்தெனப் பறக்கும் பறவையினம்; a kind of flying bird softly, gently. *"தாஅ வஞ்சிறை நொப்பறை வாவல்"* (குறுந். 172:1).

**நொ[4]** *no,* பெ. (n.) நொய்மை (திவா.); lightness, slenderness. *"நொப்புணை வலியா"* (பெருங். உஞ்சைக். 53: 3).

**ம.** நொச்சு; **க., தெ., து.** நுசி;
*[ நோ → நொ. ]*

**நொ[5]–தல்** *no-,* 17 செ.கு.வி.(v.i.) & 16 செ.குன்றாவி. (v.t.) துன்புறுதல்; to suffer. *"நொக்கொற்றா"* (தொல். எழுத்து. 72, உரை). *'நொப்போவெள வுரிஞ்"* (நன். 137).

*[ நோ → நொ → நொ –தல் ]*

**நொக்கட்டா** *nokkaṭṭā,* பெ. (n.) நொக்கொட்டா பார்க்க; *see nokkoṭṭā.* (சா.அக.).

**மறுவ.** இலக்கோட்டிப் பழம்

**நொக்கல்** *nokkal,* பெ. (n.) தின்பண்டவகை; a kind of sweetmeat. *"நொக்கல் பால் கோவா"* (பஞ்ச. திருமுக. 1837).

**நொக்காங்குலை** *nokkāṅ-gulai,* பெ. (n.) நுங்குக்குலை; bunch of young palmyra fruits. (சா.அக.).

*[ நுங்குக்குலை → நொக்காங்குலை (உ.வ.) ]*

**நொக்கு[1]–தல்** *nokku-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** உண்ணுவதால் குறையச் செய்தல்; to reduce by eating, as the quantity of grain. *"பன்றி தினைப் புனத்தை நொக்குகை யினாலே"* (மலைபடு. 103, உரை). **2.** அடித்தல்;

to beat. *"சுக்குமாந்தடி கொண்டு நொக்கி விடுவான்"* (நந்த. கீர்த்.). 3. மிகுதியாகத் திட்டுதல் (இ.வ.); to abuse violently.

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுகு → நொகு → நொக்கு → நொக்கு–தல். (வே.க.)]*

**நொக்கு[2]** *nokku,* பெ. (n.) வெடிப்பு (யாழ்.அக.); fissure, cleft.

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுகு → நொகு → நொக்கு]*

**நொக்கென** *nokkeṉa,* வி.எ. (adv.) உடனே; instantly; immediately. *"நொக்கெனக் கண்ணன் கழல்க ணினை மினோ"* (திவ். திருவாய். 4. 1:3).

*[நொக்கு + என.]*

**நொக்கொட்டா** *nokkoṭṭā,* பெ. (n.) மரவகை(L.); Chinese medlar, *Eriobotrya japonica.*

**நொங்கு[1]–தல்** *noṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விழுங்குதல்; to swallow. *"திங்களிரு நொங்க"* (தேவா. 1157, 3).

ம. நொங்ஙு

*[நுல் (துளை) → நுள் → நுழு → நுகு → நுங்கு → நொங்கு → நொங்கு–தல்]*

**நொங்கு[2]–தல்** *noṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) மெலிதல்; to become weak and emaciated. *"அங்கமு நொங்குதே"* (கணம் கிருஷ்ணையர். 1:2).

*[நுல் = மென்மை, சிறுமை, நுண்மை. நுல் → நுள் → நுளு → நுழு→ நுகு → நுங்கு → நொங்கு → நொங்கு –தல் (வே.க)]*

**நொங்கு[3]** *noṅgu,* பெ. (n.) பனை நுங்கு; pulpy kernel of a tender palmyra fruit.

*[நுங்கு → நொங்கு]*

**நொச்சி[1]** *nocci,* பெ. (n.) 1. வெண்ணொச்சி; five-leaved chaste tree. *"நொச்சி மாமலர் நிறத்தன"* (சீவக. 2163). 2. கருநொச்சி; three-leaved chaste tree. 3. **நொச்சித்திணை** பார்க்க; *see nocci-t-tiṇai. "நொச்சிப்படலம்"* (பு.வெ. 5). *"உட்கா தெதிரூன்றல் காஞ்சி யெயில் காத்தல் நொச்சி அதுவளைத்த லாகும் உழிஞை"* (பழம்பாடல்). 4. எயில் காக்கும் வீரர் சூடிய நொச்சிப்பூவைப் புகழும் புறத்துறை (பு.வெ. 5:1, கொளு); a minor theme eulogising the *nocci* garland worn by the warriors defending a fort. 5. எயில் காவல்; defence of a fort. *"அகத்தோன் வீழ்ந்த நொச்சி"* (தொல். பொருள். 68). 6. மதில்; surrounding wall, fortress. *"நொச்சிகாத் ததிகோர னோன்மையி னவணிருந்தான்"* (தணிகைப்பு.சீபரி. 342). *"உறையூர் நொச்சி யொருபுடையொ துங்கி"* (சிலப். 10:242). 7.சிற்றூர் (சூடா.); village, hamlet. *நொச்சிக்காடு.*

ம. நொச்சி; க., து. நெக்கி; தெ. நொச்சிலி.

**நொச்சி[2]** *nocci,* பெ. (n.) மருத்துவக் குணங்கொண்ட ஒரு மருந்து மரம்; a kind of medicial plant.

**மறுவ:** சிந்துவாரம், ஐந்திலை நொச்சி.

நொச்சி ஒரு சிறிய மரம். இதன் இலைகள் 5 பிரிவாக நீண்ட காம்புகளுடன் இருக்கும். இதன் பூக்கள் சிறியவை, நீலநிற முடையவை. ஆண்டு முழுமையும் பூக்கும். இந்தியாவில் எங்கும் பரவியுள்ளது. நாட்டு மருத்துவத்தில் அதிகம் பயன்படுகிறது. கட்டிகளைக் கரைக்க இதன் இலைகள் மிகவும் பயன்படுகின்றன. இதன் இலையைத் தண்ணீரில் போட்டுக் கொதிக்க வைத்து ஆவிபிடிக்க, நீர்க்கோவை நீங்கும். பல்வலி, இருமல், நீரேற்றம், இரைப்பு, காய்ச்சல்

முதலியவற்றிற்கு இதன் இலைகள் மருந்தாகின்றன. இதன் வேர்ப்பட்டையும் மருத்துவக் குணம் கொண்டது. பூவும், இலைக்காம்பும் அரத்தப் போக்கைக் கட்டுப் படுத்தும். சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி கூறும் நொச்சி வகைகள்:

1. ஆற்று நொச்சி
2. ஐந்திலை நொச்சி
3. கருநொச்சி
4. காட்டுநொச்சி
5. சிறுநொச்சி
6. நீர்நொச்சி
7. மயிலடி நொச்சி
8. மலை நொச்சி
9. மூவிலை நொச்சி
10. வயல் நொச்சி
11. வெண்ணொச்சி (சா.அக.).

**நொச்சி³** *nocci*, பெ. (n.) 1. சதகுப்பை (மருந்துப் பூடு); dill, Anethum rowa 2. பதினெண் மூலிகைகளிலொன்று; one of the eighteen drugs. (சா.அக.).

**நொச்சிக்கசங்கு** *nocci-k-kaśaṅgu*, பெ. (n.) கூடைகள் முடைய உதவும் நொச்சியின் சிறுகுச்சி (இ.வ.); stalks of nocci used in making plaited baskets.

*[ நொச்சி + கசங்கு. கசங்கு = கூடை முடையப் பயன்படும் சிறுகுச்சி ]*

**நொச்சிக்குப்பம்** *nocci-k-kuppam*, பெ. (n.) சென்னை மாவட்ட ஊர்; a village in Chennai district.

*[ நொச்சி + குப்பம்.]*

நெய்தல் நிலமக்கள் வலையர் என்றும், செம்படவர் என்றும் பரதவர் என்றும் வழங்கப் பெறுவர். அன்னார் வாழுமிடம் குப்பம் என்னும் பெயரால் குறிக்கப்படும். சென்னையைச் சேர்ந்த கடற்கரையில் பல குப்பங்கள் உண்டு. காட்டுக்குப்பம், கருங்குடிக்குப்பம், நடுக்குப்பம் சோலைக் குப்பம், குயில் குப்பம், நொச்சிக் குப்பம் போன்றவை பரதவர் வாழுமிடங்களே.

**நொச்சித்திணை** *nocci-t-tiṇai*, பெ. (n.) நொச்சி மாலைசூடி வீரர்கள் எயில்காத்தலைக் கூறும் புறத்திணை (பு.வெ. 5, கொளு); major theme describing the defence of a fort by warriors wearing nocci garlands.

*[ நொச்சி + திணை. திணை = ஒழுக்கம், புற ஒழுக்கம் ]*

**நொச்சிநியமங்கிழார்** *nocci-niyamaṅ-gilār*, பெ. (n.) கழகக்காலத் தமிழ்ப்புலவர்; Saṅgam poet.

**மறுவ.** நொச்சி நியக்கிழார்.

*[ நொச்சிநியமம் + கிழார் ]*

நொச்சிநியமம் ஊர்ப்பெயர். இன்று நொச்சியம் என்று வழங்குகிறது. வேளாண் மரபிரனர் வாழும் ஊர். புறநானூறு (293), அகநானூறு (52), நற்றிணை (17, 208, 209) ஆகியவற்றில் இவரது பாடல்கள் காணப்படுகின்றது.

நகர்ப்புறத்தே போர் நிகழும் காலத்தே, அரண் சூழ்ந்த நகரிலிருந்த நெடுமனை யொன்றிற்கு இவர் சென்று அங்கே இருந்து மறக்குடி மகளிரின் செயல் நலங்களைக் காணும் பேறு பெற்றார். தானை வீரரும் தானைத் தலைவரும் வாழும் வழியே வருகையில் பூ விற்கும் மகளிர் அத்தெருவில் வராது வேறு தெருக்களை நோக்கிச் செல்வது கண்டார். ஒரு வீரனது மனைக்குச் சென்று அவன்மனையாளைக் கண்டு சொல்லாடுங்கால் தாம் கண்ட இக்காட்சியைத் தெரிவித் தார். மறக்குடிமகளாகிய அவள், சான்றோரே! வள்ளுவன் யானை மேலிருந்து தனது தண்ணுமையை ஒலித்து, அரணுக்குப் புறத்தே முற்றி நிற்கும் பகைவரை யெறிதற்குச் செல்லும் வீரர்க்குக் காஞ்சிப்பூ உரியதாதலால், அதனைச் சென்று பெறுமாறு பணிப்பன். அவ்வொலி ஈண்டு மனையிடத்துள்ளார் செவியிற் கேட்குமாறு ஒலிக்கின்றது. போர்ப்பறை கேட்ட அளவிலே புறப்பட்டுச் செல்லற் பாலராகிய வீரருள் நாணமி ல்லாதார் சிலர் இப்பூக்கோள் குறித்த தண்ணுமையொலி கேட்கு மளவும் மனையில் இருப்பர். அவரை விரைய வருமாறு அழைப்பதும் அதன் கருத்தாகும். இத் தண்ணுமை யொலி கேட்டபின் பூவிலைப் பெண்டு, போர்தொடங்கி விட்டது; இனி ஆடவர் மனைக்கண் இரார்; அதனால் இம்மகளிர் நம்பால் பூக்கள் வாங்க மாட்டார் என்று

கருதி பிறர் மனைக்கண் செல்கின்றனர்; அளியள் என்று பூவிலைப் பெண்டின் பொருட்டு இரங்குவான்போல எடுத்துரைத்தாள். இது கேட்ட நொச்சி நியமங்கிழார் வியப்புமிகக் கொண்டு அவள் கூற்றுப் பொருளாகப் பாடிய பாட்டு:

*"நிறப்படைக் கொல்கா யானை மேலோன்*
*குறும்பர்க் கெறியு மேவற் றண்ணுமை*
*நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்*
*எம்மினும் பேரெழி லிழந்து வினையெனப்*
*பிறர்மனை புகுவள் கொல்லோ*
*அளிய டானே பூவிலைப் பெண்டே"*
(புறநா. 293.)

அகநானூற்றில் இவர் பாடிய பாடல் சிறப்புடையது. காட்டில் குறமகளிர் வேங்கைப் பூவைப் பறிக்கமுடியாமல் புலிபுலியென இரைச்சலிடுவதும், அதைக் கேட்ட குறவர் வில்லேந்தி ஓடிவருவதும், அவர்களைக் கொண்டு இம் மகளிர் தாம் வேண்டும் பூவைப் பெறுவதும் இவர்பாட்டில் அழகுறக்குறிக்கப் படுகின்றன. அப்பாடல்:

"வலந்த வள்ளி மரனோங்கு சாரற்
கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்
இன்னா விசைய பூசல் பயிற்றலின்
ஏகல் அடுக்கத் திருளளைச் சிலம்பின்
ஆகொள் வயப்புலி யாகுமஃ தெனத்தம்
மலைகெழு சீறூர் புலம்பக் கல்லெனச்
சிலையுடை யிடத்தர் போதரு நாடன்
நெஞ்சமர் வியன்மார் புடைத்தென அன்னைக்கு
அறிவிப் பேங்கொல் அறிவியேங் கொல்லென
இருபாற் பட்ட சூழ்ச்சி ஒருபாற்
சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோயெனச் செப்பா தீமே" (அகநா. 52).

மனை வாழ்வில் தலைவன் பிரிந்த விடத்து வேறு பட்டாற்றாத தலைமகட்குத் தோழி, தலைவன் அன்புநிலையை எடுத்தோதி ஆற்றுவிக்கும் திறம் இவரால் மிக்க நயமுறப் பாடப் பெறுகின்றது. களவின்கண் தலைவி அறத்தொடு நிற்கும் விரகும், வேண்டு மிடத்து வழங்கும் முன்னிலைப் புறமொழியும் இலக்கிய இன்ப ஊற்றாக உள்ளன.

"விறல் சாய் விளங்கிழை நெகிழ விம்மி
அறல்போல் தெள்மணி இடைமுலை நனைப்ப
விளிவிலா கலுழுங் கண்ணொடு பெரிதழிந்து
எவனினைபு வாடுதி சுடர்நுதற் குறுமகள்
செல்வர் அல்லர்நங் காதலர் செலினும்
நோன்மார் அல்லர் நோயே மற்றவர்
கொன்னு நம்பும் குரையர் தாமே
சிறந்த அன்பினர் சாயலும் உரியர்
பிரிந்த நம்மினும் இரங்கி அரும்பொருள்
முடியா தாயினும் வருவர் அதன்றலை
இன்றுணைப் பிரிந்தோர் நாடித்
தருவது போலுமிப் பெருமழைக் குரலே"
(நற். 208)

**நொச்சிநியமம்** *nocci-niyamam,* பெ. (n.) ஊர்ப்பெயர்; a village name.

நொச்சிநியமம், தெய்வநலம் பெற்ற ஊர்களில் ஒன்று. நொச்சிநியமங் கிழார் என்ற புலவர் வாழ்ந்த ஊர். நியமம் என்பது கோவிலைக் குறிக்கும். இப்போது இவ்வூர் நொச்சியம் என்று வழங்குகிறது. இப்பெயருடைய ஊர்கள் பல இருந்ததால், நொச்சிவேலி சூழ்ந்து பிறவற்றின் வேறுபடுதலின், இந்நியமம் 'நொச்சி நியமம்' எனப்பட்டது. இவ்வூர் திருச்சிராப் பள்ளியிலிருந்து முசிறிக்குச் செல்லும் வழியில் உத்தமர் கோயிலுக்கு அண்மையில் உள்ளது.

**நொச்சிமாலை** *nocci-mālai,* பெ. (n.) வீரர்கள் மதில் காத்தலைச் சிறப்பித்துக் கூறும் இலக்கிய வகை (யாழ்.அக.); a poem describing the defence of a fort.

*[ நொச்சி + மாலை. நொச்சி மலர் மாலையைச் சூடிய வீரர்கள் எயிலைக் காத்தலைக் கூறும் இலக்கியவகை ]*

'புறத்தூன்றிய மாற்றார்க் கோடலின்றி நொச்சிப் பூமாலை சூடித்தன் மதில்காக்குந் திறங் கூறுமொரு இலக்கிய வகை'
(தொன்னூல்.283.உரை)

**நொச்சியம்** *nocciyam,* பெ. (n.) நொச்சிநியமம் பார்க்க; *see nocci-niyamam.*

*[ நொச்சிநியமம் → நொச்சியம் ]*

**நொச்சில்** *noccil,* பெ. (n.) கருநொச்சி (பதார்த்த. 507); willow-leaved genderussa.

*[ நொச்சு → நொச்சில் ]*

**நொச்சுலம்** *nocculam,* பெ. (n.) முல்லை; cared jasmine, Jasminum angustifloium. (சா.அக.).

**நொச்சுளி** *nocculi,* பெ. (n.) ஆவிற்புங்கு; a variety of pungu, Dalbergia genus. (சா.அக.). ஒருவகைப் புங்கன்மரம்.

**நொசநொச–த்தல்** *noša-noša-,* 4 செ.கு.வி. (v.i.) சோறுங்கஞ்சியும் கட்டுவிட்டு நொந்து போதல்; to spoil, as of boiled rice etc.

*[ நுள் (குலைதல்) → நொள் → நொள → நொச → நொசநொச–த்தல் (மு.தா.) ]*

**நொசநொசவெனல்** *noša-noša-v-enal,* தொ.பெ. (vbl.n.) சோறு நொந்துபோன நிலையடைகை; mashed rice.

*[ நொச + நொச + எனல். ]*

**நொசி[1]–தல்** *noši-,* 2 செ.கு.வி. (v.i.) 1. நுண்மையாதல்; to be thin, slender, minute, as unable to bear a weight. *'நொசி மருங்குல்'* (தொல்.சொல். 368, இளம்பூ.). 2. செயற்கு அருமையாதல் to be difficult of observance, as a vow. *"நோற்றுணல் வாழ்க்கை நொசிதவத்தீர்"* (சிலப். 19: 223). 3. வருந்துதல் (சங்.அக.); to be in pain; to suffer. 4. வளைதல்; to bend; to be slanting. *"நொசிந்த நோக்கினன்"* (சீவக. 2010).

*[ நுல் (நோதல்) → நுள் → நொள் → நொய் → (நொயி) → நொசி → நொசி–தல். நுல் = நுண்மை, இளமை, மென்மை. நுல் → நுள் → நுளு → நுசு → நுசி → நொசி → நொசி–தல் (வே.க.) ]*

**நொசி[2]–தல்** *noši-,* 2 செ.கு.வி. (v.i.) 1. நைதல்; to be frayed, worn out; as cloth. *'நொசிந்த துகில்'* (தொல்.சொல். 330, உரை.). 2. குறைவுறுதல், to be insufficient, deficient. *"நொசிவிலாத பூசனை"* (விநாயகபு. 36:37)

*[ நொய் → நொசு → நொசி → நொசி–தல் (வே.க) ]*

**நொசி[3]–த்தல்** *noši-,* 4 செ.குன்றாவி. (v.t.) வருந்துதல்; to distress, afflict. *"நொசித்த வெம்முலை"* (சீவக. 654).

*[ நுல் (நோதல்) → நுள் → நொள் → நொள்ளாப்பு = வருத்தம். நொள் → நொய் → (நொயி) நொசி → நொசி–த்தல் (வே.க) ]*

**நொசி[4]** *noši-,* பெ. (n.) நுண்மை (அக.நி.); slenderness; fineness.

*[ நுல் (நுண்மை,சிறுமை) → நுள் → நுளு → நுசு → நுசி → நொசி ]*

**நொசிகம்** *nošigam,* பெ. (n.) வெண்சீந்தில்; moon creepper, Tinosphora Cordifolia. (சா.அக.).

**நொசிப்பு[1]** *nošippu,* பெ. (n.) கல்லறை; intense contemplation. *"நொசிப்பி னேழுறு முனிவர் நனியுணர்ந்து"* (பரிபா. 5: 37).

*[ நொசி[2] → நொசிப்பு. ]*

**நொசிப்பு[2]** *nošippu,* பெ. (n.) மனதை ஒருவழிப்படுத்துகை; concentration of mind (சா.அக.).

*[ நொசி → நொசிப்பு ]*

**நொசியிடை** *noši-y-idai,* பெ. (n.) நுட்பமான இடுப்பு; slender waist. (சா.அக.)

*[ நொசி + இடை. நொசி = வருத்தம் தரும் மெல்லிய இடை, நுண்ணிடை. ]*

**நொசிவு**[1] *noŝivu,* பெ. (n.) **1.** நுண்மை (தொல். சொல். உரி. 76); slenderness; fineness. **2.** நொய்ம்மை; lightness.

*[நுல் = நுண்மை, மென்மை, இளமை. நுல் → நுள் → நுளு → நுசு → நுசி → நொசி → நொசிவு (வே.க.)]*

**நொசிவு**[2] *noŝivu,* பெ. (n.) **1.** வருத்தம் (சூடா.); suffering. **2.** வளைந்த நிலை; state of being bent. *"நொசிவுடை வில்லின்"* (பதிற்றுப். 45:3).

*[நுல் (நோதல்) → நுள் → நொள் → நொய் → (நொயி) → நொசி → நொசிவு (வே.க. நுல்[4])]*

**நொட்டக்கை** *nottakkai,* பெ. (n.) **நொட்டாங்கை** (நெல்லை) பார்க்க; *see nottāngai.*

**மறுவ.** ஒரட்டுக்கை.

**நொட்டங்கை** *nottangai,* பெ. (n.) *நொட்டாங்கை* பார்க்க; *see nottāngai.*

**நொட்டாங்கை** *nottāngai,* பெ. (n.) இடது கை; left hand. *நொட்டாங் கையால் செய்யும் வேலை சிறக்காது.*

**மறுவ.** ஒரட்டாங்கை.

இடது கையைப் பீச்சாங்கை என்றும், நொட்டாங்கை என்றும் கூறுவது வழக்கம். நொட்டை என்றால் குறைவானது. இடதுகை பெரும்பாலோருக்குப் பலமான செய்கை களுக்குப் பயன்படாது. நல்ல செயல்களை அக்கையால் செய்ய விடமாட்டார்கள். பலவீனமான கை என்பதால் நொட்டாங்கை என்றும், மலங்கழுவப்பயன் படுவதால் பீச்சாங்கை என்றும் பெயர் பெற்றது.

*[ஒரட்டுக்கை = இடதுகை. ஒரட்டுக்கை → ஒரட்டாங்கை → நொரட்டாங்கை → நொட்டாங்கை]*

**நொட்டு**[1]**—தல்** *nottu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** ஏமாற்றுதல்; to cheat. **2.** புணர்தல்; to cohabit with.

*[நுள் (துளை) → நொள் → நொட்டு → நொட்டு—தல் இஃது ஓர் இழிவழக்கு. துளைத்தல் பொருள் குற்றப் பொருளில் வந்துள்ளது]*

**நொட்டு**[2] *nottu,* பெ. (n.) புணர்ச்சி; cohabitation.

*[நுள்(துளை) → நொள் → நொட்டு. (இழிவழக்கு.)]*

**நொட்டுச்சொல்** *nottu-c-col,* பெ. (n.) **நொட்டைச்சொல்** பார்க்க; see *nottai-c-col.*

*[நொட்டைச் சொல் → நொட்டுச் சொல்]*

**நொட்டை**[1] *nottai,* பெ. (n.) சுவை மிகுதியால் அண்ணத்தில் நாவைச் சேர்த்துக் கொட்டுகை; smack, as a sign of keen relish or anticipation. ***என்ன அந்தப் பழத்தைக் கண்டு நொட்டை யிடுகிறாய்?***

**க.** லொட்டெ,

ஒலிக்குறிப்புச் சொல்.

**நொட்டை**[2] *nottai,* பெ. (n.) குற்றம்; fault.

*[நுள் (துளை) → நொள் → நொட்டை (மு.தா.). துளையுள்ள சில பொருள்கள் குற்றமுள்ளனவாகக் கருதப்படுவதால் துளைப் பெயர் குற்றத்தைக் குறிக்கும். உள் → ஒள் → (ஒட்டை) → ஒட்டை = குற்றம். சுள் → (சொள்) → சொட்டு → சொட்டை = குற்றம்]*

**நொட்டைச்சொல்** *nottai-c-col,* பெ. (n.) குறைச்சொல்; fault-finding words. *நொட்டைச் சொல் சொல்லாதே* (உ.வ.)

மறுவ. நொண்டச்சொல்.

*[ நொட்டை² + சொல் ]*

**நொட்டைவிடு–தல்** *nottai-vidu-,* 20 செ.கு.வி. (v.i.) உண்டு முடித்த பின் பொந்திகை (திருப்தி) யைக் காட்டும் முறையாக நாக்கால் கொட்டி ஒலி எழுப்புதல்; utter a sound expressive of relish after a good meal; smack one's lips. *வயிறு முட்டச்சாப்பிட்டு நொட்டை விட்டாயிற்று.*

*[ நொட்டை + விடு–தல். ]*

**நொடி¹–த்தல்** *nodi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நொடிசொல்(லு)–தல் பார்க்க; *see nodi-šol-.* *"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு"* (கலித். 89). 2. உறுப்பை ஆட்டுதல், சைகைக் காட்டுதல்; to gesticulate, use action, in speaking. *இறால் நொடிக்கிறது போல நொடிக்கிறான்* (வின்.). 3. பால் முதலியன சுரத்தல்; to collect, as milk in the udder of a cow. *பால் இன்னும் நொடிக்க வில்லை* (யாழ்ப்.). 4. வணிகத்தில் இழப்படைதல் (நட்டமடைதல்); to break down completely, as a concern. *வணிகம் நொடித்துப் போயிற்று.* 5. சக்கரம் முதலியன கட்டுக் குலைதல்; to break, snap, as a wheel. *விழிப்பாயிரு! சக்கரம் நொடிக்கும்* (வின்.). 6. நடக்கும் போது கால்சிறிது வளைதல்; to bend slightly, as the legs in walking. *கால் நொடித்துக் கொண்டது.* 7. ஒடித்தல்; to break. *குச்சியை நொடிக்கிற மாதிரி விரலை நொடித்துவிடுவேன்.* 8. சாய்த்தல்; to tilt. *வலக்கைப்பக்கம் கொஞ்சம் நொடி.* 9. ஒப்புதல் இல்லை என்பதைத் தெரிவிக்க தலையை ஒரு பக்கமாகத் திருப்பித் தோள்பட்டையில் இடித்தல்; to turn one's head and hit the chin on the shoulder as a gesture of disapproval. *கேட்டதற்குப்பதில் சொல்லாமல் கழுத்தை நொடித்து விட்டுப் போய்விட்டான்.* 10. செல்வ நிலை தாழ்ந்து வறுமையடைதல்; to impoverish. 11. பொடியாகுதல்; to broken to pieces. 12. நிலை கெடுதல்; to destroy, to ravish.

ம. நொடிக்க; க., து. நுடி; தெ. நொடி.

*[ நுள் (வளைவு) → (நொள்) → நொடி → நொடி–த்தல் (மு.தா.) ]*

**நொடி²–த்தல்** *nodi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சொல்லுதல் (திவா.); to say, tell, speak, declare. *சும்மா நொடிக்காதே! கொஞ்சம் வாயை மூடு.* [க. நுடி; தெ. நொடுகு]. 2. சைகையால் அழைத்தல்; to call by signs. *"நெஞ்சைத் தன்பக்கலிலே நொடித்துக் கொண்டு"* (ஈடு, 5. 3: 7). 3. மனத்தாங்கல் உண்டாம்படிக் கோள் சொல்லுதல் (வின்.); to insinuate so as to stir up ill-will. [தெ. நொடுச்சு]. 4. பழித்தல்; to make unfavourable allusions; to use sarcasm. *"தாயுந்தமரு நொடிக்கின்றார்"* (அருட்பா, 3, ஆற்றாக்காத. 11). 5. கட்டை விரலையும் நடு விரலையும் சேர்த்துச் சொடக்குதல்; to snap, as with the thumb and the middle finger. *"நொடிப்பதோ ரளவில்"* (திவ். திருமாலை, 43). 6. அழித்தல் (பிங்.); to destroy, annihilate, reduce to primitive elements or atoms. *"நோக்காது நோக்கி நொடித்தன்றே"* (சி. போ. 1:4)

ம. நொடிக்க; க., து. நுடி; தெ. நொடி.

*[நொடி¹ → நொடி–. → நொடி²–த்தல். இது பிறவினை. ]*

**நொடி³–தல்** *nodi-,* 2 செ.குன்றாவி. (v.t.) சொல்லுதல்; to say, tell, speak, declare. *"சென்றது நொடியவும் விடாஅன்"* (மலைபடு. 545).

ம. நொடிக்க; க., து. நுடி; தெ. நொடி.

*[நொடி¹ → நொடி³ → நொடி–தல் இது தன்வினை.]*

**நொடி⁴–தல்** *nodi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ஒடிதல் (நெல்லை); to break. *பந்தல் கால் நொடிந்து கீழே விழுந்து விட்டது.* 2. மனம்தளர்தல்; to be broken. *அப்பாவை இழந்தபின் அவன் மிகவும் நொடிந்துவிட்டான்.* 3. பொடியாகுதல்; to broken to pieces.

*[நொடி¹ → நொடி⁴ –தல்.]*

**நொடி⁵** *nodi,* பெ. (n.) 1. நோய் என்பதோடு இணைந்துவரும் சொல்; word, phrase, language, speech. *"புதல்வரை மருட்டும் பொய்ந்நொடி பகரவும்"* (பெருங். உஞ்சைக். 33: 72). 2. முதுமொழி; wise saying. *"பிசியு நொடியும்"* (பெருங். உஞ்சைக். 33:175). 3. புதிர் (சூடா.); riddle, enigma. 4. கதை; story. 5. செய்யுள்; stanza. *"சடகோப னொடியாயிரத் திப்பத்தும்"* (திவ். திருவாய். 10. 5:11)

ம., தெ. நொடி.

*[நொடி¹ → நொடி⁵ ]*

**நொடி⁶** *nodi,* பெ. (n.) 1. ஓசை; noise. *"அமைக்கண் விடுநொடி"* (அகநா. 47). 2. கையின் கட்டை விரலையும் நடுவிரலையும் தெறித்து உண்டாகும் ஒலி; crack or snap, as of the thumb and the middle finger. 3. கண்ணை இமைப்பதற்கு அல்லது விரலை நொடிப்பதற்கு ஆகும் நேரம் போன்ற மிகக் குறைவான நேரம்; instant, as the time-measure of the snap of the finger. *"கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை"* (தொல். எழுத்து. 7). *நொடிப் பொழுதில் வந்துவிடு. "நொடிப்போதும் வீணிடேல்"* (பழ). 4. நோய்த் துன்பம்; ailment. *நோய் நொடியின்றி வாழ வேண்டும்.* 5. வினாடி; second. *அறுபது நொடி ஒரு நிமயம்* (நிமிடம்).

ம., தெ. நொடி.

*[நுள் → (நொள்) → நொடி. (மு.தா.) ]*

**நொடி⁷** *nodi,* பெ. (n.) வண்டிப் பாதையிலேற்பட்ட குழிப்பள்ளம்; ruggedness. of road, rut. *பாதை நொடியாயிருக்கிறது.* (உ.வ.)

*[நுல் (துளை) → நுள் → நொள் → நொடு → நொடி. (வே.க.) ]*

**நொடி⁸** *nodi,* பெ. (n.) 1. பொடி; powder. 2. புழுதி; dust.

*[நுள் → நொள் → நொடி. (சு.வி.) ]*

**நொடிக்கதை** *nodi-k-kadai,* பெ. (n.) விடுகதை (வின்.); riddle in the form of a story.

*[நொடி = புதிர், விடுகதை. நொடி⁶ + கதை ]*

**நொடிசிரங்கு** *nodi-širangu,* பெ. (n.) சொறி சிரங்கு (M.L.); itch, scabies.

*[நொடி⁶ + சிரங்கு. சிரங்கு = புண் ]*

**நொடிசொல்(லு)–தல்** *nodi-šol(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) 1. புதுச்செய்தி கூறுதல்; to speak of strange things. *'பேய் நொடி சொன்னாற் போல'* (கலித். 89, உரை). 2. விடுகதை சொல்லுதல் (வின்.); to propose riddles, set conundrums. 3. பகடி செய்தல் (வின்.); to crack jokes.

*[நொடி⁵ + சொல்(லு)–தல் ]*

**நொடித்தான்மலை** *nodittāṉ-malai,* பெ. (n.) அழித்தல் தொழிலைச் செய்யும் சிவனின் பனிமலை (பிங்.); Mount Kailāsa, as belonging to Šiva the Destroyer. *"நொடித் தான்மலை யுத்தமனே"* (தேவா. 1166, 1.)

*[ நொடி² → நொடித்தான்+மலை. நொடி = அழித்தல். அழித்தல் தொழில் செய்யும் சிவன் இருக்கும் பனிமலை. ]*

இராவணன் இசையில் சிவன் மயங்கி இருந்தபோது பனி (கயிலாய) மலையை இராவணன் அடியோடு கையால் பெயர்த்ததாகவும், சிவன் கால்விரலால் மலையை அழுத்தி கைகளை நசுக்கியதாகவும் ஒரு தொன்மைக் கதையுண்டு.

**நொடித்துப்போ–தல்** *nodittu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) நிலை குலைதல்; to become straitened in circumstances; to become a bankrupt. *அந்தச் செல்வந்தர் நொடித்துப் போனார். தொழில் நொடித்துப் போனதற்கு அவரே காரணம். நல்லாவாழ்ந்தார், இப்போது நொடித்துப் போனார்.*

*[ நொடி² → நொடித்து + போ–தல். நொடித்துப்போதல் = வருமானம் அல்லது பொருள் இல்லாமல் ஒருவரின் குடும்பம், வாழ்க்கை, தொழில் சீர்குலைதல் ]*

**நொடிப்பவித்திரம்** *nodi-p-pavittiram,* பெ. (n.) ஆசனத்தில் புரைவைத்துப் புண்ணுண் டாக்கும் நோய்வகை; fistula in ano, piles.

*[ நொடி⁶ + பவித்திரம். Skt. பகந்தர → த. பவித்திரம் = புண்நோய் ]*

**நொடிப்பவுந்திரம்** *nodi-p-pavundiram,* பெ. (n.) ஆண்குறிக்கு அருகில் உண்டாம் கட்டிவகை (M.L.); urinary fistula.

*[ நொடி⁶ + பவுந்திரம். Skt. பகந்தர → த. பவுந்திரம் ]*

**நொடிப்பு** *nodippu,* பெ. (n.) கணப்பொழுது; instant momemt. *"நொடிப்பின் மாத்திரை நூற்றுவில் லேகுவ"* (சீவக. 1773).

*[ நொடி⁶ + நொடிப்பு ]*

**நொடிபயிற்று–தல்** *nodi-payiṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பேச்சுக் கற்பித்தல்; to teach to speak, as to a baby. *'நொடிபயிற்றுவாள்'* (சீவக. 363, உரை).

*[ நொடி⁵ + பயிற்று–தல். ]*

**நொடிபயிற்றுவாள்** *nodi-payiṟṟuvāḷ,* பெ. (n.) தாயர் ஐவரில் ஒருவர் (சிலப். 16:85 அரும்.); a kind of mother.

*[ நொடி + பயிற்றுவாள். ]*

ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒலுறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் எனத்தாயர் ஐவர் ஆவர். (சிலப். அரும். பக்–429)

**நொடிபாராட்டு–தல்** *nodi-pārāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) விடுகதை சொல்லுதல் (யாழ்.அக.); to propose riddle, set conundrums.

*[ நொடி⁵ + பாராட்டு–தல். நொடி = விடுகதை ]*

**நொடிபோக்கு–தல்** *nodi-pōkku-,* 5 செ.கு.வி. (v.i.) தாளத்திற்கேற்பக் கையை நொடித்தல்; to snap the fingers in marking time. *"அசை யுஞ்சீரு மளந்து நொடிபோக்கி"* (பெருங். வத்தவ 5:5)

*[ நொடி⁶ + போக்கு–தல். ]*

**நொடியவிழ்–த்தல்** *nodi-y-aviḻ-,* 4 செ.கு.வி. (v.i.) பிதிர் (புதிர்) விடுத்தல்; to solve a riddle or conundrum.

*[ நொடி + அவிழ்–த்தல். நொடி = புதிர். அவிழ்த்தல் = விடுவித்தல், புதிரை விடுவித்தல் ]*

**நொடியாதிப்பூடு** *nodiyādippūdu,* பெ. (n.) கொத்தான்; air creeper. (சா.அக.).

**நொடிவரை** *nodi-varai,* வி.எ. (adv.) விரைவில்; in a moment; in a shorttime. *"செந்நெறி போய்ப் புகுமி னொடிவரையே"* (திருநூற். 33)

*[ நொடி[6] + வரை. நொடிப் பொழுதிற்குள் ]*

**நொடிவிடு–தல்** *nodi-vidu-,* 18 செ.குன்றாவி. (v.t.) சொடுக்குதல்; to snap, as with the thumb and the middle finger. *"நொடிவிடுவன்ன காய் விடு கள்ளி"* (நற். 314)

*[ நொடி[2] + விடு–தல். ]*

**நொடிவிழு–தல்** *nodi-vilu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வண்டிப்பாதையில் குழிப்பள்ளம் விழுதல்; to be full of cross-ruts, as a road. *நொடியிருக்கும், வண்டியைப் பார்த்து ஓட்டு.* 2. கோணலாதல். (வின்.); to become crooked.

*[ நொடி + விழு–தல் ]*

**நொடிவேதை** *nodi-vedai,* பெ. (n.) நொடிப் பொழுதில் அதாவது சிறிய கால அளவில் செய்யும் மாயக் கலை (வாத வித்தை); transonuling metals into gold in a minute time with in a short time. (சா.அக.).

*[ நொடி + வேதை. வ.வித்தை → த. வேதை ]*

**நொடு–த்தல்** *nodu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. விலை சொல்லி விற்றல்; to sell. *"மீனொடுத்து நெற்குவைஇ"* (புறநா. 343). *"பசுமீன் நொடுத்த வெண்ணெல் மாத்தயிர் மிதி"* (அகநா. 340: 15). 2. சொல்லுதல்; to tell.

*[ நுள் → நொள் → நொடு → நொடு–த்தல். (சு.வி. 45) ]*

**நொடுக்குநொடுக்கெனல்** *nodukku-nodukkenal,* பெ. (n.) 1 தட்டுதலால் உண்டாம் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying, slight tapping or knocking noise. 2. நடக்கும் போது பாதக்குறட்டில் உண்டாகும் ஒலிக்குறிப்பு; clacking, as of wooden sandals in walking. 3. அலப்பற்குறிப்பு; talking fast, chattering. 4. படபடத்தற்குறிப்பு; being fidgety, restless, rude.

*[ நொடுக்கு+ நொடுக்கெனல். ]*

**நொடுநொடு–த்தல்** *nodu-nodu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. துடித்தல்; to be fidgety, restless, 2. துடுக்காயிருத்தல்; to be rude, mischievous roguish. *நொடுநொடுத்த பிள்ளை.*

*[ (நுள்) → நொடு → நொடுநொடு → நொடுநொடு–த்தல் (மு.தா.) ]*

**நொடுநொடெனல்** *nodu-nodenal,* பெ. (n.) 1. படபடப்புக்குறிப்பு; expr. signifying restlessness. 2. துடுக்காயிருத்தற் குறிப்பு; rudeness.

*[ நொடுநொடு → நொடுநொடெனல் ]*

**நொடை** *nodai,* பெ. (n.) 1. விலை; price. *"பிழிநொடை கொடுக்கும்"* (பதிற்றுப். 30:12). *"பறிப்புறத்து இட்ட பால் நொடை இடையன்"* (நற். 142:4). *"உமணர் தந்த உப்புநொடை நெல்லின் (நற். 254:6). "புறவாயாற் புனல் பாயிற்...........நொடை நறவின்" (புறநா. 352:8). "நறவு நொடை தொலைச்சி" (பெரும்பா. 140.).*

2. விற்பனை; selling, sale. *"கண்ணொடை யாட்டியர்"* (சிலப். 5:24). 3. விற்பனைப் பொருள், பல பண்டம்; merchandise. *"நொடை நவில் மகடூஉக் கடைகெழு விளக்கமும்"* (சிலப். 6: 139).

*[ நொடு → நொடை]*

**நொடைநவில் மகடூஉ** *nodai-navil-magadūu,* பெ. (n.) பல பண் டமும் விற்கும் மகளிர்; merchandise girl, sales girl. *"நொடை நவில் மகடூஉக் கடைகெழு விளக்கமும்"* (சிலப். 6:139).

*[ நொடை + நவில் + மகடூஉ. மகள் + து– மகடூஉ –அளபெடுத்தது. ]*

**நொடையாட்டியர்** *nodai-y-āttiyar,* பெ. (n.) விலைகூறிவிற்கும் மகளிர்; sales girl. *"காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்"* (சிலப். 5:24).

*[ நொடை + ஆட்டியர். ஆளன் (ஆ.பா.)* x *ஆட்டியர் (பெ.பா.) ]*

**நொடைமை** *nodaimai,* பெ. (n.) விலை; price. *"அருங்க ணொடைமை தீர்ந்தபின்"* (பதிற்றுப். 68:11).

*[நொடை → நொடைமை = விலைகூவும் பண்பு.]*

**நொண்டங்காய்** *nondangāy,* பெ. (n.) 1. புளியங்காயின் பிஞ்சு; tender fruit of tamarind. 2. புளியின் செங்காய்; tamarind fruit almost ripe.

*[நொண்டு + அம் + காய்]*

பிஞ்சும், அரைக்காயும் பழம்ஆதற்கு நொண்டித்தாவும் பருவத்தனபற்றி வந்தபெயர் என்க.

நொண்டித்தாவுதல் என்பது ஈண்டு செங்காயில் வளைந்திருந்து பழமாகும்போது நிமிரும் இயல்பைக் குறித்து.

**நொண்டபிடிச்சவேலை** *nonda-pidicca-vēlai,* பெ. (n.) பல வகை இடையூறுகளும், சிக்கலும் ஏற்பட்டு, வேலை மிகவும் சுணங்குதல்; work speed is so delayed due to hinderance and obstackle.

மறுவ. நொண்டல்வேலை

*[நொண்டி பிடித்தல் → நொண்டிபிடிச்சல் + வேலை → நொண்ட பிடிச்ச வேலை = வேலை ஒழுங்காக விரைவாக நடக்காமல் நொண்டி (சுணங்கி) நடப்பது போன்ற தன்மை.]*

**நொண்டல்[1]** *nondal,* பெ. (n.) நொண்டுகை (உ.வ.); limping.

*[ நொள் → நொண்டு → நொண்டல். நொள்→ நோள்→ நோண்டு = உடலில் நோண்டப்பட்டமுடம்நடக்கும் போது மண்ணை நோண்டுவது போல நடத்தல்.]*

**நொண்டல்[2]** *nondal,* பெ. (n.) நுகர்கை (திவா.); experiencing, as pleasure or pain.

*[ நுல் → நுள் → நொள் → நொண்டல்]*

**நொண்டி[1]** *nondi,* பெ. (n.) 1. முடமான ஆள் அல்லது விலங்கு; lame person or creature. *அவனும் நொண்டி, அவன் குதிரையும் நொண்டி. நொண்டி நொண்டி நடப்பானேன் கண்டதற்கு எல்லாம் பறப்பானேன். (பழ.) நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு (பழ.).* 2. முடம்; crippled condition, as of the leg or arm. *நொண்டிக்கை.* 3. பொய்க்காலால் நடிப்போன் (யாழ்ப்.); person who dances on stilts. *4. நொண்டி நாடகம்* பார்க்க; *see nondi-nādagam.*

*[ நொண்டு. → நொண்டி. கால் அல்லது கை செயற்படாத குறை; ஊனம்; முடம்.]*



**நொண்டி²** *nondi,* பெ. (n.) நொண்டியடித்துக் கொண்டு சென்று எதிர் அணியினரைத் தொடும் விளையாட்டு; the game of hopping with folded leg.

*[ நொண்டு → நொண்டி ]*

இது பகல், இரவு இரண்டு பொழுதுகளிலும் விளையாடும் விளையாட்டு.

ஆடிடமும், பொழுதும், ஆடுவாரும் : நொண்டி என்பது, பொட்டலிலும் திறந்த வெளி நிலத்திலும், பெரும்பாலும் சிறுவரும் சிறுபான்மை சிறுமியரும், பகலிலும் நிலவிரவிலும் விளையாடும் விளையாட்டு.

ஆடு கருவி : ஆடுவார் தொகைக் கேற்ப நிலத்திற் கீறப்பட்ட ஒருபெருவட்டமே இவ்வாட்டத்தின் கருவியாம்.

ஆடுமுறை : இருவருக்குக் குறையாத சிலரும் பலரும் சமத் தொகையவான இரு கட்சிகளாய்ப் பிரித்துக் கொள்ளல் வேண்டும். இருவர்க்கு மேற்பட்டவராயின் உத்திகட்டிப் பிரிந்து கொள்வர்.

மரபான முறைகளுள் ஒன்றன்படி துணிந்து கொண்டு ஒரு கட்சியார் வட்டத்திற் குள்ளிறங்குவர். மறு கட்சியார் வெளி நின்று கொண்டு, ஒவ்வொரு வராய் ஒவ்வொருமுறை வட்டத்திற்குள் நொண்டி அடித்துச் சென்று, உள் நிற்பாருள் ஒருவரையோ பலரையோ எல்லாரையுமோ தொடமுயல்வர். தொடப்பட்டவர் உடனே வெளிவந்துவிடல் வேண்டும். உள்நிற்பார் அனைவரும், தம்மை நொண்டியடிப் பவர் தொடாதவாறு, வட்டத்திற்குள் அங்கு மிங்கும் ஓடித்திரிவர். அங்ஙனம் ஓடும் போது கோட்டை மிதிப்பினும், கோட்டிற்கு வெளியே கால் வைப்பினும், உடனே வெளிவந்துவிடல் வேண்டும். நொண்டியடிப்பார் களைத்துப் போயின் கோட்டிற்கு வெளியே சென்று காலூன்றல் வேண்டும். ஒருமுறை வெளியே சென்றபின், காலுன்றாக்காலும், மீண்டும் உள்ளே வரல் கூடாது. நொண்டியடிப்பவர் வட்டத்திற்குள்ளும் கோட்டின் மேலும் காலூன்றினும், கோட்டை மிதிக்கினும், அவர் தொலைவதோடு, அவராலும் (அவர் பிந்தினவராயின்) அவருக்கு முந்தினவராலும் தொடப்பட்டு வெளியேறியுள்ள அத்துணைப் பேரும் உடனே உள்ளே வந்துவிடுவர். மீண்டும் அவரைத் தொடுதல் வேண்டும். ஒருவர் நொண்டியடித்து முடிந்த பின், இன்னொருவர் நொண்டியடிப்பர். வெளி நிற்கும் கட்சியாருள், முதலிலோ இடையிலோ இறுதியிலோ நொண்டியடிப்பவர் ஒருவரே உள்நிற்பார் எல்லாரையும் தொட்டு விடுவதுமுண்டு; ஒவ்வொருவரும் ஒவ்வொரு வரைத் தொடுவதுமுண்டு; இடையிட்டு ஒரோவொருவர் ஒருவரையோ பலரையோ தொடுவதுமுண்டு; ஒருவரும் ஒருவரையும் தொடாதிருப்பது முண்டு. இங்ஙனம், உள் நிற்கும் கட்சியாருள் ஒருவரே வெளியேறியிருத்தலும், சிலரோ பலரோ வெளியேறியிருத்தலும், அனைவரும் வெளியேறியிருத்தலும், அனைவரும் வெளியேறா திருத்தலும், ஆகிய நால்வகை நிலைமை ஏற்படக்கூடும்.

வெளி நிற்கும் கட்சியாரும் அனை வரும் நொண்டியடித்து முடிந்தபின், அல்லது உள்நிற்கும் கட்சியாருள் அனைவரும் தொடப்பட்டபின், ஓர் ஆட்டம் முடியும்.

ஆட்ட வெற்றி : உள்நிற்பார் அனை வரும் தொடப்பட்டு விடின் வெளிநிற்பார்க்கும், அங்ஙனமி ன்றி ஒருவர் எஞ்சியிருப்பினும் உள் நிற்பார்க்கும், வெற்றியாம்.

ஆட்டத் தொடர்ச்சி : ஒருமுறையாடிய பின், மீண்டும் ஒருமுறையோ பல முறையோ ஆட நேரமும் விருப்பமுமிருப்பின், அங்ஙனஞ் செய்வர். முந்திய ஆட்டத்தில் வென்ற கட்சியாரே பிந்திய ஆட்டத்திலும் உள்நிற்பர். உள் நிற்பதே இனியதாகக் கருதப்படும்.

ஆட்டத் தோற்றம் : இவ் விளையாட்டுப் போர்வினையினின்று தோன்றியதாகும். போர்க் களத்தில் ஒரு கால் வெட்டுண்ட மறவன் மறுகாலால் நொண்டியடித்துச் சென்றே, தான் பட்டு வீழுந்துணையும், பகைவரை வெட்டி வீழ்த்துவதுண்டு. இம் மற வினையை நடித்துக்காட்டும் முகமாகவே இவ் விளையாட்டுத் தோன்றிற்று.

குறைத்தலைகள் கூத்தாடுவதும் தலையைக் கையிலேந்தி நிற்பதும் போன்ற மறவினைகளை நோக்கும் போது, ஒரு காற் குறைகள் நொண்டிச் சென்று நூழிலாட்டுவது வியப்பன்று.

கள்வனொருவன் படையிலுள்ள குதிரை யொன்றைத் திருட முயன்று கால் தறியுண்டபின் நல்வழிப்பட்ட செய்தியைச் சிந்துச் செய்யுளாற் புனைந்து கூறும் நொண்டி நாடகம் என்னும் நாடக நூல்வகையும் உளது. 'சீதக்காதி நொண்டி நாடகம்' இதற்கோர் எடுத்துக்காட்டாம். இந் நாடகச் செய்தி மேற்கூறிய போர் வினைச் செய்தியின் வேறாம்.

ஆட்டத்தின் பயன் : ஒரு கால் நோய்ப் பட்டும் வெட்டுண்டும் நடக்கவி யலாதபோது மறு காலால் நொண்டியடித்து வேண்டுமிடஞ் செல்வதற்கான பயிற்சியை, இவ் விளையாட்டு அளிக்கும்.



**நொண்டிக்கால்** *nondi-k-kāl,* பெ. (n.) **1.** முடக்கால்; lame foot or leg. **2.** பொய்க் கால்; stilts.

*[நொண்டி + கால்]*

**நொண்டிகட்டு-தல்** *nondi-kattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) பொய்க்கால் கட்டுதல் (வின்.); to tie on stilts.

*[நொண்டி + கட்டு-தல். நொண்டி கட்டுதல் = பொய்க்கால் கட்டி நடத்தல்.]*

**நொண்டிச்சமாதானம்** *nondi-c-camādānam,* பெ.(n.) நடைபெற்று முடிந்த நிகழ்வு ஒன்றுக்குக் காட்டப்படும் வலுவில்லாத கரணியம்; a lame excuse. *இந்த நொண்டிச் சமாதானம் (அமைதி) எல்லாம் வேண்டாம் உண்மை யைச் சொல்லு.*

மறுவ. நொண்டிச்சாக்கு

*[நொண்டி + சமாதானம்]*

**நொண்டிச்சாக்கு** *nondi-c-cākku,* பெ.(n.) *நொண்டிச்சமாதானம்* பார்க்க; *see nondi-c-camādānam. வீட்டுப்பாடம் ஏன் எழுதவில்லை என்று கேட்டால் தூவல் (பேனா) இல்லை என்று நொண்டிச் சாக்குச் சொல்லுகிறான். நொண்டிக்குதிரைக்குச் சறுக்கினது சாக்கு* (பழ.)

*[நொண்டி + சாக்கு – நொண்டிச் சாக்கு = தப்பித்துக் கொள்ள ஏதாவது கரணியம் காட்டுதல். சார்த்து → சாட்டு → சாக்கு. 'நொண்டிக்குச் சறுக்கினது தான் சாக்கு'. பிறவியிலே நொண்டி யானவன் என்றோ சறுக்கி விழுந்ததைச் சாக்காகச் சொல்லுவது போல.]*

**நொண்டிச்சிந்து** *nondi-c-cindu,* பெ. (n.) *நொண்டி நாடகம்* பார்க்க; *see nondi-nādagam.*

*[நொண்டி + சிந்து. சிந்து = ஒருவகை யாப்பு ஒலி.]*

**நொண்டிச்சிந்து:** சந்தப்பாடல்களின் (கவியின்) வகைகளில் இதுவும் ஒன்று. இதன் முதலடியில் இரண்டு அல்லது மூன்று சீர்களும் ஒரு தனிச் சீரும் இரண்டாவது அடியில் நான்கு சீர்களுமாக மாறி மாறி வரும். நொண்டி நாடகம் பெரும்பாலும் இந்தச் சிந்து யாப்பு வகையில் இயற்றப் படுவதால் இதற்கு நொண்டிச் சிந்து என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

திருமலை நாயக்கர் மன்னனின் அவைக்களப்புலவராக வாழ்ந்த இராமப்பையன் என்பவரால் முதன்முதலில் நொண்டிச்சிந்து எனும் சந்தப்பாடல்(க்கவி) வகையை நொண்டியை கதை மாந்தராகக் கொண்டு படைத்தமையால் இப்பெயர் பெற்றது என்பது ஒரு சாரார் கருத்து.

*'சிந்து'* என்னும் யாப்பு வகைக்கு இன்னது தான் இலக்கணம் என்று தொல்காப்பியம், நன்னூல், காரிகை போன்றவற்றில் காணப் படவில்லை. சிந்தடி

என்பது மூன்றடி என்று மட்டும் காணப்படுகிறது. சிந்தியல் வெண்பா மூன்றடியாய் வரும். *'சிந்து'* என்னும் யாப்பு வகைக்குப் புலவர் திரு. த.ச. தமி ழனார் அவர்கள் தம்முடைய யாப்பு நூலில் (பக். 108, 109) இலக்கணம் கூறுகின்றார்.

*"முதலடிச் சீர்களும் தனிச்சொல் அன்றி மறியடிச் சீர்களும் எண்ணொத் திருப்பின் சமனிலைச் சிந்தாம்; ஒன்றின்மற் றொன்றுசீர் மிகுநிலை யாயின் வியனிலைச் சிந்தாம்"*

(யாப்புநூல், 135.)

முதலடியில் உள்ள சீர்களும், தனிச்சொல் பெற்று மடங்கி வரும் மற்றைய அடிச்சீர்களும் ஒத்த எண்ணிக்கை உடையதாயின் 'சமனிலைச் சிந்து' எனவும், ஓரடியை விட மற்றோர் அடியின் சீர் மிகுந்து இருந்தால் 'வியனிலைச் சிந்து' எனவும் அமையும்.

சமனிலைச்சிந்து

*"செந்தமிழ் நாடெனும் போதினிலே – இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே – எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே – ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே".*

*"காவிரி தென்பெண்ணை பாலாறு – தமிழ் கண்டதோர் வையை பொருனைநதி – யென மேவிய யாறு பலவோடத் – திரு மேனி செழித்த தமிழ்நாடு".*

வியனிலைச் சிந்து

*"தீராத விளையாட்டுப் பிள்ளை – கண்ணன் தெருவிலே பெண்களுக்கோயாத தொல்லை தின்னப் பழங்கொண்டு தருவான் – பாதி தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான். என்னப்பன் என்னையன் என்றால் –அதனை எச்சிற்படுத்திக் கடித்துக் கொடுப்பான்".*

நொண்டிச்சிந்து போலவே கும்மிச் சிந்து, காவடிச்சிந்து, வண்டிக்காரன் சிந்து எனப்பலவும் உண்டு.

**நொண்டித்தனம்** *noṇḍi-t-taṉam,* பெ.(n.) **1.** முடம்; lameness. **2.** ஒரு காலைப் பின்புறம் தூக்கிக் கொண்டு மறு காலால் உந்தி உந்தி எதிர்க் கட்சியில் ஒருவனைப் பிடிக்குஞ் சிறுவர் விளையாட்டு வகை; a children's game in which one member has to top on one leg and catch one of his opponents. **3.** ஆட்டத்தில் புரட்டுச் சொல்லுகை (இ.வ.); false statement in a game.

*[ நொண்டி + தனம் ]*

**நொண்டிநாடகம்** *noṇḍi-nāḍagam,* பெ. (n.) கள்வனொருவன் படையிலுள்ள குதிரை யொன்றைத் திருட முயன்ற போது கால்தறியுண்டு பின் நல்வழிபெற்ற செய்தியைச் சிந்துச் செய்யுளாற் புனைந்து கூறும் நாடக நூல்; a comic poem in šindu verse in which a thief is represented as having lost his leg in the act of stealing a horse from amidst an army and reforming himself after wards..

ம. நொண்டி நாடகம்

*[ நொண்டி + நாடகம் ]*

கி.பி. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் பாளையக்காரர்கள் ஆட்சி தென்னாட்டில் நடைபெற்றபோது அவர்களை அண்டிப் பிழைக்க வந்த புலவர்களாலே பாடப்பட்டு வந்த ஒருவகை நாடக இலக்கியம் நொண்டி நாடகம். பண்டைத் தமி ழ் இலக்கியத்தில் இது தோன்றியிராமற் போனாலும், நாடக மேடையில், ஒருவனே நடிகனாகவும், பாடகனாகவும் இருந்து நடித்து வந்த வரிக்கூத்து என்பது இதன் மூலமாக இருக்கலாம். வரிக்கூத்துக்கள் தொண்ணூற்று மூன்றனுள் ஒன்றாகச் சிந்து என்ற பாவினத்தில் இது வளர்ந்திருக்கலாம். இது நாடோடிப் பாடலைப் போலப் பாடப்பட்டு தாழ்ந்த மக்களும் எளிதில் சுவைக்குந் தன்மையுடையதாகப் பாடப்பட்டு இடையிடையே இதற்கு உதவி புரிந்த பாளையக்காரர்களின் புகழுரைகளைக் கொண்டதாக இயற்றப்பட்டது.

நொண்டி நாடகத்தின் கதைத் தலைவன் கூத்தின் மேடையில் தோன்றி அவனுடைய வரலாற்றை அவனே கூறிப் பாடி நடித்துக் காட்சி தருவான். நொண்டி நாடகங்கள் தமிழ் நாட்டில் பல தோன்றியிருக்கின்றன. எல்லாவற்றிலும் அடிப்படையான கதை ஒன்றே தான். திருட்டுத் தொழிலில் பழகின ஒருவன் தன் தொழிலுக்காகப் பல ஊர்களுக்குச் செல் கின்றான். ஒரூரில் விலைமகள் மீது ஆசை கொண்டு அவளுடைய காமவலையிற் சிக்கிப் பொருள் முழுவதும் தந்து விடுகிறான். அவளுடைய தூண்டுதலின் பேரில்

பொருளீட்ட மீண்டும் செல்கின்றான். பலமுறை திருடிப் பொருள் தந்தும் காமவலையிலிருந்து அவன் மீள முடியவில்லை. அப்போது பாளையம் இறங்கியிருந்த ஒரு படைத் தலைவனுடைய குதிரைச்சாலையிற் புகுந்து மாறுவேடத்தில் ஒரு குதிரையைத் திருடுகிறான். காவலர்கள் அவனைப்பிடித்துக் கொள்கிறார்கள். தப்பிப்போக முயன்ற போது பட்ட இடர்களுக்கு அளவே இல்லை. படைத்தலைவனிடம் கொண்டுப் போகப்பட்ட போது அவன் கேட்ட வசவுகளுக்கு அளவில்லை. தலைவன் முற்றும் ஆய்ந்து மாறுகை, மாறுகால் வாங்கி விடும்படி தண்டிக்கிறான். கொல்லனால் கை கால் வாங்கப்படுகையில் அளவற்ற துன்பம் அடைகிறான். இரக்கம் காட்டுவாரின்றி அரத்த வெள்ளத்தில் கிடக்கும் போது அருளாளர் ஒருவர் வந்து மருந்து தருகின்றார். அவர் கூறிய நன்மொழிகளால் நற்குணத்தனாகி, அவர் காட்டிய ஒரு தலத்திற்குச் சென்று கடவுளை நெஞ்சுருகப் பாடி வழிபாடு செய்கிறான். பிழையைப் பொறுத்து நல்வழி காட்ட வேண்டுகிறான். வியப்புறும் வகையில் காலும் கையும் வளர்கின்றன. சான்றோன் ஆகின்றான். இறைவழிபாட்டில் நின்று அன்பன் ஆகின்றான்.

இதுதான் நொண்டி நாடகத்தின் அடிப்படை வரலாறு. இந்நாடகம் பெரும்பாலும் நொண்டிச் சிந்து என்ற பாவினத்தின் இடையிடையே வெண்பா, விருத்தம் முதலிய செய்யுட்களைக் கொண்டதாக இயற்றப்படும். இது நாட்டு மக்கள் கேட்கையில் நெஞ்சு உருகும் வகையில் வழக்குச் சொற்கள், நாட்டுப் பழக்க வழக்க செய்திகள் சேர்க்கப்பட்டு இயற்றப்படுவது. மேடையில் ஆடுகிறவன் காலைக் கட்டிக் கொண்டு நொண்டி நொண்டி ஆடுவதால் இதனை 'ஒற்றைக்கால் நாடகம்' என்றும் கூறுவார்கள்.

சிறந்த நொண்டி நாடகங்கள் : இராமப் பையன் நொண்டி நாடகம் திருச்செந்தூர் நொண்டி நாடகம், சீதக்காதி நொண்டி நாடகம், சாத்தூர் நொண்டி நாடகம், குளத்தூர் ஐயன் நொண்டி நாடகம், திருமலை நொண்டி நாடகம், பழநி நொண்டி நாடகம், திருக்கச்சூர் நொண்டி நாடகம், போன்றன.

**நொண்டிப்பாரி** *noṇḍi-p-pāri,* பெ. (n.) **நொண்டி**[2] பார்க்க; see noṇḍi[2]

*[ நொண்டி + பாரி. பாரி = பரவலாக விளையாடுதல் ]*

**நொண்டியடி –த்தல்** *noṇḍi-y-aḍi-,* **4** செ.கு.வி. (v.i.) **1.** நொண்டி விளையாடுதல்; to play the game of *noṇḍi. நொண்டியடிக்கப் போறேன்.* **2.** ஆட்டத்தில் புரட்டுச் சொல்லுதல்; to utter falsehood in a game. *விளையாட்டில் அவன் நொண்டியடிக்கிறான்.* **3.** சோறு முதலியன இன்மையால் வருந்துதல்; to suffer from want, as of food. *வாழ்க்கையை நடத்த முடியாமல் நொண்டியடிக்கிறான்.*

*[ நொண்டி + அடி –த்தல். ]*

**நொண்டியடிக்கை** *noṇḍi-y-aḍikkai,* பெ. (n.) ஆட்டத்தில் புரட்டுச் சொல்லுகை; false statement in a game.

*[ நொண்டி + அடிக்கை ]*

**நொண்டு[2]–தல்** *noṇḍu-* 5 செ.கு.வி. (v.i.) முகத்தல்; drawing water. *"குடங்கை யினொண்டு கொள்ளவுங் கூடும்" (சிலப். 10:85). "இரும்பிணர்த் தடக்கை நீட்டி நீர்நொண்டு" (நற்.186:2).*

*[ நுள் (துளைத்தல்) → நொள் → நொண்டு → நொண்டு –தல்=மொள்ளுதல், முகத்தல் ]*

**நொணநாட்டியம்** *noṇa-nāṭṭiyam,* பெ. (n.) *நொறு நாட்டியம் பார்க்க; see noṟu-nāṭṭiyam.*

**நொணநொணவெனல்** *noṇa-noṇa-v-eṉal,* பெ.(n.) **1.** மூக்காற் பேசுதற் குறிப்பு; expr. signifying the sound of speaking through the nose. **2.** தொந்தரவு செய்தற் குறிப்பு; expr. signifying teasing.

*[ நொண + நொண –நொண நொண + எனல் ]*

**நொத்து** *nottu,* பெ. (n.) தடை செய்கை (வின்); hindering, preventing, frustrating.

*[ நொப்பு → நொத்து]*

**நொதல்** *nodal,* தொ. பெ.(vbl. n.) சோறு நொந்து போதல்; to be spoiled as boiled rice.

*[ நொய் → நொ → நொதல் (வே.க)]*

**நொதி[1]–த்தல்** *nodi-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** புளித்த மாவு முதலியன பொங்குதல் (வின்.); to ferment, effervesce, turn sour, as liquid-food; to bubble up slowly, as water over a gentle fire. **2.** சீழ் பிடித்தல் (வின்.); to fester, suppurate. **3.** ஈரமாதல் (இ.வ.); to be damp. **4.** நீர் முதலியவற்றில் ஊறிப் போதல் (வின்.); to be soaked; to be macerated. **5.** நுரைத்தல் (வின்.); to foam, froth, spume, sparkle as spirituous liquors.

*[ நுல் → நுள் → நொள் → நொடு → நொது → நொதி → நொதி–த்தல்]*

நொதித்தல்

கொடி முந்திரிச் சாறு மதுவாக மாறுவதும், தவசங்களின் சருக்கரைப் பொருள்கள் சாராயமாக மாறுவதும் இதையொத்த இன்னும் மாற்றங்களும் நொதித்தல் என்ற பெயரால் குறிக்கப்பட்டன; Diastase, zymase போன்ற பொருள்களின் உதவியால் சில கரிமப் பொருள்கள் தம்மினும் எளிய அமைப்புள்ள வேறு பொருள்களாக மாறும் எல்லா விளைவுகளும் இவ்வாறு அழைக்கப் படுகின்றன. இவ்விளைவுகளுக்குக் கரணியமான பொருள்கள் நொதிவிப்பான்கள் (ferments) எனப்படும்.

இவ்விளைவிற்குக் கரணியமான பொருள்கள் இருவகைப்படும். இவை ஈ(ஸ்)ட்டுகளும், நுண்ணுயிர் பாக்ட்டீரியாவும் ஆகும். கரிமப் பொருள்களான இவற்றில் நைட்ர(ஜ)னும் இருக்கும். மிகச் சிறு அளவில் இருந்தாலும் இவை இவ்விளைவைப் பேரளவில் நிகழ்த்தும் திறமை உள்ளவை. உயிருள்ள பொருள்களான இவை வளர்ச்சியும் இனப்பெருக்கமும் உடையவை. ஈ(ஸ்)ட்டில் பல (என்சைம்கள்) கரிமப்பொருள்கள் உள்ளன. உயிர்ப் பொருள்களில் பல்வேறு மாற்றங்களைத் தூண்டும் இக் கரிமப் பொருள்களே நொதித்தல் விளைவை நிகழ்த்தும் கரணியாக உள்ளன.

**நொதி[2]** *nodi,* பெ. (n.) **1.** புளித்த காடி போன்றவை; ferment. **2.** உயிரினங்களின் உடம்பில் வேதியியல் மாற்றங்களை உண்டாக்கிடும் (கிரியா) ஊக்கியாகச் செயல்படும் குறிப்பிட்ட உயிரணுக்களின் சுரப்பு; enzyme.

*[ நுல் (நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொடு → நொது → நொதி]*

**நொதி[3]** *nodi,* பெ. (n.) அருவருக்கத்தக்க சேறு (சூடா.); mud, mire, slough. *நொதியில் கால்வைக்காமல் பார்த்து நட.*

*[ நுல் (நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொளில் = சேறு. நொள் → நொடு → நொது → நொதி = சேறு (வே.க.)]*

**நொதிவாயு** *nodi-vāyu,* பெ.(n.) சேற்றுக் குழம்பிலிருந்து எழும் காற்று; the carbon hydrogen gas rising in swamphy or boggy places - Marsh gas. (சா.அக.).

*[ நொதி + Skt. வாயு. ]*

**நொது–த்தல்** *nodu-,* 4. செ.குன்றாவி. (v.t.) **1.** அழிதல் (திவா); to put out, quench, extinguish. **2.** தளர்தல் to relax, to be soft. ''நொதிப்பில் வன்சிறை புகுத்துமின்'' (தணிகைப்பு. வீராட்.44).

*[ நுல் (நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொடு → நொது → நொது–த்தல் (வே.க.) ]*

**நொதுக்கல்** *nodukkal,* பெ. (n.) இளக்கமுள்ளது (யாழ்.அக.); that which is soft.

*[ நொதுத்தல் = தளர்தல். நொது → நொதுக்கல் ]*

**நொதுக்குநொதுக்கெனல்** *nodukku-nodukkenal,* பெ. (n.) சூட்டினால் மலம் சிறிது சிறிதாக வெளியேறுதற் குறிப்பு; expr. signifying frequent passing of stools. *வயிறு நொதுக்கு நொதுக்கென்று போகிறது. குழந்தை நொதுக்கு நொதுக்கென்று கழிகிறது.*

*[ நொது → நொதுக்கு + நொதுக்கு + எனல்]*

**நொதுநொது-த்தல்** *nodu-nodu-,* 4 செ.குன்றாவி. (v.i.) **1.** குழைதல்; to be soft, as rice overboiled. **2.** சீழ்கட்டுதல் (வின்.) to fester, suppurate. **3.** ஈரமாதல்; to be damp. **4.** நுரைத்தல் (வின்.); to foam, froth, spume, sparkle, as spirituous liquors.

*[ நொது + நொது-த்தல்]*

**நொதுநொதெனல்** *nodu-nodenal-,* பெ. (n.) புளித்தமா முதலியன பொங்குதற் குறிப்பு; expr. signifying fermentation. **2.** நெகிழ்தற் குறிப்பு; softness, slushy condition. *இட்டளி மாவு நொது நொதெனவாகி விட்டது.*

*[ நொது + நொது + எனல் ]*

**நொதுமல்** *nodumal,* பெ. (n.) **1.** புறக்கணிப்பு (உதாசீனம்); indifference, neutrality. *'பகைநொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும்'* (குறள், 12, அதி. அவ.). **2.** அன்பிலார் கூற்று; world of an indifferent person. *"நொதுமன் மொழியல்"* (அகநா. 39). **3.** மென்மை; smoothness, as of a fine cloth. *"நெதுமல் பெற்றிடு நுண்டுகில்"* (கந்தபு. திருவி. 122).

*[ நொது → நொதுமல் ]*

**நொதுமலர்** *nodumalar,* பெ. (n.) அயலார்; strangers. *"நொதுமலர் வந்தவாறென்னோ வென்பா"* (திருக்கோ. 275). *"உள்ளி நொதும லேர்புரை தெள்ளி தின்"* (நற். 11:3). *"அழாஅ தீமோ நொதுமலர் தலையே"* (நற். 13:2).

*[ நொதுமல் → நொதுமலர் ]*

நட்பும் பகையும் இல்லாதவரை நொதுமலர் என்பது பழந்தமிழ் வழக்கு.

**நொதுமலாட்டி** *nodu-malāṭṭi,* பெ.(n.) ஏதிலாட்டியாகிய பூவிலை மடந்தை; பூவிற்கும் பெண்; flower selling woman. *"புதுமலர் தெருவுதொறு நுவலும் நொதுமலாட்டிக்கு நோமென் நெஞ்சே"* (நற். 118:11).

*[ நொதுமல் + ஆட்டி. ஆட்சி = பெண் (திவா). ஆட்சி → ஆட்டி ]*

**நொதுமலாளர்** *nodumal-āḷar,* பெ. (n.) **1.** *நொதுமலர்* பார்க்க; see *nodumalar.* *"நொதுமலாளர் கொள்ளா ரிவையே"* (ஐங்குறு. 187). **2.** குறளை கூறுவார்; backbiters, slanderers. *"நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது"* (புறநா. 35)

*[ நொதுமல் → நொதுமலாளர் ]*

**நொதுமலாளன்** *nodumal-āḷan,* பெ. (n.) நொதுமலர் பார்க்க; see *nodumalar.* *"நொதுமலாள னெஞ்சறப் பெற்றவென்"* (அகநா. 17:8). *"நொதுமலாளன் கதுமெனத் தாக்கலின்"* (நற். 50:5)

*[ நொதுமல் → நொதுமலாளன் ]*

**நொதுமெனல்** *nodum-enal,* பெ.(n.) விரைவுக்குறிப்பு (இ.வ.); expr. signifying speed on hastiness.

**நொந்தகைமை** *nodagaimai,* பெ.(n.) **1.** நோய்; disease. **2.** வலிவின்மை; weakness. **3.** வறுமை (யாழ்ப்.); poverty.

*[ நோ + தகைமை . நோந்தகைமை → நொந்தகைமை. தகைமை = நிலைமை, தகுதி, குணம் ]*

**நொந்தசோறு** *noda-šoru,* பெ. (n.) பதமிழந்த சோறு; rotten cooked rice, Stale rice. (சா.அக.).

*[ நொந்து → நொந்தல் + சோறு. நொந்துதல் = அழிதல்.]*

**நொந்தபுண்** *nonda-pun,* பெ. (n.) அழிந்தபுண்; rotten sore sloughing wound (சா.அக.).

*[ நொந்து → நொந்த + புண்] நொந்துதல் = அழிதல்.*

**நொந்தல்** *nondal,* பெ. (n.) **1.** வலிவிமின்மை; weakness. **2.** வறுமை; poverty

*[ நொந்துதல் → நொந்தல்]*

**நொந்தலை[1]** *nondalai,* பெ. (n.) **1.** வலிமைக் குறைவு (பலவீனம்); weakness. **2.** வறுமை; straitened circustances, poverty

*[ நொய் → நொ → நொந்தலை]*

**நொந்தலை[2]** *nondalai,* பெ. (n.) தீமுறிப்பூடு; an unknown plant suspending the action of fire. (சா.அக.).

**நொந்தலைமை** *nondalaimai,* பெ. (n.) *நொந்தை* (யாழ்ப்.) பார்க்க; see *nondai.*

*[ நொந்தலை → நொந்தலைமை]*

**நொந்தன்னம்** *nondannam,* பெ. (n.) நீர்விடாமையால் பதனழிந்த சோறு (பதார்த்த. 1459); cooked rice spoiled by being kept dry.

*[ நொந்து → நொந்தல் + அன்னம் நொந்தன்னம். அன்னம் = உணவு, சோறு]*

**நொந்தாகிரி** *nondā-kiri,* பெ. (n.) **1.** சூரியகாந்தி; sun flower,Helianthus indicus alias H.annuus. **2.** பாதிரிமரம்; trumpet flower tree, Stereospermum chelonoides. (சா.அக.).

**நொந்தார்[1]** *nondār,* பெ. (n.) பகைவர்; enimies. *"நொந்தார்க் கடந்தான்"* (சீவக. 2564).

*[ நோ → நொ → நொந்தார்.]*

**நொந்தார்[2]** *nondār,* பெ. (n.) வருந்துபவர்; sorrower. *"நொந்தார் செயக்கிடந்தது இல்"* (திரிகடுகம். 67:4).

*[ நொந்து → நொந்தார்.]*

**நொந்தாவிளக்கு** *nondā-viḷakku,* பெ. (n) *நுந்தா விளக்கு* (தெ.க.தொ.1,114) பார்க்க; see *nundā-viḷakku.*

*[ நொந்து + ஆ + விளக்கு. ஆ – எ.ம. இடைநிலை. நுந்து → நொந்து → நொந்துதல் = தூண்டுதல்]*

**நொந்திரா** *nondirā,* பெ. (n.) கச்சந்திராய்; Indian Chickenced - Mollugo parviflora. (சா.அக.).

**நொந்தீவார்** *nondīvār,* பெ. (n.) வெறுப்பார்; disliker. "நோதக்காயென நின்னை நொந்தீவாரில் வழி" (கலித். 73).

*[ நொந்து → நொந்தீவார்]*

**நொந்து¹–தல்** *nondu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அழிதல்; to perish. *"நூறு கோடி பிரமர் கணொந்தினார்"* (தேவா. 1218, 3). 2. பதனழிதல்; to become spoilt. 3. வருந்துதல்; to suffer; to afflict. 4. வறுமை; penury.

க. நொந்து.

*[நொது → நொந்து → நொந்து–தல். நொதுத்தல் = அழிதல்]*

நொந்த கண் இருக்க நோகாக் கண்ணுக்கு மருந்து (பழ.). நொந்து அறியாதவர் செந்தமிழ் கற்றோர். (பழ.)

**நொந்து²–தல்** *nondu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தூண்டுதல்; to trim. "நொந்தாத செந்தீ" (பதினோ. காரை. திருவிரட். 13).

*[நுந்துதல் = தூண்டுதல். உந்து → நுந்து → நொந்து → நொந்து–தல்]*

**நொந்துகொள்(ளு)–தல்** *nondu-kol((u)-,* 16 செ.கு.வி. (v.i.) 1. வருத்தப்படுதல்; regret one self. *"தண்புனற் பூசலல்லது நொந்து"* (புறநா. 42:7). *தெரியாமல் உன்னை நம்பினேனே! என்று நொந்து கொண்டான்.* 2. குறைபட்டுக் கொள்ளுதல்; curse one self. *என்னபடித்து என்ன பயன் வேலை கிடைக்கவில்லையே என்று நொந்து கொண்டான்.* 3. குறை கூறுதல்; charge, blame. *நீ சரியாகப் படிக்காததற்கு ஆசிரியரை ஏன் நொந்து கொள்கிறாய்.*

*[நொந்து + கொள்(ளு)–தல்]*

**நொந்துபோ¹–தல்** *nondu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. நிலை கெடுதல் (வின்.); to be impoverished to be reduced in circumstances. 2. பதனழிதல்; to become spoild. *'காற்றில்லாமல் நொந்து போன பழவகைகளை'* (மதி.களை. 2, 49)

*[நோ → நொந்து + போ–தல்]*

**நொப்பம்** *noppam,* பெ. (n.) திறமை (சாமர்த்தியம்); skill, ability. *"அந்நொப்ப மேகொல் பிறிதே கொல்"* (கம்பரா. நாகபா. 253)

*[நொய்ப்பம் → நொப்பம்]*

**நொப்பு¹–தல்** *noppu-,* 5 செ.குன்றாவி. (v.t) தடுத்தல் (M.M); to hinder.

**நொப்பு²** *noppu,* பெ. (n.) 1. தடைசெய்கை (வின்.); hindering, preventing, frustrating. 2. குட்டி, பால் குடியாதவாறு ஆட்டின் முலைக்காம்பில் சுற்றும் ஓலை அல்லது துணி. (வின்.); strip of ola or cloth wound round the dugs of a goat to prevent the kids from sucking. 3. வெள்ளப் பெருக்கில் வரும் செத்தை அழுக்கு முதலியன; debris of a flood.

**நொப்புநுரை** *noppu-nurai,* பெ. (n.) காய்ச்சும் பொழுது ஏற்படும் நுரை; the impurities arising on the top surface when boiling a solution. (சா.அக.).

*[நொப்பு + நுரை]*
காய்ச்சும் ஏனம் நிரம்பி வழியும் போது வரும் நுரை.

**நொம்பலம்** *nombalam,* பெ. (n.) துன்பம் (இ.வ.); distress. *உன்னோடு பெரிய நொம்பலமாப் போச்சு* (பே.வ.)

ம. நொம்பலம்

*[நொ → நொம்பு → நொம்பலம்]*

**நொம்பு–தல்** *nombu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நோம்பு* – பார்க்க; see *nōmbu-.*

*[ நோம்பு → நொம்பு → நொம்பு–தல்.]*

**நொய்** *noy,* பெ. (n.) **1.** குறுநொய் (திவா.); grits, groats. **2.** இலேசு (சூடா.); brittleness, fragility, delicateness. **3.** மென்மை (வின்.); softness, lightness. **4.** நுன்மை (வின்.); smallness, minuteness. *அரிசி நொய்மையாகிவிட்டது* **5.** பன்னீர்; rose water. **6.** தவிடு; bran.

*[ நுல் → நுள் → நொள் → நொய் = நொறுங்கிய கூலம். நுல் = நுண்மை, மென்மை, சிறுமை, நொய்ம்மை]*

**நொய்தல்** *noydal,* பெ. (n.) நுண்மை (சது.); minuteness, fineness.

*[ நொய் + தல் – நொய்தல். தல் ஈற்றுத் தொழிற்பெயர் ]*

**நொய்தாக்கல்** *noy-tākkal,* பெ. (n.) நுண்மையாக்குதல்; reducing to fine particles making subtle; subtilising.

*[ நொய் → நொய்து + ஆக்கல்]*

**நொய்து** *noydu,* பெ. (n.) **1.** கனமில்லாது இலேசானது; that which is light. *"விண்ணினொய்தாய்"* (ஞானவா. வீதக. 76). *"நொய்தாந் திரணத்தின் நொய்தாகும் வெண்பஞ்சின்"* (நீதிவெண்பா. 8). **2.** மெல்லியது; that which is soft. *துணி மிகவும் நொய்து.* **3.** இழிவானது; that which is poor, mean. *"நொய்தி னொய்ய சொல்"* (கம்பரா. பாயி. 5). **4.** விரைவு; quickness. *தலைவர் உரை மிகவும் நொய்தாயிருந்தது. "ஆயிழை நொய்தி னுரைபொரு ளுண்டெனின்"* (சீவக. 1767). *"கொடியவே தாளமெல்லா நொய் தினிற் செற்றான்"*(சேதுபு. வேதாள.98)

*[ நொய் → நொய்து]*

**நொய்துகம்** *noydugam,* பெ. (n.) நரிவழுக்கைச் செடி; diabetis plant, Graliola monieri. (சா.அக.).

**நொய்தெனல்** *noydeṉal,* பெ. (n.) விரைவுக்குறிப்பு (திவா.); expr. signifying quickness, briskness, nimbleness. *பறவை நொய்தெனப் பறந்தது.*

*[ நொய் → நொய்து + எனல் – நொய்தெனல். கனமற்றவை விரைவாகச் செல்லும் ]*

**நொய்ப்பம்** *noyppam,* பெ. (n.) **1.** திறமை; skill, ability. *"மரக்கலம் அலையாதபடி கடைந்த நொய்ப்பம்"* (திவ். திருப்பா. 30, வியா. 254). **2.** இலேசு (வின்.); delicateness, tenderness. *இந்த வேட்டி மிகவும் நொய்ப்பமாக இருக்கு.*

*[ நுள் (மென்மை, கூர்மை) → நொள் → நொய் → நொய்ப்பு → நொய்ப்பம் ]*

**நொய்ப்புக்கொட்டு–தல்** *noyppu-k-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஆட்டு முலையினின்று பால் சுரந்து வடியும் படி விரலால் அழுத்துதல் (வின்.); to thump the udder of a goat while milking to make the milk flow.

*[ நொப்பு → நொய்ப்பு + கொட்டு–தல்]*

**நொய்ம்மீன்** *noy-m-mīṉ,* பெ. (n.) மணல் நிறமுள்ள ஆற்றுமீன் வகை (பிங்.); fresh-water fish, sandy in colour, Lepidocepha -lichthys thermalis.

*[ நுல் = மென்மை. நுல் → நுள் → நொய் + மீன் – நொய்ம்மீன் = மென்மையான, பளபளப்புடன் கூடிய சிறிய மீன் ]*

**நொய்ம்மை** *noymmai,* பெ. (n.) 1. தளர்ச்சி (யாழ்.அக.); looseness. 2. உறுதியின்மை; flimsiness, weakness, futility, as of arguments. 3. கனமின்மை; lightness. *"மெய்ம்மை சீர்மை நொய்ம்மை வடிவம்"* (மணிமே. 27:254). *நீரில் நீந்தும் போது உடல் நொய்ம்மையாக இருக்கும்.* 4. மென்மை; softness, slenderness. *சிறு குழந்தையின் கை நொய்ம்மையாக இருக்கும்.* 5. மனத்திட மின்மை; weakness of mind, pusillanimity, effeminacy, cowardice. 6. மனவுருக்கம் (வின்.); tender-heartedness, sensibility, delicacy of feeling, quick perception of an injury or affront. 7. வறுமை (யாழ்.அக.); poverty, indigence. 8. நுண்மை, சிறுமை; minuteness, thinness, smallness. 9. இழிவு (நாலடி, 41); triviality, insignificance. meanness. 10. நேர்த்தி; niceness, fineness in workman-ship. 11. குற்றம் (வின்.); injuriousness, offensiveness, as of language.

*[ நுல் = நெகிழ்ச்சி, சிறுமை, மென்மை. நுல் → நுள் → நொள் → நொய்.*

*ஒ.நோ: தொள் → தொய்.*

*நொய் → நொய்மை (வேக.) ]*

**நொய்ய**[1] *noyya,* பெ. எ. (adj.) 1. மென்மையான; soft, tender. *"அனிச்சப் போதி னதிகமு நொய்ய"* (கம்பரா. கோலங். 14). 2. வலியற்ற; weak. *நொய்ய புத்தி. நொய்ய உடம்பு.* 3. சிறுமையான; small, mean, poor. *"நொய்தி னொய்ய சொல்"* (கம்பரா. பாயி. 5). 4. வசையான (வின்); lampoon. *நொய்ய சொற் பெறாதவன்* 5. நுட்பமான; minute. *"பல்கல நொய்ய மெய்யணிந்து"* (சீவக. 991).

*[ நொய் → நொய்ய = சிறிய, அற்ப. சின்ன என்பதை நொய்ய என்பது குடந்தை வழக்கு. ]*

**நொய்ய**[2] *noyya,* வி.எ. (adv.) கடுமையாக; severely. *அவனை நொய்யப் புடைத்தான்'*

*[ நை[2] → நைய → நொய்ய ]*

**நொய்யசொல்** *noyya-šol,* பெ. (n.) வசைச்சொல்; reproach, contumely. *'நொய்ய சொற் பொறாதவன்'* (வின்.)

*[ நொய் → நொய்ய[1] + சொல். நொய்ய = இழிவான வசையான ]*

**நொய்யது** *noy-y-adu,* பெ. (n.) சிறியது; small. "நோக்கார் கொல் நொய்யதோர் புக்கிலை" (நாலடி,41:2)

*[ நொய் → நொய்து → நொய்யது = இலேசானது, மென்மையானது, சிறியது, இழிவானது.]*

**நொய்யம்மை** *noy-y-ammai,* பெ. (n.) அம்மை வகை; measles.

*[ நொய் + அம்மை ]*

பெரியம்மை அணுக்கள் இந்தியாவில் ஒழிக்கப்பட்டன. சின்னம்மை வகைகள் உள்ளவற்றுள் ஒன்று இஃது ஆகலாம்.

**நொய்யரிசி** *noy-y-ariši,* பெ. (n.) குறு நொய்; grits. groats. *நொய்யரிசி கொதி தாங்காது (பழ.). நொய்யரிசி கொதி பொறுக்குமா (பழ.)*

*[ நொய் + அரிசி ]*

**நொய்யலாறு** *noyyal-āṟu,* பெ. (n.) கொங்கு நாட்டில் (கோவை பகுதி) உள்ள வெள்ளி

மலையில் தோன்றி காவிரியில் கலக்கும் ஒரு சிற்றாறு; a river in Kovai district.

*[ நொய்யல் + ஆறு ]*

**நொய்யவன்** *noyyavaṉ,* பெ. (n.) **1.** வறியவன்; the pauper. **2.** எளியவன்; humble man. **3.** வலுவிழந்தவன்; weak person. **4.** புல்லன்; ignorant person. *"நொய்யவ ரென்பவர் வெய்யவ ராவர்"* (கொன்றை. 57)

*[ நுள் (எளிமை, சிறுமை) → நொள் → நொய் → நொய்யவன் (மு.தா.) ]*

**நொய்யார்** *noy-y-ār,* பெ. (n.) விலைமகளிர்; prostitute, solewomen. *"நொய்யார் நுவலும் பழி நிற்பத் தம்மொடு"* (கலித்.25:16). *"குலந்தனில் நொய்யார் சைவ தீக்கை கொண்டிடினும்"* (அருணகிரி. பு. வலம்புரி.72).

*[ நொய் + ஆர். நொய்யது = இழிவு, சிறியது. ஆர் = பன்மை விகுதி]*

**நொய்யெனல்** *noy-y-eṉal,* பெ. (n.) நுண்மைக் குறிப்பு; expr. signifying lightness, thinness, slenderness, insignificance.

*[ நொய் + எனல்]*

**நொய்வு** *noyvu,* பெ. (n.) **1.** *நொய்ம்மை* (திவா.) பார்க்க; *see noymmai. "சிறியரென்றிகழ்ந்து நொய்வு செய்வன செய்யல்"* (கம்ப.கிட்கிந். அரசிய.32). **2.** மனவருத்தம்; distress of mind. *"நொந்தவர் நொய்வு தீர்க்க"* (கம்பரா. வேலேற்ற. 42).

*[ நுள் (நோதல்) → நொள் → நொய் → நொய்வு. (மு.தா.) ]*

**நொரநாட்டியம்** *noranāṭṭiyam,* பெ. (n.) நொறு நாட்டியம் (நெல்லை); fastidiousness.

*[ நொறுநாட்டியம் → நொரநாட்டியம் ]*

சிறு குழந்தைகள் ஒரு பொருளுக்காக அடம்பிடித்தலை நொண நாட்டியம் என்பர். நொறுக்குத்தீனி என்பதுபோல் சிறிதுசிறிதாக அழுது அடம்பிடித்தல் பற்றி நொறுநாட்டியம் நொணநாட்டியம் என்று வழங்கலாம்.

**நொரு** *noru,* பெ. (n.) **1.** முதிர்ந்த பயிரின் அடியில் அல்லது கணுவில் தோன்றும் இளங்கதிர்; after-shoot from the roots of rice, millet, etc., after the main stalk has come to maturity. **2.** காய்ப்பு மாறினபின் அரும்பும் பிஞ்சு; small after-fruits, as of pumpkin plants. **3.** சிறு பிஞ்சு; small fruit.

*[ நுரு → நொரு. நுரு = இளம்பிஞ்சு, அறுத்த தாளில் விடும் தளிர்]*

**நொருக்காய்** *noru-k-kāy,* பெ. (n.) காய்ப்பு மாறின பின் அரும்பும் பிஞ்சு (யாழ்ப்.); small after - fruits, as of pumpkin plants.

**மறுவ.** குருக்காய்.

*[ நொரு + காய். நொரு = சிறுபிஞ்சு. நொருக்காய், நொருப்பிஞ்சு என்பன யாழ்ப்பாண வழக்கு]*

**நொருக்கு—தல்** *norukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நொறுக்கு* – பார்க்க; *see noṟukku-.*

*[ நொருங்கு → நொருக்கு ]*

**நொருகை** *norukai,* பெ. (n.) **நொறுவை** (வின்.) பார்க்க; *see noṟuvai.*

*[ நொறுவை → நொருகை. று → ரு - திரிபு ]*

**நொருங்கவிடி—த்தல்** *norunga-v-iḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) பொடியாக்குதல்; pounding so as to become powder or small particles. (சா.அக.).

*[ நொருங்கு → நொருங்க + இடி —த்தல் ]*

**நொருங்கு—தல்** *norungu-*, 5 செ.கு.வி. (v.i.) நொறுங்கு—தல் பார்க்க; see *noṟungu-*.

**நொருச்சி** *norucci*, பெ. (n.) காட்டுத் துளசி; wild basil, Ocimum adscendens. (சா.அக.).

**நொருநொரு—த்தல்** *noru-noru-*, 4 செ.கு.வி. (v.i.) *நொறுநொறு* – பார்க்க; *see noṟunoṟu.*

**நொருநொரெனல்** *noru-norenal*, பெ. (n.) *நொறுநொறெனல்* – பார்க்க; *see noṟu-noṟenal.*

*[ நொருநொரு + எனல் ]*

**நொருப்பிஞ்சு** *noru-p-piñju*, பெ. (n.) *நொரு*, 2 (யாழ்ப்.) பார்க்க; see *noru*, 2.

*[ நொரு + பிஞ்சு. நொரு = சிறுபிஞ்சு. நொருக்காய், நொருப்பிஞ்சு என்பன யாழ்ப்பாண வழக்கு ]*

**நொருப்பிடி—த்தல்** *noru-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) காய்ப்பு மாறின பின் மீண்டும் பிஞ்சு வைத்தல் (யாழ்ப்.); to form an after-shoot.

*[ நொரு = பிஞ்சு. நொரு + பிடி —த்தல் ]*

**நொருவல்** *noruval*, பெ. (n.) *நொறுவல்* பார்க்க; *see noṟuval.*

*[ நொறுவல் → நொருவல். று → ரு – திரிபு ]*

**நொலை** *nolai*, பெ. (n.) *நொலையல்* (பிங்.) பார்க்க; *see nolaiyal.*

*[ நுல் (துளை) → நொல் → நொலை = உட்டுளையுள்ள அப்ப வகை. (வே.க.) ]*

**நொலையல்** *nolaiyal*, பெ. (n.) பூரிகையென்னும் அப்பவகை. (பிங்.); a kind of unleavened cake.

*[ நுல் (துளை) → நொல் → நொலை → நொலையல் (வே.க.) ]*

**நொவ்வல்** *novval*, பெ. (n.) 1. துன்பம், வருத்தம்; mental anguish, sadness. *"மையற் பொண்டிர்க்கு நொவ்வலாக வாடிய பின்னும்"* (அகநா. 96). 2. நோவு; pain.

*[ நொவ்வு² → நொவ்வல். நொவ்வு = வருத்தம் ]*

**நொவ்வி** *novvi*, பெ. (n.) 1. தளர்வு; droop. 2. நொய்மை; meanness. 3. நோய்; disease. 4. துன்பம்; distress.

*[ நோ → நொ → நொவ்வி ]*

**நொவ்விதாக** *novvitāga*, வி.எ. (adv.) விரைவாக; rapidly, quickly. *"தேர் நொவ்விதாகச் சென்றீக"* (ஐந். ஐம். 10)

*[ நொவ்வு² → நொவ்விதாக நொவ்வு = விரைவு. நொவ்விது + அக ]*

**நொவ்வியார்** *novviyār*, பெ. (n.) கீழ் மக்கள்; dishonest person, rogue. *"நோக்குமின் என்றிகழ்ந்து நொவ்வியார் கைவிடுதல்"* (பழமொழி, 208:2).

*[ நொவ்வு → நொவ்வியார். நொவ்வு = மெலிதல், நோதல், இழிவாதல் ]*

**நொவ்வு¹—தல்** *novvu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. மெலிதல்; to become thin, slender,

emaciated. *"நொவ்விடை மடந்தை"* (கம்பரா. காட்சி. 54). 2. நோதல் (யாழ்ப்.); to ache, pain. 3. துன்புறுதல்; to afflict, to pester. 4. வருந்துதல்; to suffer.

*[ நொ → நொவ்வு → நொவ்வு - தல்.]*

**நொவ்வு[2]** *novvu,* பெ. (n.) 1. மெலிவு; thinness. 2. உடையுந் தன்மை; brittleness. 3. வாட்டம்; emaciation, drooping, fading. 4. வருத்தம் (வின்.); pain, ailment. 5. விரைவு; rapidly, quickness. *நொவ்வுப் பறைவாவல்.* 6. நோவு; disease.

*[ நொ → நொய்வு → நொவ்வு ]*

**நொவ்வெனல்** *nov-v-enal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; expr. signifying haste or quickness.

*[ நொவ்வு + எனல் - நொவ்வெனல். நொவ்வு = விரைவு ]*

**நொழுந்து—தல்** *nolundu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நுழைத்தல்; to insert, thrust. *தலையை நொழுந்தி. (ஈடு, 1:3 பிர.)*

*[ நுல் → நுள் → நொள் → நொழு → நொழுந்து → நொழுந்து—தல்.]*

**நொள்[1](ளு)—தல்** *nol-,* 10 செ.குன்றாவி. (v.t.) மொள்ளுதல், முகத்தல்; to bale out, as water, to measure out, as grain. "குடங்கையில் னொண்டு கொள்ளவுங் கூடும்". (சிலப். 10: 85)

தெ. நொல்லு (to level, collect); பர். ஒல்க்(olc); கூய். நெல்ப; குரு. நொல்ல்நா (nollnā); மா. லொலெ.

*[ நுல் (துளை) → நொள் → நொள்(ளு)—தல் (வே.க.). மொள்ளுதல் நீர்ப்பொருளையும், முகத்தல் கூலம் போன்ற பொருளையும் குறிக்கும். மொள்ளுதல், முகத்தல், விழுங்குதல் அனைத்தும் துளைத்தலினின்றே விரியும். முள் → மொள் → நொள் = விழுங்குதல், (சு.வி. 45)]*

**நொள்[2](ளு)—தல்** *nol-,* 10 செ.குன்றாவி. (v.t.) விழுங்குதல்; (திவா); to swallow,, devour.

ம. நுண; க.நொண; தெ.நொல்லு; குரு. நுல்க்நா.

*[ நொள்[1] - → நொள்[2] —]*

**நொள்[3]** *nol,* பெ. (n.) துளைபோன்ற வாய்; mouth.

*[ முள் → மொள் → நொள். ஒ.நோ. நோரு. (தெ.) = வாய். (சு.வி. 45)]*

**நொள்கு[1]—தல்** *nolku-,* 5 செ. குன்றாவி. (v.t.) *நொள்,* 1 (யாழ்.அக.) பார்க்க; see *nol-*.1.

*[ நொள்[1] → நொள்கு → நொள்கு—தல்]*

**நொள்கு[2]—தல்** *nolku-,* 5 செ. கு.வி. (v.i.) 1. சுருங்குதல்; to contract, as thread. *'நூல் நொள்கிற்று'* (நன். 454, மயிலை.). 2. இளைத்தல் (யாழ்.அக.); to languish, become tired.

*[ நுல் (நெகிழ்வு) → நுள் → நொள் → நொள்கு → நொள்கு—தல்]*

**நொள்கெனல்** *nolkenal,* பெ. (n.) அச்சக்குறிப்பு (வின்.); expr. signifying terror.

*[நொள்கு + எனல்]*

**நொள்ளல்**[1] *nollal,* பெ. (n.) **1.** பார்வையற்றுக் கண்குழிந்த நிலை (வின்.); the state of being blind and sunken-eyed. **2.** குழிவு; hallowness.

*[நுல் (துளை) → நுள் → நொள் → நொள்ளல் (வே. க.).]*

**நொள்ளல்**[2] *nollal,* பெ. (n.) நுளம்பு (திவா.); gnat.

*[நுல் → நுள் → நுள்ளல் → நொள்ளல்= சிறியஉலங்கு (நுளம்பு). நுல்=சிறுமை, கூர்மை.(வே. க.)]*

**நொள்ளாப்பு** *nollāppu,* பெ. (n.) வருத்தம் (நெல்லை); pain, grievance.

*[நுல் (நோதல்) → நுள் → நொள் → நொள்ளாப்பு. (வே. க.)]*

**நொள்ளை**[1] *nollai,* பெ. (n.) **1.** குருடு; blindness. *"நொள்ளை நாகில்"* (திருவிளை. பரிநரி.14). **2.** நாகரவண்டு (சூடா.); green beetle. **3.** விலங்குவகை; a beast. *"உள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை"* (அகநா. 53:2)

**க.** நொள்ளை.

*[நுல் (துளை) → நுள் → நொள் → நொள்ளை = கண் குழிந்த குருடு (வே. க.).]*

**நொள்ளை**[2] *nollai,* பெ. (n.) கைக்குழந்தை (நெல்லை); infant, baby.

*[நுல் = சிறுமை. நுல் → நுள் → நொள் → நொள்ளை (வே. க.)]*

**நொள்ளைக்கண்** *nollai-k-kan,* பெ. (n.) பார்வை மாறிய கண்; blind eyes.

*[நொள்ளை + கண் ]*

**நொள்ளைப்பயல்** *nollai-p-payal,* பெ. (n.) இழிந்தவன், எளியன்; insignificant person. *நொள்ளைப் பயலுக்கு நோப்பாளமேன்"* (ஆதியூரவதானி)

*[நொள்ளை + பயல்]*

**நொள்ளைமடையன்** *nollai-madaiyan,* பெ. (n.) பார்வையற்ற கொக்குவகை (M.M.); blind heron.

**மறுவ.** நொள்ளை மடையான்.

*[நொள்ளை + மடையன். மடையன் = பறவைவகை, கொக்குவகை]*

**நொளநொள—த்தல்** *nola-nola-,4* செ.கு.வி. (v.i.) **1.** குழைதல்; to become soft from over-ripeness; to be mashy. **2.** வழுவழுப்பாதல்; to be sleek and smooth, as a snake or a leech.

*[நுல் (நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொள → நொளநொளு—த்தல்.]*

துளைக்கப்பட்ட பொருள்கள் உளுத்த மரம் போற்கட்டு விட்டுப் போவதனாலும், கையினாலும் கோலினாலும் எளிதாய்த் துளைக்கப்படும் அல்லது ஊடுருவப்படும் பொருள்களெல்லாம், நீருங் கூழும் போல் நெகிழ்ச்சிப் பொருள்களாகவே யிருப்பதனாலும், துளைத்தற் கருத்தினின்று நெகிழ்ச்சி அல்லது தளர்ச்சிக் கருத்துத் தோன்றும். (வே.க. நுல்[9]).

**நொளம்பர்** *nolambar,* பெ. (n.) பல்லவமன்னர் வகையினர் (I.M.P.ct. 167); a division of Pallavas.

**நொளம்பபாடி** *nolamba-pādi,* பெ. (n.) நொளம்பவாடி பார்க்க; see *nolamba-vādi.*

**நொளம்பவாடி** *nolamba-vādi,* பெ. (n.) நொளம்பர் ஆண்ட நாடு (கல்.); the country ruled by Nolamber.

**மறுவ.** நுளம்பபாடி (மெய்க்கீர்த்தி)

*[நொளம்பர் + வாடி. வாடி = நாடு, பகுதி.]*

**நொளில்** *no!il,* அருவருக்கத்தக்க சேறு (பிங்.); mire in a repulsive condition.

*[நுல் (நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொளில்.*
*ஒ.நோ. தொள் → தொள்ளி = சேறு. தொள்ளி → தொளி = சேறு. (வே.க.)]*

**நொளுக்கல்** *no!ukkal,* பெ. (n.) 1. முற்றாத நிலை; immature condition, as of areca-nuts. 2. இளம்பாக்கு; tender, immature areca-nuts. *குடந்தை வெற்றிலைக்குக் கூட்டுச்சேரும் பாக்கு நொளுக்கலாக இருக்கலாமா?*

*[நொள்கு² → நொளுக்கல்]*

**நொளுநொளெனல்** *no!u-no!enal-,* பெ. (n.) குழைதற் குறிப்பு; onom. expr. signifying mashy state.

*[நொளு + நொளு + எனல்]*

**நொளுப்பு** *no!uppu,* பெ. (n.) வேலையில் குழப்புகை (வின்.); shirking work; shinking from duty.

*[நுல்(நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொளு → நொளுப்பு.(வே.க.)]*

**நொளுவல்** *no!uval,* பெ. (n.) *நொளுக்கல்* (யாழ்ப்.) பார்க்க; see *no!ukkal.*

*[நுல் = இளமை, மென்மை, சிறுமை. நுல் → நுள் → நுளு → நொளு → நொளுவல் (வே.க.)]*

**நொளைதாளி** *no!aitā!i,* பெ. (n.) பெரிய மரவகை; heart stipuled larger Chinese laurel, Antidesma bunius.

*ம.* நுலிதாலி

**நொற்பம்¹** *no!u-no!u-,* 4 செ.கு.வி. (v.i.) *நொளநொள* பார்க்க; see *no!a-no!a-.*

*[நுல்(நெகிழ்ச்சி) → நுள் → நொள் → நொளு → நொளுநொளு–த்தல் = நெகிழ்தல், குழைதல்]*

**நொற்பம்²** *norpam,* பெ. (n.) 1. நுட்பம்; minuteness. "நொற்பமான வேலை" (வின்.). 2. எளிமை; insignificance. "*நொற்பவுலகத்தவர் நோய் தீர்த்து*" (பஞ்ச.திருமுக.611).

*[நுல் = நுண்மை, எளிமை. நுல் → நொல் → நொற்பு → நொற்பம் (வே.க.)]*

**நொற்பன்** *norpan,* பெ. (n.) 1. சிறியன்; mean person. 2. எளியன்; humble person.

*[நொற்பம் → நொற்பன், நொற்பம் = எளிமை, நுட்பம்]*

**நொறிதல்** *noridal,* பெ. (n.) விரைவு; quickness.

*[நொறில் → நொறிதல்]*

**நொறில்** *noril,* பெ. (n.) 1. விரைவு (சூடா.); quickness, speed. "*நொறில்பரிர் தேர்*" (நைடத.போர்புரி.3). 2. நுடக்கம்; suppleness, pliability. "*நொறிலியற் புரவி யதியர் கோமான்*" (தொல்.சொல். 396,உரை). 3. ஒடுக்கம் (பிங்.); shutting, closing, contracting. 4. *நொளில்* பார்க்க; see *no!il.* "*செருநில நொறிற் செந்நீரினுள்*" (சூளா.அரசி.274).

**நொறுக்கரிசி** *norukkariši,* பெ. (n.) 1. உரலிட்டு நெல்லைக்குத்தும்போது நொறுங்கிய அரிசி; rice broken in pounding. 2. அரைவேக்காட்டுச் சோறு (வின்.); half boiled rice.

மறுவ. நொய்யரிசி.

*[நொறுங்கு → நொறுக்கு + அரிசி.]*

**நொறுக்கல்நெல்** *norukkal-nel,* **பெ.** (n.) அறுப்புக் காலத்து மழையாற் பதர்த்த நெல்; paddy wet and softened by rain during harvest.

*[நொறுங்கு → நொறுக்கு → நொறுக்கல் + நெல்.]*

**நொறுக்கித்தள்ளு–தல்** *nerukki-t-tallu-,* **5.செ.குன்றாவி.** (v.t.) **1.** நன்றாயடித்தல்; to beat soundly. **2.** மிகத்திட்டுதல்; to abuse roundly. **3.** நற்றிறங்காட்டுதல்; to exhibit great ability, as in eloquence or music. **4.** செய்வ தருமை என்ற செயலைச் சிறப்பாகச் செய்தல்; to well with apparent case smash. *பேச்சுப் போட்டியில் கலந்துக்கொள்ளப் பயப்பட்டாயே. இப்போது எப்படி! நொறுக்கித் தள்ளிவிட்டாய்.*

*[நொறுக்கு + தள்ளு – தல்]*

**நொறுக்கு[1]–தல்** *norukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** சிறுசிறுபகுதிகள் ஆகுமாறு உடைத்தல்; பொடியாக்குதல்; to break, crack, crush, smash to pieces. *செங்கல்லை நொறுக்கிக் கொடு.* **2.** அரத்தக்காயம் பண்ணுதல்; to bruise. **3.** நையப்புடைத்தல்; to beat soundly. "*வீரரை நொறுக்கி*" (திருப்பு.574.). *சண்டையில் எதிரியை நொறுக்கிவிட்டான்.* **4.** மிகுதியாய் உண்ணுதல்; to eat in large quantities. *பந்தியில் ஒரு நொறுக்கு நொறுக்கிவிட்டான்* (உ.வ.)

**க.** நூர்கு (g).

*[நொறுங்கு → நொறுக்கு → நொறுக்கு – தல். இது பிறவினை வடிவம்]*

**நொறுக்கு[2]** *norukku,* பெ. (n.) **1.** பொடியாக்குகை; crushing. **2.** நன்றாயடிக்கை; beating soundly, thrashing. *சண்டையில் எதிரியை நொறுக்கு நொறுக்கு என்று நொறுக்கி விட்டான்.*

**க.** நூர்கு

*[நொறுங்கு → நொறுக்கு.]*

**நொறுக்குச்சக்கந்தம்** *norukku-c-cakkandam,* பெ. (n.) கேலிப்பேச்சு; ஏளனம்; mockery, jeering.

*[நொறுக்கு + சக்கந்தம். சக்கந்தம் = பகடி,கேலி.]*

**நொறுக்குத்தீனி** *norukku-t-tini,* பெ. (n.) உணவாக அல்லாமல் அவ்வப்போது தின்னும் முறுக்கு, சீடை,கடலை போன்ற தின்பண்டம்; small eats.

*[நொறுக்கு + தீனி.]*

**நொறுக்குவெள்ளி** *norukku-velli,* பெ. (n.) தங்கத்தோடு சேர்த்து உருக்கி மட்டப் பொன்னாகச் செய்விக்கும் ஒருவகை (இரசாயன) வெள்ளி; a chemical silver used for mixing with gold so as to get an inferior gold. (சா.அக.).

*[நொறுக்கு + வெள்ளி.]*

**நொறுகை** *norukai,* பெ. (n.) **நொறுவை** (இ.வ.). பார்க்க; see *noruvai*

*[நொறுவை → நொறுகை.]*

**நொறுங்கு[1]–தல்** *norungu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** உடைந்து சிறுசிறு பகுதியாதல்; பொடியாதல்; to be broken, crushed, smashed to pieces. *கற்கள் பட்டதினால் கண்ணாடிகள் நொறுங்கின. நொறுங்கத் தின்றார்க்கு நூறு வயது (பழ.). மனம்*

*நொறுங்குண்டது. மனம் நொறுங்குதல் போல் வருந்துதல்.* (உ.வ.) 2. பின்னிரங்குதல்; to be broken down in spirit, to become contrite. *நொறுங்குண்ட மனம்* (வின்.).

*[நுல் → நுள் → நுறு → நொறு → நொறுங்கு → நொறுங்கு-தல். இது தன்வினை வடிவம்.]*

**நொறுங்கு²** *noṟuṅgu,* பெ. (n.) 1. நொய் (சூடா.); broken grain, grits. 2. தூள்; powder. *"நொறுங்காய்க் கூடியிட்டன கொடுமுடித் துறுகற்கள்"* (சூளா.சீய. 145). 3. நுண்மை (வின்.); minuteness smallness.

*[நுல் → நுள் → நுறு → நொறு → நொறுங்கு. நுல் = நுண்மை, சிறுமை.]*

**நொறுங்குண்டமனம்** *noṟuṅ-guṇḍa-manam,* பெ. (n.) பின்னிரங்கும் மனம் (கிறித்.); contrite spirit, wounded mind.

*[நொறுங்கு + உண்ட + மனம்.]*

உண்ட என்பது இங்கு உள்வாங்குதல் என்னும் பொருளில் வந்தது. ஔவையார் மன்னன் வீட்டு மணவிழாவிற்குச் சென்ற போது *"நெருக்குண்டேன்; அடியுண்டேன்; பிடியுண்டேன்; கோலுண்டிலேன்"* என்று கூறியது காண்க.

**நொறுநாட்டியம்** *noṟu-nāṭṭiyam,* பெ. (n.) 1. பொருட்படுத்தத்தகாத மிகச் சிறு குற்றங்களைக் கூறுந்தன்மை (இ.வ.); meticulosity, over-scrupulousness. 2. விறலுஞ் சுவையுந் தோன்ற நடிக்கும் நுண்வினை நடனம்; a kind of dance. 3. துப்புரவு, சுவை, ஒழுக்கம் முதலியவற்றில் அளவிற்கு மிஞ்சிக் கவனஞ் செலுத்துகை; to take too much of purity flavor and behavier.

*[நொறு + நாட்டியம். நடி → நடம் → நட்டம். வ. நாட்ய (நாட்ய → நாட்டியம்).]*

மிக நுட்பமான அவிநயங்களுடன் நடனஞ் செய்தல் நொறுநாட்டியம் எனப்படும். வேண்டாத நுண்ணிய வினைகளைச் செய்யும் ஒருவனை *'நொறுநாட்டியம் பிடித்தவன்'* என்பர் (சொ.ஆ.க-12). முதற்பொருளாய்ச்சிறுகுறையும் மூன்றாம் பொருளாய் மிகு சுவையும் தாழ்வாக்கி, இரண்டாம் பொருளாய நாட்டியத்திறம் 'நொறு'-நடனம், இசைபற்றிய சிறிய எல்லைவரை ஆடப்படுதலின் சிறப்புடைத் தாகிறது.

**நொறுநொறு-த்தல்** *noṟu-noṟu-,* 4 செ.கு.வி. (v.i.) உடையுந் தன்மையாதல் (வின்.); to be brittle, fragile, crisp, as biscuit.

*[நொறு + நொறு - நொறுநொறு → நொறுநொறு -த்தல்]*

**நொறுவல்** *noṟuval,* பெ. (n.) *நொறுவை* பார்க்க; *see noṟuvai.*

*[நொறுவை → நொறுவல்]*

**நொறுநொறெனல்** *noṟu-noṟeṉal,* பெ. (n.) நொறுங்குதற்குறிப்பு; onom. expr.signifying brittleness or crispness.

*[நொறு + நொறு + எனல்.]*

**நொறுவை** *noṟuvai,* பெ. (n.) பல்லால் நொறுக்கித் தின்னும் சிற்றுண்டி (வின்.); dainties, things of luxury.

*[நுல் → நுள் → நுறு → நொறு → நொறுவை. (வே.க.)]*

**நொறுவைக்கள்ளன்** *noṟvai-k-kaḷḷaṉ,* பெ. (n.) வீண்செலவு செய்வோன் (வின்.); extravagant man.

*[நொறுவை + கள்ளன்.]*

மறைவாக, கள்ளத்தனமாக நொறுவை உணவுண்ணச் செலவிடுபவனைக் குறிக்கும்.

**நொறுவைக்கள்ளி** *noṟuvai-k-kaḷḷi,* பெ. (n.) வீண்செலவு செய்பவள் (வின்.); extravagant woman.

*[நொறுவைக்கள்ளன் → நொறுவைக்கள்ளி.]*

மறைவாக, கள்ளத்தனமாக நொறுவை உணவுண்ணச் செலவிடும் பெண்ணைக் குறிக்கும்.

**நொறுவைப்பண்டம்** *noṟuvai-p-paṇḍam,* பெ. (n.) சிற்றுண்டி (வின்.); dainties.

*[நொறுவை + பண்டம்]*

**நொன்றி** *noṉṟi,* பெ. (n.) மான் (சங்.அக.); deer.

*[நொல் (→ நொள்) → நொன் + றி நொள் → நொளுந்துதல் = மறைதல் பொருளில் வருவது. புலிபோன்றவல் விலங்குகளை காணுங்கால் புதரில் மறையும் பண்பு பற்றியதாகலாம்.]*

**நொன்னை** *noṉṉai,* பெ. (n.) **1.** நையாண்டி; mimicking, mocking. **2.** எளனம்; taunt, ridicule, sarcasm.

*[நொல் + நை. சொல்லில் மறைந்து வரும் நகைச் சுவையைக் குறிக்கும்.]*

அதியமானிடமிருந்து தொண்டைமானுக்குத் தூது சென்ற ஔவை நெய் தோய்ந்த புதியபோர்க் கருவிகளைப் பார்த்து, அதியமானிடம் இருப்பது குருதி தோய்ந்த கருவிகள் என்று கூறுவதாகும்.

**நோ¹** *nō.* நகரமெய்யும் ஓகார உயிரும் சேர்ந்து பிறந்த உயிர்மெய் எழுத்து; the compound of 'n' and 'o'.

*[ந் + ஓ – நோ. இஃது ஒரெழுத்து ஒரு சொல்லாகவும் (ஒருமொழியாகவும்) வரும்.]*

**நோ²–தல்** *nō-,* 17 செ.கு.வி. (v.i.) **1.** நோவுண்டாதல்; to feel pain ache, suffer, smart. *கால் நொந்தது.* **2.** வருந்துதல்; to be grieved, distressed in mind; to feal. "ஊரன்மீ தீப்பறக்க நொந்தேனும் யானே" (நாலடி,389). "*நோதல் எவன்மற்று நொந்தார்என்று அஃது அறியும் காதலர் இல்லா வழி*" (குறள்,1308). **3.** துன்பத்தைச் சொல்லுதல்; to complain. "*நோவற்க நொந்த தறியார்க்கு*" (குறள்,877). **4.** சமைத்த வுண்டி பதனழிதல்; to be injured, bruished, as a plant, fruit; to be spoiled, as boiled rice. "*நொந்தன்னம்*" (பதார்த்த.1459). *சோறு நொந்துபோய் விட்டது.* (உ.வ.). **5.** வறுமைப்படுதல்; to be impoverished; to grow poor. *நொந்த குடி.* **6.** துன்பப்படுதல்; to suffer. **7.** மெலிதல்; to lean. **8.** நொய்ய தாகுதல்; to light. **9.** தளர்தல்; to loose.

ம.நோ(க); க.நோ; **தெ.**நொச்சு, நொகுலு; **கோத.** நொவு; **துட.** நு; **து.** நோபுனி; **கொலா.** ஒய் (wound); **நா(ச).** ஒய் (to be painfuful); **பர்.** நொவ்; **கட.** நொய் (to be painful); **கோண்.** நொய்யாநா; **கூ.** நோவ; **குவி.** நோகி; **குரு.** நுஞ்ச்நா; **மா.** நுந்சே.

*[நுள் → நொள் → நொய் → நோய் → நோ → நோ–தல்(சு.வி.40). நுள் = சிறுமை, மென்மை,துன்பம்]*

வறுமையும் நோய் போன்ற துன்பமாகக் கருதப்படுவதால், நோய் நொடி யென்றும், நோவு நொடி என்றும் இணைத்துச் சொல்வது மரபு.

**நோ³–தல்** *nō-,* **15** செ.குன்றாவி. (v.t.) வெறுத்தல்; to hate. ***"ஏதிலரை நோவதெவன்"*** **(நீதிநெறி.25).**

*[நோய்¹ → நோ → நோ–தல்.]*

**நோ⁴** *nō,* பெ. (n.) **1.** வலி; aching, pain, smart. **2.** துன்பம்; distress, grief. *"திறன் அல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து அறன் அல்ல செய்யாமை நன்று"* **(குறள்,157). 3.** நோய் **(வின்.)**; illness. **4.** சிதைவு **(வின்.)**; injury, bruise, as in the body, a tree, a fruit. **5.** நலிவு, வலிமைகுறைவு; weakness, infirmity.

*[நோய்¹ → நோ.]*

**நோக்க** *nōkka,* இடை. (part.) ஓர் உவம உருபு **(தொல்.பொருள்.286,** உரை); a particle denoting comparison. *"அன்ன ஆங்க மான இறப்ப என்ன உறழத் தகைய நோக்கொடு கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம்"* **(தொல். பொருள். உவம.12).**

*[நோக்கு → நோக்க.]*

**நோக்கட்டாமரம்** *nōkkaṭṭā-maram,* பெ. (n.) இலகோட்டா (L.) மரவகை; loquat.

*[நோக்கு + எட்டா + மரம்.*
*மிக உயர்ந்த மரம்.]*

**நோக்கப்பண்ணல்** *nōkkappaṇṇal,* பெ. (n.) **1.** வலியுண்டாகச்செய்கை; causing pain. **2.** துன்பப்படுத்துகை; causing distress. **(சா.அக.).**

*[நோவப்பண்ணல் → நோகப்பண்ணல்→ நோக்கப்பண்ணல் (உ.வ.)]*

நோக்கப்பண்ணல் என்றே வழக்கில் இருப்பின் அது பார்ப்பித்தல் என்னும் பொருளும் தரும் குழப்பம் உளது.

**நோக்கம்¹** *nōkkam,* பெ. (n.) **1.** கண்**(திவா.)**; eye. **2.** பார்வை; eyesight, look, gaze, glance, view. ***"கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கம்"*** **(குறள்,1092).** ***"நோக்கத் தொதுங்கு (பழ.). நோக்க நோக்குவ நோக்காமுன் நோக்குவன்"*** **(பழ.). 3.** கோள் (கிரக) நோக்கு; aspects of a planet. **4.** தோற்றம்; appearance, expression, cast of countenance.

*[நோக்கு → நோக்கம்.]*

**நோக்கம்²** *nōkkam,* பெ. (n.) **1.** உயர்ச்சி **(வின்.)**; height, elevation. **2.** அழகு; beauty, attractiveness. *"மருணோக்க மடிந்தாங்கே மயல்கூர் கிற்பான் மன்னோ"* **(கலித்.10).** *"யாவர்க்கு நோக்கலாப் பெண்ணினோக்கு டையாள்"* **(கம்பரா. கர.6). 3.** காவல் **(யாழ்.அக.)**; watch. **4.** இலக்கு, கருத்து; design, object, intention, aim, motive. ***நீ அப்படிச் செய்வதற்கு நோக்கமென்ன? ஆதரவற்றவர்க்கு உதவுவதே எங்கள் நோக்கம். 5.*** அறிவு; sense, intelligence. *"மருளிகொண்ட மடநோக்கம்"* **(கலித்.14).** *"நுண்ணி தினுணர் தனுமைந்த நோக்கில்"* **(மதுரைக்.517). 6.** கவனம்; attention, observation. ***படிப்பில் நோக்கமாயிரு. 7.*** விருப்பம் **(யாழ்.அக.)**; desire. **8.** குறிப்பு; indication, sign. ***வானம் மழை நோக்கமாயி ருக்கிறது.***

ம. நோக்கம்

*[நோக்கு → நோக்கம். = ஒருபொருளின் மேல் உள்ள நாட்டம்]*

**நோக்கர்** *nōkkar,* பெ. (n.) ***நோக்கன்*** பார்க்க; see *nōkkaṉ.*

*[நோக்கன் → நோக்கர்.]*

**நோக்கர்கள்** *nōkkarkaḷ,* பெ. (n.) வருங்காலத்தில் நடக்கவிருப்பதை முன்னரே கூறக்கூடிய அளவுக்கு ஒரு துறையில்

நிகழ்வதை ஆழ்ந்து கவனிப்பவர்கள்; observers. *வரும் ஒலிம்பிக்கில் இந்தியா பல தங்கப்பதக்கங்களைப் பெறும் என்று விளையாட்டு நோக்கர்கள் கூறுகின்றனர். வரும் பொதுத் தேர்தலில் ஆளும் கட்சிக்கு வெற்றிவாய்ப்புக் குறைவு என்று அரசியல் நோக்கர்கள் கருதுகின்றனர்.*

*[நோக்கு → நோக்கர் + கள்.]*

**நோக்கலங்காரம்** *nokkalaṅgāram,* பெ. (n.) தற்குறிப்பேற்றம் (வீரசோ.அலங்.25); a figure of speech.

*[நோக்கு + அலங்காரம். நோக்கு = பார்வை. Skt. அலம்கார → த. அலங்காரம் = அணிவகை..]*

**நோக்கன்** *nokkaṉ,* பெ. (n.) 1. இன (சாதி) வகை (E.T.v, 416); a caste 2. கழைக்கூத்தன் (வின்.); pole-dancer, mountebank.

**நோக்கனோக்கம்** *nōkkaṉōkkam,* பெ. (n.) மனத்தால் நோக்கும் நோக்கம்; discernment, as seeing through the mind's eye. "*நோக்க னோக்க மவ்விரண்டன் மருங்கி னேதுவு மாகும்*" (தொல்.சொல்.93).

*[நோக்கு + அல் + நோக்கம். நோக்கு = பார்வை. கண்ணால் அன்றி மனத்தால் நோக்கும் பார்வை என்று பொருள்படும்.]*

**நோக்காச்சாவி** *nōkkā-c-cāvi,* பெ. (n.) *நுகக்காற்சாவி* (நாஞ்.) பார்க்க; see *nugakkāṟ-cāvi.*

**நோக்காடு** *nōkkāḍu,* பெ. (n.) 1. நோவு, வலி; pain, pang, agony. 2. அரச (இராச) நோக்காடு (வின்.); pangs of child-birth. 3.நோய்; sickness, disease. '*கண்ணோக் காடாம்*' *(பணவிடு.300). கொள்ளையா நோக்காடா?* (உ.வ.). 4. மனநோய் (வின்.); mental worry. 5. வறுமை (யாழ்ப்.); reduced circumstances, poverty.

*[நோ + காடு → நோக்காடு. கடு → காடு. கடுகுதல் = மிகுதல்.]*

**நோக்காமை** *nōkkāmai,* எ.ம.வி. (n.v.) பார்க்காமை; பார்க்காத தன்மை; நோக்குதல் என்பதன் எதிர்மறைவினை. have not seen, have not look. "*குறிக்கொண்டு நோக் காமை அல்லாமல் ஒருகண் சிறக் கணித்தாள் போல நகும்*" (குறள்,1095).

*[நோக்கு + ஆ + மை. 'ஆ'–எதிர்மறை. 'மை'–பண்பு ஈறு (விகுதி).]*

**நோக்கால்** *nōkkāl,* பெ. (n.) நுகக்கால் (நெல்லை); yoke.

*[நுகக்கால் → நோக்கால்]*

**நோக்காலுரை–த்தல்** *nōkkāl-urai-,* 4 செ.கு.வி. (v.i.) பார்வையால் உணர்த்துதல்; to communicate by mere look, as a guru. "*குறுமுனிக்குத் தமிழ் நோக்கா லுரைத்த வாறும்*" (திருவாலவா. பதிகம்.3).

*[நோக்கு → நோக்கால் + உரை–த்தல்.]*

**நோக்கி** *nōkki,* வி.எ. (adv.) 1. குறிப்பிட்ட ஒன்றை அல்லது ஒருவரை இலக்காகக் கொண்டு; towards; in the direction of. *ஏவுகணை விண்ணை நோக்கிப் பாய்ந்தது. ஓசை வந்த திசையை நோக்கி ஓடினாள். அவன் காட்டை நோக்கி நடந்தான்.* 2. பார்த்து; to see. "*நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள் யாப்பினுள் அட்டிய நீர்*" (குறள்,1093).

**எபிரேயம்.** நோக்கக்.

*[நோக்கு → நோக்கி.]*

**நோக்கிமாடை** *nōkkimāḍai,* பெ. (n.) காசு (நாணய)வகை; a coin. "*பண்டாரத்தில் ஒடுக்கின நோக்கி மாடை ஒன்றும்*' (தெ.க.தொ.4,293).

*[நோக்கு + மாடை. மாடு + ஐ– மாடை = காசுவகை.]*

நோக்கர்களால், ஆய்ந்து நோக்கப்பட்ட செல்வம். மாடு = செல்வம்

"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு மாடல்ல மற்றை யவை". (குறள்,400).

**நோக்கியநோக்கம்** *nōkkiya-nōkkam,* பெ. (n.) கண்களால் நோக்குகை (தொல்.சொல்.89, இளம்பூ.); seeing through the eyes.

*[நோக்கு + இ + அ – நோக்கிய + நோக்கம். 'இ'–சாரியை. 'அ' பெயரெச்ச ஈறு. ]*

**நோக்கு¹–தல்** *nōkku-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. கூர்ந்து பார்த்தல்; to see, look at, behold, view. "*நோக்கினாள் நோக்கெதிர்நோக்குதல்*" (குறள்,1082). "*நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா*" (தொல்.சொல்.வேற்று.11). *எத்திசையில் நோக்கினும் பச்சைப் பசேலென்ற வயலைக்காணமுடிகிறது. அவள்தலை நிமிர்ந்து என்னை நோக்கினாள்.* "*யான் நோக்கும் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்*" (குறள்,1094). 2. சிறப்பாய்க் கருதுதல்; to consider, reflect. "*அறனோக்கி யாற்றுங்கொல் வையம்*" (குறள்,189). "*ஒன்று நோக்கலருன் வலியோங்கறனின்று நோக்கி நிறுத்து நினைப்பினர்*" (கம்பரா. கரன்.5). 3. கவனித்தல்; to regard, pay attention to. "*நச்சாமை நோக்காமை நன்று*" (ஏலாதி,12). *கட்டுரை ஆசிரியரின் மொழிநடையை நோக்கும்போது என்னதோன்றுகிறது?* 4. கவனித்துத் திருத்துதல்; to arrange, put in order. "*புனையிழை நோக்கியும்*" (கலித்.76). 5. காத்தல்; to keep product, save. "*நோக்காது நோக்கி*" (சி.போ. 1:4, வெண்.பக்.79). 6. கவனித்துச் செய்தல்; to do, perform. "*இவற்றை மும்மைசேர் யாண்டு நோக்கு*" (திருவாலவா.34:15). 7. ஒத்தல்; to resemble. "*இந்துநோக்கிய நுதலியை*" (கம்பரா.சூர்ப்ப.96). 8. ஒப்பிட்டுப் பார்த்தல்; to compare. *அவனை நோக்க இவன் நல்லவன்.* 9. படித்தல்; to read. "*இறைவன் கொண்டாங்கது நோக்குமே*" (சீவக.2586). 10. விரும்புதல் (யாழ்.அக.); to desire. 11. அணுகுதல்; approach. *எந்தச் செய்தியையும் பொறுமையாக நோக்கக் கற்றுக் கொள்ளவேண்டும். அறிவியல் அடிப்படையில் இப்பாடலை நோக்குவோம்.*

ம. நோக்குக; க. நோடு, இ. தேக்.

*[நுல் (=கூர்மை)→ நுள் → நொள் →நோள்→ நோட்கு →நோக்கு →நோக்கு –தல் (வே.க.)]*

*[நொள் → நொழு → (நொழுகு)→ நோக்கு →நோக்கு–தல் (சு.வி.45)]*

**நோக்கு²–தல்** *nōkku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கண்காணித்தல்; to supervise. '*இம்மடம் நோக்கும் திருமேனிக்கு*' (தெ.க.தொ4,17). 2. நுழைந்து பார்த்தல்; to peep in or into; to put the head in and look. 3. நுட்பமாய்ப் பார்த்தல்; to see minute. 4. அகக்கண்ணால் பார்த்தல்; to see inner eyes.

*[நோக்கு¹–தல் → நோக்கு²–தல்.]*

**நோக்கு³** *nōkku,* பெ. (n.) 1. நோக்குங் கண்; looking eye. "*மலர்ந்த நோக்கின்*" (பதிற்றுப்.65:7). 2. கருத்தோடு கூடிய பார்வை; கண்ணோட்டம்; look, sight; point of view. "*செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்*" (நாலடி,298). *உலகநோக்கு அவர்கவிதையில் இல்லை.* "*கண்களவு கொள்ளும் சிறுநோக்கம்*

*காமத்தில் செம்பாகம் அன்று பெரிது"* (குறள்,1092). *"யான்நோக்கும் காலை நிலன்நோக்கும்; நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்"* (குறள்,1094). 3. சிறப்பாகப் பார்த்தற்கேற்ற அழகு; beauty. *"நோயிகந்து நோக்கு விளங்க"* (மதுரைக்.13). 4. சிறந்த கருத்து; meaning, intention, *"நூலவர்நோக்கு"* (திரிகடு,29). 5. கூரிய அறிவு; knowledge, *"நுழைந்த நோக்கிற்கண்ணுள் வினைஞர்"* (மதுரைக். 517). 6. சிறப்பாகக் கருதற்கேற்ற பெருமை; greatness. *"நோக்கிழந்தனர் வானவரெங்களால்"* (கம்பரா.கும்பக.328). 7. சிறந்தநடை; mode, style. *"சொன்னோக்கும் பொருணோக்கும்"* (அட்டப். திருவரங்கக். தனியன்,2). 8. வேடிக்கை கூத்துகளுள் ஒன்று; a kind of dance. *நோக்கத்தொதுங்கு* (பழ.). *நோக்கநோக்குவ நோக்காமுன் நோக்குவன்* (பழ). 9. நோக்கம்; objective; goal. **ஆய்வின் நோக்கைப் பொறுத்தே அதன் போக்கும் அமையும்**

*ம.* நோக்கு; *இ.* தேக்.

*[நுல் (=கூர்மை, நுண்மை, இளமை) → நுள் → நொள் → நோள் → நோட்கு → நோக்கு. ஒ.நோ. கொள் → கொள்கு → கொட்கு → கொக்கு = வளைந்த கழுத்துள்ள பறவை (வே.க.)]*

*[முள் → மொள் → நொள் → (நொழு) → (நொழுகு) → நோக்கு = நுழைந்துபார்த்தல், நுட்பமாய்ப்பார்த்தல், அகக்கண்ணால் பார்த்தல் (சு.வி.45)]*

**நோக்கு⁴** *nōkku,* பெ. (n.) ஓசை முதலியவற்றால் கேட்பாரை மீட்டுத் தன்னை நோக்கச் செய்யும் செய்யுளுறுப்பு (தொல்.பொருள்.செய்.103); attractive grace, an element of poetic art.

*[நோக்கு³ → நோக்கு⁴ = கூர்ந்து நோக்கிச் சிறப்புப் பொருள் காணுமாறு அமைக்கும் எழுத்துஞ்சொல்லுமான செய்யுளுறுப்பு. "மாத்திரை முதலா அடிநிலை காறும் நோக்குதற் காரணம் நோக்கெனப்படுமே" (தொல்.பொருள். செய்.103).]*

நோக்கு என்பது, மாத்திரை முதலாகிய உறுப்புகளைக்கேட்போர்க்கு நோக்குப்படச் செய்தல்.

யாதானும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிதுநோக்காது அது தன்னையே நோக்கி நிற்கும் நிலை... ஓரடிக்கண்ணும் பலவடிக் கண்ணும் நோக்குதல் கொள்க. இஃது ஒரு நோக்காக ஓடுதலும் பல நோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்குதலும் கொள்க. (தொல்.செய்.100 இளம்). மாத்திரை முதலிய உறுப்புக்களைக் கேட்போர்க்கு நோக்குப்படச் செய்தல் (தொல்.பொருள்.313 பேரா.). மாத்திரை முதலிய உறுப்புகளை யுடைத்தாய்க் கேட்போர்க்கு நோக்குப்படச் செய்தல் (தொல்,பொருள். செய்.1,நச்.). மாத்திரை முதலாக நிரம்பும் அடிகளாலாய தொடையுடையவாஞ் செய்யுள் நடந்த அடி எத்துணையவாயினும் அவை முடி யுங்காறும் வெள்ளைமையும் பிள்ளை மையுமின்றி வந்த சொற்றொடர் கேட்டோர் மறித்து நோக்கிப் பயன் கொள்வதோர் கருவியாகிய யாப்புக்கூறு (மாறனலங்காரம்).

**நோக்கு⁵** *nokku,* இடை. (part.) ஓர்உவமவுருபு (தொல்.பொருள்.287); a particle of comparison

**நோக்குடைப்பொருள்** *nōkkuḍai-p-poruḷ,* பெ. (n.) 1. குறிப்புப் பொருள்; suggested meaning. 2. கருதற் சொற்களாலமைந்த சுவையுடைப் பொருள் (வின்.); interesting matter expressed in obscure language.

*[நோக்கு + உடைப்பொருள். உடைப்பொருள் = உடைமைப்பொருள்.]*

**நோக்குநோக்கி** *nōkku-kōkki,* பெ. (n.) ஆள்வாடைத்தட்டிச்செடி; an unknown plant. (சா.அக.).

**நோக்குவவெல்லாமவையேபோறல்** *nōkkuva-v-ellām-avaiyē-pōṟal,* பெ. (n.) துன்பநிலை (அவத்தை) பத்தனுள் பார்ப்பன வெல்லாம் தான் கருதிய தலைவியின் உருவாகவே தலைவற்குத் தோன்றும் நிலை (நம்பியகப்.36, உரை); the state of mind of a lover when every object of his sight painfully reminds him of the multifarious charms of his sweetheart, one of ten avattai.

*[நோக்கு → நோக்குவ + எல்லாம் +அவையே போறல்.]*

துன்பநிலை (அவத்தை) பத்து:

*"காட்சி முதலாச் சாக்காடு ஈறாக் காட்டிய பத்தும்"* (நம்பியகப்.36).

காட்சி, வேட்கை, ஒருதலையுள்ளுதல், மெலிதல், ஆக்கஞ்செப்பல், நாணுவரை இறத்தல், நோக்குவ எல்லாம் அவையே போறல், மறத்தல், மயக்கம், சாக்காடு என்பன பத்துவகைத் துன்பநிலை (நம்பியகப்.36, உரை).

**நோக்குவித்தை** *nōkku-viṭṭai,* பெ. (n.) கண்கட்டும் கலை (வித்தை); conjuring trick, jugglery, "*நோக்குவித்தை காட்டுநரை*" (திருவாலவா.49:18).

*[நோக்கு + வித்தை. Skt. வித்யா → த.வித்தை (விச்சை.) வித்தை = கல்வி, கலை]*

**நோக்கெதிர்நோக்கு–தல்** *nōkkedir-nōkku-,* 5 செ.கு.வி. (v.i.) தலைவன் நோக்கியவிடத்து தலைவி எதிர் நோக்குதல்; to gaze into another's eye, as lovers. "*நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு தானைக் கொண்டன்ன துடைத்து*" (குறள்,1082)

*[நோக்கு + எதிர் + நோக்கு–தல்.]*

**நோகாது** *nōkādu,* வி.எ. (adv.) *நோகாமல்* பார்க்க; see *nōkāmal.* *"நோகாது உணர்வோர் கல்வியை நோற்பார்"* (பழ.).

*[நோ → நோகாது.]*

**நோகாமல்** *nōkāmal,* வி.எ. (adv.) வலிக்காமல்; without painful. *கை, கால் நோகாமல் பொருளீட்ட முடியுமா?. உடம்பு நோகாமல் உட்கார்ந்து சாப்பிடமுடியுமா? நோகாமல் அடிக்கிறேன் ஓயாமல் அழு.* (பழ.) நோகாமல் நோன்புகும்பிட முடியுமா?

*[நோ → நோகாமல்.]*

**நோகு–தல்** *nōku-,* 5செ.கு.வி. (v.i.) வருந்துதல்; மனம் புண்படுதல்; get hurt of feelings, distressed in mind. *அவன் மனம் நோகும்படி நடந்து கொள்ளாதே. உன் பண்பற்ற பேச்சும் செயலும் அவரை நோகச்செய்து விட்டது.*

*[நோ → நோகு–தல்.]*

**நோங்கு–தல்** *nōṅgu-,* 5செ.கு.வி. (v.i.) வீட்டுத்திசை நோக்கி விருப்பொடு பார்த்தல்; to desire look.

*[நோக்கு–தல்(= பார்த்தல்) → நோங்கு–தல்.]*

**நோச்சோளம்** *nōccōḷam,* பெ. (n.) வெண்சோளம்; white maize. (சா.அக.).

**நோசரிகம்** *nōśarigam,* பெ. (n.) நித்தக்கத்தரி; long brinjal, Solaman melongena. (சா.அக.).

**நோசல்** *nōśal,* பெ. (n.) நோவு (வின்.); sickness, pain.

*[நோதல் → நோசல்]*

**நோசிதம்** *nōśidam,* பெ. (n.) கொடிக்குறிஞ்சா; small Indian ipecacunha, Gymnema sylvestris. (சா.அக.).

**நோஞ்சல்** *nōñjal,* பெ. (n.) மெலிவு; emaciation.

*[நோய் → நோய்ஞ்சல் → நோஞ்சல்.]*

**நோஞ்சான்** *nōñjāṉ,* பெ. (n.) நோய் முதலியவற்றால் மெலிந்தவன் (நெல்லை); feeble, invalid person. *சத்துணவு இல்லாத நோஞ்சான் குழந்தைகள். நேஞ்சான் மாடு.*

*[நோய் → நோய்ஞ்சான் → நோஞ்சான்= உடல்வலிமையற்று மெலிந்து காணப்படு பவன்.]*

**நோஞ்சி** *nōñji,* பெ. (n.) *நோஞ்சான்* (சங்.அக.) பார்க்க; see *nōñjāṉ.*

**நோட்டக்காரன்** *nōṭṭa.k-kāraṉ,* பெ. (n.) காசாயும் வண்ணக்கன்; shroff. "*நோட்டக்காரர் நெஞ்சடையக் கூப்பிடுவது*" (பணவிடு.182). 2. காசு, மணிகள் (நாணயம், இரத்தினம்) முதலியவற்றின் குணங்களையறிந்தவன் (இ.வ.); expert in appraising coins, gems etc.

ம.நோட்டக்காரன்; க. நோட்டகார (g)

*[நோட்டம் → நோட்டக்காரன் = காசு, பொன்,மணி ஆய்வோன். வண்ணக்கன்.]*

**நோட்டம்¹** *nōṭṭam,* பெ. (n.) 1. தட்டிப்பார்த்தல் முதலிய முறைகளைக் கொண்டு புரியும் பொன் வெள்ளிக்காசு பண ஆய்வு; examination of coins; assaying. 2. பொன்மணி முதலியவற்றின் ஆய்வு; scrutiny of gems, precious metals, etc. 3. விலைமதிப்பு; value, *அதன் நோட்ட மறியான்* (வின்.). 4. மதிப்பு (வின்.); criticism, as by a rival artist or workman. 5. போட்டி; competition. *நோட்டத்திலே விலை வைத்துவிட்டார்கள்* (வின்.). 6. வெல்ல முயல்கை; attempt at wit; endeavour to excel, hinder or baffle another in speech. '*வார்த்தை நோட்டத்தில் என்னபலன்*' (வின்.). 7. மதிப்பிடும் அல்லது தெரிந்து கொள்ளும் நோக்கம் கொண்ட பார்வை; searching glance. *தலைவர் மேடை ஏறியவுடன் கூட்டத்தை ஒருநோட்டம் விட்டார். பொருள் விற்கும் சாக்கில்வந்து திருடப்போகிற வீட்டை ஒரு நோட்டம் விட்டான்.*

ம. நோட்டம்; கு. நோட்ட; கோத. நொட் (examine); க. நோடு; து. நோட.

*[நுல் → நுள் → நொள் → நோள் → நோடு நோட்டம் (வே.க.) = ஆய்வு, ஆராய்ச்சி]*

**நோட்டம்²** *nōṭṭam,* பெ. (n.) கணக்கு; account. "*நோட்டத்திற் செல்லெழுதி*" (சரவண. பணவிடு.84).

*[நோட்டம்¹ → நோட்டம்²]*

**நோட்டம்பார்¹-த்தல்** *nōṭṭam-pār-,* 4செ.குன்றாவி. (v.t.) 1. தகுதியறிதல் (யாழ்.அக.); to consider the fitness of. 2. விலை மதிப்பறிதல் (வின்.); to appraise. 3. நிலைமையாய்தல்; to consider one's condition, state. 4. வேவு பார்த்தல்; to spy.

*[நோட்டம் + பார்-த்தல்.]*

**நோட்டம்பார்²-த்தல்** *nōṭṭam-pār-,* 4 செ.கு.வி. (v.i.) மிகக் கண்டிப்பாயிருத்தல் (வின்.); to be too strict in dealings.

*[நோட்டம் + பார்-த்தல்.]*

நோட்டம்பார்த்தல் : எடுத்துக் கொண்ட மாழைக் கலவையிலே உள்ள மாழைகளின் (உலோகங்களின்) அளவை மதிப்பிடுவது நோட்டம் பார்த்தல் எனப்படும். சுரங்கங்களில் கிடைக்கும் மூலப்பொருள்களில் எந்த வகை மாழை எந்த அளவில் உள்ளது என மதிப்பிட்டு, அம் மூலங்களை (தாதுக்களை) வெட்டி யெடுப்பது நன்மைபயக்குமா என ஆராய்ந்து முடிவு செய்ய நோட்டம் பார்த்தல் மிகவும் பயன்படுகிறது. காசுகள், நகைகள் முதலியன செய்யப்பயன்படும் விலையுயர்ந்த தங்கம் போன்ற மாழைகளின் கட்டிகள் தூய்மையானவையா என ஆராயவும் இது பயன் படுகிறது. மாழைக் (உலோகக்) கலவைகளின் குறைகளைக் கண்டு ஆராயவும் பயன்படுகிறது. ஆராயவேண்டிய மாழை (உலோகம்) எதுவோ அதைப்பொறுத்து, நோட்டம் பார்க்கப் பலமுறைகள் வழக்கத்தில் இருக்கின்றன. ஆனால், பொதுவாக இருமுறைகள் உண்டு. அவை; 1. உலர்முறை (dry process). 2. ஈரமுறை (wet-process). மூலங்களில் உள்ள மாழை வகைகளை உருக்கிப்பின் பிரிப்பது உலர்முறை. மூலங்களில் உள்ள மாழைகளை வேதியியல் (இரசாயன) முறையில் பிரித்தல் ஈரமுறை.

**நோட்டம்பேசு–தல்** *nōṭṭam-pēšu-,* 5செ.கு.வி. (v.i.) பிறர் தன் சொல்லுக்கு உட்படும்படிப் பேசுதல் (யாழ்.அக.); to overcome by skilful speech.

*[நோட்டம் + பேசு–தல்.]*

**நோட்டன்** *nōṭṭaṉ,* பெ. (n.) *நோட்டக்காரன்* பார்க்க; *see nōṭṭakkāraṉ.*

*[நோட்டம் → நோட்டன்]*

**நோடாலம்** *nōḍālam,* பெ. (n.) 1. களிப்பு,உவப்பு (உல்லாசம்); jocularity, pleasantry. 2. ஏளனம்; mockery. 3. நனிநாகரிகம்; fastidiousness. 4. புதுமை (யாழ்.அக.); newness.

*[நடலம் → நாடலம் → நோடலம். நடலம் = மிகு நாகரிகம், ஏளனம், இகழ்ச்சி.]*

**நோடு–தல்** *nōḍu-,* 5செ.கு.வி. (v.i.) 1. ஆராய்ந்து பார்த்தல்; to research. 2. கவனித்தல்; to take care of.

**க.** நோடு, F.,L. notum, to know; E.note.

*[நுல் (= நுண்மை) → நுள் → நொள் → நோள் → நோடு → நோடு–தல் (இவ்வினை இன்று வழக்கற்றது) = தேடுதல், ஆய்தல் ஆராய்தல், பார்த்தல் (மு.தா.)]*

**நோண்டு–தல்** *nōṇḍu-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. விரல்,குச்சிபோன்றவற்றால் கிளறுதல் (பிங்.); to stir, dig up, grub up, root out. *புண்ணை நோண்டாதே? நிலத்தை நோண்டிக் கொண்டிருக்கிறான்.* 2. முகத்தல் (திவா.); to bale out, scoop out. 3. குடைந்தெடுத்தல்; to pick off, as a scab of an ulcer; to pick out, as wax from the ear. *காதை நோண்டாதே.* 4. துருவிவினவுதல் (வின்.); to enquire minutely, endeavour to draw out by repeated questions, pump one. *'நோண்டிநோண்டிக் கேட்கிறான்'* (வின்.). 5. சிறுகத் திருடுதல் (வின்.); to pilfer. 6. பயிரைக் கிள்ளுதல் (யாழ்ப்.); to pluck, as cars of grain. 7. ஒரு தொழிலைச் சிறிதுசிறிதாகச் செய்தல்; to do a thing little by little. *ஏன் நோண்டிக் கொண்டிருக்கிறாய்* (வின்.). 8. தேவையற்ற ஒன்றைச் செய்தல்; to rummage about. *எதையாவது நோண்டிக் கொண்டிருப்பதே தொழிலாப்போச்சு.* 9. தோண்டுதல்; to dig. *கண்ணை நோண்டிவிடுவேன். கிழங்கை நோண்டி யெடுத்து விட்டான்* (உ.வ.).

**ம.** நோண்டுக; **து.** நோடட்ருநி.

*[நுல்(துளை) → நுள் → நொள் → நோள் → நோண்டு → நோண்டு–தல் (வே.க.)]*

**நோணாவட்டம்** *nōṇāvaṭṭam,* பெ. (n.) *நொறுநாட்டியம்* (இ.வ.) பார்க்க; see *noṟu-nāṭṭiyam.*

**நோணாவட்டியம்** *nōṇā-vaṭṭiyam,* வி.எ. (adv.) நன்றாய் (தூத்துக்குடி வழக்கு); well, prudently, wisely.

**நோதக்க** *nōdakka,* கு.வி.எ. (adv.) வருந்தத்தக்கனவற்றை; grieved, distressed. "*பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க; நோதக்க நட்டார் செயின்*" (குறள், 805).

*[நோ → நோதக்க. நோ = துன்பம், வருத்தம்.]*

**நோதல்**[1] *nōdal,* தொ.பெ. (vbl.n.) 1. பூடு முதலியவற்றுக்கு வருங்கேடு; disease affecting trees or plants. 2. எழுத்து முதலியவற்றின் மழுங்கல்; obliteration or other defect in a marked line, letter, figure or painting. 3. சாயஞ்சிதறுகை; spreading of dye in a cloth beyond the intended line. 4. ஏழைமை; poverty.

*[நோ → நோதல்]*

**நோதல்**[2] *nōdal,* பெ. (n.) 1. துன்புறல்; to suffer. 2. நொந்து சொல்லுதல்; to be injured speech.

*[நோ → நோதல்]*

**நோதலை** *nōdalai,* பெ. (n.) *நோதல்,* 1,4 (யாழ்ப்.) பார்க்க; see *nodal, 1,4.*

*[நோதல் → நோதலை]*

**நோதளை** *nōdaḷai,* பெ. (n.) பிராய்முட்டி; Ceylon pavonia, Poania zeylanica. (சா.அக.).

**நோதிறம்** *nōdiṟam,* பெ. (n.) முல்லை, பாலைக்குரிய துன்பப்பண் வகை (பிங்.); a melody type of the *mullai* and the *pālai* classes, sung in distress. "*பாண்வாய்வண்டு நோதிறம்பாட*" (சிலப்.4:75).

*[நோ → நோதிறம்.]*

**நோப்படு-தல்** *nōppaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. காயப்படுதல்; sustaining injury, being injured. 2. நோயினால் துன்பப்படுதல்; suffering from pain or disease. (சா.அக.).

*[நோ + படு-தல். நோ = துன்பம்.]*

**நோப்பாளம்** *nōppāḷam,* பெ. (n.) 1. சினம்; irritation, anger, offence. *உள்ளதைச் சொன்னால் நொள்ளைக்கண்ணிக்கு நோப் பாளம்* (பழ.). 2. வருத்தம்; suffering.

*[நோ → நோப்பு → நோப்பாளம் (வே.க.)]*

**நோபித்திரினி** *nōpittiriṉi,* பெ. (n.) 1. நோய்; disease. 2. நலக்கேடு; bad health. (சா.அக.).

**நோம்பு**[1]**-தல்** *nōmbu-,* 5செ.குன்றாவி. (v.t.) கொழித்துப் பிரித்தல்; to separate by winnowing, as stones from rice.

*[நேம்பு → நோம்பு-தல்.*
*நேம்புதல் = கொழித்துப்பிரித்தல்.]*

**நோம்பு**[2] *nōmbu,* பெ. (n.) *நோன்பு* (உ.வ.) பார்க்க; *see nōṉbu.*

*[நோன்பு → நோம்பு.]*

**நோம்புக்கடன்** *nōmbu-k-kaḍaṉ,* பெ. (n.) நேர்ச்சிக் கடன்; vow.

*[நோன்பு → நோம்பு + கடன்.]*

**நோம்புக்கயிறு** *nōmbu-k-kayiṟu,* பெ. (n.) காப்புநாண்; a sacred string.

*[நோன்பு → நோம்பு + கயிறு. நோம்பன்று கட்டிக் கொள்ளும் காப்புக்கயிறு.]*

**நோம்புமுடி** *nōmbu-muḍi,* பெ. (n.) நோம்புமுடிச்சு பார்க்க; *see nōmbu-muḍiccu.*

*[நோன்பு² + முடி. முடி = முடிந்து கொள்ளும் பொருள்.]*

**நோம்புமுடிச்சு** *nōmbu-muḍiccu,* பெ. (n.) தாலிச்சரட்டில்கோக்கப்பட்ட குழாய்போன்ற பொன்னுருக்கள்; a pair of cylindrical pieces of gold worn on the string containing the marriage badge.

*[நோன்பு² + முடிச்சு.]*

**நோம்புவலி** *nōmbu-vali,* பெ. (n.) குதிரை வாலிப்பூடு; a family of plants resembling horse tail, as horse tail, grass, Panicum brizoides, horse tail, millet, Panicumerticillatum. (சா.அக.).

**நோம்புவிரலி** *nōmbu-virali,* பெ. (n.) மஞ்சள்கொத்து; turmeric plant. (சா.அக.).

**நோம்பூகயம்** *nōmbū-kayam,* பெ. (n.) நிலப்பூசினிச் செடி; giant potato; earth pumkin, Gpomaea digitata. (சா.அக.).

**நோம்பூரிகம்** *nōmbūrigam,* பெ. (n.) சருக்கரைப்பூசனி; yellowpumpkin, Cucurbita pepo. (சா.அக.).

**நோய்¹** *nōy,* பெ. (n.) 1. மனிதனின், விலங்கின், பயிரின் உடல் நல பாதிப்பு; பிணி; malady, distemper, ailment, sickness, disease. "*நோயிகந்து நோக்குவிளங்க*" (மதுரைக்.13). *நோயைத் தக்க நேரத்தில் தடுக்காததால் விளைச்சல் பாதித்து விட்டது.* "*காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் இந் நோய்*" (குறள்,1227). *நோய் கொண்டார் பேய் கொண்டார்.* (பழ.) 2. துயரம் (பிங்.); sorrow, grief. 3. துன்பம்; affliction, trouble, "*அதிரவருவதோர் நோய்*" (குறள்,429). 4. குற்றம்; fault. "*பகலென்னும் பண்பின்மை பாரிக்கும்நோய்*" (குறள்,851). 5. அச்சம்; dread, fear. "*நோயுடை நுடங்குசூர்*" (பரிபா.5:4.). 6. நோவு (வின்.); ache, pain, smart. "*நோவு ஒரு பக்கம் இருக்கச் சூடு ஒரு பக்கம் போட்டாற் போல*" (பழ.). "நோய்க்கிடங் கொடேல்" (பழ.).

*ம.* நோயி.

*[நுல்(நோதல்) → நுள் → நொள் → நோள் → நோய் (வே.க.)]*

**நோய்²–த்தல்** *nōy-,* 4செ.கு.வி. (v.i.) 1. பிணியால் வருந்துதல்; to be or become sickly or diseased. 2. நோயால் மெலிதல்; to be broken in constitution; to be debilitated. 3. மரம்,பயிர் வாடுதல்; to wither, as trees, crops. 4. நிலம் சாரமற்றுப்போதல்; to become poor or worn out, as lands.

*[நோய்¹ → நோய்²–த்தல்]*

**நோய்³–தல்** *nōy-,* 2செ.கு.வி (v.i.) நோய்² பார்க்க; *see nōy.²* *பயிர் நோய்ந்து போய்விட்டது.* (நெல்லை)

*[நோய்¹ → நோய்³–தல்]*

**நோய்க்குணக்குறி** *nōy-k-kuṇa-k-kuṟi,* பெ. (n.) **நோய்க்குறி** (பாண்டி) பார்க்க; *see nōy-k-kuṟi.*

*[நோய்¹ + குணம் + குறி.]*

**நோய்க்குறி** *nōy-k-kuṟi,* பெ. (n.) நோயின் அடையாளம் (பாண்டி); symptom of a disease.

*[நோய்¹ + குறி.]*

**நோய்க்கூறுபாடு** *nōy-k-kūṟupāḍu,* பெ. (n.) நோய்க்குறி (பாண்டி) பார்க்க; *see noy-k-kuṟi.*

*[நோய்¹ + கூறுபாடு.]*

**நோய்காடேறுதல்** *nōy-kāḍēṟudal,* பெ. (n.) சாக்காட்டி னிறுதியில் நோய் விட்டு அகலுகை; the disappearance of disease on the approach of death.

*[நோய்¹ + காடேறுதல். காடேறுதல் = விட்டு நீங்குதல்.]*

**நோய்ச்சல்** *nōyccal,* பெ. (n.) நோய்வாய்ப் படுகை; being sickly. **2. நோய்ஞ்சல்** (வின்.) பார்க்க; *see nōyñjal.*

*[நோய்¹ → நோய்ச்சல்.]*

**நோய்ஞ்சல்** *nōyñjal,* பெ. (n.) **1.** மெலிந்தவன்–ள்–து; sickly, emaciated person or animal. *"நோய்ஞ்சற் பூனை மத்தை நக்குமாபோலே"* (பழ.). *"நோய்த்த புலி ஆகிலும் மாட்டுக்கு வலிது."* (பழ.). **2.** நோய் (யாழ்.அக.); disease.

*[நோய்¹ → நோய்ஞ்சல்.]*

**நோய்ஞ்சலன்** *nōyñjalaṉ,* பெ. (n.) **நோயாளி** (வின்.) பார்க்க; *see nōyāḷi.*

*[நோய்ஞ்சு + அல் + அன். ஈண்டுவரும் அல் உடன்பாட்டுப் பொருளில் வரும் சாரியை; அன்–ஆண்பால்விகுதி]*

**நோய்ஞ்சான்** *nōyñjāṉ,* பெ. (n.) மெலிந்தவன்; person emaciated by disease.

*[நுல் (மெலிதல்) → நுள் → நொள் → நோள் → நோய் → நோய்ந்தான் → நோய்ஞ்சான். (மு.தா.)]*

**நோய்ஞ்சி** *nōyñji,* பெ. (n.) *நோயாளி* (வின்.) பார்க்க; *see nōyāḷi.*

*[நோய்¹ → நோய்ஞ்சி]*

**நோய்ஞ்சியன்** *nōyñjiyaṉ,* பெ. (n.) *நோயாளி* (வின்.) பார்க்க; *see nōyāḷi.*

*[நோய் → நோய்ஞ்சி + அன். 'அன்' ஆண்பால் ஈறு]*

**நோய்த்த** *noytta,* கு.பெ.எ. (adj.) நோய் கொண்ட; being affected with disease marked with sickness. sickly. (சா.அக.).

*[நோய்¹ + த் + த. 'த்' இடைநிலை; 'த'– பெயரெச்ச ஈறு]*

**நோய்த்திடம்** *nōy-t-tiḍam,* பெ. (n.) **1.** பிணியின் வலிமை; strength of a disease. **2.** நோயின் உண்மை; reality of disease. (சா.அக.).

*[நோய்¹ + திடம். திடம் = வன்மை.]*

**நோய்த்தொற்று** *nōy-t-toṟṟu,* பெ. (n.) உடலில் நுண்ணுயிரிகளால் (பாக்டீரியா) உண்டா வதும், நுண்ணுயிரிகள் உண்டாக்கும் நஞ்சுகளால் உண்டாவதுமான நோய்; infection.

*[நோய்¹ + தொற்று]*

**நோய்தடுக்கி** *noy-taḍukki,* பெ. (n.) நோய் வராமல் தடுக்குமருந்து; preventie remedies as vaccine; medicines preveting disease-Prophylactics. (சா.அக.).

*[நோய்[1] + தடுக்கி.]*

**நோய்தெறி–த்தல்** *nōy-deṟi-,* 4 செ.கு.வி. (v.i.) பிணி நீங்குதல்; getting rid of disease being free from disease. (சா.அக.).

*[நோய்[1] + தெறி–த்தல். தெறித்தல் = நீங்குதல்.]*

**நோய்நாடு–தல்** *nōy-nōḍu-,* 5செ.குன்றாவி. (v.t.) நோய் இன்னது என்று கண்டுபிடித்தல்; diagnosis. "*நோய்நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல்*" (குறள்,948)

*[நோய்[1] + நாடு–தல்]*

நோயாளியைப் பார்த்தவுடன் அவருக்கு என்னென்ன தொந்தரவுகள் என்று அறிந்துகொண்டு, அதிலிருந்து ஒவ்வொரு நோயாக விலக்கிக் கொண்டே வந்து, எந்தநோயின் தன்மையும் அவர் சொல்லும் தொந்தரவும் ஒத்து வருகின்றனவோ அந்த நோயே அவருக்கு இருக்கலாம் என்ற உறுதி செய்வது நோய் நாடலாகும்.

எடுத்துக்காட்டாக வயிற்றுவலி என்றால், வயிற்றில் புண்ணாக இருக்கலாம்; குடலில் புண்ணாக இருக்கலாம்; ஈரலைச் சேர்ந்த நோயாக இருக்கலாம்; இதய நோயாகவும் இருக்கலாம். சாப்பிட்ட உடனே அல்லது சாப்பிட்டு ஒரு மணி அல்லது இரண்டுமணி நேரத்திற்குள்ளேயே வயிற்று வலி வந்தால் அது வயிற்றுப் புண்ணாகவோ, அல்லது குடற்புண்ணாகவோ தான் இருக்கவேண்டும். ஏனெனில் மற்ற உறுப்புக்களின் நோய், உணவால் அதிகப்படுவதில்லை. மற்றும் வாந்தி எடுத்தவுடன் வலி அடங்கிவிடுகிறது என்றால் குடல்நோய் என்றே கூறவேண்டும். அதிலும் காரப்பொடி சாப்பிட்டால் வலி எற்படவில்லை என்றால் இந்த ஊகம் உறுதிப்படுகிறது. ஆனால், நோய்க் கூற்றைக் கண்டுபிடிப்பதற்கு நோயாளியின் தொந்தரவுகள் என்னென்ன என்று அறிந்து கொள்ள வேண்டும். அதோடு நோய் எப்போது ஏற்பட்டது, நோய் எவ்வளவு நாட்களாக இருந்து வருகிறது, என்ன பண்டுவத்தால் குணம் ஏற்படுகிறது என்றும், எந்தெந்த மருந்துகளால் நோய் அதிகமாய்த் தோன்றுகிறது என்றும் அறிந்து கொள்ளவேண்டும். நோயாளி தன்னுடைய உடம்பின் நிலையைப் பற்றிச் சொல்லி நிறுத்திய பிறகு, ஆய்வு செய்யவேண்டும். நோயாளியின் தொல்லை என்னவாக இருந்தாலும் உடல் முழுமையும் ஆய்வு செய்வதே நல்லது.

**நோய்நொடி** *nōy-noḍi,* பெ. (n.) **1.** *பிணியும் துன்பமும்;* disease with its sufferings. *(சா.அக.). நோய் நொடி இல்லா உடம்போடு வாழவேண்டும். குழந்தைக்கு நோய் நொடி வராமல் வளர்க்கவேண்டும். நோய் நொடி இல்லா வாழ்வு வேண்டும் என்று கடவுளிடம் வேண்டினேன்.* **2.** நோயும் நோயின் பாதிப்பும்; illness and its effect. *வறுமையில் நோய் நொடிவந்தால் யார் உதவுவார்கள்.*

*[நோய்[1] + நொடி. மரபுத்தொடர்]*

**நோய்ப்பாடியார்** *nōy-p-pāḍiyār,* பெ. (n.) கழகக் காலப்புலவர்; a poet in Sangam age.

மறுவ. நொய்ப்பாடியார்.

*[நோய்[1] + பாடியார்]*

இவர்தம் பாடலில் பிரிந்தோருறும் நோயை நன்கு புலப்படுத்துவதால் இப்பெயர் பெற்றார் எனலாம். பாலை நிலவழியிலே பரற்கற்கள் நிலம்படும் மின்மினிபோலப் பரந்திமைக்கும் எனப் புனைந்துரைத்துள்ளார். இவர் செய்யுளில் நடுகற்குப் பீலிசூட்டும் வழக்கமும். நடுகல்லின் அருகிலே அவ்வீரன் பிடித்திருந்த வேல் முதலியவற்றை வைக்கும் வழக்கமும் காணப்பெறுகின்றன. (அகநா.67).

*"யானெவன் செய்கோ தோழி பொறிவரி*
*வானம் வாழ்த்திப் பாடவும் அருளாது*
*உறைதுறந் தெழிலி நீங்கலிற் பறையுடன் மரம்புல்*
*லென்ற முரம்புயர் நனந்தலை அரம்போழ் நுதிய*
*வாளி அம்பின் நிரம்பா நோக்கின் நிரையம்*
*கொண்மார் நெல்லி நீளிடை எல்லி மண்டி*
*நல்லமர்க் கடந்த நாணுடை மறவர் பெயரும்*
*பீடும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய*
*பிறங்குநிலை நடுகல் வேலூன்று பலகை*
*வேற்றுமுனை கடுக்கும் மொழிபெயர் தேஎந்*
*தருமார் மன்னர் கழிப்பிணிக் கறைத்தோல்*
*நிரைகண் டன்ன உவலிடு பதுக்கை ஆளுகு*
*பறந்தலை உருவில் பேஎய் ஊராத் தேரொடு*
*நிலம்படு மின்மினி போலப் பலவுடன் இலங்குபரல்*
*இமைக்கும் என்பநம் நலந்துறந்து உறைநர்*
*சென்ற ஆறே"* (அக.67)

**நோய்பாடியார்** *nōy-pāḍiyār,* பெ. (n.) நோய்ப்பாடியார் பார்க்க; *nōy-p-pāḍiyār.*

**நோய்புகலும்பாண்டம்** *nōy-pugaḷum-pāṇḍam,* பெ. (n.) நோய், பிணிபுகும் உடம்பு; body liable to disease. (சா.அக.).

*[நோய்[1] + புகலும் + பாண்டம். பாண்டம் = உடம்பு.]*

**நோய்ப்பால** *nōy-p-pāla,* பெ. (n.) துன்புறுத்தும் திறத்தனவாகிய குற்றங்கள்; offence, cruel offence. *"தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால தன்னை யடல்வேண்டா தான்" (குறள்,206)*

**நோய்ப்பூச்சி** *nōy-p-pūcci,* பெ. (n.) நோயை உண்டாக்கும் புழு; organisms which cause disease-germ; bacillus. (சா.அக.). *குழந்தைக்கு வயிற்றில் நோய்ப்பூச்சி இருக்கிறது; மருந்து கொடுக்கவேண்டும்.*

*[நோய்[1] + பூச்சி; பூச்சி = நோயை உண்டாக்கும் புழு.]*

**நோய்போக்கு-தல்** *nōy-pōkku-,* 5 செ. குன்றாவி. (v.t.) நோயைப் போக்கிக் குணமாக்குதல்; to cure the disease through medical treatment. *இந்த மருத்துவர் நோயைப் போக்குவதில் வல்லவர்.*

*[நோய்[1] + போக்கு-தல்]*

**நோய்மக்களித்தல்** *nōy-makkaḷittal,* பெ. (n.) நோய் திரும்புதல்; relapse of disease. (சா.அக.).

*[நோய் + மக்களித்தல்.]*

**நோய்மருந்தளவு** *nōy-marundaḷavu,* பெ. (n.) சாப்பிடும் மருந்தளவைக் குறிக்கும் தேரையர் செய்த ஒரு தமிழ் மருத்துவ நூல்; a Tamil medical work by Theraiyar on prescriptions and administration of remedies. 2. நோய்க்கு ஏற்றவாறு கொடுக்கும் மருந்தளவு; preportion of medicine determined according to the nature of and requirement for a particular disease, Prescription. (சா.அக.).

*[நோய் + மருந்து + அளவு.]*

**நோய்முகன்** *nōy-mugaṉ,* பெ. (n.) காரி கோள் (சனி) (தைலவ.தைல.); Saturn.

*[நோய் + முகன். நோய் தரும் காரி கோள் துன்பத்தையும் தருவது.]*

காரிக்கோள் துன்பத்தைத் தருவது என்னும் கருத்தினால், அது நோய்முகன் எனப்பட்டது. ஆயின், இடைக்காலத்தில் தமிழ் பகைவர் காரி என்னும் தென்சொல்லை வழக்கு வீழ்த்தி *'சனி'* என்னும் வடசொல்லைப் புகுத்தியதால் *'சனியன்'* என்னும் சொல் வழங்கத் தலைப்பட்டது. தமிழர் அனைவரும் இனி நோய்முகன் என்னும் சொல்லையே *'சனியன்'* என்பதற்குத் தலைமாறாக வழங்குக-பாவாணர் (வே.க.நூல்4).

**நோய்மும்முரம்** *nōy-mummuram,* பெ. (n.) திடீரென ஏற்படும் நோயின் கடுமை; sudden recurrence or intensification of symptoms, Paroxysm. (சா.அக.).

*[நோய் + மும்மரம். முன்பு + உரம்- மும்முரம்.]*

**நோய்முறி-தல்** *nōy-muṟi-,* 4செ.கு.வி. (v.i.) நோய் உடம்பிலிருந்து நீங்குதல்; the separation of a disease from the system after its being over powdered. (சா.அக.).

*[நோய் + முறி-தல்]*

**நோயறு-தல்** *nōy-y-aṟu-,* 18செ.குன்றாவி. (v.t.) நோய் நீங்குதல்; to cure a disease. *"நோயற்ற வாழ்வே வாழ்வு; குறையற்ற*

*செல்வமே செல்வம்"* (பழ.). *நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்* (பழ.).

*[நோய் + அறு–தல்]*

**நோய்யெதிர் ஆற்றல்** *nōy-y-edir-āṟṟal,* பெ. (n.) நோயை உண்டாக்கும் நுண்ணுயிரிகளால் நோய் உண்டாகாதவாறு உடலில் உள்ள எதிர்க்கும் ஆற்றல்; immunity.

*[நோய் + எதிர் + ஆற்றல்]*

நோய்யெதிர் ஆற்றல் என்பது ஒவ்வொரு நோய்க்கும் தனித்தனி. நோயை உண்டாக்கும் நுண்ணுயிரிகள் பலவகைப் படும். ஆதலால் ஒருவர் ஒரு நோய்க்கு எதிராற்றல் உடையவராகவும், வேறு ஒரு நோய்க்கு உட்படுபவராகவும் இருக்கலாம். அம்மை நோயை எதிர்க்கும் ஆற்றல் உடையவராக இருந்தாலும், ஈளைநோயை எதிர்க்கும் ஆற்றலில்லாதவராகவும் இருக்கலாம்.

நோய்யெதிர் ஆற்றல் இயற்கை, செயற்கை என இருவகைப்படும். இயற்கை யென்பது பிறக்கும் போதே உடலில் அமையும் எதிர்ஆற்றல்.

செயற்கையென்பது பிறந்தபின் உடலில் அமைவது. நோய் வருமுன்பே, செயற்கை முறைகளால், அதாவது கொல்லப்பட்ட அல்லது ஆற்றல் இழந்த நுண்ணுயிரிகளைக் கொண்டு உண்டாக்கப்பட்ட நோய்ப்பாலை உடலில் ஏற்றி அரத்தத்தில் எதிர்ப்பொருள்களைத் தோற்றுவித்தல். இந்த எதிர்ப்பொருள்களும் நோய் நீங்கிய பின்னரும் உடலில் தங்கியிருந்து எதிர்ஆற்றலைத் தருவதாக அமையும்.

**நோய்வரப்பண்ணு–தல்** *nōy-vara-p-paṇṇu-*, 5செ.கு.வி. (v.i.) **1.** நோயை உண்டாக்குதல்; to cause a disease as is done in animals for observing the effect of medicine. **2.** நோய்க்கிடங்கொடுத்தல்; accomodating disease by intemperate habits. (சா.அக.).

*[நோய் + வரப்பண்ணு–தல்]*

**நோய்வன்மை** *nōy-vaṉmai,* பெ. (n.) நோயின் கொடுமை; severity of a disease. (சா.அக.).

*[நோய் + வன்மை. வன்மை = வலிமை, கொடுமை.]*

**நோய்வாய்ப்படு–தல்** *nōy-vāy-p-paḍu-*, 18செ.குன்றாவி.(v.t.) *நோயினால் தாக்கப் படுதல்;* to fall ill. *நோய்வாய்ப்பட்ட உடம்பு.* நண்பர் *நோய்வாய் பட்டிருந்தபோது சென்று பார்த்தேன்.*

*[நோய் + வாய் + படு–தல்]*

**நோய்விழலாய்ப்போ–தல்** *nōy-viḻalāy-p-pō,* 8 செ.கு.வி.(v.i.)நோய் பயனற்றுப்போதல்; diseases being rendered inert of inactive. (சா.அக.).

*[நோய் + விழலாய்ப்போ–தல்]*

**நோய்விழுதல்** *nōy-viḻudal,* பெ. (n.) செடிகளில் நோய்பிடிக்கை; infection, as of plants.

*[நோய் + விழுதல்.நோய் உண்டாகுதல்.]*

**நோயகலல்** *nōyakalal,* பெ. (n.) உடம்பினின்று நோய் நீங்கல்; getting cured or free from diseases, Disappearance of the disease from the body. (சா.அக.).

*[நோய் + அகலல்.]*

**நோயணுகல்** *nōyaṇugal,* பெ. (n.) நோயில் விழுகை; falling ill, getting struck by disease. *அவனுக்கு நோயணுகலால் வேலை செய்ய முடியவில்லை.*

*[நோய் + அணுகல்.]*

**நோயணுகாவிதி** *nōy-aṇugā-vidi,* பெ. (n.) தேரையர் இயற்றிய ஒரு மருத்துவநூல்; a treatise an hygiene by Tēraiyar.

*[நோய் + அணுகா + விதி.நோய்களுக்கு மருந்து கூறும் முறையையுரைக்கும் நூல்.]*

**நோயற்றவுடம்பு** *nōyaṟṟa-v-uḍambu,* பெ. (n.) நலமுள்ள உடம்பு; healthy body. (சா.அக.).

*[நோய் + அற்ற + உடம்பு.]*

**நோயறை** *nōyaṟai,* பெ. (n.) நோயாளிகள் இருக்கும் அறை; patient's room. (சா.அக.). *நோயறைபக்கம் ஒலியை அதிகப்படுத்தாதே.*

*[நோய் + அறை.]*

**நோயாளி** *nōy-āḷi,* பெ. (n.) நோயால் தாக்கப்பட்டவன்; sick person, patient, invalid. *மருத்துவர் நோயாளியைக் கவனிக்கச் சென்றுவிட்டார். "நோயாளிக்கு ஆசை காட்டிச் சொன்னாற் போல" (பழ.). "நோயாளி விதியாளி ஆனால் பரிகாரி பேராளி ஆவான்" (பழ.). "நோயாளிக்குத் தெரியும் நோயின் வருத்தம்" (பழ.)*

*[நோய் → நோயாளி.]*

**நோயாளிசாலை** *nōyāḷi-šālai,* பெ. (n.) நோவாளி மடம் (பாண்டி.) பார்க்க; *see nōvāḷi-maḍam.*

*[நோய் + ஆளி + சாலை. சாலை = இடம் ஒநோ. பாடசாலை]*

**நோயியல்** *nōy-iyal,* பெ. (n.) நோயின் கரணியங்களையம், அவை செய்யும் உடலியல், உடலமைப்பியல் பற்றிய மாறுதல்களையும் ஆராயும் மருத்துவஇயல்; pathology.

*[நோய் + இயல்]*

நோயாளிக்கு மருத்துவம் செய்ய விரும்பும் மருத்துவர் முதலில் நோயை ஆராய்ந்து கண்டு பிடிக்கவேண்டும். என்னநோய் வந்துள்ளது என காண வேண்டுமாயின் மருத்துவர்க்கு, எல்லா நோய்களுக்குமுரிய அறிகுறிகள் தெரிந்திருக்க வேண்டும். இந்த அறிவைப் பெறுவதற்கு உடல் எவ்வாறு அமைந்துளது என்று கூறும் உடலமைப்பியலையும், உடல் எவ்வாறு வேலை செய்கிறது என்று கூறும் உடலியலையும் அவர் நன்கு அறிந்திருக்க வேண்டும். அதன்பின் நோய் எவ்வாறு உடம்பில் மாறுதல்களை உண்டாக்குகிறது என்பதை நாடவேண்டும் என்பதே நோயியலாகும்.

**நோயிரட்டித்தல்** *nōy-iraṭṭittal,* பெ. (n.) **1.** நோய் மறுபடியும் ஏற்படுகை; relapse of a disease. **2.** நோய்சிக்குண்டு அதிகமாகை; complication of a disease. **3.** நோய் கடுமையாகை; disease getting virulent. (சா.அக.).

*[நோய் + இரட்டித்தல்.]*

**நோயிருத்தி** *nōy-irutti,* பெ. (n.) நோயை நிலைக்கச் செய்யும் மூலிகை; any plant or drug rendering a disease chronic or lingering (சா.அக.).

*[நோய் + இருத்தி.]*

**நோயிலக்கணம்** *nōy-ilakkaṇam,* பெ. (n.) **1.** நோயைப்பற்றிய குணபாடம்; that branch of medical science which treats of classification of disease, Nosology. **2.** நோயின் அறிகுறியைப் பற்றிச் சொல்லும் நூல்; that branch of science which treats of symptoms, Symptamatology. **3.** நோய் குறி; the characteristic symptoms of a disease. (சா.அக.).

*[நோய் + இலக்கணம்.]*

**நோயில்நாடி** *noyil-nāḍi,* பெ. (n.) மூன்று நாடியும் (இடைகலை, பிங்கலை, சுழிமுனை) தன் மாத்திரையில் குறையாது உடம்பின் நோயின்மையைக் காட்டும் நாடி நடைகள்; the regular pulse beat in respect of the three humours without any deviation or varied changes a clear indication of healthy body. (சா.அக.).

*[நோய் + இல் + நாடி]*

**நோயின்சாரம்** *nōyiṉ-šāram,* பெ. (n.) நோயைப்பற்றிய ஒரு நூல்; a treatise on diseases.

*[நோய் + இன் + சாரம்*
*சாறு + அம் = சாறம் → சாரம்]*

**நோயுள்ளதீட்டு** *nōy-uḷḷa-tīṭṭu,* பெ. (n.) நோவோடு கூடிய மாதவிலக்கு (M.L.); painful menstruation, Dysmenorrhoea.

*[நோய் + உள்ள + தீட்டு.வலியுடன் கூடிய மாத விலக்கு. தீற்று → தீட்டு. தீற்றுதல் = கழுவுதல்]*

**நோயுறு—தல்** *nōy-uṟu-,* 18செ.குன்றாவி. (v.t.) **நோய்வாய்ப்படு—தல்** பார்க்க; *see nōy-vāy-p-paḍu-.*

*[நோய் + உறு—தல்]*

**நோயெச்சம்** *nōy-eccam,* பெ. (n.) நோயின் எச்சம் (வின்.); remnants of a disease.

*[நோய் + எச்சம்.]*

**நோல்¹—தல்(நோற்றல்)** *nōl-,* 10செ.குன்றாவி. (v.t.) 1. பொறுத்தல்; to endure, suffer patiently, as hunger. "*உண்ணாது நோற்பார் பெரியர்*" (குறள்,160). 2. மேற்கொள்ளல்; to practise, *மறவாமே நோற்பதொன் றுண்டு* (குமர.பிர.நீதிநெறி.20). 3. வலிமை; strength. "*நோக்கியெ திருறநின்ற நோலாரும்படை வியந்தே*" (அருணகிரிபு. அருந்தவ.125)

**நோல்²—தல்** *nol-,* 17செ.கு.வி. (v.i.) 1. தவஞ்செய்தல்; to do penance, practice, austerities. "*நோற்றோ ருறைவது*" (மணிமே.17:65) 2. நோன்பை மேற்கொள்ளுதல்; to observe a religious fast. *பாவை நோன்பு நோற்றாள்.*

தெ.நேட்சு; க.நோன்; ம.நோல்க.

**நோல்³** *nōl,* பெ. (n.) சடங்கு (கிரியை); a means of attaining salvation. "*நோக்கினைய நோலினையு முடைத்தாமால்*" (சிவதரு. சிவஞானபோ.18).

**நோலாகிதம்** *nōlāgidam,* பெ. (n.) திருநீற்றுப்பச்சை; holy ashes leaf, Ocimum basilicum. (சா.அக.).

**நோலாதவர்** *nōlādavar,* பெ. (n.) தவஞ் செய்யாதார்; one who does not having penance.; "*இலர்பல ராகிய காரணம் நோற்பார் சிலர்பலர் நோலா தவர்*" (குறள்,270).

*[நோல் → நோலாதவர் நோல் = தவம்செய்தல். ஆ —எதிர்மறை இடைநிலை.]*

**நோலாதார்** *nōlādār,* பெ. (n.) பொறாமைக் காரர்கள்; jealous persons.

*[நோலுதல் = பொறுத்தல். நோல் + ஆ + த் + ஆர்.]*

**நோலாமை** *nōlāmai,* பெ. (n.) 1. செய்த தீவினைக்கு வருந்தாமை (R.C.); un-repentance. 2. பொறாமை; jealous. "*நோலாமையினால் மேலானது போம்*" (பழ.).

*[நோல் + ஆ + மை]*

**நோலாவலை** *nōlāvalai,* பெ. (n.) மீன்பிடிக்கும் வலைவகை (அபி.சிந்.1017); a kind of fishing net.

**நோலிகம்** *nōligam,* பெ. (n.) நின்றிடந் தீயஞ்சான் என்னும் குருவிச்சை (புல்லுருவி); honey suckle mistletoe, Loranthuselasticus. (சா.அக.).

**நோலை** *nōlai,* பெ. (n.) **1.** எள்ளுருண்டை; sesame ball. "*புழுக்கலு நோலையும்*" (சிலப்.5:68, அரும்.). **2.** எட்கசிவு; a preparation of sesame seed. "*அணங்குடை நோலை*" (பு.வெ.3:40)

*[நுல் → நூல் (எள்) → நோல் → நோலை (வே.க.)]*

**நோவல்** *nōval,* பெ. (n.) அப்பம் (அக.நி.); bread.

**நோவறை** *novaṟai,* பெ. (n.) **நோயறை** பார்க்க; *see nōyarāi.* (சா.அக.).

*[நோ + அறை]*

**நோவாளி** *nōvāḷi,* பெ. (n.) **1. நோயாளி** (வின்.) பார்க்க; *see nōyāḷi.* **2.** ஏழை (யாழ்.அக.); poor man.

*[நோவு + ஆளி. நோவு = வலி, துன்பம், வறுமை]*

**நோவாளிமடம்** *nōvāḷi-maḍam,* பெ. (n.) மருத்துவ மனை (பாண்டி); hospital.

*[நோவாளி + மடம்.]*

**நோவு** *nōvu,* பெ. (n.) **1.** வலி; pain, hurt, anguish. *உடல் நோவு குறைய வெந்நீரில் குளிக்க வேண்டும்.* **2.** துன்பம் (திவா.); mental anguish. **3.** நோய்; disease. *உடம்புக்கு ஏதாவது நோவா? நோவு ஒருபக்கம் இருக்கச் சூடு ஒருபக்கம் போட்டாற்போல* (பழ.) **4.** மகப்பேற்று நோய்; ஈன்வலி; labour pains. "*ஈன்றக்கா னோவும்*" (நாலடி, 201). *நோவு எடுத்து வெகு நேரமாகியும் குழந்தைபிறக்க வில்லை.* **5.** இரக்கம்; pity. '*தாம் நோவுபடா நிற்பர்*' (ஈடு). **6.** மஞ்சள் (வைத்தியபரிபா); turmeric

**ம., க., து.** நோவு

*[நோ → நோவு.]*

**நோவுங்கால்** *nōvungāl,* பெ. (n.) முடவாட்டுக் கால்; lame leg of a sheep. (சா.அக.).

*[நோ + உம் + கால்]*

**நோவுசாத்து-தல்** *nōvu-šāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பெரியோர் நோய்வாய்ப்படுதல்; to suffer from disease, as eminent religious persons. "*யமுனைத் துறைவர் திருமேனியிலே நோவுசாத்திக் கொண்டிருக்க*" (குருபரம்.241).

*[நோவு + சாத்து-தல். சாத்துதல் = நோயால் தாக்கப்படுதல்.]*

**நோவுநொடி** *nōvu-noḍi,* பெ. (n.) **நோய் நொடி** பார்க்க; *see nōy-noḍi.*

*[நோவு + நொடி - மரபுத்தொடர்.]*

**நோவுபோக்கி** *nōvu-pōkki,* பெ. (n.) நேர்வாளம்; croton seed, purging nut so called of its eliminiating certain diseases from the system. (சா.அக.).

*[நோ → நோவு + போக்கி. நோ = வலி, துன்பம்,நோய். நொ, து ஓரெழுத்து ஒருமொழி என்பது நன்னூல் கருத்தாகும்]*

**நோவுவாங்கல்** *nōvu-vāṅgal,* பெ. (n.) வலிதீர்தல்; ceasing of pain. (சா.அக.).

*[நோவு + வாங்கல்.நோவு = நோய்.]*

**நோவெடுத்தல்** *nōveḍuttal,* பெ. (n.) மகப்பேற்றுவலி உண்டாகை; commencement of labour pains.

*[நோவு + எடுத்தல். வலி எடுத்தல்]*

**நோழிகை** *nōḻigai,* பெ. (n.) நெசவுநூலின் தாறு (வின்.); wearer's clew of yarn.

*[நாழிகை → நோழிகை*
*நாழிகை = நாடா]*

**நோளை** *noḷai,* பெ. (n.) நோய்நிலை; பிணியுண்டநிலை; sickly condition, used in compound words. *நோளை உடம்பு (வின்.)*

*[நுல் (நோதல்) → நுள் → நொள் →*
*நோள் → நோளை (வே.க.) ஒ.நோ.*
*நோள் → நோய், மாள் → மாய்]*

**நோற்கிற்பவர்** *nōṟkiṟpavar,* பெ. (n.) 1. பொறுப்பவர்; endured person. *"துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா யின்னாச்சொ னோற்கிற் பவர்"* (குறள்,159). 2. தவஞ்செய்யவல்லார்; ascetics. *"சுடச்சுடரும் பொன்போலொளி விடுந் துன்பஞ்சுடச்சுட நோற்கிற் பவர்"* (குறள்.267)

*[நோல் → நோற்கிற்பவர்.*
*நோல்தல் = பொறுத்தல்]*

**நோற்பார்** *nōṟpār,* பெ. (n.) தவஞ்செய்வார்; ascetics, those who practise religious austerities. *"நோற்பாரினோன்மை யுடைத்து"* *(குறள்,48).*

*[நோல்² → நோற்பார். நோல் = தவஞ்செய்தல்]*

**நோற்பாள்** *nōṟpāḷ,* பெ. (n.) சமணமதப் பெண்துறவி (சூடா.); a female ascetic.

*[நோல்² → நோற்பாள்.]*

**நோற்பு** *nōṟpu,* பெ. (n.) 1. பொறுமை (வின்.); bearing, endurance. 2. தவஞ் செய்கை; performing penance.

*[நோல் → நோற்பு.]*

**நோறு** *nōṟu,* பெ. (n.) வாய் (இ.வ.); mouth. *நோறைமூடிக்கொண்டிரு.*

**தெ.** நோறு.

*[நோல் + து]*

**நோன்¹–தல் (நோன்றல்)** *nōṉ-,* 7செ.குன்றாவி. (v.t.) 1. பொறுத்தல்; to endure, bear. *"பழையன் பட்டெனக் கண்டது நோனானாகி"* (அகநா.44). *அவன்மகன் சிறுதீமையைத் தாங்காத நோனாவாக இருக்கிறான்* 2. தள்ளுதல் (திவா.); to reject. 3. நிலைநிறுத்துதல் (பிங்.); to establish. 4. துறத்தல்; to renounce, as secular things.

**க.** நோன்

*[நோல்¹ → நோன்]*

**நோன்²–தல்** *nōṉ-,* 13செ.கு.வி. (v.i.) தவஞ்செய்தல்; to practise austerities.

*[நோல்² → நோன்]*

**நோன்பி** *nōṉbi,* பெ. (n.) உணவுட்கொள்ளா திருப்போன்; ascetic, strict observer of austerities. "*வெந்திற னோன்பிகள் விழுமங் கொள்ளவும்*" (மணிமே.3:75)

*[நோன்பு + இ]*

**நோன்பிரு—த்தல்** *nōṉbiru-,* 3 செ.கு.வி. (v.i.) உணவு உட்கொள்ளாதிருத்தல்; to observe ceremonial fasting.

*[நோன்பு + இரு—த்தல்]*

**நோன்பு** *nōṉbu,* பெ. (n.) **1.** ஆன்மாவின் தூய்மைக்காக ஒரிருவேளை அல்லது நாள் முழுமையும் உண்ணாதிருக்கை; ceremonial fasting, abstinence from food. "*பூவணந் தடம் வகுத்து நோன்புமுறை போற்றி*" (சேதுபு. பாவநா.19). "*நோன்பு என்பது கொன்று தின்னாமை*" (பழ.). **2.** தவம்; penance, religious austerity. "*மாயிரு நோன்பினை யியற்றி*" (கந்தபு. தக்கன்மக.5) (சூடா.)

ம. நோன்பு; க., து. நோம்பு.

*[நோன் → நோன்பு = உண்ணும் உணவு வேளையைக் குறைத்தோ சில எளிய உணவை மட்டும் உண்டோ இறைவனை நினைத்துச் செய்யும் வழிபாடு.]*

**நோன்புதுற—த்தல்** *nōnbu-duṟa-,* 3 செ.கு.வி. (v.i.) உண்ணாநோன்பை நிறுத்துதல் (யாழ் அக.); to end the ceremonial fasting.

*[நோன்பு + துற—த்தல்]*

**நோன்புநோல்—தல் (நோன்பு நோற்றல்)** *nōnbu-nōl-,* 17 செ.கு.வி. (v.i.) *நோன்பு பிடி—* (இ.வ.) பார்க்க; *see nōṉby-piḍi-.*

*[நோன்பு + நோல்—தல்]*

**நோன்புபிடி—த்தல்** *nōṉbu-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) உண்ணாதிருக்கையை மேற்கொள்ளல்; to observe a fast.

*[நோன்பு +பிடி —த்தல். நோன்பைக் கடைப்பிடித்து மேற்கொள்ளுதல்.]*

**நோன்புயர்—தல்** *nōṉbuyar-,* 2, செ.கு.வி. (v.i.) *நோன்புதுற—த்தல்* (கலித்.129:17,உரை) பார்க்க; *see nōṉbu-duṟa-.*

*[நோன்பு + உயர்—தல். நோன்பை முடித்துக் கொள்ளுதல்.]*

**நோன்பென்றபெண்** *nōṉ-peṉṟa-peṉ,* பெ. (n.) நோன்பு; vow. (சா.அக.).

**நோன்மார்** *nōṉ-mār,* பெ. (n.) நோன்பு மேற்கொள்பவர்; to do penance. "*ஆன்றடங்கறிஞர் செறிந்தனர் நோன்மார்*" (மதுரைக்.481.).

**நோன்மை** *nōṉmai,* பெ. (n.) **1.** பொறுமை; bearing, endurance, as of affliction; tolerance. "*மிகுசிறப்பின் வருத்தமு நோன்மையும்*" (பு.வெ. 10: 6, கொளு). **2.** வலிமை (பெரும்பாண்.68); vigour, strength, force, might. "நுவன்றிலேன் மனிதனோன்மை" (கம்பரா. நாகபா.288). **3.** பெருமை; greatness. "*நுந்தமாமக னோன்மை*" (பிரபுலிங். வசவண். வந்த. 23). **4.** தவம்; penance.

*[நோன் → நோன்மை.]*

**நோன்றல்** *nōṉṟal,* பெ. (n.) பொறுத்தல்; patience, endurance, *"பேதையார் சொன்னோன்றல்"* (கலித்.133). *"உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறு கண் செய்யாமை"* (குறள்.261)

*[நோன் → நோன்றல்.]*

**நோனாது** *nōṉādu,* பெ. (n.) ஆற்றாது, பொறாது; inability to bear. "சிறுமை நோனாது" (குறிஞ்சிப்.157)

*[நோல் → நோன் → நோனாது.]*

**நோனாமை** *nōṉāmai,* பெ. (n.) 1. தவஞ் செய்யாமை (அக.நி.); non-performance of religious austerities. 2. பொறுமையின்மை (பிங்.); non-endurance. 3. அழுக்காறு (திவா.); envy, grudge.

*[நோன் + ஆ + மை. 'ஆ' எ.மறை இடைநிலை. 'மை' பண்புப்பெயர் ஈறு.]*

**நோனார்** *nōṉār,* பெ. (n.) 1. ஆற்றாதார்; incapable persons. *"நோனா ருட்கு மூவகை நிலையும்"* (தொல். பொருள்.72). 2. பகைவர் (பிங்.); enemies. 3. தவமில்லாதவர் (அக.நி.); those who neglect religious duties.

*[நோன் + ஆ + ஆர். ஆ –எதிர்மறை இடைநிலை]*

**நோனாவட்டம்** *nōṉāvaṭṭam,* பெ. (n.) *நொறு நாட்டியம்* பார்க்க; *see noṟu-nāṭṭiyam.*

**நோனி** *nōṉi,* பெ. (n.) பெண்குறி; pudendum muliebre.

*[நுல்(துளை) →நொல் →நோல் → நோலி →நோனி.நோனி → வ. யோனி.வடவர் இச்சொற்கு 'யு' என்பதை வேராகக் காட்டுவது பொருந்தாது–வே.க.நுல்[2]]*

**நௌ**[1] *nau,* நகர மெய்யும் ஔகார உயிரும் சேர்ந்த உயிர்மெய் எழுத்து; the compound of 'n' and 'au'.

*[ந் + ஔ–நௌ.]*

**நௌ**[2] *nau,* பெ. (n.) மரக்கலம் (சூடா.); boat, ship.

**நௌகதாரி** *naukadāri,* பெ. (n.) செங்கத்தரி; orbicular, Capparia pedunculosa. (சா.அக.).

இதன் பட்டையும் மற்ற பாகங்களும் மருந்திற்குதவும்.

**நௌகாகிதம்** *naukākidam,* பெ. (n.) சூரை; jackal, jujubi, Ziziphus napeca alias z-oenaplia. (சா.அக.).

**நௌகாசரை** *nau-kāšarai,* பெ. (n.) எட்டிமரம்; nuxvomica tree, Strychnine nuxvomica. (சா.அக.).

**நௌகாபத்திரி** *naukāpattiri,* பெ. (n.) சாதிபத்திரி; mace, Myristica fragrams. (சா.அக.).

**நௌபத்தோமம்** *naupattōmam,* பெ. (n.) குரோசாணி ஓமம்; Khorassan ajwaun common hennane, Hyoscyamus niger. (சா.அக.).

**நௌபந்திகை** *naupandigai,* பெ. (n.) மோகனத்தி என்னும் ஒருவகை வாழை; a species of plantain tree, Musapara disiaca genus. (சா.அக.).

**நௌபுல்லுருவி** *nau-pulluruvi,* பெ. (n.) ஒருவகைப்புல்லுருவி; a kind of parasitic plant, Loranthus genus.

*[நௌ + புல் + உருவி]*

**நௌலி** *nauli,* பெ. (n.) *நௌபுல்லுருவி* பார்க்க; *see nau-pulluruvi.*

**நௌவி** *nauvi,* பெ. (n.) மான்; deer, *"பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி"* (மதுரைக். 275).

*[நவ்வி = மான். நவ்வி → நௌவி.]*

**நௌவுகி** *nauuvki,* பெ. (n.) சூரத்து நிலாவவரை; Sūrat senna, foreign senna, Cassia acutifolia. (சா.அக.).

**நௌவுகு** *nauuvku,* பெ. (n.) கையாந்தகரை; eclipse plant, Ecliptaprosrata. (சா.அக.).

**நௌளகு** *nau*ḷ*agu,* பெ. (n.) சிறு சூழ்ந்துக் குச்சி; a small or medium torch tree, small jungle geranium, Ixora parviflora. (சா.அக.).